# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

நான்காம் மடலம் - முதற் பாகம்

**த, தா**

Vol. IV - Part - I


பு.ஏ. இராமையா இ.ஆ.ப.
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2004

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

**நான்காம் மடலம் - முதற் பாகம்**

**த, தா**

**Vol. IV - Part - I**

**பு.ஏ. இராமையா** இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

**தா. சந்திரசேகரன்** இ.ஆ.ப.,
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

**மேற்பார்வையாளர்**

முனைவர் **சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2004

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு - 10

முதற் பதிப்பு : 2004

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. IV, Part - I

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு

விலை : உருபா 300/-

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314" K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி-48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை - 600 040

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி
சென்னை - 600 113

நூல் கிடைக்குமிடம் : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி
சென்னை - 600 113

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி-48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை - 600 040

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி
# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

**Vol. IV - Part - I**

**நான்காம் மடலம் - முதற்பாகம்**

**(து முதல் தா வரை)**


**பதிப்புக் குழு**

திரு. **பு.ஏ. இராமையா** இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

திரு. **தா. சந்திரசேகரன்** இ.ஆ.ப.,
அரசு சிறப்புச் செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை
மற்றும்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

**மேற்பார்வையாளர்**

முனைவர் **சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

**கூர்ந்தாய்வாளர்**

புலவர் **த. சரவணத் தமிழன்**

**தொகுப்பாளர்கள்**

திரு. **முத்து. பிச்சை** (பகுதிப்பொறுப்பாளர்)
முனைவர் **மு. கண்ணன்**
முனைவர் **பா. வெற்றிச்செல்வன்**
முனைவர் **ச. செந்திலாண்டவன்**
முனைவர் **இரா.கு. ஆல்துரை**
திரு. **கா. இளமுருகு**
திரு. **ச.கி. கணேசன்** (ஓவியர்)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

ஜெ ஜெயலலிதா

முதலமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை 600 009

நாள் 22.12.2004

## அணிந்துரை

'ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின் முன்னேற்றம் ஒவ்வொன்றும் உன் முன்னேற்றம்' என்னும் வைர வரியில் தமிழின் முன்னேற்றமே தமிழர் முன்னேற்றம் என்பதை எடுத்துக் காட்டினார் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள்.

பாவேந்தர் பணித்தபடி, ஒல்லும் வகையில் எல்லாம் அந்த ஒண்டமிழை வளர்க்க உற்ற பணி புரியும் நற்றமிழ் அரசே தமிழ் நாடு அரசு.

காலத்தை வென்று நிற்கும் நம் கன்னித் தமிழை இந்திய அரசின் ஆட்சி மொழியாக ஆக்குவதற்கும், உயர்தனிச் செம்மொழியாம் தமிழ் மொழியின் ஒப்பற்ற இலக்கியமாகவும், உலக சிந்தனையின் உச்சமாகவும் விளங்கும் திருக்குறளைத் தேசிய இலக்கியமாக ஆக்குவதற்கும், இடையறா முயற்சிகளை எடுத்து வருகிறது எனது அரசு. அனைத்து மாணவரும் தமிழைப் பயில வேண்டும் என்பதற்காக மழலையர் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை அறிவியல் தமிழைக் கற்பிக்க ஏற்பாடு செய்ததும் எனது அரசே.

வளர்ந்து வரும் அறிவியலுக்கு ஈடு கொடுக்கும் வகையிலும், இலக்கண இலக்கிய மரபுகளைப் பேணிக் காக்கும் முறையிலும் மொழியின் சொல்வளத்தை அறிந்து கொள்வதும், பெருக்குவதும் இன்றியமையாததாகும். இப் பயன்பாட்டு நோக்கில் 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி' (A comprehensive Etymological Dictionary of Tamil Language) நூல்களை உருவாக்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது. இப் பணியின் தனித் தன்மை கருதி, பன்மொழிப் புலமையும், ஆய்வு நுட்பமும், தமிழ்ப் புலமையும், ஒருங்கே அமையப் பெற்றிருந்த மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு இத் திட்டம் தொடங்கப்பட்டது. பைந்தமிழ் அறிஞர் பாவாணர் அவர்கள் 'தனித் தமிழ் இயக்கம்' கண்ட மறைத்திரு மறைமலை அடிகளார் வழியில் தமிழ் ஆய்ந்து தமிழே உலக முதன்மொழி என்பதை உலகுக்கு உணர்த்தியவர் ஆவார்.

அவர் தொடங்கி வைத்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம், அருந்தமிழின் வளர்ச்சிக்கு அடிப்படையான தலையாய பணிகளில் ஒன்றாகும் என்பதைக் கருத்திற் கொண்டு எனது அரசு இத் திட்டத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. இத் திட்டம் தொடங்கப்பட்ட நாளிலிருந்து 6 பகுதிகள் மட்டுமே முடிக்கப்பட்டிருந்தன. இவற்றில் 'அ' முதல் 'ஔ' வரையிலான எழுத்துக்களில் அமையும் சொற்கள் பற்றிய விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. தற்பொழுது 'ச' வரிசையில் மூன்று பகுதிகளும் 'த' வரிசையில் மூன்று பகுதிகளும் ஆக மேலும் 6 பகுதிகள் முடிக்கப்பட்டு வெளியிடப் பெறுவதை அறிந்து நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழோடு இந்த யுகத்தின் நான்காவது தமிழாகிய 'அறிவியல் தமிழ்' வளர, அறிவியலைத் தமிழில் கூறுவதற்கான சொற்களைக் கண்டறிய வேண்டியது இன்றியமையாததாகும். அதற்காக ஏற்கெனவே தமிழில் உள்ள சொல்வளத்தை அறியவும், புழக்கத்தில் இல்லாத சொற்களைப் புதுப் பயன்பாட்டிற்குக் கொண்டு வரவும், புதிய சொற்களை உருவாக்கவும், சொற்களின் வேர்களை ஆராய்ந்து புதியன படைக்கவும் இன்றைய தமிழ் வளர்ச்சியின் உடனடித் தேவையை நிறைவு செய்வதாக செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி நூல் மடலங்கள் அமைகின்றன.

இம் மடலங்கள் தமிழின் அழிவிலாச் சொத்தாக விளங்கும் என்பது உறுதி.

இப் பகுதிகள் வெளிவர அயராது உழைத்த அறிஞர் பெருமக்களையும், அலுவலர்களையும் நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

வாழ்க தமிழ்!
வளர்க தமிழ்ப் பணி!

ஜெ ஜெயலலிதா
தமிழக முதலமைச்சர்



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்
டாக்டர் செல்வி ஜெ ஜெயலலிதா

**சி.வி. சண்முகம்**
கல்வி மற்றும்
வணிக வரித்துறை அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

# அணிந்துரை

"ஒரு மொழிக்குட்பட்ட சொற்களை ஆராயும் சொல்லாராய்ச்சியும் பல மொழிகளை ஒப்பு நோக்கும் மொழியாராய்ச்சியும் மேனாட்டாரிடமிருந்து நாம் அறிந்தவை.

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே (தொல்.சொல்.எச்.1)

என்று தொல்காப்பியர் காலத்திலேயே சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியும் ஓரளவு தமிழ்நாட்டிலிருந்ததேனும் விரிவான முறையிலும், நெறிப்பட்ட வகையிலும் சொன்னூலும் (Etymology), மொழிநூலும் (Philology) நாம் பெற்றது மேலையரிடமிருந்தே". இது, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் தம் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் என்ற நூலைச் சேலத்திலிருந்து 1948-இல் வெளியிட்டபோது, அந்நூலில் அவரே எழுதிய முகவுரை. ஆகப் பல்லாண்டுகளாகச் சொல்லாராய்ச்சியிலேயே தம்மை ஆட்படுத்திக் கொண்டு, நுணுகி நுணுகித் துருவித் துருவிப் பார்த்ததன் தெள்ளிய வெளிப்பாடுதான் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி. அதன் வாயிலாகத் தமிழின் சொல்வளத்தை நாம் அறிகின்றோம். அத்துடன் நில்லாது தொன்றுதொட்டு இன்று வரையுமுள்ள பண்பாடு, நாகரிகம், வரலாறு ஆகியவற்றையும் அறிய முடிகிறது.

தமிழ் பிறமொழியின் கலப்பில்லாமல் தனித்தியங்கும் ஆற்றலுடைய தன்னிகரில்லா மொழி என்று உலக மொழியறிஞர்களெல்லாம் ஒப்புக் கொள்கின்றனர். செந்தமிழின் நீண்ட நெடிய சொல்வள வரலாற்றில் சொல்லும் பொருளும் பெருகியுமுள்ளன; அருகியுமுள்ளன! வழக்கிழந்த சொற்களை மீட்பதற்கும், அனைத்துச் சொற்களையும் காப்பதற்கும் அகரமுதலிகள் இன்று வழிவகுக்கின்றன.

இலக்கியச் சொல்லாட்சிகள் முதலாக இன்றைய பேச்சு வழக்குச் சொல்லாட்சிகள் ஈறாக அனைத்தையும் உள்ளடக்கிச் சொற்களின் வடிவம், பொருள், பிறப்பு போன்றவை பற்றிய தேவையான செய்திகளுடன் விளக்கமுற உரைப்பவையாக இருப்பவையே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் மடலங்கள்.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூற்றாண்டு விழா கண்ட நம் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களின் சீரிய தலைமையில் அமைந்த அரசு, அவரின் தனித்தமிழ்ப் பற்றினைப் பேணிக் காத்திடவும், அவர் காட்டிய நெறிமுறைகளின்படி அகரமுதலி மடலங்கள் வெளிவரவும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. தமிழகத்தை முன்னேற்றப் பாதையில் கொண்டு சென்று இந்தியாவிலேயே தலைசிறந்த முதன்மை மாநிலமாக மாற்றிடச் சூளுரைத்துச் செயற்பட்டு வரும் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களின் சீரிய வழிகாட்டுதல்படி தமிழக அரசு முனைந்து பீடுநடை போடுகின்றது.

'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் எஞ்சிய பகுதிகள் யாவும் நான்காண்டுக்கால வரம்பெல்லைக்குள் வெளிக்கொணரப்படும்' எனச் சட்டப்பேரவையில் அறிவித்தபடி 'ச'கர மடலத்தின் 3 பகுதிகளும், 'த'கர மடலத்தின் 3 பகுதிகளும் இப்போது ஒருசேர வெளிவருவது, மிகவும் மகிழ்ச்சிக்குரியதாகும். முன் எப்போதும் இல்லாதவாறு 6 பகுதிகள் ஒருசேர முடிக்கப்பெற்று வெளியிடப்பெறுவது அருஞ்சாதனையே! அதற்கு முதற்காரணம் நம் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களே என்பது மறுக்க முடியாத உண்மை. 6 பகுதிகள் சீரிய முறையில் வெளிவர அரும்பங்காற்றிய தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திரு. பு.ஏ. இராமையா இ.ஆ.ப., அவர்களுக்கும், அகரமுதலித் திட்டப் பொறுப்பு இயக்குநர் திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப., அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், கூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் மற்றும் அகரமுதலித் தொகுப்பாளர்களுக்கும் என்னுடைய பாராட்டுகள். இதேபோல மற்றப் பகுதிகளையும் விரைந்து முடித்து வெளியிடத் தொடர்ந்து பாடுபடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

31.8.04

சென்னை

**சி.வி. சண்முகம்**
கல்வி மற்றும்
வணிக வரித்துறை அமைச்சர்

பு.ஏ. இராமையா, இ.ஆ.ப.,
அரசு செயலாளர்

தமிழ் வளர்ச்சி-பண்பாடு
(ம) அறநிலையத்துறை
தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

# அணிந்துரை

**"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு**
**முன்தோன்றி மூத்த குடி"** (பு.வெ.மாலை)

என்று தமிழ்க்குடி பாராட்டப்பெறும். அவ்வகையில் எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெருந்தமிழணங்கின் சீரிளமைத்திறம் வியந்து தம்முடைய வாழ்நாள் பணியாகச் சொல்லாராய்ச்சியை மேற்கொண்டவர் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள்.

முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரி; உலக முதன் மொழி தமிழ். என்ற கோட்பாட்டில் திளைத்து, அக்கோட்பாட்டின் அடிப்படையில் தம் ஆராய்ச்சியை அமைத்து முதன்மொழியாகிய தமிழின் சொற்பிறப்பாய்வைத் துருவித்துருவியாய்ந்து மிகத் துல்லியமாக வேர் விளக்கம் கண்டவர் பாவாணரே.

இப்பெருமகனாரைப் போலத் தனித்தமிழ் ஆய்வுக் கருத்துகளை இதுவரை எந்தவோர் அறிஞரும் வழங்கிடவில்லை; பெருஞ்சித்திரனார் கூறுவதைப்போலத் "தமிழ்த் துறைக்கு அவர் தொண்டு புதியது; தமிழர்க்கு அவர் கருத்துகள் மயக்கறுப்பன; மேனாட்டார்க்கு அவர் நூல்கள் வியப்பளிப்பன; அவர் எடுத்துக் கொண்ட முயற்சி அரியது. தொல்காப்பியர் காலத்திற்குப் பின் தமிழ் தன்னை நிலைப்படுத்திக் கொள்ளும் ஒட்டுமொத்த முயற்சிக்குப் பாவாணர் என்றே பெயரிடலாம்". இவ்வுரைக்கு ஏதும் மறுப்புரையுண்டோ?

**"கதிர்தரு ஒளியென மொழிதரு மலையே!**
**முதிர்முகி லெனவே வேர்பொழி விளைவே**
**தமிழ்ச்சுட ரணிதலைப் பாவா ணர்தான்**
**தமிழ்மகள் பெறுதவப் பேரறிவாளன்!**

வேர்ச்சொல் லாய்வின் வித்தகன்! மொழியின்
போர்ப்படைத் தலைவன்! புலமைப் புதையல்!
தலைவ! நீதரும் ஒளியே பாதை
விலைமதிப் பில்லா வெற்றியைத் தருமே!"

என்றொரு பாவலர் பாடியதற்கேற்பப் பாவாணர் பெரும்புகழ் பெற்ற அமுதப்படையல்!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி 12 மடலங்களில் 31 தொகுதிகளாக வெளியிடத் திட்டமிடப்பட்டதாகும். கடந்த 28 ஆண்டுகளில் 6 தொகுதிகள் மட்டுமே வெளிவந்துள்ள நிலையில், சுணக்கமுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்கு மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் புதுத்தெம்பு ஊட்டியதன்விளைவாய், எஞ்சிய 25 தொகுதிகளை நான்காண்டுக் கால வரம்பெல்லைக்குள் வெளிக்கொணரப் பணிகள் முடுக்கிவிடப்பட்டன. அதன் வெளிப்பாடே இப்போது 'ச' மற்றும் 'த' மடலங்களின் 6 தொகுதிகள் ஒருசேர வெளிவருகின்றன. இது ஓர் அரும்பெருஞ் செயல் என்றால் மிகையாகாது.

இத்தொகுதிகளில் காட்டப்பெறும் தமிழ்ச் சொற்களின் விரிவும் விளக்கமும் நம்மை வியப்பிலாழ்த்துகின்றன. எடுத்துக்காட்டிற்கு ஒன்றிரண்டினைக் குறிப்பிட விரும்புகிறேன்.

'ச'கர மடலத்தின் முதற்பகுதியில் (ச, சா) வரும் **'சக்கரம்'** என்ற சொல்லிற்கு 27 வகையான பொருள் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. அதுமட்டுமல்லாது இலக்கிய மேற்கோள்களும் வேர் விளக்கமும் அருமையாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**சருக்கு - சருக்கரம் - சக்கரம்** (வே.க. 239)

அதேபோல் **'சத்தம்'** என்ற சொல்லுக்கான விளக்கமும் அருமை.

சாத்து = பண்டங்களைக் கொண்டு விற்கும் வணிகர் கூட்டம். சாத்துவண்டிக்குக் கொடுக்கும் கூலி சாத்தம் எனப்பட்டது. வண்டிச்சாத்தம் = வண்டிக்கூலி. சாத்தம் - சத்தம் ஆயிற்று.

அடுத்து, இரண்டாவது தொகுதியில் (சி-சூ), **'சிலை'** என்ற சொல்லிற்குக் காட்டப்பட்டுள்ள விளக்கம் அழகுற அமைந்துள்ளது. 'சீரகம்' என்ற சொல்லிற்குப் பொருள் - வேர் விளக்கம் - விரிவுப் பொருள் காட்டியிருப்பது திகைக்க வைக்கிறது.

**சீர் - சீரம் - சீரகம்**

உலகில் முதன்முதலாகச் சிறந்த முறையில் சமையல் தொழில் தொடங்கியதும் அதற்குச் சீரகத்தைப் பயன்படுத்தியதும் தமிழகமே! என்பதற்குச் சான்றுகள் பல உள.

"சிறுபிள்ளை இல்லா வீடும், சீரகம் இல்லாத கறியும் செவ்வையாயிரா" என்பது தொன்று தொட்டுவரும் பழமொழி.

சீரகக்கோரை, சீரகச்சம்பா, சீரகவள்ளி என்பன ஒப்புமை பற்றிப் பெயர்பெற்ற நிலைத் திணை வகைகள். பொன்னளவையிற் சீரகம் என்பது ஓர் அளவு.

5 கடுகு = 1 சீரகம்; 5 சீரகம் = 1 நெல்

"அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதலாகி
உளவெனப் பட்ட வொன்பதிற்றெழுத்தே
அவைதாம்
கசதப வென்றா நமவ வென்றா
அகர உகரமோ டவையென மொழிப" (தொல்.எழுத். 170)

என்னும் தொல்காப்பிய எழுத்ததிகார நூற்பா உரையில் கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை என்று இளம்பூரணரும், 'கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை, இவை நிறை' என்று நச்சினார்க்கினியரும் கூறியிருத்தலையும் நோக்குக.

செரி - செரியகம் - சீரகம்

என்றுமாம். வடவர் மூலம் காட்டும் வகை. ஜீரக - ஜீரண; ஜரு - ஜீரண, ஜரு - கிழமாக்கு, கட்டுக்குலை, கரை, செரிக்கச் செய். ஜரு என்பது கிழ என்னும் தென்சொற்றிரிபே (வ. மொ. வ.153).

அடுத்து, மூன்றாம் தொகுதியில் (செ - சௌ) 'செம்பியன்' என்ற சொல்லின் பொருள் விளக்கம் சிறப்புடையதாயிருக்கின்றது. அதைப்போலச் 'செஞ்சம்' என்ற சொல்லுக்கு அளிக்கப்பட்டுள்ள பொருள் விளக்கமும் சிறப்பாயுள்ளது. செஞ்சு - செம்மை, செவ்வை, நிறைவு, செஞ்சு - செஞ்சம்.

அடுத்து, 'த்'கர மடலத்தின் முதற் தொகுதியில் (த, தா) 'தமிழ்' என்ற சொல்லுக்குக் காட்டப்பெற்றிருக்கும் விளக்கம் விரிவானதாகவும் பொருத்தமானதாகவும் நுட்பமானதாகவும் அமைந்துள்ளது. அதைப்போலத் 'தா' என்னும் சொல்லுக்கும் அருமையான விரிவான விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது, 'தா' என்ற சொல் தந்தை என்பதனையும் குறிக்கும் என்று நிறுவியிருப்பது ஆராய்ச்சியாளரின் சான்றாண்மையைக் காட்டுகிறது.

அதே மடலத்தின் இரண்டாவது தொகுதியில் (தி- தூ) 'திறம்' என்ற சொல்லுக்கும், 'துடி' என்ற சொல்லுக்கும் தரப்பட்டுள்ள விளக்கங்கள் பயனுடையவையாகும்.

மூன்றாவது தொகுதியில் (தெ-தௌ), 'தெரு' என்னும் சொல்லின்கீழ், முடுக்கு சிறுசந்து; சந்து தெருவின் கிளை; தெரு சிறுவீதி; மறுகு போக்குவரத்து மிகுந்த பெருந்தெரு அல்லது வீதி; ஆவணம் கடைத்தெரு; அகலுள் அகன்ற மறுகு; சாலை பெருவழி; சந்தி மூன்று தெருக்கள் கூடுமிடம்; சதுக்கம் நான்கு தெருக்கள் கூடுமிடும் என்ற வகையில் பதிவு செய்துள்ளமை பாராட்டுக் குரியதாகும்.

அடுத்து, 'தொல்காப்பியர் காலம்' என்னும் தலைப்பின்கீழ்க் காட்டப்பட்டுள்ள சான்றுகள் ஆய்வாளர்களுக்கு மிக்கப்பயனுடையனவாகும். இந்த ஆறு தொகுதிகளிலும் தேவையான சொற்களுக்குப் பொருத்தமான பட விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருப்பதும் அழகுக்கு அழகு சேர்ப்பதாயுள்ளது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டப்பணிகள் விரைந்து நடைபெற பலவகையிலும் பெரிதும் ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் **மாண்புமிகு முதலமைச்சர்** அவர்களுக்கும், **மாண்புமிகு கல்வி அமைச்சர்** அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அரசு அறிவித்தவண்ணம் 6 தொகுதிகளை ஒருசேர அணியமாக்கி வெளியிடும் பணியைச் சிரமேற்கொண்டு செவ்விய முறையில் வெளிவர அரும்பணியாற்றிய தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அரசு சிறப்புச் செயலாளரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் **திட்டப்பொறுப்பு இயக்குநருமான திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளராகச் செயற்பட்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், அகரமுதலித் திட்டப் பணியாளர்கள் மற்றும் கூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் எனது மனமுவந்த பாராட்டுகள். பாராட்டுகளைப் படிக்கற்களாகக் கொண்டு தொடர்ந்து நன்கு உழைத்து எஞ்சிய தொகுதிகள் அனைத்தையும் அரசு விரும்பிய வண்ணம் வெளிக்கொணர வேண்டுமென விழைகிறேன்.

சென்னை
23-10-2003

பு.ஏ. இராமையா
அரசு செயலாளர்

**தா. சந்திரசேகரன்,** இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்
சென்னை - 600 008

# பதிப்புரை

மொழி என்பது, மாந்தர் தம் எண்ணத்தின் வெளிப்பாடு; சொல்லும், சொற்களின் உட்கிடக்கை; பேசும் பேச்சிலும், எழுதும் எழுத்திலும் ஆளும் சொற்களின் முழுமையான கூட்டமைப்பே மொழி. அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்து திகழும், உலகின் உண்மை நிலையை, மானுடம், உள்ளபடி உணர்வதற்கு, உறுதுணை புரிவது மொழியேயாகும். எண்ணமும், மொழியும் இரண்டறக் கலந்தவை; பின்னிப் பிணைந்து, பிரிக்கவியலாவண்ணம் இயங்குபவை. எண்ணத்தின் வெளிப்பாடே சொற்கள். சொற்களின்றேல் மொழியில்லை; சுருங்கச் சொன்னால் எண்ணமெனுந் தாயீன்ற எழிற்குழவியே மொழி.

சொல்லாய்வே மொழியாய்விற்கு அடிப்படையாகும். "மொழி ஞாயிறு" பாவாணரின் முடிவும் இதுவே. "தனித்தமிழ் இலக்கிய வானில், மறைமலையடிகள் வளர்த்த தமிழைவிட, மொழிஞாயிற்றின் ஒளியில் வளர்ந்த தமிழே, ஆற்றல் மிக்கது" என்பார் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார். உலகத் தொன்முது மொழிகளுள் தமிழே முதியவற்றுள்ளும் முதியது. மூவாமொழி நலங்கெழுமிய முதன்மொழி என்பார் மொழிஞாயிறு. தாய்மையுந் தூய்மையுங் கொண்ட செம்மொழியாம், நந்தமிழ்மொழி, இருவகை வழக்கிலும், ஈடிணையில்லாச் சொற்கட்டமைப்புடன் திகழும் இயன்மொழி.

சொல்லின் பிறப்பைச் சுட்டுவதே, சொற்பிறப்பு அகரமுதலியின் குறிக்கோள் என்று மேலைநாட்டார் கருதினர். ஆனால் செந்தமிழ்ச் செம்மல் பாவாணர், சொற்பொருளை, ஏரணமுறையில் எடுத்துக்காட்டிச் சொல் வரலாற்றைப் பொருட்பொருத்தப்பாட்டுடன் புகல்வதே சொற்பிறப்பு அகரமுதலி என்பார்; பிறமொழியின் துணையின்றித் தனித்தியங்கும் தன்னிகரற்ற சொல்வளம், தண்டமிழுக்கேயுரிய தனிவளம் என்று, தறுகண்மையுடன் முழங்கினார். மணிப்பவளநடை தலையெடுத்த காலத்தே, சிதைக்கப்பட்ட தமிழுக்குப் புத்துயிர் ஊட்டிய மொழி மருத்துவராக மொழிஞாயிறு விளங்கினார்.

"எம்மொழிச் சொல்லையும் நம்மொழிச் சொல்லாக்கும், நனி சிறந்த வேர்ச்சொல் வளமிக்கது தமிழ்" என்று நிறுவிய பெருமை, செந்தமிழ் ஆசானையே சேரும். இத்தகு சீர்மிகு சிறப்புகள் ஒருங்கே வாய்க்கப் பெற்ற செந்தமிழ் வேழத்தின், அறிவார்ந்த அடிச்சுவட்டில் அரைக் கலைக்களஞ்சிய அமைப்பில், நான்காம் மடலத்தின் முதற்பகுதியாகிய த, தா வரிசைப் பகுதி அணியமாக்கப்பட்டுள்ளது.

இப்பகுதியின் கண்ணே, மொழி மீட்பரின் வேர்ச்சொல்லாய்வின் நெறிநின்று, மோனியர் வில்லியம்சின் வடமொழியகரமுதலியின் துணைக்கொண்டு, வடசொல்லென்று, கருதிய தமனி, தத்துவம், தந்தி போன்ற சொற்களுக்கு வேர் மூலம் காட்டப்பட்டுள்ளது.

(எ.கா.)

**தமனி**[2] *tamaṇi*, பெ. (n.) *1.* **தூய அரத்தம் ஓடும் குழாய்;** blood vessel carrying blood away from the heart. *2.* நீரோடும் கால்வாய்; canal by which fluid is conveyed, duct. *3.* காற்றுக் குழல்; wind pipe. *4.* மூச்சுக் குழலின் கிளை; one of the bifurcations of the wind pipe. *5.* வெண்ணீர்க் (விந்துக்) குழாய்; spermatic card. *6.* நரம்புத் தொடரி; nerve chain (சா.அக.).

*[தம் + அன் + இ – தமனி. தூய்மையான அரத்தத்தை நெஞ்சாங் குலையினின்று, உடலின் ஏனைய உறுப்புகளுக்குத் தருவது தமனி. 'அன்' சாரியை. 'இ' சொல்லாக்க விகுதி. இச்சொல்லிலும் தருதற்கருத்தே அடிப்படையாக உள்ளது. உடலுக்குள் இருக்கும் உறுப்புகள் சீர்மையாகக் கட்டுக்கோப்புடன் இயங்குதற் பொருட்டுத் தூய்மையான அரத்தத்தைத் தரும் பணியினைத் தமனி ஆற்றுகிறது. "வம்மின்கள் தாயரீர் மாலை அதுவாங்கித் தருவது தம்மின்கள்" என்ற விக்கிரமச் சோழனுலாப் பாடல் தருதற் கருத்து இலக்கியத்தில் பயின்று வருவதைக் காட்டுகிறது. 'தம்' ஈங்கு படர்க்கைப் பன்மையாகும்.]*

சொற்பிறப்பு நெறிமுறைகளில் அசைநிலை, புணர்நிலை எனுமிருவகை இயல்பிற்கேற்றவாறு, "தந்தி" என்னும் சொல்பற்றி விளக்கம் அமைந்துள்ளது.

இயன்றவரை, இப்பகுதியில் முன்னொட்டுகள், பின்னொட்டுகள், இடையொட்டுகள், ஈறுகள் முதலானவை சொற்களில் உரியவாறு பிரித்து விளக்கப்பட்டுள்ளன.

தருமசபை, தருமம், தலம், தந்திரம், தத்துவம் முதலான சொற்கள், மோனியர்வில்லியம்சின் வடமொழிப் பொருளினை எடுத்துக்காட்டித் தனித்தமிழ்ச் சொற்களென்று நிறுவப்பட்டுள்ளன.

தருமம் - என்ற சொல், செந்தமிழ்ச் சொல்லின் மரபினைப் பேணிக்காக்குந் தன்மையில் விளக்கப்பட்டுள்ளது.

பொதுவான அகரமுதலியைவிடப் பல்லாற்றானும் வேறுபட்டுத் திகழும், இச்சொற்பிறப்பு அகரமுதலிப் பகுதியில் இனச்சொல் காட்டுதல், ஒரு பொருள் குறித்த பலசொல் காட்டுதல், கல்லாதார் நாவில் நிலைபெற்றுத் திகழும் பழமொழிகளைக் குறித்தல், இக்கால வழக்குகளை ஏற்ற விடத்திற் பொருத்திக் காட்டுதல் போன்றவற்றில் தனிக்கவனம் செலுத்தப்பட்டுள்ளது. பாவாணர் வேர்ச்சொற் கட்டுரைகளில் பொதிந்த நெறிமுறைகள் சிறந்த முறையில் விளக்கம் பெற்றுள்ளன. கல்வெட்டுச் சொற்றொடர்களும், உலக வழக்குத் தொடர்களும், உரியவிடத்தில் சேர்க்கப் பட்டுள்ளன.

இன்றியமையாத சொற்களுக்கு, அரைக் கலைக்களஞ்சிய அமைப்பில் சிறப்புக் குறிப்புகள் குறிக்கப்பட்டுள்ளன. (எ-டு.) 'தா', 'தத்துவம்', 'தமிழ்' போன்ற சொற்களைக் கூறலாம். தமிழ்மொழியின் தாய்மையும், தலைமையும், தூய்மையும், 'தனி மொழி', 'தமிழ்', 'தத்துவம்' போன்ற சொற்களில், ஆராய்ச்சியாளர் பயன்கொள்ளும் பாங்கில், எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**மாண்புமிகு தமிழக முதல்வர்** அவர்கள் விழுமிய வண்ணம், தொய்வுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்குப் புத்துயிர் அளிக்கப்பட்டுப் பணி விரைவுபடுத்தப்பட்டதின் விளைவாய் ஆறு பகுதிகள் நேர்த்தியாக ஒருசேர வெளியிடும் நோக்கில் இத்துறை முனைப்புடன் செயலாற்றி, '**த**' கர மடலத்தின் முதல் பகுதியாகிய த, தா வெளியிடப்படுகிறது. அகரமுதலிப் பணிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் **மாண்புமிகு கல்வியமைச்சர்** அவர்களுக்கும், கனிவான நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அகரமுதலித் திட்டத்திற்கு பல்லாற்றானும் அறிவுரையும் ஆலோசனையும் அளித்து வரும் எம்துறைச் **செயலாளர் திரு. பு.ஏ. இராமையா,** இ.ஆ.ப., அவர்களுக்கு நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்பகுதி வெளிவர அகரமுதலி மேற்பார்வையாளர் என்ற முறையில் ஒத்துழைப்பு நல்கிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களும் அயரா துழைத்த அனைத்துத் தொகுப்பாளர்களும், கூர்ந்தாய்வுப் புலமையாளர் இலக்கணப் பெரும் புலவர் த. சரவணத்தமிழன் அவர்களும் போற்றுதற் குரியராவர்.

சென்னை
15-10-2003

**தா. சந்திரசேகரன்**

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## நான்காம் மடலம் - முதற் பாகம்

## த, தா

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# த

**த்** *1,* ஒலிப்பிலா வல்லினப் பல்வெடிப் பொலியான, ஏழாம் மெய்யெழுத்து; the seventh consonant being the voiceless dental stop.

*தகர உயிர்மெய்யின் வரிவடிவம், இரு நிலைகளில் கல்வெட்டுக்களில் காணப் படுகிறது. 1) கி.மு. 3-ஆம் நூற்றாண்டை சேர்ந்த தமிழியெழுத்தினின்று வளர்ந்த நிலை. 2) கண்ணெழுத்து அல்லது வட்டெழுத்தினின்று வளர்ந்த நிலை. வட்டெழுத்தினை, மொழிஞாயிறு வெட்டெழுத்து என்று குறித்துள்ளார்.*

*கி.மு. 3-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழி யெழுத்தை, முன்னாளில் அசோகன் குகையிற் காணப்படும், பிராமி வரிவடிவத்துடன் ஒப்பிடுவர். முதுபெரும் கல்வெட்டறிஞர் கே.வி. சுப்பிரமணிய ஐயர், தமிழியெழுத்து என்று நிறுவியுள்ளார். இவர் மதுரை மாவட்டத்திலுள்ள திருப்பரங்குன்றம், ஆனைமலை, அழகர்மலை, மீனாட்சிபுரம் போன்ற இடங்களிற் காணப்படும், தமிழிக் கல்வெட்டில் உள்ள த, ற, ழ, ள, ன () முதலான உயிர்மெய் வரிவடிங்களைக் காட்டி, தமிழியென்று உறுதிப்படுத்துகிறார்.*

**வரிவடிவம் வருமாறு    வெட்டெழுத்து**

*கி.மு. 3 - மதுரை மாவட்டத்திற் காணப்படும் வரி வடிவம்*

*அசோகன் குகையெழுத்துக் கல்வெட்டில்*

*கி.பி. 5 இல்*

*கோமாசி மாறன் வெட்டெழுத்துக் கல்வெட்டில்*



*கி.பி. 7 இல் பிற கல்வெட்டில்*

*கி.பி.7 இல் பல்லவர் கல்வெட்டில்*

*கி.பி. 8 இல்*

*செங்கம் மாவட்டம் இருளப்பட்டிக் கல்வெட்டில்*

*கி.பி. 9 இல்*

*செங்கம் நடுகற் கல்வெட்டில்*

*பராந்தகன் கி.பி. 10இல் கல்வெட்டு*

*பாண்டியன் தளவாய்புரச் செப்பேட்டில், கி.பி. 10 இல்*

*கி.பி. 11 இல் தமிழி யெழுத்து*

*கி.பி. 11 இல் சோழர் பாண்டியர் கல்வெட்டுகளில்*

*கி.பி. 12 இல் தமிழி யெழுத்து இன்றைய நிலையையடைந்தது*

*கி.பி. 13 இல் முழு வடிவம் பெற்றது*

*கி.பி. 15 இல்*



**தமிழியெழுத்து:** *கீழ்க்கவித்த போன்றதின் மேற்கோடு, வலப்புறம் சாய்ந்தது; பின் வலப்புறக்கோடு 'ட' என்பதில் போல, இடஞ் சொல்லும் வளைவாயிற்று. பின் இடையே ஒரு சுழி வளர்ந்தது. கீழ் நோக்கிய வளைவு அளவில் குறைந்து நின்று, சிறிது சிறிதாக ஒரு கோடு, இடமாகச் சென்றது. கீழ்நோக்கிய வளைவு இடமாகச் சென்று நீண்ட கோடாயிற்று. முடிவில் மேற்புறத்தே இடமாகச் சென்ற கோடும் கீழிறங்கி, இன்றைய வடிவினை அடைந்தது. (தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி - 14).*

*கண்ணெழுத்து அல்லது வெட்டெழுத்தின் (வட்டெழுத்து) வளர்ச்சி – விளக்கம்*

முதன்முதலில் கி.மு. 3ஆம் நூற்றாண்டில் தமிழியெழுத்து () வடிவிலிருந்தது. தமிழ்நாடு முழுவது இவ் வடிவம் பரவலாகக் காணப்படுகிறது.

கி.பி. 2 அல்லது 3ஆம் நூற்றாண்டில் அரச்சலூர்க் கல்வெட்டில் கண்டபடி, ஒரு, மேல், கீழ்க்கோட்டில் பிரிந்துவரும் சிறு கோடு ஆக எழுதப்பட்டது (  ). ஏறத்தாழ கி.பி. 5ஆம் நூற்றாண்டில் இதன்வடிவம் மேல், கீழ்க்கோடு நேராகி, வலப்புறக்கோடு, வளைந்து வரத் தோன்றியது. இது செங்கம் வட்டத்துச் சோமாசி மாறன் வட்டெழுத்துக் கல்வெட்டில் தோன்றிற்று. இது தமிழுக்கும் வட்டெழுத்துக்கும் பொதுவானது (  ).

அடுத்து, தமிழில் இது, மேல் கீழ்க்கோட்டின் அடியிலிருந்து வளைத்து, இடப்புறம் வந்து, வலப்புறக் கோட்டோடு இணைந்தது (  ). இது, கி.பி. 7ஆம் நூற்றாண்டிலிருந்து, (  ) பல்லவர் கல்வெட்டுக்களில் கிடைக்கின்றது (  ). இதன் வளர்ச்சி பற்றி, தகர உயிர்மெய் எழுத்து (  ) அகரமுதலியைப் பார்க்கவும்.

வெட்டெழுத்தில் (வட்டெழுத்தின்) வலப்புறக் கோடு, மேல்கீழ்க்கோட்டின் அடியில் தொடர்ந்து (எழுதப்பட்டது) இடப்பட்டது. இருளப்பட்டிக் கல்வெட்டு, (செங்கம் வட்டம்) (  ) இந்த உருவத்தைக் காட்டுகிறது. மற்ற செங்கம் நடுகற் கல்வெட்டுகள் 9ஆம் நூற்றாண்டுவரை வளர்ச்சியைக் காட்டுகின்றன.

கி.பி. 10ஆம் நூற்றாண்டில், பாண்டியன் பராந்தகனின் தளவாய்புரச் செப்பேட்டுக்குப் பிறகு, இருமுனையும் கூடும்நிலை வந்தது....

பிறகு, 11-ஆம் நூற்றாண்டிலிருந்து கூடிய நிலையிலேயே காணப்பட்டது.

இவ் வடிவினைச் சோழர் பாண்டியர் கல்வெட்டுகளில் காணலம். (தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி - 14).

**த**[1] *13*, **'த்' என்ற மெய்யும் 'அ' என்ற உயிரும் சேர்ந்த உயிர்மெய்யெழுத்து;** the consonant of t and a. "அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின் நாநுனி பரந்து மெய்யுற வொற்றத் தாமினிது பிறக்குந் தகாரம் நகாரம்" *(தொல். எழுத்து. 93.).*

*[த் + அ = த]*

அனைத்துலக ஒலிக்கழக ஒலிப்புமுறைப்படி 'த்'கரம் 't' என்று எழுதப்பெறும். மொழிக்கு முதலில் தகரம் இந்த ஒலியே பெறும். மொழிஞாயிறும், இவ்வொலிப்பு முறையைப் பின்பற்றியே, அகரமுதலியை அமைத்துள்ளார். 'காது' முதலிய இடங்களின் இரண்டு உயிரிடையே உரசு ஒலியாகும். இங்கு other என்ற ஆங்கிலச் சொல்லின் ஒலிப்பினைப் போன்று ஒலிக்கும். நாநுனி பாந்து, பல் ஈற்றினைத் தொடுவதுபோல் இங்கு ஒலிக்கும்.

சந்து, கந்து, பந்து முதலிய இடங்களில், 'ந்'காத்தின்பின், ஒலிப்பொலியாக (voiced) ஒலிக்கும். இந்தத் தகரம், கத்து, பத்து முதலிய இடங்களில், இரட்டித்துப் பயிலுங்கால், செறிவுடை வெடிப்பொலியாகும். இங்கு 'த்'கரம் இரண்டு மாத்திரை பெறும். காத்து, வாத்து, சாத்து முதலியவிடங்களில் நெட்டெழுத்தின் பின் சற்றுக் குறைந் தொலிக்கும். பேர்த்து, பார்த்து, வார்த்து, சார்த்து முதலியவிடங்களில் 'ர'காத்தின் பின், ஒரு மெய்யளவு மாத்திரை பெற்று ஒலிக்கும் என்பார், மொழியியல் அறிஞர் பர்த் (firth) இரட்டித்த தகரம் உயிர்களிடையும், ய், ர், ழ் என்பவற்றின் பின்னுமே வரும்.

(எ.டு.) தீய்த்து, வாய்த்து, சார்த்து, வேர்த்து, தாழ்த்து, ஆழ்த்து

தகரம் மொழிக்கு முதலிலும், இடையிலும் அன்றி, ஈற்றில் பயிலாது. மெல்லெழுத்துக்களில் 'ந்'கரத்தின் பின் மட்டுமே வரும். ஞ் என முடியும் சொல், தகரத்தின் முன் உகரம் பெறும். 'ன்' அல்லது 'ல்', 'ண்' அல்லது 'ள்' என்பவற்றின் பின்வரும் தகரம், முறையே, றகர, டகரமாக மாறும். மகரம், தகரத்தின்முன் நகரமாகத் திரியும். நெட்டெழுத்தினை அடுத்துவரும், 'ய்', 'ர்', 'ழ்' என்பவற்றின் பின் மட்டுமே, தகரம் வரும்.

மொழியியல் வல்லுநர், "ஆய்தத்திற்கு முன்பு ஒலிக்கும் தகரம், ஊசொலி என்பதை மெய்ப்பிக்குந் தன்மையில், தொல்காப்பியர் காலத்திலேயே பயின்று வந்துள்ளது என்று கருதுகின்றனர்.

கணகணப்பு → தணதணப்பு (க → த) போன்ற சிலவிடங்களில் 'க' → 'த' ஆக மாறுகிறது. தைத்து → தைச்சு, வைத்து → வைச்சு போன்ற சில இடங்களில் த → ச ஆக மாறுகிறது.

பல்லினொலி, அண்ணச்சாயல் பெறுவது முந்தைய வழக்கமாகும். இவ்வழக்கு கல்வெட்டுகளில் காணப்படுகிறது. இஃது, இலக்கியவழக்கில் மாற்றம் பெற்றாலும், பேச்சுவழக்கில் நிலைத்துவிட்டது.

(எ.டு.) வாய்த்து → வாய்ச்சு, காய்த்து → காய்ச்சு, போய்த்து → போச்சு, சாய்த்து → சாய்ச்சு போன்ற வடிவங்கள், பழைமையை நினைவூட்டுவன. வந்தது → வந்துசி, தந்தது → தந்துசி போன்ற வழக்குகளிலும், த → ச மாற்றம் பொருண்மை குன்றாது ஒலி இயைபிற்கு ஏற்றவண்ணம், அமைந்துள்ளமை காண்க.

**த**[2] *ta*, பெ. (n.) கைக்கிளையாகிய விளரியிசையி னெழுத்து (திவா.); symbol representing the sixth note of the gamut.

**தக்க** *takka*, பெ.எ. (adj.) *1.* தகுந்த, இயைபாக; appropriate, suitable. பாராட்டத்தக்க செயல். வெற்றி பெற்றவர்களுக்குத் தக்கபரிசு வழங்கப் படும் (உ.வ.). காணாமல் போனவரைப் பற்றித் தகவல் தருபவருக்குத் தக்க கொடை தரப்படும் (இவ.). *2.* மதிப்புறு; worthy of. ஆராய்ச்சியுலகில் பாவாணர் தக்கஅறிஞராய்த் திகழ்ந்தார்.

ம. தக்கம்

*[தகு → தக்க]*

**தக்ககன்**[1] *takkagaṉ*, பெ. (n.) எண்வகை நாகப் பாம்புகளுளொன்று; one of eight snakes.

**தக்ககன்**[2] *takkagaṉ*, பெ. (n.) தக்கசங்காரன் பார்க்க; see *takka-šaṅgāraṉ*.

**தக்ககன்**[3] *takkagaṉ*, பெ. (n.) கரணமங்கை – மாகிட்டியன் இவர்களின் மகன்; the son of Karaṇamaṅgai and Māgiṭṭiyaṉ. "நிரைவளைக் கரணமங்கை நேர் மாகிட்டியற் புணர்ந்து – தரையிடை யுயிர்த்த மைந்தன் றக்ககன்" (சூத. சிவமா. 12 : 25).

**தக்ககன்**[4] *takkagaṉ*, பெ. (n.) குடும்பத்தலைவன்; head of a family.

*[தக்கன் → தக்ககன். குடும்பத்தில் உள்ளவர்களுள், தலைமையானவன். ஆற்றலாளன். அனைத்து நிலைகளிலும் ஒப்பாரும், மிக்காருமின்றித் திகழும், தன்னேரில்லாத் தன்மையன், குடும்பத்திற் கேற்றவன் என்றறிக]*

**தக்கசங்காரன்** *takka-šaṅgāraṉ*, பெ. (n.) சிவன்; Lord Śivaṉ.

*[தக்கன் + சங்கரன் → தக்கசங்காரன்]*

முழுமுதற் கடவுளான அழல் வண்ணனின் அழித்தற்றொழில் குறிக்கப்பெற்றதெனலாம்.

**தக்கட்டி** *takkaṭṭi*, பெ. (n.) உண்ணுவதற்குத் தக்கவாறு நன்கு முதிர்ந்து, பழுத்த கனி; a ripe fruit suitable for eating.

*[தகு → தக்க → தக்கட்டி.]*

**தக்கடாபிக்கடாவெனல்** *takkaḍā-pikkaḍā-v-eṉal*, பெ. (n.) தாறுமாறாகப் பேசுதற் குறிப்பு (இவ.); onom. expr. of ranting, blustering.

*[தக்கடா + பிக்கடா + எனல்.]*

தகு + அடா - தக்கடா - எதிரொலிச் சொல் (echoing word). பிக்கடா → புக்கடா என்று சில மாவட்டத்தில் கூறுவர்.

**தக்கடி**[1] *takkaḍi*, பெ. (n.) *1.* ஏய்ப்பு (யாழ்.); guile, deceit. *2.* இரண்டகம் (யாழ்ப்.); treachery, insidiousness, villainy. *3.* முரட்டுத்தனம் (யாழ்ப்.); rudeness, fierceness. *4.* பொருந்தா உரையாடல் (யாழ்ப்.); crossness, unreasonableness, captiousness in argument. *5.* பொய் (இவ.); falsehood, lie.

மறுவ. வீண்குழப்பம், வாய்ச்செருக்கு

தெ. தக்கிடி

*[தாக்கு + அடி → தாக்கடி → தக்கடி திடுமெனதாக்கி அழித்தலைப் போன்று, மனம் திடுக்குறவும், நடுக்குறவும் ஏமாற்றுதல்.]*

**தக்கடி**[2] *takkaḍi*, பெ. (n.) *1.* துலைக்கோல் (G.Sm. D.I, i. 284.); balance on the principle of a steelyard. *2.* பத்துச்சேர் கொண்ட நிறையளவு; a weight of ten seers.

தெ. தக்கெட



*[தக்கு + அடை → தக்கடை → தக்கடி. தக்கு = தக்கது, நேரானது, சீரானது, சமமானது.]*

**தக்கடிவித்தை** *takkaḍi-vittai,* பெ. (n.) 1. செப்படிவித்தை; juggling, sleight of hand. 2. ஏமாற்றுமுறை; deceitful tricks, deception (செ.அக.).

*[தக்கடி + வித்தை]*

**தக்கடை** *takkaḍai,* பெ. (n.) இரட்டைத் தட்டுள்ள நிறைகோல் (C.G. 91.); a pair of scales.

தெ. தக்கெடா

*[தக்கு + அடை → தக்கடை]*



**தக்கடைக்கல்** *takkaḍai-k-kal,* பெ. (n.) நிறைகல் (C.G.); stone - weights used in scales.

*[தக்கடை + கல்]*

**தக்கடைக்குண்டு** *takkaḍai-k-kuṇḍu,* பெ. (n.) தக்கடைக்கல் (C.G.) பார்க்க; see takkaḍai-k-kal.

*[தக்கடை + குண்டு ]*

**தக்கடைப்பில்லை** *takkaḍai-p-pillai,* பெ. (n.) துலைத்தட்டு (C.G.); scale pan.

*[தக்கடை + பில்லை]*

**தக்கணஅவசரம்** *takkaṇa-avaśaram,* பெ. (n.) கருப்பையில் விரைந்து உலவும் கரு; moving in the pregnent emergency womb as foetus (சா. அக.).

**தக்கணகௌளி** *takkaṇa-kauḷi,* பெ. (n.) நற்குறியாகத் தெற்கிலிருந்தேனும் வலப் பக்கத்திலிருந்தேனும், ஒலியெழுப்பும் பல்லி (வின்.); lizard chirping from the south or the right side, considered auspicious.

*[தக்கு + அணம் → தக்கணம் + கௌளி. Skt. கௌளி]*

**தக்கணத்துப்புலவன்** *takkaṇattu-p-pulavaṉ,* பெ. (n.) அகத்தியன்; a sage Agattiyaṉ an erudite scholar of the south.

*[தக்கணம் + அத்து + புலவன்]*

**தக்கணநட்சத்திரவோரை** *takkaṇa-naṭcattira-v-ōrai,* பெ. (n.) தென்மண்டல ஓரைகளின் விண்மீன் தொகுதி; the southern constellation (M.Navi. 109).

*[தக்கணம் + நட்சத்திரம் + ஓரை. தென்பகுதியிலமைந்துள்ள ஓரைகளின், விண்மீன் குழுமம்]*

**தக்கணநடுவண்பூமி** *takkaṇa-naḍuvaṇ-būmi,* பெ. (n.) தென்திசை சமதட்ப வெப்பநிலை நிலப்பரப்பு; south temperature zone.

*[தக்கு + அணம் → தக்கணம் + நடுவண் + பூமி → தக்கணநடுவண்பூமி]*

**தக்கணநாடு** *takkaṇa-nāḍu,* பெ. (n.) 1. இந்தியத் தீவ(வு)க்குறையின் தென்பகுதி (இந்தியாவின் தென்பகுதி); Southern part of the Indian peninsula. 2. கிழக்கு, மேற்கு மலைத் தொடருக்கு இடையில் உள்ள நிலப்பரப்பு (வின்.); deccan, the table land between the Eastern and the Western Ghats.

*[தக்கணம் + நாடு]*



**தக்கணநீர்** *takkaṇa-nīr,* பெ. (n.) காவிரி; water of the south (the river cauvery).

*[தக்கணம் + நீர்]*

**தக்கணப்பயணம்** *takkaṇa-p-payaṇam*, பெ. (n.) கடகத்திருப்பத்திலிருந்து சுறவ (மகர)த் திருப்பம் வரை, ஆன பரிதியின் பயணகாலம்; கடகம் (ஆடி) முதல் ஆறு திங்கள்; travel period of the Sun from Tropic of Cancer to Tropic of Capricon.

தக்கணம் + பயணம் → Skt. தட்சணாயனம். தக்கு → தக்கணம் → Skt. தட்சணம்.

பரிதி நிலையாகவும், புவிக்கோளம் ஆண்டிற் கொருமுறைப் பரிதியைச் சுற்றி வருகிறது. புவியிலிருப்போருக்குப் பரிதி சுற்றுவது போலத் தோன்றும். புவிக்கோளத்தின் அச்சு 23 1/2 பாகை சாய்ந்திருப்பதால், பரிதி வடக்கிலிருந்து தெற்காகவும், தெற்கிலிருந்து வடக்காகவும் பயணிப்பது போலத் தோன்றுகிறது. தெற்கு நோக்கிய பயணம் தக்கணப்பயணம் என்றும், வடக்கு நோக்கிய பயணம் உத்திரப்பயணம் என்றும் பெயர் பெறும்.

**தக்கணப்புல்** *takkaṇa-p-pul*, பெ. (n.) சானம்; deccany grass (சா.அக.).

*[தக்கணம் + புல்]*

**தக்கணப்பகுதி** *takkaṇa-p-pagudi*, பெ. (n.) உலகவுருண்டையின் தெற்குப்பகுதி (வின்.); the south pole, Antartic zone.

*[தக்கணம் + பகுதி → தக்கணப்பகுதி. ஞாலத்தின் தென்புறமுள்ள பனிப்பகுதி]*

**தக்கணப்பந்தம்** *takkaṇa-p-pandam*, பெ. (n.) மூவகைக் கட்டுகளுள் ஒன்று; one of the three kinds of bondage (சா.அக.).

*[தக்கணம் + பந்தம்]*

**தக்கணம்**[1] *takkaṇam*, பெ. (n.) 1. தெற்கு; south. "தக்கண மதுரை" (மணிமே. 22: 121). 2. தக்கண நாடு பார்க்க; *takkaṇa-nāḍu*[1]. 3. வலப்பக்கம்; right side. "தக்கண கணைக்கால்" (சூத. ஞான. 15: 3).

த. தக்கணம் → வ. தக்ஷிண

*[தக்கு (தாழ்வு) + அணம் → தக்கணம்.]*

கிழக்கு நோக்கும்போது தென்றிசை வலமும், வடதிசை இடமுமிருப்பதால், தக்கணம் என்னும் சொற்கு வலதிசைப்பொருளும் உத்தரம் என்னும் சொற்கு இடதிசைப் பொருளும் தோன்றன (வ.மொ.வ. 170).

**தக்கணம்**[2] *takkaṇam*, கு.வி.எ. (adv.) உடனே, அதே காலத்தில் (இ.வ.); at the same moment, immediately, instantaneously.

*[சடக்கெனல் = விரைவை உணர்த்தும் ஒலிக்குறிப்புச் சொல். சடக்கென → தடக்கென → தக்கென → தக்கணம். ஒருகா. கணம் - நொடிப்பொழுது, நேர அலகு. அக்கணம் → தக்கணம்]*

**தக்கணம்**[3] *takkaṇam*, பெ. (n.) தாள உயிர்ப்பின் உட்பிரிவு (யாழ். அக.); a unit of time-measure.

**தக்கணமார்க்கம்** *takkaṇa-mārkkam*, பெ. (n.) சிவசமயத்தின் உட்பிரிவுகளுள் ஒன்றான காளாமுகம்; a minor system of Šaivism.

*[தக்கணம் + Skt. மார்க்கம் → தக்கண மார்க்கம். சைவ சமயத்தின் உட்பிரிவு. இச் சமயத்தினைச் சிறுபான்மையினரே தழுவியுள்ளனர்.]*

**தக்கணவர்த்தகம்** *takkaṇa-varttagam*, பெ.(n.) பூனைக்காஞ்சொறிச் செடிவகை; climbing nettle (சா.அக.).

**தக்கணன்** *takkaṇaṉ*, பெ. (n.) சிவன்; Šivaṉ. "தக்கணா போற்றி தருமா போற்றி" (தேவா. 968, 10).

மறுவ: அறமுரைத்தபட்டன், ஆலமர் செல்வன், தக்கணநம்பி, தக்கணமுகநம்பி, தென்முகநம்பி

*[தக்கணம் → தக்கணன். திருக்கோயிலில் தெற்குநோக்கியமர்ந்து, அனைவருக்கும் அறமுரைக்கும் ஆசிரியனாகத் திகழும் சிவத்திருவுருவம்]*

**தக்கணாக்கினி** *takkaṇākkiṉi*, பெ. (n.) தக்கிணாக்கினி (சூடா.) பார்க்க; see *takkiṇākkiṉi*.

*[தக்கிணாக்கினி → தக்கணாக்கினி]*

**தக்கணாக்கினியம்** *takkaṇā-k-kiṉiyam*, பெ. (n.) தக்கிணாக்கினி பார்க்க; see *takkiṇākkiṉi*.

*[தக்கணாக்கினி → தக்கணாக்கினியம்]*

**தக்கணாதி** *takkaṇādi*, பெ. (n.) குறிஞ்சியாழ்த் திறங்களுள் ஒன்று (பிங்.); an ancient melody type of the Kuriñji class.

**தக்கணாமுட்டி** *takkaṇā-muṭṭi,* பெ. (n.) ஒன்றுக்கும் உதவாத சோம்பேறி (மடியன்) (தஞ்சை.); lazy, good-for-nothing fellow.

எச்செயலிலும் காலூன்றி நில்லாதவன். திறம்பட வினையாற்ற மனமின்றி, வீணே மந்தமாய்த் திகழ்பவன்.

[தக்கு (தாழ்வு) + முட்டி. முட்டி = மூடன்]

**தக்கணாமூர்த்தம்** *takkaṇā-mūrttam,* பெ. (n.) தக்கணாமூர்த்தி பார்க்க; see *takkaṇā-mūrtti.*

[தக்கணம் → தக்கணன் + மூர்த்தம் → தக்கணமூர்த்தம் → தக்கணாமூர்த்தம்]

**தக்கணாமூர்த்தி** *takkaṇā-mūrtti,* பெ. (n.) தக்கணன் பார்க்க; see *takkaṇaṉ.*

மறுவ. தென்முகநம்பி, அறமுரைத்த கடவுள், ஆலமர்செல்வன்

[தக்கணம் + Skt. மூர்த்தி. தென்முகமாக வீற்றிருந்து அனைத்து ஆதன்கட்கும் (ஆன்மாக்கட்கும்) அறமுரைக்குங் கடவுள்]

**தக்கணாமூர்த்தித்தேவர்** *takkaṇāmūrtti-t-tēvar,* பெ. (n.) தக்கணன் பார்க்க; see *takkaṇaṉ.* "தக்கணா மூர்த்தித் தேவர் தாமிருந்த ஆலமரத்தே" (கலித். 131, உரை.).

[தக்கணன் + மூர்த்தி + தேவர் → தக்கணாமூர்த்தித்தேவர்]

**தக்கணாயனம்** *takkaṇāyaṉam,* பெ. (n.) தக்கணப்பயணம் பார்க்க; see *takkaṇa-p-payaṇam.* "அயன முத்தராயனமும் . . . தக்கணாயனமுமென விரண்டாம்" (கூர்மபு. பிரமா. 4).

[தக்கணம் + அயனம்]

**தக்கணை** *takkaṇai,* பெ. (n.) பெரியவர்கட்கு வழங்கும் பொருள்; offering. "வேள்வியாய்த் தக்கணையாய்த் தானுமானான்" (திவ். பெரியாழ். 4: 9: 5).

**தக்கத்தடி-த்தல்** *takka-t-taḍi-,* 4 செ.குவி. (v.i.) மிகப்பருத்தல்; to swell to an enormous size or extent. "தக்கத்தடித்து பக்கப்பருத்து என்னுமா போலே கத்தக்கதித்தென்று ஒரு முழுச் சொல்லாய்" (திவ். பெரியாழ். 1. 9: 3: வியா).

[தகு → தக்க + தடி-.]

**தக்கது** *takkadu,* பெ. (n.) 1. தகுதி (திவா.) பார்க்க; see *tagudi.* 2. தகுதியானது; that which is fit or proper. "தக்கதே நினைந்தான் றாதை" (கம்பரா. கைகேயி. 102).

[தகு → தக்கது.]

**தக்கப்பண்ணு[1]-தல்** *takka-p-paṇṇu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. நிலைக்கச் செய்தல்; to keep securely and permanently. 2. வயப்படுத்துதல் (இராட்.); to secure a thing, appropriate. 3. கருக் கலையாமல் பார்த்துக் கொள்ளல்; to retain the foetus in the womb, by preventing abortion. 5. பிறந்தகுழந்தை இறவாதபடி செய்தல்; to treat the new born and keep it alive (சா.அக.).

[தக்கு → தக்க + பண்ணு-.]

**தக்கப்பண்ணு[2]-தல்** *takka-p-paṇṇu-,* 5 செ.குவி. (v.i.) ஒருவனது தகுதியைக் காட்டுதல்; to show one's fitness. ஒருவேலையில் தலையிட்டால் அதற்குத் தன்னைத் தக்கப்பண்ண வேண்டாமா? (இ.வ.).

[தக்க + பண்ணு-.]

**தக்கபருவம்** *takka-paruvam,* பெ.(n.) இளமைப் பருவம்; adult age (சா.அக.).

மறுவ. விடலைப்பருவம்

[தக்க + பருவம்]

**தக்கபிக்கவெனல்** *takka-pikka-v-eṉal,* பெ.(n.) தாறுமாறாதற்குறிப்பு; onom. expr. of being unruly, disorderly, improper or awkward. தக்கபிக்கவென்று உளறுகிறான் (உ.வ.).

[தக்க + பிக்க + எனல்]

**தக்கம்[1]** *takkam,* பெ. (n.) 1. நிலைபேறு; stability. "தக்கமில் செய்கைப்பொருள்" (பழ. 362.). 2. பற்று; attachment. "தக்கம் படாமை தவம்" (சிறுபஞ்ச. 77). 3. பல்லாங்குழி விளையாட்டில் காய்கள் இல்லாதிருக்குங் குழி (நெல்லை); empty cavity in the pallāṅguḻi board during a game. 4. ஏனத்தின் அடியில் தங்கின உணவு நீர் (அந்தண.); semi-liquid food at the bottom of a vessel.

[தங்கு → தக்கு → தக்கம்]

**தக்கம்**[2] *takkam,* கு.வி.எ. (adv.) தொடக்கம் முதல்; forwards, from. நாளைத்தக்கம் நீ வரவேண்டும் (செ.அக.).

*[துவக்கம் → தவக்கம் → தக்கம் (உ.வ.)]*

**தக்கம்**[3] *takkam,* பெ. (n.) உறழ்வு, சொற்போர் (இ.வ.); dispute.

*[தருக்கம் → தக்கம்]*

**தக்கம்**[4] *takkam,* பெ. (n.) தடை; objection. பல்லாங்குழி விளையாடும் செல்வி 'இது தக்கம்' என்றாள் (உ.வ.).

*[தக்கு - தாழ்வு. தாழ்ந்த நிலையில் ஏற்படுந்தடை. தக்கு → தக்கம்]*

**தக்கம்**[5] *takkam,* பெ. (n.) அறநூல் பதினெட்டனுள் ஒன்று (திவா.); a Sanskrit text-book of Hindu law, ascribed to Dakṣa, one of 18 taruma-nūl.

*[தருக்கம் → தக்கம்]*

**தக்கயாகப்பரணி** *takkayāga-p-paraṇi,* பெ. (n.) வீரபத்திரன் தக்கனுடைய வேள்வியை அழித்து வென்றதைப் பற்றிப் புலவர் ஒட்டக்கூத்தர் பாடிய, பரணிநூல்; a poem on Virabhadra's destruction of Dakṣa's sacrifice by Oṭṭa-k-kūttar.

*[தக்கன் + யாகம் + பரணி]*

**தக்கர்** *takkar,* பெ. (n.) கைப்பிடியுள்ளதும், மூடியுடன் கூடியதுமான சிறிய குவளை, சாடி (வின்.); jar.

*[தகு → தக்கு → தக்கர்]*

நீர்மப்பொருட்களை நிறுத்தித் தடுத்து வைத்தலால், தங்குதற்கருத்தினின்று இவ் வேரடி கிளைத்த தெனலாம்.

**தக்கரபுக்கரவெனல்** *takkara-pukkara-v-eṉal,* பெ. (n.) தக்கடாபிக்கடாவெனல் பார்க்க; see *takkaḍā-pikkaḍā-v-eṉal.*

**தக்கரம்** *takkaram,* பெ. (n.) 1. களவு; theft, pilfering. 2. ஏய்ப்பு; சூழ்ச்சி; trickery, guile. "தக்கர மொப்பச் செப்பி" (திருவாலவா. 13, 11).

Skt., Pkt. taskara

*[தக்கடி → தக்கடம் → தக்கரம் - தக்கடி = ஏமாற்றுகை, சூழ்ச்சிசெய்கை, இரண்டகம்செய்கை.]*

**தக்கராகம்** *takka-rāgam,* பெ. (n.) பாலைப் பண் வகை (திவா.); an ancient secondary, melody - type of the Pālai class.

*[தக்கம் → தக்கராகம். Skt. ராகம்]*

**தக்கல்** *takkal,* பெ. (n.) அடைப்பு (வின்.); plug.

*[தக்கை → தக்கல்]*

**தக்கவயதோர்** *takka-vayadōr,* பெ. (n.) இளைஞர்; youth (சா.அக.).

*[தக்க + வயதோர்]*

**தக்கவர்** *takkavar,* பெ. (n.) தக்கோர் பார்க்க; see *takkōr.* "தக்காருந் தக்கவரல்லாரும்" (நாலடி., 112).

ம. தக்கவர்

*[தகு → தக்கு + அவர் = தக்கவர்]*

**தக்கவை-த்தல்** *takka-vai-,* 4 செ.கு.வி. (v.i.) ஒன்றை இழக்காமல் தொடர்ந்து வைத்திருத்தல்; to retain (a seat, title, etc., in a contest, election, etc.), to subjugate. விளையாட்டுப் போட்டியில் சிறந்த அணி என்ற சிறப்பினைத் தமிழ்நாடு தக்க வைத்துக் கொண்டது.

*[தங்க → தக்க + வை-.]*

**தக்களி** *takkaḷi,* பெ. (n.) (கையால் பஞ்சிலிருந்து நூல்நூற்கப் பயன்படும்) கம்பியின், மேற் பகுதியில் கொக்கிபோலக் கூர்மையாக வளைத்துக் கீழ்ப்புறம் தட்டுப்போன்ற ஒரு சிறு பகுதியை இணைத்த சிறுகருவி; kind of spindle (for spinning).

*[தக்கு → தக்களி : நூல்இழையினைத் தம்முள் தக்கவைக்கும் நூலிழைக் கருவி]*



**தக்கன்**[1] *takkaṉ*, பெ. (n.) திறமையாளன் (இலக். அக.); clever person.

*[தகு → தக்கன்]*

**தக்கன்**[2] *takkaṉ*, பெ. (n.) எண்வகைப் பாம்புகளிலொன்று (பிங்.); a divine serpent, one of aṭṭā-mā-nāgam.

**தக்கன்**[3] *takkaṉ*, பெ. (n.) கள்வன்; thief. "தண்ட மென்றொரு பொருட் குரிய தக்கரை" (கம்பரா. யுத்த. மந்திரப். 18.).

*[தள் → தள்ளுதல், களைதல், விலக்குதல் தள் → தள்கு → தட்கு + ஆன் = தட்கான் → தக்கன்]*

**தக்கன்**[4] *takkaṉ*, பெ. (n.) நாவலந்தேயத்தின் தென்பகுதியை ஆட்சிசெய்த மன்னன்; the king who ruled the Southern part of India.

*[தகு → தக்கு → தக்கன். தக்கு - தாழ்வு. தாழ்வான தென்பகுதியைக் கோலோச்சியவன்]*

**தக்கன்று** *takkaṉṟu*, பெ.எ. (adj.) சரியன்று; incorrect. "சிறை தக்கன்று செங்கோல் வேற்றென" (மணிமே. சிறைவிடு. 30).

*[தக்கதன்று → தக்கன்று]*

**தக்கனை** *takkaṉai*, குவி.எ. (adv.) தக்காங்கு, 1 பார்க்க; see *takkāṅgu, 1.* வேலைக்குத் தக்கனை கூலி (உ.வ.).

*[தகு + அனை. அனை = சொல்லாக்க ஈறு]*

**தக்கனைக்கொன்றான்** *takkaṉai-k-koṉṟāṉ*, பெ. (n.) சிவனார்வேம்பு; Shiva's neem (சா.அக.).

**தக்காங்கு** *takkāṅgu*, குவி.எ. (adv.) 1. தக்கபடி; suitably, regularly, in an orderly manner. 2. நடுவுநிலையாக; impartially. "தக்காங்கு நாடி" (குறள், 561).

*[தக்கு + ஆங்கு]*

**தக்காணம்** *takkāṇam*, பெ. (n.) தக்கணம்[1], 1,2 பார்க்க; see *takkaṇam*[1] *1,2.* தக்காணத்துத் தொல் பழங்கதைகள்.

*[தக்கணம் → தக்காணம்]*

**தக்காணியம்** *takkāṇiyam*, பெ. (n.) வழக்கிழந்த தமிழிலக்கண நூல் (யாப். வி. 96: 537); a grammatical treatise in Tamil, not extant.

**தக்காபிக்காவெனல்** *takkā-pikkā-v-eṉal*, பெ. (n.) தக்கபிக்கவெனல் பார்க்க; see *takka-pikka-v-eṉal.*

**தக்காமுக்கி** *takkā-mukki*, பெ. (n.) 1. சிக்கலான நிலை; perplexity. 2. பேரிடரான நிலை; state of being at a loss, dangerous state. தக்காமுக்கியில் மாட்டிக்கொண்டான் (சா.அக.).

**தக்காமை** *takkāmai*, பெ. (n.) நிலைக்காமை; lost. பிள்ளை தக்காமை.

*[தக்கு ஆ + மை. 'ஆ' எதிர்மறை இடைநிலை. 'மை' சொல்லாக்க ஈறு. (ஒ.நோ.) செல்லாமை, கொள்ளாமை, செய்யாமை]*

**தக்கார்**[1] *takkār*, பெ. (n.) 1. மேன்மக்கள்; worthy, virtuous persons, the noble. "தக்கா ரினத்தனாய்" (குறள்,446). 2. நடுவுநிலையுடையார்; impartial, upright persons. "தக்கார் தகவில ரென்பது" (குறள், 114). 3. உறவினர் (வின்.); relations.

தெ. தகுநவாரு க. தக்கவாரு

*[தகு → தக்கு → தக்கார்]*

**தக்கார்**[2] *takkār*, பெ. (n.) (மரபுவழியிலோ, அறங்காவலராலோ, ஆளுகைப்படாத பெரிய திருக்கோவில்களில்) பூசை, வருவாய், நகை முதலியவற்றைப் பொறுப்பாகக் கவனித்துக் கொள்ள, அரசால் பணியமர்த்தம் செய்யப்படும் உள்ளூர்ப் பெருமகனார்; one of the local public nominated by the government in the absence of trustee for the management of temples (in India) fit-person.

*[தகு → தக்கு + ஆர்.]*

**தக்கார்**[3] *takkār*, பெ. (n.) பெருமையிற் சிறந்தோர்; great personality.

மறுவ. அறிஞர், ஊவோர்

*[தக்கு + ஆர் → தக்கார்]*

**தக்காரி** *takkāri*, பெ. (n.) 1. தழுதாழை (மலை.); controller of gasteric troubles. 2. முன்னை; Indian head-ache tree - Bremna integrifolia.

**தக்காரிகை** *takkārigai*, பெ. (n.) தக்காரி பார்க்க; see *takkāri*.

*[தக்காரி → தக்காரிகை]*

**தக்காலனா** *takkālanā*, பெ. (n.) தக்காரி பார்க்க; see *takkāri* (சா.அக.).

**தக்காவி** *takkāvi*, பெ. (n.) செஞ்சோளம்; red maize (சா.அக.).

**தக்காள்** *takkāḷ*, பெ. (n.) சிறந்தவள்; the noble woman.

*[தகு → தக்காள்.]*

**தக்காளி** *takkāḷi*, பெ. (n.) உருண்டை வடிவத்தில் சிவப்பு வண்ணத்தில், புளிப்பு, இனிப்புச் சுவையுடைய சமையலுக்கான பழம்; அப் பழம் விளையும் செடி; tomato, the fruit and plants. 2. மணித்தக்காளி; Indian winter-cherry.

தெ. தக்கிளி; ம., க. தக்காளி; Sinh. takkāḷ; Skt. tarkāri

*[தக்கு + ஆள் + இ → தக்காளி. தக்க = தகுந்த, ஏற்ற. உடம்பிற்கு ஏற்ற ஊட்டப்பொருள் தரும் பழம். தக்க ஆளுமைக்குரிய வனப்புத்தரும் பழம். 'இ' சொல்லாக்க விகுதி.]*



தக்காளி வகை:–

1. பெருந்தக்காளி - edible Indian winter cherry- Physallis edulis

2. சிறுதக்காளி - small takkauly, small winter cherry - physallis minima

3. எருமைத் தக்காளி - buffalo winter cherry- Lycopersicum esculentum

4. பேய்த்தக்காளி அல்லது நாற்றத் தக்காளி - demon takkauly

5. மிளகுத்தக்காளி

6. மணித்தக்காளி - Indian hounds berry - Solanum nigrum

7. சீமைத்தக்காளி - Europe brinjal tomato- Lycopersicum solanum

8. பிள்ளைத்தக்காளி : குட்டித்தக்காளி பார்க்க; see *kaṭṭittakkāḷi*.

9. குட்டித்தக்காளி - black berried solanum

10. பகந்தக்காளி - green tomato

11. சிவப்புத்தக்காளி - red physalis- Amatula rubra.

12. நல்லதக்காளி - தக்காளி பார்க்க; see *takkāḷi*.

13. சீமை மணித்தக்காளி - சீமைத்தக்காளி பார்க்க; see *sīmaittakkāḷi*.

**தக்காளிப்பழம்** *takkāḷi-p-paḻam*, பெ. (n.) தக்காளி பார்க்க; see *takkāḷi* (சா.அக.).

*[தக்காளி + பழம்]*

**தக்காளிப்பிள்ளை** *takkāḷi-p-piḷḷai*, பெ. (n.) பிள்ளைப்பூச்சி (வின்.); grillus, a kind of insect.

*[தக்காளி + பிள்ளை]*

**தக்காளியுழுவான்** *takkāḷi-y-uḻuvāṉ*, பெ. (n.) தக்காளிப்பிள்ளை பார்க்க; see *takkāḷi-p-piḷḷai*.

*[தக்காளி + உழுவான்]*

**தக்காற்போல** *takkāṟ-pōla*, கு.வி.எ. (adv.) தக்காங்கு 1 பார்க்க; see *takkāṅgu 1*. 'எனக்குத் தக்காற் போலவன்றோ நீயும் இருப்பது' (ஈடு. 1: 4: 7).

*[தகு → தக்கு + ஆன் + போல.]*

**தக்கானியம்** *takkāṉiyam*, பெ. (n.) கொத்து மல்லி; coriander - Coriandrum sativam (சா.அக.).

தனியா என்பது வட்டார வழக்கு.

**தக்கிடி** *takkiḍi*, பெ. (n.) தக்கடி[2] (இ.வ.) பார்க்க; see *takkaḍi*[2].

*[தக்கடி → தக்கிடி.]*

**தக்கிணபூமி** *takkiṇa-būmi*, பெ. (n.) தக்கணப்பகுதி பார்க்க; see *takkaṇa-p-pagudi*.

*[தக்கு (தெற்கு) + அணம் → தக்கணம் + Skt. பூமி. தக்கணபூமி → தக்கிணபூமி]*

**தக்கிணம்** *takkiṇam*, பெ. (n.) தக்கணம்[1] பார்க்க; see *takkaṇam*[1] (செ.அக.).

*[தக்கணம் → தக்கிணம்]*

**தக்கிணமார்க்கம்** *takkiṇa-mārkkam*, பெ. (n.) தக்கணமார்க்கம் பார்க்க; see *takkaṇa-mārkkam*.

*[தக்கணம் → தக்கிணம் + மார்க்கம் - வழி, பிரிவு. தக்கிணமார்க்கம் → தக்கணமார்க்கம்]*

**தக்கிணன்** *takkiṉaṉ*, பெ. (n.) 1. தென்முகமாக இருக்கும் சிவன்; Śivaṉ. "ஆலமர் செல்வன் பெயர்கொண்டு வளர்ந்தோன்....தக்கிணன் றன்னை" (சிலப். 23, 91-95). 2. திறமையாளன் (இ.வ.): clever person.

*[தக்கணன் → தக்கிணன்]*

**தக்கிணாக்கினி** *takkiṇā-k-kiṉi*, பெ. (n.) வேள்வித்தீ மூன்றனுள் ஒன்று (திருமுரு. 181, உரை): one of the three sacred fires of Vēdic sacrifice.

*[தக்கணம் → தக்கிணம் + அக்கினி]*

**தக்கிணாட்சம்** *takkiṇāṭcam*, பெ. (n.) நிலப்பரப்பின் தென்பகுதி; south latitude..

*[தக்கணம் → தக்கிணம் + அக்கம் - தக்கிணாக்கம் → தக்கிணாட்சம். த. அக்கம் → Skt. அட்சம்]*

**தக்கிணாமூர்த்தி** *takkiṇā-mūrtti*, பெ. (n.) தென் முகமாயிருக்கும் சிவன்; Śiva facing the south (செ.அக.).

*[தக்கணம் → தக்கிணம் + மூர்த்தி]*

**தக்கிணாயனம்** *takkiṇāyaṉam*, பெ.(n.) தக்கணாயணம் பார்க்க; see *takkaṇāyaṇam*.

*[தக்கணம் → தக்கிணம் + அயனம்]*

**தக்கிணி** *takkiṇi*, குவி.எ. (adv.) சிறிதளவு; a small quantity, a little. அவன் எனக்குத் தக்கிணிதான் கொடுத்தான் (சென்னை)..

து. தக்கண

*[துக்குணி → தக்கிணி]*

**தக்கிணை** *takkiṇai*, பெ.(n.) தக்கணை பார்க்க; see *takkaṇai*. "தவமெலாங் கொள்க தக்கிணையா வென்றான்" (கம்பரா. அகத். 31).

**தக்கிப்போ-தல்** *takki-p-pō-*, 8 செகுவி. (v.i.) தக்கு[2]-, 1 (வின்.) பார்க்க; see *takku*[2] -1.

*[தக்கு → தக்கி + போ-]*

**தக்கிரம்** *takkiram*, பெ. (n.) 1. மோர் (திவா.); butter milk. 2. தயிர்; curd (சா.அக.).

**தக்கிரமா** *takkiramā*, பெ. (n.) சேங்கொட்டை; marking nut, dhoby's nut (சா.அக.).

**தக்கிராடம்** *takkirāḍam*, பெ. (n.) மத்து (யாழ். அக.); churning stick.

*[தக்கிரம் → தக்கிராடம்]*

**தக்கிரு-த்தல்** *takkiru-*, 3 செ.கு.வி. (v.i.) தனக்குத் தகவொழுகுதல்; to behave in a worthy manner. 'எம்முடைய வள்ளல் இன்று தக்கிருந் திலன்' (திருக்கோ. 376. உரை).

*[தகு + இரு-]*

**தக்கின்று** *takkiṉṟu*, பெ. (n.) தக்கதன்று; incorrect. "வடுத்தான் வகிர் மலர்க்கண்ணிக்குத் தக்கின்று" (திருக்கோ. 226).

*[தக்கன்று → தக்கின்று]*

**தக்கினி** *takkiṉi*, பெ. (n.) 1. மண்பானை; earthern pot. 2. பாண்டம்; vessel.

**தக்கு[1]-தல்** *takku-*, 5 செகுவி. (v.i.) ஏற்றதாதல்; to be fit, suitable, becoming (செ.அக.).

க., தெ. தகு

*[தகு → தக்கு]*

**தக்கு[2]-தல்** *takku-*, 5 செகுவி. (v.i.) 1. நிலை பெறுதல்; to come to stay; to become permanent, to be lasting, as a possession or acquisition; to be retained. "அணைந்தா லிவளாவி தக்கும்" (தனிப்பா. i. 353. 78) 2. பயன்படுதல் (வின்.): to be profitable. 3. பிறந்த குழவி நிலைத்தல்; survive of the new born baby.

ம. தக்குக; க. தக்கு; தெ. தக்கு

*[தங்கு → தக்கு]*

**தக்கு[3]-தல்** *takku-*, 5 செகுவி. (v.i.) வயப்படுதல் (யாழ். அக.): to yield; to be submissive.

க., தெ. தக்கு

*[தங்கு → தக்கு]*

**தக்கு**[4] *takku*, பெ. (n.) இசையின் தாழ்ந்த ஓசை; low voice in singing, low pitch, low key in music. தக்கிலே பாடுகிறார் (உவ.).

*[தங்கு → தக்கு = தங்குதல் = மெல்லிதாதல், இழைதல், இனிமையாதல்]*

**தக்கு**[5] *takku*, பெ. (n.) சூழ்ச்சி, வஞ்சம்; dodge, trick. அவளுக்கு நிரம்பத் தக்குத் தெரியும் (செ.அக.)

க., தெ. தக்கு

**தக்குசுருதி** *takku-śurudi*, பெ. (n.) தக்கு[3] பார்க்க; see *takku*[3].

**தக்குத்தக்கெனல்** *takku-t-takkeṉal*, பெ. (n.) ஓர் அடுக்கொலிக் குறிப்பு; onom. expr. of repeated thumping sound. தக்குத்தக் கென்று நடக்கிறான் (இவ.).

*[தக்குத்தக்கு + எனல்]*

**தக்குத்தடவல்** *takku-t-taḍaval*, பெ. (n.) 1. தடவிநடக்கை (இவ.); groping, as in darkness. 2. தடுமாறிபடிக்கை (யாழ்ப்.); stumbling in reading, want of fluency.

*[தக்கு + தடவல்]*

**தக்குப்புக்கெனல்** *takku-p-pukkeṉal*, பெ. (n.) தக்குத்தக்கெனல் (நெல்லை) பார்க்க; see *takku-t-takkeṉal*.

*[தக்கு + புக்கு + எனல்]*

**தக்குப்பொக்கெனல்** *takku-p-pokkeṉal*, பெ.(n.) தக்குத்தக்கெனல் (வின்.) பார்க்க; see *takku-t-takkeṉal*.

*[தக்கு + பொக்கு + எனல்]*

**தக்குமான்** *takkumāṉ*, பெ. (n.) உடம்பில் குருக்களை எழுப்பும் நோய்; a disease or case of diseases characterised by skin eruptions (சா.அக.).

*[தக்கு → தக்குமான்.]*

**தக்குவித்தல்**[1] *takkuvittal*, பெ. (n.) நிலைக்கும்படி செய்கை; causing to escape failure. (சா.அக.)

*[தக்கு → தக்குவித்தல்]*

**தக்குவித்தல்**[2] *takkuvittal*, பெ. (n.) ஆட்சிக்குட் படுகை; subjugation.

**தக்கெனல்** *takkeṉal*, பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of thumping sound (செ.அக.).

*[தக்கு + எனல்]*

**தக்கேசி** *takkēśi*, பெ. (n.) மருதநிலப்பண் வகை (பிங்.); a melody type of the marudam class.

**தக்கை**[1] *takkai*, பெ. (n.) 1. அகப்புறமுழவு (தண்மை, தக்கை, தகுணிச்சம்) மூன்றனுள் ஒன்றாகிய ஒருவகைப் பறை (பிங்.) (சிலப். 3: 26, உரை); a kind of drum, one of the three agappuṟa-muḻavu. 2. பறை (சூடா.); drum.

**தக்கை**[2] *takkai*, பெ. (n.) 1. காதிலிடுங் குதம்பை; roll of palm leaves or plug, put into a perforation of the ear-lobe to enlarge it. 2. நீரிலுள்ள நிலைத்திணையிலிருந்து அல்லது ஒருவகை மரத்திலிருந்து எடுக்கப்படும் எடையில்லாததும், நீரில் மிதக்கக்கூடிய தன்மை உடையதுமான பொருள், அடைப்பான்; cork. 3. அடைப்பு; plug to stop up a crack, leak, etc. 4. மரை (இவ.); nut. 5. நெட்டி வகை; hard sola pith. 6. நெட்டி (யாழ்.அக.); sola pith. 7. தூண்டிலோடு சேர்த்து மிதக்கவிடும் மிதப்புச் சக்கைத்துண்டு; a piece of pith attached to a fishing rod. தூண்டில் போட்டவனுக்குத் தக்கை மேலே கண் (உ.வ.). 8. சோளம், ஆமணக்கு முதலியவற்றின் உலர்ந்ததட்டை; dried stalk of great millet or castor plant, used as tinder. 9. கிழிந்த சீலையில் தைக்கும் ஒட்டுத்துண்டு (வின்.); patch on cloth. 10. கட்டி; clot, congealed mass. அரத்தம் தக்கை தக்கையாய் விழுந்தது (வின்.). 11. தெப்பம் (யாழ். அக.); float, raft. 12. பாலமாக இடும் பனையின் அடிமரம் (இவ.); trunk of a palm tree thrown across a channel to bridge it.

ம. தக்க

*[தணக்கு → தணக்கை → தக்கை = உலர்ந்தது = காய்ந்தது, அகன்றது]*

**தக்கைஇராமாயணம்** *takkai-irāmāyaṇam*, பெ. (n.) தக்கைப் பறையை முழக்கிப் பாடப்பெற்ற இராமாயணம்; Rāmāyaṇam sung in the drum of takkai, (a musical drum).

*[தக்கை + இராமாயணம்]*

இந் நூலின் ஆசிரியர் புலவர் எம்பெருமான் என்பவர் திருச்செங்கோடு அருகிலுள்ள மோடூரில் பிறந்தவர். இங்கிருந்த காங்கேயர்கள், இவருக்கு உற்றுழியுதவி உறுபொருள் கொடுத்து, இவரை வாழ்வித்தனர். இவரது காலம் கி.பி. 1600. காங்கேயர்தம் ஈகத்திற்கு கைம்மாறாக, கம்பாது இராமாயணத்தைத் தழுவி, எளிய இசையில் கல்லாதவரும் கேட்டு மகிழும் வண்ணம், தக்கை இராமாயணத்தைப் பாடியருளினார்.

**தக்கைக்கயிறு** *takkai-k-kayiṟu*, பெ. (n.) வலை மிதவை பிணைக்கப்பட்ட கயிறு (முகவை. மீன.); a rope tied with net-pith.

*[தக்கை + கயிறு. தக்கை = வலைமிதவை]*

**தக்கைக்கல்** *takkai-k-kal*, பெ. (n.) சுதைமா; lime-stone.

*[தக்கை + கல்]*

**தக்கைப்பூடு** *takkai-p-pūḍu*, பெ. (n.) நெட்டி, குதம்பை; dianchra (சா.அக.).

*[தக்கை + பூடு]*

**தக்கைமுறுக்கி** *takkai-muṟukki*, பெ. (n.) வில்லைமுறுக்கி (நாஞ்.); spanner.

*[தக்கை + முறுக்கி]*

**தக்கையுடம்பு** *takkai-y-uḍambu*, பெ. (n.) மிகவும் ஒல்லியான (இலகுவான) உடம்பு; a very light body - body light like pith (சா.அக.).

*[தக்கை + உடம்பு]*

**தக்கையுருவம்** *takkai-y-uruvam*, பெ. (n.) உயிரற்றவுடலம்; body.

மறுவ. உடற்கட்டை, கட்டையுடம்பு

*[தக்கை + உருவம்]*

**தக்கோர்** *takkōr*, பெ. (n.) தகுதிவாய்ந்தவர்; worthy persons. "தக்கோர்முன்" (கம்பரா. கும்ப கருணை. 328).

*[தகு → தக்கார் → தக்கோர்.]*

**தக்கோர்மை** *takkōrmai*, பெ (n.) 1. முறைமை (நியாயம்); justice, as the quality of the wise. "தக்கோர்மை செய்தா யில்லையே" (ஈடு. 6: 2: 9). 2. நன்மை; good, benefit. பூமிக்கு என்ன தக்கோர்மை யுண்டாய் நீ செய்தது (ஈடு. 5: 7: 4).

க. தக்கூர்மை

*[தக்கோர் → தக்கோர்மை. தக்கவர் தன்மை.]*

**தக்கோலப்பொட்டு** *takkōla-p-poṭṭu*, பெ. (n.) தக்கோலம் பார்க்க; see *takkōlam* (சா.அக.).

*[தக்கோலம் + பொட்டு.]*

**தக்கோலம்**[1] *takkōlam*, பெ. (n.) 1. ஒரு நறுமணச் சரக்கு; a fragrant stuff. "தக்கோலந் தீம்பூத் தகைசாலிலவங்கங் கப்பூரஞ் சாதியோ டைந்து" (சிலப். 5:26, உரை). "இலவங்கம் . . . . . தக்கோலம். . . . . ஓமாலிகை" (சிலப். 6:77, உரை). 2. தாம்பூலம்; betel leaf and areca-nut. "தக்கோலந் தின்று" (நாலடி. 43). 3. சிறுநாவல் (L.); ruddy black plum. 4. நாவல் (L.); jaman - plum. 5. திப்பிலி (வின்.); long pepper. 6. வால்மிளகு; cubeb. 7. காட்டுவெற்றிலை; wild-betal. 8. சாதிக்காய்; nutmeg. 9. பெரு நாவற்பூ; the fragant and plesant tasted flowers of a plant-calyptranthes jawbolana. 10. வெற்றிலை, பாக்கு, ஏலம், வால்மிளகு- முதலியவற்றின் நறுமணக்கலவை; a fragrant mixture of cardamom and cubeb chewed with betal and nut. 11. சங்கக்குப்பி; smooth volkameria - Cleodenon inerme. 12. சீன மிளகு; China pepper, pimento acris (சா.அக.).

மறுவ. தக்கோலப்பொட்டு

ம. தக்கோலம்; க. தக்கோல

**தக்கோலம்**[2] *takkōlam*, பெ. (n.) வடவார்க்காடு மாவட்டத்திலுள்ள வரலாற்றுச்சிறப்பு மிக்க ஊர்; Takkōlam a famous historical place in North Arcot district.

மறுவ. திருவூறல்

*[தக்கோலம் : திருஞானசம்பந்தப் பெருமான் பாடியருளிய தேவாரத் திருக்கடைக்காப்பில் "திருவூறல்" என்று குறிக்கப்பெற்றுள்ளது. "நஞ்சை உண்டபிரான் அமருந் திருவூறலை யுள்குதுமே" எனத் திருவருள் திகழும்*

*திருவூறல் பெருமானைப் பதினொரு பாடல்களால், போற்றிப் பரவுகின்றார்.*

*இத் தகு பெருமைமிக்க தக்கோலத்தில் தான், கி.பி. 949ஆம் ஆண்டு, பராந்தகச் சோழன் மகன் இராசாதித்தியனுக்கும், இராட்டிரக்கூட மன்னன் கன்னர தேவனுக்குமிடையே வரலாற்றுப் புகழ்மிக்க, கடும்போர் நிகழ்ந்தது.]*

**தக்கோலி** *takkōli*, பெ. (n.) அகில்வகை (சிலப். 14: 108, உரை); a kind of eagle-wood, used as incense.

*[தக்கோலம் → தக்கோலி (நறுமணச் சரக்கு.]*

**தக** *taga*, குவி.எ. (adv.) பொருந்த; be appropriate (யாழ்ப்.).

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக" (குறள், 391)

*[தகு → தக]*

**தகசு**[1] *tagašu*, பெ. (n.) ஒரு மெல்லியதகடு (யாழ்ப்.); a thin plate lamina.

*[தகடு → தகசு]*

**தகசு**[2] *tagašu*, பெ. (n.) தவழ்கரடி யென்னும் விலங்கு (M.M. 363); badger, Indian ratel, Mellivora indica.

*[தவழ் → தவழு → தவசு → தகசு]*

**தகட்டகப்பை** *tagaṭṭagappai*, பெ. (n.) பரந்து வட்டமாயுள்ள அகப்பைவகை (தைலவ. பாயி. 37); a kind of round shallow ladle.

*[தகடு + அகப்பை.]*

**தகட்டரிதாரம்** *tagaṭṭaridāram*, பெ. (n.) பிறவிக் கனிமநஞ்சு (மூ.அ); a mineral poison.

*[தகடு + அரிதாரம்]*

**தகட்டுஉளி** *tagaṭṭu-uḷi*, பெ. (n.) தச்சுக் கருவிகளுள் பட்டை செதுக்கப் பயன்படும் கருவி; a small chisel.

க. கிட்டுளி

*[தகட்டு + உளி]*



**தகட்டுக்கதவு** *tagaṭṭu-k-kadavu*, பெ. (n.) மரப் பலகைக்குப் பகரமாக இரும்புத்தகடுள்ள கதவு; door made with steel plate instead of wooden plank.

*[தகடு + கதவு]*

**தகட்டுக்குழை** *tagaṭṭu-k-kuḻai*, பெ. (n.) கழுத்தணி உறுப்பு வகை (S.I.I. viii, 128); a part of necklace.

*[தகடு + குழை.]*

**தகட்டுச்சட்டை** *tagaṭṭu-c-caṭṭai*, பெ. (n.) இரும்புத்துகள்; iron-dress (சா.அக.).

*[தகடு + சட்டை]*

**தகட்டுத்தாளகம்** *tagaṭṭu-t-tāḷagam*, பெ. (n.) தகட்டரிதாரம் (யாழ். அக.) பார்க்க; see *tagaṭṭaridāram*.

*[தகடு + தாளகம்]*

**தகட்டுத்தோல்** *tagaṭṭu-t-tōl*, பெ. (n.) மீன் செதிள்; covered with bony fish plates.

*[தகடு + தோல்]*

**தகட்டுப்பலகை** *tagaṭṭu-p-palagai*, பெ. (n.) சீவிய பலகைகளை ஒட்டி, இயந்திரத்தில் நன்றாக அழுத்திச் செய்யப்பட்ட பலகை; plywood.

*[தகடு + பலகை]*

**தகட்டுப்பொன்** *tagaṭṭu-p-poṉ*, பெ. (n.) தகடாக இழைத்த பொன்; golden-plate. "முடி

ஒன்றில் கட்டின தகட்டுப் பொன் முக்கழஞ்சும்" (S.I.I.V, 523).

மறுவ. பொற்றகடு

*[தகடு + பொன் - தகட்டுப்பொன்]*

**தகட்டுமுளை** *tagaṭṭu-muḷai*, பெ. (n.) கொக்கி வகை (C.E.M.); plate-hook.

*[தகடு + முளை]*

**தகட்டுவைரம்** *tagaṭṭu-vairam*, பெ. (n.) பட்டை தேய்க்கப்பெறாத வைரம் (நாஞ்.); uncut diamond.

*[தகடு + வைரம்]*

**தகட்டெலும்பு** *tagaṭṭelumbu*, பெ. (n.) தடிப்பற்று, அகன்று, தகடு போலிருக்கும் ஒரு வகை யெலும்பு; a thin broad flat bone (சா.அக.).

*[தகடு + எலும்பு]*

**தகடாக்கல்** *tagaḍākkal*, தொ. பெ. (vbl. n.) இலையைப் போன்ற நொய்தலான மாழைகளைத் (உலோகங்கள்) தட்டியகலிக்கை; beating into a thin plate or lamina foliating (சா.அக.).

*[தகடு + ஆக்கல்]*

**தகடி**[1] *tagaḍi*, பெ. (n.) பொன்னாடை (இ.வ.); gold-embroidered silk.

தெ. தகடி

*[தகடு → தகடி. பொன்னிழையில், பூ வேலைப்பாடு அமைந்த பட்டாடை.]*

**தகடி**[2] *tagaḍi*, பெ. (n.) நீர் (பிங்.); water.

*[தக → தகம் → தாகம் = நீர்வேட்கை. தகம் + தி → தகதி → தகடி = தாகத்தைத் தீர்க்கும் நீர் (வ. வ.)]*

**தகடி**[3] *tagaḍi*, பெ. (n.) ஏமாற்றுகை (இ.வ.); deception.

**தகடு**[1] *tagaḍu*, பெ. (n.) 1. இலை; leaf blade. 2. பூவின் புறவிதழ்; outer petal "கருந்தகட்டுளைப் பூமருதின்" (திருமுருகு. 27).

*[அடகு (இலை) → அகடு → தகடு]*

இச் சொல், வட்டமானது என்னும் பொருளிலும், தட்டையானது என்னும் பொருளிலும் புடைபெயரும்.

**தகடு**[2] *tagaḍu*, பெ. (n.) 1. மென்மையுந் தட்டையுமான வடிவு (பிங்.); quality of being thin and flat, as plate of metal. 2. மாழைத் தட்டு; metal plate. "தமனியத் தகடுவேய்ந்தென" (கம்பரா. நகர்நீ. 28). 3. வண்ணத்தகடு; foil set below a precious stone to enhance its lustre. தகட்டி லழுத்தின மாணிக்கம்போலே (ஈடு.). 4. கம்மார் வெற்றிலை (தைலவ. தைல. 85); black betel - leaf. 5. மண்படை (யாழ்ப்.); layer of earth. 6. அடர்த்தி (யாழ். அக.); closeness, thickness, as of hair.

ம., க., தெ., து. தகடு; Mar. takaṭ, takaṭē.

*[அடகு → அகடு → தகடு]*

**தகடு**[3] *tagaḍu*, பெ. (n.) 1. வட்டமானது; anything round with shape. 2. வண்டியின் உருளை; wheel of a cart.

து. தகடு

*[தகடு[1] → தகடு[3] = ஆரக்கால்களின்றி வட்டமாயுந் தட்டையாயுந் திண்ணிய வடிவிற் செய்யப்பட்ட வண்டிச்சக்கரம் அல்லது தேர்ச்சக்கரம் தகடு எனப்பட்டது]*

**தகடு**[4] *tagaḍu*, பெ. (n.) வாழையிலையின் நடுப்பகுதியை, நறுக்கிய ஏடு (தஞ்சை.); the middle portion of a plantain leaf, cut longitudinally.

ம., க. தகடு

மறுவ: ஏடு

*[அகடு → தகடு]*

**தகடு**[5] *tagaḍu*, பெ. (n.) மந்திரமெழுதிய செப்புத் தகடு; a metal plate engraved with mystic diagrams, as amulet.

**தகடு**[6] *tagaḍu*, பெ. (n.) தகட்டரிதாரம் பார்க்க; see *tagaṭṭaridāram*.

**தகடுகட்டு-தல்** *tagaḍu-kaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.i.) மந்திரத்தகடு கொண்டு காப்புக்கட்டுதல்; to tie a metal plate engraved with mystic diagrams, as amulet.

*[தகடு[5] + கட்டு-.]*

**தகடுதை-த்தல்** *tagaḍu-tai-*, 4 செ.கு.வி. (v.i.) மரப்பெட்டி முதலியவற்றிற்குப் பட்டமடித்தல்; to fasten corner-braces, as to a wooden box.

*[தகடு + தை-.]*

**தகடுமதி** *tagaḍu-madi*, பெ. (n.) வெள்ளித்தகடு; silver-plate (சா.அக.).

*[தகடு + மதி.]*

**தகடூர்** *tagaḍūr*, பெ. (n.) கடையேழு வள்ளல்களில் ஒருவனான அதியமானின் தலைநகரம்; தற்காலத் தருமபுரி (பதிற்றுப். 80, பதி.); capital of Adiyamāṉ, a Tamiḻian chieftain of ancient times, now identified as Dharmapuri.

து. தகடு

*[தகடு + ஊர். தகடு = சக்கரம், தேர்ச் சக்கரம், வண்டிச் சக்கரம். தகடூர் = தேர்ச் சக்கரங்கள் மிகுதியாகச் செய்யப்பட்ட ஊர். துளு மொழியில் தகடு என்னுஞ் சொல் வண்டிச் சக்கரத்தைக் குறித்தலைக் காண்க. இச் சொல் நாளடைவில் சகடு → சாகாடு எனத்திரிந்தது. "பீலிபெய்சாகாடும்" (குறள், 475)]*

**தகடூர்யாத்திரை** *tagaḍūr-yāttirai*, பெ. (n.) அதியமான் மீது பெருஞ்சேரலிரும்பொறை என்ற சேரமான் படையெடுத்துச் சென்று, புரிந்த போர்ச்செய்தி கூறுந் தமிழ்நூல்; a Tamiḻ poem describing the expedition of the Cēra king Peruñ-jēral-irum-poṟai against Tagaḍūr the capital of Adiyamāṉ.

*[தகடூர் + யாத்திரை]*

**தகண்**[1] *tagaṇ*, பெ. (n.) 1. தடை; limitation, limit. "தகணிலாக் கேள்வி யான்கண்" (சீவக. 1052). 2. தழும்பு; scar, impression, dint.

*[தகை → தக → தகண் = தகைத்தல், மோதுதல், தாக்குதல்; அவ்வாறு தாக்குவதால் விளைந்த புண் அல்லது தழும்பு]*

**தகண்**[2] *tagaṇ*, பெ. (n.) பழக்கம்; addiction. 'இரப்பிலே தகணேறினபடி' (ஈடு, 4. 8: 6).

*[தகு → தகல் → தகண். தகுதியான, தக்கதான பழக்கம்]*

**தகண்**[3] *tagaṇ*, பெ. (n.) கிழங்குவிழுந்த பனங்கொட்டையின் உள்ளீடு; white pulpy matter in the palmyra nut, after rooting.

**தகண்டசகம்** *tagaṇḍašagam*, பெ. (n.) நரிப்பயறு; fox-gram (சா.அக.).

**தகணிதம்**[1] *tagaṇidam*, பெ. (n.) துந்துபி முரசு (பிங்.); a large-drum.

மறுவ. தகுணிதம், தகுணிச்சம்

*[அகணை → தகணை → தகணி → தகணிதம். வாயகன்ற பெருமுரசு]*

**தகணிதம்**[2] *tagaṇidam*, பெ. (n.) மாழைமணல் (விவ.ரசா.5.); oxide of metals.

*[தகணை → தகணி → தகணிதம்]*

**தகணேறு**[1]**-தல்** *tagaṇ-ēṟu-*, 5 செ.கு.வி. (v.i.) தழும்புபடுதல்; to become scarred. "இவற்றின் கையிலே யடியுண்டு தகணேறின இவள்" (திவ். பெரியதி. 8. 2: 7.).

*[தகண்[1] → ஏறு-.]*

**தகணேறு**[2]**-தல்** *tagaṇ-ēṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. பழக்கமாதல்; to become addicted. 2. பழுத்தல் முற்றுதல்; to become ripe, mature. "தீம்பிலே தகணேறும்படியாக வாய்த்து உரப்புவது" (திவ். திருப்பா. 1: வியா.).

*[தகண்[2] + ஏறு-.]*

**தகணை** *tagaṇai*, பெ. (n.) மாழைக்கட்டி (பிங்.); ore, lump of metal.

*[தகண் → தகணை]*

**தகத்து** *tagattu*, பெ. (n.) 1. அரியாசனம் (வின்.); throne. 2. திருமணத்திற்குரிய அழகுசெய் ஊர்தி (இ.வ.); decorated chariot or dais used in weddings. 3. சிறந்த இடம்; excellent place. 'அது ஒரு தகத்தான இடம்' (வின்.) 4. பெருமை; superior status or position. அவனுக்கு இப்போது என்ன தகத்து வந்துவிட்டது (இ.வ.).

*[தக்கது → தகது → தகு → தகத்து. தகு = தக்கது, தகுதி. தகுதியுஞ் சிறப்பு மிக்கோர், பெருமையுடன் வீற்றிருப்பது]*

**தகதகவென்று** *taga-taga-v-eṉṟu*, கு.வி.எ. (adv.) (நெருப்பைக் குறிக்கையில்) மிகுதியாகக்

கொழுந்துவிட்டு; (of fire burning) brightly, a flame. தீ தகதகவென்று எரிந்து கொண்டிருந்தது (உ.வ.).

*[தகதக + என்று → தகதகவென்று, ஒலிக் குறிப்பால் வரும் இரட்டைக்கிளவி. தழதழவென்று எரிதல், தகதகவென்று எரிதல், சுடர்தல், எனினுமாம் - தழதழ → தகதக + என்று]*

**தகநன்** *taganaṉ*, பெ. (n.) 1. நெருப்புக்கடவுள்; god of fire. 2. கொடியன்; wicked person.

*[தக + நன். அழல் → தழல் → தழ → தக + நன்]*

**தகதகவெனல்** *taga-taga-v-eṉal*, பெ. (n.) தகதகெனல் பார்க்க; see *tagatageṉal*.

*[தழ → தக. தகதகவெனல் → தகதகெனல் (திரு. தமி. மர. 155)]*

**தகதகெனல்** *taga-tageṉal*, பெ. (n.) 1. ஒளிருதற் குறிப்பு; onom. expr. of dazzling, glowing glittering. தகதகென்று மின்னுகிறது. 2. ஒலிக்குறிப்பு; onom. expr. of boiling, as water, bubbling (செ.அக.).

மறுவ. தகதகவெனல்

தெ., ம., து., தகதக; க. தக்கனெ

*[தழ → தக → தகதக → தகதகெனல். விளங்குதற் கருத்தினின்று தோன்றிய வேரடியாகும். விளங்கும்பொருள் எரியுந் தன்மைத்து. எரியும்பொருள் தகதகென்று ஒளிரும். ஒ.நோ. தகதகவெனல் → தகதகெனல். 'வ' - இடைக்குறை]*

**தகதாருகம்** *tagadārugam*, பெ. (n.) தழுதாழை; creeping screw-pine - Cleodendron phlomoides (சா.அக.).

*[தகதார் + உகம் - தகதகக்கும் அல்லது பளபளக்குந் தன்மையுடைய தாழை]*

**தகப்படு-தல்** *taga-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) மேன்மைதங்குதல்; to be eminent, distinguished. "தகப்படுஞ் சராசனத் தனஞ்சயன்" (பாரத. வாரணா; 80).

*[தக → தகு → தகுதி + படு-. எச்செய்கையினையும், மேம்படச் செய்யும் திறமையுடைமை. தகுதிப்படு → தகப்படு.]*

**தகப்பன்** *tagappaṉ*, பெ. (n.) தந்தை; father. "இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் றகப்பன்" (திருவாச. 9:13). முருகனைத் தகப்பன்சாமி என்பர். தகப்பன் வெட்டின கிணறென்று தலை கீழாய் விழலாமா? (பழ.).

ம. தவப்பன்

*[ஒருகா: தம் + அப்பன் → தமப்பன் → (தவப்பன்) → தகப்பன் (த.வ.139)]*

தந்தையென்ற பொருளில் வழங்கும் தகப்பன் என்னும் முறைப்பெயர், கன்னெஞ்சையுங் கனிந்துருகச் செய்யும், திருவாசகம் அருளிய மணிவாசகரின் இலக்கிய வழக்கில், "இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்" என்றும், அருணாகிரியார் இயற்றிய திருப்புகழென்னும் தெய்வப்பனுவலில், "தகப்பன்சாமி எனவரு பெருமாளே" என்றும் குறிப்பிட்டுள்ளது.

பன்னெடுங் காலமாக மாந்தர்தம் நெஞ்சகத்தே கருக்கொண்டு, வாய்மொழி யிலக்கியமாக உருக்கொண்ட,

தகப்பன் வெட்டின கிணறென்று தலைகீழாய் விழலாமா?

தகப்பன் பட்டம் பிள்ளைக்கு அல்லவா?

தாயும் தகப்பனும் தவிர எல்லாம் வாங்கலாம்.

தாயும் தகப்பனும் தள்ளிவிட்ட காலத்தில் வாவென்று அழைத்த வங்கார வாசி

போன்ற பழமொழிகளிலும், இச் சொல், பரக்கக் காணப்படுகிறது.

திராவிடமொழிகட்கு, இனச்சொற்களை இயம்பவந்த, பரோஎனனோவர்தம் சொற் பிறப்பியல் அகரமுதலியில் (1961) தகப்பன் குறித்த விளத்தம், தவறாக உள்ளது.

" 'பரோ எமனொ'வரின் சொற்பிரிப்புமுறை பொருண்மையற்றது; ஒலியியல்பிற்கு மாறானது" பிழையுடைத்து என்பார் மொழிஞாயிறு.

(எ.டு.) தகு + அப்பன் → தகப்பன்.

இச் சொல்லின் பிற்பகுதியில் உள்ள அப்பன் தெள்ளத் தெளிவாய் அமைந்துள்ளது. முற்பகுதியிலுள்ள 'தகு' என்பது பற்றி, இரு வேறுபட்ட கருத்துக்களை மொழியியலார் மொழிகின்றனர்.

கால்டுவெல் கண்காணியர், வின்சன் போன்றோர், தம் + அப்பன் எனப் பிரித்துப் பொருளுரைப்பர். இவ்வாறு பிரிப்பதால், தமப்பன் → தகப்பன் என்று மாறியதாகக்

காட்டவேண்டும். அஃதாவது ம → க ஆக மாறிற்றென்று கொள்ளவேண்டும். பரோ எமனோவரின் சொற்பிரிப்பு மாறாக உள்ளது. ஆனால், தகு + அப்பன் என்று பிரிப்பதை நிலைநாட்டத் தமிழிலும், திராவிட மொழிகளிலும் அமைந்துள்ள பொருண்மையினைப் பின்வருமாறு கூறி விளக்குவர். "தகு" என்பதற்குத் தகுந்த, போன்ற, தகுதிவாய்ந்த, உரித்தான, சிறப்புமிக்க, மேன்மைசான்ற, முதலான சொற்கள், மக்களிடையே வழக்கூன்றியுள்ளதால், இதனடிப்படையில் வரலாறு வரைவதே பொருத்தமுடைத்து" என்பர்.

தகப்பன் என்ற முறைப்பெயருக்கு இணையாகத் தமிழில், தந்தை, தம்பி, தங்கை போன்ற முறைப்பெயர்கள், மக்களிடையே வழங்குகின்றன. இச்சொற்களை முறையே, தம்+தை, தம்+பி, தம்+கை என்று பிரித்துப் பொருள் காண்பதே, இயன்மொழியாம், தமிழ்மொழிக்கு ஏற்ற முறையாகும்.

நெடில் முதலாவுள்ள ஓரசைச் சொற்கள் வருமொழியில், உயிர் முதற்கண் பயின்று வருங்கால், முதல் குறுகுவது, சிறப்பாகத் தமிழிலும், பொதுவாகத் திராவிட மொழிகளிலும் காணப்படும் இயல்பாகும்.

(எ-டு.) தாம் → தம்; தான் → தன்

'தகப்பன்' என்பதைத் 'தவப்பன்' என்று பலுக்கும் நிலையினைச், சிற்றூர் மாந்தரிடையே இன்றும் காணலாம். மலையாளத்திலும், தவப்பன் என்று பேசும் வழக்கு வேரூன்றியுள்ளது.

கல்லாதார் பேச்சில் வழக்கூன்றியுள்ள 'தவப்பன்' என்னும் வடிவம், ம → க ஆக மாறிய தகப்பன் என்ற சொல்லின், ஒலிமாற்ற நிலையைக் காட்டவேண்டிய தேவையின்மையை, உறுதிப்படுத்தும் பான்மையில், அமைந்துள்ளது.

தகப்பன் என்ற சொல்லில், இரு படிநிலைகளில் ஒலிமாற்றம் நிகழ்கிறது. முதனிலை ம → க ஆக மாறுகை. இரண்டாம் நிலை வ → க ஆக மாறுதல். மேற்குறித்த மாற்றங்கள் ஒலிமாற்ற இயல்பிற்கு ஏற்றவாறு அமைந்துள்ளன.

தம் + அப்பன் → தமப்பன் → தகப்பன் என்று வழங்குவதே, பொருண்மை நிலையிலும், ஒலிமாற்ற நிலையிலும், மரபிற்கேற்ற வண்ணம் அமைந்துள்ளமை கண்டுகொள்க *(த.வ. 140).*

**தகப்பன்சாமி** *tagappaṉ-sāmi*, பெ. (n.) *1.* தந்தைக்குக் குருவான முருகன்; Lord Murugaṉ. "தகப்பன்சாமி எனவரு பெருமாளே" *(திருப்பு. 1094).* *2.* அடங்காப்பையன் *(உவ.)*; head-strong, presumptuous boy.

*[தகப்பன் + சாமி]*

**தகப்பன்மார்** *tagappaṉ-mār*, பெ. (n.) முதுவர் என்னும் மலைக்குலத்தார்க்குப் பிறர் வழங்கும் பட்டப்பெயர் (E.T. v. *86*); title of Muduvar, a hill tribes used by outsiders.

*[தகப்பனார் - உயர்வொருமையாகவும், தகப்பன்மார் - பன்மையாகவும், வழங்குவதறிக. தகப்பன் + மார்]*

**தகம்**[1] *tagam*, பெ. (n.) *1.* தகுதி; adequacy. *2.* தன்மை; nature, abstract quality.

*[தகு → தகம்]*

**தகம்**[2] *tagam*, பெ. (n.) *1.* வெப்பம் *(வின்.)*; heat. *2.* எரிவு *(சது)*; combustion,burning. *3.* நீர் வேட்கை; thirst. *4* தூக்கம்; sleep.

*[தக → Skt. தஹ். தக → தகம் (வ.மொ. வ. 169)]*

**தகம்**[3] *tagam*, பெ. (n.) *1.* கந்தகம்; sulphur. *2.* மிகுவிரைவு; hurry.

*[தக + அம். தக- எரிகை, 'அம்' சாரியை]*

**தகம்புவியார்த்தம்** *tagambu-viyārttam*, பெ. (n.) *1.* தவிடு; husk. *2.* மஞ்சள்வண்ண மாணிக்கக் கல் வகை; cinnomon stone *(சா.அக.)*.

*[தகம்பு + வியார்த்தம்]*

**தகமை** *tagamai*, பெ. (n.) தகைமை பார்க்க; see *tagaimai.*

மறுவ. வகைமை

ம. தகம

*[தகைமை → தகமை]*

**தகர்**[1]**-தல்** *tagar-*, 4 செகுவி. *1.* நொறுங்குதல்; to be broken to pieces, as skull-bone, earthen vessels. "தலைபத்துந் தகரவூன்றி" *(தேவா. 777: 10).* *2.* உடைதல்; to be shattered, demolished. வெடிகுண்டு வீச்சினால் வீடுகள் தகர்ந்தன.

குழுகாயம் மாறும்போது பல மதிப்பீடுகள் தகர்ந்து போகின்றன. (உ.வ.). என்னுடைய நம்பிக்கையெல்லாம் பேச்சு வார்த்தைகளுக்குப் பின் தகர்ந்துவிட்டது. 3. நெரிதல் (வின்.); to be crushed, bruised. 4. சிதறுதல் (வின்.); to be scattered, as the ranks of an army. 5. அழிதல் (வின்.); to be breached, as a dam, a bank. 6. சாய்ந்துவிழுதல்; to be uprooted. "சந்தனங்க டகர்ந்தன தாள்பட" (கம்பரா. பொழிலிறு. 26).

ம. தகருக

[தகல் → தகர்-.]

**தகர்[2]-த்தல்** *tagar-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. நொறுக்குதல்; to break to pieces. வரலாற்றுப் புகழ்மிக்க கவின்கலைக் கூடத்தை வெடிகுண்டு வைத்துத் தகர்க்கச் சதி (இக். வ). "ஞாயிற்றின் பல்லனைத்துந் தகர்த்தார்" (தேவா. 576: 2). 2. புடைத்தல்; to srtike, dash to the ground. "முன்றகர்த்தெல்லா விமையோரையும்" (திருக்கோ. 92). 3. குட்டுதல் (திவா.); to cuff, strike with the knuckles, as on the head. 4. நெரித்தல் (வின்.); to bruise, fracture, as a bone. 5. சிதறடித்தல்; to break the ranks of an army, defeat, rout. "தாருகன் பண்டு தேவரைத் தகர்த்தது" (கம்பரா. இராவணன்வதை. 105). 6. அழித்தல்; to ruin,destroy. "நீண்ட வசுர ருயிரெல்லாந் தகர்த்து" (திவ். திருவாய். 8. 10: 6).7. பருமுதலிய கட்டிகளைத் திறத்தல் (வின்.); to break open a blister, a boil. 8. முறியடித்தல்; to break the record.

[தகல் → தகர்-.]

**தகர்[3]-த்தல்** *tagar-*, 4 செ.குவி. (v.i.) மெச்சும்படி ஆற்றல் காட்டுதல் (இ.வ.); to show off one's ability.

ம. தகர்க்க

[தகல் → தகர்-.]

**தகர்[4]** *tagar*, பெ. (n.) 1. பொடி (திவா.) தூள்; dust, powder. 2. சிறுதுண்டு (யாழ்ப்.); shiver, fragment.

*[தகல் → தகர். தகர்ந்தபொருள் துகளாகுந் தன்மைத்து; தகர்த்தற்கருத்தினின்று துகளாதற்கருத்துத் தோன்றும்]*

**தகர்[5]** *tagar*, பெ. (n.) 1. ஆட்டின்பொது (திவா.); sheep. 2. செம்மறியாட்டுக்கடா (திவா.); ram. "பொருதகர் தாக்கற்குப்பேருந் தகைத்து" (குறள், 486). 3. வெள்ளாடு (உரிநி.); goat. 4. மேழ ஓரை (வின்.); Aries in the zodiac. 5. ஆண்யாளி; male yāḷi. 6. ஆண்யானை (பிங்.); male elephant. 7. ஆண்சுறா (சூடா.); male shark.

தெ., து. தகரு, க. தகர்; ம. தகரன

*[தகல் → தகர். திகழ்தல் அல்லது இலங்குதற் கருத்துவேராகும். ஒருகா. தகு → தகர்.]*

**தகர்[6]** *tagar*, பெ. (n.) 1. மேட்டுநிலம்; elevated ground. "வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தகர்" (பெரும்பாண். 87). 2. நிலம் (சது.); earth. 3. பலாசுமரம்; palas tree.

*[துகல் → தகல் → தகர் = நிலைபெறுதற் கருத்துவேர்.]*

**தகர்[7]** *tagar*, பெ. (n.) 1. துருவாட்டேறு; raw of flesh sheep. ஊக்கமுடையா னொழுக்கம் பொருதகர் தாக்காக்கும் பேருந்தகைத்து (குறள், 486) 2. தூசு; dust, powder (சா.அக.).

மறுவ. துகள்

**தகர்[8]** *tagar*, பெ. (n.) இடுமணல் மணற்குன்று; hillock. "நெடுந்தகர் ஈத்து" (பெரும்பா. 81).

**தகர்ச்சி** *tagarcci*, பெ. (n.) தகர்வு பார்க்க; see *tagarvu*.

*[தகர் → தகர்ச்சி]*

**தகர்ப்பொறி** *tagar-p-poṟi*, பெ. (n.) கோட்டை மதிலிற் காப்பாக வைக்கும் ஆட்டின் வடிவான எந்திரவகை. (சிலப். 15: 216: உரை); a defensive machine mounted on fort-wall, probably in the shape of a ram.

*[தகர் + பொறி]*

**தகர்வு** *tagarvu*, பெ. (n.) 1. உடைவு; break. 2. சிதைவு பார்க்க; see *šidaivu*.

*[தகர் → தகர்வு]*

**தகரக்குடம்** *tagara-k-kuḍam*, பெ. (n.) தகரத்தாலான சதுரவடிவக் குடம் (இ.வ.); square tin-pot.

*[தகரம் + குடம்]*



தகரவிதை



தண்ணீர் விட்டாங்கிழங்கு



தாழை



தான்றிக்காய்

**தகரக்கொட்டகை** *tagara-k-koṭṭagai*, பெ. (n.) இரும்புத் தகடாலான கூரைக் கட்டடம்; steel-roofed building.

*[தகரம் + கொட்டகை.]*

**தகரங்கவித்து** *tagaraṅgavittu*, பெ. (n.) சிறு தும்மட்டிக்காய்; a small species of bryonia (சா.அக.).

**தகரச்சி** *tagaracci*, பெ. (n.) தகரை பார்க்க; see *tagarai* (சா.அக.).

**தகரஞாழல்** *tagara-ñāḻal*, பெ. (n.) மயிர்ச் சாந்து வகை (நன். 368, மயிலை); an aromatic unguent for the hair.

*[தகரம் + ஞாழல். தகரம் = தூளாக்கப் பட்ட நறுமணப்பொடி, தகர் → தகரம்]*

**தகரடி** *tagar-aḍi*, பெ. (n.) 1. சிதறவடிக்கை (யாழ்ப்.); breaking, shattering to pieces, smashing. 2. பெருமிதப்பேச்சு (இவ); tall-talk.

*[தகர் + அடி]*

**தகரப்பானை** *tagara-p-pāṉai*, பெ. (n.) தகரத்தால் செய்த பாண்டம்; tin-pan (சா.அக).

*[தகரம் + பானை]*

**தகரப்பூண்டு** *tagara-p-pūṇḍu*, பெ. (n.) பவளப்பூண்டு; gloss wort - Arthroenemum indicum (சா.அக.).

*[தகரம் + பூண்டு]*

**தகரப்பொடி** *tagara-p-poḍi*, பெ. (n.) மணத் தூள்; fragrant powder (சா.அக.).

மறுவ. நறுமணத்தூள்

*[தகரம் + பொடி]*

**தகரம்**[1] *tagaram*, பெ. (n.) 1. நறுமணமரம்; wax flower dog-bane, Tabernae montana. "திருந்து தகரச் செந்நெருப்பில்" (சீவக. 349). 2. மயிர்ச் சாந்து; aromatic unguent for the hair. "தண்ண றுந் தகரங் கமழ மண்ணி" (குறிஞ்சிப். 108). 3. நறுமணம் (அக. நி.); fragrance. 4. தகரைச் செடி; a plant.

*[தகர் + அம் - தகரம் = இடித்துத் தூளாக்கப்பட்ட நறுமணப்பொடி]*

**தகரம்**[2] *tagaram*, பெ. (n.) 1. எளிதில் உருகக் கூடிய, தகடாக அடிக்கக்கூடிய, வெள்ளை நிற மாழை (உலோகம்), வெள்ளீயம் அணு எண் 50, குறியீடு; a silvery white, easily fusible, malleable metal, symbol atomic no. 50. 2. தகரத்தாலான கொள்கலன்; container made up of tin sheet (செ.அக.).

க. தகர. தமர, தவர; தெ. தகரமு, தமரமு, தவரமு; து. தமரு, தமா, தவர;. ம. தகரம்: கோத. தகரம்; பட. தகர; Skt. tamaram

*[தழ → தக + ர் + அம். (ஒ.நோ.) மழ → மக. தள → தழ = ஒளிருதற்பொருள் (வடமொழி வரலாறு)]*

**தகரம்**[3] *tagaram*, பெ. (n.) நெஞ்சகத்தின் உள்ளிடம்; the cavity of the heart. "தகரத்தந்தச் சிகரத் தொன்றி" (திருப்பு. 86).

*[தங்கு → தங்கல் → தகல் → தகர் + அம். "அம்" பெருமைப்பொருட் பின்னொட்டு.]*

**தகரம்**[4] *tagaram*, பெ. (n.) விலங்கின்குட்டி (யாழ்.அக.); young of an animal.

**தகரம்**[5] *tagaram*, பெ.(n.) 1. நந்தியா வட்டம்; Indian rosebay. 2. தகைமைவிதை; ringworm seed.

**தகரரேக்கு** *tagara-rēkku*, பெ. (n.) தகரத்தை இலையைப்போல் வெட்டிய தகடு; tin foil (சா.அக.).

*[தகரம் + ரேக்கு]*

**தகரவித்தை** *tagara-vittai*, பெ. (n.) இறைவனை நெஞ்சகத்தில் வைத்து ஊழ்கம் செய்யும் முறையை உணர்த்தும் வித்தை; the mystic contemplation of the deity in tagarāgāšam. "ஏய்ந்த சீர்த்தகரவித்தை முறைப்படி" (காஞ்சிப்பு. நகர. 119).

மறுவ. தகராலயம்

*[தகரம் + வித்தை]*

**தகராகாசம்** *tagarāgāšam*, பெ. (n.) தகரம்[3] பார்க்க; see *tagaram*[3] (செ.அக.).

*[தகர் + ஆகாசம்]*

**தகராஞ்சிரம்** *tagarāñjiram*, பெ. (n.) பெருந் தகரை; West Indian bead tree.

மறுவ. குமிழ்மணிமரம்

*[தகரை + அஞ்சிரம்]*

**தகராறு** *tagarāṟu*, பெ. (n.) *1.* கருத்து வேறுபாடு முதலியவற்றால் உருவாகும் சிறுசண்டை; dispute between two groups or nations; skirmish; affray. வாடகைத் தகராறு ஏதுமில்லை (உ.வ.). *2.* மாறான போக்கால் அல்லது ஒழுங்கு தவறுவதால் ஏற்படும் குழப்பம்; wrangle; quarrel. குடித்துவிட்டுத் தகராறு செய்தான்(உ.வ.). *3.* எந்திரம் ஒழுங்காக இயங்காமல் தகராறு செய்கிறது; when referring to mechanical failures; trouble. 'பேருந்து கிளம்பாமல் தகராறு செய்தது' (இ.வ.).

த. தகராறு → Arab. tagarar.

*[தகர் + ஆறு = மாறுபாடு, வேறுபாடு, முதலியவற்றைத் தகர்க்கின்ற வழி]*

**தகரி** *tagari*, பெ. (n.) முத்திரை எனும் மரம் (L.); Pinnate - leaved honey sweet tree - Meliosma arnottiana.

**தகரிடம்** *tagariḍam*, பெ. (n.) தகரை பார்க்க; see *tagarai* (சா.அக.).

**தகரு** *tagaru*, பெ. (n.) புனமுருக்கு (மலை.); palas tree.

**தகரூகிகம்** *tagarūgigam*, பெ. (n.) சாயப்பாக்கு; dyed areca-nut. (சா.அக.).

**தகரை** *tagarai*, பெ. (n.) *1.* பெருந்தகரை; west Indian bead tree. *2.* கையாந்தகரை; eclipseplant - Eclypta prostata. *3.* தகரம்[5]-1 பார்க்க; see *tagaram*[5]-1 (சா.அக.).



தகரை வகை:

| | |
|---|---|
| 1. பெருந்தகரை | - large tagaray-Cassia sophera. |
| 2. கருந்தகரை | - black cassia - Cassia pumila. |
| 3. காட்டுத்தகரை | - wild-cassia - Cassia occidentabis. |
| 4. வெண்டகரை (அ) வெள்ளைத்தகரை | cassia glauca |
| 5. பூந்தகரை | - |
| 6. சிறுதகரை | - same as தகரை which see |
| 7. சற்றகரை | - |
| 8. பன்றித்தகரை | - |
| 9. ஊசித்தகரை | - needle chakondah-pharcolus semierectus |
| 10. செந்தகரை | - |
| 11. புளித்தகரை | - |
| 12. நாற்றத்தகரை | - foetid cassia |
| 13. சீனத்தகரை | - chinna cassia - Cassia chinensis |
| 14. பொன் அல்லது பொன்தகரை | - cassia glauca |

**தகல்[1]** *tagal*, பெ. (n.) தகுதி; fitness. "துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா" (நாலடி. 167).

*[தகு → தகல்]*

**தகல்[2]** *tagal*, பெ. (n.) தடை (இலக். அக.); obstruction.

*[தகையல் → தகல்]*

**தகல்[3]** *tagal*, பெ. (n.) *1.* பவளப்பூண்டு; a species of glasswort. *2.* கீரைவகை; a profusely branching prostrate herb. Mollugo spugula.

*[தகை → தக → தகல்]*

**தகல்[4]** *tagal*, பெ. (n.) ஒளி; light.

*[தக → தகல். தகல் = தகதகவென்று எரிதல், சுடருதல்]*

**தகல்[5]** *tagal*, பெ. (n.) உமரி; glasswort - Arthroenemum indicum (சா.அக.).

*[தகு + அல்]*

**தகலக்கட்டு-தல்** *tagala-k-kaṭṭu-*, 5 செ. குன்றாவி. (v.t.) ஏமாற்றுதல் (இ.வ.); to cheat any one, as by selling him a bad article.

**தகலாவணிகம்** *tagalāvaṇigam*, பெ. (n.) தண்ணீரும் உப்பும் கலத்தல்; preparing a solution with salt and water (சா.அக.).

*[தகல் + ஆம் + வணிகம் – தகலாவணிகம். 'ஆம்' – மகரக்குறுக்கம்.]*

**தகலுப்பு** *tagaluppu*, பெ. (n.) ஏமாற்றுகை (வின்.); pretending, cheating, seducing.

*[தகு + அல் + உப்பு – தகலுப்பு. தரமற்ற ஒன்றைத் தகுதியானது என்று கொடுத்து ஏமாற்றுகை.]*

**தகலுபாசி** *tagalupāsi*, பெ. (n.) தகல்பாச்சி (வின்.) பார்க்க; see *tagal-pācci*.

**தகலோன்** *tagalōṉ*, பெ. (n.) தகுதியுடையவன்; one who is eminently fitted, suitable or worthy. "எவரும் புலகத் தகலோன்" (திருக்கோ. 188).

*[தகு → தகல் + (ஆன் →) ஓன் – தகலோன்]*

**தகவமை-த்தல்** *tagavamai-*, 4 செ.குன்றாவி. (v.t.) சூழலுக்கேற்ப ஒத்துப்போகும் வண்ணம் மாற்றிக்கொள்ளுதல்; to adopt or adjust. சூழ்நிலைக்கேற்ப தகவமைத்துக் கொள்ளும் மாந்தரே வெற்றி பெறுகின்றனர் (உ.வ.). சில விலங்குகள் கடுங்குளிரிலும், தங்களைத் தகவமைத்துக் கொள்ளும் ஆற்றல் பெற்றிருக்கின்றன (உ.வ.).

*[தகவு + அமை-.]*

**தகவல்** *tagaval*, பெ. (n.) 1. செய்தி; information, intimation. ஒரு தகவலும் எனக்கு வரவில்லை (இ.வ.). 2. சான்று (வின்.); citation; illustration, example. 3. நேரியவிடை (வின்.); appropriate answer.

*[தரு → தரம் = வரும்வழி, மூலம். தரம் → தரவு = செய்தி. தரவு → தகவு = தகவல்.]*

**தகவல்தொடர்பு**[1] *tagaval-toḍarbu*, பெ. (n.). தகவல்களைப் பரிமாறிக் கொள்ளப் பயன்படுத்தும் அமைப்பு; information and communication, telecomunication. செயற்கைக் கோளின் கண்டுபிடிப்பினால் உலகளாவிய தொலைத்தொடர்பு எளிதாகியுள்ளது.

*[தரு → தரவல் → தகவல் + தொடர்பு]*

**தகவல்தொடர்பு**[2] *tagaval-toḍarbu*, பெ. (n.) உரியசெய்தி ஓரிடத்தினின்றும், பிறிதோரிடத்திற்குப் பரிமாறிக்கொள்ளப் பயன்படுத்தும் (தொலைபேசி, கம்பியில்லாத் தொலைவரி முதலிய) அமைப்பு; telecommunications. செயற்கைக்கோளின் கண்டுபிடிப்பினால் உலகளாவிய தகவல் தொடர்புக் கருவிகள், எளிதில் செய்திகளைப் பாப்பி விடுகின்றன.

*[தரு → தரவல் → தகவல் + தொடர்பு]*

**தகவலாளி**[1] *tagavalāḷi*, பெ. (n.) உளவு சொல்பவர்; informer.

மறுவ. ஒற்றன், உளவாளி,

*[தரவல் → தகவல் + ஆளி = தகவல் தரும் ஆள். "இ" உடைமைப்பெயரீறு]*

மாற்றார்நாட்டினின்று தகவல் தருபவர், அல்லது தாய்நாட்டினின்று சூழ்ச்சி செய்பவர்; வேற்றுநாட்டவர்க்கு, மந்தணச் செய்திகளை விற்றுப் பணஞ்சேர்க்கும் தீயோரைக் காட்டிக்கொடுப்பவரும் தகவலாளியேயாம்.

தகவலாளி என்பவருள் ஒருசாரார், குற்றம் கண்டுரைக்கும் பணி மேற்கொண்டவ ரெனலாம். காவல்துறையினருக்கு உளவுச் செய்திகளையுரைப்போரும், தகவலாளிகளேயாவர்.

**தகவலாளி**[2] *tagavalāḷi*, பெ. (n.) ஆராய்ச்சி செய்வோருக்கு உதவுபவர்; informant; இது தகவலாளி சொன்ன கதையின் அடிப்படையில் எழுதப்பட்ட கட்டுரையாகும் (உ.வ.).

*[தரவல் → தகவல் + ஆள் + இ. தகவலாளி. நய(நீதி) மன்றத்தில் அல்லது ஆய்வுப் புலத்தில் தகவல்களை ஆய்வு செய்பவருக்குத் தரவுகளை அல்லது, சட்ட நுணுக்கங்களைத் தந்துதவுபவர்.]*

**தகவன்** *tagavaṉ*, பெ. (n.) தகுதியுடைவன்; worthy man. "தகவா தகவல்லது செய்தனையே" (சீவக. 1382).

*[தகவு → தகவன்]*

**தகவிலர்** *tagavilar*, பெ. (n.) நடுவுநிலையில்லாதவர்; injustice people.

*[தகவு + இல் + அர்]*

**தகவிலை** *tagavilai*, பெ. (n.) *1.* **தகவின்மையுடைமை;** unworthiness. *2.* **தகவின்மை** *பார்க்க;* see *tagaviṉmai.*

*[தகவு + விலை]*

**தகவின்மை** *tagaviṉmai*, பெ. (n.) *1.* **தகுதியின்மை;** unworthiness, unsuitability. *2.* **நடுநிலையின்மை;** injustice, partiality. *3.* **துன்பம்;** trouble, anxiety. "தணிவாய் நின்றகவின்மை" (தஞ்சைவா. 50).

*[தகவு + இன்மை]*

**தகவு** *tagavu*, பெ. (n.) *1.* **தகுதி;** suitability, fitness, worthiness. "தகவிலை கொல்லோ சம்பாபதியென" (மணிமே. 6: 138). **2. உவமை** (சூடா.); similitude, resemblance, comparison. *3.* **குணம்** (பிங்.); quality, state, condition, manner. *4.* **பெருமை;** eminence, greatness. "தகவேயுடையான் றனைச்சார" (திருவாச. 45: 2). *5.* **அருள்** (சூடா.); mercy, kindness. *6.* **நடுவு நிலை;** justice, equity, impartiality. "தக்கார் தகவிலரென்பது" (குறள், 114). **7. வலிமை;** strength, ability. "வாரிகடக்குந் தகவின்மை" (கம்பரா. மகேந். 4). **8. அறிவு** (அரு.நி.); knowledge, wisdom. "தக்கதே நினைந்தனை தகவோய்" (கம்பரா. அயோத். மந்திரப். 35). *9.* **தெளிவு** (அரு. நி.); clarity. *10.* **கற்பு;** chastity. "தகவுடை மங்கையர்" (பரிபா. 20: 88). *11.* **நல்லொழுக்கம்** (யாழ். அக.); discipline, good behaviour.

தெ. தகவு

*[தகு → தகவு]*

**தகவுரை** *taga-v-urai*, பெ. (n.) **பரிந்துரை;** recommendation. "தன்மாரர் பிருப்பாள் தகவுரையாலே" (அஷ்டப். நூற்றெட். 78).

*[தகவு + உரை - தகவுரை - தகுதியுடைய வருக்கு, ஒருவர் முறையாக நல்கும் பரிந்துரை]*

**தகவை** *tagavai*, பெ. (n.) **சாயக்கட்டி;** a piece of dye. "மரகதத் தகவையும்" (பெருங். மகத. 1: 96).

*[தகு - மெய்ம்மை முறைமை. தகு → தகவை - முறையான வண்ணம்]*

**தகழி** *tagaḻi*, பெ. (n.) *1.* **அகல்** (திவா.); bowl of a lamp. "அன்பே தகழியா" (திவ்.). **2. உண்கலம்** (சது.); plate from which food is eaten, dish.

ம. தகழி

*[அகல் → தகல் → தகலி → தகழி]*

**தகழிச்சி** *tagaḻicci*, பெ. (n.) **எரியணம்** (மூ.அ.); camphor.

மறுவ. கருப்பூரம்

*[தழல் → தழலி → தகலி → தகழி → தகழிச்சி]*

**தகளி**[1] *tagaḷi*, பெ. (n.) **தக்களி** *பார்க்க;* see *takkaḷi.*

தொங்கும் விளக்காய தகளிபோல் திரிக்குங்கால் ஆடலானும், தொங்கலானும், தகளி யென்னுஞ் சொல் தக்களி யென இவ் வகை நூற்புக்கருவிக்கு ஆகியது.

**தகளி**[2] *tagaḷi*, பெ. (n.) **தகழி** *பார்க்க;* see *tagaḻi.* "வையந் தகளியா" (திவ். இயற். 1: 1).

*[தகழி → தகளி]*

**தகன்**[1] *tagaṉ*, பெ. (n.) *1.* **வேர்விட்ட பனங்கொட்டை** (யாழ்ப்.); palmyra nut planted and rooted. *2.* **கிழங்குவிழுந்த பனங்கொட்டையின் உள்ளீடு** (நெல்லை); white pulpy matter in the palmyra nut. *3.* **திராய் (கீரை வகை)** (மலை.); a profusely branching prostrate herb.

*[தகு → தகன்]*

**தகன்**[2] *tagaṉ*, பெ. (n.) *1.* **தீ;** fire. *2.* **பூரான்;** pūrāṉ, a centipede (சா.அக.).

*[தழல் → தகல் → தகன். எரிதல் தன்மையால் தீ. கடிப்பதால் எரிச்சலுண்டாக்கும் பூரான்]*

**தகன்**[3] *tagaṉ*, பெ. (n.) **ஒழுக்கத்தான்;** characteristic person.

மறுவ. நெறியன், தன்மையன்.

*[தகு → தகம் → தகன்]*

**தகனக்கிரியை** *tagaṉa-k-kiriyai*, பெ. (n.) **பிணத்தை எரிக்கும் நிகழ்ச்சி;** cremation rites.

*[தகனம் + Skt. கிரியை]*

**தகனகரம்** *tagaṉa-garam,* பெ. (n.) உயிர்வளி (பிராணவாயு) (சிவ. ரசா. 5); oxygen.

*[தகனகரம் – ஒக நிலையில் மூக்கின் வலத்துளையில் வரும் காற்று வெப்பமாகவும், இடத்துளையில் வரும்காற்று குளிராகவும் இருக்கும்]*

**தகனசேதனம்** *tagaṉa-šēdaṉam,* பெ. (n.) புகை; smoke (சா.அக.).

**தகனபலி** *tagaṉa-pali,* பெ. (n.) நெருப்பிலிட்டுச் செய்யும் பலி (கிறித்.); burnt-offering.

*[தகனம் + பலி]*

**தகனபலிபீடம்** *tagaṉa-pali-pīḍam,* பெ. (n.) நெருப்பிலிட்டுப் பலி செய்தற்குரிய அடிமனை (கிறித்.); altar for burnt-offerings.

*[தகனம் + பலி + பீடம்]*

**தகனப்பிரியை** *tagaṉa-p-piriyai,* பெ. (n.) தீக்கடவுள் மனைவி; fire god's consort.

*[தகனம் + பிரியை]*

**தகனபைத்தியம்** *tagaṉa-paittiyam,* பெ. (n.) நெருப்பைக் கண்டவுடன் மனப்பிறழ்ச்சி ஏற்படுகை; derangement of mind at the sight of fire (சா.அக.).

*[தகனம் + பைத்தியம்]*

**தகனம்** *tagaṉam,* பெ. (n.) 1. எரிக்கை; burning, combustion, consumption by fire. 2. பிணஞ் சுடுகை; cremation, burning of a corpse. 3. எரித்தலாகிய தூய்மைப்படு கருமியம் (வாயு. சங். பஞ்சாக். 46); purification by burning, one of *šutti-karaṇa-k-kiriyai.* 4. செரித்தல் (நாஞ்.); digestion. 5. உணவு; food. மாடுகளுக்குப் போதுமான தகனங் கிடைப்பதில்லை (கோவை.).

*[தக → தகன் + அம் – தகனம். எரிக்கும் பசியில், செரிக்கும் உணவு]*

**தகனன்** *tagaṉaṉ,* பெ. (n.) நெருப்புக்கடவுள் (சூடா.); Agni, the fire God.

*[அழல் → தழல் → தகல் → தகன் + அன். ஒருகா: தழலன் → தகனன்]*

**தகனாஞ்சு** *tagaṉāñju,* பெ. (n.) பற்களை ஒளிரச்செய்யும் கட்டியான மேற்பூச்சு; glossy hard coating of the teeth-Enamel (சா.அக.).

*[தகன் → தகனாஞ்சு – மின்னும் வயிரம் போல் உறுதியான பல்.]*

**தகனாராதி** *tagaṉārādi,* பெ. (n.) நீர்; water (சா.அக.).

*[தகன் + அல் + நார் + ஆதி – தகனாராதி. வெப்பமற்ற தன்மையது.]*

**தகனானுவளி** *tagaṉāṉu-vaḷi,* பெ. (n.) உயிர்வளி (பிராண வாயு); oxygen gas (சா.அக.).

**தகனி-த்தல்** *tagaṉi-,* 4 செ.குன்றாவி. (v.t.) எரித்தல் (யாழ்.அக.); to burn, consume by fire.

*[தழல் → தகன் → தகனி-.]*

**தகனை** *tagaṉai,* பெ. (n.) தகணை (யாழ்.ப.) பார்க்க; see *tagaṇai.*

*[தகன் → தகனை.]*

**தகனோபகரணம்** *tagaṉōbagaraṇam,* பெ. (n.) சூட்டுக்கோல்; an instrument for caterising (சா.அக.).

*[தழல் → தகன் + உபகரணம்]*

**தகனோபலம்** *tagaṉōpalam,* பெ. (n.) 1. சூரியகாந்திக்கல் (யாழ்.அக.); sun-stone. 2. பொழுது வணங்கிப்பூ (சூரியகாந்தி); sun-flower.

**தகா**[1] *tagā,* பெ. (n.) 1. பசி நீர்வேட்கை (வின்.); thirst; hunger, appetite. 2. மிக்கஆசை; intense desire, eagerness, craving. 3. பேராசை, பெண்ணாசை; lust, venereal desire. 4. பொருளாசை; avarice, cupidity (செ.அக.).

*[தகு → தகா – தகாத தன்மை]*

**தகா**[2] *tagā,* பெ. (n.) ஏமாற்று, ஏய்ப்பு (C.G.); cheating, fraud.

*[தகு → தகா = தகுதியற்ற, முறையற்ற செயல்]*

**தகாக்காட்டு-தல்** *tagā-k-kāṭṭu-*, 5 செகுவி. (v.i.) ஆசைகாட்டுதல்; to excite desire.

*[தகு → தகா + காட்டு-.]*

**தகாத** *tagāda*, பெ. (n.) 1. தகுதியற்ற; முறையற்ற; பொருத்தமற்ற; unproper, unfair, unbecoming. தகாதமுறைகளைப் பின்பற்றித் தேர்தலில் வெற்றிபெற முயல்வது இழுக்கன்றோ? (உ.வ.) 2. தரக்குறைவான; அருவருக்கத்தக்க; obscure; unvulgar. தகாத சொற்களால் திட்டலாமா? (உ.வ.)

*[தகு + ஆ - தகா.]*

**தகாதது** *tagādadu*, பெ. (n.) ஒழுங்கற்ற செயல்; indecent act.

*[தகு → தகா → தகாத + அது]*

**தகாதவன்** *tagādavaṉ*, பெ. (n.) ஒழுக்கமற்றவன்; indisciplined man.

*[தகு → தகா → தகாத + அவன். தகாத - முறையற்ற]*

**தகாதா** *tagādā*, பெ. (n.) 1. குற்றம்; harm. இனி, நான் இருந்தாலும், இராவிட்டாலும் தகாதா யாதும் இல்லை (செ.வ.). 2. குற்றவியல் வழக்கு (வின்.); criminal proceeding, law suit. 3. நெருக்குகை (W.G.); trouble-some importunity in urging the settlement of a claim or payment of a debt, dunning.

*[தகு → தகாது + ஆ. "ஆ" எதிர்மறைப் பின்னொட்டு = முறையற்றது; நேர்மையற்ற செய்கை]*

**தகாதி** *tagādi*, பெ. (n.) தகாதா (வின்.) பார்க்க; see *tagādā*.

*[தகு → தகா → தகாதி]*

**தகாபேசி** *tagāpēši*, பெ. (n.) எழுச்சியை உண்டாக்கும் நரம்பு; nerve causing lust or erection of penis (சா.அக.).

*[தகு → தகா + (பேசு →) பேசி. 'இ' சொல்லாக்க விகுதி. தகுதியற்ற பேச்சினைத் தூண்டும் முதிய நரம்பு]*

**தகாமை**[2] *tagāmai*, பெ. (n.) 1. ஒழுங்கற்ற தன்மை; immorality. 2. தகுதியின்மை; ingravity. 3. இயல்பாக நிகழக்கூடாமை; unlikeliness.

*[தகு + ஆ + மை]*

**தகாயத்து** *tagāyattu*, பெ. (n.) அது (இது) வரை (C.G.); since, until, upto.

*[தகு + ஆய் + அத்து - தகாயத்து.].*

**தகாவளி** *tagāvaḷi*, பெ. (n.) உட்கொள்ளக் கூடாத காற்று; a gas unfit for respiration (சா.அக.).

*[தகு → தகா + வளி.]*

**தகாவி** *tagāvi*, பெ. (n.) மரமஞ்சள்; tree turmeric (சா.அக.).

**தகான்** *tagāṉ*, பெ. (n.) தகுதியில்லாதவன்; unqualified person. "தகாஅன் போலத் தான்றிது மொழியிலும்" (குறுந். 29.).

*[தகு → தகான் ஒ.நோ. நகு → நகான்]*

**தகான்பண்ணு-தல்** *tagāṉ-paṇṇu-*, 5 செகுவி. (v.i.) மிகு துன்பத்துடன் ஒன்றை நிறைவேற்றுதல்; to manage in the face of difficulties.

*[தகு + ஆன் + பண்ணு-.]*

**தகி**[1]**-த்தல்** tagi-, 4 செகுன்றாவி. (v.t.) 1. எரித்தல்; to burn, as fire. 2. பிணஞ்சுடுதல்; to cremate. பிகு வெப்பத்தால் உடம்பு தகிக்கிறது (உ.வ.).

*[தழ → தக → தகு → தகி-.]*

**தகி**[2]**-த்தல்** tagi-, 4 செகுவி. (v.i.) 1. வெப்பஞ் செய்தல்; to burn, to be hot. வெயில் தகிக்கிறது (உ.வ.). 2. செரித்தல் (யாழ். அக.); to be digested.

*[தகதக → தக → தகு → தகி-. தக → தகம் = எரிவு, சூடு, தகித்தல், எரிதல், சுடுதல். ஒ.நோ. குழ → குக : மழ → மக]*

**தகி**[3] *tagi*, பெ. (n.) 1. வேப்பம்பட்டை; bark or margosa tree. 2. வெறிநீர் (சாராயம்); arrack. (சா.அக.)

*[தக → தகி]*

**தகிடி** *tagiḍi,* பெ. (n.) தகிடிக்கை (வின்.) பார்க்க; see *tagiḍikkai.*

*[தக்க → தக + இடு + இ - தகடி → தகிடி. நடனக் குறிப்பு.]*

**தகிடிக்கை** *tagiḍikkai,* பெ. (n.) சினம், வியப்பு முதலியவற்றின் குறிப்புச்சொல் (வின்.); exclamation of defiance, surprise, etc.

*[தகிடி → தகிடிக்கை]*

**தகிடிப்பிச்சை** *tagiḍi-p-piccai,* பெ. (n.) 1. இடைவிடாது இரந்துகேட்டல்; importunate begging. 2. அதிகாரப்பிச்சை (இ.வ.); imperious behaviour in begging.

*[தகிடி + பிச்சை]*

**தகிடுதத்தம்** *tagiḍu-tattam,* பெ. (n.) தவறான வழிகளைப் பின்பற்றும் செயல்; முறையற்ற குறுக்குவழி; manipulation; underhand dealings. தகிடுதத்தம் செய்து பணம் சேர்த்துவிட்டான் (உ.வ.).

*[தகடு + தங்கம் → தகிடுதத்தம். தகடைத் தங்கமென்று கூறி ஏமாற்றுகை. (ஒ.நோ.) பித்தளை + ஆடகம் → பித்தலாட்டம். பித்தளையைத் தங்கமென்று கூறி ஏய்க்கை]*

**தகிப்பு** *tagippu,* பெ. (n.) 1. எரிப்பு; combustion. 2. சுடுகை; burning.

*[தக → தகம் - எரிவு, சூடு. தகு → தகி → தகிப்பு.]*

**தகிரியம்** *tagiriyam,* பெ. (n.) துணிச்சல் (பேச்சு வழக்கு); courage.

*[தகர் + இயம் → தகரியம் → தகிரியம்.]*

**தகிலன்** *tagilaṉ,* பெ. (n.) ஏமாற்றுவோன் (யாழ். அக.); cheat, deceiver.

*[தகு + இல் + அன் → தகிலன். தகவு இல்லாதவன்]*

**தகிலாயக்காரன்** *tagilāya-k-kāraṉ,* பெ. (n.) நண்பன் (வின்.); friend.

*[தகு → தகி → தகில் + ஆயம் + காரன்]*

**தகிலாயம்** *tagilāyam,* பெ. (n.) 1. அன்பு, நட்புரிமை (யாழ். அக.); friendship. 2. நன்றி; gratitude.

*[தகில் + ஆயம்]*

**தகிலி-த்தல்** *tagili-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. வஞ்சித்தல் (வின்.); to cheat. 2. திருடிக் கொடுத்தல்; to give stolen articles. 3. பண்டமாற்றிக் கொள்ளுதல் (வின்.); to give in exchange. 4. உட்புகுத்துதல் (யாழ்ப்.); to cause to enter or penetrate. 5. உழக்குதல் (வின்.); to trample down, smash. 6. குற்றஞ்சாட்டுதல் (வின்.); to throw blame on a person.

*[தகு → தகி + அல் - முறையற்ற. தகல் → தகிலி-]*

**தகிலிப்பு** *tagilippu,* பெ. (n.) உட்செலுத்துகை; insertion.

*[தகு → தகில் → தகிலி → தகிலிப்பு.]*

**தகிலிமா** *tagilimā,* பெ. (n.) குறியிடும் சேங்கொட்டை மரம் (வின்.); marking nut tree.

*[தகிலி + மா.]*

**தகு[1]-தல்** *tagu-,* 5 செ.குவி. (v.i.) 1. ஏற்றதாதல்; to be fit, appropriate, suitable, proper, worthy, adequate, proportionat. "கற்றபி னிற்க வதற்குத் தக" (குறள், 391). 2. மேம்படுதல்; to be excellent. "பெண்ணிற் பெருந்தக்க யாவுள" (குறள், 54). 3. தொடங்குதல்; to begin, get ready "புல்லாள் புலத்தக்கனள்" (குறள், 1316). 4. கிட்டுதல்; to be obtained. "துன்புறி னல்லது சுகந்தகாது" (திருவானைக். நாட்டு. 115). 5. தகுதியாதல்; to be deserved. இந்தப் பெருமை அவனுக்குத் தகாது. (இச்.வ.).

க., தெ. தகு; ம. தகு

*[தக → தகு-. (வ. மொ. வ.169)]*

**தகு[2]-தல்** *tagu-,* 5 செகுன்றாவி. (v.t.) பொருந்துதல்; ஒத்திருத்தல்; to resemble. "புண்டரிகந் தகுபத யுகளம்" (கோயிற்பு. பதஞ்சலி. 40).

*[துள் → தள் → தழு → தகு-. ஒத்தல், பொருந்துதல். ஒத்தற் கருத்தினின்று பொருந்துதற் கருத்து முகிழ்த்தது. ஒத்த பொருள் பொருந்தும் இயல்புடைத்து (மு.தா. 99)]*

**தகு**[3] *tagu,* பெ. (n.) *1.* நன்னாரி வேர்; dasaparilla - Hemidesmus indicus. *2.* ஒரு வகைப் பலா; artocarpus lakucha. (சா.அக.).

*[தரு → தகு.]*

**தகு**[4] *tagu,* பெ.எ. (adj.) தகுந்த; worthy of. வியத்தகு நிகழ்ச்சிகள், போற்றத்தகு புலவர் (உ.வ.).

*[தக → தகு.]*

**தகுணி** *taguṇi,* பெ. (n.) இசைக்கருவி; a kind of drum. "சங்கம் பொற்றாளம் தகுணி துடிபடகம்" (சிவக். பிரபந். தஞ்சைப் பெரு. 51).

*[தகுணிச்சம் → தகுணி.]*

**தகுணிச்சம்** *taguṇiccam,* பெ. (n.) *1.* பறைப் பொது (சூடா.); drum. *2.* அகப்புறமுழவு மூன்றனுள் ஒன்று (சிலப். 327, உரை); a kind of drum, one of the three agappuṟa-muḻavu. *3.* ஒருவகை வரிக்கூத்து (சிலப். 3: 13: உரை); a masquerade dance.

*[தகுணிதம் → தகுணிச்சம்]*

**தகுணிதம்** *taguṇidam,* பெ. (n.) பறைப்பொது (தகுணிச்சம்); drum. "தகுணிதந் துந்துபி தாளம் வீணை" (பதினொ. காரைக்கா. திருவாலங். 9).

*[தக்க → தக → தகு + அணி + தம் - தகுணிதம். 'தம்' - தாளக்குறிப்பு. தாளத்தை ஒழுங்கு முறையுடன், நிரல்பட வெளிப் படுத்தும் பறை]*

**தகுதி** *tagudi,* பெ. (n.) *1.* பொருத்தம்; fitness, suitability, appropriateness, adequacy, propriety. "மற்றதன் றகுதி கேளினி" (புறநா. 18: 17). *2.* தகுதி வழக்கு பார்க்க (இலக்.); see *tagudi-vaḻakku.* "தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும் பகுதிக்கிளவி வரைநிலை இலவே" (தொல். சொல்.17). *3.* குணம் (பிங்.); nature, property. *4.* மேன்மை; worthyness, excellence, greatness. *5.* நல்லொழுக்கம் (அக.நி.); good conduct, morality. *6.* நடுவுநிலைமை; equity, justice, impartiality. "தகுதி யென வொன்று நன்றே" (குறள், 111). *7.* பொறுமை; forbearance, patience. "தாந்தந் தகுதியான் வென்றுவிடல்" (குறள், 158). *8.* ஆற்றல்; capacity, pecuniary, ability. *9.* நிலைமை; position, status. தகுதிக்குத் தக்கபடிசெய்தான் (இ.வ.). *10.* அறிவு (யாழ்.அக.); knowledge, learning, wisdom. *11.* கூட்டம்; multitude. "அதிர்ந்தன வானவர் தகுதி" (குற்றா. தல. தக்கன் வேள்விய.21). *12.* தடவை; occasion, time. பலதகுதி அவனைத் தேடினேன் (இ.வ.).

*[துள் → தள் → தழு → தகு → தகுதி. (மு. தா. 197).]*

**தகுதிநிலை** *tagudi-nilai,* பெ. (n.) தரப்படுத்தப் பட்ட வரிசை; grade, rank. பள்ளித்தேர்வுகளில் மதிப்பெண்களுடன் தகுதி நிலையும் கொடுக்கப்பட்டுள்ளது.

*[தகு → தகுதி + நிலை - தகுதிநிலை]*

**தகுதிநிலைமை** *tagudi-nilaimai,* பெ. (n.) தகுதிநிலை பார்க்க; see *tagudi-nilai.*

*[தகுதி + நிலைமை.]*

**தகுதிப்பொருள்** *tagudi-p-poruḷ,* பெ. (n.) தக்க பொருள்; appropriate things.

*[தகுதி + பொருள்]*

**தகுதியணி** *tagudi-y-aṇi,* பெ. (n.) தக்க இரண்டு பொருள்களின் சேர்க்கையை உணர்த்தும் அணி (அணியி. 39); a figure of speech which consists in expressing the congruity of the association of one object with another.

*[தகுதி + அணி]*

**தகுதியர்** *tagudiyar,* பெ. (n.) *1.* நடுவு நிலைமையாளர்; impartiality person. *2.* தகுதியோர் பார்க்க; see *tagudiyōr.*

*[தகு → தகுதி + அர்]*

**தகுதியின்மையணி** *tagudi-y-iṉmai-y-aṇi,* பெ. (n.) தகாத இரண்டு பொருள்களின் சேர்க்கையை உணர்த்தும் அணி (அணியி. 38); a figure of speech which consists in expressing the incongruity of the association of one object with another.

*[தகுதி + இன்மை + அணி]*

**தகுதியோர்** *tagudiyōr,* பெ. (n.) அறிஞர் (சூடா.); wise, learned persons.

*[தகுதி + (ஆர் →) ஓர்]*

**தகுதிவழக்கு** *tagudi-vaḻakku,* பெ. (n.) பொருள்களுக்கு இயல்பாயமைந்த சொற்களை யொழித்துத், தகுதியான வேறு சொற்களாற்

கூறும் இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என்ற மூவகை வழக்கு (நன், 267); the usage of a conventional substitute for the proper name of an object or action, of three kinds, viz., iḍakkaraḍakkal, maṅgalam, kul̠ūu-k-kur̠i, dist. fr. iyalbu-val̠akku.

[தகுதி + வழக்கு]

**தகுந்த** *tagunda*, பெ.எ. (adj.) *1.* பொருத்தமான; ஏற்ற; உரிய; appropriate; suitable. விழாவுக்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டு விட்டனவா?. *2.* தகுதியுடைய; worthy of. மக்களிடையே வரவேற்கத் தகுந்த மாற்றம் காணப்படுவது பாராட்டத்தக்கது. பாராட்டத்தகுந்த செயல். (உ.வ.).

[தகு → தகுந்த - செய என்னும் வாய் பாட்டு வினையெச்சத்தின் பின்வரும் சொல்.]

**தகுந்தகுமெனல்** *tagun-tagu-m-en̠al*, பெ. (n.) *1.* ஒலியோடு எரிதற்குறிப்பு; onom. expr. of crackling sound of fire. மழுவலந் தகுந்தகு மென்று தயங்குற (பிரபுலிங். கைலாச. 13). *2.* ஒளி வீசுதற்குறிப்பு; dazzling brilliance. *3.* முழவு முதலியன ஒலித்தற்குறிப்பு; beating sound as of a drum.

[தகும் + தகும் + எனல்]

**தகுந்தபுள்ளி** *tagunda-pul̤l̤i*, பெ. (n.) செல்வம் முதலியவற்றால் தகுதியுள்ளவ-ன்-ள்; competent person, person of substance or worth.

[தகு → தகுந்த + புள்ளி]

**தகுந்தவர்** *tagunda-var*, பெ. (n.) *1.* ஒழுக்க முடையோர்; good conduct person. *2.* தகுதியானவர்; eligible person.

[தகு → தகுந்த + அவர்]

**தகுந** *taguna*, பெ. (n.) *1.* தகுந்தவை; competent. *2.* மதிப்புடைய; worthy.

[தகு → தகுந.]

**தகும்** *tagum*, கு.வி.மு. (adv.) ஏற்றதாகும்; பொருந்தும்; (is) appropriate or worth or well deserved. உங்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். (உ.வ.).

[தகு → தகும்.]

**தகுமானபுள்ளி** *tagumāṉa-pul̤l̤i*, பெ. (n.) தகுந்த புள்ளி பார்க்க; see *tagunda-pul̤l̤i*.

[தகும் + ஆன + புள்ளி. புள்ளி = ஆள்]

**தகுமூலி** *tagu-mūli*, பெ. (n.) கும்பாங்கொடி; gmelina asiatica.

**தகுலிமா** *tagulimā*, பெ. (n.) தகிலிமா பார்க்க; see *tagilimā*.

[தகிலிமா → தகுலிமா.]

**தகுவர்** *taguvar*, பெ. (n.) தகுவன் பார்க்க; see *taguvan̠*.

[தகு → தகுவர்.]

**தகுவல்** *taguval*, பெ. (n.) தகவல் (வின்.) பார்க்க; see *tagaval*.

[தகவல் → தகுவல் - திரிபு வழக்கு.]

**தகுவன்** *taguvan̠*, பெ. (n.) *1.* தகுதியாளன், தக்கவன்; suitable person. *2.* அரக்கன்; Asuran̠. "தகுவர் தங்களுக் கஞ்சலை" (கந்தபு. இந்திரன் மீட்.1).

[தகு + அன் - தகுவன், தகுந்தவன், தகுதியானவன்]

**தகுவி**[2] *taguvi*, பெ. (n.) தகுதியுடைய பரத்தை; suitable prostitue. "நின்னலத் தகுவியை முயங்கிய மார்பே" (அகநா. 196 : 13)

[தகு → தகுவி.]

**தகுவியர்** *taguviyar*, பெ. (n.) அரக்க மகளிர்; Asura women. "தகுவியர் மைதோயும் வாட்கண்" (சங். அக. சிவராத்திரிபு. கடவுள்: 4).

[தகுவன் → தகுவியர்.]

**தகுளம்** *tagul̤am*, பெ. (n.) மகளிர் விளையாட்டு (பிங்.); women's sports.

**தகை[1]-தல்** *tagai-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* தடுத்தல்; to stop, resist, check, deter. "தருதல் தகையாதான் மற்று" (கலித். 92:9). *2.* ஆணையிட்டுத் தடுத்தல் (வின்.); to obstruct or forbid by oath. *3.* பிடித்தல்; to seize take hold of. "தடக்கையால் வளைக் கரந் தகைந்தான்" (பாரத. அருச்சுனன் தீர். 70). *4.* அடக்குதல்; to overpower, subdue. "ஆழிதகைந்த தனுத்தொழிலான்" (கம்பரா. அதிகாய. 62). *5.* உள்ளடக்குதல்; to shut in,

enclose, include. "தண்கேணித் தகைமுற்றத்து" (பட்டினப். 51). 6. பிணைத்தல் (இ.வ.); to bind, fasten, yoke. 7. ஒத்தல் (தொல். பொருள். 287); to resemble.

க. தகெ.

[அகை- → தகை-.]

**தகை[2]-தல்** *tagai-*, 4 செ.கு.வி. (v.i.) தளர்தல் (யாழ்.); to falter, faint, be weary.

மறுவ. திகைதல்

[அகை- → தகை-.]

**தகை[3]-த்தல்** *tagai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. தடுத்தல்; to check, resist, stop, deter. "நின்னைத் தகைத்தனென்" (கலித். 108: 20). 2. கட்டுதல்; to bind, fasten. "நுண் கோற்றகைத்த தெண்கண் மாக்கிணை" (புறநா. 70: 3). 3. சுற்றுதல்; to wind round, coil. "தகைத் தார்" (புறநா. 69). 4. வாட்டுதல் (யாழ். அக.); to tease, tire out. 5. அரிதல்; to mince. "மயிரிற் றகைத்து வறுத்தெரித் திடிப்பினும்" (ஞானா. 31: 10).

[அகை- → தகை-.]

**தகை[4]-த்தல்** *tagai-*, 4 செ.கு.வி. (v.i.) அழகு பெற்றிருத்தல்; to be beautiful, lovely. "பிடவுமுகை தகைய" (ஐங்குறு. 461).

[தகு → தகை-.]

**தகை[5]-த்தல்** *tagai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. நெருங்கப்பெறுதல்; to be crowded. "சனத்தினாற் றகைத்திடம் பெறாது" (சீவக. 825). 2. களைத்தல் (யாழ். அக.); to be fatigued, wearied.

[அகை- → தகை-.]

**தகை[6]** *tagai*, பெ. (n.) 1. பொருத்தம்; fitness, suitablity, propriety. "காண்டகைய செல்வக் கடம்பவனத்து" (குமா. பிர. மதுரைக் 96). 2. ஒப்பு; likeness, resemblance. "புலித்தகைப் பாய்த்துள்" (தொல். பொருள். 287, உரை). 3. மேம்பாடு; worthiness, excellence. "தகைமாண் குடுமி" (புறநா. 6: 26). 4. பெருமை (திவா.); greatness, superiority, dignity. 5. அருள் (பிங்.); mercy, grace. 6. அன்பு (சூடா.); love, affection, kindness. 7. அழகு; beauty, loveliness. "தாடோய் தடக்கைத் தகைமாண் வழுதி" (புறநா. 59: 2). 8. நன்மை; goodness. "தகைசான்ற சொற்காத்து" (குறள். 56). 9. பண்பு (பிங்.); quality, character. 10. இயல்பு; nature. "பொருகளி றன்ன தகைசாம்பி" (கலித். 60). 11. நிகழ்ச்சி; fact, event. "போனான் வனமென்னுந் தகையு முணர்ந்தார்" (கம்பரா. தைல. 84).

[தகு → தகை]

**தகை[7]** *tagai*, பெ. (n.) 1. கட்டுகை; binding, fastening. "தகைமலர்த் தாரோன்" (மணிமே. 24: 175). 2. மாலை; garland. "முகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்து" (திருமுருகு. 139). 3. தடை; obstruction, check, hindrance. "மணஞ் செய்வதற்கு நின்னாற் றகையிலை யென்னின்" (பிரபோத. 8: 11). 4. கவசம் (வின்.); armour, coat of mail. 5. தளர்ச்சி; weariness, faintess. "தகைதீர் சிலம்பாறு" (அழகர்கலம். 47). 6. நீர்வேட்கை; thirst. 7. மூச்சிளைப்பு (இ.வ.); shortness of breath, difficulty of breathing.

க. தகெ.

[அகை- → தகை-.]

**தகைத்துவம்** *tagaittuvam*, பெ. (n.) மருகு; a fragrant plant - Origanum majoranum (சா.அக.).

**தகைப்பு[1]** *tagaippu*, பெ. (n.) 1. தகை[7] 3. பார்க்க (யாழ். அக.); see *tagai*[7]. 2. மதிற்சுற்று (திவா.); surrounding wall, fortress. 3. மாளிகைக் கட்டடம்; palatial building. "களிறு முணைஇய தாரருந் தகைப்பின்" (பதிற்றுப். 64: 7). 4. வீட்டின் கணுள்ள கட்டு, அடுக்ககம்; section of a house, apartment. "பஃறகைப்பின் புழைவாயில் போகிடைகழி மழைதோயும் உயர்மாடத்து" (பட்டினப். 145). 5. படைவகுப்பு; battle array of an army. "உறுமுரண் டாங்கிய தாரருந் தகைப்பின்" (பதிற்றுப். 66: 10).

ம. தகப்பு

[தகை → தகைப்பு.]

**தகைப்பு[2]** *tagaippu*, பெ. (n.) இளைப்பு; weariness, fainting (சா.அக.).

**தகைப்பு[3]** *tagaippu*, பெ. (n.) யாழின் ஓர் உறுப்பு; the part of a lute (சா.அக.).

[தகை → தகைப்பு.]

## தகைவிலான்குருவி வகைகள்



தகைவிலான்



பாறைத் தகைவிலான்



சாம்பல் தகைவிலான்



நாட்டுத் தகைவிலான்



கம்பிவால் தகைவிலான்



சிவந்த பிட்டத் தகைவிலான்

**தகைபாடு-தல்** *tagai-pāḍu-*, 5 செ.கு.வி. (v.i.) தலைவன் தலைவியின் நலம் பாராட்டுதல்; to descant upon the beauty of one's lady love. "தகை பாடவலாய்" (சீவக. 1379).

*[தகை + பாடு-.]*

**தகைமலர்** *tagai-malar*, பெ. (n.) அழகுமலர்; beautiful flower.

*[தகை = அழகு. தகை + மலர்.]*

**தகைமுற்றம்** *tagai-muṟṟam*, பெ. (n.) முன்றில் கட்டு; courtyard in a house. "தண்கேணித்தகை முற்றத்துப் பகட்டெருத்தின் பலசாலை" (பட்டினப். 53)

*[தகை + முற்றம்]*

**தகைமை** *tagaimai*, பெ. (n.) 1. தகுதி; fitness. "தகைமை சேர்தரு தோத்திரம்" (சிவரக. காயத்திரி. 12). தகைமை சான்ற தலைவர் (இக். வ.). 2. பெருமை (பிங்.); greatness, excellence. 3. பண்பு (பிங்.); nature, quality, character. 4. மதிப்பு; esteem, worth. "கல்லா வொருவன் றகைமை" (குறள், 405). 5. அழகு (பிங்.); beauty, loveliness. "ஆடுவா டகைமையின்" (பரிபா. 21: 20). 6. ஒழுக்கம்; conduct, behaviour. "தன்குணங் குன்றாத் தகைமையும்" (திரிகடு. 2). 7. ஒழுங்கு; manner, order, method. அத்தகைமைபோல (உ.வ.). 8. நிகழ்ச்சி; fact, event. "உற்றவித் தகைமை முன்னே யுணரும்" (திருவாத. மண்: 14).

க. தக்குமெ

*[தகு → தகை → தகைமை.]*

**தகைமைப்பாடு** *tagaimai-p-pāḍu*, பெ.(n.) பெருமை; excellence.

*[தகைமை + பாடு. பாடு = சொல்லாக்க வீறு. ஒ.நோ. வகைமைப்பாடு. நிலைமைப் பாடு]*

**தகையணங்குறுத்தல்** *tagai-y-aṇaṅguṟuttal*, பெ. (n.) தலைவியின் அழகு, தலைவனுக்கு வருத்தமுறுத்தலைக் கூறும் அகத்துறை (குறள், 109, அதி.); theme describing a lover's distraction caused by the beauty of his lady-love.

*[தகை + அணங்குறுத்தல்]*

**தகையல்** *tagaiyal*, பெ. (n.) தடை; obstacle; restraint. "தகைஇய சென்றவென் நிலையில் நெஞ்சம்" (அகநா. 330: 80).

*[தகை → தகையல்.]*

**தகையிழைப்பு** *tagai-y-iḻaippu*, பெ. (n.) ஈளைநோய்; bronchial asthma.

*[தகை + இழைப்பு/]*

**தகையுமிழைப்பும்** *tagaiyum-iḻaippum*, பெ. (n.) தகையிழைப்பு பார்க்க; see *tagai-y-iḻaippu*.

*[தகையும் + இழைப்பும் = இடையரவு படாதேற்படும் ஈளைநோய்]*

**தகைவிலாங்குருவி** *tagai-vilāṅ-guruvi*, பெ. (n.) தரையில் தங்காமல் பெரும்பாலும் பறந்து கொண்டேயிருக்கும் குருவிவகை; swift, Cypselinae.

மறுவ. தரையில்லாக் குருவி; அடைக்கலாங் குருவி

*[தரை → தகை + இலான் + குருவி]*



**தகைவு** *tagaivu*, பெ. (n.) 1. தடை (யாழ். அக.); restraint. 2. களைப்பு, இளைப்பு; fatigue, emaciation weariness. 3. அழுத்தம்; stress.

*[தகை → தகைவு.]*

**தகோதரம்** *tagōdaram*, பெ. (n.) நீர் சேர்ந்த வயிறு; accumulation of fluid in the abdomen (சா.அக.).

*[தக + Skt. உதரம் → தகோதரம்.]*

இது வடமொழியில் குணசந்தி என்று கூறப்படும்.

**தகோன்மத்தம்** *tagōṉ-mattam*, பெ. (n.) தகனக் கிறுக்கு; derangement of mind.

மறுவ. தகனப்பைத்தியம்

*[தக → உன்மத்தம்]*

**தங்கக்கட்டி** *taṅga-k-kaṭṭi*, பெ.(n.) 1. சொக்கத் தங்கம், செம்பு கலவாத தங்கம் (24 மாற்றுத் தங்கம்); pure gold, not mixed with copper. 2. மிக நல்லவ −ன் −ள் (உ.வ.); excellent person. அவன் குறையே சொல்லமுடியாத தங்கக்கட்டி (உ.வ.).

மறுவ. சொக்கத்தங்கம்

*[தங்கம் + கட்டி.]*

**தங்கக்கம்பி**[1] *taṅga-k-kambi*, பெ.(n.) 1. பொற் கம்பி; gold-wire. 2. தங்கக்கட்டி பார்க்க; see *taṅga-k-kaṭṭi*.

*[தங்கம் + கம்பி.]*

**தங்கக்கம்பி**[2] *taṅga-k-kambi*, பெ.(n.) 1. வணக்க வொடுக்க முள்ளவன் (உ. வ.); docile person. 2. நல்ல குணமுடையவ−ன்−ள்; person of amiable character. "தம்பிமேலே சங்கையு மன்புள்ளவன் தங்கக்கம்பி" (பெண்மதிமாலை, பக். 6). தம்பி குணத்திலே தங்கக்கம்பி (பழ.).

*[தங்கம் + கம்பி = தங்கக்கம்பி. பொன் வண்ணத்தால் ஒளிர்வது போன்று, நல்ல எண்ணத்தால், சீர்சால் குணத்தால் மிளிருந்தன்மையுடையவர் தங்கக்கம்பி எனும்பெயர் பெற்றவராயினர்]*

**தங்கக்கலசம்** *taṅga-k-kalašam*, பெ.(n.) கோபுரம், உண்ணாழிகை முதலியவற்றின் உச்சியிலமைக்கும் தங்கப்பூச்சுக் கொண்ட கும்பம்; gilded pot set ornamentally on the top of a temple tower, etc. (செ.அக.).

*[தங்கம் + கலசம்]*

ஐம்பொன்னால் வடிவமைத்து, தங்கப்பூச்சு செய்து வைக்கும் கோபுரக்கலசத்திலுள்ள முழுத்தங்கம் களவாடப்பட்டமையால் வந்த வழக்கமென் றறிக.

**தங்கக்காசு** *taṅga-k-kāšu*, பெ.(n.) 8 மாற்று பொன்நாணயம்; 8ct. gold coin, it is mixed with copper (சா.அக.).

மறுவ. பொற்காசு

*[தங்கம் + காசு]*

**தங்கக்காறு** *taṅga-k-kāṟu*, பெ. (n.) தங்க வார்ப்புக்கட்டி, தங்கக்கொழு (இ.வ.); gold in bars, ingot.

மறுவ. பொற்கட்டி, தங்கக் கட்டி

*[தங்கம் + காறு]*

**தங்கக்கிருட்டிணம்** *taṅga-k-kiruṭṭiṇam*, பெ. (n.) யானைத்திப்பிலி; elephant pepper- Pathos officinalis (சா.அக.).

**தங்கக்குகை** *taṅga-k-kugai*, பெ. (n.) பொன்னுருக்கும் மூசை; crucible intended for melting gold (சா.அக.).

*[தங்கம் + குகை]*

**தங்கக்குடம்** *taṅga-k-kuḍam*, பெ.(n.) 1. மிக நல்லவ−ன்−ள் (உ.வ.); most excellent person. 2. அனைவராலும் விரும்பப் படுகை; a term of endearment. 3. பொற்குடம்; gold pot.

மறுவ. தங்கக்கட்டி, தங்கக்கம்பி

*[தங்கம் + குடம்; எல்லோராலும் விரும்பப்படும் தங்கக்குடம் போல், நிறைவான பண்புகளால் அனைவரும் போற்றுந் தன்மையனாதல்; தங்கம் நிறத்தால் தகதகவென மிளிர்தல்போல், உயர்ந்த பண்பால், மிளிரும் மாந்தர். ஈங்கு விலைமதிப்பற்ற நற்பண்பு, மதிப்புறு பொன்னிற்கு, ஒப்புமையாக்கப்பட்டது]*

**தங்கக்குணம்**[1] *taṅga-k-kuṇam*, பெ. (n.) சிறந்த குணம், ஒப்புமையற்ற பண்பு (உ.வ.); excellent character or nature.

மறுவ. நற்குணம், உயர்குணம்.

*[தங்கம் + குணம் - தங்கக்குணம். மன்பதை மாந்தர்களால் விரும்பப்படும் ஒப்புமையற்ற, சீர்சால் உயர்பண்பு]*

**தங்கக்குணம்**[2] *taṅga-k-kuṇam*, பெ. (n.) நாகமலை; mountain containg zinc ores (சா.அக.)

**தங்ககேசரம்** *taṅga-kēšaram*, பெ. (n.) பின்னை; common poon - Calophyllum inophyllum (சா.அக.).

**தங்கச்சத்துமூலி** *taṅga-c-cattumūli*, பெ. (n.) சிவனார் வேம்பு, குப்பைமேனி, கற்றாமரை, பொன்னூமத்தை, பொன்னாங்காணி;

Siva's neem, Acalpha indica Nelumbium speciosum. Dhatura Fastuosa and Alternanthera sessile alia's illecebrum sessile (சா.அக.).

[தங்கச்சத்து + மூலி]

**தங்கச்சத்துரு** *taṅga-c-catturu,* பெ.(n.) பொன்னுக்குப் பகைச் சரக்குகள்; அவையாவன; chemical drugs of gold viz.

| | |
|---|---|
| 1. நாகம் | zinc |
| 2. துருசு | copper sulphate |
| 3. இலிங்கம் | cinnabar |
| 4. வெடியுப்பு | potassium nitrate |
| 5. வெள்ளைநஞ்சு | white arsenic |
| 6. இதளியம் (சூதம்) | mercury |
| 7. கெந்தி | sulphur |

[தங்கம் + சத்துரு]

**தங்கச்சம்பா** *taṅga-c-cambā,* பெ. (n.) சம்பாநெல் வகை; a species of campā paddy. "தைப்பிறந்தா வழிபிறக்கும் தங்கமே தங்கம் தங்கச் சம்பாநெல் விளையுந் தங்கமே தங்கம்" (பட்டுக்கோட்டையார் பாடல்).

மறுவ. பொன்னி

[தங்கம் + சம்பா. பொன்னிற நெல் எனும் இன்றைய வழக்காறே, பொன்னி ஆயிற்று]

**தங்கச்சலாகை** *taṅga-c-calāgai,* பெ. (n.) தங்க ஊசி; probe made of gold (சா.அக.).

[தங்கம் + சலாகை]

**தங்கச்சாயல்** *taṅga-c-cāyal,* பெ. (n.) 1. மினுமினுப்பு; good lustre. 2. பொன்மேனி; body shining like gold (சா.அக.).

**தங்கச்சி**[1] *taṅgacci,* பெ. (n.) தங்கை (உவ.) பார்க்க; see *taṅgai.*

[தங்கை + அச்சி. 'அச்சி' பெண்பாலீறு]

**தங்கச்சி**[2] *taṅgacci,* பெ. (n.) குவளை மலர்; water-lily - Pontederia (சா.அக.).

**தங்கச்சிந்தூரம்** *taṅga-c-cindūram,* பெ. (n.) பொன்னாற் செய்த மருந்து வகை; a red medicinal powder made of gold (செ.அக.).

[தங்கம் + செந்தூரம் → சிந்தூரம்]

**தங்கசாலை** *taṅga-šālai,* பெ.(n.) 1. காசு அச்சிடும் இடம்; mint, place where money is coined. 2. சென்னையிலுள்ள மிக நீண்ட தெருக்களில் ஒன்று; one of the longest streets in Chennai.

மறுவ. அக்கசாலை

[தங்கம் + சாலை]

**தங்கச்சுண்ணம்** *taṅga-c-cuṇṇam,* பெ.(n.) தமிழ் மருத்துவத்தில் கூறியுள்ள பொன்னைக் கொண்டு, புடமிட்டு அணியமாக்கும் ஒரு சுண்ணமருந்து; a calcium compound of gold prepared with gold as chief ingredient according to the process contemplated in Tamil Siddha medicine.

[தங்கம் + சுண்ணம் = தங்கச்சுண்ணம். அணிகலன்களைச் செய்வதற்காகப் பொன்னைப் புடமிடப் பயன்படுத்தும் மருந்துக்கலவை]

**தங்கச்செந்தூரி** *taṅga-c-cendūri,* பெ.(n.) பொன்னைச் செந்தூரமாக்கும் மருந்து அல்லது மூலிகை; any drug or medicine capable of turning or reducing gold into a red oxide (சா.அக.).

[தங்கம் + (சிந்தூரி →) செந்தூரி]

**தங்கச்செம்பி** *taṅga-c-cembi,* பெ.(n.) தங்கம் செம்பாக்கி பார்க்க; see *taṅgam-šembākki* (சா.அக.).

[தங்கம் + செம்பி]

**தங்கச்செம்பு** *taṅga-c-cembu,* பெ. (n.) தூய்மைப்படுத்திய செம்புநிறமுள்ள பொன் (சா.அக.); a refined gold, mixed with copper.

[தங்கம் + செம்பு]

**தங்கஞ்சலமாக்கி** *taṅgañ-jalam-ākki,* பெ.(n.) தங்கக்கழிச்சல் (சுவர்ணபேதி) (யாழ். அக.); Aqua regia.

[தங்கம் + சலம் + (ஆக்கு →) ஆக்கி]

**தங்கணர்** *taṅgaṇar,* பெ.(n.) தங்கண நாட்டார்; people of the country of Taṅgaṇar. "பல்லவருந் தங்கணரும்" (பாரதவெண். 773).

**தங்கத்தகடு** *tanga-t-tagaḍu,* பெ.(n.) 1. பொன் தகடு; gold plate. 2. தங்க மெருகிட்ட தகடு; gold foil (சா.அக.).

மறுவ. பொற்றகடு

*[தங்கம் + தகடு]*

**தங்கத்தி** *taṅgatti,* பெ.(n.) குங்கும வைப்பு நஞ்சு (மூ. அ.): a prepared arsenic.

**தங்கத்திருமேனி** *taṅga-t-tirumēṉi,* பெ. (n.) தங்கமேனி; gold coloured body (சா.அக.).

*[தங்கம் + திருமேனி]*

**தங்கத்தைவெண்ணெயாக்கி** *taṅgattai-veṇṇai-y-ākki,* பெ. (n.) கங்குளா என்னும் மருந்து; drug kaṅgula capable of reducing mercury into a colloid (சா.அக.).

**தங்கநிமிளை** *taṅga-nimiḷai,* பெ. (n.) பொன்னிமிளை; yellow bismuth (சா.அக.).

*[தங்கம் + நிமிளை]*

**தங்கநீர்** *taṅga-nīr,* பெ.(n.) பொன்னிறம் போன்ற சிறுநீர்; high coloured urine. 2. பொன்கரைந்த நீர்; a mineral water containing gold in solution (சா.அக.).

*[தங்கம் + நீர் - தங்கநீர்; மஞ்சள் வண்ணத்திலுள்ள சிறுநீர்]*

**தங்கநீற்றி** *taṅga-nīṟṟi,* பெ. (n.) பொன்னைத் தூளாக்கும் பொன்னிமிளை; gold bismuth capable of reducing gold into an oxide (சா.அக.).

*[தங்கம் + நீற்றி.]*

**தங்கப்பட்டை** *taṅga-p-paṭṭai,* பெ.(n.) சேணங்கட்டுங்கச்சு (யாழ். அக.): strap for the saddle.

*[தங்கு + பட்டை - தங்குபட்டை → தங்கப்பட்டை]*

**தங்கப்பாப்பா** *taṅga-p-pāppā,* பெ. (n.) விலை மதிப்புள்ள மீன் வகையு ளொன்று; a kind of valuable fish.

*[தங்கம் + பாப்பா]*

**தங்கப்பாரை** *taṅga-p-pārai,* பெ.(n.) 1. எட்டு விரலம் நீளமும், பசிய நீலநிறமுள்ள கன்னப்பாரைமீன்; horse mackerel, bluish - green, attaining 8 in. in length, Caranx kalla. 2. 20 விரலம் நீளம் வளரும் கன்னப்பாரை மீன்வகை; horse mackerel bluish green, attaining 20 in. in length, Caranx armatus (செ.அக.).

*[தங்கம் + பாரை]*



**தங்கப்பாளம்** *taṅga-p-pāḷam,* பெ. (n.) தங்கக் கட்டி; ingot of gold (சா.அக.).

மறுவ. பொற்கட்டி

*[தங்கம் + பாளம்]*

**தங்கப்பாறை** *taṅga-p-pāṟai,* பெ.(n.) தங்கப்பாரை பார்க்க; see *taṅga-p-pārai.*

*[தங்கம் + பாறை]*

**தங்கப்புகைகாட்டு-தல்** *taṅga-p-pugai-kāṭṭu-* 5 செ.குன்றாவி. (v.t.) தங்கப்பூச்சு (தங்க முலாம்)ப் பூசுதல் (வின்.); to gild.

*[தங்கம் + புகை + காட்டு-,]*

**தங்கப்புடம்** *taṅga-p-puḍam,* பெ. (n.) தங்கத்தைத் தூய்மைப்படுத்தும் கலம்; the gold refining vessel. தங்கம் புடத்தில் வைத்தாலும் தன்னிறம் போகாது (உவ.).

*[தங்கம் + புடம்]*

**தங்கப்புரை** *taṅga-p-purai,* பெ. (n.) பொன் பூச்சு (முலாம்); gold or gilt electro plated gold (சா.அக.).

*[தங்கம் + புரை]*

**தங்கப்பூச்சு** *taṅga-p-pūccu,* பெ. (n.) பொன் பூச்சு (உவ.); gilding, gilt.

*[தங்கம் + பூச்சு]*

**தங்கப்பூவராகன்** *taṅgappū-varāgaṉ*, பெ.(n.) பொற்காசு வகை *(யாழ். அக.);* a kind of gold coin.

*[தங்கம் + பூ + வராகன்]*

**தங்கபற்பம்**[1] *taṅga-paṟpam*, பெ. (n.) *1.* **தங்கத்தை நீற்றிய பொடி;** calcinated powder of gold. *2.* **தங்கத்தைச் சித்த மருத்துவ முறையில் புடமிட்டு எடுத்த நீற்றுமானப் பொருள்;** calcined gold oxide prepared as per process of Siddha medicine *(சா.அக.).*

**மறுவ.** தங்கத்தூள், பொன்துகள்

*[தங்கம் + பற்பம்]*

**தங்கபற்பம்**[2] *taṅga-paṟpam*, பெ. (n.) தங்கத்தகடு ½ வராகனிடை தூய்மை செய்த சிற்றண்டவோடு; purified gold-leaf *(சா.அக.).*

*[தங்கம் + பற்பம்]*

**தங்கபற்பி** *taṅga-paṟpi*, பெ. (n.) **பொன்னைத் தூளாக்கும் மூலிகை அல்லது மருந்துகள்;** drugs or medicines capable of converting gold into oxide *(சா.அக.).*

*[தங்கம் + (பற்பம் →) பற்பி]*

**தங்கம்** *taṅgam*, பெ.(n.) *1.* **அடர்த்தி மிகு மஞ்சள் நிற மூலகம், மாழை; இதன் குறியீடு** Au. **அணுவெண்** 70; heavy yellow element, metal symbol Au. atomic No.79. *2.* **பசும்பொன்;** pure gold. "தங்கத்தானை..... அரங்கனை" *(அஷ்டப்: திருவரங்கத்தந். 11).* *3.* **சிறந்தது;** that which is precious of great worth. அவள் தங்கமான பெண் *(உ.வ.).* தங்கமுடி சூட்டினாலும் தங்கள் குணம்விடார் கயவர் *(பழ.).* *4.* **அன்பின் மிகுதியால் விளிக்கப்படும் சொல்;** a word of endearment. காதலியைத் தங்கமே என்றழைத்தார் *(உ.வ.).*

**மறுவ.** பொன்

ம. தங்கம்

*[தக → தகம் = எரிவு, சூடு. தகம் → தங்கம் = விளங்கும் பொன். தங்கம் என்னுஞ் சொல்லிற்கான வேர் விளங்குதற் கருத்தினின்று கிளைத்தது. விளங்கும் பொருள் எரியுந்தன்மைத்து. அதனாற்றான் வள்ளுவப் பெருந்தகையும் "சுடச்சுடரும் பொன்போல்" (குறள், 267) என்றார்.]*

தழ → தக. ஒ.நோ. மழ → மக. தங்கம் தகதகவென்று சொலிக்கிறது என்பது உலகவழக்காகும் *(வ.வ. 2).*

விளங்குதற் கருத்தினின்று எரிதற்கருத்தும், எரிதற்கருத்தினின்று சொலித்தற் கருத்தும், சொலித்தற் கருத்தினின்று தகதகக்கும், தங்க மெனுஞ் சொல் கிளைத்தது. ஒருகால், எஞ்ஞான்றும் ஒளி தங்குவதால், தங்கமென்று பெயர் பெற்றிருக்கலாம்.

'தங்கம் தகவென்று சொலிக்கும், பித்தளை பல்லை இளிக்கும்" என்னும் கல்லாதார் நாவில் வழங்கும் நல்ல தமிழ்வழக்கு, தேவநேயர்தம் வேர்ச்சொல்லாய்விற்கு, வலுவூட்டுகின்ற தெனலாம். ஒருகா (தங்கு + அம் → தங்கம். மண்ணில் தங்கி இருப்பது.

**தங்கம்செம்பாக்கி** *taṅgamsembākki*, பெ. (n.) **பொன்னைச் செம்புநிறம்போல் சிவப்பாக்கும், செங்கத்தரிப் பூச்சாறு;** flowers capable of turning the yellow colour of gold into red *(சா.அக.).*

*[தங்கம் + செம்பு + ஆக்கு → ஆக்கி]*

**தங்கம்வெள்ளை** *taṅgam-veḷḷai*, பெ. (n.) சென்னையில் அரை உருபாவைக் குறிக்க வழங்கும் குழூஉக்குறி (E.T. ii, 96): slang for half a rupee, in use among shroffs in Chennai.

*[தங்கம் + வெள்ளை. தங்கான் → தங்கன் → தங்கம். வெள்ளி → வெள்ளை]*

**தங்கமலை** *taṅga-malai*, பெ. (n.) மாமேருமலை; mountain Māmēru.

*[தங்கம் + மலை.]*

**தங்கமழுத்து-தல்** *taṅgam-aḻuttu-*, 4 செ.குன்றாவி. (v.i.) **பொன்னை இழைத்து மிளிரச் செய்தல்;** to polish gold.

*[தங்கம் + அழுத்து-.]*

**தங்கமாவாரை** *taṅgamāvārai*, பெ.(n.) பொன்னாவாரை; tanner's bark; plant yielding yellow flowers - Cassia auriculata *(சா.அக.).*

**தங்கமான** *taṅgam-āṉa*, கு.பெ.எ. (adj.) **எவ்விதக் குறையுமற்ற, மாசுமறுவற்ற;** having a heart of gold. ஆசிரியருக்குத் தங்கமான மனசு *(உ.வ.).*

*[தங்கம் + ஆன]*

**தங்கமானிசியம்** *taṅgamāṉiśiyam,* பெ. (n.) கரும்பு; sugar-cane (சா.அக.).

**தங்கமிடு-தல்** *taṅgam-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) மணிகள் பதியுமாறு, தங்கத்தில் குயிற்றுதல் (நாஞ்.); to chisel gold for insetting gems.

*[தங்கம் + இடு-.]*

**தங்கமித்துரு** *taṅgamitturu,* பெ. (n.) பொன்னுக்கு எதிரான சரக்குகள் நீங்கலாக உடன்பாட்டான சரக்குகள்; all other drugs except those that are enemical to gold are its friendly drugs (சா.அக.).

*[தங்கம் + Skt. மித்துரு]*

**தங்கமிருதியாதி** *taṅgamirudiyādi,* பெ. (n.) 1. பொன்செந்தூரம்; red oxide of gold. 2. தங்கபற்பம்; per oxide of gold (சா.அக.).

**தங்கமீன்** *taṅga-mīṉ,* பெ.(n.) தங்கநிறத்திலுள்ள மீன்; gold-coloured fish.

*[தங்கம் + மீன்]*

**தங்கமுலாம்** *taṅga-mulām,* பெ. (n.) தங்கப்பூச்சு பார்க்க; see *taṅga-p-pūccu.*

*[தங்கம் + முலாம்]*

**தங்கமூலிகை** *taṅga-mūligai,* பெ. (n.) தங்கச்சார மூலி; Siva's neem.

மறுவ. சிவனார் வேம்பு

*[தங்கம் + மூலிகை]*

**தங்கமேனி** *taṅga-mēṉi,* பெ. (n.) பொன் மயமான உடம்பு; gold-coloured body (சா.அக.).

*[தங்கம் + மேனி.]*

**தங்கமோறா** *taṅgamōṟā,* பெ. (n.) முகமதியர் காலத்தில் புழக்கத்திலிருந்த பொற்காசு; gold Mohara's prevailed during Mughal period.

*[தங்கம் + மோறா.]*

**தங்கரசக்கலவை** *taṅgaraśa-k-kalavi,* பெ.(n.) பொன்னும், இதளியமும் சேர்ந்த ஒருவகை வேதியியற் கலப்பு; a chemical compound of gold and mercury (சா.அக.).

*[தங்கரசம் + கலவை]*

**தங்கரசிதக்களங்கு** *taṅga-raśida-k-kaḷaṅgu,* பெ. (n.) பொன், வெள்ளி இவைகளினின்று கொங்கணவர் முறைப்படி அணியமாக்கும் ஓர் அரியமருந்து; a rare preparation made according to the process laid down in Koṅgaṇava's work on Alchemy with gold and silver as it chief ingredients (சா.அக.).

*[தங்கரசிதம் + களங்கு]*

**தங்கரவிப்பொடி** *taṅgaravi-p-poḍi,* பெ. (n.) பொன்னறுத்த பொடி; gold filings, gold dust (சா.அக.).

*[தங்கரவி + பொடி]*

**தங்கரளி** *taṅgaraḷi,* பெ. (n.) நாகசெண்பகம்; common yellow trumpet flowered tree (செ.அக.).

மறுவ. பொன்னரளி, மஞ்சளரளி

*[தங்கம் + அரளி = தங்கரளி; பொன் வண்ணப் பூ பூக்கும் அரளி]*

**தங்கராசிகம்** *taṅgarāśigam,* பெ. (n.) மஞ்சள் அந்தி மல்லிகை; 4 'o' clock plant with yellow flowers - Mirabilis jalappa (சா.அக.).

**தங்கரி-த்தல்** *taṅgari-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. காப்பாக வைத்தல்; to keep in safe custody. 2. சேமித்தல்; to make a saving (செ.அக.).

ம. தங்கரிக்கா

*[தங்கம் + அரி. தங்கம் = விலைமதிப்பு மிக்க அரியமாழை. அரி = ஒன்றுசேர், சேர்த்துவை.]*

**தங்கரியம்** *taṅgariyam,* பெ. (n.) 1. காப்பு; safety, safe custody. 2. சேர்த்தபொருள்; savings (செ.அக.).

*[தங்கம் + அரியம். அரியம் = அரிதாகக் கிடைத்தவற்றைத் திரட்டி வைத்தல்]*

**தங்கரேக்கு** *taṅga-rēkku,* பெ. (n.) தங்கத் தாலியன்ற, மிகு நுண்மென் தகடு; gold leaf. "தங்கரேக்காற் சமைத்திட்ட" (தனிப்பா. i:378: 21).

*[தங்கம் + ரேக்கு]*

**தங்கல்**[1] *taṅgal,* பெ. (n.) 1. பயணத்தை இடையில் நிறுத்துதல்; stopping, halting, நேற்றிரவு எங்கே தங்கல்? 2. காலக்கடத்தம்

delay, procrastination. *3. தங்குமிடம்;* halting place, rest-house. "தலையே தவமுயன்று வாழ்தல், ஒருவர்க்கிடையே இனியார்கட் தங்கல்" *(நாலடி. 365).* *4. கெடி;* stage in a journey. *5. நிலை பெறுகை (பொருந. 173: உரை);* persistence, stability. *6. அடியிற் படிந்திருப்பது* (இ.வ.); precipitate; sediment. *7. சல்லடையில் கீழ்ச்சென்றது போக எஞ்சி நிற்பவை;* residual material in a sieve.

ம. தங்கல்.

*[தங்கு → தங்கல். ஒ.நோ. மங்கு → மங்கல், பொங்கு → பொங்கல். திருத்தங்கல்]*

**தங்கல்**[2] *taṅgal,* பெ. (n.) *மீன்பிடி கருவி;* fishing rod; fishing tackle.

மறுவ. தூண்டிற்கோல்

*[தங்கு → தங்கல். மீன்களைத் தங்கச் செய்யும் அமைப்புடைய தூண்டிற்கோல்]*

**தங்கலர்** *taṅgalar,* பெ.(n.) *1. பகைவர்;* enemies. "தங்கலரொன்னு மச்சூர்க்குலம் வீட்டி" *(திருப்போ. சந். குறுங்கழி. (8) 8).* *2. தங்கார்;* person not staying. "நந்தன் வெறுக்கை யெய்தினும் மற்றவண் தங்கலர்" *(அகநா. 251-6).*

*[தங்கு + அலர்]*

**தங்கலரி** *taṅgalari,* பெ.(n.) *1. ஈழத்தலரி;* pagoda tree. *2. பொன்னலரி;* exile oleander. *(செ.அக.).*

மறுவ. மஞ்சளலரி

*[தங்கம் + அலரி]*

**தங்கலான்** *taṅgalāṉ,* பெ.(n.) *தங்களான்* (E.T. vii, 12) *பார்க்க;* see *taṅgaḷāṉ.*

*[தங்கல் + ஆன்]*

**தங்கலுக்குப்போ-தல்** *taṅgalukku-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) *கடலில் மூன்று நாள் தங்கியிருந்து, கோலாமீன் வலைத்தற் பொருட்டுச் செல்லுதல்;* to proceed to catch kōlā-fish by staying there (at sea), for three days.

மறுவ. தங்குகடற் செல்லுதல்

*[தங்கல் + கு + போ-.]*

**தங்கவராகன்** *taṅga-varāgaṉ,* பெ. (n.) *பகோடா பெயரில் வழங்கிய, 3½ உருபா பெறுமான, வராகன் என்னும் பொன்னாணயம்;* pagōḍa as varāgaṉ 3 ½ including a gold coin.

*[தங்கம் + (வராகம் →) வராகன். வராகம் = பன்றி. பன்றியுருவம் பொறித்த காசு தங்கவராகனாகும். உருபாயும், வராகனும் புழக்கத்திலிருந்த காலத்தில், வராகனின் மதிப்பு 3½ உருபாவாகும். அதே காலத்தில், வராகனுக்குச் சமமாகப் புழக்கத்திலிருந்த நாணயம் 'பகோடா' என்றழைக்கப்பட்டது.]*

**தங்கவாழைப்பூ** *taṅga-vāḻai-p-pū,* பெ. (n.) *புடைவை வகை* (இ.வ.); a kind of saree.

*[தங்கம் + வாழை + பூ. ஒருகா. சேலையின் கரையில் பொன்னிற இழைகளால் வாழைப்பூ வடிவம் அமைக்கப்பட்டமை கருதி இவ்வாறு அழைக்கப்பட்டிருக்கலாம்.]*

**தங்கள்**[1] *taṅgaḷ,* ப.பெ. (pron.) *1. உங்களுடைய;* yours. *2. படர்க்கை ஈறு;* third person suffix. "தன்னிகரிலாத வென்றித் தம்பியும் தாயர் தங்கள் பொன்னடித் தலத்தில் வீழ" *(கம்பரா. மீட்சிப் 344).* *3. படர்க்கைப் பன்மை, மதிப்புறுநிலையில் முன்னிலைப் பன்மையாய் வரும்சொல்;* third person plural used as second person honorific plural. *4. கடிதத்திற் கையெழுத்திடுவதற்கு முன் எழுதப்பெறும் ஒருவழக்குமொழி;* epistolary formula preceding signature. "தங்கள் செங்குட்டுவன்"

*[தாம் + கள் → தாங்கள் → தங்கள்]*

தாங்கள் என்பதன் உருபேற்ற வடிவம்: தாம் என்பதே படர்க்கைப் பன்மை. இதனுடன் பன்மை விகுதிகள் சேர்த்து, தாங்கள் என்று குறிப்பது இரட்டைப் பன்மை; தாம் என்பது உருபேற்குங்கால் தம்மை யென்றாகும்; தாங்கள் உருபேற்கும்போது, தங்கள் என்றாகும்.

**தங்கள்**[2] *taṅgaḷ,* பெ. (n.) *மசுமதியக் குருக்கள்* (இ.வ.); head-priest of a mosque.

**தங்கள்**[3] *taṅgaḷ,* பெ. (n.) *உருபேற்கும்போது திரியும் 'தாங்கள்' வடிவம்;* the form of the

second person and third person honorific pronoun.

*[தாங்கள் → தங்கள்]*

**தங்களரி** *taṅgaḷari*, பெ. (n.) தங்கலரி பார்க்க; see *taṅgalari* (சா.அக.).

*[தங்கம் + அளரி.]*

**தங்களான்** *taṅgaḷāṉ*, பெ. (n.) மறவருள், ஒரு பிரிவினர்க்குரிய பட்டப்பெயர் (இ.வ.); title of a marava subsect.

*[தங்கல் → தங்கள் + ஆன்]*

**தங்கார்** *taṅgār*, பெ. (n.) இராப்பொழுது எங்கும் இளைப்பாராதவர்; person not staying anywhere outside. "புண்வார் குருதியார் கைபிசைந்து மெய்திமிறித் தங்கார் பொதுவர்" (கலித். 106:23).

*[தங்கு + ஆர் − தங்கார். 'ஆர்' எதிர்மறை ஈறு]*

**தங்காரி** *taṅgāri*, பெ. (n.) மருந்துச் செடி; a medicinal plant - physalis peruviana (சா.அக.).

**தங்காலம்** *taṅgālam*, பெ. (n.) மீன்பாடு மிகக் குறைந்த கும்ப, மீன (மாசி, பங்குனி) மாதங்கள்; கடல்தொழிலாளரின் வறுமைக் காலம்; the poverty period of fishing - people.

**தங்காள்** *taṅgāḷ*, பெ. (n.) 1. தங்கை; younger sister. நல்லத் தங்காள் கதை, சிறந்த நாட்டுப்புற இலக்கியம் 2. அம்மா (யாழ்.); a honorific term, meaning madam.

**தங்கான்** *taṅgāṉ*, பெ. (n.) 1. அரையென்னுங் குழூஉக்குறி; slang for half. "செந்தலை கருந்தலை தங்கான்றிரிக் கால்" (தனிப்பா. 1, 87: 171). 2. கொள்முதல்; cost price. தங்கானுக்குத் தங்கான் கூடக் கிடைக்கவில்லை (இ.வ.).

**தங்கி**[1] *taṅgi*, பெ. (n.) அடிப்படையானது (புதுவை); support, stay.

*[தாங்கி → தங்கி]*

**தங்கி**[2] *taṅgi*, குவி.எ. (adv.) 1. இருந்து; stay. "பன்னாட்டங்கிச் சென்னா ளொருநாள்" (சிலப். 10: 155). 2. ஆய்ந்துணர்ந்து; cognizing. "ஒல்வதறிவ தறிந்ததன் கட்டங்கிச் செல்வார்க்கு" (குறள், 472).

*[தங்கு → தங்கி]*

**தங்கிநின்றமழை** *taṅgi-niṉṟa-maḻai*, பெ. (n.) காலந்தப்பிய மழை (யாழ்ப்.); belated rain.

*[தங்கு → தங்கி + நின்ற + மழை]*

**தங்கு**[1]**-தல்** *taṅgu-*, 5 செகுவி.(v.i.) 1. வைகுதல்; to stay, sojourn, abide, remain. "பண்புடை வேந்தன் கவிகைக் கீழ்த் தங்கு முலகு" (குறள். 389). 2. நிலைபெறுதல்; to be stable, to be firmly established, to be retained in the mind. "தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே" (குறள், 613). 3. உளதாதல்; to exist. "தானந்தவமிரண்டுந் தங்கா வியனுலகம்" (குறள், 19). 4. அடங்குதல்; to be under control; to be obedient. "பண்புடை யாளன் றகைமைக்கட் டங்கிற் றுலகு" (குறள், 874). 5. தணிதல்; to be diminished, abated, quenched, as thirst. "தங்காவேட்கை தனையவள் தணித்த தூஉம்" (மணிமே. 18: 96). 6. காலந்தாழ்த்துதல் (பொருந.177: உரை); to halt; to wait; to delay. 7. தடைப்படுதல் (வின்.); to cease to flow, as the menses; to be obstructed, as water; to be stopped; to be fixed, as substance between the teeth; to adhere. 8. இருப்பாயிருத்தல் (வின்.); to be reserved or kept back; to remain due. 9. அடியிற் படிதல்; to settle at the bottom, as sediment. 10. சார்ந்திருத்தல் (வின்.); to rely, depend; to be dependent. "சொலை முனிந்து பொய்ம்மயக்கஞ் சூதின்கண் தங்கல்" (திரிகடு. 39).

க. தங்கு; ம. தங்νுக

**தங்கு**[2] *taṅgu*, பெ. (n.) தங்குகை (வின்.); staying, stopping.

**தங்குகடல்** *taṅgu-kaḍal*, பெ. (n.) இரண்டொரு இரவோ அல்லது அதற்குமேலுமாகவோ கடற்றொழில் மேற்செல்வார் ஆழ்கடற் பரப்பிலேயே மீன் பிடித்தற்காக கடலிற் தங்குகை; to go and stay on a fishing trip for a few days.

*[தங்கு + கடல்]*

**தங்குகடலுக்குப்போ-தல்** *tańgu-kaḍalukku-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) சிலநாள் வரை கடலில் தங்கியிருந்து மீன்பிடித்தல் (யாழ்ப்.); to go on a fishing trip for a few days.

*[தங்கு + கடல் + கு + போ-.]*

**தங்குடிச்சுற்றம்** *tańguḍi-c-cuṟṟam*, பெ. (n.) தங்குடித்தமர் பார்க்க; see *tańguḍi-t-tamar.*

*[தன்குடி + சுற்றம்]*

**தங்குடித்தமர்** *tańkuḍi-t-tamar*, பெ. (n.) தந்தைவழி (தாயாதி)ச் சுற்றத்தார்; agnates.

*[தம் + குடி + தமர்]*

**தங்குத்தடவல்** *tańgu-t-taḍaval*, பெ. (n.) தங்குதடை (இ.வ.) பார்க்க; see *tańgu-taḍai.*

*[தங்கு + தடவல்]*

**தங்குதடை** *tańgu-taḍai*, பெ. (n.) 1. தடங்கல்; impediment. 2. தடுமாற்றம்; hesitation. அறிஞர் அண்ணா ஆங்கிலத்திலும்., தமிழிலும் தங்கு தடையின்றி உரையாற்றுந் திறன் மிக்கவர் (உ.வ.).

*[தங்கு + தடை]*

**தங்குதண்ணீர்** *tańgu-taṇṇīr*, பெ. (n.) 1. கிணறு முதலியவற்றில் தேங்கியநீர்; standing water, as in hollows, wells, etc. 2. தடை நீங்கியபின் விரைந்துசெல்லும் நீர்; water stagnant for a time and flowing with force, on the removal of the obstruction. 3. காலந்தவறி வயலுக்குப் பாய்ச்சின நீர்; water used in irrigation after lapse of proper time. 4. கூரைத்தண்ணீர்; rain-water dripping from roof, foliage, etc. 5. மரஞ் செடி முதலியவற்றில் தங்கிய மழைத்துளி; rain drops lingering in the leaves. அக்கிணற்றிலிருப்பது தங்குதண்ணீராதலின் குடிநீருக்குதவாது (உ.வ.).

*[தங்கு + தண்ணீர் → தங்குதண்ணீர் = குளம், ஏரி, முதலானவற்றில் நிலையாகத் தேங்கியுள்ள நீர்]*

**தங்குதரி** *tańgu-tari*, பெ. (n.) 1. தங்குதடை (வின்.) பார்க்க; see *tańgu-taḍai.* 2. நிலையான இருப்பிடம் (இ.வ.); permanent habitation.

*[தங்கு + தரி. தங்கி வாழுமிடம். தரி → தரித்தல் = நிலைத்தல்]*

**தங்குதரிப்பு** *tańgu-tarippu*, பெ. (n.) 1. தங்குதடை (இ.வ.) பார்க்க; see *tańgu-taḍai.* 2. அடக்கம்,; control, restraint. தங்குதரிப்பில் லாமற் பேசுகிறான் (இ.வ.).

*[தங்கு + தரிப்பு]*

**தங்குதுறை** *tańgu-tuṟai*, பெ.(n.) கப்பல் தங்கிச் செல்லுந்துறை (யாழ்.); port of call.

*[தங்கு + துறை]*

**தங்குதேர்ப்படு-தல்** *tańgu-tēr-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. தேரிழுப்பில் நிலையை யடையாது ஓரிடத்துத் தங்கும் தேராதல்; lit., to be like a temple-car delayed in running. 2. இடையே காலந்தாழ்த்துதல் (நாஞ்.); to be delayed in the interval.

*[தங்கு + தேர் + படு-. தேரோட்டந் தடைப் படுதல், செயற்பாடு காலந்தாழ்த்துகைக்கு ஒப்பாகக் கூறப்பட்டது, உய்த்துணரத்தக்க வொன்றேயாம். தேர் திருக்கண், தெருக்கள் தோறும் தங்கிச்செல்லுதல் போல், விட்டுவிட்டுச் செய்யும் காலச்சுணக்கமான செயற்பாடு.]*

**தங்குதோணிக்குப்போ-தல்** *tańgu-tōṇikku-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) தங்குகடலுக்குப்போ-தல் (யாழ்ப்.) பார்க்க; see *tańgu-kaḍalukku-p-pō-.*

*[தங்கு + தோணிக்கு + போ-.]*

**தங்குநடை** *tańgu-naḍai*, பெ. (n.) தங்கித்தங்கிச் செல்லும் பயணம்; journey by stages. தங்கு நடையா அஞ்சல் நடையா (இ.வ.).

*[தங்கு + நடை = தங்குநடை; இளைப்பாறிச் செல்லும் நடை]*

**தங்குபடி** *tańgu-paḍi*, பெ. (n.) எச்சமிச்சம்; மீதிக்கழிவு; remnant, as of unsold goods. சரக்குத் தங்குபடி யில்லாமற் செலவாகி விட்டது (நாஞ்.)

*[தங்குபடி = விற்கப்பெறாத அனைத்துப் பொருளும் விற்றுத்தீர்தல், தங்குபடியின்றிச் செலவாதலாகும்.]*

**தங்குபிண்டம்** *tańgu-piṇḍam*, பெ. (n.) மாதவிலக்கு வெளிப்படுங்கால் தேய்ந்து தங்கியிருக்கும் கருவுரு (சீவரட். 206); embryo

shrunk in size owing to menstrual discharge during the period of gestation.

*[தங்கு + பிண்டம்.]*

**தங்குபொழுது** *tan̈gu-poḻudu*, பெ. (n.) மாலைப் பொழுது; evening.

*[தங்கு + பொழுது = பறவை விலங்கு முதலானவை தமதிருப்பிடம் நோக்கித் தங்குவதற்காகச் செல்லும், அந்திமாலைப் பொழுது.]*

**தங்குமூச்சு** *tan̈gu-mūccu*, பெ. (n.) இறப்புக் காலத்தில் நின்று நின்று வரும், மூச்சுக்காற்று (இ.வ.); last gasps of a dying person. தங்கித்தங்கி வெளிப்படும் மூச்சு திசைமாறிப் போனாலும் போச்சு *(பழ.)*.

*[தங்கு + மூச்சு : இறக்குந் தருவாயிற் சிறிது சிறிதாக, மூச்சுக்குழலிற் தங்கித் திணறி வெளிப்படும் மூச்சு]*

**தங்குலம்வெட்டி** *tan̈-gulam-veṭṭi*, பெ.(n.) தன்குலத்தையே அழிப்பவ-ன்-ள் (யாழ்ப்.); person who ruins his own family.

*[தன் + குலம் + வெட்டி]*

**தங்குவலை** *tan̈gu-valai*, பெ. (n.) கடலிற் குறிப்பிட்ட சிறிதுநேரம் மட்டும் விரித்து வைத்திருக்கும் வலை வகை (யாழ்ப்.); fishing net cast into the sea and left there for some hours.

மறுவ. கோலாவலை

*[தங்கு + வலை]*

**தங்குவேட்டை** *tan̈gu-vēṭṭai*, பெ. (n.) நெடுந்தொலைவு வேட்டைக்குச் செல்பவர்கள் நடுவில், சிலகாலம் தங்கி, வேட்டையாடித் தொடருதல்; a temporary halt and hunting in a long jouney for hunt.

*[தங்கு + வேட்டை.]*

**தங்கூசு** *tan̈gūsu*, பெ.(n.) தூண்டிலிற் கட்டுங் கயிறு (இ.வ.); string tied to fishing tackle.

**தங்கை**[1] *tan̈gai*, பெ. (n.) 1. தன்பின் பிறந்த பெண் மகள்; younger sister. "தங்கையை மூக்குந் தமையனைத் தலையுந் தடிந்த" *(திவ். பெரியாழ். 4.7:1)*. 2. தங்கை முறையாள்; a female standing in the relationship of a younger sister to a person, as daughter of a paternal uncle or a maternal aunt. "கலைவாணித் தங்கைபுயம் புகழ்ந்து வாழ்த்த" *(திருப்போ. சந். ஊசல். 6)*. 3. குடியிற் பிறந்த பெண்; daughter of a clan, "வல்விற் கானவர்,தங்கை" *(குறுந்-335)*. "நுளரெறி நுண்டுகட் கணைஞர் தங்கை" (குறுந். 392). "கொலைவில் எயினர் தங்கை" *(ஐங்குறு.363)*. 4. இளையாள்; junior co-wife.

மறுவ. தங்கைச்சி

க. தங்கி; ம. தங்கா

*[தம் + கை. கை = சிறிய]*

**தங்கை**[2] *tan̈gai*, பெ. (n.) 1. குவளை மலர்; Indian water lily - Pontederia 2. கருங்குவளை; blue nelumbo pontederia - Vaginalis *(சா.அக.)*.

**தங்கைச்சி**[1] *tan̈gaicci*, பெ.(n.) தங்கை பார்க்க; see *tan̈gai*. தங்கைச்சி பிள்ளை, தன்பிள்ளை ஆனால், தவத்துக்குப் போவான் ஏன் (பழ.).

*[தங்கை + அச்சி]*

**தங்கைச்சி**[2] *tan̈gaicci*, பெ. (n.) தங்கை[2] பார்க்க; see *tan̈gai*[2].

**தங்கையைக்கொல்லி** *tan̈gaiyai-k-kolli*, பெ. (n.) சிறியாணங்கை (மலை); small species of milk wort.

சித்தமருத்துவக் கலைச்சொல். சிறியா நங்கை மூலிகைக்கு மறைபொருளாகச் சிறிய நங்கை எனப் பொருள் கொள்ள, 'தங்கை' என்னும் சொல்லைப் பயன்படுத்தினர் என்றறிக.

**தச்சக்காணி** *tacca-k-kāṇi*, பெ. (n.) தச்சர்கட்குரிய காணியாட்சிநிலம்; carpenter's hereditary property. "இவ்வூர்த் தச்சக்காணி செம்பாதியுடைய தச்சன் வடுகனாதன் திருவாய்க்குலமான் தொண்டை நாட்டாசாரியநேன்" *(S.I.I. iii: 1, 35)*.

*[தச்சன் + காணி = தச்சக்காணி, கதிரவனும், நிலவனும் உள்ளமட்டும், ஆண்டாண்டு காலமாகத் தச்சர்கள் பயன் கொள்ளும் பொருட்டு, ஊரவையாரால் ஒதுக்கப்பட்ட நிலம்.]*

**தச்சக்கோல்** *tacca-k-kōl*, பெ. (n.) பண்டைத் தமிழ்நாட்டின் செந்தரப்படுத்தப்பட்ட 33 விரலங்கொண்ட நீட்டலளவு; standardized linear measurement of ancient TamiḻNāḍu, equivalent to 33 inches of FPS units.

மறுவ. தச்சமுழம்.

*[தச்சன் + கோல்.]*

கட்டுமானப் பணிகளில், தமிழ்நாட்டுத் தச்சர்கள் பயன்படுத்திய அளவு, விரல், சாண், முழம் என்ற சொற்களால், பொதுவாக வழங்கப்பட்டுப் பின் நாளடைவில் செந்தரப்படுத்தப்பட்டுள்ளது. திருக்கோயில் கருங்கற் சுவர்களில் குறித்து வைக்கப்பட்ட அளவுகளிலிருந்து, நீளம் துல்லியமாகக் கணக்கிடப்பட்டுள்ளது தெரிகிறது. பூம்புகாரில், வானகிரியில் அகழ்ந்தெடுக்கப் பட்ட மதகின் வாய், ஒரு தச்சக்கோல் நீளம் கொண்டது. ஒரு தச்சுக்கோல் = 33" (விரலம்.)

**தச்சச்சி** *taccacci*, பெ. (n.) தச்சர்குடிப்பெண் (நன். 140, மயிலை); woman of taccar caste.

மறுவ. தச்சிச்சி

*[தச்சன் + அச்சி. "அச்சி" – பெண்பால் ஈறு. வீரசோழியம், சொல். 4]*

**தச்சத்தரு** *tacca-t-taru*, பெ. (n.) ஆமணக்கு; castor-plant (சா.அக.).

**தச்சத்தி** *taccatti*, பெ.(n.) தச்சச்சி (நன். 420, சங்கரந.) பார்க்க; see *taccacci*.

*[தச்சன் + அத்தி. 'அத்தி' = பெண்பால் ஈறு. ஒ.நோ. ஆட்டன் + அத்தி = ஆட்டனத்தி. வீரசோழியம், சொல்.4]*

**தச்சதுலாம்** *tacca-tulām*, பெ.(n.) பழைய வரிவகை (S.I. I. iv. 79); an ancient tax.

**தச்சநாசன்** *tacca-nāšan*, பெ. (n.) பொன்னம்பர்; yellow coloured amber (சா.அக.).

**தச்சநூல்** *tacca-nūl*, பெ. (n.) கட்டுமானத் தொழில் பற்றிய பட்டாங்கு நூல்; treatise on construction.

*[தச்சு + நூல். மயமத மெனும் நூலின் வாயிலாகப் பண்டையத் தமிழகத் திலுள்ள கட்டடம், சிற்பம் முதலான கட்டுமானச்செய்திகள் விளக்கம் பெறுகின்றன; முன்னைத்தமிழ் நூல். வடமொழியில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. இதனைத், தச்சநூல் என்பர்.]*

**தச்சம்** *taccam*, பெ. (n.) அதிமதுரம்; licorice plant (சா.அக.).

**தச்சமுழம்** *tacca-muḻam*, பெ. (n.) பண்டைத் தமிழகத்தில் கட்டுமானத்தொழிலில் பயன் படுத்திய நீட்டலளவுகோல்; linear measurement scale used in the construction, industry of ancient TamiḻNāḍu.

*[தச்சன் + முழம். விரலம், சாண், முழம் போன்ற உடலுறுப்புச் சொற்கள் தொடக்கத்தில் நீட்டலளவுக்குப் பயன் படுத்தப்பட்டன. பின்னர், அவற்றிற்குக் குறிப்பிட்ட அளவுகள் என்று வரையறை பெற்றன. விரல் = 1 3/8 விரலம் (அங்குலம்). சாண். 8 1/4 விரலம்; முழம் = 33 விரலம். இந்த அளவுகள், பல திருக்கோயில்களில் குறித்து வைக்கப்பட்டுள்ளன. காஞ்சிபுரம் வைகுந்த நாதப்பெருமாள் கோயிலின் கண்ணாடி மாளிகையில், 'தச்ச முழம்' என்ற எழுத்தும், அளவும் செதுக்கப் பட்டுள்ளன. வடநாட்டில் விதஸ்தி (சாண்.) = 12 விரலம், அத்தம் (முழம்) = 33 விரலம் என்று வழங்குகிறது. இதில் பாதி அளவையே அங்கு எடுத்துக் கொள்கிறார்கள். இது ஆய்வுக்குரிய பிறழ்வு ஆகும்.]*

**தச்சர்** *taccar*, பெ. (n.) தச்சன் பார்க்க; see *taccan*.

*[தை → தைத்தல் – தொழிற்பெயர். தைத்து → தைச்சு → தச்சு → தச்சர்]*

**தச்சவாசாரியன்** *tacca-v-āšāriyan*, பெ. (n.) கல்லில் நுணக்கமாய்த் தொழில் செய்யும் ஆசாரி; blacksmith. "ஸ்தானத்தார் அருளிச் செய்ய இவ்வெட்டு வெட்டிநேந் இக்கோயிலில் தச்சவா சாரியந் மழுவாடி வீரநாத கொட்டையூர் ஆசாரிய" (S.I.I. v. 632).

*[தச்சன் + ஆசாரியன். ஆசிரியன் → ஆசாரியன்]*

**தச்சவாடி** *tacca-vāḍi*, பெ. (n.) 1. தச்சர்வேலை செய்யும் இடம்; carpenter's yard. 2. தச்சர் குடியிருக்கும் இடம்; colony of taccar.

*[தச்சர் + (பாடி →) வாடி]*

**தச்சவேலை** *tacca-vēlai*, பெ. (n.) தச்சருக்குரிய மரவேலைத் தொழில்; carpentry.

மறுவ. தச்சுவேலை

*[தச்சர் + வேலை]*

**தச்சன்** *taccaṉ*, பெ.(n.) 1. மரத்தில் வேலை செய்பவன்; carpenter. "மரங்கொல் தச்சரும்" (மணிமே. 28: 37). 'தச்சன் அடித்த தலைவாசல் எல்லாம் உச்சியிடிக்க உலவித் திரிந்தேன்' (பழ.). 2. தச்சுவேலை செய்யும் குடிமகன்; person of carpenter clan. 3. விசுவகருமாவுக்குரிய நெய்ம்மீன் (விண்மீன்) (சித்திரை. நாள்) (பிங்.); the 14th nakṣatra chittirai as pertaining to Viśvakarma.

*[தை → தைச்சு → தைச்சன் → தச்சன். மரத்துண்டுகளை, ஒன்றுடன் ஒன்று செவ்வியமுறையில் தைத்துக் கட்டுமானக் கருவிகள் செய்பவருக்கு வழங்கிய விச்சொல்லே, காலப்போக்கில் கருங்கொல்லர், பொற்கொல்லர் போன்ற கம்மியரையும் சுட்டுவதாயிற்று.]*

**தச்சன்குருவி**[1] *taccaṉ-kuruvi*, பெ. (n.) மரங்கொத்தி (யாழ். அக.); wood -pecker.

மறுவ. மரங்குத்திப் புள்.

*[தச்சன் + குருவி]*

துளைத்தற் கருத்து: தச்சன்போல், மரத்தைத் துளைக்குங் காரணத்தால், தச்சன்குருவி எனப் பெயர் பெற்றது.



**தச்சன்மூலி** *taccaṉ-mūli*, பெ. (n.) மூலிகை வகையுளொன்று; a kind of medicinal plant.

*[தச்சன் + மூலி - தச்சன்மூலி. இம் மூலிகையைப் பொடியாக்கிச் சூரணம் செய்து, திரிகடுகுடன் சேர்த்து உண்டால், வாணாள் பெருகும். கிழப்பருவத்தினர் இம் மூலிகைப் பொடியினைத் தேனுடன் சேர்த்து உண்டு வந்தால், எழிமிகு இளமைத்தோற்றம் பெறுவர் என்று சா.அக. கூறும்]*

**தச்சனைமூலி** *taccaṉai-mūli*, பெ. (n.) தச்சன் மூலி பார்க்க; see *taccaṉ-mūli*.

*[தச்சன்மூலி → தச்சனைமூலி.]*

**தச்சாசாரி** *tac-c-āśāri*, பெ. (n.) தச்சன் பார்க்க; see *taccaṉ*.

*[தச்சன் + ஆசாரி. ஆசு = ஒட்டு, பற்று எனும் பொருளில் வழக்கூன்றிய இச்சொல், நாளடைவில், மரத்துண்டுகளை ஒன்றுட னொன்று இணைத்துக் கட்டுமானக் கருவிகள் செய்பவருக்கும், ஆகிவந்த தெனலாம். 'இ' மதிப்புறு பின்னொட்டு (ஒ.நோ.) பூசாரி.]*

**தச்சாசாரியம்** *tac-c-āśāriyam*, பெ. (n.) தச்சத் தலைமை (S.I.I. ii. 278, 17); status or position of a master-carpenter.

*[தச்சர் + ஆசாரியம். ஆசாரியன் → ஆசாரியம் = தலைமைப் பணி.]*

**தச்சி**[1] *tacci*, பெ. (n.) தயிர் (குழந்தை.); curds.

*[தோய்ச்சி → தைச்சி → தச்சி. காய்ச்சிய பாலில் பிரைக்குத்தப்பட்டு, நன்கு தோய்ந்துறைந்த தயிர்.]*

**தச்சி**[2] *tacci*, பெ. (n.) தாயக்கட்ட ஆட்டத்தில் எல்லாக் காய்களும் நிமிர்ந்து விழும் விருத்தம்: a throw in the game of tacci -pārā, when all the cowries or pieces are turned up (செ.அக.).

தெ., க. தச்சி

*[தச்சு → தச்சி]*

**தச்சிச்சி** *taccicci*, பெ. (n.) தச்சர்குடிப்பெண் (நன். 140. மயிலை); women of taccaṉ clan.

*[தைச்சர் → தச்சர் + அத்தி; அத்தி → அச்சி. தச்சர் → தச்சி + அச்சி - தச்சிச்சி]*

**தச்சிப்பார்** *tacci-p-pār*, பெ. (n.) தாயக்கட்ட விளையாட்டு வகை; a game played with cowries or pieces on a diagram like a chess - board.

ஒ.நோ. வண்டிப்பார்

*[தச்சி + பார் = தச்சிப்பார்.]*

**தச்சினியம்** *tacciniyam*, பெ. (n.) உருவம்; figure *(சா.அக.)*.

**தச்சு** *taccu*, பெ. (n.) 1. தச்சன்றொழில்; carpenter's work. "தச்சு விடுத்தலும்" *(திருவாச. 14, 3)*. 2. தச்சனது ஒரு நாள் வேலையளவு; day's work of a carpenter. இந்த நிலைக்கதவைச் செய்ய எத்தனை தச்சு ஆகும் *(உ.வ.)*.

*[தைச்சு → தச்சு]*

**தச்சுக்கடன்** *taccu-k-kaḍaṉ*, பெ. (n.) பயிர்க் கடன்; loan for agricultural expenses given by farmers.

*[தச்சு + கடன்]*

**தச்சுக்கழித்தல்** *taccu-k-kaḻittal*, பெ. (n.) புதுமனை புகுமுன்பு, கட்டடத்தைத் தூய்மைப் படுத்துதற்குத் தச்சர்கள் செய்யுஞ் சடங்கு *(நாஞ்.)*; a ceremony performed by carpenters prior to house-warming, with a view to spiritually cleaning the building *(செ.அக.)*.

*[தச்சு + கழித்தல்]*

**தச்சுக்கூலி** *taccu-k-kūli*, பெ. (n.) பயிர்த் தொழிலில் தச்சர் பெறுங்கூலி; wage for carpenter's in cultivation.

*[தச்சு + கூலி]*

**தச்சுக்கோல்** *taccu-k-kōl*, பெ. (n.) தச்சக்கோல் (G.Tn. D.I. 239) பார்க்க; see *tacca-k-kōl*.

*[தச்சு + கோல்]*

**தச்சுசெய்-தல்** *taccu-šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) மனை கோலும்போது, வீடு அமையும் இடத்தில் நல்லநாளில், இறைவனை வேண்டிச் செய்யும் மனைவழிபாடு; inaugurating the construction work of a building with a puja, invoking the blessings of god for successful completion.

*[தச்சு + செய்-.]*

**தச்சுத்தேவை** *taccu-t-tēvai*, பெ. (n.) ஊர் வளர்ச்சிப் பணிக்காக காணியாட்சி பெற்றிருக்கும் தச்சர் செலுத்திய வரி; tax paid by carpenter who has heriditary right, work done for common development of village.

*"காத்திகைப் பச்சைப் பிள்ளையார் நொன்பு (ந) ந் (து) வன(ப்பச்சை) எடுத்துக் காட்டும் பச்சை ஆட்த் தெவை மதிட்தெவை தச்சுத்தெவை ஆனைச்சாலை குதிரைப்பந்தி" (S.I.I.iv. 369).*

மறுவ. தட்டொலி

*[தச்சு + தேவை]*

**தச்சுப்பட்டறை** *taccu-p-paṭṭaṟai*, பெ. (n.) தச்சர் பணிமனை; carpentry work-shop.

மறுவ. கொல்லுப்பட்டறை

*[தச்சு + பட்டறை]*

**தச்சுமுழம்** *taccu-muḻam*, பெ. (n.) தச்சமுழம் பார்க்க; see *tacca-muḻam* *(செ.அக.)*.

*[தச்சு + முழம்.]*

**தச்சுவாடி** *taccu-vāḍi*, பெ. (n.) 1. தச்சவாடி பார்க்க; see *tacca-vāḍi*. 2. வாடகை வண்டிகள் நிற்கும் இடம் *(இ.வ.)*; stand for hackney carriages. 3. விறகுக்கடை *(இ.வ.)*; fuel-depot.

*[தைச்சு → தச்சு + வாடி; பாடி → வாடி.]*

**தச்சுவினைமாக்கள்** *taccu-viṉai-mākkaḷ*, பெ. (n.) தச்சர் *(தொல். பொருள். 393, உரை)*; carpenters.

*[தச்சுவினை + மாக்கள்]*

**தச்சுவேலை** *taccu-vēlai*, பெ. (n.) தச்சவேலை பார்க்க; see *tacca-vēlai* *(செ.அக.)*.

*[தச்சு + வேலை. ஒருகா. தச்சவேலை → தச்சுவேலை]*

**தச்சுவை** *taccuvai*, பெ. (n.) சேலை; a piece of cloth *(சா.அக.)*.

**தச்சுளி** *tacculi*, பெ. (n.) உளி வகைகளிளொன்று *(உ.வ.)*; a kind of chisel.

*[தச்சு + உளி]*

**தச்சூர்** *taccūr,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள சிற்றூர்; a village in Viluppuram district.

*[தைச்சு → தச்சு + ஊர் = தச்சர் மிகுதியாகப் பிறந்து வாழூர்]*

**தசம்** *taśam,* பெ. (n.) பல்லக்கு *(சது.);* palanquin.

*[தை → தச → தசம். துறவியோ, அரசனோ இவர்ந்து செல்வதற்கு ஏற்றவண்ணம் அமைக்கப்பட்டதும், தோளில் தூக்கு வதற்கு வாய்ப்பாக குறுக்கு வாட்டத்தில் வளைதண்டு குத்தப்பட்டதுமான கூடு (பல்லக்கு).]*

**தசமைக்கண்ணி** *taśaimai-k-kaṇṇi,* பெ. (n.) பொன்னாங்கண்ணி; sessile plant - Illecibrum sessile *(சா.அக.).*

மறுவ. தங்கமேனிக்கீரை, பொன்னாங்காணி.

**தசரம்** *taśaram,* பெ. (n.) அரத்தம், ஊனீர் போன்றவை ஓடும் குழாய்; vessels carrying blood lymph etc in the system of animals *(சா.அக.).*

**தசனவாசம்** *taśaṉavāśam,* பெ. (n.) உதடு; lip *(சா.அக.).*

*[தசனம் + வாசம் - தசனவாசம். வாயில் → வாசல் → வாசம். (ஒ.நோ.) வாயிற்கதவு → வாசற்கதவு. மதுர வாயில் → மதுரவாசல்.]*

**தசனாத்தியம்** *taśaṉāttiyam,* பெ. (n.) புளியாரை; sore sorrel - Oxalis corniculata *(சா.அக.).*

**தசா** *taśā,* பெ.(n.) மீன்பிடி கலத்தின் பின்பகுதி *(முகவை.):* the back portion of the fishing- boat.

*[தை → தச → தசா.]*

**தசாக்கரி** *taśākkari,* பெ. (n.) பண்வகை *(சிலப். 13, 112, உரை);* a melody.

*[தை → தச → தசாக்கரி. = மாந்தனின் இனிய குரலுக்குச் சான்றாக அமைந்த பண்.]*

**தசாபிசாவெனல்** *taśā-piśā-v-eṉal,* பெ. (n.) ஒருவனுக்குத் தெரியாத மொழியில் அவனை மருட்டுங் குறிப்பு *(வின்.);* onom. expr. of violent threatening in a foreign language.

*[தசாபிசா + எனல்.]*

**தசார்த்தம்** *taśārttam,* பெ.(n.) இறந்தபின் உடல் ஐவகை பூதங்களாகப் பிரிந்துபோகை; the dissolution of the body into five elements. The resolution of the body into its constituent elements after death *(சா.அக.).*

*[தை → தச → தசார்த்தம் - ஐம்பூதங்களின் வழி உடல் தைத்து ஒன்றுகை.]*

**தசிரகம்** *taśiragam,* பெ. (n.) அரத்தநாளங்கள்; tubes or vessels of circulatary system.

*[தசிர் + அகம் → தசிரகம். குருதி நாளங்கள், நெஞ்சாங்குலையிலும், உள்ளுறுப்புக்களிலும் தைத்துக் கிடக்குந் தன்மைபற்றி யுருவாகிய சொல்லென்றறிக.]*

**தசிரத்துவம்** *taśirattuvam,* பெ. (n.) நாளங்கள் வழியே ஏற்படும் குருதியோட்டம்; circulation of blood through the tubes and vessels of animals or plants-Vascularity *(சா.அக.).*

*[தசிரம் + அத்து + அம்.]*

**தசிரம்**[1] *taśiram,* பெ. (n.) *1.* அரத்தக்குழாய்; the tubes or vessels carrying blood. *2.* உட்டுளை; hollowness.

*[தசி → தசிர் + அம்.]*

**தசிரம்**[2] *taśiram,* பெ. (n.) *1.* இரும்புத்தூள் *(யாழ். அக.);* iron-dust. *2.* மழைத்தூறல்; drizzling.

*[தசிர் + அம்.]*

**தசிவம்** *taśivam,* பெ.(n.) வரிதண்டும் பணியாளர் செலுத்தற்குரிய வரிநிலுவை (R.T.); arrears of revenue, due from the tax - collectors.

*[தய → தயங்கு. தய → தச → தசி + அம் → தசிவம். (ஒ.நோ.) வாயில் → வாசல்]*

**தசிவேர்** *taśivēr,* பெ. (n.) *1.* தவசுமுருங்கை; a medicinal plant with roundish small leaves - Justicia tranqubariensis. *2.* புண்ணாக்குப் பூண்டு; a prostate plant *(சா.அக.).*

*[தசை → தசி + வேர்]*

**தசுக்கூலி** *tašu-k-kūli*, பெ. (n.) வேளாண்மை செய்வதற்குக் கொடுக்கும் கடன் (C.G.); loan for agricultural expenses given by land - owners to tenants.

*[தவசக்கூலி → தசக்கூலி → தசுக்கூலி.]*

**தசுகரம்** *tašugaram*, பெ. (n.) களவு; theft.

*[தை → தசி → தசு. தசு + கரு + அம். தைக்கை, பொருந்துகை, பொருந்தி எடுக்கை.]*

**தசும்பர்** *tašumbar*, பெ. (n.) தசும்பு பார்க்க; see *tašumbu*. "அமுதம் பெய்த வாடகத் தசும்பர்" (சேதுபு. சேதுமா. 71).

*[தசு → தசும்பு → தசும்பர்]*

**தசும்பு** *tašumbu*, பெ. (n.) 1. குடம்; pot, water-pot. "துணைபுண ராயமொடு தசும்புடன் றொலைச்சி" (புறநா. 224: 2). 2. மிடா; a big pot. "தூளங்கு தசும்பு வாக்கிய பசும்பொதித் தேறல்" (மலைபடு.463). 3. கோபுரவுச்சிக் கல(ச)ம்; ornamental metallic pot set at the top of a tower. "சூழ்சுடர்ச் சிரத்து நன்மணித் தசும்பு தோன்றலால்" (கம்பரா. நகர. 26). 4. பொன் (அக. நி.); gold.

*[தசு → தசும்பு]*

**தசும்புசுமெனல்** *tašum-pušum-enal*, பெ. (n.) ஆடை, சட்டை முதலியன நெகிழ்ந்து தொங்குதற்குறிப்பு (இ.வ.); onom. expr. signifying the loose hanging of garments on a person.

*[தசும் + புசும் + எனல்.]*

**தசுமண்** *tašuman*, பெ. (n.) 1. கள்வன்; thief. 2. வேள்வி செய்விப்பான்; priest who conducts a sacrifice.

*[தசு → தசுமண்]*

**தசுமம்** *tašumam*, பெ. (n.) 1. பொன்; gold. 2. குடம்; pot. 3. மிடா; a big water-pot. 4. கொப்பரை; brass-boiler. 5. தீ; fire (சா.அக.).

*[தசு → தசுமம்]*

**தசை¹-தல்** *tašai-*, 4 செ.கு.வி. (v.i.) தசைப் பற்றாதல்; to be fleshy. "நறுமலர்த் தாள்க ளொத்துத் தசைந்து" (காசிக. சிவ. அக். 22). 2. தடிப்பேறுதல்; to grow stout.

*[துள் → தள் → தயை → தசை-.]*

**தசை²-த்தல்** *tašai-*, 4 செ.கு.வி. (v.i.) சதை பிடித்தல் (யாழ். அக.); to grow fleshy.

*[தள் → தயை → தசை-.]*

**தசை³** *tašai*, பெ. (n.) 1. இறைச்சி (மாமிசம்) (நன். 268, உரை) (சூடா.); flesh, muscle. 2. வெப்பத்தால் குருதி மாறுதலடைந்து காற்றினால் இறுகி உண்டாகும் தசை; flesh formed from blood by the action of heat and wind. 3. முடைநாற்றம் (திவா.); bad odour. 4. பழச்சதை (இ.வ.); pulp or fleshy part of a fruit.

ம. தச

*[தயை → தசை.]*

**தசை⁴** *tašai*, பெ. (n.) 1. நிலைமை; state, condition. என் தசையைக் கண்டால் இவற்றுக்கு வாய்புதைக்க வேண்டாவோ (ஈடு. 10. 3: 1). 2. கோள்களின் ஆட்சிக்காலம் (கணியம்); regnal period of a planet. "வினைமேம்படூஉ மேற்றசை நாளுள்" (பெருங். வத்தவ. 11: 61). 3. ஆகூழ்காலம்; period of good fortune. 4. திரி; wick.

*[திசை → தசை - கோள்கள் சுழலுந் திசைநோக்கிக் கணித்துக் கூறும் கணிப்பு]*

**தசைஒட்டல்** *tašai-oṭṭal*, பெ. (n.) தசையை ஒட்ட வைத்தல்; auto transplantation.

*[தசை + ஒட்டல்]*

**தசைக்கட்டு** *tašai-k-kaṭṭu*, பெ.(n.) தசையுறுதி; muscular strength. (சா.அக.)

*[தசை + கட்டு]*

**தசைக்கருப்பம்** *tašai-k-karuppam*, பெ. (n.) எல்லா வடிவங்களும், கனமுடையனவாகி, எல்லாம் கறுத்த அரத்தமாகக் காணப்படும் ஒருவகைத் தசைக்குறி; protruberance of felshy masses of various shapes and density gorged with dark blood-Moles (சா.அக.).

*[தசை + கருப்பம்]*

**தசைக்கற்றை** *tašai-k-kaṟṟai*, பெ. (n.) ஒரே தன்மையுள்ள தசைத்தொகுதி; myotomes.

*[தசை + கற்றை]*

**தசைக்கனி** *tašai-k-kaṉi*, பெ. (n.) சதைப் பற்றுள்ள பழம்: berry, as being pulpy (செ.அக.).

*[தசை + கனி]*

**தசைகொள்ளுதல்** *tašai-kolludal,* பெ. (n.) தசைபூரித்தல் பார்க்க; see *tašai-pūrittal.*

*[தசை + கொள்ளுதல்.]*

**தசைத்தல்** *tašaittal,* பெ.(n.) 1. தசைபிடித்தல்; growing flesh. 2. கொழுத்தல்; becoming fatty.

*[தயை → தசை → தசைத்தல்]*

**தசைத்திட்டு** *tašai-t-tittu,* பெ. (n.) ஒரே சீரான உடற்கூறு; a metamere.

*[தசை + திட்டு.]*

**தசைநரம்பு**[1] *tašai-narambu,* பெ. (n.) பிரித்தெடுக்குந் தன்மையிலமைந்த நரம்பு; separating abduct.

மறுவ. சதைநார்

*[தசை + நரம்பு]*

**தசைநரம்பு**[2] *tašai-narambu,* பெ. (n.) அசைவு கொடுக்கும் நரம்பு; muscle, tendon.

*[தசை + நரம்பு]*

**தசைநாண்** *tašai-nāṇ,* பெ. (n.) எலும்பு, தசைகளை இணைக்கும் நாண்போன்ற திசுத்தொகுப்பு; tendon.

*[தசை + நாண்]*

**தசைநார்** *tašai-nār,* பெ. (n.) சதையிலுள்ள நார்ப்பொருள்; fibrous nature of muscle.

*[தசை + நார்]*

**தசைநார்க்கயிறு** *tašai-nār-k-kayiṟu,* பெ. (n.) எலும்பையும் தசையையும் இணைக்கும் நார்போன்ற கயிறு; a flexible cord by which a muscle is attached to a born - Tendon (சா.அக.).

*[தசை + நார் + கயிறு]*

**தசைநீர்** *tašai-nīr,* பெ. (n.) 1. கொழுப்புச் சதையினின்று வரும் நீர்; serum. 2. ஊனீர்; fluid oozing from th flesh, the liquid matter that drips from flesh in cooking - Gravy.

மறுவ. சதைநீர்

*[தசை + நீர்]*

**தசைநீளமுனை** *tašai-nīḷa-muṉai,* பெ. (n.) நெஞ்சாங்குலையில் நீட்டிக் கொண்டிருக்கும் இறைச்சிமுனை; name for some of the columnae carneae of the heart ventricles - Musculi-papillaris.

*[தசை + நீளம் + முனை]*

**தசைப்பகந்தரம்** *tašaippagandaram,* பெ.(n.) புரையோடிய புண்; fistula in the muscle.

*[தசை + பகந்தரம். பகு → பகம் → பகந்தரம் – தசையைப் பகுத்துக் கொண்டு புரையோடிய புண்.]*

**தசைப்பற்றிடம்** *tašai-p-paṟṟiḍam,* பெ. (n.) தசைப்பற்றானவிடம்; the fleshy muscular part of the body-Brawn (சா.அக.).

*[தசைப்பற்று + இடம்]*

**தசைப்பற்று** *tašai-p-paṟṟu,* பெ. (n.) 1. தசை பிடிக்கை; fleshiness. 2. தசை; flesh pulp. 3. தசையுள்ள பகுதி; the fleshy portion (சா.அக.).

*[தசை + பற்று]*

**தசைப்பிடி** *tašai-p-piḍi,* பெ. (n.) 1. தசைப்பற்று; pulpiness. 2. கொழுக்கை; corpulent.

*[தசை + பிடி.]*

**தசைப்பிடித்த** *tašai-p-piḍitta,* கு.பெ.எ. (adj.) கொழுத்த; corpulent (சா.அக.).

**தசைப்பிடித்திருத்தல்** *tašai-p-piḍittiruttal,* பெ. (n.) கொழுத்திருத்தல், பருத்திருத்தல்; being corpulent (சா.அக.).

**தசைப்பிடிப்பில்லாத** *tašai-p-piḍippillāda,* பெ.எ. (adj.) தசையற்ற; raw boned (சா.அக.).

*[தசை + பிடிப்பு + இல்லாத]*

**தசைப்பிடிப்பு**[1] *tašai-p-piḍippu,* பெ. (n.) தசைப்பற்றுகை; growing fleshy (சா.அக.).

மறுவ. தசைப்பற்று

*[தசை + பிடிப்பு]*

**தசைப்பிடிப்பு**[2] *tašai-p-piḍippu,* பெ. (n.) தசை இறுகுவதால் ஏற்படும் வலி; cramp.

*[தசை + பிடிப்பு]*

**தசைப்பிடியுள்ள** *tašai-p-piḍiyuḷḷa,* பெ.எ. (adj.) உறுதியான, வலுவான; brawny (சா.அக.).

*[தசை + பிடி + உள்ள]*

**தசைப்பு** *tašaippu,* பெ. (n.) *1.* தசைபிடி; pulpiness. *2.* கொழுப்பு; sauciness, fat.

*[தசை → தசைப்பு]*

**தசைப்புடைப்பு** *tašai-p-puḍaippu,* பெ. (n.) தசை வீக்கம்; fleshy excrescence - Sarcoma (சா.அக.).

*[தசை + புடைப்பு]*

**தசைபிடி** *tašai-piḍi,* பெ. (n.) சதைபிடிக்கை (யாழ். அக.); fleshiness, pulpiness.

*[தசை + பிடி]*

**தசைபூரித்தல்** *tašai-pūrittal,* பெ. (n.) சதைப் பற்றாதல்; to grow in flesh (சா.அக.).

*[தசை + பூரித்தல்]*

**தசைமுற்றுதல்** *tašai-muṟṟudal,* பெ. (n.) கொழுப்பேறல்; being are becoming fatent (சா.அக.).

*[தசை + முற்றுதல்.]*

**தசையடைப்பு** *tašai-y-aḍaippu,* பெ. (n.) *1.* தசை வளர்ச்சி; growing muscle. *2.* கொழுப்புப் பிடிக்கை (இ.வ.); stout, growing fat.

*[தசை + அடைப்பு.]*

**தசையடைப்புநோய்** *tašai-y-aḍaippu-nōy,* பெ. (n.) சிறுநீர்க் குழாய் அடைபடுதலாகிய நோய் (M.L.); stricture in urethra.

*[தசையடைப்பு + நோய்]*

**தசையண்டம்**[1] *tašai-y-aṇḍam,* பெ. (n.) நீர் கட்டிய அண்டவூதை (பைஷஜ. 265); hydrocele.

*[தசை + அண்டம்]*

**தசையண்டம்**[2] *tašai-y-aṇḍam,* பெ. (n.) கூதை நோய்; morbid enlargment (சா.அக.).

*[தசை + அண்டம்]*

**தசையத்தி** *tašaiatti,* பெ. (n.) சீமையத்தி. (சேய்மையத்தி); இது, குருதிமைச் சீர்மை யாக்கும், உடலை வளப்படுத்தும்; foreign fig- Ficus Glomerata (சா.அக.).

*[தசை + அத்தி. தசையத்தி = குருதியின் மாசகற்றி, உடலுக்கு உரமூட்டும் அத்திப் பழம்]*

**தசையிதம்** *tašaiyidam,* பெ. (n.) தசைகளினின்று வேகவைத்தெடுத்த மஞ்சள் நிறப்பசை; elastine (சா.அக.).

**தசையில்விலா** *tašayil-vilā,* பெ. (n.) தசையில்லாத விலாப்பகுதி; spare rib (சா.அக.).

*[தசை + இல் + விலா]*

**தசையூறு-தல்** *tašai-y-ūṟu-,* 5 செ.கு.வி. (v.i.) உடம்பில் தினவெடுத்தல்; itching.

*[தசை + ஊறு-.]*

**தசையெடுப்பு** *tasai-y-eḍuppu,* பெ. (n.) கோளின் ஆட்சிக்காலத் தொடக்கம் (நாஞ்.); beginning of regnal period of a planet.

*[திசை → தசை + எடுப்பு.]*

**தசையொட்டியிலை** *tašai-y-oṭṭi-y-ilai,* பெ. (n.) சதையொட்டி பார்க்க; see *sadai-y-oṭṭi* (சா.அக.).

*[தசை + ஒட்டி + இலை]*

**தசைவலி** *tašai-vali,* பெ.(n.) சதையில் உண்டாகும் நோவு; muscular rheumatism, Myalgia.

மறுவ. சதைநோவு

*[தசை + வலி]*

**தசைவளர்ச்சி** *tašai-vaḷarcci,* பெ. (n.) *1.* சதைப் பற்றுண்டாகை; forming of flesh, carnification. *2.* புண்ணை மூடிச் சதையிடுகை; growing of proud flesh. *3.* சிறுநீர்த் துளையை அடைத்துக்கொண்டு தசைவளர்கை; fungus or fleshy formation at the tip of the penis obstructing discharges. *4.* காய்ப்புண்டாகுகை; formation of a hard horny excrese ence on a toe or foot (செ.அக.).

மறுவ. சதைப்பிடிப்பு

*[தசை + வளர்ச்சி]*

**தசைவளர்த்தி** *tašai-vaḷartti,* பெ. (n.) தசைவளர்ச்சி பார்க்க; see *tašai-vaḷarcci.*

*[தசை + (வளர்ச்சி →) வளர்த்தி (இ.வ.)]*

**தசைவிறைப்பு** *tašai-viṟaippu,* பெ. (n.) நரம்பிசிவு நோய்; tetanus.

*[தசை + விறைப்பு]*

**தசைவிறைப்புஇசிவுநோய்** *tašai-viraippu-išivu-nōy*, பெ. (n.) காயத்தின் மூலம் ஏற்படும் தொற்றுநோய்; lockjaw

*[தசைவிறைப்பு + இசிவுநோய்]*

**தசைவீக்கம்** *tašai-vīkkam*, பெ. (n.) ஊன் வீக்கம்; swelling of the flesh or muscle (சா.அக.).

*[தசை + வீக்கம்]*

**தசைவேர்** *tašai-vēr*, பெ. (n.) 1. தசைப்பற்றுள்ள வேர்; minute elementary part of the muscle. 2. கிழங்குவேர்; bulbous root. 3. ஈராண்டுப் பயிர்களின் வேர்; the fleshy root of plants of two years growth.

*[தசை + வேர்]*

**தசைவைத்தல்** *tašai-vaittal*, பெ. (n.) தசை கொள்ளுதல்; to pick up flesh (சா.அக.).

**தசைவைப்பு** *tašai-vaippu*, பெ. (n.) கோளின் ஆட்சிமுடிவு (நாஞ்.); close of regnal period of a planet.

*[திசைவைப்பு → தசைவைப்பு : பன்னிரு ஓரைகளில், ஒவ்வொரு கோளும் செயற்படும், காலப்பகுதி]*

**தஞ்சக்கேடு** *tañja-k-kēḍu*, பெ. (n.) 1. வலுக்குறை; debility, weakness. 2. வறுமை; poverty, helplessness.

*[தஞ்சம் + கேடு.]*

**தஞ்சம்** *tañjam*, பெ. (n.) 1. அடைக்கலப் பொருள்; refuge; deposit. 2. எளிது; simple, matter. "தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே" (தொல். சொல். 268) 3. தாழ்வு (பிங்.); degradation, discomfiture. "தஞ்சநம்பால் வாத்தக்கதோ" (விநாயகபு. 65. 39). 4. சிற்றளவினது; smallness, littleness."தஞ்ச முண்ணி வஞ்சாந் தடமொன்று" (பெரியபு. திருக். குறிப். 80). 5. பற்றுக்கோடு; support, help, prop, refuge. "ஒருவரைத் தஞ்ச மென்றெண்ணாது" (தேவா. 1197, 4). தஞ்சம் என்று வந்தவனை வஞ்சித்தல் ஆகாது (பழ.). 6. உறுதி (நிச்சயம்); certainty. "தஞ்சமிவற்கென் வளையுநில்லா" (திவ். பெரியதி. 2: 8: 9). 7. பெருமை (யாழ். அக.); greatness.

*[தங்கு → தஞ்சு → தஞ்சம். தங்கு - நலிந்தவன் வலிந்தவனிடம் அடைக்கல மாகத் தங்குகை. ஒருவரிடம் பணிந்து வணங்குகை. 'அடைக்கலம் புகுதல்'. 'தஞ்சம் புகுதல்', 'தஞ்சமடைதல்' என்னும் வழக்குகள் கல்லாதார் நாவில் இன்றும் பயின்றுவழங்கும் பான்மையால் அறியலாம்.]*

**தஞ்சன்பொளி** *tañjan-poḷi*, பெ. (n.) துரிசு (யாழ். அக.); blue vitriol, copper hydrows sulphate. (chambers.).

*[தஞ்சன் + பொளி]*

**தஞ்சனம்** *tañjaṉam*, பெ. (n.) தன்னையறிதல்; to known oneself.

*[தன் + சன் + அம். சன் → சன்னம் = கூர்மை, நுண்மை. தன்னைப் பற்றி, உண்மையாக நுணுகி அறிகை. 'அம்' - சொல்லாக்க ஈறு]*

**தஞ்சாக்கூர்** *tañjākkūr*, பெ. (n.) பொய்யா மொழிப் புலவர் இயற்றிய தஞ்சைவாணன் கோவையின் பாட்டுடைத் தலைவனான சந்திரவாணனது ஊர்; native place of Chandiravāṇaṉ the hero of Thañjaivāṇaṉ kōvai authored by Poyyāmozhi-p-pulavar.

மறுவ. தஞ்சை

பாண்டிநாட்டில் கொற்கை, வல்லம், தஞ்சாக்கூர், மல்லை எனும் நான்கு ஊருக்கும் இடைப்பட்ட, பொருநைபாற்றங் கரையிலுள்ள நாடு, மாறைநாடு ஆகும். இப் பகுதித் தலைவனான சந்திரவாணன், தஞ்சைவாணன் என்று சிறப்புப்பெயர் பெற்றிருந்தான். கோமாற வர்மர் திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகரதேவருக்கு படைத்தலைவராகவும், அமைச்சராகவும், இருந்தார். இவர் காலம் கி.பி. 12 ஆம் நூற்றாண்டு.

**தஞ்சாபியம்** *tañjābiyam*, பெ. (n.) நறும்பிசின்; a fragrant resin.

*[தங்கு → தஞ்சு + (அப்பு →) அபு + இயம் → தஞ்சாபியம் - மரப்பட்டையில் தங்கியிருக்கும் பிசின். 'இயம்' - சொல்லாக்க ஈறு. (ஒ.நோ.) இலக்கியம்.]*

**தஞ்சாவூர்** *tañjāvūr,* பெ. (n.) சோழர் தலைநகரங்களுள் ஒன்று (S.I.I. iii, 14); a chōla capital. தஞ்சாவூர் எத்தனும் திருவாரூர் எத்தனும் கூடினாற் போல *(பழ.).*

மறுவ. தஞ்சை

*[ஒருகா. தஞ்சம் + ஆவூர் - தஞ்சாவூர். சோழப்பேரரசின் நெற்களஞ்சிமாயின தஞ்சாவூர், பல்லவர்களிடமிருந்து விசயாலயச் சோழனால் மீட்கப்பட்டது; அந்நாள் தொட்டு முதல் இராசராசன் காலம் வரை சோழர்தம் தலைநகராகத் திகழ்ந்தது. சோழர் குடும்பத்து மூத்தவன் நலங்கிள்ளி உறையூரைத் தலைநகராகக் கொண்டு, பாதிச் சோழநாட்டை ஆள, குடந்தைக்கு அருகில் உள்ள ஆவூரைத் தலைநகராகக் கொண்டு நெடுங்கிள்ளி, மீதிச் சோழநாட்டை ஆண்ட போது, நேர்ந்த போரில், அஞ்சிய ஆவூர் மக்கள் தஞ்சமாக அடைந்த ஊர், தஞ்சாவூர்]*

**தஞ்சாவூர்உடையார்பண்டாரம்** *tañjāvūr-uḍaiyār-paṇḍāram,* பெ. (n.) முதல்இராசன் பெயரால் அமைந்த பண்டாரம் (கருவூலம்); the chief treasury of Rājarāja I. "தஞ்சாவூர் உடையார் பெரும் பண்டாரத்தே ஆட்டைவட்டம் காசு ஒன்றுக்கு முக்குறுணி" *(S.I.I. vol. ii: 2, 35).*

*[தஞ்சாவூர் + உடையார் + பண்டாரம் உடையார் = அரசர்க்குரிய மதிப்புரவுச் சொல்]*

**தஞ்சாவூர்க்கிட்டம்** *tañjāvūr-k-kiṭṭam,* பெ.(n.) தஞ்சாவூரில் காணும் இரும்புச்சிட்டம்; scum of iron found in Tañjore *(சா.அக.).*

*[தஞ்சாவூர் + கிட்டம்]*

**தஞ்சாவூர்த்தட்டு** *tañjāvūr-t-taṭṭu,* பெ. (n.) தஞ்சாவூரில் செய்யப்படும் மாழையினாலாகிய கலைநுணுக்கம் நிறைந்த தட்டு; ornamental metal plate. *2.* தஞ்சாவூரில் அணியம் செய்யப்படும் வேலைப் பாடுகளமைந்த வட்டவடிவமான அளிப் பொருள்; ornamental metal plate embossed with designs, originally of Thanjāvūr.

*[தஞ்சாவூர் + தட்டு - கலைவல்லுநர்க்கும் பல்துறை அறிவுப்புலத்தில், சீர்மையுடன் தன்னிகரற்றுத் திகழும் அறிஞர்கட்கும், அளிக்கப்படும் கொடைப்பொருள்.]*



**தஞ்சாவூர்முறுக்கு** *tañjāvūr-muṟukku,* பெ. (n.) சிப்புப்பண்ணியம் (சென்னை.); a kind of pastry.

*[தஞ்சாவூர் + முறுக்கு]*

**தஞ்சாவூர்வாழைப்பூ** *tañjāvūr-vāḻai-p-pū,* பெ. (n.) நெடுங்கோட்டுப் புடைவைவகை; a kind of striped saree. *2.* வறுமை: poverty, helplessness *(செ.அக.).*

மறுவ. சுந்தர வாழைப்பூ

*[தஞ்சாவூர் + வாழைப்பூ - தஞ்சாவூர் வாழைப்பூ. புடவைக் கரையில், வாழைப்பூ வடிவங்கள் தொடர்ந்து வடிவமைக்கப்பட்டு இருந்ததால், இப் பெயர் பெற்றிருக்கலாம்.]*

**தஞ்சி**[1] *tañji,* பெ.(n.) உடல் வலிமைக்கும் வயிற்றுப் பூச்சிகளைக் கொல்லவும், பயன்படுத்தும் மருந்துப்பூடு; a composite herb with yellow flowers formerly used as a tonic and anthelmentic - Tansy.

**தஞ்சி**[2] *tañji,* பெ. (n.) பை; a bag. "வெற்றிலைத் தஞ்சி" *(நாஞ்.).*

**தஞ்சு** *tañju,* பெ. (n.) *1.* பற்றுக்கோடு; support. *2.* அடைக்கலம்; refuge. "அது தஞ்செ‍ன வுணர்ந்திலை" *(கம்பரா. யுத். மந்திர. 16).*

**தஞ்செலவு** *tañjelavu,* பெ. (n.) தற்செயலாக நிகழுஞ் சிறுசெலவுகள் (நாஞ்.); contingent expense.

*[தன்செலவு → தஞ்செலவு. இயல்பாக ஏற்படுஞ் செலவு.]*

**தஞ்சை**[1] *tañjai*, பெ. (n.) தஞ்சாவூர் பார்க்க; see *Tañjāvūr*. "தஞ்சை மாமணிக் கோயிலே வணங்கி" (திவ்.பெரிய. தி. 1: 1: 6). "தஞ்சைத் தளிக்குலத்தார் தக்களூரார்" (தேவா. மும்மணிக்கோவை).

*[தன் + செய் → தன்செய் → தஞ்சை – குளிர்ந்த தண்ணறும் வயல் சூழ்ந்த ஊர்.]*

**தஞ்சை**[2] *tañjai*, பெ. (n.) தஞ்சாக்கூர் பார்க்க; see *Tañjākkūr*. "வாணன் றமிழ்த் தஞ்சை" (தஞ்சைவா. 17).

**தஞ்சைமாமணிக்கோவில்** *tañjai-māmaṇi-k-kōvil*, பெ. (n.) காவிரிக்குத் தென்கரையில் உள்ள, திருமால் கோவில்; பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வாரால் பாடப்பெற்ற தலம்; one of the Thirumāl pilgrimage centre, situated on the south bank of Cauvery, adorned by Būdattāḻvār and Tirumaṅgaiyāḻvār.

*[தஞ்சை + மாமணிக்கோவில்]*

**தஞ்சைமுழம்** *tañjai-muḻam*, பெ. (n.) தஞ்சைப் பெரியகோவிலை அமைக்கப் பயன்பட்ட 24 விரலளவு கொண்ட முழம்; a measure consists of 24 inch used to built and measure the big temple of Tañjore.

*[தஞ்சை + முழம்.]*

**தஞ்சைவாணன்** *tañjai-vāṇaṉ*, பெ. (n.) கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த பொய்யாமொழிப் புலவர் இயற்றிய தஞ்சைவாணன் கோவையின் பாட்டுடைத் தலைவன்; the hero of Tañjaivāṇaṉ-kōvai authored by Poyyā-moḻi-p-pulavar by 13th C. A.D.

*[தஞ்சை + வாணன்.]*

**தஞ்சைவாணன்கோவை** *tañjai-vāṇaṉ-kōvai*, பெ. (n.) தஞ்சைவாணன் மீது பொய்யாமொழிப் புலவரியற்றிய கோவைச்சிற்றிலக்கியம்; a poem on Tañjaivāṇaṉ by Poyyā-moḻi-p-pulavar (செ.அக.).

*[தஞ்சைவாணன் + கோவை. திருக்கோவையார், தொல்காப்பியத்திற்கு எடுத்துக்காட்டாதல் போல், நம்பியகப் பொருளுக்கு, இது நற்சான்றாகும்.]*

**தஞ்ஞன்** *taññaṉ*, பெ. (n.) அறிஞன்; intellectual.

*[தங்கு → தங்கன் → தஞ்ஞன் – மூளையில் படிப்பறிவும், பட்டறிவும் தங்கிக் கிடக்குந்தன்மையன்]*

**தஞ்ஞனம்** *taññaṉam*, பெ. (n.) தன்னை யறிந்தவன்; to know onelself. 'know thyself'.

*[தஞ்ஞன் + அம் – தஞ்ஞனம்]*

**தட்கு**[1]**-தல்** *taṭku-*, 5 செ.குவி. (v.i.) தங்குதல்; to remain; to abide. "அஞ்சுவரத் தட்கு மணங்குடைத்துப்பின்" (மதுரைக். 140).

*[தங்கு → தக்கு → தட்கு-. தட்குதல் = எஞ்சுதல். அடியில் தங்குதல், மீந்துபோதல்.]*

**தட்கு**[2]**-தல்** *taṭku-*, 5 செ.குன்றாவி. (v.t.) கட்டுதல்; to bind, enchain. "ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே" (புறநா. 193: 4.).

*[தள் + கு → தட்கு-. தள் → தளை – தட்கு. ஒ.நோ. உள் + கு = உட்கு.]*

**தட்டக்கல்** *taṭṭakkal*, பெ. (n.) தருமபுரி மாவட்டத்திலுள்ள ஒரூர்; a place in Dharumapuri district.

*[தட்டக்கல் = இவ்வூர், வட்டவடிவமான மலைபோன்ற தோற்றத்தையுடையதால், தட்டக்கல் என்றழைக்கப்பட்டிருக்கலாம்.]*

**தட்டக்கிருமி** *taṭṭa-k-kirumi*, பெ. (n.) நுண்ணுயிரி வகை; tape worms (சா.அக.).

*[தட்டம் + கிருமி]*

**தட்டகப்பை** *taṭṭagappai*, பெ. (n.) 1. தோசைத் திருப்பி (வின்.); spatula - like ladle for taking a baked dōsai from the frying pan. 2. சப்பை யகப்பை; flat ladle.

*[தட்டு + அகப்பை.]*

**தட்டச்சர்** *taṭṭaccar*, பெ. (n.) தட்டச்சுப் பணியாளர்; typist.

*[தட்டு + அச்சு – தட்டச்சு → தட்டச்சர்.]*

**தட்டச்சு** *taṭṭaccu*, பெ. (n.) தட்டச்சுப்பொறி தொடர்பானது; typewriting. தட்டச்சுத் தேர்வு (உ.வ.). தட்டச்சுப் பயிலகம், தட்டச்சுப்பணி (இ.வ.).

*[தட்டு + அச்சு.]*

**தட்டச்சுசெய்-தல்** *tattaccu-šey-*, 1 செ. குன்றாவி. (v.t.) எழுத்துக்களைப் பதிவு செய்தல்; to type on a type-writer. விண்ணப்பம் தமிழில் தட்டச்சு செய்யப்பட்டிருந்தது (இ.வ.).

*[தட்டச்சு + செய்-.]*

**தட்டச்சுப்பொறி** *tattaccu-p-pori*, பெ. (n.) தட்டச்சு செய்யும்பொறி; type-writer.

*[தட்டச்சு + பொறி.]*



**தட்டஞ்சுற்று-தல்** *tattañ-jurru-*, 5 செ.கு.வி. (v.i.) மாலையில் விளக்குத்தட்டுடன் கடவுளை வலம் வருதல் (இ.வ.); to go round the deity in a temple with a lighted salver in hand, during the evening service.

*[தட்டம் + சுற்று-.]*

**தட்டட்டி**[1] *tattatti*, பெ. (n.) செங்கல் குத்தி அமைத்த மச்சு; Chennai terrace.

மறுவ. தாருசு, இலாகடம், தட்டுமச்சு.

*[தட்டு + (அட்டு →) ஒட்டி = தட்டொட்டி → தட்டட்டி. தமிழ்நாட்டின் கூரை வகைகளுள் தலையாயது; சுவரின் மீது அருகருகாகத், துலாக்கட்டை அமைத்து, அதன் மீது, செங்கல்லைக் குத்துவசமாக ஒட்டி அமைக்கப்படும். கடுக்காய் நீர், கருப்பட்டிச்சாறு கலந்த, சுண்ணாம்புக் காரை பயன்படுத்தப்படும். துலாக்கட்டை பயன்பாடு கருதி, இலாகடம் ஒட்டுதல் என்று பேச்சு வழக்கிலுள்ளது.* Terrace *என்ற ஆங்கிலச்சொல் 'தாருசு ஒட்டுதல்' எனக் கொத்தனார்களிடையே வழங்குகிறது]*

**தட்டட்டி**[2] *tattatti*, பெ.(n.) மாடியின் தளப்பகுதி; (நெல்லை.); terraced-roof.

*[தட்டு + (அட்டு →) அட்டி]*

**தட்டட்டிபோட்டவீடு** *tattatti-pōtta-vīdu*, பெ. (n.) மாடித்தளம் உள்ள வீடு (முகவை.); terraced roof house.

மறுவ. மாடிவீடு, மச்சுவீடு

*[தட்டட்டி + போட்ட + வீடு]*

**தட்டடி** *tattadi*, பெ. (n.) கூத்தாட்ட வகையுளொன்று (யாழ். அக.); a kind of dance.

*[தட்டு + அடி. தப்பட்டை யெனுந் தட்டையான இசைக்கருவியில், கையால் அடித்து எழுப்பும் ஒவ்வொரு அடி யோசைக்கு ஏற்றவண்ணம், ஆடுங் கூத்து]*

**தட்டடி-த்தல்** *tattu-adi-*, 4 செ.கு.வி.(v.i.) கதவுகளுக்காக, மரச்சட்டங்களைப் பொருத்துதற்கு, மரத்தில் பள்ளம்செய்தல்; to cut out or make a notch or mortise in the edge of wooden board.

*[தட்டு + அடி-.]*

**தட்டடிதாளம்** *tattadi-tālam*, பெ. (n.) ஆடல் வகையுளொன்று; a kind of dance.

தட்டடிதாளம்: இன்னியத்திற்கு இயைந்தாடும் ஆட்டமாகும். தாளத்திற்கேற்ற வண்ணம் அடியெடுத்து வைத்து, தாளமும் ஆட்டமும் ஒரே நிரலில் அமையும் பாங்கினதாகும்.

*[தட்டு + அடி + தாளம்..]*

**தட்டடுவு** *tattaduvu*, பெ. (n.) வரிவகை (TAS iii. 216); a tax.

*[தட்டு + அடவு.]*

**தட்டப்படகு** *tatta-p-padagu*, பெ. (n.) தட்டைப்படகு; pontoon.

*[தட்டை + படகு]*

**தட்டத்தனி** *tattattani*, பெ. (n.) தன்னந்தனி (வின்.); loneliness.

*[தன் → தட்டு → தட்டம் + தனி - தட்டத்தனி]*

**தட்டத்துத்தி** *tatta-t-tutti*, பெ.(n.) தட்டையான துத்தி; a species of mallow.

*[தட்டம் + துத்தி]*

**தட்டப்பைவலை** *tatta-p-pai-valai*, பெ. (n.) தட்டையான பை போன்ற மீன்பிடிவலை; flat trawl.

*[தட்டை + பை + வலை – தட்டைப் பை வலை. தோளில் மாட்டிக்கொண்டு மீன் பிடிக்கும் வாயகன்ற வலை.]*

**தட்டம்**[1] *tattam*, பெ. (n.) *1.* உண்கலம் (சூடா.); porringer eating plate. *2.* தாம்பாளம்; salver (S.I.I. II 419). வெற்றிலைத் தட்டம் (இ.வ.). சாப்பிட்ட பின் தட்டத்தைக் கழுவி வை. (உ.வ.) *3.* பரந்த இதழையுடைய கோங்கு போன்ற பூ; flower, broad-petalled, as of koṅgu. "கோங்கின் றட்டமும்" (பெருங். உஞ்சைக். 57: 98). *4.* துயிலும்இடம் (பிங்.): sleeping room. *5.* படுக்கை (சது.); bed, bedding. *6.* கச்சு; broad tape. "புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்து" (நெடுநல். 126). *7.* கைகொட்டுகை; clapping of the hands. "வணங்கித் தட்டமு மிட்டெதிர் நடித்து" (விநாயகபு. 29: 7). *8.* தாடி (சா.அக.); beard. *9.* அல்குல்; female genital organ. *10.* வெள்ளை; whiteness.

க. தட்டே; ம. தட்டம்; தெ. தட்ட

*[தட்டு → தட்டம்; தட்டம் = தட்டையான கிண்ணம். 'அம்' சொல்லாக்க ஈறு. ஒ.நோ. வட்டு → வட்டம்; கட்டு → கட்டம்; மட்டு → மட்டம் (மு.தா. 121).]*

**தட்டம்**[2] *tattam*, பெ. (n.) குளம், நீர்நிலை; tank, pond. "தட்டத்து நீரிலே தாமரை" (திருமந். 2904).

*[தட்டம் : வட்டமாக அமைந்த நீர்நிலை, வட்டு = தட்டு + அம் – தட்டம் "அம்" சொல்லாக்க ஈறு, ஒ.நோ. கட்டம்]*

**தட்டம்**[3] *tattam*, பெ. (n.) *1.* பல் (திவா.); tooth. *2.* பாம்பின் மேல்வாய் நச்சுப்பல்: fangs of a snake in the upper row. "பிழிந்துயி ருண்ணுந் தட்டம்" (சீவக. 1286, உரை.).

*[தட்டு = பல்வரிசைத் தட்டு. தட்டு → தட்டம்]*

**தட்டம்**[4] *tattam*, பெ. (n.) *1.* நிலத்தில் விழுந்து வணங்குகை; prostration in worship. "கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே" (சி.சி. 12: 2: மறைஞா.). *2.* யானை செல்லும் வழி (சங். அக.): elephants path.

*[தண்டம் → தட்டம். தட்டம் – தடிபோற் கீழேவிழுந்து வணங்குதல், தட்டுத் தடுமாறி விழுதல் (உ.வ.)]*

**தட்டம்**[5] *tattam*, பெ. (n.) மோவாய் (யாழ். அக.); chin.

*[தட்டு → தட்டம்]*

**தட்டம்மன்** *tattamman*, பெ. (n.) தட்டம்மை பார்க்க; see *tattammai*.

*[அம்மை, மாரியம்மனின் சீற்றத்தால் தோன்றுகிறதென்ற எண்ணத்தால், தட்டம்மை → தட்டம்மன் என வழங்கலாயிற்று. ஒருகா. வட்டமாகத் திட்டுத்திட்டாகப் பெரியளவிற், புடைப்பாக உடம்பிற் காணப்படுவதால், இப் பெயர் பெற்றிருக்கலாம்.]*

**தட்டம்மை** *tattammai*, பெ. (n.) வெப்புநோய் வகை; chicken pox, measles. குழந்தைகளுக்கும் ஊட்டக்குறைவு உடையவர்களுக்கும் தட்டம்மை மிகுதியாக வருகிறது. (உ.வ.).

மறுவ. தட்டம்மன, சிச்சிலுப்பான், மணல்வாரி

தெ. தட்டம்ம

*[தட்டு + அம்மை = தட்டம்மை. தள் → தட்டு = புடைத்தல் (மு. தா. 121).]*

**தட்டல்**[1] *tattal*, பெ.(n.) *1.* கை முதலியவற்றால் தட்டுகை; knocking, striking, clapping, tapping. *2.* தாளமிடுகை (திவா.); beating time. *3.* தடுக்கை (திவா); checking, obstructing, rejecting. *4.* முட்டுப்பாடு; lack, scarcity. சோற்றுக்குத் தட்டலாயிருக்கிறது (உ.வ.). *5.* ஒன்றிலுள்ளதை வெளியிற்கொட்டுகை; emptying, discharging. *6.* தாலம் (வின்.); salver, tray. *7.* ஐந்து என்பதன் குழூஉக்குறி (யாழ்ப்.): five, a slang term. *8.* வயிறு தட்டல்; tapping the abdomen as in ascites.

*[தட்டு → தட்டல் = கையாலும் கருவியாலும் தட்டல். தட்டல் கருத்து, முட்டல் கருத்தினின்று முகிழ்த்தது. இரண்டு கைகள் ஒன்றோடொன்று முட்டுவதாலும், தட்டல் ஏற்படுகிறது. தப்பட்டை முதலான இசைக் கருவியில், கையாலும், கோலாலும் தட்டுவதாலும்,*

*முட்டற் கருத்தினின்று தட்டல் கருத்து உருவாகிறது எனலாம். இத்தட்டற் கருத்தே தடுக்குங்கால் தடைக்கருத்தைத் தோற்றுவிக்கிறது.]*

**தட்டல்தடவல்** *taṭṭal-taḍaval,* பெ. (n.) 1. *முட்டுப்பாடு;* scantiness, lack. என் பையிலே பணம் தட்டல் தடவலாயிருக்கிறது *(வின்.).* 2. *நடைதடுமாறுகை;* stumbling in gait, groping (செ.அக.).

மறுவ. பணப்பற்றாக்குறை, பணமுடை, பணநெருக்கடி

*[தட்டல் + தடவல் → தட்டல்தடவல் = பணத்தட்டுப்பாடு. தட்டுத்தடவிச் செலவு செய்கை.]*

**தட்டவை²-த்தல்** *taṭṭa-vai-,* 4 செ.குவி. (v.i.) *பொறுக்கவிடுதல்;* to pick up here and there, glen.

*[தட்ட + வை-.]*

**தட்டழி¹-தல்** *taṭṭaḻi-,* 4 செ.கு.வி. (v.i.) *சீர்கெடுதல்;* to deteriorate. 'சாப்பாடு மெல்ல மெல்லத் தட்டழிந்து' *(பஞ்ச. திருமுக. 274).*

*[தட்டு + அழி-. நிலை குலைதல். கட்டமைப்புத் தளர்தல், பதனழிதல். உறுதி கெடுதல்]*

**தட்டழி²-தல்** *taṭṭaḻi-,* 4 செ.குவி. (v.i.) 1. *நிலை குலைதல்;* to loose stability, put out of order, to be ruined. "தட்டழிந்தன பாரகம்" *(கந்தபு. வச்சிரவாகு. 63).* 2. *திகைத்தல்;* to be perplexed, disconcerted. "தட்டழிந் துளறுவார்" *(தாயு. பரிபூரண. 3).* 3. *தோல்வியுறுதல் (வின்.);* to be defeated, worsted as in a lawsuit, argument, etc. 4. *அல்லல்படுதல், தடுமாறுதல்;* to struggle with. சிறுசிறு வேலைக்கெல்லாம் தட்டழிய வேண்டியிருக்கிறது *(உ.வ.).*

ம. தட்டழியுக

*[தட்டு + அழி-.]*

**தட்டழி³-தல்** *taṭṭaḻi-,* 4 செ.கு.வி.(v.i.) *நிறைகோலிலுள்ள தட்டு, மேல்கீழாதல்;* to move up and down as the plates of a scale.

*[தட்டு + அழி-. தட்டு = நிலை. அழிதல் = மாறுதல்.]*

**தட்டழி⁴** *taṭṭaḻi,* பெ. (n.) *ஒருவகை இசைக்கருவி;* a kind of drum. "தட்டழி கொட்டிகள்" (S.I.I.ii, 527).

மறுவ. தம்பட்டம்

ம. தட்டழி

*[தட்டு + அழி = தட்டிமுழக்கும் ஒருமுகத் தோற்பறை.]*

**தட்டழி⁵** *taṭṭaḻi,* பெ. (n.) *வரிவகையுளொன்று;* a kind of tax.

**தட்டழிகொட்டிகள்** *taṭṭaḻi-koṭṭigaḷ,* பெ. (n.) *தட்டழியெனுந் தோற்கருவியினை இசைப்பவர்;* drummer. "திருவோணம் பெருவிழாவாக ஏழு நாளும் நிசதி நூறு விளக்கும், பதினாநாள் தட்டழி கொட்டிகளையும், கொண்டு செய்வித்து" *(கம்பவர்மன் கல்வெட்டு.)* (S.I.I. vii. 421)

மறுவ. கொட்டிமுழக்கிகள்; உவச்சர்; தப்பட்டைகொட்டிகள்

*[தட்டழி + கொட்டிகள். கொட்டு → கொட்டி = தோற்கருவி கொட்டுபவர்]*

**தட்டழிவு** *taṭṭaḻivu,* பெ.(n.) 1. *கலக்கம்;* confusion. 2. *மனக்குழப்பம்;* derangement, perplexity. 3. *தோல்வி;* defeat; ruin (செ.அக.).

மறுவ. இரண்டக நிலை, நிலைகுலைவு, தடுமாற்றம்

ம. தட்டழிவு; க. தத்தற; தெ. தத்தறமு

*[தட்டு + அழிவு]*

**தட்டளை** *taṭṭaḷai,* பெ. (n.) *வயலில் நீர் வடிய வெட்டப்படும் வடிகால்;* outlet, drain.

*[தண் + தளை → தட்டளை]*

**தட்டறை** *taṭṭaṟai,* பெ. (n.) *அடைப்பை முதலியவற்றிலுள்ள சிறிய உட்பை;* small inner pouch in a bag. "கைவாளத் தட்டறையிற் சோதித்தேன்" *(விறலிவிடு. 832).*

*[தட்டு + அறை. தட்டு = தடுப்பு, அடுக்கு.]*

**தட்டாக்குடி** *taṭṭā-k-kuḍi,* பெ. (n.) *பொற்கொல்லர்களின் இருப்பிடம் (இ.வ.);* goldsmith's quarters.

*[தட்டான் + குடி.]*

**தட்டாங்காரல்** *taṭṭāṅ-gāral,* பெ. (n.) வெண்ணிறமுள்ள சிறிய கடல்மீன் வகை; small sea-fish, silvery olive, Equla bindus.

*[தட்டு + ஆங்கு + ஆரல். ஆரல்மீன் வகை]*



**தட்டாடை** *taṭṭāḍai,* பெ.(n.) இடையில் அணியும் வேட்டி; cloth worn undivided about the loins.

மறுவ. அடையவளைந்தானுடை

*[தட்டு + ஆடை. தட்டு = அடுக்கு, நடுவிடம், நடு, இடை. இடையில் அணியும் ஆடை. ஆடு → ஆடை.]*

**தட்டாத்தி** *taṭṭātti,* பெ. (n.) பொற்கொல்லர் குடிமகள்; woman of goldsmith caste (செ.அக.).

*[தட்டார் + அத்தி → தட்டாரத்தி → தட்டாத்தி. அத்தி = பெண்பால் விகுதி. ஒ.நோ. மறத்தி, குயத்தி, ஆட்டனத்தி.]*

**தட்டாமல்வைத்தல்** *taṭṭāmal-vaittal,* பெ. (n.) ஒன்றோடொன்று தொடர்பின்றி வைத்தல்; keeping away from being united (சா.அக.).

*[தட்டாமல் + வைத்தல்]*

**தட்டாமாலை** *taṭṭāmālai,* பெ. (n.) 'தட்டாமாலை தாமரைப்பூ' என்று சொல்லிக்கொண்டு, சுற்றுதலாகிய பிள்ளை விளையாட்டுவகை (இ.வ.); children's play of whirling round, uttering *taṭṭāmālai-tāmarai-p-pū.*

தட்டாமாலை: கீழ்ப்பகுதி இணைக்கப்படாத மாலை. இம் மாலை போன்று, இணையாமல், ஒன்று சேராமல், சிறுவர் ஆடும் விளையாட்டு.

**தட்டார்பாட்டம்** *taṭṭār-pāṭṭam,* பெ. (n.) தட்டார் இறுக்கும் அரசிறைவகை; profession tax on goldsmiths. "இனவரி தறியிறை தட்டார்பாட்டம் எப்பேற்பட்ட வரிகளும்" (தெ. கல். தொ.III. 109).

*[தட்டார் + பாட்டம். பொற்கொல்லர் அரசிற்கு இறுத்திய இறை; பகுதி பகுதியாகச் செலுத்தும் இறையே, பாட்டமாகும். விட்டுவிட்டுக் கால இடைவெளிக்கிடையே செலுத்தும் பாட்டம். ஒ.நோ. பாட்டம் பாட்டமாக மழை பெய்தது.]*

**தட்டார்வெள்ளை** *taṭṭār veḷḷai,* பெ. (n.) நெல் வகை (நாஞ்.); a kind of paddy.

ம. தட்டாரவெள்ள

*[தட்டார் + வெள்ளை - வெண்மை நிறமுள்ள நெல்வகை]*

**தட்டாரக்காணி** *taṭṭāra-k-kāṇi,* பெ. (n.) கோவிலுக்குரிய அணிகலன்களைச் செய்யும் தட்டானுக்குரிய, இறையிலி நிலம்; the tax free land donated to the temple's goldsmith. "உலோ மாதேவீச்சரத்து தட்டாரப்பணி செய் காணி தட்டான் சக்கடி சமுதையனான செம்பியன் மாதேவிப் பெருந்தட்டான்" (S.I.I. V.515).

*[தட்டார் + காணி.]*

**தட்டாரச்சித்து** *taṭṭāra-c-cittu,* பெ. (n.) பொற்கொல்லுப் பட்டறையில் உள்ள பொன் துகள்; gold-dust found at goldsmith's place. தட்டாரச் சித்து தரையிலே (பழ).

மறுவ. பட்டறைப்பொடி

*[தட்டார் + சித்து]*

**தட்டாரநாயகன்** *taṭṭāra-nāyagaṉ,* பெ. (n.) பழைய நாணய வகை (சரவண, பணவிடு, 58); an ancient coin.

*[தட்டார் + நாயகன்]*

**தட்டாரப்பாட்டம்** *taṭṭāra-p-pāṭṭam,* பெ. (n.) தட்டார்பாட்டம் (S.I.I. iii, 115) பார்க்க; see *taṭṭār-pāṭṭam* (செ.அக.).

ம. தட்டாரப்பாட்டம்

*[தட்டார்பாட்டம் → தட்டாரப்பாட்டம். பொற்கொல்லர், வேந்தர்க்குச் சிறிது சிறிதாகச் செலுத்திய இறையே, பாட்டமாகும்]*

**தட்டாரப்பூச்சி** *taṭṭāra-p-pūcci*, பெ. (n.) 1. பளபளப்பான கண்களும், உருண்டையான தலையும், நான்கு அகன்ட இறகுகளும், நீண்டவாலும் கொண்ட, பறக்கும் பூச்சி; dragon-fly, Libellula rimaculata. 2. நுண்ணியிரி வகை; miller moth.

மறுவ. தட்டான், வண்ணத்துப் பூச்சி, தும்பி



**தட்டாரப்பொட்டு** *taṭṭāra-p-poṭṭu*, பெ. (n.) 1. புறப்புனைவு (யாழ். அக.); ostentation, show. 2. வெளித்தோற்றம்; outward.

*[தட்டார் + பொட்டு]*

**தட்டான்**[1] *taṭṭāṉ*, பெ. (n.) பொற்கொல்லன் (திவா.); gold or silversmith. "தட்டான் தாய்ப்பொன்னிலும் மாப்பொன் திருடுவான்" (பழ.).

ம. தட்டார்; இ. தட்டான்; தெ. தட்ரவாடு; குட. தட்டெ; பட. தட்ட; துட. தொட்ங்கன், தொட்ங்கின்; பிரா. டாடார்

*[துட்டு → தட்டு → தட்டான் = பொன்னை உருக்கித்தட்டி அணிகலன் செய்பவன்.]*

**தட்டான்**[2] *taṭṭāṉ*, பெ. (n.) புடலை; common snake-gourd.

மறுவ. தட்டான் கொட்டோசை

*[தட்டான் – தட்டையான நீண்டகாய்]*

**தட்டான்**[3] *taṭṭāṉ*, பெ. (n.) 1. தட்டாரப்பூச்சி பார்க்க; see *taṭṭāra-p-pūcci*. "தட்டான் தாழப்பறந்தால் தப்பாமல் மழைவரும்" (பழ.). 2. வெண்கோட்டம் (மலை); Arabian costume. 3. பாம்பு; snake (செ.அக.).

*[தட்டார் → தட்டான். உருக்கித் தட்டிய பொன்போல் மின்னும், வண்ணத்துப்பூச்சி]*

**தட்டான்**[4] *taṭṭāṉ*, பெ. (n.) கிழக்குரங்கு; age worn monkey. "இந்த நரைத்தட்டானை வந்து" (விறலிவிடு. 890).

**தட்டான்**[5] *taṭṭāṉ*, பெ. (n.) தட்டைப்பயிறு என்னும், ஒருவகைக் கூலம்; a variety of green gram.

ம. தட்டபயறு

*[தட்டை → தட்டான்.]*

**தட்டான்காய்** *taṭṭāṉ-kāy*, பெ. (n.) பச்சைத் தட்டைப்பயற்றங்காய்; a variety of green gram (சா.அக.).

*[தட்டான் + காய். முற்றாத நிலையிற் பொறிக்கறி சமைக்கப் பயன்படுங்காய். ஒருகா. தட்டாங்காய் → தட்டான்காய்]*

**தட்டான்குப்பம்** *taṭṭāṉ-kuppam*, பெ.(n.) செங்கை மாவட்டத்திலுள்ள ஓரூர்; a village in Cheṅgalpaṭṭu district.

*[தட்டான் + குப்பம். தட்டார் குழுமி வாழுமிடம். குப்பை யென்னும் வழக்கே குப்பமென்று திரிந்தது. ஒருகா: கும்பல் → குப்பல் → குப்பம்]*

**தட்டான்கொட்டோசை** *taṭṭāṉ-koṭṭōšai*, பெ. (n.) பாம்புப் புடோல் (மலை); common snake-gourd.

மறுவ. தட்டான்

**தட்டான்பட்டு** *taṭṭāṉ-paṭṭu*, பெ. (n.) செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள ஓரூர்; a village in Cheṅgalpaṭṭu district.

*[தட்டான்பட்டு = செங்கற்பட்டு மாவட்டத்தில் வேளாண் தொழில் ஓங்கியிருத்தலானும், தட்டாரும் பெரும் பான்மையாக வதிந்திருத்தலானும், இப் பெயர் பெற்றதென்றறிக.]*

**தட்டான்பூச்சி** *taṭṭāṉ-pūcci*, பெ. (n.) தட்டாரப்பூச்சி பார்க்க; see *taṭṭāra-p-pūcci*.

மறுவ. தட்டாரப்பூச்சி, வண்ணத்துப்பூச்சி, தும்பி

ம. தட்டான்பக்கி

*[தட்டான் பூச்சி = உருக்கிய பொன்போல் மின்னும் வண்ணத்துப் பூச்சி]*

**தட்டானுப்பி** *taṭṭāṉuppi*, பெ. (n.) படர் கொடிவகை (வின்.); a kind of creeper.

*[தட்டானுப்பி = நீண்டு செல்லும் படர் கொடி வகை]*

**தட்டி**[1] *taṭṭi*, பெ.(n.) *1.* காவல் (சூடா.); defence, safe-guard. *2.* சிறை; jail, prison. "தட்டியிலிருந்தவன் முடிசூடினாற்போலே" (ஈடு, 5, 7,1). *3.* கதவு (இலக். அக.); door. *4.* பிரம்பு முதலியவற்றாற் பின்னிய மறைப்புத்தடுக்கு; screen, as of cuscuss grass, rattan, etc. 'அங்கே தட்டி கட்டவேண்டும்'. *5.* கேடகம் (பிங்.); shield. *6.* போர்க்கருவி வகை; a weapon. "எழுவே தட்டி" (கந்தபு. சூரப. இரண்டாநாள். 6). *7.* இசைக் கருவி வகை; a kind of drum. "வியன்றுடி திமலை தட்டி" (பெரியபு. எறிபத். 3). *8.* அரைச் சல்லடம் (இலக். அக.); drawers. *9.* தாம்பாளம் (இ.வ.): salver, tray.

ம., பட. தட்டி; க. தட்டி, தடகு, தடிகெ; தெ. தடக, தடி; து. தட்டி, தடெ; H. taṭṭi; Pkt. ṭaṭṭi

*[துள் → தள் → தட்டு. தட்டுதல் = தடுத்தல், நீருள் மூழ்கினவனுக்குத் தரை தட்டுதலும், முற்செல்பவனுக்குச் சுவர் தட்டுதலும், தடையாகும். தட்டு → தட்டி = அறையை அல்லது வழியைத் தடுக்கும், மூங்கிற்பாய் அல்லது தென்னங்கிடுகு (மு.தா. 93). தட்டு → தட்டி (மு. தா. 101). முற்செல்வதைத் தடுக்கும் கட்டு; முற்செல்பவனைத் தடுத்து சுவர்கட்டி அமைக்கும் பகுதி, அறை; அறையை அல்லது வழியைத் தடுக்கும் மூங்கிற்பாய் அல்லது தென்னங்கிடுகால் ஆகியது, தட்டி எனப்பட்டது. பகைவர்தம் தாக்குதலைத் தடுத்துத் தாங்கும் தட்டி, கேடகம் எனப்பட்டது.]*

**தட்டி**[2] *taṭṭi*, பெ.(n.) *1.* வெண்கோட்டம் (ஒரு செடிவகை); Arabian costum. *2.* வெற்றிலைக் கட்டு (யாழ்ப்.); bundle of betel.

*[தள் → தட்டி]*

**தட்டி**[3] *taṭṭi*, பெ. (n.) வெட்டிவேர்த் தட்டி; cuscuss screen made of fragrant roots of cuscuss grass (சா.அக.).

*[தட்டு → தட்டி]*

**தட்டி**[2] *taṭṭi*, பெ. (n.) விளம்பரம் செய்ய வைக்கப் படும் மூங்கில் போன்றவற்றால் செய்யப்படும் அமைப்பு; arch like, banner like structure of plaited bamboos etc. தலைவர் வருகையை முன்னிட்டு ஏராளமான தட்டிகள் வைக்கப் பட்டிருந்தன (உ.வ.).

*[தட்டு → தட்டி]*

**தட்டிக்கதவு** *taṭṭi-k-kadavu*, பெ. (n.) மூங்கில், பனை, தென்னை ஓலைகளால் செய்யப் பெற்ற கதவு போன்ற தட்டி; screen, as of cuscuss, palmyra and coconut leaves, grass, rattan, etc., tatty. மூங்கில் பாயை அடைத்து, மூங்கில் பட்டையால், செய்யப்பட்ட கதவு (பொ. வ.).

*[தட்டு → தட்டி + கதவு.]*

**தட்டிக்கவி** *taṭṭi-k-kavi*, பெ. (n.) கருப்பூர ஆலத்திப்பாட்டு (கோயிலொ. 66); poem recited while offering camphor incense to an idol (செ.அக.).

மறுவ. பூசைப்பாட்டு

*[தட்டு → தட்டி + கவி.]*

**தட்டிக்கழி**[1]**-த்தல்** *taṭṭi-k-kaḻi-*, 4 செ. குன்றாவி. (v.t.) *1.* விலக்குதல்; to repel, get rid of. ஒட்டிக் கொண்டு போனாலுந் தட்டிக்கழிக்கிறான். *2.* ஒருவனுக்கு வரவேண்டிய தொகையிலிருந்து அவனாற் செல்லவேண்டிய (கொடுக்க வேண்டிய) தொகையைக் கழித்துக் கணக்கு முடித்தல் (இ.வ.): to give credit for a sum claimed.

*[தட்டி + கழி-.]*

**தட்டிக்கழி**[2]**-த்தல்** *taṭṭi-k-kaḻi-*, 4 செ.குவி. (v.i.) சாக்குப்போக்குச் சொல்லுதல் (இ.வ.); to give lame excuses.

*[தட்டு → தட்டி + கழி-.]*

**தட்டிக்கிளம்பு-தல்** *taṭṭi-k-kiḷambu-*, 5 செ.குவி. (v.i.) *1.* வளர்தல்; to rise, grow high, become tall. *2.* மேம்படுதல்; to rise to position or influence. *3.* மூண்டெழுதல்; to be animated with joy, with zeal for an enterprise, to be roused to anger (செ.அக.).

*[தட்டி + கிளம்பு-.]*

**தட்டிக்கேள்-தல்** (**தட்டிக்கேட்டல்**) *taṭṭi-k-kēḷ-*, *4 செ.குன்றாவி.* (v.t.) *1.* **அடக்கியாளுதல்;** to check, control. *தட்டிக்கேட்க ஆளில்லாமற் போனால் தம்பி சண்டப்பிரசண்டம் பண்ணுவான் (பழ.).* *2.* **தட்டிச்சொல்–,** *1 பார்க்க;* see *taṭṭi-c-col- 1. 3.* **கண்டித்தல்** *(வின்.);* to remonstrate. *தட்டிக்கேட்க ஆள் இல்லாததால் அவன் கெட்டு அலைகிறான் (உ.வ.). அரசின் தவறான போக்கைத் தட்டிக் கேட்கும் உரிமை மக்களுக்கு உண்டு (இ.வ.).*

*[தட்டு → தட்டி + கேள்–.]*

**தட்டிக்கொடு-த்தல்** *taṭṭi-k-koḍu-*, *4 செ. குன்றாவி.* (v.t.) *1.* **அமைதி பண்ணுதல்** *(இ.வ.);* to quiet, lull by gently tapping. *2.* **ஊக்கப் படுத்துதல்** *(இ.வ.):* to cheer, encourage, urge on, as by patting. *முதலாளி தொழிலாளர்களைத் தட்டிக்கொடுத்து வேலை வாங்கவேண்டும். (உ.வ.).* *3.* **தூண்டுதல்;** to incite. *4.* **ஒருவர்மீது தட்டிக் குறிப்புக்காட்டுதல்** *(வின்.);* to indicate or betray a person by tapping him.

*ம. தட்டிக்கொடுக்க*

*[தட்டி + கொடு–.]*

**தட்டிக்கொள்(ளு)[1]-தல்** *taṭṭi-k-koḷ(ḷu)-*, *7 செ. குன்றாவி.* (v.t.) *1.* **பறித்தல்;** to grasp anything within reach. *என்பொருளை வலக்காரமாகத் தட்டிக் கொண்டான்.* *2.* **திருடுதல்** *(இ.வ.);* to steal.

*[தட்டி + கொள்–.]*

**தட்டிக்கொள்(ளு)[2]-தல்** *taṭṭi-k-koḷḷu-*, *6 செ.குவி.* (v.i.) *1.* **தளர்தல்** *(வின்);* to be exhausted; to be in want. *2.* **மோதிக்கொள்ளுதல்;** to strike against; to be resisted by an obstacle; to run aground, as a ship. *3.* **தடைப்படுதல்;** to be obstructed, hindered, as in reading, speaking, etc. *4.* **பற்றாமற்போதல்** *(இ.வ.):* to fail, prove inadequate.

*[தட்டி + கொள்–.]*

**தட்டிகம்** *taṭṭigam*, *பெ.* (n.) **நிலப்பனை;** ground palm black musale.

**தட்டிகமாலு** *taṭṭiga-mālu*, *பெ.* (n.) **தட்டிகம்** *பார்க்க;* see *taṭṭigam.*

**தட்டிகா** *taṭṭigā*, *பெ.* (n.) *காசித்தும்பை;* Baneras lencas-Bolsom *(சா.அக.).*

**தட்டிச்சல்லடம்** *taṭṭi-c-calladam*, *பெ.*(n.) *ஒட்டுச்சல்லடம் (வின்.);* short drawers worn by wrestlers.

*ம. தட்டிச்சல்லடம்; க. தட்டி; தெ. தட்டி சல்லடமு; து. தட்டி*

*[தட்டி + சல்லடம்]*

**தட்டிச்சிந்து** *taṭṭi-c-cindu*, *பெ.* (n.) **தட்டிக்கவி** *(யாழ்ப்.) பார்க்க;* see *taṭṭi-k-kavi (செ.அக.).*

*[தட்டி + சிந்து]*

**தட்டிச்சுற்று[1]-தல்** *taṭṭi-c-cuṟṟu-*, *8 செ.குன்றாவி.* (v.t.) **கொள்ளையடித்தல்** *(இ.வ.);* to plunder.

*[தட்டு → தட்டி + சுற்று–.]*

**தட்டிசுற்று[2]-தல்** *taṭṭi-cuṟṟu-*, *5 செ.குவி.* (v.i.) **ஆலத்திசுற்றுதல்** *(யாழ்ப்.);* to wave plate with water mixed with turmeric powder and lime in welcoming.

*[தட்டு + சுற்றுதல் – தட்டுச்சுற்றுதல் → தட்டிச்சுற்றுதல், வட்டக்கருத்தினின்று சுற்றுதற்கருத் தோன்றிற்று. தட்டிச்சுற்றி யெடுக்கும் ஆலத்தியையும், காலப்போக்கிற் குறிப்பதாயிற்று]*

**தட்டிச்செல்லு[1]-தல்** *taṭṭi-c-cel(l)u-*, *13 செ.குவி.* (v.i.) **திறப்பாட்டால் வெல்லுதல்;** to succeed. *மகளிர் கால்பந்து விளையாட்டில், தமிழ்நாடு முதலிடத்தைத் தட்டிச் சென்றது. உலகத்தடகளப் போட்டிகளில் சில நாடுகளே தங்கப் பதக்கங்களைத் தட்டிச் செல்கின்றன (இ.வ.).*

*[தட்டு → தட்டி + செல்–.]*

**தட்டிச்செல்லு[2]-தல்** *taṭṭi-c-cel-*, *7 செ. குன்றாவி.* (v.t.) **வெல்லுதல்; ஒன்றைப் பெறுதல்;** (of competitions) to succeed (with ease); walk away with price. *மட்டைப் பந்துப் போட்டியில் ஆத்திரேலியா கோப்பையைத் தட்டிச் சென்றது.*

*[தட்டு → தட்டி + செல்–.]*

**தட்டிச்சொல்(லு)[1]-தல்** *taṭṭi-c-col(lu)-*, *செ.குவி.* (v.i.) **திக்கிப் பேசுதல்;** to stammer *(சா.அக.).*

*[தட்டு → தட்டி + சொல்லு–.]*

**தட்டிச்சொல்(லு)-தல்** *taṭṭi-c-col-*, 8 செ.குன்றாவி. (v.t.) *1.* **மறுத்துரைத்தல்;** to contradict, oppose, remonstrate, object to, protest against. *எதற்கெடுத்தாலும் தட்டிச் சொல்லுதலே அவன் வழக்கமாகிவிட்டது (உவ).* *2.* **தட்டிக்கேள்-1** பார்க்க; see *taṭṭi-k-kēḷ- 1.* *3.* **கூறியது கூறுதல்** (யாழ்ப்.); to speak or repeat a lesson haltingly.

*[தட்டி + சொல்-.]*

**தட்டிணைப்பு** *taṭṭiṇaippu*, பெ.(n.) இரண்டு மரச் சட்டங்கள் குறுக்குநெடுக்கில் அமைக்கும் போது, இடையில் இரண்டையும் பொருத்தும் **இணைப்புத் துண்டு;** piece or slice of wood to join or fasten.

*[தட்டி + இணைப்பு]*

**தட்டித்தடவு-தல்** *taṭṭi-t-taḍavu-*, 5 செ.கு.வி. (v.i.) **தடுமாறுதல்;** to stumble and grope about, fumble. *தட்டித்தடவி வாசிக்கிறான் (உ.வ.).*

*[தட்டு + தடவு - தட்டுத்தடவு → தட்டித் தடவு-.]*

**தட்டித்தடுமாறு-தல்** *taṭṭi-t-taḍumāṟu-*, 5 செ.கு.வி. (v.i.) **தட்டித்தடவு-தல்** பார்க்க; see *taṭṭi-t-taḍavu-.*

*[தட்டு → தட்டி + தடுமாறு-.]*

**தட்டித்திரி-தல்** *taṭṭi-t-tiri-*, 2 செ.கு.வி. (v.i.) **துன்பமுற்றலைதல்;** to knock about, go about in distress. *"பகலெல்லாம் தட்டித் திரிந்து" (திவ். திருமாலை: 5: வ்யா.).*

*[தட்டு → தட்டி + திரி-.]*

**தட்டிப்பறி-த்தல்** *taṭṭi-p-paṟi-*, 4 செ. குன்றாவி. (v.t.) *1.* **அடித்துப் பிடுங்குதல்;** to rob by force. *அவன் கைப்பொருளைத் தட்டிப் பறித்துக் கொண்டு துரத்திவிட்டார்கள்.* *2.* **வலக்காரமாய்ப் பறித்தல்;** to get by stratagem. *3.* **கவர்ந்து செல்லுதல்;** to snatch away. *குழந்தையின் கையில் இருந்த முறுக்கைக் காக்கை தட்டிப் பறித்துப் பறந்தது (உ.வ.).*

*[தட்டு → தட்டி + பறி-.]*

**தட்டிப்பார்-த்தல்** *taṭṭi-p-pār-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **தேங்காய், சுட்டபானை, காசு (நாணயம்) முதலியவற்றைச் சுண்டிப்பார்த்து வரும் ஒலியிலிருந்து, அவற்றின் இயல்பை அறிதல்;** to test the soundness, as of coconut or genuineness, as of coin, by tapping or flipping with the fingers. *பானையைத் தட்டிப்பார், காசை (நாணயத்தை)ச் சுண்டிப்பார்.* *2.* **கமுக்கம் (மந்தணம்) அறிய முயலுதல்** (வின்.); to try to find out secrets.

*[தட்டு → தட்டி + பார்-.]*

**தட்டிப்புடை-த்தல்** *taṭṭi-p-puḍai-*, 4 செகுன்றாவி. (v.t.) **முறத்தாற் கொழித்து நெல், பதர் முதலியவற்றைப் பிரித்தெடுத்தல்;** to separate grain from chaff by winnowing.

மறுவ. தட்டுப்புடை

*[தட்டு + தட்டி + புடை-.]*

**தட்டிப்பேசு-தல்** *taṭṭi-p-pēsu-*, 5 செ. குன்றாவி. (v.t.) **தட்டிச்சொல்(லு)-தல் 1,** (வின்.) பார்க்க; see *taṭṭi-c-col-1.* *தட்டிப் பேச ஆள் இல்லாவிட்டால் தம்பி சண்டப்பிரசண்டன் (பழ.).*

*[தட்டு → தட்டி + பேசு-.]*

**தட்டிப்போ-தல்** *taṭṭi-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) **நிறைவேறாமல் தள்ளிப்போதல்;** to fall through; miscarry. *வீடு கிடைக்கும் என்றிருந்த கட்டத்தில், ஏதோ காரணியத்தால் தட்டிப்போய் விட்டது (இ.வ.). ஒவ்வொரு முறையும் வேலை கிடைப்பது போலிருந்து, தட்டிப்போகிறது. (உ.வ.).*

*[தட்டு → தட்டி + போ-.]*

**தட்டிப்போடு[1]-தல்** *taṭṭi-p-pōḍu-*, 19 செ. குன்றாவி. (v.t.) *1.* **கவிழச்செய்தல்;** to strike and spill, overturn. *தட்டிப்போட்ட வறட்டியைப் புரட்டிப் போடக் காரணவ ரில்லை (பழ.).* *2.* **வெல்லுதல்** (வின்.); to overcome, as in a game. *3.* **மறுத்தல்;** to disregard, reject. *நான் சொன்னதைத் தட்டிப்போட்டான் (இ.வ.).*

*[தட்டு → தட்டி + போடு-.]*

**தட்டிப்போடு[2]-தல்** *taṭṭi-p-pōḍu-*, 19 செ. குன்றாவி. (v.t.) *1.* **தப்புதல்;** to elude, escape. *இந்தப் பொருள் தோன்றாமல் தட்டிவிட்டது.* *2.* **உழுதசாலில் திரும்ப உழுதல்** (யாழ்ப்.): to turn back the plough on the furrow and deepen it.

*[தட்டு → (தட்டி) + போடு-.]*

**தட்டிப்போடுதல்** *taṭṭi-p-pōḍudal,* பெ. (n.) இடித்து அல்லது நசுக்கிப்போடுதல்; striking or pounding flat and putting as drugs to prepare decoction.

*[தட்டு → தட்டி + போடு-.]*

**தட்டிமாறு-தல்** *taṭṭi-māṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. குற்றம் முதலியவற்றிற்கு விலகப் பார்த்தல்; to evade, shift a fault upon another; to give one the slip. 2. வலுவாயடித்தல்: to strike a heavy blow (செ.அக.).

*[தட்டு → தட்டி + மாறு-.]*

**தட்டியம்** *taṭṭiyam,* பெ. (n.) மதிப்புறு அரசச் சின்னங்களுள் ஒன்றான, நெடும்பரிசை (திவா.); large shield.

மறுவ. மரக்கேடயம்

*[தட்டு + இயம்; தட்டு = தடுப்பு, தடுக்கை. 'இயம்' - சொல்லாக்க ஈறு, ஒ.நோ. பெருவங்கியம், தமிழியம், ஐம்பெருங் காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம்]*

**தட்டியழை-த்தல்** *taṭṭi-y-aḻai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கைகொட்டிக் கூப்பிடுதல்; to call by clapping the hands. 2. போருக்கழைத்தல் (சீவக. 1109, உரை): to challenge to combat.

*[தட்டு → தட்டி + அழை-.]*

**தட்டியள-த்தல்** *taṭṭi-y-aḷa-,* 3 செ.குன்றாவி. (v.t.) தலையை வழித்துக் கூலம் முதலியவற்றை அளத்தல்; to measure grain, etc., striking off the heaped-up part at the top of a measure.

*[தட்டு → தட்டி + அள-. (தட்டி = சமமாகப் படியைத் தடவி)]*

**தட்டியிழை-த்தல்** *taṭṭiyiḻai-,* 4 செ.குன்றாவி. (v.t.) சமச்சீராக இழைத்தல்; to plane, scrape.

*[தட்டி + இழை-.]*

**தட்டியிழைப்புளி** *taṭṭi-y-iḻaippuḷi,* பெ. (n.) தச்சுக்கருவி வகை (C.E.M.); rabbet plane.

மறுவ. தட்டிழைப்புளி

*[தட்டு + இள் → இழை → இழைப்பு + உளி. அனைத்துப் பரப்பினையுஞ் சமமாக இழைக்குந் தச்சுக்கருவி.]*



**தட்டியெழுப்பு-தல்** *taṭṭi-y-eḻuppu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. தூங்குகிறவனைத் தட்டி யெழுப்புதல்; to make a sleeping man rise by tapping him. 2. தூண்டியெழுச்சி பெறச் செய்தல்; to arouse, to awake; to shake. பாவேந்தரின் பாக்கள் மக்களைத் தட்டி யெழுப்பின. தலைவரின் திறன்மிக்க அறிவு சான்ற பேச்சு தொண்டர்களைத் தட்டியெழுப்புவதாக இருந்தது.

*[தட்டு + எழுப்பு-.]*

**தட்டியோட்டு-தல்** *taṭṭi-y-ōṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மாட்டையடித்து வண்டியை விரைவாகச் செலுத்துதல்; to drive bullocks by beating.

*[தட்டு → தட்டி + ஓட்டு-. விரைவுக்குறிப்பு. விரைவாகச் செலுத்துதல்]*

**தட்டிலம்** *taṭṭilam,* பெ. (n.) 1. சதகுப்பை; dill-seed. 2. ஓமம்; sisonammi alias carum coticum.

**தட்டிவிடு[1]-தல்** *taṭṭi-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. மகிழ்ச்சியூட்டுதல்; to cheer up by patting; to encourage. 2. தட்டியோட்டு-தல் பார்க்க; see *taṭṭi-ōṭṭu-.* 3. விரைந்துசெய்தல்; to hurry up. இனி உன் வேலையைத் தட்டிவிடு (உ.வ.). 4. கவிழச்செய்தல்; to strike and spill. 5. குலையச்செய்தல்; to frustrate. செயல் நடவாதபடி தட்டி விட்டான். 6. மறுத்தல் (வின்.); to disregard. 7. உழவில் ஏர்களை முன்பின்னாக மாற்றுதல் (யாழ்ப்.): to change the position of different yokes of oxen, in ploughing. 8. வெட்டிவிடுதல்; to chop off. செல்வதற்குத் தடையாயிருப்பதால் மரக்கிளை களைத் தட்டிவிடுதல் நலம். 9. பின்வாங்கச்

செய்தல்; to dissuade. *உதவிசெய்வதாகச் சொன்னவனைத் தட்டிவிட்டான் (உவ).*

*[தட்டு → தட்டி + விடு-.]*

**தட்டிவிடு²-தல்** *tatti-vidu-, 20 செ.கு.வி.* (v.t.) *1.* **தப்புதல்;** to elude, to escape. இந்தப் பொருள் தோன்றாமல் தட்டிவிட்டது (உவ). *2.* **உழுதசாலில் திரும்ப உழுதல்** *(யாழ்ப்.);* to turn back the plough on the furrow and deepen it.

*[தட்டு → தட்டி + விடு-.]*

**தட்டிவை-த்தல்** *tatti-vai-, 4 செ. குன்றாவி.* (v.t.) **குறிப்பாகச் சொல்லுதல்** *(யாழ்ப்.);* to suggest, broach a subject. *(செ.அக.)*

*[தட்டு → தட்டி + வை-.]*

**தட்டிழைப்புளி** *tattilaippuli, பெ.* (n.) தட்டியிழைப்புளி பார்க்க; see *tatti-y-ilaippuli.* *(செ.அக.)*

*[துட்டு → தட்டு → தட்டி + இழைப்பு + உளி (மு.தா. 120).]*

**தட்டு¹-தல்** *tattu-, 5 செ. குன்றாவி.* (v.t.) *1.* **கதவு முதலியவற்றைப் புடைத்தல்;** to knock at, rap at; to tap, pat. *புரையேறிவிட்டால் தலையில் தட்டுவார்கள் (உ.வ.).'நன்றாக வரைந்திருக்கிறாய்' என்று கூறி மாணவனின் முதுகில் ஆசிரியர் தட்டினார் (உ.வ.)* *2.* **மோதுதல்;** to strike against, dash against, run around, as a vessel. *மரக்கலம் தரைதட்டிப் போயிற்று (உ.வ.). தேங்காயைத் தட்டிப்பார்த்து வாங்கு (இக்.வ.). கதவை இருமுறை தட்டிவிட்டு உள்ளே நுழைந்தான். (உ.வ.).* *3.* **கிட்டுதல்** (சூடா.); to approach, come in contact with. *4.* **கொட்டுதல்:** to strike or beat, as drum, tambourine. *"கிணை வள்ளியோன் முன்கடை தட்டி" (பு.வெ.9:58). காவலர் தட்டிய தட்டில் அவன் உண்மையைச் சொல்லிவிட்டான் (இ.வ.).* *5.* **உட்செல்லுமாறு அடித்தல்;** to drive in by hammering. *"தளிர்மேலே நிற்பினுந் தட்டாமற் செல்லா வுளி" (நாலடி. 355).* *6.* **அடித்து வீழ்த்துதல்;** to beat down from trees, as fruits, leaves; to thresh out, as grain, pulse, ground-nuts. *மரத்திலிருந்து புளிதட்ட ஆள் வேண்டும் (உ.வ.).* *7.* **தட்டித் தூசி போக்குதல்;** to dust, as bed. *படுக்கையைத் தட்டிப்போடு.* *8.* **நொறுக்குதல்** *(வின்.);* to crush by beating, as palmyra fruit. *9.* **உடைத்தல்** *(தைலவ. தைல.);* to beat and break, as nut-shells. *10.* **தட்டை யாக்குதல்:** to hammer out, flatten, as malleable metal. *ஆணியைத் தட்டி நேராக்கிக் கொடு (உ.வ.).* *11.* **பரம்படித்தவயலைச் சீராக்குதல்** *(நாஞ்.);* to level up a harrowed field. *12.* **அடித்துக் கூர்மையாக்குதல்:** to sharpen by beating, as with hammer. *கொழுத் தட்டுதல் (உ.வ.).* *13.* **களிமண்ணைக் கையால் தட்டி உருவாக்குதல்;** to mould with the hands by tapping, as clay. *14.* **சாணிமுட்டை முதலியன செய்தல்;** to beat into flat cakes, as dough, cattle-dung, etc. *15.* **நீரெற்றுதல்** *(யாழ்ப்.):* to throw out water with the foot or hand or basket. *16.* **கொட்டி விடுதல்;** to empty, pour out, as a sack of grain. *17.* **கவர்தல்;** to steal, pilfer, swindle; get by stratagem. *"தட்டிக்கொண்டு போனான்" (இராமநா. ஆரணி: 24).* *18.* **தள்ளுதல்;** to overturn, trip up. *தன் வலிமையால் எதிரியைத் தட்டிவிட்டான் (உ.வ.).* *19.* **இடித்து விடுதல்:** to batter, demolish. *சுவரைத் தட்டிவிடு.* *20.* **அகற்றுதல்** (வின்.); to get - dismissed, as a servant. *21.* **முறியடித்தல்** *(வின்.);* to out-beat, to vanquish. *22.* **தடுத்தல்;** to obstruct, hinder, ward off. *"தகையினாற் காறட்டி வீழ்க்கும்" (கலித். 97, 17).* *23.* **மறுத்தல்;** to oppose, contradict, disobey, reject, refuse. *"தட்டாது முன்னந்தருந் தெய்வம்" (குலோத். கோ. 37).* *24.* **புரட்டுதல்** *(வின்.);* to equivocate, palliate. *25.* **குலையச் செய்தல்;** to frustrate,thwart. *என் முயற்சியை யெல்லாந் தட்டிவிட்டான்.* *26.* **பின் வாங்கச் செய்தல்;** to dissuade. *உதவிசெய்வதாகச் சொன்னவனைத் தட்டிவிட்டான் (உ.வ).*

மறுவ. பட்டுதல்

*[தன் → தட்டு-. தட்டுதல் = கையால் அல்லது கருவியால் கொட்டுதல்; அஃதாவது ஒன்றை இன்னொன்றில் வலிதாய் முட்டச் செய்தல், தடுத்தல், நீருள் மூழ்கியவனுக்குத் தரை தட்டுதலும் முற்செல்பவனுக்குச் சுவர் தட்டுவதும், தட்டுதற்கருத்தின் நீட்சிப் பொருள் என்றறிக.*

தட்டுதற் பொருளின் பண்டை வினைச்சொல், பட்டுதல் ஆகும். இன்று வழக்கற்றது. பட்டுதற்கு அடையாக வைத்துக் கொள்ளும் கல் பட்டடை என்றும், பட்டும் (தட்டும்) அறை, பட்டறை என்றும், பட்டும் சாலை பட்டசாலை என்றும் வழங்குதல் காண்க. (மு.தா. 122)]

தட்டு[2]-தல் *tattu-*, 5 செகுவி. (v.i.) 1. *தப்புதல்;* to elude, escape. இந்தப் பொருள் தோன்றாமல் தட்டிவிட்டது (உ.வ.) 2. *பொருள்படாதிருத்தல்;* to be unintelligible. இந்தத்தொடர் தட்டுகிறது (உ.வ.). 3. *குறைவுபடுதல்;* to be scanty; to be scarce, as rain, cash. இவ்வாண்டு விளைவு தட்டிவிட்டது. (உ.வ.) 4. *மேலேபடுதல்;* to fall upon, as the rays of the sun. வெயில் தட்டாதபடி (ஈடு). 5. *தோன்றுதல்;* to appear, to exist; to arise, as a doubt. 6. *நினைவு எழுப்புதல்;* to suggest a thought. மறந்திருக்கையில் தட்டிக் காட்டினான். 7. *தடைபடுதல்;* to be at fault; to fail; halt, as the hand in playing on an instrument, writing, performing an operation, as the tongue in reading or speaking. 8. *தளைதட்டுதல்;* to hobble; to be halting, as verse.

ம. தட்டுக; தெ., க., பட. தட்டு; கோத. தட்; துட. தொட்; து. தட்டு, தட்டாவுனி; மா. தட்சை; குரு. தட்னா.

*[தள் (துட்டு) → தட்டு-.]*

தட்டு[3] *tattu*, பெ. (n.) 1. *தட்டுகை;* knocking patting, breaking. 2. *அடி;* stroke, beat, rap. "கடைக்கட் டட்டுக்கு உரித்தாகலின்" (சிலப். 3: 27, உரை). 3. *மோதுகை;* striking against, collision. 4. *தாளம்போடுகை* (சூடா.): beating time. 5. *விலக்குகை* (வின்.); warding off, averting, evasion. 6. *முட்டுப்பாடு;* scarcity, straits, lack. நெல்லுக்குத் தட்டாக இருக்கிறது. 7. *தடை;* opposition; impediment; frustration. 'விரோதிபோகைக்குத் தட்டில்லை' (ஈடு. 1. 2: 3). 8. *குற்றம்* (சூடா.); defect, blemish, fault. 9. *தீமை* (சூடா.); evil. 10. *மறைவு;* screen, folded or plain. 11. *வீட்டின்அறை* (நாஞ்.); compartment, as of a house. 12. *காவல்* (பிங்.); guard. 13. *வலக்காரம்* (வின்.); dexterous performance or manoeuvre, stratagem, trick. 14. *ஊதியம்;* profit. அவனுக்கு நல்ல தட்டு. 15. *பயிர்த்தட்டை* (வின்.); stalk of grain. 16. *ஒத்த நிலம்; சமப்பரப்புப் பகுதி* (வின்.): area, plain surface. 17. *சிறுசெய்:* plot of a field, of a garden-bed. 18. *தகடு:* anything flat. 19. *தட்டம்;* salver of metal or wood, tray. 20. *நிறைகோல் தட்டு;* scales of a balance. 21. *வட்டம்* (பிங்.): circle. 22. *வளைவு* (சூடா.); curve or bend. 23. *கேடகம்* (பிங்.): shield, buckler. 24. *குயவன் திரிகை* (பிங்.); potter's wheel. 25. *இயந்திரம்* (வின்.); hand mill. 26. *முறம்* (சூடா.); winnowing or sifting pan. 27. *ஒருவகைக் கூடை;* broad, shallow basket. 28. *பரண்தட்டு;* shelf. 29. *தேர் முதலியவற்றின் நடுவிடம்;* loft or range of a temple car, floor of a carriage; flat surface of a palanquin. "தட்டுடைப் பொலிந்த திண்டேர்" (சீவக. 767). 30. *கட்டடத்தின் மேனிலை;* upper storey of a building. 31. *உயர்விடம்;* platform, balcony, piazza. 32. *உட்காரும் தடுக்கு;* mat to sit on. 'தட்டிடுக்கி யுறிதூக்கிய" (தேவா. 439: 10). 33. *கப்பற்றட்டு;* deck, as of a ship. 34. *அடுக்கு;* lamina; layer; stratum. 35. *நெடுங்கை;* common rafter. "சந்துபோழ்ந் தியற்றியதட்டு வேய்ந்து" (சீவக. 155). 36. *பலகணி முதலியவற்றின் தட்டு;* panel of a door, pane of glass. 37. *கழுத்தணித் தட்டு;* square pieces of a necklace. 38. *பறவை பிடித்தற்குரிய வலையைச் சேர்ந்த சதுரத்தட்டு* (வின்.); square frame to which snares are fastened to catch birds. 39. *மரச்சட்டத்திலுள்ள துளை;* mortise in a wooden frame-work. 40. *தகரத்தில் துளையிட்டுச் செய்த கோலத் தட்டு;* perforated tin stencil for drawing ornamental figures. 41. *பூவிதழ்;* petal of flowers. "தட்டலர்த்த பொன்னே யலர் கோங்கின்" (திவ். பெரிய. தி. 7: 3: 6). 42. *பக்கம்;* side, direction. இரண்டு தட்டிலும் (உ.வ.). 43. *உப்பளம்;* salte-pans.

ம. தட்டுக; க., தெ. தட்டு

*[துள் → தள் → தட்டு. ஒன்றைத் துளைத்தல்; துளைத்து வளைத்துத் தட்டுதல். ஒ.நோ. வள் → வட்டு. தட்டு =*

*தட்டையானது, வலைத்தட்டு, தேர்த்தட்டு, பூத்தட்டு, வெற்றிலைத்தட்டு முதலிய வற்றினை நோக்குக. பாத்தி= வரிசையான நிலப்பகுதியும் தட்டு எனப்படும் (மு. தா. 112).]*

**தட்டுக்கடுதாசி** *tattu-k-kaḍudāši*, பெ. (n.) தனித்தாள் (புதுவை); single sheet of paper.

*[தட்டு + கடுதாசி]*

**தட்டுக்கல்** *tattu-k-kal*, பெ. (n.) 1. குயவர் பாண்டந்தட்டுகையில், உட்பக்கம் துணையாகக் கொள்ளும் (ஆதாரமாகக் கொள்ளும்) செதுக்கிய, சிறு கருங்கல் (இ.வ.); a stone used by potter while beating clay into shape. 2. வெற்றிலைபாக்குத் தட்டுதற்குரிய, குழவியும் கல்லும் (இ.வ.); a small mortar and pestle for pounding together areca-nut, betel, etc.

*[தட்டு + கல்.]*

குயவர் கோயில்களுக்கு நன்கொடை வழங்குகையில் கல், தட்டுப்பலகை வடிவங்களை அடையாளமாகச் செதுக்கி வைப்பதைத் திருச்செங்கோடு, நிலத்தம்பிரான் கோயிலினுள் அமைந்துள்ள, முக்குறுனிப் பிள்ளையார் காலடியில், இன்றுங் காணலாம்.

**தட்டுக்காயம்** *tattu-k-kāyam*, பெ. (n.) முற்காலத்து வழங்கிய வரிவகை; an ancient tax. "கண்ணாலக் காணமும் ஊரெட்டும் குசக்காணமும் தட்டுக்காயம்" (S.I.I.II. 521).

*[தட்டு + கு + ஆயம்]*

**தட்டுக்காரன்** *tattu-k-kāraṉ*, பெ. (n.) 1. ஏமாற்றுக்காரன்; cheat. 2. வலக்காரன், சூழ்ச்சிக்காரன்; cunning fellow. 3. முரடன்; rouge.

மறுவ. தட்டுமாரி

*[தட்டு + காரன்; ஒ.நோ. வீட்டுக்காரன் மாட்டுக்காரன் "காரன்" உடைமைப் பெயரீறு. தட்டு மாறுந்தன்மைத்து. தட்டுமாறுவது போல் ஏமாற்றிச் சூழ்ச்சி செய்பவன் என்றறிக]*

**தட்டுக்காவனம்** *tattu-k-kāvaṉam*, பெ. (n.) சமதளக் கூரையுடைய பந்தல்; equally erected pandals.

**தட்டுக்கிளி** *tattu-k-kiḷi*, பெ. (n.) 1. நிலத்திற் சதுரக்கோடு கீறி ஆடும், "உப்புக்கொடு" என்னும் விளையாட்டு; the boy's game. 2. கிளித்தட்டில் ஒருபக்கத்துத் தலைவன்; leader of a party in the game of kiḷi-t-tattu (செ.அக.).

*[தட்டு + கிளி]*



**தட்டுக்கிளிபாய்தல்** *tattu-k-kiḷi-pāydal*, பெ. (n.) தட்டுக்கிளி, 1 (யாழ்.அக.) பார்க்க; see *tattukkiḷi,1.*

*[தட்டுக்கிளி + பாய்தல்]*

**தட்டுக்குச்சு** *tattu-k-kuccu*, பெ. (n.) 1. காதிலணியும் திருகாணியென்னும் அணிகலன் (நெல்லை); a small ear-ornament. 2. காதணித்துளை தூர்ந்துபோகாமல் இருக்க, அத்துளையில் செருகப்படும் குச்சி அல்லது ஓலைச்சுருள்; a short piece of splinter or palm leave roll to keep the hole in the ear for ornaments, alive.

மறுவ. தட்டுககுச்சு

*[தட்டு + குச்சி → குச்சு.]*

**தட்டுக்குதிரை** *tattu-k-kudirai*, பெ. (n.) குதிரை வகை (இ.வ.); pony.

*[தட்டு + குதிரை]*

**தட்டுக்குழம்பு-தல்** *tattu-k-kuḻambu-*, 5 செ.குவி. (v.i.) தட்டுக்கெடு-தல் (நாஞ்.) பார்க்க; see *tattu-k-kedu-*.

*[தட்டு + குழம்பு-.]*

**தட்டுக்கூடை**[1] *tattu-k-kūḍai*, பெ. (n.) அகன்ற கூடை வகை; broad, shallow basket (செ.அக.).

*[தட்டு + கூடை. வாயகன்ற, தட்டையான கூடை]*



**தட்டுக்கூடை**[2] *tattu-k-kūḍai,* பெ. (n.) 1. தட்டுவாணி, 3 (இவ.) பார்க்க; see *taṭṭu-vāṇi,3.* 2. மீனவர்கூடை (தஞ்சை. மீன.); fisherman's basket.

*[தட்டு + கூடை.]*

**தட்டுக்கெடு-தல்** *taṭṭu-k-keḍu-*, 20 செகுவி. (v.i.) 1. மனங்கலங்குதல்; to be greatly alarmed, perplexed, distracted, bewildered. 2. வறுமையால் நிலைகெடுதல்; to be in great straits; to be shattered, broken down by poverty. 3. தடுமாறிப் போதல்; to be misled, mistaken. 4. இழப்படைதல் (வின்.): to suffer loss. 5. தாறுமாறாதல்; to be disjointed. 6. தட்டுண்டுபோ-. 3 பார்க்க; see taṭṭuṇḍu-pō- 3. 'தட்டுக்கெட்டு முறுக்குப் பாய்ஞ்சு (பாய்ந்து) கிடக்கிறது' (பழ.).

*[தட்டு + கெடு-.]*

**தட்டுக்கேடு** *taṭṭu-k-kēḍu,* பெ.(n.) 1. குழப்பம்; perplexity, bewilderment. 2. வறுமை; want, destitution. 3. இழப்பு; loss. 4.அழிவு; defeat, discomfiture, ruin. அன்று வளமாக வாழ்ந்தவன் இன்று தட்டுக்கெட்டுப் போய்விட்டான் (உவ.).

மறுவ. தட்டுக்கேடு

*[தட்டு + கேடு. கெடு → கேடு.]*

**தட்டுக்கொட்டு** *taṭṭu-k-koṭṭu,* பெ. (n.) 1. கொட்டு முழக்கு (இவ.); playing of drums and pipes. 2. போலிநடிப்பு (யாழ்ப்.); empty show. 3. மினுக்குப்பொருள் (வின்.); bauble, gewgaw. 4. சூழ்ச்சி (யாழ்.அக.); trick, stratagem.

*[தட்டு + கொட்டு]*

**தட்டுக்கொடி** *taṭṭu-k-kōḍi,* பெ. (n.) எட்டு மூலையுள்ள பட்டம் (யாழ்ப்.); octagonal paper-kite.

*[தட்டு + கொடி]*

**தட்டுக்கோல்** *taṭṭu-k-kōl,* பெ. (n.) குயவரின் திரிகை சுற்றும் கோல் (இவ.); turning stick of the potter's wheel.

*[தட்டு + கோல்]*

**தட்டுச்சரி** *taṭṭu-c-cari,* பெ. (n.) மகளிர் முன் கையில் அணியும் அணிவகை; a kind of ornament worn by women on the forearm. "தட்டுச் சரியைச் சரியாகக் கைக்கணிந்து" (கூளப்ப. 136).

*[தட்டு + சரி]*

**தட்டுச்சீட்டு** *taṭṭu-c-ciṭṭu,* பெ.(n.) குலுக்கி எடுக்கும் சீட்டு; a kind of chit transaction, where prize is determined by drawing of lots (செ.அக.).

மறுவ. கொட்டுச் சீட்டு

*[தட்டு + சீட்டு]*

**தட்டுச்சுளகு** *taṭṭu-c-cuḷagu,* பெ. (n.) அகன்ற முறவகை; broad winnowing-fan (செ.அக.)

*[தட்டு + சுளகு. அல் → சுல் → சுள் + கு = சுளகு, தட்டு = அளவு]*



**தட்டுச்சுற்று** *taṭṭu-c-cuṟṟu,* பெ.(n.) 1. எரியணத் தட்டுச் (சூடன்.) சுற்றுகை; waving a salver with lighted camphor before an idol. 2. தட்டுடை பார்க்க; see *taṭṭuḍai.*

க. தட்டிச்சுட்டு

*[தட்டு + சுற்று]*

**தட்டுடை** *tattudai,* பெ. (n.) வேட்டி; cloth worn round the loins, without passing it between the legs; "வேறு மடியொன்றைத் தட்டுடையாக உடுத்திக்கொண்டு" (மீனாட்.. சரித். ii, 152).

மறுவ. தட்டாடை, அடையவளைந்தானுடை

*[தட்டு + உடை]*

**தட்டுண்டுபோ-தல்** *tattundu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. சிதறுண்ணுதல் (வின்.); to be beaten off, scattered. 2. கதிரடிபடுதல் (வின்.); to be threshed out, as rape seed. 3. தடைப்படுதல்; to be thwarted; to fail, as an expected good. காரியம் தட்டுண்டு போயிற்று (உ.வ.). 4. கலங்குதல்; to be upset. அவன் தட்டுண்டு போனான் (இ.வ.). 5. சரக்கு மோசடியாய் மாற்றப்படுதல் (வின்.); to be exchanged clandestinely and fraudulently, as commodities.

*[தட்டுண்டு + போ-.]*

**தட்டுண்ணல்** *tattunnal,* பெ. (n.) குறைந்து போதல்; becoming decreased.

*[தட்டு + உண்ணல்]*

**தட்டுத்தடக்கு** tattu-t-tadakku, பெ.(n.) தட்டுத் தடை (வின்.) பார்க்க; see *tattu-t-tadai.*

*[தட்டு + தடக்கு]*

**தட்டுத்தடங்கல்** *tattu-t-tadangal,* பெ. (n.) தட்டுத்தடை (இ. வ.) பார்க்க; see *tattu-t-tadai.*

மறுவ. தட்டுத்தடை

*[தடு → தடக்கு → தடங்கு → தடங்கல். தட்டுத்தடங்கல் என்பது மரபுத்தொடர் (மு.தா. 101).]*

**தட்டுத்தடவல்** *tattu-t-tadval,* பெ. (n.) 1. தட்டுத் தடை பார்க்க; see *tattu-t-tadai.* 2. குறைவு; insufficiency, scantiness.

மறுவ. தட்டுத்தடக்கு, மிகக்குறைவு

*[தட்டு + தடவல்]*

**தட்டுத்தடுமாறு-தல்** *tattu-t-tadumāru-,* 5 செ.கு.வி. (v.i.) 1. இயல்பாகச் செய்ய முடியாமல் திணறுதல்; to struggle; fumble. இருட்டில் தட்டுத் தடுமாறிப் படியேறினான் (உ.வ.). 2. தடுமாறுதல்; to stumble and grope about totter.

*[தட்டு + தடுமாறு-.]*

**தட்டுத்தடை** *tattu-t-tadai,* பெ. (n.) 1. தடை; hindrance, impediment. 2. தடுமாற்றம்; hestitation.

மறுவ. தட்டுத்தடவம், தட்டுத்தடங்கல், தட்டுத்தடக்கு

*[தட்டு + தடை]*

**தட்டுத்தாவரம்** *tattu-t-tāvaram,* பெ. (n.) புகலிடம் (யாழ்ப்.); resort, refuge.

*[தட்டு + Skt. தாவரம்]*

**தட்டுப்படி** *tattu-p-padi,* பெ.(n.) மரக்கட்டில் (நாஞ்.); wooden-cot.

ம. தட்டுபடி

*[தட்டு + படி]*

**தட்டுப்படு-தல்** *tattu-p-padu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தடைப்படுதல்; to be stopped, checked, obstructed. "அதிலே வந்தவாறே தட்டுப்படும்" (ஈடு. 4. 9: 6). 2. குறைவுபடுதல்; to be lacking, wanting, as stores, money, rain. எனக்குப் பணம் தட்டுப்படுகிறது (உ.வ.). 3. புலன்களுக்கு செய்தியாதல்; to be perceived by the senses or the intellect (செ.அக.).

*[தட்டு + படு-.]*

**தட்டுப்பலகை** *tattu-p-palagai,* பெ. (n.) 1. இளகியத் தரையைக் கெட்டிக்குங்கட்டை (முக. வழக்.); rammer plank. 2. கூரைவீடுகளில் கூரை வேயும்போது, தட்டையைத் தட்டிச் சரி செய்யப் பயன்படும் மரப்பலகை (முக. வழக்.); a wooden plank used for levelling hay.

ம. தட்டுபலக



*[தட்டு + பலகை. தட்டு = ஒன்றொடு ஒன்று முட்டி, அடித்துச்சேர்த்தல்:*

*முட்டுதற்கருத்தினின்று முகிழ்த்த வேரடியாகும். முட்டும்பொருள் ஒன்று சேருந்தன்மைத்து. நிலத்தையோ, கூரையையோ சமப்படுத்தும் முட்டுப் பலகை, தட்டுப்பலகை ஆயிற்று.]*

**தட்டுப்பலா** *taṭṭu-p-palā*, பெ. (n.) தந்தப்பலா *(பலாவின் ஒருவகை);* a kind of jack-fruit.

*[தட்டு + பலா]*

**தட்டுப்பற-த்தல்** *taṭṭu-p-paṟa-*, 3 செ.குவி. (v.i.) திடீரென மறைந்தொழிதல் (இ.வ.); to disappear suddenly, vanish, as taking wings all of a sudden.

*[தட்டு + பற-.]*

**தட்டுப்பனாட்டு** *taṭṭu-p-paṉāṭṭu*, பெ. (n.) *1.* உலரவைத்த பனம்பழச்சாறு; dried cakes of the fruit of palmyra. *2.* பனைவெல்லக் கட்டி *(யாழ்ப்.);* dried cakes of palmyra sugar.

*[தட்டு + பனாட்டு]*

பனாட்டு யாழ்ப்பாணத்தின் சிறப்புணவு வகையாகும். தற்போது, தருமபுரி மாவட்டத்தில், மாம்பழச்சாற்றைப் பிழிந்து, உலரவைத்து அவற்றின் மூலமாக இன்சுவைப் பண்டஞ் செய்து, பெருவிலைக்கு விற்கின்றனர்.

**தட்டுப்பா** *taṭṭu-p-pā*, பெ. (n.) தேரின் மேலிடும் பரப்பு (திவா.); a kind of seat in a chariot.

*[தட்டு + பாய் = தட்டுப்பாய் → தட்டுப்பா.]*

**தட்டுப்பாடல்** *taṭṭu-p-pāḍal*, பெ. (n.) *1.* தட்டி மினுக்கின புடைவை (யாழ். அக.); saree brushed and polished. *2.* தட்டுப்பாடன் பார்க்க; see *taṭṭu-p-pāḍaṉ* (செ.அக.).

*[தட்டு + பாடல்]*

**தட்டுப்பாடன்** *taṭṭu-p-pāḍaṉ*, பெ. (n.) பளபளக்கும் முகப்புள்ள புடைவை; the glittering border saree.

*[தட்டுப்பாடன் = பொன், வெள்ளி இழைகள், மின்னும்வண்ணம், இருமருங்கும் கலையழகுடன் முகப்பமைந்த, புடைவை]*

**தட்டுப்பாடு** *taṭṭu-p-pāḍu*, பெ. (n.) குறைவு; shortage.

*[தட்டு + பாடு. பாடு = சொல்லாக்க ஈறு]*

**தட்டுப்பாய்தல்** *taṭṭu-p-pāydal*, பெ. (n.) கிளித்தட்டு (இ.வ.) விளையாட்டு; a boy's game.

*[தட்டு + பாய்தல்]*

**தட்டுப்பிழா** *taṭṭu-p-piḻā*, பெ. (n.) வட்டமாய் முடைந்த பெட்டிவகை; a round wicker basket or tray. "தட்டுப் பிழாவிலே உலர வாற்றி" *(பெரும்பாண். 276, உரை.).*

*[தட்டு + பிழா.]*

**தட்டுப்புடை** *taṭṭu-p-puḍai*, பெ. (n.) தவசத்தை முறம் முதலியவற்றாற், புடைக்கை (தொல். சொல். 77, இளம்பூ., பி.வி. 16, உரை); winnowing and sifting grain with fan.

*[தட்டிப்புடை → தட்டுப்புடை]*

**தட்டுப்புழுகு** *taṭṭu-p-puḻugu*, பெ.(n.) புனுகுப் பூனையின் உடலினின்று கொய்த பாகத்திலிருந்து நறுக்கியெடுக்கும் புழுகு (வின்.); civet extracted from the dried and beaten flesh of the civet cat. *2.* புனுகுச் சட்டம்; secretion from the gland in the anal pouch of the civet cat. "தட்டுப்புழுகுஞ் சாத்தி" *(S.I.I, viii, 186).*

ம. தட்டுப்புழுகு

*[தட்டு + புழுகு]*

**தட்டுப்பொருத்துதல்** *taṭṭu-p-poruttudal*, பெ. (n.) பலகை, சட்டம் ஆகியவற்றை இணைப்புத் தெரியாமல் சேர்த்து ஒட்டுதல் (இ.வ); connecting frame, as of plank door etc.

*[தட்டு + பொருத்துதல்]*

**தட்டுப்போடு-தல்** *taṭṭu-p-poḍu-*, 20 செ.குவி. (v.i.) சேலையின் முன்றானையை இருவர் பற்றி, மீன்பிடித்தல் (இ.வ.); to catch fish by means of a cloth held by two persons at the ends.

*[தட்டு + போடு-.]*



**தட்டுபடி** *taṭṭu-paḍi,* பெ. (n.) தட்டுப்படி (நாஞ்.) பார்க்க; see *taṭṭu-p-paḍi.*

*[தட்டு + படி]*

**தட்டுமடி**[1] *taṭṭu-maḍi,* பெ.(n.) ஆழமான கடலில் இடும் வலைவகை (வின்.); fishing net used in deep sea, dist. fr. karai-maḍi.

*[தட்டு + மடி]*

**தட்டுமடி**[2] *taṭṭumaḍi,* பெ. (n.) 1. தட்டுமடிவலை பார்க்க; see *taṭṭumaḍi-valai*. 2. மீன்பிடிவலைப் பை; a shore net-bag.

ம. தட்டுமடி

*[தட்டு + மடி. மடி = வலைப்பட்ட மீன் இறங்கும், வலைக்கூறு]*

**தட்டுமடிவலை** *taṭṭu-maḍi-valai,* பெ. (n.) மிகச் சிறுமீன்கள் மட்டுமே வலைப்படும், சிறு கண்களுடைய மீன்பிடிவலை (குமரி. மீன.); a short net-bag with small holes.

மறுவ. சிறுகண் வலை

*[தட்டு + மடி + வலை. மடி = வலைப்பட்ட மீன் சென்றடையுங் கடைக்கூறு]*

**தட்டுமணி** *taṭṭu-maṇi,* பெ. (n.) பொற்றட்டுகளாலாகிய கழுத்தணி (யாழ். அக.); small necklace of square pieces of gold.

*[தட்டு + மணி]*

**தட்டுமறி-த்தல்** *taṭṭu-maṟi-,* 4 செ.குவி. (v.i.) கிளித்தட்டு விளையாடுதல் (இ.வ.); to play the game of kiḷi-t-taṭṭu.

*[தட்டு + மறி-.]*

**தட்டுமாது** *taṭṭu-mādu,* பெ. (n.) பால்வினைநோய் தீர்க்கும் மருந்து; a curative medicine for venereal disease (சா.அக.)

*[தட்டு + மாது]*

**தட்டுமாற்று** *taṭṭu-māṟṟu,* பெ. (n.) சூழ்ச்சி (வின்.); stratagem.

*[தட்டு + மாற்று]*

**தட்டுமாற்று-தல்** *taṭṭu-maṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பட்டிழை அணியம்செய்யும்போது, அல்லது பட்டுப்பூச்சி வளர்ப்பின்போது, தட்டைத் தூய்மை செய்து மாற்றுதல்; to clean the plate in sericulture (செங். க.).

*[தட்டு + மாற்று-.]*

**தட்டுமாறி**[1] *taṭṭu-māṟi,* பெ. (n.) ஏமாற்றுபவ-ன்-ள் (வின்.); cheat.

*[தட்டு + மாறி]*

**தட்டுமாறி**[2] *taṭṭu-māṟi,* பெ. (n.) நிலை குலைந்த பெண்; unchaste woman (சா.அக.).

மறுவ. கட்டுக்குலைந்தவள், ஆள்மாறி

*[தட்டு + மாறி. கற்பு நெறியினின்று வழுவியவள்]*

**தட்டுமாறு-தல்** *taṭṭu-māṟu-,* 5 செ.குவி. (v.i.) 1. நிலைகெடுதல்; to be upset, overturned. "வானாடழிந்து தட்டுமாறிடினும்" (கொண்டல் விடு. 278). 2. கெட்டுப்போதல்; to become corrupt morally.

*[தட்டு + மாறு-.]*

**தட்டுமானம்** *taṭṭu-māṉam,* பெ. (n.) 1. ஏமாற்று (நாஞ்.); cheating. 2. சூழ்ச்சி (இ.வ.): cunning ways.

*[தட்டு + மானம். 'மானம்'- சொல்லாக்க ஈறு. (ஓ.நோ.) கட்டுமானம், வருமானம்]*

**தட்டுமிளகுதண்ணீர்** *taṭṭumiḷagu-taṇṇir,* பெ. (n.) காரமுள்ள கொதி வகை; a hot juice of pepper, etc.

*[தட்டுமிளகு + தண்ணீர்]*

**தட்டுமுட்டு** *taṭṭu-muṭṭu,* பெ. (n.) 1. அறைகலன்; furniture, goods and chattels, articles of various

kinds. "தட்டுமுட்டு விற்று மாற்றாது" (பணவிடு. 225). 2. கருவிகள்; apparatus, tools, instruments, utensils. 3. மூட்டைமுடிச்சு (வின்.); luggage, baggage.

ம. தட்டுமுட்டு; தெ. தட்டுமுட்டு; து. முட்டு, தட்டுமுட்டு, தட்டிமுட்டு.

[தட்டு + முட்டு]

**தட்டுமுறிதல்** *tattu-muridal,* பெ. (n.) தரைக்குக் கீழ், பாறையமைப்பில் தோன்றும் மாற்றம்; the underground change of rock position.

[தட்டு + முறிதல்]

**தட்டுமேடு** *tattu-mēdu,* பெ. (n.) உப்பு கொட்டிவைக்கப் பயன்படும் மேட்டு நிலம்; raised platform to keep salt.

மறுவ. உப்பு மேடு

[தட்டு + மேடு]

**தட்டுருவு-தல்** *tatturuvu-,* 5 செ.கு.வி. (v.i.) ஊடுசெல்லுதல் (யாழ். அக.); to pass through, penetrate.

[தட்டு + உருவு-.]

**தட்டுரொட்டி** *tattu-rotti,* பெ. (n.) கையால் தட்டிய சூட்டடை (ரொட்டி); hand made bread (சா.அக.).

மறுவ. ஈரட்டி

[தட்டு + ரொட்டி. இரட்டி → ரொட்டி. தட்டுரொட்டி. - மாவினைத் தட்டி, இரு மருங்கிலும் அட்டிச் சுடப்படும் சூட்டடை]

**தட்டுவம்** *tattuvam,* பெ. (n.) பனையோலை யாற் செய்த உண்கலம் (யாழ்ப்.); palmyra leaves plaited like a plate for holding food.

[தட்டு → தட்டுவம். "அம்" சொல்லாக்க ஈறு. ஒ.நோ: சட்டுவம்]

**தட்டுவாணி**[1] *tattu-vāni,* பெ.(n.) 1. மட்டக் குதிரை; Indian-bred pony. 2. மராட்டிய நாட்டுக் குதிரை (அசுவசா. 3); horse of the Marātti country. 3. விலைமகள் (இ.வ.); prostitute. 4. கணவனுக்கடங்காத மனைவி; jade (செ.அக.).

[தட்டு + வாணி. படைவீரனுக்கடங்காத குதிரைக்குத் 'தட்டுவாணி' என்றும், 'சண்டி' என்றும் பெயர். அப் பெயர், கணவனுக்கு அடங்காத மனைவியையுங் குறிக்கும். jade என்ற ஆங்கிலச்சொல் அடங்காக் குதிரையையும் அடங்கா மனைவியையும் குறித்தது ஒப்பு நோக்கத்தக்கது. (சொ. ஆ.க. பக். 100)]

**தட்டுவாணி**[2] *tattu-vāni,* பெ. (n.) கலைமகள்; goddess of knowledge.

[தட்டு + வாணி. தட்டு = இதழ், தாமரை. வாணி = வாழ்பவள்; தாமரையில் வாழும் கலைமகள்]



**தட்டுவாய்விரிதல்** *tattuvāy-viridal,* பெ. (n.) பொன்னாக்க (வாத) முறைப்படி செய்யாத குற்றத்தால், சுத்திகொண்டு பொன்னைத் தட்டும்போது, நசிந்து ஒடியாது, வாய் பிளத்தல்; a defect in the composition of gold arising from want of malleability by which a metal is rendered in capable of being shaped or beaten flat with a hammer (சா.அக.).

[தட்டுவாய் + விரிதல்]

**தட்டுவிக்கினம்** *tattu-vikkinam,* பெ. (n.) தட்டம், மேனிலை; strater, higher.

[தட்டு + Skt. விக்கினம்]

**தட்டுவேலி** *tattu-vēli,* பெ.(n.) மறைப்புவேலி; fence.

[தட்டு + வேலி. தட்டு - தடுத்து மறைக்கை, தடுப்பு]

**தட்டுளுப்பு** *tattuluppu*, பெ. (n.) தடுமாற்றம்; disturbed condition, as of mind. bewilderment. "தத்த மதங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்க" (திருவாச. 15: 6).

*[தட்டு + உளுப்பு. உளுப்பு = நிலை தடுமாறுகை]*

**தட்டெடு-த்தல்** *tattedu-*, 4 செ.கு.வி. (v.i.) தோட்டம் முதலியவற்றில் வரப்பெடுத்தல் (நாஞ்.); to put up ridges with a view to divide into beds, as a garden.

*[தட்டு + எடு-.]*

**தட்டெழுத்தர்** *tatteluttar*, பெ. (n.) தட்டச்சர்; typist.

*[தட்டு + எழுத்தர்]*

**தட்டெழுத்து** *tatteluttu*, பெ. (n.) தட்டச்சு பார்க்க; see *tattaccu*.

*[தட்டு + எழுத்து]*

**தட்டெழுத்துஇயந்திரம்** *tatteluttu-iyandiram*, பெ. (n.) தட்டச்சுப்பொறி; type-writer (கிரி. அக.).

*[தட்டெழுத்து + இயந்திரம்]*

**தட்டை**[1] *tattai*, பெ. (n.) *1.* பரந்தவடிவம்; flatness. *2.* முறம் (பிங்.): winnowing-fan. *3.* திருகாணி என்னும் அணிகலன்; small ear-ornament like a tack, worn in the upper helix. "மறுவில் செம்பொன் மணிகெழு தட்டைகள்" (கந்தபு.தானப். 17). *4.* தினை முதலியவற்றின் தாள் (பிங்.); stalk, stubble. *5.* மூங்கில்; spiny bamboo. "தட்டைத் தீயின்" (ஐங்குறு 340). *6.* கிளிகடிகருவி; a mechanism made of split bamboo for scaring away parrots from grain field. "புனவர் தட்டைப்புடைப்பின்" (புறநா. 49: 4). *7.* கவண் (திவா.); sling. *8.* கரடிகைப் பறை; a kind of drum. "நடுவு நின்றிசைக்கு மரிக்குரற் றட்டை" (மலைபடு. 9). *9.* மொட்டை (சூடா.); baldness. *10.* அறிவிலி; fool, empty-headed person. "கைவிரிந்து தாழ்விடத்து நேர்கருதுந் தட்டையும்" (திரிகடு. 15). *11.* தீ (அக. நி.); fire. *12.* கொட்டைக்கரந்தை; madras absinth.

ம. தட்ட; க. தட்டெ; தெ. தட்ட; குட. தட்டெ

*[தள் → தட்டு → தட்டை. தட்டை = சோளம், கரும்பு முதலிய பயிர்களின் அடி.]*

**தட்டை**[2] *tattai*, பெ. (n.) ஒருகாலணி; a tinkling anklet. "தட்டை ஞெகிழங்கழல்" (கந்தபு. திருவிளை. 2).

ம. தட்ட

*[தண்டை → தட்டை - சல்சல்லென ஒலிக்குஞ் சிலம்பம்]*

**தட்டைக்கருங்கொள்ளு** *tattai-k-karun-kollu*, பெ. (n.) அவுரிச்செடிவகை; a kind of indigo, Indigofera hirsuta.

*[தட்டை + கருமை + கொள்ளு; கருமை நிறங்கொண்ட, தட்டையான பயறு]*



**தட்டைக்கச்சா** *tattai-k-kaccā*, பெ. (n.) தட்டையான ஆற்று மீன் (தஞ்சை. மீன); river-fish.

மறுவ. அயிரைமீன்

*[தட்டை + கச்சா]*

**தட்டைக்கரும்பு** *tattai-k-karumbu*, பெ. (n.) சுவையற்ற கரும்பின் மேற்பகுதி; tasteless upper part of sugarcane (சா.அக.).

மறுவ. கொழுந்தாடை

*[தட்டை + கரும்பு]*

**தட்டைக்கல்** *tattai-k-kal*, பெ. (n.) தரையிலும், சுவரிலும், பாவுதற்குப் பயன்படும் பாவுகல்; the polished and designed marble tiles.

*[தட்டை + கல்]*

**தட்டைக்கவலை** *taṭṭai-k-kavalai*, பெ. (n.) தட்டைவடிவமான கவலைமீன்; Malabar sea fish.

*[தட்டை + கவலை]*

**தட்டைக்கவலைவலை** *taṭṭai-k-kavalai-valai*, பெ. (n.) மீன்பிடி வலை; Malabar fish-net.

*[தட்டை + கவலை + வலை]*

**தட்டைக்காரை** *taṭṭai-k-kārai*, பெ. (n.) தட்டைக் காறை பார்க்க; see *taṭṭai-k-kāṟai*.

மறுவ. காரல் மீன்

*[தட்டை + காரை]*

**தட்டைக்காறை** *taṭṭai-k-kāṟai*, பெ. (n.) மீன் வகை (சங். அக.); a kind of fish.

*[தட்டை + காறை]*

**தட்டைக்கிருமி** *taṭṭai-k-kirumi*, பெ. (n.) குடலிலுள்ள ஒருவகைக் கிருமி; a kind of flat worm found in the intestines - Platy helminthes.

*[தட்டை + கிருமி]*

**தட்டைக்கிருமிநோய்** *taṭṭai-k-kirumi-nōy*, பெ. (n.) உடம்பில் தட்டைநோய் உயிரி மிகுவதால், அடிவயிற்றில் ஏற்படும், நோய்; disease arising from the presence of abnormal number of flat worms in the abdomen (சா.அக.).

*[தட்டை + கிருமி + நோய்]*

**தட்டைக்கோரைக்கிழங்கு** *taṭṭai-k-kōrai-k-kiḻaṅgu*, பெ. (n.) கோரைப்புல்லின் கிழங்கு; the bulbous root of cyprus grass (சா.அக.).

*[தட்டைக்கோரை + கிழங்கு]*

**தட்டைச்சம்பங்கி** *taṭṭai-c-cambaṅgi*, பெ. (n.) சம்பங்கி வகை; tuberose, garden bulp, Polianthes tuberosa (செ.அக.).

*[தட்டை + சம்பங்கி]*

**தட்டைச்சிட்டு** *taṭṭai-c-ciṭṭu*, பெ. (n.) சிட்டுக் குருவிவகை; a kind of house sparrow, passer indicus.

*[தட்டை + சிட்டு]*

**தட்டைத்தலை** *taṭṭai-t-talai*, பெ. (n.) தட்டையான பெரியதலை (வின்.); large, flat head.

*[தட்டை + தலை]*

**தட்டைத்திருப்பு** *taṭṭai-t-tiruppu*, பெ. (n.) அணிகலன் வகை (யாழ். அக.); a kind of ornament.

*[தட்டை + திருப்பு]*

**தட்டைநாக்குப்பூச்சி** *taṭṭai-nākku-p-pūcci*, பெ. (n.) நாடாப்புழு உயிரிவகை (m.m. 960); a kind of tape-worm, Taenia solium. (செ.அக.)

*[தட்டை + நாக்குப் பூச்சி]*

**தட்டைப்படகு** *taṭṭai-p-paḍagu*, பெ. (n.) மரக்கல வகை; a kind of boat.

*[தட்டை + படகு]*

**தட்டைப்பயறு** *taṭṭai-p-payaṟu*, பெ. (n.) பெரும்பயறு, பயறுவகை (பதார்த்த, 841); chowlee bean.

மறுவ. காராமணி

ம. தட்டப்பயறு

*[தட்டை + பயறு]*

**தட்டைப்பாம்பு** *taṭṭai-p-pāmbu*, பெ. (n.) தட்டையாயிருக்கும் கடற்பாம்பு வகை; a kind of flat sea-snake - Hydrophis.

*[தட்டை + பாம்பு]*



**தட்டைப்பீருகம்** *taṭṭai-p-pīrugam*, பெ. (n.) கம்பரிசி; rice of kambu.

*[தட்டை + பீருகம்]*

**தட்டைப்பீலி** *taṭṭai-p-pīli,* பெ. (n.) சுண்டு விரலுக்கடுத்த விரலில் அணியும் தட்டை முகமுள்ள அணி (இ.வ.); flat - faced, ring-worm on the fourth toe.

*[தட்டை + பீலி]*

**தட்டைப்புடையுநர்** *taṭṭai-p-puḍaiyunar,* பெ. (n.) பறவையோட்டுங் கருவியையுடைய மகளிர்; the women who has chasing bat.

*[தட்டை + புடையுநர்]*

**தட்டைப்புழு** *taṭṭai-p-puḻu,* பெ. (n.) உண்ணும் இறைச்சி மூலம், மனிதஉடலினுள் சென்று வாழும் ஒரு வகைப்புழு;; tape-worm (கிரி. அக.).

*[தட்டை + புழு]*

**தட்டைப்புன்கு** *taṭṭai-p-puṉgu,* பெ. (n.) புன்னைமர வகை; Indian beech, l.tr., Pongamia glabra.

மறுவ. பால்புன்கு

*[தட்டை + புன்கு]*

**தட்டைப்பூச்சி** *taṭṭai-p-pūcci,* பெ. (n.) தட்டை நாக்குப்பூச்சி பார்க்க; see *taṭṭai-nākku-p-pūcci.*

*[தட்டை + பூச்சி]*

**தட்டைப்பைவலை** *taṭṭai-p-pai-valai,* பெ.(n.) வலை வகை; flat trawl.

**தட்டைமூங்கில்** *taṭṭai-mūṅgil,* பெ.(n.) மூங்கில் வகை; spiny bamboo (சா.அக.).

*[தட்டை + மூங்கில்]*

**தட்டையம்மை** *taṭṭai-y-ammai,* பெ. (n.) தட்டம்மை (வின்.) பார்க்க; see *taṭṭammai.*

*[தட்டை + அம்மை]*

**தட்டையரம்** *taṭṭai-y-aram,* பெ. (n.) மாழைகளையும் வன்பொருள்களையும் அராவும் இரும்புக்கருவி; flat rasp.

*[தட்டை + அரம்]*

மறுவ. முரட்டு அரம்

நுணுகிய அருங்கலைப்பணியினைச் செய்வதற்கும், விலைமதிப்புள்ள பொருட்களை அராவுதற்கும், பயன்படும் தட்டையான அரம்.

**தட்டையாதீதம்** *taṭṭaiyādīdam,* பெ. (n.) சோளம்; great millet.

**தட்டையாமணக்கு** *taṭṭai-y-āmaṇakku,* பெ. (n.) குச்சியாமணக்கு; a kind of castor plant (சா.அக.).

*[தட்டை + ஆமணக்கு]*

**தட்டையிழைப்புளி** *taṭṭai-y-iḻaippuḷi,* பெ. (n.) மரம் இழைக்கும் இழைப்புளி வகை (கட்டட நாமா: 39); priming plane.

*[தட்டு (தட்டை) + இழைப்பு + உளி. அடிப்பாகம் தட்டையாய் அமைந்ததும், நிலைக்கதவம், சாளரம், கட்டில் போன்ற மரவுருப்படிகளை இழைப்பதற்குப் பயன்படுவதுமான, இழைப்புளி வகை.]*

**தட்டையெலும்பு** *taṭṭai-y-elumbu,* பெ. (n.) தகட்டெலும்பு; flat bone (சா.அக.).

*[தட்டை + எலும்பு]*

**தட்டைவளைவு** *taṭṭai-vaḷaivu,* பெ. (n.) தட்டையான வளைவு வகை; a kind of flat curve.

*[தட்டை + வளைவு]*

**தட்டொட்டி** *taṭṭoṭṭi,* பெ. (n.) தட்டட்டி (இ.வ.); terraced-roof.

*[தட்டொட்டு → தட்டொட்டி = தட்டையான ஓடு மேய்ந்த, மேற்கூரை]*

**தட்டொட்டு** *taṭṭoṭṭu,* பெ. (n.) சுட்ட ஓடு (பொ. வழ.); burnt-tile.

மறுவ. சீமையோடு, தட்டோடு

*[தட்டையாக அட்டிச் செய்யப்பட்ட ஓடு]*

**தட்டொலி**[1] *taṭṭoli,* பெ. (n.) வரி வகை (S.I.I. ii, 114); an ancient tax.

*[தட்டு: + ஒலி = இன்னியம் பாடுவோர் செலுத்திய வரி]*

**தட்டொலி**[2] *taṭṭoli,* பெ. (n.) பட்டறை அமைத்துத் தொழில் செய்யும் கம்மாளர், கொல்லர் போன்றோர் இறுக்கும் வரி (கல்); professional tax on black smiths.

**தட்டொளி** *tattoli*, பெ. (n.) மாழையால் (உலோகத்தால்) ஆன கண்ணாடி வகை; metal mirror. "உக்கமுந் தட்டொளியுந் தந்து" (திவ். திருப்பா. 20).

*[தட்டு + ஒளி. தட்டைவடிவாயுள்ள கண்ணாடியினின்று பெறப்படும் ஒளி: ஒளிபோல் மிளிரும் மாழையாலாகிய கண்ணாடி]*

**தட்டோட்டுவீடு** *tattōttu-vīdu*, பெ. (n.) 1. நாட்டுஓடுகளாலான கூரையுடைய வீடு (செங்கை.); burnt-tile terraced house. 2. தட்டோடு பார்க்க; see *tattōdu.*

*[தட்டோட்டு + வீடு]*



**தட்டோடு** *tattōdu*, பெ. (n.) 1. தட்டை ஓடு (சிலப். 5. 7: அரும்); pantile. 2. கூரையை மூடுமாறு இடும், வளைவுள்ள ஓடு; common country tile.

மறுவ. சீமையோடு

*[தட்டு → தட்டை (தட்டையாகச் செய்த) + ஓடு]*

**தட்டோட்டுக்கட்டுக்கோப்புவீடு** *tattōttu-k-kattu-k-kōppu-vīdu*, பெ. (n.) நாட்டு ஓடுகளால் வேயப்பட்ட கூரையும், அனைத்து அமைப்புகளும் அமைந்த பெரியவீடு (செங்கை.); a big house with all facilities and roofed with country tiles.

*[தட்டோடு + கட்டுக்கோப்பு + வீடு]*

**தட்பம்** *tatpam*, பெ. (n.) 1. குளிர்ச்சி; cold, coolness. 2. விசிறுதல் முதலிய உடற் களைப்பைப் போக்கும் அருட்பணிவிடை; fanning and other acts necessary for cooling the body. "பலதட்பந் தாஞ்செய்ய" (சீவக. 1810). 3. அன்பு, அருள்; love, mercy. "அழகிய தட்பத்தினை யுடையார்" (குறள், 30, உரை).

க. தண்பு

*[துள் → தள் → தண் → தணம். தண் → தட்பு → தட்பம். குளிர்ச்சி சூட்டைத் தணிப்பதால் தணித்தற்கருத்தில், குளிர்ச்சிக் கருத்துப் பிறந்தது. வெப்ப நாட்டில் சூடு, தணிவு மிக முதன்மையாகக் கருதப்படும் (மு. தா. 271).]*

**தட்பவெப்பநிலை** *tatpa-veppa-nilai*, பெ. (n.) ஒரு பகுதியில் நிலவும் வெப்பம், காற்று, குளிர் முதலியவற்றின் நிலை; climate, climatic condition. உள்நாட்டுத் தட்பவெப்பநிலைக்குப் பொருந்தாத முறையில் வீடுகள் கட்டப்படுகின்றன (இக்.வ.).

மறுவ. பருவநிலை

*[தட்பவெப்பம் + நிலை]*

**தட்பவெப்பம்** *tatpa-veppam*, பெ. (n.) தட்பவெப்பநிலை பார்க்க; see *tatpa-veppa-nilai.*

*[தட்பம் + வெப்பம்]*

**தட்பவெப்பமாற்றம்** *tatpa-veppa-māṟṟam*, பெ. (n.) பருவநிலையி லேற்படும் மாறுபாடு; climatic change.

*[தட்பவெப்பம் + மாற்றம்]*

**தட்டோர்** *tattōr*, பெ. (n.) தடைப்படச் செய்தோர்; the people who obstructed or hindered.

**தட**[1] *tada*, கு.பெ.எ. (adj.) மெல்லிய; soft, tender. "தடந்தா ளென்பது மெல்லிய வாகிய ஸ்ரீபாத மென்றவாறு" (நீலகேசி, அவையடக்கம். 1, உரை.)

**தட**[2] *tada*, கு.பெ.எ. (adj.) பெரிய; large, broad, full. "தாடோய் தடக்கை" (புறநா. 14: 11). 2. வளைந்த; bent, curved. "தடங்கோட் டெருமை" (ஐங்குறு. 98).

**தடக்கம்** *tadakkam*, பெ. (n.) தடக்கு (இவ.) பார்க்க; see *tadakku.*

**தடக்கிப்பேசு-தல்** *taḍakki-p-pēšu-*, 5 செ.கு.வி. (v.i.) திக்கிப்பேசுதல் (வின்.); to stutter, speak with hesitation.

மறுவ. தெற்றிப்பேசுதல்

*[தடு → தட → தடக்கு + பேசு-. தட்டுத் தடுமாறிப் பேசுதல்.]*

**தடக்கு[1]-தல்** *taḍakku-*, 5 செ.கு.வி. (v.i.) தடைப்படுதல் (வின்.); to be obstructed, impeded, detained.

*[தடு → தட → தடக்கு-.]*

**தடக்கு[2]-தல்** *taḍakku-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. தடைபண்ணுதல் (யாழ்.அக.); to obstruct, hinder, detain. 2. இடறுதல் (யாழ்ப்.); to trip up.

*[தடு → தட → தடக்கு-.]*

**தடக்கு[3]** *taḍakku*, பெ. (n.) தடை; obstacle, hindrance, impediment (செ.அக.).

*[தடு → தட → தடக்கு]*

**தடகம்** *taḍagam*, பெ. (n.) 1. ஏரி; lake. 2. தடாகம் பார்க்க; see *taḍāgam.*

*[(துட்டு →) தட்டு → தட்டம் → தடம் = அகலம். அகன்ற குளம். தடம் → தடகம் (மு.தா. 117). தடாகம் → தடகம்.]*

**தடகளப்போட்டிகள்** *taḍa-kaḷa-p-pōṭṭigaḷ*, பெ. (n.) தடங்களின் வழியாக நடத்தப்படும் போட்டிகள்; track and field events.

*[தடகளம் + போட்டி]*

**தடங்கண்** *taḍaṅgaṇ*, பெ. (n.) பெரியகண்; large-eyes.

*[தட = பெரிய. தட → தடம் + கண்]*

**தடங்கண்ணி** *taḍaṅgaṇṇi*, பெ. (n.) பெருங் கண்களையுடையவள்; large eyed woman.

*[தட → தடம் + கண்ணி]*

**தடங்கல்** *taḍaṅgal*, பெ. (n.) 1. தடை; hindrance, impediment, obstruction. "தடங்கலின்றி யடுசரமே மிடைந்த" (சூளா. அரசி. 212). ஊழியர்களின் வேலைநிறுத்தத்தினால் குடிநீர் வழங்குவதில் தடங்கல் ஏற்பட்டுள்ளது. (இ.வ.). 2. தடை (வின்.); objection. 3. அடைப்பு; confinement, detention, as of stray cattle. 4. காலநீட்டம் (தாமதம்) (யாழ்.அக.); delay. 5. வேலையின்றியிருக்கை (வின்.); stagnation, inactive condition. தடங்கலுக்கு வருந்துகிறோம் (வானொலி மொழி).

*[தடு → தடக்கு → தடங்கு → தடங்கல்.]*

**தடங்கல்பண்ணு-தல்** *taḍaṅgal-paṇṇu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. நிறுத்திவைத்தல்; to detain, to prevent, to put a legal stop to a proceeding. 2. தடைசெய்தல்; to urge an objection (செ.அக.).

*[தடங்கல் + பண்ணு-.]*

**தடங்கலுத்தரவு** *taḍaṅgal-uttaravu*, பெ. (n.) தடையாணை பார்க்க; see taḍai-y-āṇai.

*[தடங்கல் + உத்தரவு.]*

**தடங்கு-தல்** *taḍaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) தடக்கு (இவ.) பார்க்க; see *taḍakku* (செ.அக.).

*[தடங்கு → தடங்கு-.]*

**தடங்குநாடி** *taḍaṅgu-nāḍi*, பெ. (n.) விட்டுவிட்டு அடிக்கும் நாடி; pulse beating at intervals, intermittent pulse.

*[தடங்கு + நாடி.]*

**தடங்கோலு-தல்** *taḍaṅgōlu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. வழியமைத்தல்; to pave way for. 2. அடுத்தவனைக் கெடுக்க வழிதேடுதல் (யாழ்ப்.); to plot one's ruin.

*[தடு → தடம் + கோலு-.]*

**தடச்சி** *taḍacci*, பெ. (n.) பருங்கண்களுடைய பெரியவலைப் பின்னுவதற்கும், கட்டுவதற்கும், பயன்படும் உறுதியான நூல்; a strong thread used to weave and knot big fishing-net.

*[தடை → தட → தடச்சி]*

**தடசல்[1]** *taḍašal*, பெ. (n.) 1. நெட்டிப்புல் (மலை); soil-pith. 2. கீரிப்பூண்டு; indian snake root. 3. புளியாரை (மு.அ.); yellow wood sorrel.

**தடசல்[2]** *taḍašal*, பெ. (n.) தாதுப்பொருள் வகை (சடைச்சி); common Indian lindan - Grewia tilacfotia.

**தடசு** *taḍašu*, பெ. (n.) தடசல் பார்க்க; see *taḍašal.*

**தடசுமரம்** *taḍašu-maram,* பெ. (n.) கட்டடப் பணிகளுக்குப் பயன்படும் மரவகைகளுள் ஒன்று (மதுரை மாவட்டம்.); a kind of wood, used for constructing buildings.

*[தடசு + மரம்.]*

**தடத்தம்**[1] *taḍattam,* பெ. (n.) உற்றார், உலகோர் குடும்ப உறவிலிருந்து விடுபடுகை; to be free from family and wordly attachments.

*[தடு → தடத்தம் = இல்லற வாழ்வினின்று விடுபட்டுத் துறவுவாழ்வில், ஈடுபடுதல்]*

**தடத்தம்**[2] *taḍattam,* பெ. (n.) தடை (நாஞ்.); hindrance, obstacle; objection.

*[தடு → தடத்தம்.]*

**தடத்தம்**[3] *taḍattam,* பெ. (n.) 1. நடுநிலை; indifference, neutrality. "தடத்தமாய் நின்றொளிர் நிரஞ்சன நிராமயத்தை" (தாயு. திருவருள் விலாசப் பரசிவ.).

*[தட + த் + அம். தட = அகலம், பெருமை, நடுநிலை குறித்ததென்க.]*

**தடத்தர்** *taḍattar,* பெ. (n.) தடத்தன் பார்க்க; see *taḍattaṉ.*

*[தடு → தடத்தர்.]*

**தடத்தல்** *taḍattal,* பெ. (n.) உலகக் கவலைகளை விட்டொழித்தல்; detached towards the worldly affairs.

*[தடு → தடத்தல் - இறையியல் வாழ்விற்குத் தடையாயுள்ள உலகக் கவலைகளை ஒழித்து, இறைச் சிந்தனையில் மூழ்குதல். அவ்வாறு மூழ்குபவனே, தடத்தன் என்றறிக.]*

**தடத்தன்** *taḍattaṉ,* பெ. (n.) 1. நடுவர்; neutral, indifferent person, umpire. 2. மேலோன் (வின்.); honourable person.

*[தடு → தட + அன் = தடத்தன், மேலானவன். தட = பெரிய, மேலான.]*

**தடதட-த்தல்** *taḍa-taḍa-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தள்ளாடுதல்; to totter from age, weakness, etc. 2. குழறுதல்; to be disconcerted; to be confused in speech. 3. தளர்வாதல்; to be loose (செ.அக.).

*[தட → தடதட-.]*

**தடதடத்தல்** *taḍa-taḍattal,* பெ. (n.) 1. அச்சத்தால் நடுங்குதல்; becoming nervous. 2. நாக்குத் தட்டல்; sounding the tongue while tasting. 3. வாய் குழறுதல்; becoming confused in speech. 4. கைகால் சோர்வடைதல்; trembling of the limbs through weakness (சா. அக.).

*[தடதட → தடதடத்தல்.]*

**தடதடப்பு**[1] *taḍataḍappu,* தள்ளாட்டம்; a symptom consisting of inability to stand or walk in a normal manner.

*[தடதட → தடதடப்பு]*

**தடதடப்பு**[2] *taḍataḍappu,* பெ. (n.) தடதடத்தல் பார்க்க; see *taḍataḍattal.*

*[தடதட → தடதடப்பு]*

**தடதடெனல்**[1] *taḍa-taḍeṉal,* பெ. (n.) 1. விரைவுக் குறிப்பு; fluency, ease, as in reading; swiftness, as in walking. 2. ஒலிக்குறிப்பு; faling sound. "தாளான் மிதித்துத் தடதடென்று" (கொண்டல் விடு. 186).

ம. தடபடல்; க. தடதடனெ; தெ. தடதட; து. தடபட, தடபடி

*[தடதட + எனல். தொகுத்தல் திரிபு]*

**தடதடெனல்**[2] *taḍataḍeṉal,* பெ. (n.) தள்ளாடுதல்; tattering.

**தடந்தேடு-தல்** *taḍan-tēḍu-,* 5 செ.கு.வி. (v.i.) தடங்கோலு-தல் (யாழ்ப்) பார்க்க; see *taḍaṅ-kōlu-.*

*[தடம் + தேடு-.]*

**தடநார்** *taḍa-nār,* பெ. (n.) பனையேறிகள் காலில் மாட்டிக் கொள்ளும், பனைநாரினாற் செய்யப்பட்ட கயிறு (யாழ்.அக.); foot-brace used by climbers of palmyras.

*[தடைநார் → தடநார். 'ஐ' - ஐகாரக் குறுக்கம்]*

**தடபட-த்தல்** *taḍa-paḍa-,* 20 செ.கு.வி. (v.i.) 1. தளம்புதல் (யாழ்.அக.); to shake, tremble, oscillate. 2. விரைவு (இவ.); to be hasty.

*[தடதட → தடபட-.]*

**தடபடல்** taḍa-paḍal, பெ. (n.) *தடபுடல் பார்க்க;* see *taḍa-puḍal.*

*[தட + படல்]*

**தடபடெனல்** *taḍa-paḍeṉal,* பெ. (n.) *1.* **ஒலிக் குறிப்பு;** patting sound. "வருவார் தலையிற் றடபடெனப் படுகுட்டொடு" *(சுந்தரலங்காப்பு.).* *2.* **தள்ளாடற்குறிப்பு** *(யாழ்.அக.);* tottering. *3.* தடபட-த்தல் பார்க்க; see *taḍapaḍa-.*

*[தடபட + எனல்]*

**தடபுடல்** *taḍa-puḍal,* பெ. (n.) *1.* **விரைவு;** hastiness, precipitancy. *2.* **சந்தடி, சுறுசுறுப்பு;** bustle, clamour, hubbub, fuss, eclat. *3.* **ஆரவாரம் (அமளி)** (இவ.); ostentation, show. "மாண்புமிகு அமைச்சர் வருகையின் போது தடபுடலான வரவேற்பு வழங்கப்பட்டது" *(உவ.).* *4.* **பேரிடர்;** critical condition, as a person seriously ill *(செ.அக.).* பெரியவரின் நிலைமை இன்றோ, நாளையோ எனத் தடபுடலாகவுள்ளது *(உவ.).*

*[தடபட → தடபுட → தடபுடல்.]*

**தடம்**[1] *taḍam,* பெ. (n.) *1.* **பெருமை** *(திவா.);* greatness, largeness. "தடவும் கயவும் நளியும் பெருமை" *(தொல்.சொல். 314).* *2.* **அகலம்** *(சூடா.));* width, expanse. *3.* **செல்வப்பகுதி** *(பிங்.);* richness. *4.* **வளைவு** *(திவா.);* curve, bend. "தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்" *(தொல். உரி. 32).* "தடமருப் பெருமை" *(நற். 120).*

*[துட்டு → தட்டு → தட்டம் → தடம் (மு.தா.117). துள் → துட → துடம் → தடம். தடம் = வளைவு, பெருமை. தடம் = பருமை: வளைதற் கருத்தினின்று பருமைக் கருத்து முகிழ்த்தது. பருமையுடையது, பெருமை பெறுந்தன்மைத்து. இப் பொருண்மையில் பெருமைமிக்க செல்வத்தையுங் குறித்து வழங்கிற்றென்க. வளம் → தளம் → தடம் (வே.க. 258).]*

தெ. தொளங்கு ம. துலகு.

**தடம்**[2] *taḍam,* பெ. (n.) *1.* **கரை** *(சூடா.);* bank, shore. *2.* **நீர்நிலை** *(பிங்.);* tank, bathing-ghat. *3.* **வேள்விக்குழி** *(வின்.);* sacrificial pit. *4.* **வரம்பு** *(வின்.);* ridge, as in a field; dam, causeway. *5.* **தாழ்வரை** *(திருக்கோ. 70, உரை);* mountain slope. *6.* **மலை** *(சூடா.);* hill, mountain. *7.* **மூங்கில்** *(பிங்.);* bamboo. *8.* **உயர்ந்தவிடம்** *(திருக்கோ. 4).;* elvated place, prominence. *9.* **இடம்;** place. "சேய்மைத் தடத்து" *(பிரபுலிங். மாயைகோ. 35).* *10.* **வெளியிடம்** *(வின்.);* open site. *11.* **வழி** *(சூடா.);* road, way, path, route. *12.* **மனைவாயில்** *(பிங்.);* door-way, gate. *13.* **சுவடு;** foot-step, track. "வழித்தடந் தப்பி" *(காஞ்சிப்பு. பன்னிரு. 374).* *14.* **பேருந்து விழித்தடம்;** bus route.

த. தடம் → Skt. தட (t).

*[தட்டு → தட்டம் → தடம் (மு.தா. 117)]*

**தடம்**[3] *taḍam,* பெ. (n.) *1.* **கண்ணி** *(யாழ்ப்.);* noose, gin, snare, trap, toil. *2.* **சுருக்கு** *(யாழ்ப்.);* knot, loop. *3.* **கடம்புவகை;** panicled Indian linden, m.tr., Grewia microcos.

*[தள் → தளம் → தடம். தடம் - கழுத்துத் தடத்தில் இடப்படும், கண்ணி அல்லது கயிறு]*

**தடம்படு-தல்** *taḍam-pāḍu-,* 20 செ.குவி. (v.i.) *1.* **தழும்புபடுதல்;** to be marked with impressions or scar. *2.* **பயிற்சியால் ஆற்றல்மிகுதல்;** to become skilled by practice.

*[தடு → தடம் + படு-.]*

**தடம்பார்**[1]**-த்தல்** *taḍam-pār-,* 18 செ.குன்றா.வி. (v.t.) **அடிச்சுவடு** பார்த்தல்; to track the footsteps, as of a thief.

**தடம்பார்**[2]**-த்தல்** *taḍam-pār-,* 4 செ.குவி. (v.i) **துன்பத்தில் (ஆபத்தில்) உதவி தேடுதல்;** to seek means of relief from trouble.

*[துளம் → தளம் → தடம் + பார்-. ஒருகா. தட்டம் → தடம் + பார்-.]*

**தடம்பிடி-த்தல்** *taḍam-piḍi-,* 4 செ.குவி. (v.i.) தடம்பார்-த்தல் (இவ.) பார்க்க; see *taḍam -pār-*

*[தடம் + பிடி-.]*

**தடம்புரள்-தல்** taḍam-puraḷ-, 4 செ.குவி. (v.i.) **நிலைகெடுதல்;** to be disturbe from ones situation.

*[தடம் + புரள்-.]*

**தடம்புரள்(ளு)-தல்** *tadam-pural(lu)-*, 12 செ.கு.வி. (v.i.) பாதநரம்பு பிசகுதல் (இ.வ.); to be sprained in the foot. 2. தொடர் வண்டி தண்டவாளத் திலிருந்து இறங்குதல்; derailment. 3. கொண்ட கொள்கையிலிருந்து பிறழ்தல்; to deviate from the principles (செ.அக.).

*[தடம் + 'புரள்(ளு)-.]*

**தடம்பொங்கத்தம்பொங்கோ** *tadam-pongattam-pongō-*, இடை (int.) பொங்கத்தம் பொங்கோ (திவ். பெரியதி. 10: 2: 1) பார்க்க; see pongattam-pongō; exclamation of surrender by the vanquished (செ.அக.).

**தடம்போடு-தல்** *tadam-pōdu-*, 20 செ.குவி. (v.i.) 1. சிறுவிலங்குகளைப் பிடிக்கக் கண்ணி வைத்தல்; to set a strap for catching small animals. 2. கெடுக்க வழிதேடுதல்; to contrive another's ruin. 3. நன்மையுருவாக ஏற்பாடு செய்தல்; to pave way good deeds. அவன் வெற்றிக்குத் தடம்போட்டான் (உ.வ.).

*[தடம் + போடு-.]*

**தடமண்** *tadaman*, பெ. (n.) சுதைமண் (யாழ்.அக.); earth used for plastering.

*[தடவு + மண் → தடமண்.]*

**தடமாண்டுபோ-தல்** *tadamāndu-pō-*, 8 செ.குவி. (v.i.) அடையாளந் தெரியாதபடி முற்றும் அழிந்துபோதல் (நாஞ்.); to be ruined utterly, as leaving no trace behind.

*[தடம் + மாண்டு + போ = தடமாண்டு போதல். மாளுதல், மடிதல், அழிதல். தடம்மாறுதல். எச்சமின்றிச் செயற்பாடு முற்றுமழிதல்.]*

**தடம்மாறு-தல்** *tadam māṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ஒழுங்கற்றமுறையில் நடத்தல்; 2. ஓட்டப் பந்தயத்தில் செல்ல வேண்டிய தடத்தை விட்டுவிட்டு மாறியோடுதல்; to play foul in running race. தடம் மாறியவர்கள், வாழ்க்கையில் வெற்றியை நோக்கிச்செல்வது, எளிதன்று.

*[தடம் + மாறு-.]*

**தடமெடு-த்தல்** *tadam-edu-*, 4 செ.கு.வி. (v.i.) தடம்பார்-த்தல் பார்க்க; see tadam-pār-.

*[தடம் + எடு-.]*

**தடயஅறிவியல்** *tadaya-ariviyal*, பெ. (n.) தடயங்கள் வழிக் குற்றங்களைத் துப்புத் துலக்க உதவும் அறிவியல் துறை; forensic science. தடயஅறிவியல் ஆய்விற்கு மண்டையோடு இன்றியமையாதது (இக்.வ.). பெருங்கொள்ளை, கொலை போன்றவற்றைத் துப்புத்துலக்குவதில் தடயஅறிவியல், சிறந்த நிலைக்களனாகத் திகழ்கிறது. (இக்.வ.).

*[துளம் → தளம் → தடம் → தடயம் + அறிவியல் - தடயஅறிவியல்]*

**தடயம்**[1] *tadayam*, பெ. (n.) 1. நடந்ததை அறிந்துகொள்ளும் வகையில் எஞ்சியிருப்பது அல்லது கிடைப்பது (இக்.வ.); trace. முறிந்து தொங்கும் கிளைகள் யானை வந்து போனதற்கான தடயம் (இக்.வ.). 2. பலபண்டம் (சங்.அக.); goods, furniture, articles, things. 3. அணிகலன்கள் (ஆபரணங்கள்) (நெல்லை); ornaments. 4. களவுபோய்த் திரும்பிக்கிடைத்த பொருள் (இ.வ.); recovered stolen property. 5. சான்று; clue. நேற்று நடந்த திருட்டு வழக்கில் திருடனைப் பற்றிய தடயங்கள் கிடைத்தன. (உ.வ.)

*[தளம் → தடம் → தடயம்]*

**தடயம்**[2] *tadayam*, பெ. (n.) விலங்கு (இவ.); fetters.

*[தடை → தடயம்]*

**தடல்**[1] *tadal*, பெ. (n.) 1. அளவுகோல்; scale. 2. நார்; fibre.

**தடல்**[2] *tadal*, பெ. (n.) 1. வாழைமடல் (இ.வ.); sheathing petioles of the plantain tree. 2. விலங்கு, மரமுதலியவற்றின் தோல் (யாழ்ப்.); flake, peel, splinter. 3. பலாப்பழச் சுளையினைச் சுற்றியுள்ள செதிள் (யாழ்.அக.); refuse of jack fruit, especially the spongy internal part. 4. மேட்டு நிலம் (இ.வ.); high land.

*[தடு → தட → தடல்]*

**தடல்புஞ்செய்** *tadal-puñjey*, பெ. (n.) பயிரிடுவதற்கேற்றதாகாத மேட்டுநிலம் (இராட்.); high land unsuitable for cultivation.

*[தடல் + புன்செய்]*

**தடலடி** *taḍalaḍi,* பெ. (n.) முரட்டுத்தனம்; rough and rude. தடலடியா பேசித் தள்ளிட்டான் (இவ).

மறுவ. அடாவடி தடாலடி.

*[அடாவடி → தடாதடி → தடாலடி → தடலடி.]*

**தடலை** *taḍalai,* பெ. (n.) பிடிப்பு; attachment.

**தடவக்கொடு-த்தல்** *taḍava-k-koḍu-,* 4 செகுவி. (v.i.) *1.* முதுகைத்தடவ இடங் கொடுத்தல்; to let one to stroke the back. *2.* மிக இணங்குதல் (இவ.); to yield too much, to be too submissive.

*[தடவு + கொடு-.]*

**தடவங்கம்** *taḍavaṅgam,* பெ. (n.) கருப்பு ஈயம் (காரீயம்); black-lead (சா.அக.).

**தடவம்** *taḍavam,* பெ. (n.) *1.* அருமை; rareness. *2.* ஆறு; வழி; path or way. *3.* மெய்தீண்டுதல்; to touch affectionately, as the body of a child; to caress. *4.* வீணைமீட்டுதல்; to tune the yāḻ.

*[தட → தடவு → தடவம்]*

**தடவரல்** *taḍavaral,* பெ. (n.) வளைவு; bending, curving. "தடவரல் கொண்ட தலைமெல் லொதுக்கின் (புறநா. 135: 3).

*[தடவு → தடவி + வரல் - தடவிவரல் → தடவரல். தடவு = வளைவு]*

**தடவல்**[1] *taḍaval,* பெ. (n.) பண முதலியவற்றின் முட்டுப்பாடு (வின்.); scantiness, searcity, as of money (செ.அக.).

*[தடவு → தடவல்]*

**தடவல்**[2] *taḍaval,* பெ. (n.) தடவை, 1 பார்க்க; see *taḍavai, 1.* "தருமபுத்திரன் ஒரு தடவல் பொய் சொல்லி" (ஈடு, 5. 5: 7).

*[தரவல் → தரமல் → தடவல்]*

**தடவல்**[3] *taḍaval,* பெ. (n.) *1.* ஆறு என்ற எண்ணின் குழூஉக்குறி (சங்.அக.); six, a slang term. *2.* பொங்கல் முதலிய உணவு வகை (இவ.); a delicious preparation of rice.

**தடவல்**[4] *taḍaval,* பெ. (n.) பூசுதல்; anointing, smearing, rubbing.

*[தடவு = மேற்பூச்சு. தடவு → தடவல்]*

**தடவலை** *taḍa-valai,* பெ. (n.) மீன்பிடி வலை வகையுளொன்று; a kind of fishing-net.

*[தடை + வலை = தடைவலை → தடவலை.]*

**தடவற்புலு** *taḍavaṟpulu,* பெ. (n.) அறுபது; sixty.

*[தடவல் → தடவற்புலு.]*

**தடவா-தல் (தடவருதல்)** *taḍāvā-,* 15 செகுன்றாவி. (v.t.) *1.* தடவுதல்; to stroke; to blow gently over. "மந்தமாருதம்........ தடவந்து வலிசெய்வது" (திவ்.பெரியதி. 8: 5: 1). *2.* பூசுதல்; to rub, besmear. "நீறு தடவந்திடப மேறி" (தேவா. 774: 1). *3.* தேடுதல்; to seek. "பழமறையுந் தடவர" (அழகர்கலம். 15). *4.* யாழ் முதலியன வாசித்தல் (வின்.); to play, as on a lute.

*[தடவு + வரு-.]*

**தடவிக்கட்டினகல்** *taḍavi-k-kaṭṭiṉa-kal,* (கலை) பெ. (n.) பொன்னணியில் தெரிந்தெடுத்துப் பதித்த வயிரக்கல்; to enclose diamond stone set in gold ornament. "திருமாலையில் தடவிக்கட்டின கல்லு" (தெகல்.தொ. 23 கல். 46).

மறுவ. தளம்

*[தடவி + கட்டின + கல். சொக்கத் தங்கத்தில் செய்த பொன்னணியில் பளிங்கு வயிரம் பதிக்கை. தடவிக் கட்டுகை - மிக நுணுக்கமாகச் செய்யும் வேலைப்பாடு]*

**தடவிக்கட்டினபளிங்கு** *taḍavi-k-kaṭṭiṉa paḷiṅgu,* (கலை) பெ. (n.) பட்டைதீட்டிய பளிங்கு வயிரம் கட்டிய பொற்சரடு; to set well cut diamond in a polished golden chain. "தடவிக் கட்டின பளிங்கு பதினெட்டினால் நிறைநாலு மஞ்சாடியும் குன்றியும்" (தெகல்.தொ 2, கல். 3).

மறுவ. பளிக்குவயிரம்

*[தடவி + கட்டின + பளிங்கு - பட்டை தீட்டின வைரம்.]*

**தடவிக்கட்டு-தல்** *taḍavi-k-kaṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) *1.* பதித்தல்; to enchase, set in. "கிளியொன்றிற் கண்ணில் தடவிக்கட்டின கல்

(S.I.I.II.46.). திருமாலையில் தடவிக் கட்டின கல்லு (S.I.I.XXIII.46.).

*[தடவி → கட்டு]*

**தடவிக்கொடு[1]-த்தல்** *taḍavi-k-koḍu-*, 4 செகுவி. (v.t.) *1.* **தடவுதல்;** to sroke. *2.* **ஊக்கப்படுத்துதல்;** to encourage. *3.* **அமைதியூட்டுதல்;** to pacify. *4.* **குறையக்கொடுத்தல்;** to give sparingly (செ.அக.).

*[தடவி + கொடு-.]*

**தடவிக்கொடு[2]-த்தல்** *taḍavi-k-koḍu-*, 4 செகுவி. (v.t.) **விளக்கெண்ணெய் போன்ற மருந்தை, வாந்தி வராமல், வயிற்றையும் நெஞ்சையும் தடவுதல்;** to anoint the hand over the abdomen and chest to prevent vomitting as in administering medicine like castor oil.

*[தடவி + கொடு-.]*

**தடவித்தட்டிப்பார்-த்தல்** *taḍavi-t-taṭṭi-p-pār-*, 4 செகுவி. (v.t.) **வயிற்றைக் கையினால் வருடிப் பின் தட்டி, ஆராய்தல்;** to pass the hands gently over the abdomen and tap (சா.அக.).

*[தடவி + தட்டி + பார்-]*

**தடவித்தேடு-தல்** *taḍavi-t-tēḍu-*, 4 செ. குன்றாவி. (v.t.) **இருட்டில் தடவிப்பார்த்து தேடுதல்;** to grope around. இருளில் காலால் தடவித்தேடிப் பார்த்து, அடியெடுத்து வைத்தார் (உ.வ.).

*[தடவி + தட்டி + பார்-]*

**தடவிப்பார்-த்தல்** *taḍavi-p-pār-*, 4 செ.குன்றாவி. (v.t.) **கையினால் உடம்பைத் தடவிஆராய்தல்;** to examine palpate by manual.

*[தடவி + பார்-.]*

**தடவிப்பிடி-த்தல்** *taḍavi-p-piḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) **தடவித்தேடு-தல்** பார்க்க; see *taḍavi-t-tēḍu-*. தடவிப்பிடிக்கக் கையில்லை. அவன் பெயர் சௌரியப்பெருமாள் (பழ.).

*[தடவி + பிடி-.]*

**தடவு[1]-தல்** *taḍavu-*, 5 செ.குன்றா.வி. (v.t.) *1.* வருடுதல் (திவா.); to sroke. "தன் நெஞ்சந் தாமே தடவாரோ தானவர்கள்" (கம்பரா. மாயாசனக. 80). *2.* **பூசுதல்;** to anoint, as with liniment; to smear, spread on, plaster. "தலைக்குத் தேங்காயெண்ணெய் தடவிக்கொண்டான்" (உ.வ.). 'பசைதடவிப் படத்தை ஒட்டினான்' (இக்.வ.). *3.* **தகட்டுப்பணிகாரஞ் செய்தல்** (யாழ்ப்.); to make into thin pancakes. *4.* **இருட்டில் கை கால் முதலியவற்றால், துழாவுதல்;** to grope, feel one's way with hands or feet, as in the dark. "காலினாற் றடவிச் சென்று" (பெரியபு. இளையான்குடி. 18). *5.* **தேடுதல்;** to seek. "பிலந்தடவி" (கம்பரா. நட்புக்கோ. 53). *6.* **குறைத்தளத்தல்;** to measure closely or stintingly. *7.* **யாழ் முதலியன வாசித்தல்;** to play, as on a lute. *8.* **திருடுதல்;** to steal. *9.* **உரிமையல்லாதவளைப் புணர்தல்;** to have illicit intercourse with a woman.

ம. தடவுக; க. தடவு, தொடே, தடகு; தெ. தடவு, தடமு; கோத. தட்வத்; துட. தொட்பொர்; குட. தவ்ட்; பட. தடவு

*[தொடு → துடவு → தடவு - தொடுதற் கருத்து வேராகும். துடவுதல் → தடவுதல் - பூசுதல், தேய்த்தல்.]*

**தடவு[2]-தல்** *taḍavu-*, 5 செகுவி. (v.i.) *1.* அசைதல்; to sway to and fro, as a drunken man. "களிப்பட்டானிலையே போற் றடவுபு" (கலித். 101). *2.* **தடுமாறுதல்;** to be halting; to hesitate. தடவிப் படிக்கிறான் (உ.வ.). *3.* **முட்டுப்பாடாயிருத்தல்;** to be scarce.

ம. தடவுக; தெ. தடவு

*[துடவு → தடவு → தடவு- (வே.க. 277)]*

**தடவு[3]-தல்** *taḍavu-*, 5 செ.குன்றா.வி. (v.t.) **அடை தட்டுதல்;** to prepare thin sweet-cakes.

*[துடவு → தடவு-.]*

**தடவு[4]** *taḍavu*, பெ. (n.) *1.* **தடா, பருமை;** largeness. "ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம் (புறநா. 199). *2.* **பகுதி** (பிங்.); portion. *3.* **வளைவு** (பிங்.); curve, bend. *4.* **வேள்விக்குழி;** sacrificial pit. "தடவு நிமிர்முத்தீப் பேணிய" (பரிபா. 5: 42). *5.* **கணப்புச்சட்டி;** pot with holes with burning grate. "மடவரன் மகளிர் தடவுநெருப் பமர்ந்து (சிலப். 14: 99). *6.* **நறும்புகைக்கால்** (வின்.); censer. *7.* **மரவகை;** a tree. "தடவும் பிடவுந் தாழச் சாய்த்து" (பெருங். உஞ்சைக். 51: 43).

*[(துட்டு →) தட்டு → தட்டம் → தடம் = அகலம், பெருமை, அகன்றகுளம் (மு.தா.117). தடம் → தடவு.]*

**தடவு**[4] *taḍavu,* பெ. (n.) சிறைச்சாலை (நாஞ்.); prison.

*[தடு → தடை → தடவு]*

**தடவுச்சினை** *taḍavu-c-ciṉai,* பெ. (n.) பெரிய கொம்பு; big staff.

*[தடவு + சினை]*

**தடவுச்செவி** *taḍavu-c-cevi,* பெ. (n.) பெரிய காது; large ears.

*[தடவு + செவி. தடம் = பெருமை, பருமை.]*

**தடவுத்தாழி** *taḍavu-t-tāḻi,* பெ. (n.) பெருஞ்சாடி; big jar. "தடவுத்தாழி நெட்டுறியின்" (அழகர்பிள்.);

மறுவ. சாடி

*[தடவு + தாழி]*

**தடவுநிலை** *taḍavu-nilai,* பெ. (n.) மேலுலகம், துறக்கம்; Indra's paradise. "கடவுள் கண்ணிய தடவுநிலைக் கோட்டம்" (ஞானா. 17: 44).

*[தடவு + நிலை]*

**தடவுபருத்தி** *taḍavu-parutti,* பெ. (n.) பருத்தித் தட்டுப்பாடு (இ.வ.); scarcity of cotton.

*[தடவு + பருத்தி. ஒருகா. பருத்திக்காட்டில், முதல்தரமான பருத்தியினை எடுத்தபிறகு, அங்கொன்றும், இங்கொன்றுமாய் உள்ள பருத்தியைத் தேடியெடுத்தல்]*

**தடவுவாய்** *taḍavu-vāy,* பெ. (n.) மலைச்சுனை; mountain pool. "தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை" (புறநா. 105).

*[தடவு + வாய்]*

**தடவை** *taḍavai,* பெ (n.) 1. முறை (இ.வ.); time, turn. 2. தவணை (யாழ்ப்.); instalment. எத்தனை தடவை சொல்லிக்கொடுத்தாலும், இந்த மாணவர்களுக்குப் புரிவதேயில்லை (உ.வ.). இந்த ஊருக்கு நான் பல தடவை வந்திருக்கிறேன் (இக்.வ).

தெ. தடவ

*[தடம் → தடவை. தடவை = முறை (மு.தா.258)]*

**தடறு** *taḍaṟu,* பெ. (n.) 1. போர்க்கருவியுறை; sheath, scabbard, case. "தடற்றிடங் கொள்வாள்" (களவழி. 18). 2. தொண்டகப்பறை (அக.நி.); a kind of drum.

**தடனம்** *taḍaṉam,* பெ. (n.) தாடனம்; patting, tapping. "ஒருகை எத்து தடனத்தொனி யெடுத் தெறிய" (நெல்விடு. 286).

**தடா** *taḍā,* பெ. (n.) 1. பானை (திவா.); pot. 2. மிடா (திவா.); big pot. "நறுநெய் யொரோதடா வுண்ண" (திவ். பெரியாழ். 1: 2: 4). 3. கணப்புச்சட்டி (சிலப். 14: 99: உரை); a kind of earthen grate. 4. பருமை; largeness, greatness. "தடாவுட லும்பர்" (கல்லா. 8: 15). 5. மிடாவினும் பெரிதான ஏனம் (பாத்திரம்); a vessel larger than a miḍā. "அந்தப் பாலையெல்லாம் காய்ச்சுகைக்காக மிடாக்களோடும் தடாக்களோடும் அடுப்பிலே ஏற்றிவைத்து" (திவ். பெரியாழ். 2: 9: 5 வியா. பக். 463).

*[முழுமைக்கருத்தினின்று தோன்றிய பருமைக்கருத்துவேர்; முழுதும் திரண்ட பொருள், பருத்திருக்கும். துள் → துடம் → தடம் → தட → தடா (மு.தா. 236)]*



**தடாககருமம்** *taḍāga-karumam,* பெ. (n.) குளத்துக்குப் போதல்; going to stools to washing the posteriors.

மறுவ. மலங்கழிக்கை, கால்கழுவுகை.

*[தடம் → தடாகம் + கருமம் (வ.வ. 170)]*

**தடாகத்தாடுயர்** *taḍāga-t-tāḍuyar,* பெ. (n.) தாமரையிலை; lotus leaf.

*[தடாகத்து + ஆடுயர்]*

**தடாகப்பிரதிட்டை** *taḍāga-p-piradiṭṭai*, பெ. (n.) ஏழு வகைக் கொடைகளுள் ஒன்றாகிய குளம் வெட்டுகை; sinking or digging tanks, one of eḻu-vagai-k-koḍai.

*[தடாகம் + பிரதிட்டை]*

**தடாகம்**[1] *taḍāgam*, பெ. (n.) குளம் (பிங்.); pond, pool, tank. "சங்கொலியுண்டாக்குந் தடாகமே" (பணவிடு. 268). "செம்பைப் புதுப்புனல் தடாக மேற்ற தண்சுனைப் பாங்கர்" (பரி. 9: 27-28). தடவும் "கயவும் நளியும் பெருமை" (தொல். சொல். 22). உத்திரமேரூரில் உள்ள ஏரியின் பெயர் வைரமேகத் தடாகம்.

ம. தடாகம்

*[தட்டம் → தடம் → தடாகம்; தடாகம் = அகலம், அகன்ற குளம் (வ.வ. 170)]*

**தடாகம்**[2] *taḍāgam*, பெ. (n.) நீர்முள்ளி; water thorn.

**தடாகயோகம்** *taḍāga-y-ōgam*, பெ. (n.) பிறப்பு ஓரையிலிருந்து 2, 5, 8ஆம் வீடுகளிலேனும், 3, 6, 9ஆம் வீடுகளிலேனும், ஏழு கோள்கள் கூடியிருந்து, பெருஞ்செல்வமுள்ளவனாயினும் இவறியாவானென்பதைக் குறிக்கும் தீமை (அவயோகம்) (சாதகசிந். 2036); inauspicious yōga when the 7 planets appear promiscuously either in the second, fifth and eighth houses or in the third, sixth and ninth houses from the ascendant, indicative of miserliness.

*[தடாகம் + ஓகம்]*

**தடாகவாதாரம்** *taḍāga-v-ādāram*, பெ. (n.) ஏரிப்பாய்ச்சலுள்ள நிலம்; land irrigated by a tank or lake.

*[தடாகம் + ஆதாரம்; தடாகத்தை ஆதாரமாக கொண்டது.]*

மன்பதைக்கு ஆதாரமாகத் திகழ்வது நிலமேயாகும். ஏரிப்பாய்ச்சலுள்ள நிலமே பசியும் பிணியுமற்றுப் பல்வளமும் செழித் தோங்கும், பாரினுக்கு ஆதாரமாகும்.

**தடாதகை** *taḍā-tagai*, பெ. (n.) அங்கயற் கண்ணியம்மை (திருவிளை. தடாதகைப். 4); Mīṉāṭci, the Goddess of Madurai, as endowed with irresistible valour.

*[தடா + தகை. பெருமைசான்ற தண்ணளி தவழும் அங்கயற்கண்ணி]*

**தடாதடி** *taḍādaḍi*, பெ. (n.) 1. குழப்பம் (யாழ்அக.); disturbance, confusion. 2. கலக்கம்; agitation of mind.

மறுவ. தடாலடி.

*[தடா + தடி. தடாதடி = நிலை தடுமாறி மனம் பேதுறுவதால், ஏற்படும் மன வுளைச்சல்]*

**தடாதடிக்காரன்** *taḍādaḍi-k-kāraṉ*, பெ. (n.) புறநெறி வன்மையாளன் (வின்.); one who uses unlawful force.

மறுவ. தடாலடிக்காரன், அடாவடிக்காரன்

*[தடாதடி + காரன்; காரன் = உடைமைப் பெயரீறு. ஒருகா. அடாவடி → தடாவடி → தடாதடி + காரன்]*

**தடாதிவங்குசம்** *taḍādi-vaṅgušam*, பெ. (n.) பறவைகளின் பறக்கும்திறன் வகைகளில் (பறவைக்கதிகளுள்) ஒன்று (காசிக. திரிலோ. 6); a mode of bird's flight.

*[தடாதி + அங்குசம்]*

**தடாபுடாவெனல்** *taḍāpuḍā-v-eṉal*, பெ. (n.) 1. சினந்து பேசுங்குறிப்பு; onom. expr. of blustering, scolding or abusing. 2. கீழ்விழும் ஒலிக்குறிப்பு; tumbling down. 3. ஆரவாரக் குறிப்பு; pompous manner. 'தடாபுடாவென்று வந்தான்' (இ.வ.).

*[தடாபுடா + எனல்]*

**தடாம்** *taḍām*, பெ. (n.) வளைவு; curve, bend. "தடாம் பிறை மருப்பு" (சீவக. 806).

*[தடு → தட → தடாம்]*

**தடாய்-த்தல்** *taṭāy-*, 4 செ.குன்றாவி. (v.t.) பெருகச்செய்தல்; to cause to swell or increase. "குண்டோதரன் போல் மாரைத் தடாய்த்து" (மதி. க. 1: 66).

*[தடு → தடா → தடாய்-.]*

**தடாயகருப்பம்** *taḍāya-karuppam*, பெ. (n.) **உடற்குறைக்கு உட்படும் கரு;** embryo subject to deformities.

*[தடாயம் + கருப்பம்]*

**தடாயின** *taḍāyiṉa*, கு.பெ.எ. (adj.) **வளைந்த;** curved. "பொன்னனார் தங்கண்ணிடங் கொண்ட மார்பிற் றடாயினகாது கொள்வேல்" *(சீவக: 255).*

*[தடாம் → தடாயின]*

**தடாரம்** *taḍāram*, பெ. (n.) *1.* **ஈரொத்துத்தாளம்** *(சிலப். 6: 35: உரை);* a time measure of double beating. *2.* **சின்னம்மை** (இவ.); measles.

*[தட → தடா → தடாரம்]*

**தடாரி¹-த்தல்** *taḍāri-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **ஊடுருவுதல்;** to bore, pierce through. 'தடாரிக்கு தந்தம்பு' *(தனிப்பா. I, 380: 26). 2.* **மிகக்கண்டித்தல்** *(வின்.);* to give a good scolding.

க. தடாயிசு, தெ. தடாயிஞ்சு
*[தடா → தடார் → தடாரி-.]*

**தடாரி²** *taḍāri*, பெ. (n.) *1.* **உடுக்கை;** drum shaped like an hour-glass. "கைக்கச டிருந்தவென் கண்ணகன் றடாரி" *(பொருந 70). 2.* **கிணைப்பறை;** a drum or tabor of the agricultural tract. "தெண்கட் டடாரிப் பொருவில் பொருந" *(பு.வெ. 9. 30). 3.* **பம்பையென்னும் பறை** (பிங்.); a kind of drum. "கடாஅ யானைக் கால்வழியன்னவென் தெடாரித் தெண்கண் தெளிர்ப்ப வொற்றி" *(புறநா. 368: 14-15). 4.* **பறையென்னும் பொது** (பிங்.); drum. "சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி" *(புறநா. 381).*

ம. தடாரி

*[தெடாரி → தடாரி = தெளிந்த கண்ணை உடைய பறை. (வே.க. 298)]*



**தடாரிக்கல்** *taḍāri-k-kal*, பெ. (n.) **ஊடுருவல்;** piercing *(சா.அக.).*

*[தடாரி + கல்]*

**தடாவு-தல்** *taḍāvu-*, 5 செ.கு.வி. (v.i.) **வளைதல்;** to bend, curve. "தடாவிய வம்பும்" *(திவ். இயற். திருவிருத். 6).*

*[துளம் → துடம் → தடம் → தட → தடா → தடாவு; தடாவு = வளைதல் (வே.க. 268) (வ. வ. 170)]*

**தடானனம்** *taḍāṉaṉam*, பெ. (n.) செங்கிலுகிலுப்பை; red species of rattlewort *(சா. அக).*

**தடி¹-தல்** *taḍi-*, 2 செ.குன்றாவி. (v.t.) *1.* வெட்டுதல்; to hew down, cut down, cut off. "வாளோச்சிமிகத் தடிந்தாள்" *(பு.வெ. 5: 8). 2.* அழித்தல்; to kill, destroy. "மன்குலத்தொடு தடிந்து" *(பாரத. இராசசூய. 43). 3.* குறைத்தல்; to reduce, diminish. "தடிந்தெழிலி தானல்காதாகி விடின்" *(குறள். 17).*

*[தடு → தடி-.]*

**தடி²** taḍi, பெ. (n.) *1.* **நீட்டலளவு வகை;** a linear measure. "தடி நான்கிற் பரந்தன" *(மேரு. மந். 1153). 2.* **குச்சி;** stick. தடியெடுத்தவன் தண்டல்காரன் *(செ.அக.).*

**மறுவ.** அளவுத்தடி.

*[தண்டு → தண்டி → தடி (வ.வ. 171)]*

திண்டிவனம் வட்டத்திலுள்ள ஏரியின் உட்பாறையில் செதுக்கப்பட்ட நிலவளவு; இவ் வளவைச் செய்வோர், காய்ந்த அகத்திக் குச்சியை அந்த அளவிற்குச் சரியாக ஒடித்துக் கொண்டு, அளக்கை செய்வர். அது அளவுத் தடி எனப்படும்.

**தடி³** *taḍi*, பெ. (n.) **ஆண்குறி;** a slang term for penis *(சா.அக.).*

*[தண்டு → தண்டி → தடி]*

**தடி⁴** *taḍi*, பெ. (n.) *1.* **கழி** *(இவ.);* stick, staff, rod, cane. *2.* **தண்டாயுதம்** *(திவா.);* club, cudgel, bludgeon. *3.* **மரம் முதலியவற்றின் பிளந்த துண்டம்;** a piece, as of wood. "ஒடிதூட் டடியொடு" *(பரிபா. 4: 20). 4.* **அளவுகோல்** (நன். 290, விருத்.); measuring rod. *5.* **உலக்கை** *(திவா.);* pestle. *6.* **தடிமன்;** cold. *7.* **வில்** *(பிங்.);* bow.

"மிருகணை முடுகிய தடியினில்" (இரகு. யாக. 79). 8. வயல் (திவா.); rice-field. "பங்கமிட் டெறிந்தன தடிகள்" (இரகு. நாட். 21). 9. பாத்தி (வின்.); plot of a field. 10. தசை; flesh. 'புலவு நாற்றத்த பைந்தடி" (புறநா. 14: 12). 11. கருவாடு (அகநா. 60, உரை); dried fish. 12. உடும்பு (பிங்.); iguana. 13. ஆடவை ஓரை (விதான. பஞ்சாங்க., 14); Gemini in the Zodiac. 4. கீறற்கையெழுத்து (இ.வ.); signature-mark of an illiterate person.

ம. தடி; க. தடி, தடி; தெ. தாடி, தடி; து. தட; கோத. தய்ட், தச்; துட. தொடு; பட. தடி

*[தண்டு → தண்டி → தடி (வ. மொ. வ. 171).]*

**தடி[5]-த்தல்** *taḍi-*, பெ. (n.) 1. பெருத்தல் (பிங்.); to grow large, full; to become stout, to swell. "உண்டா ளுடறடித்தாள்" (கம்பரா. மாயாசனக. 89). 2. மிகுதல்; to become enhanced; to increase, grow. "நெருப்புத் தடிப்பது போல்" (ஞானவா. கற்க. 3). 3. கெட்டிப்படுதல், உறைதல்; to thicken, as a liquid milk on boiling to congeal, to be inspissated. "பாலைத் தடிக்கக் காய்ச்சினான்" (உ.வ.). 4. திரளுதல் (வின்.); to cohere, gather together, consolidate, assume a tangible form. 5. நச்சுக் கடியினால் தோல் வீங்குதல்; to swell in patches, as the skin by slight poison. 6. மரத்தல்; to grow stiff or rigid, as the tongue by chewing betel; to be hard, as a board. என்ன கடித்ததோ தெரியவில்லை, உடம்பு முழுவதும் திட்டுத்திட்டாகத் தடித்துவிட்டாது (உ.வ.). வெற்றிலை தின்றதனால் நாக்குத் தடித்து விட்டது. 7. மனம் கடுத்தல்; to become hard, unfeeling. அவன் மனம் தடித்திருக்கிறது. 8. உரக்கப்பேசுதல்; to be loud, harsh. "தடித்த சொல்லார்" (கம்பரா. எழுச்சி. 65). இயல்பாக ஆரம்பித்த பேச்சு தடித்துச் சண்டையில் முடிந்தது (உ.வ.). 9. காலந் தாழ்த்தல் (வின்.); to delay, linger; to be protracted.

ம. தடிக்குக; த. தட்டயிசு; தெ. துட்டமு; து. தட்டியுணி, தட்ட்யுணி; கோத. தட்வ்; கூ. டாட; Mar. dāṭ.

*[தண்டு → தண்டி → தடி-. (வ.வ. 171) தடித்தல் - பருத்தல். பருத்துத்தடித்தல் : தடித்து நீளுதல் - பருமனாதல். பருமனாகிக் கெட்டிப்படுதல் → கெட்டிப்பட்டுத் திரளுதல். தடித்தல் = நச்சுக் கடியினால் தோல் தடித்தல் : நாக்குக்கடித்தல், தடித்து வீங்குதல்; வீஙகுவதாலேற்பட்ட மரத்தல் போன்ற பொருட்பாகுபாட்டில், தடித்தல் என்னுஞ் சொல் புடைபெயரும் என்றறிக]*

**தடி[6]** *taḍi*, பெ. (n.) மின்னல்; lightning. "தடியுடை முகிற்குலம்" (கம்பரா. தாட. 37).

**தடி[7]** *taḍi*, பெ. (n.) கஞ்சிபோடும் நெசவாளர் பயன்படுத்தும் நீண்டகோல்; weaver's starch-stick (செங்கை.).

**தடிக்கந்தகம்** *taḍi-k-kandagam*, பெ. (n.) உருளைக்கந்தகம்; roll sulphur (சா.அக.).

*[தண்டி → தடி + கந்தகம்]*

**தடிக்கம்பு** *taḍi-k-kambu*, பெ. (n.) கைக்கழி; cane, walking-stick (செ.அக.).

*[தடி[2] + கம்பு; மீமிசைச் சொல்]*

**தடிக்கல்** *taḍi-k-kal*, பெ. (n.) தடிக்கை, வீங்குகை; swelling.

*[தண்டி → தடி + கல் = தடிக்கல் = பருத்துப் புடைத்துத்தடிக்கை (வ. வ. 171). பருமைக் கருத்துவேர் வீங்குதற்பொருளில் வந்துள்ளது]*

**தடிக்காரன்** *taḍi-k-kāraṉ*, பெ. (n.) சுறாமீன்; shark-fish.

*[தம் குழுவினர் (பட்டினவர்) மட்டும், அறிந்து கொள்ளுதற்குரிய, குழூஉக்குறிப் பெயர்.]*



**தடிக்கொம்பு** *taḍi-k-kombu,* பெ. (n.) மாட்டுக் குற்றவகை (பெரியமாட். 16); a defect in cattle.

*[தண்டு → தண்டி → தடி + கொம்பு (வ. வ. 171).]*

**தடிக்கொன்றை** *taḍi-k-koṉṟai,* பெ. (n.) பெருங் கொன்றை; large variety of cassia (சா.அக.).

*[தடி + கொன்றை]*

**தடிகாரன்** *taḍi-kāraṉ,* பெ. (n.) அழிப்பவன்; destroyer, as one with a cudgel. "தடிகாரனான யமன்" (தாயு. சிற்சு. 1).

ம. தடிக்காரன் (கடைநிலை அரசு ஊழியன்)

*[தடி + காரன்; காரன் = உடைமை பெயரீறு. ஒ.நோ.: மாட்டுக்காரன், வீட்டுக்காரன், கடைக்காரன்]*

**தடிகை** *taḍi-gai,* பெ. (n.) மின்னல்; lightning.

*[தடி → தடிகை]*

**தடிகைபாடி** *taḍigai-pāḍi,* பெ. (n.) இராசராசன் வென்றெடுத்த நாடுகளுள் ஒன்று; one of the country invaded by Rājarāja Chōḻaṉ. "தடிகைபாடியும் நுளம்பபாடியும்" (முதல் இராசராசன் மெய்க்சீர்த்தி).

*[தடிகை + பாடி]*

இது, சங்கரபாடிக்கும் நுளம்பபாடிக்கும் இடையிலுள்ளதோர் சிறுநாடு.

**தடிச்சம்பா** *taḍi-c-cambā,* பெ. (n.) எட்டு மாதத்தில் விளையும் நெல்வகை; a kind of paddy maturing in 8 months (செ.அக.).

*[தடிச்சம்பா = பருமையான நீண்டகால வித்து]*

**தடிச்சூலை** *taḍi-c-cūlai,* பெ. (n.) நடக்க முடியாதபடி, தடியை ஊன்றிச்செல்ல வைக்கும் வயிற்றுநோய்; a kind of gout rendering, one unable to move about without a stick.

*[தடி + சூலை. தடிச்சூலை = தடியின் உதவியுடன் நடக்கவியலாத் தன்மையுள்ள வயிற்றுநோய்]*

**தடிச்சை** *taḍi-c-cai,* பெ. (n.) தடசல் பார்க்க; see *taḍašal* (சா.அக.).

**தடிசு** *taḍišu,* பெ. (n.) 1. தாடி பார்க்க; see *tāḍi.* 2. உடும்பு; guana.

*[தடி → தடிசு]*

**தடிசாத்து-தல்** *taḍi-šāttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கையெழுத்துக் குறியிடுதல் (இ.வ.); to affix signature - mark. 2. தடியால் அடித்தல்; to beat with staff.

*[தடி + (சார்த்து →) சாத்து-.]*

**தடித்ததேகம்** *taḍitta-tēgam,* பெ. (n.) பருத்த உடம்பு; stout body (சா.அக.).

Skt. deha → த. தேகம்.

*[தடி → தடித்த + தேகம்.]*

**தடித்தநாக்கு** *taḍitta-nākku,* பெ. (n.) வீங்கிய நாக்கு. இது நோயினால் அல்லது நஞ்சுண்டதால் ஏற்படும் அறிகுறி; swollen tongue, it is a symptom prominent in a case of poisoning or sometimes from a disease. (சா.அக.)

*[தடி → தடித்த + நாக்கு.]*

**தடித்தநாளம்** *taḍitta-nāḷam,* பெ. (n.) பருத்து நெளிந்து, முடிச்சு முடிச்சாகக் காணப்படும் நாளம்; veins exhibiting a morbid enlargement of dilation and knotty and irregular appearance especially in the lower extremities.

*[தடித்த + நாளம்]*

**தடித்தமண்ணெண்ணெய்** *taḍitta-maṇṇeṇṇey,* பெ. (n.) மண் நெய்மம் (தைலம்); a dark green kerosene oil commonly used for all engines - crude oil.

*[தடித்த + மண் + எண்ணெய். எள் + நெய் – எண்ணெய்.]*

**தடித்தமலடி** *taḍitta-malaḍi,* பெ. (n.) குழந்தை பெறாது பருத்த பெண்; a stout sterile woman.

*[தடித்த + மலடி]*

**தடித்தனம்** *taḍi-t-taṉam,* பெ. (n.) 1. முரட்டுத்தனம்; rashness, rudeness. 2. மட்டித்தனம் (இ.வ.); foolishness, stupidity. 3. மடிமை (தஞ்சை.); laziness.

*[தடி + தனம். தடி = பருமை. தனம் = சொல்லாக்க விகுதி. ஒ.நோ. அடாவடித் தனம், சூரத்தனம், மடிமைத்தனம்]*

**தடித்தாண்டவராயன்** *tadi-t-tāṇḍavarāyaṉ,* பெ. (n.) கொழுத்த மடையன் (உ. வ.); sturdy but idle vagabond, a term of reproach.

*[தடி = தின்று, தசை மிகுந்து, கொழுத்துத் திரியும் மடையன். தடி + தாண்டவம் + ராயன். அரையன் → ராயன்]*

**தடித்து** *taḍittu,* பெ. (n.) மின்னல்; lightning. "தரங்கநீர் வேலையிற் றடித்து வீழ்ந்தென" (கம்பரா. இராவணன்வதை. 237).

*[தடி → தடித்து]*

**தடித்துபதி** *taḍittubadi,* பெ. (n.) மேகம்; cloud.

**தடிநாங்கு** *tadi-nāṅgu,* பெ. (n.) சிறுநாகப்பூ; long pointed broad-leaved-Ceylon iron-wood. (செ.அக.)

*[தடி + நாங்கு]*

**தடிநான்கு** *taḍināṉgu,* பெ. (n.) தடிநாங்கு பார்க்க; see *tadi-nāṅgu.*

*[தடி + நான்கு]*

**தடிநி** *taḍini,* பெ. (n.) ஆறு; river. "குடிதடிநியசைய இசை பொங்க" (திருப்பு. 19).

*[தடி → தடிநி]*

**தடிநிலன்** *taḍi-nilaṉ,* பெ. (n.) அளந்து வரப்பிடப்பட்ட நிலம்; measured land for the field. "கீழ்புலச் செய்தடி : நிலன்" (S.I.I, 13, 41/14).

*[தடி + நிலன்]*

வகுத்தல் (:) அடையாள வரம்பிட்டுப் பிரித்தமையை, யுணர்த்துங் குறி.

**தடிப்பதக்கு** *taḍi-p-padakku,* பெ. (n.) பழைய வரி வகை (S.I.I. V, 114); a tax.

*[தடி + பதக்கு; தடி = நிலங்குறித்த அளவு; பதக்கு = ஒவ்வொரு அளவிற்குஞ் செலுத்திய வரி]*

**தடிப்பம்** *taḍippam,* பெ. (n.) 1. பருமை; thickness, bulkiness. தடிப்பமான தோல். 2. வீக்கம்; swelling.

*[தடி → தடிப்பு → தடிப்பம்]*

**தடிப்பயல்** *taḍippayal,* பெ. (n.) 1. கொழுத்தவன்; stout fellow. 2. முரடன்; stubborn, senseless person. 3. மட்டி; blockhead (செ.அக.).

மறுவ. தடித்தாண்டவராயன்

*[தடி + பயல்]*

**தடிப்பானபேச்சு** *taḍippāṉa-pēccu,* பெ. (n.) 1. முரட்டுப்பேச்சு; impudent talk. 2. நாணமில்லாப் பேச்சு (இவ.); shameless speech.

*[தடிப்பு + ஆன + பேச்சு. தடி → தடிப்பு = பருமை: பருமையாலேற்படும் சோம்பல், சோம்பலாலுண்டான நாணமற்ற தன்மை. நாணத்தைவிட்டவன் ஞாலத்தில் பெரியவன், என்னும் வழக்கை நோக்குக,]*

**தடிப்பு** *taḍippu,* பெ. (n.) 1. கெட்டித்தன்மை; thickness, as of liquids, inspissation. 2. வீக்கம்; swelling, as from a blow; protuberance, hypertrophy, callosity, inflammation. 3. பருமன்; thickness of a solid substance, as a board. 4. உடற்றழும்பு; a disease causing eruptions in the body - Urticaria. கம்பளிப்பூச்சி கடித்ததனால் உடம்பெல்லாம் தடிப்பாய் இருக்கிறது (உவ.). 5. பூரிப்பு; plumpness, as of a person, of the breast. 6. செருக்கு (இவ.); pride.

ம. தடிப்பு; க. தடுமு; தெ. தட்டமு; து. தடிகெ; துட. தடி (அடி போன்றவற்றால் உடலில் ஏற்படும் வடு).

*[தடி → தடிப்பு; 'தடிப்பு' தொழிற்பெயர். 'பு' தொ. பெ. ஈறு.]*

**தடிப்புத்தி** *taḍi-p-putti,* பெ. (n.) மந்தபுத்தி (உவ.); thick headedness.

*[தடி + புத்தி]*

Skt. buddhi → த. புத்தி

**தடிப்புநோய்** *taḍippu-nōy,* பெ. (n.) கண்ணோய்; an eye disease.

*[தடிப்பு + நோய்]*

இந் நோய் 1. இமைதடிப்பு, 2. இளிச்சற் கண், 3. முடமயிர் என மூவகைப்படுமென்று சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி கூறும்.

**தடிப்புப்படை** *tadippu-p-padai,* பெ. (n.) 1. உடம்பில் தசைத்தடிப்பை உண்டாக்கும் ஒருவகைப் படைநோய்; thickening of the skin on different parts of the body. 2. வண்டு அல்லது சில்நஞ்சுக்கடி; a contagious skin disease forming in the shape of rings due to bites of beetle or other poisonous reptiles and insects. 3. பித்தத்தடிப்பு; urticaria.

மறுவ. சொறிசிரங்கு

*[தடிப்பு + படை; படை திரள்வதுபோல் திட்டுத்திட்டாகத் தடித்துள்ள சொறி சிரங்கு]*

**தடிப்பேறு-தல்** *tadi-p-pēru-,5* செ.குன்றாவி. (v.i.) தடித்துக் கொண்டே போதல்; to grow thicker and thicker.

*[தடிப்பு + ஏறு-.]*

**தடிபிணக்கு** *tadi-piṇakku,* பெ. (n.) அடிதடி; fighting with clubs. "ஒருநான்றுதடி பிணக்கே" (திவ். திருவாய். 6: 2: 7).

*[தடி + பிணக்கு]*

**தடிபோடு-தல்** tadi-pōdu-, *20* செ.குவி. (v.i.) 1. நிலமளத்தல் (வின்.); to measure ground, as in the game of tipcat. 2. தேரை, மரக்கட்டையால் நெம்பிக் கிளப்புதல் (இ.வ.); to apply the leverbeam to the wheels in starting a temple car. 3. வருந்தி முயன்று, ஒருவனை வேலையில் மூட்டுதல்; to set a person to work, with great difficulty. 4. இடையூறு செய்தல் (இ.வ.); to raise objections; to put obstacles in the way.

*[தடி + போடு-.]*

**தடிமம்** *tadimam,* பெ. (n.) 1. மருந்துப் பூடு; an medicinal plant. 2. சளி; phlegm.

*[தண் → தடுமம் → தடிமம்.]*

**தடிமரை** *tadi-marai,* பெ. (n.) மாட்டுக்குற்ற வகை (பெரியமாட். 19.); a defect in cattle.

**தடிமல்** *tadimal,* பெ. (n.) தடிமன்[1] (இ.வ.) பார்க்க; see *tadiman*[1].

**தடிமன்[1]** *tadiman,* பெ. (n.) நீர்க்கோவை (வின்); cold, catarrh.

மறுவ. தடுமல், தடுமம், தடுமன்

*[தண் = குளிர்ச்சி, நீர்கோர்ப்பு; தண் → தடு → தடுமம் → தடிமம் → தடிமன் (மு.தா. 299)]*

**தடிமன்[2]** *tadiman,* பெ. (n.) பருமன் (உ.வ.); thickness.

தெ. தட்டு

*[தண்டி → தடி → தடிமன் (வ.வ. 171)]*

**தடிமாடன்** *tadi-mādan,* பெ. (n.) தடியன் பார்க்க; see *tadiyan.*

மறுவ. ஊர்சுற்றி

ம. தடிமாடன்; க. தடும

*[தடி + மாடன். ஊர்க்காலி மாடுபோன்று கண்ணில் கண்டதைத் தின்று, கொழுத்துப் பெருத்துத் திரிபவன்]*

**தடிமாடு** *tadi-mādu,* பெ. (n.) தடியன் பார்க்க; see *tadiyan* (செ.அக.).

*[தடி + மாடு]*

**தடிமிண்டன்** *tadi-mindan,* பெ. (n.) தடியன் பார்க்க; see *tadiyan.*

மறுவ. தடிமாடன், தடியன்

*[தடி + மிண்டன்]*

**தடிமூக்குள்ளான்** *tadi-mūkkuḷḷān,* பெ. (n.) பருத்தமூக்குள்ள பறவைவகை (வின்.); snipe with a stout bill.

*[தடிமூக்கு + உள்ளான்]*



**தடியங்காய்** *taḍiyaṅgāy,* பெ. (n.) சாம்பற்பூசணி (நெல்லை); white-gourd melon.

மறுவ. தடியன், தடியன்காய், பரங்கிக்காய்.

**தடியடி** *taḍi-y-aḍi,* பெ. (n.) 1. தடிப்பிணக்கு (உவ) பார்க்க; see *taḍi-p-piṇakku.* 2. கூட்டத்தைக் கலைக்க காவலர் கையாளும் வன்முறை வகை; lathi charge by police men to disburse unruly crowd. சட்டத்திற்கு புறம்பான கூட்டத்தைக் கலைக்கக் காவலர் தடியடி நடத்தினர்.

*[தடி + அடி]*

அடிதடி = மக்கள் செய்வது

தடியடி = காவலர் நிகழ்த்துவது

**தடியடிமிடாவடி** *taḍi-y-aḍi-miḍā-v-aḍi,* பெ. (n.) நெறியற்ற முரட்டுப்பேச்சு; unreasonable violent talk, bluster. 'தடியடிமிடாவடி யடிக்கிறான்'.

*[தடியடி + மிடா + அடி.]*

வெறும் பானையை அடித்தது போன்ற கடும்ஒலியால் கூறத் தகாத சொற்களைக் கூறுவது.

**தடியடிமுண்டம்** *taḍi-y-aḍi-muṇḍam,* பெ. (n.) துணிவுள்ள உடல்வலு; body's strength and courage.

*[தடியடி + முண்டம்]*

**தடியம்** *taḍiyam,* பெ. (n.) இரண்டு வீசை கொண்ட நிறை (G.Sm.D.I.i,283); standard weight of 2 viss.

தெ. தடியமு; க. தடய

*[தடி + அம் = "அம்" சொல்லாக்க ஈறு]*

**தடியரைஞ்சான்** *taḍi-y-araiñjāṉ,* பெ. (n.) கடலில் வாழும் 12 அடிநீளமுள்ள நச்சுப்பாம்பு; sea-bungar, venomous snake, attaining twelve ft. (தஞ்சை.)

*[தடி + அரைஞ்சான்; நீளமுள்ள நச்சுப் பாம்புயிரி. தஞ்சைக் கடற்கரையில் மிகுதியாகக் காணப்படும்]*

**தடியன்** *taḍiyaṉ,* பெ. (n.) 1. கொழுத்தவன்; stout, fat person. "தடியர் கழுந்தரென்னலாய்" (ஈடு, 4. 8: 8). 2. பயனற்றவன், முரடன்; rude, senseless fellow.

மறுவ. தடிமிண்டன், தடிமாடு, தடிமாடன், தடியாண்பிள்ளை, தடியாபிள்ளை, தடிராமன், தடிராயன், தடித்தாண்டவராயன்.

ம. தடியன்

*[தண்டி → தடியன் (வ.மொ.வ. 171); கொழுத்துத் திரியும் ஊரா (கொண்டி மாடு) போல, பிறர்பொருளைக் கவர்பவன். உடம்புகொழுத்த மூடனைக் குறிக்கும் வசைச்சொல்.]*

**தடியன்காய்** *taḍiyaṉ-gāy,* பெ. (n.) தடியங்காய் பார்க்க; see *taḍiyaṅgāy* (செ.அக.)

மறுவ. கலியாணப் பூசுணை

*[தடி → தடியன் + காய். பருத்துத்திரண்ட, பருமைத்தோற்றங் குறித்து வழங்கிய பெயர்]*

**தடியன்சீலா** *taḍiyaṉ-šīlā,* பெ. (n.) பசிய நிறமுள்ள கடல்மீன்வகை; sea-fish, greyish-green, Sphyraena obtusata (செ.அக.).



**தடியாண்பிள்ளை** *taḍi-y-āṇ-piḷḷai,* பெ. (n.) தடியன் பார்க்க; see *taḍiyaṉ.*

*[தடி + ஆண் + பிள்ளை]*

**தடியாத்தடை** *taḍiyā-t-taḍai* பெ. (n.) ஆடாதோடை; Malabar winter cherry.

**தடியாபிள்ளை** *taḍiyā-piḷḷai,* பெ. (n.) தடியன் பார்க்க (இ.வ.); see *taḍiyaṉ.*

ம. தடியாபிள்ளை

*[தடி + ஆண் + பிள்ளை - தடியாண் பிள்ளை → தடியாபிள்ளை]*

**தடிராமன்** *taḍi-rāmaṉ,* பெ. (n.) 1. புல்லுருவி; parasite; Viscum monoicum. 2. தடியன் பார்க்க; see *taḍiyaṉ.*

*[தடி + ராமன்; இராமன் = ஏதேனும் ஓர் ஆளைக் குறிப்பதற்கான, பொதுச்சொல்.*

பெருந்தீனி தின்று, வீண்பேச்சுப் பேசி ஊர்வம்பு இழுப்பவன். 'தண்டச்சோறு தடிராமன்' என்னும் வழக்கை நோக்குக.]

**தடிராயன்** *tadi-rāyan*, பெ. (n.) தடியன் பார்க்க; see *tadiyan*.

*[தடி + (அரையன் →) ராயன்.]*

**தடிவழக்கு** *tadi-valakku*, பெ. (n.) முரட்டு வழக்கு (நாஞ்.); unreasonable, senseless contention.

*[தடி + வழக்கு]*

**தடிவழி** *tadi-vali*, பெ. (n.) 1. நெடுஞ்சாலை; highway. 2. வயல்களுக்கிடையே செல்லும் வரப்புப்பாதை; foot-path, on the ridge of fields.

*[தடி + வழி]*

**தடிவழிவாரியம்** *tadi-vali-vāriyam*, பெ. (n.) வயல்வழிப் பாதைகளை அளந்து இசைவளிக்கும் உரிமைபெற்ற குழுவினர்; officials who engage to measure the foot-paths of paddy fields. "சுவநி நாவியணச் சதுர்வேதி மங்கலத்துள் - கலிங்கு வாரியப் பெருமக்களும் தடிவழிவாரியப் பெருமக்களும் கூடியிருக்க" (S.I.I. iii. 156).

*[தடி + வழி + வாரியம்]*

**தடிவால்** *tadi-vāl*, பெ. (n.) மாட்டுக் குற்றவகை (பெரிய. மாட். 18); a defect in cattle.

*[தண்டி → தடி + வால்]*

**தடிவிலை** *tadi-vilai*, பெ. (n.) மரவிலை; tree value.

*[தடி + விலை]*

**தடிவு** *tadivu*, பெ. (n.) 1. வெட்டுகை; cutting. 2. அழிக்கை; killing, destroying.

*[தடி → தடிவு]*

**தடிவெட்டிப்போடு-தல்** *tadi-vetti-p-pōdu-*, 19 செ.குன்றாவி. (v.t.) தடிபோடு 4. (இவ.) பார்க்க; see *tadi-pōdu 4*.

*[தடிவெட்டி + போடு-.]*

**தடிவை-த்தல்** *tadi-vai-*, 4 செ.கு.வி. (v.i.) தென்னை வளர்ப்பில் முதலாவதாகக் குழியிலிருந்து மரம் தோன்றுதல் (நாஞ்.); to form stem, as coconut palm, in cultivation.

*[தடி + வை-.]*

**தடினி** *tadini*, பெ. (n.) ஆறு (பிங்.); river. "ஓடும் நஞ்சத்தடினி" (திருவாலவா. 36: 13.).

*[தடி → தடினி.]*

**தடு[1]-த்தல்** *tadu-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. தடை செய்தல் (பிங்.); to hinder, stop, obstruct; to forbid, prohibit, to resist. "இயங்கறத் தடுமின்" (கம்பரா. முதற்போர். 3).'அரசர்கட்குள்ளே எழும் போர்களைப் புலவர்கள் தடுப்பது வழக்கம்' (உ.வ.). 2. அடைத்தல்; to dam, block up. 3. வேறுபிரித்தல்; to partition off. அந்த அறையைத் தடுத்திருக்கிறான் (உவ.); 4. நிறுத்தி வைத்தல்; to detain. 5. அடக்குதல்; to curb, check, restrain, control. "தடுக்கலாகலாத் துயரம்" (கம்பரா. பள்ளியடை 133). 6. விலக்குதல்; to ward off, avert. "சாபத்தை நக்கனே கொலாந் தடுக்கவல்லான்" (கந்தபு. சந்திர. 49). 7. எதிர்த்தல்; to oppose. 8. மறுத்தல்; to contradict, rebut, repel. 9. பயனறச்செய்தல் (வின்.); to baffle, frustrate. 10. எண்ணம் மாறச்செய்தல்; to dissuade.

ம. தடுக்குக; க. தடவு, தடசு; தெ. தடயு; து. தடெபினி, தடெபுனி; கோத., துட. தட்வ; குட., பட., தடெ; குரு. டண்ட்னா.

*[துல் → தல் → தள் → தடு-.]*

**தடு[2]-தல்** *tadu-*, 4 செ.கு.வி. (v.i.) இசைதல் (யாழ். அக.); to be agreeable.

*[தள் → தடு-.]*

**தடு[3]** *tadu*, பெ. (n.) தடுக்கை; hindering, checking, resisting. "தடுவரி யன்போடு" (திருக்கோ. 164, கொளு.).

*[தள் → தடு]*

**தடுக்கல்** *tadu-k-kal*, பெ. (n.) தடை (வின்.); stumbling block, impediment.

*[தடு → தடுக்கல்.]*

**தடுக்கிநில்-தல்** *taḍukki-nil-*, 14 செ.குவி. (v.i.) *தடையால் நின்றுபோதல்* (வின்.); to come to a standstill, as by an obstacle.

*[தடுக்கு + நில்-.]*

**தடுக்கு[1]-தல்** *taḍukku*, 5 செ. குன்றாவி. (v.t.) இடறுதல்; to obstruct, impede, hit against, trip up (செ.அக.).

*[தள் → தடு → தடுக்கு-.]*

**தடுக்கு[2]** *taḍukku-*, பெ. (n.) *1.* இடறுகை; impeding, tripping. *2.* தட்டி (இ.வ.); screen. "தென்னோலை தடுக்குப்பின்ன மிகவும் ஏற்றது" (உ.வ.). *3.* பாய்; mat. "தடுக்குடுத்துத் தலையைப் பறிப்பார்" (தேவா. 80: 10). *4.* தகடு; thin flat layer. *5.* இருக்கை (தவிசு) (சிலப். 16. 37: உரை.); seat.

மறுவ. தட்டி, தவிசு.

ம. தடுக்கு; க. தடிகெ; தெ. தடக

*[தடு → தடுக்கு. அமரும் அளவில் தட்டையாகச் சிறிதாக முடையப்படும் தடுக்கு, தவிசு எனப்பட்டது. சிறுதட்டி போன்ற பாய். (மு.தா. 93).]*

**தடுக்கு[3]** *taḍukku*, பெ. (n.) இடக்கை; left hand.

*[தடு → தடுக்கு]*

**தடுக்குத்தள்ளு-தல்** *taḍukku-t-taḷḷu-*, 5 செ.குவி. (v.i.) முகமன் கூறுதல் (வின்.); to flatter.

*[தடுக்கு + தள்ளு-.]*

**தடுக்குப்பாய்** *taḍukku-p-pāy*, பெ. (n.) *1.* சிறுபாய் (இ.வ.); small mat. *2.* கோரை, சம்பை போன்ற புல்வகை அல்லாது, தென்னோலை, மூங்கிற்பட்டை, பனையோலை போன்றவை களால் முடையப்படும் பாய்; mat made up of ribbon like palm leaves, coconut leaves or bamboo ribs instead of kōrai or šambai.

*[தடு → தடுக்கு + பாய்]*

**தடுக்குவேட்டி** *taḍukku-vēṭṭi*, பெ. (n.) நடக்கும்போது காலில் தடுக்கும் ஆடை; cloth wound undivided round the lions, as hindering one in walk.

மறுவ. அடையவளைந்தான் உடை

*[தடு → தடுக்கு + வேட்டி]*

**தடுகுட்டம்** *taḍu-kuṭṭam*, பெ. (n.) குணாலைக் கூத்துவகை; a kind of dance. "தடுகுட்டமாய்ப் பறவாதார்" (திவ். திருவாய். 3: 5: 3).

*[தடு + குட்டம்]*

**தடுசூடுவல்லி** *taḍu-šūḍu-valli*, பெ. (n.) *1.* மருந்துக்கொடி; medicinal creeper. *2.* முல்லை; jasmine.

**தடுத்தாட்கொண்டவூர்** taḍu-t-tāṭkoṇḍavūr, பெ. (n.) தென்னார்க்காடு மாவட்டம், திருக்கோவிலூர் வட்டத்தில், திருவெண்ணெய் நல்லூருக்கு அருகேயுள்ள ஓரூர்; a place in Tennārkkāḍu district at Tirukkōvilūr taluk, near to Thiruvenneynallūr.

*[தடுத்து + ஆட்கொண்ட + ஊர்.]*

வன்னெஞ்சை நெகிழ்ந்துருகச் செய்யுந் தீந்தமிழ்த் திருப்பாட்டால், தேவாரம் பாடிய சுந்தரரை, இறைவன் தடுத்தாட்கொண்ட இடம்; சுந்தரர் சடங்கவிசிவாச்சாரியார் மகளை மணமுடிக்க முனைந்தஞான்று, திருமணம் நிகழாவண்ணம், இறைவனால் தடுத்தாளப்பட்ட ஊர்.

**தடுத்தாட்கொள்(ளு)-தல்** *taḍu-t-tāṭ-koḷ(ḷu)-*, 16 செகுன்றாவி. (v.t.) எதிர்நோக்கும் வினையன்றி, வேறுவினை மேற்கொள்ளுங்கால், அவ் வினையைத் தடுத்து, தன்வயம் வைத்துக் கொள்ளல்; to prevent from doing unexpected thing and taking to one's side.

*[தடுத்து + (ஆள்கொள்ளு →) ஆட் கொள்ளு-.]*

சுந்தரமூர்த்தி நாயனார், இறைபணி மறந்து திருமணம் செய்துகொள்ள முயன்றபோது, இறைவன் முதியோர் வடிவம்பூண்டு, திருமணஞ் செய்வதைத் தடுத்து, தன்பால் ஆட்கொண்ட செய்தியினைச் சுந்தரரின் திருப்பாட்டு தெரிவிக்கின்றது; தமிழ்நாட்டில் மக்களை அடிமைகொள்ளும் முறை இருந்ததையும், அதற்கு அந்தணர்களும் விலக்கல்ல என்னும் வாழ்வியல் முறைமை யினையும், தேவாரத்திருப்பாக்கள் வாயிலாக, நாம் அறிகின்றோம்.

**தடுத்தாள்(ளு)-தல்** *taḍu-t-tāḷ(ḷu)-*, 16 செ.குன்றாவி. (v.i.) திருத்தி மீட்டுக்கொளல்; to reclaim, redeem, as a person from his evil ways.

*[தடு → தடுத்து + ஆள்(ளு)-.]*

**தடுத்தாளி** *taḍu-t-tāḷi,* பெ. (n.) விரைவு; swiftness.

*[சடு → தடு → தடுத்தாளி.]*

**தடுத்துவை-த்தல்** *taḍu-t-tu-vai-,* 4 செகுன்றாவி. (v.t.) தடைசெய்து நிறுத்தி வைத்தல் (வின்.); to put off, postpone.

*[தடு → தடுத்து + வை-..]*

**தடுதலை** *taḍu-talai,* பெ. (n.) தங்குதடை; impediment. "அவர்கள் தடுதலையின்றி எங்கும் போவார்கள்" *(எங்களூர், 24).*

*[தடு + தலை]*

**தடுதாளி** *taḍu-tāḷi,* பெ. (n.) சடுத்தம் (அவசரம்); haste, hurry. 'இந்தத் தடுதாளியில் ஒன்றும் முடியாது' (நெல்லை).

*[தடுதாளி = தடுக்கின்ற ஆள்; ஒருகா. சடுதாள் → சடுதாளி → தடுதாளி]*

**தடுப்பு** *taḍuppu,* பெ. (n.) *1.* இடையீடு, தடுக்கை; hindering, obstructing, resisting, prohibiting. "தடுப்பருஞ் சாபம்" *(கம்பரா. அகலிகை. 75).* *2.* தடை; check, hindrance, restraint. கடத்தல் தடுப்புப் பிரிவு (இக்.வ.).

*[தடு → தடுப்பு]*

**தடுப்புக்காவல்** *taḍuppu-k-kāval,* பெ. (n.) குற்றம்செய்தவர் என்று நம்பப்படுபவரை, முன்னெச்சரிக்கையாகக் கேட்டாய்வின்றிக் குறிப்பிட்ட காலம்வரை, சிறையில் வைத்தல்; detaining a person without trail as a preventive measure; preventive detention. ஓராண்டு தடுப்புக்காவலில் வைக்கப்பட்டார். (கிரி. அக.)

*[தடுப்பு + காவல்]*

**தடுப்புச்சுவர்** *taḍuppu-c-cuvar,* பெ. (n.) மண்ணரிப்பு, வெள்ளம் ஆகியவற்றைத் தடுக்கும் சுவர் (பொ.வழ.), மறைப்புக்காகக் கட்டப்படும் சுவர்; wall.

*[தடுப்பு + சுவர்]*

**தடுப்பூசி** *taḍuppūsi,* பெ. (n.) முன்விழிப்போடு போடப்படும் ஊசி; vaccination, inoculation.

*[தடுப்பு + ஊசி]*

**தடுபடை** *taḍu-paḍai,* பெ. (n.) மாற்றுப்படை; spare army, part of an army.

*[தடு + படை]*

**தடுபுடு-த்தல்** *taḍupuḍu-,* 4 செ.கு.வி. (v.i.) விரைவுபடுத்தல் (யாழ். அக.); to be hasty.

*[தடு → தடுபுடு-. ஒருகா. தடுபடு → தடுபுடு-..]*

**தடுபுடுதாயம்** *taḍu-puḍu-tāyam,* பெ. (n.) சடுத்தம், விரைவு (யாழ். அக.); hastiness.

*[தடுபுடு + தாயம்]*

**தடுபொடு-த்தல்** *taḍupoḍu-,* 4 செ.கு.வி. (v.i.) விரைவுபடுதல்; to urge.

*[தடு + பொடு-.]*

**தடுபொடெனல்** *taḍu-poḍeṉal,* பெ. (n.) *1.* ஒலிக்குறிப்பு; onom. expr. of patting or rattling sound. *2.* தடபுடெனல் பார்க்க; see *taḍa-puḍeṉal.*

*[தடு + பொடு + எனல்]*

**தடுபொடுதாயம்** *taḍupoḍu-tāyam,* பெ. (n.) விரைவு; speed.

*[தடுபுடு → தடுபொடு + தாயம்]*

**தடுபொறி** *taḍu-poṟi,* பெ. (n.) மிகுசுருக்கு, மிகு விரைவு; break point.

*[தடை → தடு + பொறி]*

**தடுமம்** *taḍumam,* பெ. (n.) *1.* குளிர்ச்சி; coolness. *2.* நீர்க்கோப்பு; cold.

மறுவ. குளுமம், நீர்க்கோவை.

*[தண் → தடு → தடுமம் (மு.தா. 299).]*

**தடுமல்** *taḍumal,* பெ. (n.) தடுமம் (நெல்லை) பார்க்க; see *taḍumam.*

ம. தடுமல்; க. தடி (ஈரம்); தெ. தடி

*[தடுமம் → தடுமல்.]*

**தடுமன்** *taḍumaṉ,* பெ. (n.) தடுமம் (நெல்லை) பார்க்க; see *taḍumam.*

*[தடுமம் → தடுமன்]*

**தடுமாற்றம்** *tadu-māṟṟam,* பெ. (n.) 1. **ஒழுங்கின்மை;** disorder, as of things, derangement, inconsistency, as in speech. "சொற்றடு மாற்றத் தொடர்ச்சியை விட்டு" (மணிமே 27: 166). 2. **தள்ளாடுகை;** tottering, unsteadiness, stumbling, staggering, slipping. 3. **மனக்கலக்கம்;** perplexity, confusion, bewilderment, mental disorder. "தடுமாற்றம் போஒந் துணையறிவா ரில்" (நாலடி. 140). 4. **ஐயுறவு** (வின்.); doubt, hesitation. 5. **தவறு** (வின்.); mistake; proneness to mistake.

ம. தடுமாறு; தெ. தடமாடு

*[தடுமாறு → தடுமாற்றம்]*

**தடுமாற்று** *taḍumāṟṟu,* பெ. (n.) தடுமாற்றம் பார்க்க; see *taḍumāṟṟam.* "தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரம்" (கலித். 6).

*[தடுமாற்றம் → தடுமாற்று]*

**தடுமாறு-தல்** *taḍumāṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **ஒழுங்கற்றிருத்தல்;** to be deranged. 2. **நெறியின்றிக் கலந்து கிடத்தல்;** to be thrown in a jumble. "எல்லா மிடைதடுமாறு நீரால்" (கம்பரா. ஆற்றுப். 17). 3. **சறுக்குதல், வழுக்குதல்;** to slip. 4. **தள்ளாடுதல்;** to totter, stagger, be unsteady. "இடை தடுமாற வேகி" (கம்பரா. ஊர்தேடு. 184). 5. **சுண்டியெறிதல்;** to be tossed about. 6. **துன்பத்திற்குள்ளாதல்;** to be troubled. "வினைக்கடலிற் றடுமாறு முயிர்க்கு". (தேவா. 974: 7). 7. **தாறுமாறாக்குதல், மலைப்பூட்டுதல், உள்ளங்குழம்புதல்;** to be confused. 8. **மனங் கலங்குதல்;** to be puzzled. "எண்ணந்தான் தடுமாறி" (திருவாச. 5:25). 9. **சிக்கலாக்குதல், சிக்கவைத்தல், பின்னிக்கொள்ளுதல்;** to be perplexed. 10. **கெடுத்தல், குலைத்தல்;** to be disconcerted. 11. **ஐயங்கொள்ளுதல், தயங்குதல்** (வின்.); to hesitate, to doubt; to be in suspense. 12. **தவறுதல்** (வின்.); to be mistaken, to be inconsistent, to err.

*[தள் → தடு → தடுமாறு-.]*

**தடுமாறுத்தி** *taḍu-māṟutti,* பெ. (n.) **கருமியத்தைக் கரணியமெனத் தடுமாறக் கூறும், அணிவகை** (மாறனலங், சொல்: 205); a figure of speech in which cause and effect are inverted.

*[தடுமாறு + உத்தி]*

**தடுமாறுவமம்** *taḍumāṟuvamam,* பெ. (n.) 1. **ஐயவணி** (தொல். பொருள். 310. உரை); a figure of speech in which a close resemblance between two objects leads to one of them being spoken of as if it were mistaken for the other. 2. **எதிர் நிலையணி** (தொல். பொருள். 310, உரை.); a figure of speech in which the usual form of comparison is inverted, the uvamāṉam being compared to the uvamēyam.

*[தடுமாறு + உவமம்]*

**தடுமாறுவமை** *taḍumāṟuvamai,* பெ. (n.) **தடுமாறுவமம்** (இலக். வி: 640) பார்க்க; see *taḍumāṟuvamam.*

*[தடுமாறு + உவமை]*

**தடை**[1] *taḍai,* பெ. (n.) 1. **தடுக்கை;** resisting, obstructing. "தடையேதுமில் சூலம்" (கம்பரா. அதிகாயன்: 251). 2. **இடையூறு;** hindrance, obstacle, impediment, interruption. "தடையொரு சிறிதின் றாகி" (கம்பரா. மீட்சி: 163). 3. **மறுப்பு;** objection. தடைவிடை. 4. **காப்பாடை** (அருநி.); coat of mail. 5. **காப்பு;** armlet or anklet worn as a charm. 6. **காவல்;** guard, watch. "தம் பரிசனங்கள் சூழத் தனித்தடையோடுஞ் சென்று" (பெரியபு. திருஞான. 647). 7. **வாயில்;** door, gate. "தனித்தடையின் வைகும் நந்தி" (காஞ்சிப்பு. மணிக.31). 8. **அணை;** bund, embankment. "தாங்குதடை பொருது" (பரிபா. 7: 19). 9. **அடைப்பு;** that which keeps a thing in its place, as a linchpin, catch, bolt, etc. 10. **மந்திரத்தடை;** charm, magic spell, as an obstacle. 11. **மனைவி** (அகநி.); wife. 12. **தடையம்** 1. பார்க்க; see *taḍaiyam* 1. 13. **எண்பது பலங்கொண்ட அளவு;** a measure of weight = 80 palams. 14. **வெண்ணாங்கு;** creamy-leaved lance wood, m.tr., Pterospermum suberifolium. 15. **வாழை மடல்;** sheathing petioles of the plantain tree. வாழைத்தடை (இ.வ.).

ம. தெ. தட; க. தடெ, தட; து. குட, பட. தடெ; கோத. தட்வ்; துட. தட்ப்; கோண். தட்டி; குரு. டண்ட்னா; பிரா. தட்.

*[தள் → தடு → தடை (மு.தா. 102), முட்டற்கருத்து → தட்டல்கருத்து →*

*தடைக் கருத்து. இஃது, தடைக்கருத்து வளர்ந்த முறையாகும். தட்டுத்தடையென்பெது மரபுத்தொடர். தீயதைக் காண்டலும், கேட்டலும், நல்வினைக்குத் தடையாகக் கருதிய சமணர் கண்டுமுட்டு; கேட்டு முட்டு போன்ற சொற்களைப் புனைந்தனர் என்பதறிக]*

**தடை²-தல்** *taḍai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **தடுத்தல்;** to hinder, stop. "எண்வழி தடைந்து" *(கல்லா. 31:1).*

க. தடெ.

*[தடு → தடை-.]*

**தடை³-த்தல்** *taḍai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **இடையூறு செய்தல்;** to hindrance. "மழைவந் தெழுநாள் பெய்து மாத்தடைப்ப" *(திவ். பெரியாழ். 3. 5: 2).*

*[தடு → தடை-.]*

**தடை⁴** *taḍai*, பெ. (n.) **வாழைப்பட்டை;** the bark of banana tree.

*[தட்டை → தடை; வாழைப்பட்டையை வாழைத்தடை என்பர் (மு.தா. 112). ஒருகா: தடு → தடை; வாழைமரத்தின் உள்ளே உள்ள தண்டுப்பகுதியை மறைத்து வளர்ந்துள்ள மட்டைப்பகுதி தட்டை அல்லது, வாழைத்தடை யென்று பெயர் பெற்றிருக்கலாம்.]*

**தடை⁵** *taḍai*, பெ. (n.) **தடுப்புச்சுவர்** பார்க்க; see *taḍuppu-c-cuvar.*

*[தடு → தடை]*

**தடைஇ** *taḍaii*, குவி.எ. (adv.) 1. **சரிந்து;** bent down, drooped. 2. **பருத்து;** plump. "புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத் திதலை யணிந்த தேங்கொண் மென்முலை" *(அகநா. 26).*

*[தடு → தட→ தடை → தடைஇ]*

**தடைஇய** *taḍaiiya*, பெ.எ. (adj.) 1. **பருத்த;** plumpy. "நன்றுந் தடைஇய மென்றோள்" *(கலித். 93).* 2. **திரண்ட;** rounded. "அம்பணைத் தடைஇய மென்றோள்" *(நெடுநல். 149).*

தடைஇய என்பதற்குச் சரிந்த, வளைந்த என்று பொருள் கொள்ளின், தட வென்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த எச்சமாகக் கொள்க. இனித் தடைஇய என்பதற்குப் பருத்த என்னும் பொருளுண்மையை "தடைஇய மென்றோளாய் கேட்டீவாயாயின" (கலித். 93) எனவும் வருமிடங்களில் காண்க. (அகநா. 26. பொ. வே. சோ. உரை.)

*[தடு → தடை → தடைஇய]*

**தடைஓட்டம்** *taḍai-ōṭṭam*, பெ. (n.) தடையோட்டம் பார்க்க; see *taḍai-y-ōṭṭam.*

*[தடு → தடை + ஓட்டம்]*

**தடைக்கல்** *taḍai-k-kal*, பெ. (n.) **இடையூறு;** stumbling block. தமிழ்ப்பற்றின்மையே தமிழ் வளர்ச்சிக்குத் தடைக்கல்லாக உள்ளது *(உ.வ.).*

*[தடு → தடை + கல்]*

**தடைக்காப்பு** *taḍai-k-kāppu*, பெ. (n.) **பயிர்கட்கு வருந்தொற்று நோய்;** disinfection.

*[தடு → தடை + காப்பு]*

**தடைகட்டு¹-தல்** *taḍai-kaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **பாம்பு முதலியவற்றை மந்திரத்தால் தடுத்தல்;** to control or check by magic spell, as a cobra. 2. **துலைக்கோலில் எடைத்தடைய மிடுதல்;** to put equivalent weight of the container in the other plate of the scale to equalise.

*[தடு → தடை + கட்டு-.]*

**தடைகட்டு²** *taḍai-kaṭṭu*, பெ. (n.) **நிறை யளவுகளை ஆய்வுசெய்யும் பணி;** office of inspector of weights measures, etc. "தடைகட்டு மாலையப்ப பிள்ளையோ" *(விறலிவிடு. 453).*

*[தடை + கட்டு]*

**தடைகருப்பாசயம்** *taḍai-karuppāšayam*, பெ. (n.) **கருத்தரிக்கும்போது ஏற்படும் உடலுறுப்புக் கேடு;** embryo subjected to deformity.

*[தடை + கருப்பாசயம்]*

**தடைச்சிவலை** *taḍai-c-civalai*, பெ. (n.) **மீன் பிடி வலை** (மீனவ.); fishing-net.

*[தடு → தடை + ச் + ச் + இ + வலை]*

**தடைசெய்-தல்** *tadai-šey-,* பெ. (n.) தடு[1]-த்தல் பார்க்க; see *tadu*[1]-. "நில்லிங் கெனவே தடை செய்த நிலை" (கந்தபு. தக்கன் கயிலை. 18).

*[தடை + செய்-.]*

**தடைநீக்கி** *tadai-nīkki,* பெ. (n.) 1. வயிற்றுப் போக்கு மருந்து; medicine for opening the bowels. 2. உடற்கழிவுநீரைத் தடை செய்தல்; medicine having the powder of clearing opening or controlling the natural ducts of the fluids and secretion of the body.

*[தடை + நீக்கி]*

**தடைபடுத்து-தல்** *tadai-paduttu-,* 4 செகுன்றாவி. (v.t.) தடுத்தல்; to prevent.

*[தடை + படுத்து-. 'படுத்து' துணைவினை]*

**தடைபண்ணு-தல்** *tadai-pannu-,* 4 செகுன்றாவி. (v.t.) 1. இடையூறு செய்தல்; to hinder, interpose obstacles, prevent. 2. காவற்படுத்துதல்; to arrest, confine. 3. தடுத்தல்; to stop, exclude, interrupt, possession.

*[தடை + பண்ணு-. 'பண்ணு' துணை வினை]*

**தடைமரம்[1]** *tadai-maram,* பெ. (n.) நெய்த துணியைச் சுருட்டுவதற்குத் தறியில் அமைக்கப்பட்ட குறுக்குச்சட்டம் (இ.வ.); cross-piece in a loom, used for rolling the cloth when woven.

மறுவ. இடைமரம், படமரம்

*[தடை + மரம்]*



**தடைமரம்[2]** *tadai-maram,* பெ. (n.) மரவகை; a kind of tree - Pterospermum suberifolium.

**தடைமருந்து** *tadai-marundu,* பெ. (n.) தடுப்பு மருந்து; preventive medicine.

*[தடை + மருந்து]*

**தடைமோதிரம்** *tadai-mōdiram,* பெ. (n.) பெரிய கணையாழியைத் தடுத்துநிற்குஞ் சிறு கணையாழி; keeper.

*[தடை + மோதிரம்.]*

**தடையம்** *tadai-yam,* பெ. (n.) 1. நிறுக்கப் போகும் பொருளை வைத்திருக்கும் ஏனம் முதலியவற்றிற்குரிய எடை (வின்.); allowance weight to balance the vessel containing the articles to be weighed. "தடையமென்றுந் தூக்கித் தராசானிறுக்க" (பணவிடு. 181). 2. பெற்றுக் கொண்ட பொன்னுக்குத் தட்டார் கொடுக்கும் பொன் னிறைகல் (இ.வ.); token weight given by a goldsmith, as showing the amount of gold delivered to him. 3. அணிகலன்கள் (நெல்லை); ornaments. 4. தட்டுமுட்டு (இ.வ.); utensils, articles. 5. களவு முதலிய குற்றங்களில் தொடர்புடைய பொருள் (இ.வ.); stolen property; material object concerned in a crime. 6. கொதுவைப்பண்டம் (இவ.); pawned goods. 7. கத்திப்பிடி (வின்.); hilt of a sword.

*[தடை + அம்; 'அம்' = சொல்லாக்க ஈறு]*

**தடையறு-த்தல்** *tadai-y-aru-,* 4 செ.குவி. (v.i.) 1. மந்திரத்தடை நீக்குதல்; to remove magic spells by counter charms. 2. இடையூறு விலக்குதல்; to obviate or remove difficulties.

*[தடை + அறு-.]*

**தடையாணை** *tadai-y-āṇai,* பெ. (n.) 1. ஒன்றைச் செய் அல்லது செய்யற்க என, அறமன்றம் இடும்ஆணை; injunction. 2. பொதுஅமைதி கருதி ஊர்வலம், கூட்டம் போன்றவற்றை நடத்தத் தடைவிதித்து, அதிகாரிகளிடும் ஆணை; prohibitory order.

*[தடு → தடை + ஆணை]*

**தடையோட்டம்** *tadai-y-ōṭṭam,* பெ. (n.) தடகளப் போட்டியில் ஏற்படும் தடைகளைத் தாண்டி ஓடுகிற ஓட்டம்; hurdles.

*[தடை + ஓட்டம்]*

**தடைவாங்கு-தல்** *tadai-vāṅgu-,* 5 செகுன்றாவி. (v.t.) வண்டிச்சக்கரத்தில் கம்பியைப் பொருத்துதல் (செங்கை.); to spoke in its axle point.

*[தடை + வாங்கு-.]*

**தடைவிடை** *tadai-vidai,* பெ. (n.) 1. மறுப்பும், விடையும்; objection and reply. 2. உடன்பாடும் மாறுபாடும்; pros and cons.

*[தடை + விடை]*

**தண்** *taṇ,* பெ. (n.) 1. குளிர்ச்சி (பிங்.); coolness, coldness. 2. நீர்; water. 3. அருள்; grace; love. "தண்கலந்த சிந்தையோடு" (சேதுபு. சீதைகுண்ட. 5).

க., ம. தண்.

**தண்கடல்** *taṇ-kadal,* பெ. (n.) சிறுநீர் (சித். குழூஉ); urine.

*[தண் + கடல்]*

**தண்கடற்சேர்ப்பன்** *taṇ-kadar-šērppaṉ,* பெ. (n.) நெய்தல்நிலத் தலைமகன்; chief of the maritime tract. "முண்டக மலருந் தண்கடற் சேர்ப்பன்" (ஐங்குறு. 108).

*[தண்கடல் + சேர்ப்பன்]*

**தண்கதிர்** *taṇ-kadir,* பெ. (n.) தண்சுடர்க் கலையோன் பார்க்க; see *taṇ-šuḍar-k-kalaiyōṉ.* "தன்னிழலோ ரெல்லார்க் குந்தண் கதிராம்" (பு. வெ. 9:34).

மறுவ. குளிர்கதிர், தண்சுடர்

*[தண் + கதிர்]*

**தண்கயம்** *taṇkayam,* பெ. (n.) குளிர்ந்த குளம்; cool pond. "நறுவீயைம்பான் மகளிராடும் தைஇத் தண்கயம் போல" (ஐங்குறு. 84).

*[தண் + கயம். கயம் = குளம்]*

**தண்கான்** *taṇkāṉ,* பெ. (n.) இழிந்தகாடு; thinning forest. "வெஞ்சுடர் அன்னானை யான் கண்டேன்" (கலித்.).

*[தண் + கான்]*

**தண்சுடர்** *taṇ-šuḍar,* பெ. (n.) தண்சுடர்க் கலையோன் பார்க்க; see *taṇ-šuḍar-k-kalai-yōṉ.* "தண்சுடர் அன்னாளைத் தான் கண்டாளாம்" (கலித்.).

*[தண் + சுடர்.]*

**தண்சுடர்க்கலையோன்** *taṇ-šuḍar-k-kalai-yōṉ,* பெ. (n.) நிலவு (திவா.); moon.

மறுவ. குளிர்மதியன், தண்ணிலவன், அம்புலி

*[தண்சுடர் + கலையோன். குளிரும் ஒளியுஞ் சான்ற கதிர்களையுடையவன்]*

**தண்சொரிவு** *taṇ-šorivu,* பெ. (n.) 1. குளிர்ச்சியான தண்ணீர்ப்பீச்சல்; cold douche. 2. சில்லெனக் குழாய்த்தண்ணீர்ச் சொரிவு; cold shower bath (சா.அக.).

*[தண் = குளிர்மைத் தன்மை; தண் + சொரிவு.]*

**தண்டக்கட்டு** *taṇḍa-k-kaṭṭu,* பெ. (n.). களத்திற் பொலிவீசுஞ் சமையத்துக் காற்று அடித்துக் கொண்டுபோன நெல்லைத் தூற்றுவோர் அடைதற்குரிய உரிமை (G. Sm. D. I, ii, 49); ryot's perquisite of the grains carried away by wind while winnowing.

*[தண்டம் + கட்டு]*

**தண்டக்காரன்** *taṇḍa-k-kāraṉ,* பெ. (n.) வேலைக்காரன் (மீனவ.); servant.

*[தண்டம் + காரன். 'காரன்' - உடைமைப் பெயரீறு. ஒ.நோ. வேலைக்காரன், மாட்டுக்காரன், வீட்டுக்காரன்]*

**தண்டக்காரி**[1] *taṇḍa-k-kāri,* பெ. (n.) வேலைக்காரி; maid servant.

*[தண்டக்காரன் (ஆ.பா.) - தண்டக்காரி (பெ.பா.)]*

**தண்டக்காரி**[2] *taṇḍa-k-kāri,* பெ. (n.) தொட்டால் வாடி; prickly sensitive plant (சா.அக.).

*[தண்டம் + காரி]*

**தண்டக்குற்றம்** *taṇḍa-k-kuṟṟam,* பெ. (n.) தண்டனைக்குரிய குற்றம்; punishable offence. "குற்றம் செய்தாரைக் கொள்ளும் தண்டமும்" (S.I.I. 8. 469).

*[தண்டம் + குற்றம்]*

**தண்டக்கூற்றம்** *taṇḍa-k-kūṟṟam,* பெ. (n.) வரிவகை (I.M.P.Cm.454); an ancient tax.

*[தண்டம் + கூற்றம்]*

**தண்டகநாடு** *taṇḍaga-nāḍu,* பெ. (n.) தொண்டைமண்டலம் பார்க்க; see *toṇḍai-maṇḍalam.* "வார்புனற் றெண்டிரைத் தண்டகநாடு" (கம்பரா. ஆறுசெல். 38).

*[தொண்டைநாடு → தொண்டநாடு → தண்டநாடு → தண்டகநாடு]*

**தண்டகபுரம்** *taṇḍagapuram,* பெ. (n.) காஞ்சி நகருக்குள்ள பதின்மூன்று பெயர்களுள் ஒன்று; one of the thirteen names of Kāñjipuram.

**தண்டகம்**[1] *taṇḍagam,* பெ. (n.). 1. தொண்டை நாடு; toṇḍai-maṇḍalam. 2. தண்டகாரணியம் பார்க்க; see *taṇḍa-kāraṇiyam.* "தண்டகமா மடவியாகி" (உத்தரரா. சம்புவன்வ. 65). 3. தண்டனை; punishment. "எம்பிரான் றண்டகஞ் செய் தலையளி யாகுமால்" (கந்தபு. ததீசியு. 196). 4. ஒரு வகை வடமொழிச் செய்யுள் (வீரசோ. யாப். 34, உரை); a kind of Sanskrit verse. 5. முதுகெலும்பு; spinal cord, as the seat of a mystic centre. "தண்டகத் துள்ளவை" (திருமந். 1385).

**தண்டகம்**[2] *taṇḍagam,* பெ. (n.). 1. கரிக்குருவி; black sparrow. 2. நுரை; foam. 3. அகத்தியர், இராமதேவர் முதலானோர் செய்த தமிழ் மருத்துவநூல்; the name of a treatise on medicine written by Agattiyar and Ramadevar. 4. இசிவுநோய் வகையுளொன்று; a kind of spasm. 5. உடல்விறைப்பு; stiffness of the whole body (சா.அக.).

**தண்டகமாலை** *taṇḍaga-mālai,* பெ. (n.) தொண்ணூற்றாறுவகைச் சிற்றிலக்கியங்களுள் முந்நூறு வெண்பாக்களாலியன்ற சிற்றிலக்கிய வகை (தொன். வி. 283, உரை); poem of 300 stanzas in veṇpā metre, one of 96 pirabandam.

*[தண்டகம் + மாலை]*

**தண்டகவூதை** *taṇḍaga-v-ūdai,* பெ. (n.) முடக்குநோய் வகை (சீவரப்); a kind of paralysis.

*[தண்டகம் + ஊதை]*

**தண்டகன்**[1] taṇḍagaṉ, பெ. (n.). 1. தண்டகாரணியம், தண்டகநாடு, இவற்றின் பெயருக்குக் காரணமான அரசன் (கந்தபு. திருநகர. 374); a king, after whom Taṇḍagāraṇiyam and Taṇḍaganāḍu took their names. 2. கூற்றுவன்; Yamaṉ. "தண்டகன் வெருட்சி யெய்தினான்" (கந்தபு. மார்க். 215).

*[தண்டகம் → தண்டகன்]*

**தண்டகாகம்** *taṇḍa-kāgam,* பெ. (n.) செம்போத்து (சங்.அக.); crow pheasant.



**தண்டகாரணியம்** *taṇṭakāraṇiyam,* பெ. (n.) தென்தேயத்தில், துறவிகள் மிக்கு வதிந்த காடு; the forest of Daṇḍagam in Deccaṇ, a famous resort of ascetics. "தண்டகாரணியம் புகுந்து" (திவ். பெரியதி. 11. 2:3).

*[தண்டகம் + ஆரணியம்]*

Skt. araṇya → த. ஆரணியம்

**தண்டகிவைப்புநஞ்சு** *taṇḍagi-vaippu-nañju,* பெ. (n.) தீமுருகல் நஞ்சு; phosphorus (செ.அக.).

*[தண்டகி + வைப்புநஞ்சு]*

**தண்டகை** *taṇḍagai,* பெ. (n.) தண்டகாரணியம் (சங்.அக.) பார்க்க; see *taṇḍagāraṇiyam.*

**தண்டங்கீரை** *taṇḍaṅ-kīrai,* பெ. (n.) தண்டுக் கீரை; common spinach.

*[தண்டு + கீரை]*

**தண்டங்கொடு**[1]**-த்தல்** *taṇḍaṅ-koḍu-,* 4 செ.குன்றாவி (v.t.) 1. ஒறுப்புக் கட்டணம் செலுத்துதல்; to pay a fine, suffer a penalty. 2. இழத்தல் (இ.வ.); to suffer loss.

*[தண்டம் + கொடு-,]*

**தண்டங்கொடு**[2]**-த்தல்** *taṇḍaṅ-koḍu-,* 4 செ.குவி. (v.i.) இழப்புக்கு ஈடு கொடுத்தல் (உ. வ.) ; to make good a loss.

*[தண்டகம் + கொடு-,]*

**தண்டச்சோறு** *taṇḍa-c-cōṟu,* பெ (n.). 1. பயனற்றவனுக்கு இடும் உணவு; food offered to useless persons under compulsion.

*2.* இலவயமாகக் கொடுக்குஞ் சோறு (இ.வ.); food given gratis. *3.* புல்லுருவி பார்க்க; see *pulluruvi.*

**மறுவ.** வீண்சோறு, வெட்டிச்சோறு

*[தண்டம் + சோறு]*

**தண்டசக்கரம்** *taṇḍa-šakkaram,* பெ (n.) **குயவனது திருகையும் கோலும்** (நன். 297, உரை.); potter's stick and wheel (செ.அக.).

*[தண்டம் + சக்கரம்]*



**தண்டசம்** *taṇḍašam,* பெ (n.) **கொல்லுலை;** blacksmith's forge.

**தண்டஞ்செய்-தல்** *taṇḍañ-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.). *1.* **தண்டித்தல்;** to punish. *2.* **கோலால் அளத்தல்;** to measure with a rod. "கணக்கருடன் கூடி . . . தண்டஞ்செய்து" (திருவாலவா. 30, 7). *3.* **நிலத்தில் வீழ்ந்து வணங்குதல்;** to make obeisance by prostration.

*[தண்டம் + செய்-.]*

**தண்டட்டி** *taṇḍaṭṭi,* பெ. (n.) **தண்டொட்டி** (நெல்லை); a woman's ear ornament.

*[தண்டொட்டி → தண்டட்டி. காதுத் தண்டினையொட்டி மாதர் அணியுங் காதணி; இன்றும் தென்பாண்டிப் பகுதியில் மக்கள் வழக்கத்திலுள்ளது]*

**தண்டடி-த்தல்** *taṇḍaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) **படை, படைவீட்டில் தங்குதல்;** to encamp, as an invading army.

*[தண்டு + அடி-.]*

**தண்டத்தலைவன்** *taṇḍa-t-talaivan,* பெ. (n.) **படைத்தலைவன்;** commander of an army. "தண்டத்தலைவருந் தலைத்தார்ச் சேனையும்" (சிலப். 26, 80).

*[தண்டு → தண்டம் + தலைவன்]*

**தண்டத்தான்** *taṇḍattāṉ,* பெ. (n.) **கூற்றுவன்;** yamaṉ. "அவண்ணந் தண்டத்தான் கூற" (பிரமோத் 3: 23).

**மறுவ.** காலன்; கூற்றுவன்

*[தண்டு → தண்டம் + அத்து + ஆன். படைக்கலனுடைய எமன்.]*

**தண்டத்தீர்வை** *taṇḍa-t-tīrvai,* பெ. (n.). **தண்டனையாகச் செலுத்தும் வரி;** penal assessment.

*[தண்டம் + தீர்வை]*

**தண்டத்துக்கழு-தல்** *taṇḍattu-k-kaḻu-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **பொருள் முதலியன வற்றைப் பயனின்றிக் கொடுத்தல்;** to give money etc., uselessly and under compulsion. *2.* **இழப்பாக இறுத்தல்;** to suffer penalty.

*[தண்டத்துக்கு + அழு-.]*

**தண்டதரன்** *taṇḍa-daraṉ,* பெ. (n.) *1.* **கூற்றுவன்** (தண்டிப்பவன்) (பிங்.); yamaṉ, as one who punishes. "தண்டதரன்செல் கரும்பகடு" (குமர. பிர. மீனாட். பிள். 38). *2.* **வீமன்** (வின்.) (கதாயுதத்தையுடையவன்); Bhimaṉ, as club - bearer. *3.* **அரசன்** (யாழ்.அக.); king. *4.* **குயவன்** (யாழ்.அக.); potter.

*[தண்டம் + தரன்]*

**தண்டதாசன்** *taṇḍa-dāšaṉ,* பெ. (n.) **அடிமை** (யாழ்.அக.); slave.

*[தண்டம் + தாசன்]*

**தண்டதாமிரி** *taṇḍa-dāmiri,* பெ. (n.) **காலம் காட்டும் கருவியாகிய கன்னல் வட்டில்** (யாழ்.அக.); hour-glass.

*[தண்டம் + தாமிரி. தண்டம் - துளை; தாமிரி - தாமிரம்]*

**தண்டதாரணம்** *taṇḍa-dāraṇam,* பெ. (n.) ஆணை; order.

*[தண்டம் + தாரணம்]*

**தண்டந்தீர்வை** *taṇṭan-tīrvai,* பெ. (n.) தண்டத்தீர்வை பார்க்க; see *taṇḍa-t-tīrvai* (செ.அக.).

*[தண்டம் + தீர்வை]*

**தண்டநாயகம்** *taṇḍa-nāyagam,* பெ. (n.) 1. படைத் தலைமைப் பணி; commandership of an army. "தண்ட நாயகம் பரகேசரி பல்லவவரையற்கு" (S.I.I. ii. 306). 2. அரசன்; king, as the lord who punishes.

*[தண்டு → தண்டம் + நாயகம்]*

**தண்டநாயகன்** *taṇḍa-nāyagan,* பெ. (n.) 1. தண்ட நாயகம் பார்க்க; see *taṇḍa-nāyagam.* 2. நந்தி; Nandhi, as the chief of Šivan's host.

*[தண்டு → தண்டம் + நாயகன்]*

**தண்டநீதி** *taṇḍa-nīdi,* பெ. (n.) அரசியல் கூறும் நூல்; science of polity. தண்ட நீதியா மனுநீதி" (பிரபோத. 13, 13).

*[தண்டு + நீதி]*

**தண்டப்படு-தல்** *taṇḍa-p-paḍu-,* 20 செகுவி. (v.i.) ஒறுப்புக்கட்டணம் வரையறை செய்தல்; to be fined, punished. "சட்டரைப் பிழைக்கப் பேசுவார் ஒருகாசு தண்டப் படுவது" (T.A.S.i. 9).

*[தண்டம் + படு-.]*

**தண்டப்பாசிகன்** *taṇḍa-p-pāšigan,* பெ. (n.) கொலைகாரன் (யாழ்அக.); murderer.

*[தண்டம் + பாசிகன்]*

**தண்டப்பேர்** *taṇḍa-p-pēr,* பெ. (n.) குடிகளிடமிருந்து வாங்கும் வரியின் பட்டிகை (நாஞ்.); rent-roll, showing the tax due from the ryots.

*[தண்டம் + பேர்]*

**தண்டப்பொருள்** *taṇḍa-p-poruḷ,* பெ. (n.) ஒறுப்புக்கட்டணமாக வாங்கும் பொருள் (பிங்.); money collected as fines.

*[தள் → தண்டு → தண்டம் + பொருள்]*

**தண்டபாணி** *taṇḍa-bāṇi,* பெ. (n.). 1. முருகக் கடவுள்; Lord Murugan. 2. திருமால் (வின்.); Thirumāl. 3. கூற்றுவன் (வின்.); Yaman.

*[தண்டம் + பாணி; தண்டத்தைக் கையில் கொண்டவன்]*

**தண்டபாலகம்** *taṇḍa-pālagam,* பெ. (n.) வாயிற் காவல்; gate-keeping.

**தண்டபாலன்** *taṇḍa-pālan,* பெ. (n.) வாயிற் காப்போர் (யாழ்அக.); gate-keeper.

**தண்டபிண்டம்** *taṇḍa-piṇḍam,* பெ. (n.) பயனற்றவர்க்கு இடும் வீண்சோறு (இவ.); food wasted on useless persons.

*[தண்டம் + பிண்டம்.]*

**தண்டபுத்தி** *taṇḍa-putti,* பெ. (n.) பீகார் மாநில ஒட்டரப்பகுதிக்கும், வங்கத்திற்கும் நடுவில் உள்ள பகுதி; a place in between northern Bihār and Beṅgal. "தன்ம பாலனை வெம்முனை யழிக்க வண்டுறை சோலை தண்ட புத்தியும்" (முதல் இராசேந்திரன் மெய்கீர்த்தி) (கல்.வெ.அக.).

**தண்டம்**[1] *taṇḍam,* பெ. (n.) செங்கோல் (சுக்கிர நீதி, 22); sceptre.

*[தண்டு → தண்டம்]*

**தண்டம்**[2] *taṇḍam,* பெ. (n.) ஒறுப்புக்கட்டணம் (இ.வ.); fine. "திருக்கைக் காறை பொன்னின் பட்டை மேற்குண்டங் கெவணமும் வைத்து விளக்கிற்று ஒன்றில் தண்டம் இரண்டில்" (S.I.I. ii, 51).

**தண்டம்**[3] *taṇḍam,* பெ. (n.) 1. கோல்; cane, staff, rod, walking-stick. "தண்டங் கமண்டலங் கொண்டு" (பழமொ.) 2. தண்டாய்தம் (சூடா.); club, bludgeon, a weapon. "தண்டமுடைத் தருமன்" (தேவா. 1055: 6). 3. குடைக்காம்பு (சூடா.); handle of an umbrella or parasol. 4. உலக்கை; pestle. "தண்ட மிடித்த பராகம்" (தைலவ. தைல. 56). 5. படகுத்துடுப்பு (இவ.); oar. 6. மத்து (யாழ்அக.); churning rod. 7. ஒகியர் அமர்ந்த நிலையில் இடக்கையைத் தாங்கும் கவைக்கோல்; stick to hold the left hand of samyasis. 8. உடம்பு; body. "நீற்றுத்

தண்டத்தராய் நினைவார்க்கு" *(தேவா. 1107, 3).* **9. படை** *(திவா.);* army. **10. படை வகுப்பு வகை** *(குறள், 767, உரை);* array of troops in column. *11.* **திரள்** *(அக.நி);* crowd. *12.* **எதிரிகளைக் கையாளும் நான்கு வகை வழிகளில், இறுதியாக ஒறுத்து அடக்குகை** *(சீவக. 747, உரை.);* one among the four ways of dealing the opponents. *13.* **ஒறுப்பு** *(தண்டனை);* punishment, penalty. "தண்டமுந் தணிதி பண்டையிற் பெரிதே" *(புறநா. 10:6).* **14. வரி;** impost, tax. **16. தேவையில்லாமல் ஏற்படும் இழப்பு;** loss; useless expense. அவன் செலவழித்தது தண்டமாய்ப் போய்விட்டது. **17. கருவூலம், மூலபண்டாரம்;** treasury. **18. வணக்கம்;** obeisance, adoration, prostration. தண்டமிட்டுச் செய்த விண்ணப்பம். **19. யானை கட்டும் இடம்** *(சூடா.);* elephant's stable. **20. யானைசெல்வழி** *(திவா.);* elephant's track or way. "வனகரி தண்டத்தைத் தடவி" *(கம்பரா. வரைக்காட்சி. 5).* **21. ஒரு நாழிகை நேரம்** *(யாழ்.அக.);* a unit of time, nāḻigai. **22. வீண்;** waste. தண்டச்சோறு (உ. வ.). **23. ஆளொன்றின் உயரமாய் நான்கு முழங்கொண்ட ஒரு நீட்டலளவை;** pole as a linear measure = the height of a man = 4 cubits = 2 taṉu.

தெ. தண்டமு

*[துள் → தள் → தண்டி → தண்டம் (வ.வ. 171)]*

**தண்டம்**[4] *taṇḍam,* பெ. (n.) **தூணின் கனஅளவு;** cubic measure of the pillar. தண்டியாக இருக்கிறது.

*[தண்டு → தண்டி → தண்டம் (வ.வ.)]*

**தண்டம்**[5] *taṇḍam,* பெ. (n.) **பண்டைத் தமிழ்நாட்டு நீட்டலளவு;** a linear measure of ancient Tamilnāḍu. "தனுவிரண் டதுவோர் தண்டம்" *(கந்தபு. அண்டகோ. 6).*

மறுவ. தோல்

*[தண்டு → தண்டி → தண்டம் (வ.வ.171)]*

பண்டைத் தமிழ்நாட்டில், விரல், சாண், முழம் ஆகிய உடலுறுப்புகள் அளவுகளாகப் பயன்பட்டன. அவைச் செந்தரப்பட்டு குறிப்பிட்ட அளவுகளை மட்டும் குறிக்கத் தொடங்கின. ஒரு கோல் என்பது 2'-9" நீளம் ஆகும். சோழர்காலக் கோயில்களின் பீடச் சுவர்களில் அளவுகள் செதுக்கப்பட்டிருக்கும். பெரம்பலூர் மாவட்டம் வாலிகண்டாபுரம் சிவன் கோயிலில் 3.37மீ நீளக்கோல் வெட்டப்பட்டுள்ளது. இது, ஒரு தண்டம் ஆகும்.

நீட்டல் அளவு வாய்ப்பாடு வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1 விரல் | | - 1 ³/₈" | 35 செமீ. (3.48958) |
| 6 விரல் | - ஒரு சாண் | - 8 ¹/₄" | 21 செமீ. |
| 2 சாண் | - ஒரு முழம் | - 16 ¹/₂" | 42 செமீ. |
| 2 முழம் | - ஒரு கோல் | - 33" | 84 செமீ. |
| 4 கோல் | - ஒரு தண்டம் | - 11'-0" | 335 மீ. |
| 8 தண்டம் | - ஒரு கயிறு | - 88'-0" | 2682 மீ. |
| 500 தண்டம் | - ஒரு கூப்பிடு தூரம் | - 1 மைல் 1675 கிமீ. 220 அடி | |
| 4 கூப்பிடு தூரம் | ஒரு காதம் | - 4 மைல் 67 கிமீ 1 பர் 220 அடி | |
| 4 காதம் | - ஒரு ஓசனை | - 16 மைல் 268 கிமீ. 5 பர்; 220 அடி | |

கோல் என்பது வில் (தனு) எனும், சொல்லாலும் குறிக்கப்படும். இரண்டு தனுவில் (தனு) ஒரு ஆளுயரம் (5'-6"). இதனைத் தண்டம் எனக் கந்தபுராணம் குறிப்பது வடநாட்டு வழக்காகும். ஆளுயர அளவை நரன் என்னும் சொல்லால் வடவர் குறிப்பர்.

தண்டம் எனும் சொல்லிற்குப் பதிலாக கோல் என்ற சொல்லும் வழங்கி வந்துள்ளது. செந்தர அளவுகளோடு பிற அளவுகளும் வழக்கத்தில் இருந்துள்ளன.

| | |
|---|---|
| 24 விரல் | வில் முழம் |
| 25 விரல் | பிரசாபத்யம் |
| 26 விரல் | வில் முனை |
| 27 விரல் | தனு கிரகம் |

திண்டிவனம் வட்டம் கீழ் எடையாளம் ஏரியில் 376 நீளக்கோடு வெட்டி "உடையார் ஸ்ரீ ராசேந்திர தேவற்கு யாண்டு 16வது. கழனி தரமிட நிலமளந்த பதினாறு சாண் கோல்" எனச் செதுக்கப்பட்டுள்ளது. இந்த நீளம் 27 விரல் கோலால் 4, கொண்டது. ஒரு சாண் நீளம் 23.5 மி.மீ. ஆகும் தண்டம் இங்கு கோல் எனப்பட்டது. தண்டத்தை முழு நீளமாகக் கொண்டு, சிறு அளவுகள் வகுத்துக் கொள்ளப்பட்டன.

**தண்டம்செய்-தல்** *tandam-šey-,1* செகுன்றாவி. (v.t.) பகைவரை அழித்தல்; to destroy enemy.

*[தன் → தண்டி → தண்டம் + செய்-.]*

**தண்டம்பண்ணு-தல்** *tandam-pannu-, 5* செகுன்றாவி. (v.t.) அடிவீழ்ந்து வணங்குதல்; to worship by prostration. "மேனிபாதி செய்த வரைத் தண்டம்பண்ணி" (கொக்கோ. பாயி. 4.).

*[தண்டம் + பண்ணு-.]*



**தண்டம்பிடி-த்தல்** *tandam-pidi-, 4* செகுன்றாவி. (v.t.) தண்டம் வாங்குதல் (இவ.); to collect fine.

*[தண்டம் + பிடி-.]*

**தண்டம்போடு[1]-தல்** *tandam-pōdu-, 19* செகுன்றாவி. (v.t.) ஒறுப்புக்கட்டணமிடுதல்; to impose fine.

*[தண்டம் + போடு-.]*

**தண்டம்போடு[2]-தல்** *tandam-pōdu-, 19* செ.குவி. & செ.குன்றாவி. (v.i. & v.t.) வணங்குதல்; to prostrate in worship, as a devotee.

*[தண்டம் + போடு-.]*

**தண்டமாதங்கம்** *tanda-mādangam,* பெ. (n.) நந்தியாவட்டம்; common wax flower.

*[தண்டு + மாதங்கம்]*

**தண்டமானங்கொட்டு-தல்** *tandamānan-kottu-, 5* செ.கு.வி. (v.i.) செருக்கோடு முழங்குதல்; to bluster arrogantly. நீ தண்ட மானங் கொட்டினாலும், ஒருவரும் பயப்பட மாட்டார்கள் (நாஞ்.).

*[தண்டமானம் + கொட்டு-.]*

**தண்டமானம்** *tanda-mānam,* பெ. (n.) தண்டை மானம் (யாழ்.அக.) பார்க்க; see *tandai-mānam.*

*[தண்டுமானம் → தண்டமானம்]*

**தண்டயக்குச்சி** *tandaya-k-kucci,* பெ. (n.) சுவரின் உச்சியில் கூரையின் அடிப்பாகத்தைத் தாங்கும் மரக்கட்டை; cross pole for the roof of a wall.

*[தண்டு → தண்டயம் + குச்சி]*

**தண்டயச்சில்லு** *tandaya-c-cillu,* பெ. (n.) சுவரின் மேற்பகுதியில் அழகுக்காகவும், காப்புக்காகவும் பொருத்தப்படும், 3/4' சதுர அடி அளவுள்ள, சிறுகல் வரிசை: 3/4 square feet bricks-row used on the upper-surface of a wall, for decoration and protection (முகவை).

*[தண்டயம் + சில்லு]*

**தண்டயமரம்** *tandaya-maram,* பெ. (n.) 1. கோக்காலி (நாஞ்.); wall bracket. 2. மரக் கட்டை பாவிய பரண்; wooden-loft.

*[தண்டயம் + மரம்]*

**தண்டயப்பூடு** *tandaya-p-pūdu,* பெ. (n.) சுவரில் முளைக்குஞ் செடி; the plant growing on the wall.

*[தண்டயம் + பூடு]*

**தண்டயல்** *tandayal,* பெ. (n.) தோணிக்குச் சுக்கான் பிடிப்பவர்; helms-man of the boat.

சூரக்கிளை வலை ஏலேலோ சுணக்கமென்ன
தண்டயலே ஏலேலோ (நாட்டார் பாடல்)

*[தண்டயம் → தண்டயல்]*

**தண்டயாத்திரை** *tanda-yāttirai,* பெ. (n.) படையெடுத்துச் செல்லுகை; military expedition. "எழுந்தனன் றண்டயாத்திரை" (அருணா.பு. பிரதத்த. 7).

*[தண்டம் + Skt. யாத்திரை]*

**தண்டயாமன்** *tanda-yāman,* பெ. (n.) அகத்தியன்; the great sage Agattiyan, the chief of Šiddha school of thought (சா.அக.).

**தண்டயோகம்** *tanda-y-ōgam,* பெ. (n.) ஓக வகை (சாதகசிந். 1975); an auspicious ōgam.

**தண்டர்** *taṇḍar,* பெ. (n.) தண்டனை செய்வோர்; those who impose punishment. "தண்டருங் காணத் தந்தாண்டருள்" *(மருதூரந். 38).*

*[தண்டம் → தண்டர்.]*

**தண்டரை** *taṇḍarai,* பெ. (n.) செங்கற்பட்டு மாவட்டம், மதுராந்தக வட்டத்திலுள்ள ஊர்; a place in Cheṅgalpaṭṭu district at Madurāndagam taluk.

*[தண்டலை → தண்டரை]*

குளிர்ந்த சோலைகள் அடர்ந்துள்ள பகுதி; அஃதாவது, கதிரவனொளியும் புகாவண்ணம் அடர்ந்தும், குயில்கள் புகுதற்கேதுவாகவும் உள்ள, தண்ணறுங்கா.

**தண்டல்**[1] *taṇḍal,* பெ. (n.) *1.* தண்டுகை; collecting, as tax. *2.* தண்டும் பொருள்; collection, amount collected. *3.* வரியைத் தண்டுபவன்; tax-collector. *4.* வட்டியைப் பிடித்துக் கொண்டு, தரும் கடன்; loan from which the interest is deducted in advance. *5.* தவறுகை *(பிங்.);* failure, omission. "தண்டலிறவஞ் செய்வோர்" *(கம்பரா. மாரீசன். 162). 6.* தடை; obstruction, hindrance. "தண்டலில்லா துடன்கூட்டல்" *(கூர்மபு. சூதகா. 33). 7.* எதிர்க்கை; resisting, opposing. "தண்டலை நாகந்தவிர்" *(மருதூரந். 60).*

*[தண்டு → தண்டல்]*

**தண்டல்**[2] *taṇḍal,* பெ. (n.) ஒறுப்பு (தண்டனை); punishment. "யான்செய் தண்டலே தகவிலாமை" *(திருவாத. பு. மண்சுமந்த. 13).*

*[தண்டம் → தண்டல்]*

**தண்டல்**[3] *taṇḍal,* பெ. (n.) படகுத்தலைவன் *(வின்.);* chief of a small vessel or ship.

தெ. த்ண்டெலு ம. தண்டல்

Mhr. tanḍal; U. taṇḍel

*[தள் → தண்டு → தண்டம் → தண்டல்]*

**தண்டல்**[4] *taṇḍal,* பெ. (n.) சிறைச்சாலை; prison. "இன்னாள் வரையும் வல்லத்துத் தண்டலில் வைத்து நாங்கள், நெடு நாள்படகிடந்து மிறுக்குப் படுகையில்" *(தெ. கல். தொ. xii: 224).*

*[தண்டம் → தண்டல்]*

**தண்டல்கழனி** *taṇḍal-kaḻaṇi,* பெ. (n.) செங்கை மாவட்டத்திலுள்ள சைதாப்பேட்டை வட்டத்து ஒரூர்; a place in Cheṅgalpaṭṭu district at Saidapet taluk.

*[தண்டல் + கழனி = வரிதண்டும், தண்டல் நாயகத்திற்கு வழங்கிய கழனி, தண்டல்கழனி எனப்பட்டது.]*

**தண்டல்நாயகம்** *taṇḍal-nāyagam,* பெ. (n.) அரசர்க்குரிய இறை, வருவாய், தண்டும் தலைமையதிகாரி; the chief tax-collector. "இலைப்புனைப்பட்ட கரைப்படையிலார் கட்டு தண்டல்நாயகம்" *(முதற்குலோத்துங்கன் கி. பி. 1079 (S.I.I. v. 990).*

*[தண்டல் + நாயகம்]*

**தண்டல்பக்கம்** *taṇḍal-pakkam,* பெ. (n.) தோணியில் தண்டலிருக்குமிடம்; paddle - pointed place for punting a boat.

*[தண்டல் + பக்கம்]*

**தண்டல்மேனி** *taṇḍal-mēṇi,* பெ. (n.) வரிவகை; a tax *(செ.அக.).*

**தண்டலம்**[1] *taṇḍalam,* பெ. (n.) உடலுக்கு நலம் நல்கும், குளிர்மை நிறைந்த இடம்; a cool and healthy place *(சா.அக.).*

மறுவ. பூந்தோட்டம்

*[தண்டல் + அம் = உடலுக்கு வளமும் நலமும் ஊட்டும், மலர்கள் செறிந்த தண்ணறுங்கா சூழ்ந்தவிடம். 'அம்' சாரியை]*

**தண்டலம்**[2] *taṇḍalam,* பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள ஒரூர்; a village in Kāñjipuram dt.

*[தண்டலை → தண்டலம். 'அம்' சாரியை.]*

சோலையைக் குறிக்கும் மற்றொரு தமிழ்ச் சொல். அது தண்டலை எனவும், தண்டலம் எனவும் வழங்கும்.

**தண்டலர்** *taṇḍalar,* பெ. (n.) பகைவர்; enemies. "தாணிழ னீங்கிய தண்டல ரானோர்" *(சேதுபு. மங்கலதீர்த். 8).*

*[தண்டு → தண்டல் + அர். தண்டு = படைக்கலம். தண்டலர் = படைக்கலத்தை*

உடையவர். குளிர்மை தவிர்ந்த குணத்தவரே பகைவர். எஞ்ஞான்றும் வெஞ்சினத்தி லாழ்ந்து, அருளற்ற பண்பில ராய்த் திகழ்வர். ஒருகா. தண்டு + அல் → அர் - தண்டலர். 'அல்' எதிர்மறை நிலையில் - ஈங்கு சொற்சாரியையாக வருவது கண்டுகொள்க.]

**தண்டலாளன்** *taṇḍal-āḷaṉ*, பெ. (n.) வரி தண்டுவோன்; tax-collector. "தனத்தை யெல்லாம் வாங்குமின் றண்டலாளர்" (திருவாத. பு. திருப் பெருந். 116).

[தண்டல் + ஆளன்]

**தண்டலிலக்கை** *taṇḍal-ilakkai*, பெ. (n.) பழைய வரிவகை (கல்.); an ancient tax.

**தண்டலிற்கடமை** *taṇḍaliṟ-kaḍamai*, பெ. (n.) மக்கள் தாமே செலுத்தும் வரி; a kind of tax.

மறுவ. அந்தராயம்

[தண்டு → தண்டல் + இல் + கடமை. தண்டல் = வரி செலுத்துதல்]

**தண்டலை** *taṇḍalai*, பெ. (n.) 1. சோலை; grove. "சிறுகுடித் தண்டலை கமழுங் கூந்தல்" (அகநா. 204). 2. பூந்தோட்டம்; flower garden. "பல்வேறு பூத்திரட் டண்டலை சுற்றி" (மதுரைக். 341). 3. சிவன்கோயில் உள்ள இடம்; an ancient Siva shrine.

மறுவ. தண்டரை; தண்டலம்

[தண்டல் → தண்டலை]

**தண்டலைக்கொட்டி** *taṇḍalai-k-koṭṭi*, பெ. (n.) தந்தலைக்கொட்டி (வட்டக் கிலுகிலுப்பை); rattle nail dye (சா.அக.).

[தண்டலை + கொட்டி]

**தண்டலைநாமத்தி** *taṇḍalai-nāmatti*, பெ. (n.) தண்டிலைநாமத்தி பார்க்க; see *taṇḍilai-nāmatti*.

**தண்டலையார்சதகம்** *taṇḍalaiyār-šadagam*, பெ. (n.) சாந்தலிங்கக் கவிராயர் இயற்றிய நூறு பாக்களால் ஆகிய ஒரு நூல்; a poem of 100 stanzas by Šāndaliṅga-k-kavirāyar.

[தண்டலையார் + சதகம்]

**தண்டவந்தார்** *taṇḍa-vandār*, பெ. (n.) வரி தண்டுதற்கு வந்தவர்கள்; tax collectors. "இந்நெல் தண்டவந்தார்க்கு மெய்கண்டு சோறிடுவதாகவும்" (S.I.I. iv. 867).

**தண்டவாணி**[1] *taṇḍa-vāṇi*, பெ. (n.) பொன் மாற்றறிய உதவும் ஆணி (S.I.I.ii, 237); golden needle for testing the standard of gold.

**தண்டவாணி**[2] *taṇḍa-vāṇi*, பெ. (n.) மாற்றுக் குறைந்த குற்ற வாணிகத்திற்குரிய பொன்; degrade and faulted gold. "தண்டவாணிக்குக் கால்மாற்றுத் தண்ணிய பொன்" (S.I.I.iv.867).

[தண் → தண்ட + வாணி. தண் → தண்ணிய= மாற்றுக் குறைந்த தரங்குன்றிய, வாணி = வாணிகப்பொன்]

**தண்டவாணிகம்** *taṇḍa-vāṇigam*, பெ. (n.) தண்டம் பெறுவதற்கான, குற்றவணிகம்; punishable and faulted trade.

[தண்டம் + வாணிகம்]

**தண்டவால்** *taṇḍa-vāl*, பெ. (n.) தண்டைமானம் (வின்.) பார்க்க; see *taṇḍai-māṉam*.

[தண்டை + வால்]

**தண்டவாலதி** *taṇḍa-vāladi*, பெ. (n.) யானை; elephant.

[தண்டை + வால் + அது + இ.]

**தண்டவாளச்செந்தூரம்** *taṇḍavāḷā-c-cendūram*, பெ. (n.) தண்டவாளத்தைத் துண்டுகளாக்கி, கொல்லனுலையில் ஊதி, அதனுடன் கந்தகம், வீரம் சேர்த்துப் புடமிட்ட செந்தூள்; the cast iron is calcified into red oxide by the process contemplated in Šiddha medicine and given for gunmam, anemia, diarrhoea and loss of appetite (சா.அக.).

[தண்டவாளம் + செந்தூரம்]

**தண்டவாளம்** *taṇḍa-vāḷam*, பெ. (n.) 1. உருக்கிரும்பு (வின்.); cast steel. 2. இருப்புச் சட்டம் (இ.வ.); iron rail, girder. 3. புடைவை வகை (இ.வ.); a kind of saree.

க. தண்டவாள



*[தட்டை வாளம் → தண்டவாளம்]*

**தண்டற்கடமை** *taṇḍaṟ-kaḍamai*, பெ. (n.) வரி தண்டுவோர் மீதிட்ட பழைய வரிவகை (S.I.I.iii, 115); tax on rent-farming.

**தண்டற்காரன்**[1] *taṇḍaṟ-kāraṉ*, பெ. (n.) 1. வரி முதலியன தண்டுவோன்; collector of village revenue; one who collects amounts due from creditors. 2. வரியீட்டல் செய்யும் சிற்றூர் பணியாளர்; a village servant under the headman of a village, employed in collecting revenue. தடியெடுத்தவனெல்லாம் தண்டற் காரனா? (பழ.). 3. கந்துவட்டிக் கடனை திரட்டுபவர்; oned who collects the repayments on loan. கடைக்குத் தண்டல்காரன் வந்தால் பணம் கொடுத்துவிடு (உ.வ.).

**தண்டற்காரன்**[2] *taṇḍaṟ-kāraṉ*, பெ. (n.) தண்டல்[3] (இ. வ.) பார்க்க; see *taṇḍal*[1].

*[தண்டல் + காரன்]*

**தண்டற்காரன்**[3] *taṇḍaṟ-kāraṉ*, பெ. (n.) சலவைத் தொழிலாளர்களின் தலைவன்; chief of a washermen's group.

*[தண்டல் + காரன்]*

**தண்டற்குறிப்பு** *taṇḍaṟ-kuṟippu*, பெ. (n.) வரிப்பதிவுப் பதிவேடு; account of rents, tribute or other dues.

*[தண்டல்+ குறிப்பு]*

**தண்டற்கொட்டி** *taṇḍaṟ-koṭṭi*, பெ. (n.) நீர்ப்பூடுவகை; aquatic plant of the species aponogeton.

மறுவ. கொட்டிக்கிழங்கு

*[தண்டல் + கொட்டி]*

**தண்டன்** *taṇḍaṉ*, பெ. (n.) 1. கோல்; staff. 2. வணக்கம் (பிங்.); salutation, prostration by way of worship.

*[தண்டம் → தண்டன்]*

**தண்டன்சமர்ப்பி-த்தல்** *taṇḍaṉ-šamarppi-*, 4 செ.குன்றாவி. (v.t.) தண்டனிடு-தல் பார்க்க; see *taṇḍaṉ-iḍu-*. "மன்னனார் முன்புசென்று தண்டன் சமர்ப்பித்து (குருபரம். 168).

*[தண்டன் + சமர்ப்பி-.]*

**தண்டனம்** *taṇḍaṉam*, பெ. (n.) ஒறுப்பு (தண்டனை); punishment. "பாவர் தண்டனஞ் செய்வான்" (குற்றா. தல. கவுற்சன. 95).

*[தண்டி → தண்டனம் (வ. வ. 171)]*

**தண்டனிடு-தல்** *taṇḍaṉ-iḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) நெடுஞ்சாண் கடையாகவிழுந்து வணங்குதல், மார்பு நிலத்துற விழுந்து வணங்குதல் (சிலப். 23: 121: அரும்.); to make obeisance by prostration.

*[தண்டம் → தண்டன் + இடு-. தடிபோற் கிழே விழுந்து வணங்குதல் (வ.வ. 172)]*

**தண்டனை** *taṇḍaṉai*, பெ. (n.) ஒறுப்பு; punishment, penalty. "முறைமையிற் றண்டனை புரிவேன்" (சிவரக. தேவர்முறை. 5).

*[தண்டம் → தண்டன் → தண்டனம் → தண்டனை (வ.வ. 171). ஒருகா. தண்டு + அன் + ஐ. தண்டுகொண்டு தண்டிக்கை இத்தன்மைத்து.]*

**தண்டா**[1] *taṇḍā*, பெ. (n.) 1. நச்சரவு (இ.வ.); difficulty, mischief, vexation. அவன் தப்புத் தண்டாவிலெல்லாம் மாட்டிக் கொள்ளாதவன். 2. சண்டை (இ.வ.); dispute, squabble. 3. சிக்கல் (இ.வ.); puzzle, intricacy, trammel. 4. கதவை யடைத்து இடும் இருப்புத்தடி (நெல்லை); iron bar used in bolting a door.

*[தண்டு → தண்டாம் → தண்டா (வ.வ. 171)]*

தண்டா எனுஞ்சொல் உருதுமொழியிலிருந்து வந்ததாகச் சென்னை அகரமுதலியிற் குறிக்கப் பட்டுள்ளது. தண்டம் என்ற நேர் பொருளிலேயே தமிழில் வழங்குகிறது. தண்டம் என்பதன் மரூஉ எனக் கொள்வதே பொருந்தும். அஃதே போன்று தண்டு → தண்டை, தண்டம் → தடி எனும் பொருட் கூறுகள் தமிழ் சார்ந்தவையே.

**தண்டா**[2] *taṇḍā*, பெ. (n.) தண்டால் (இவ.) பார்க்க; see *taṇḍāl*.

தெ. தண்டமு

*[தண்டி → தண்டா.]*

**தண்டாக்காரன்** *taṇḍā-k-kāraṉ*, பெ. (n.) தொந்தரை செய்தவன்; troublesome person, quarrelsome.

*[தடி → தண்டு → தண்டா + காரன். தடி போன்றவற்றால் அடித்துத் தொல்லை கொடுப்பவன்]*

**தண்டாக்கோர்** *taṇḍā-k-kōr*, பெ. (n.) தண்டாக்காரன் பார்க்க; see *taṇḍā-k-kāraṉ*.

*[தண்டா + கோர்.]*

**தண்டாகதம்** *taṇḍāgadam*, பெ. (n.) மோர்; butter-milk (சா.அக.).

**தண்டாகாரம்** *taṇḍā-gāram*, பெ. (n.) *1.* உடம்பு வளைவின்றி நேராயிருக்கும் நிலை; straight and stiff pose of the body, as rod-like. *2.* விட்டிசையின்மை; continuous, unbroken flow of words. "தண்டாகாரமாய்ச் சொன்னான்" *3.* முறைப்படி நேராகச் சோழி வைத்துக் கணிக்கும் முறை; arrangement of cowries in a straight-line, representing numbers in calculation, opp to šarppāgāram (செ.அக.).

*[தண்டம் + அகம் + ஆர் + அம் – தண்டாகாரம். 'ஆர்' நிறைவு குறித்த சொற்பேறு. 'அம்' சொல்லாக்க விகுதி.]*

**தண்டாங்கட்டைப்புல்** *taṇḍāṅ-kaṭṭai-p-pul*, பெ. (n.) இஞ்சிவேர்ப் புல்வகை; ginger-grass, Panicum repens.

*[தண்டு + ஆம் + கட்டை + புல்.]*

**தண்டாங்கீரை** *taṇḍāṅ-kīrai*, பெ. (n.) தண்டுக் கீரை (இவ.) பார்க்க; see *taṇḍu-k-kīrai*.

*[தண்டு → தண்டம் + கீரை – தண்டங் கீரை → தண்டாங்கீரை]*

**தண்டாங்கோரை** *taṇḍāṅ-kōrai*, பெ. (n.) ஒரு வகை கோரைப்புல்; a kind of sedge grass (சா.அக.).

*[தண்டு + ஆம் + கோரை – தண்டாங் கோரை]*

**தண்டாதனம்** *taṇḍādaṉam*, பெ. (n.) இருக்கை (ஆசனம்) (தத்துவப். 107, உரை.); a yogic posture.

*[தண்டு + ஆசனம் → ஆதனம் –ச → த திரிபு. தண்டாதனம்: தண்டு நிலத்திற் கிடத்தல் போலிருக்கும் ஓக, நிலை.]*

**தண்டாது** *taṇḍādu*, பெ. (n.) படாதபடி; without touching (சா.அக.).

*[தண்டி → தண்டாது.]*

தண்டாது: பட்டும்படாதும், தொட்டுந் தொடாதிருத்தல் போல், செயற்படுதல்.

**தண்டாபதானகம்** *taṇḍā-badāṉagam*, பெ. (n.) காக்கைவலிப்பு நோயினால், உடம்பை மடக்கும் ஆற்றலற்று, அசைவற்றிருக்கும் விறைத்த நிலைமை; a condition in which the attack of epilepsy with convalsion deprives the body of its power of movement and flexibility making it stiff and rigid like rod (சா.அக.).

*[தடி → தண்டி → தண்டு + ஆபதானகம்]*

**தண்டாமரை** *taṇḍāmarai*, பெ. (n.) *1.* குளிர்ச்சியான தாமரை; lotus of a cooling nature. *2.* ஒரு வகைக் கோரை; a kind of sedge grass (சா.அக.).

*[தண் + தாமரை.]*

**தண்டாமரைக்கோரை** *taṇḍā-marai-k-kōrai*, பெ. (n.) கோரை வகை (யாழ்.அக.); a kind of sedge, cyprus.

*[தண் + தாமரை + கோரை]*

**தண்டாமற்சாப்பிடல்** *taṇḍāmaṟ-šāppiḍal*, பெ. (n.) பல்லிற் படாதபடி விழுங்குதல்; to swallow without touching the teeth (சா.அக.).

*[தண்டாமல் + சாப்பிடல்]*

**தண்டாமுண்டா** *taṇḍā-muṇḍā*, பெ. (n.) தண்டுமிண்டு பார்க்க; see *taṇḍu-miṇḍu*. தண்டா முண்டாப் பேர்வழி (இவ.).

*[தண்டுமிண்டு → தண்டாமுண்டா. முரட்டுக்குணமுள்ள, அடிதடிப் பேர்வழி]*

**தண்டாமை** *taṇḍāmai*, பெ. (n.) *1.* நீங்காமை (சூடா.); in separableness, unbroken contact, as with object, place or work. *2.* படாமை; not touching.

*[தண்டு → தண்டாமை]*

**தண்டாய்தபாணி** *tanḍāyda-pāṇi*, பெ. (n.). முருகக்கடவுள் (தண்டத்தைக் கையிலுடையவர்); Murugan, as holding a club (செ.அக.).

*[தண்டம் + ஆயுதம் + பாணி]*

முருகனின் பிள்ளைவிளையாட்டில், தண்டம் ஊன்றுகோலாகவே பயன்பட்டது. அது சண்டைக்கருவியாகப் பயன்படாதபோதும் பொதுவழக்காக, தண்டாய்தபாணி என வழங்கப்படுகிறது. பாணி - கையில் கொண்டவன் (வ.வ.).



**தண்டாய்தம்** *tanḍāydam*, பெ. (n.) 1. கதைப் படை; club, as a weapon. "தண்டாய்தமுந் திரிசூலமும் விழ" (கந்தரலங். 25). 2. தண்டாயம் (இ.வ.) பார்க்க; see *tanḍāyam*.

*[தண்டம் + ஆய்தம்]*

**தண்டாய்தன்** *tanḍāydan*, பெ. (n.) முருகக் கடவுள் (தண்டத்தை உடையவன்); Lord Murugan. 2. வைரவக் கடவுள்; Lord Vairavar. 3. ஐயனார்; Aiyanār. 4. வீமன்; Bhiman (செ.அக.).

*[தண்டு → தண்டம் + ஆய்தன்]*

**தண்டாயம்**[1] *tanḍāyam*, பெ. (n.) தவணைப்பகுதி (வின்.); instalment.

*[தண்டு + ஆயம்]*

**தண்டாயம்**[2] *tanḍāyam*, பெ. (n.) சுமைத் தாங்குந் தண்டு (இ.வ.); pole for carrying a burden or vehicle, yoke.

ம. தண்டாயம்

*[தண்டு + ஆயம்]*

**தண்டாயம்**[3] *tanḍāyam*, பெ. (n.) குறடுவகை; a kind of pincers. "திருவிலர் நாவினை வாங்க வாங்கு தண்டாயத்தினால் வலித்து" (பெரியபு. சத்தி. 4).

*[தண்டு + ஆயம்]*



**தண்டாயம்**[4] *tanḍāyam*, பெ. (n.) ஏம மணல்; sand mixed with gold - gold ore (சா.அக.).

**தண்டார்** *tanḍār*, பெ. (n.) தாமரை; lotus (சா.அக.).

*[தண்டு → தண்டார்]*

**தண்டார்மூப்பு** *tanḍār-mūppu*, பெ. (n.) கோலூன்றி நடக்கும் கிழப்பருவம்; old-age, decrepitude. "தண்டார்மூப்பு வந்துன்னைத் தளரச் செய்து நில்லாமுன், உண்டேல் உண்டு மிக்கது உலகம் அறிய வைம்மினேய்" (கல்வெட்டு).

*[தண்டு + ஆர் + மூப்பு.]*

**தண்டாரணியம்** *tanḍāraṇiyam*, பெ. (n.) 1. தண்டகாரணியம் பார்க்க; see *tanḍa-gāraṇiyam*. "தண்டாரணியத்துத் தாபதப் பள்ளி" (சீவக. 337).

*[தண்டம் + ஆரணியம். தண்டு → தண்டம். Skt. araṇyā → த. ஆரணியம்.]*

**தண்டாரம்** *tanḍāram*, பெ. (n.) 1. குயவர் சுழலாழி; potter's wheel. 2. மதயானை; elephant in rut. 3. வில்; bow. 4. வண்டி; carriage. 5. தோணி; boat (செ.அக.).

குயவர் சுழலாழி, கோல் கொண்டு சுற்றப்படுவதால், தண்டாரம் எனப்பட்டது. கொங்குப்பகுதியில் திருவை கோலால் சுற்றப்படுவதில்லை. குயவனார் வனையும் போது, அவர் மனைவி கைகளால் சுற்றுவார்.

*[தண்டு → தண்டம் + ஆயம் → ஆரம் → தண்டாரம்]*

**தண்டால்** *taṇḍāl,* பெ. (n.) உடற்பயிற்சி வகை; a kind of excercise in Indian gymnastics (செ.அக.).

க. தண்டால்.

*[தடி → தண்டி → தண்டால்]*



**தண்டாலசகநோய்** *taṇḍāla-šaganōy,* பெ. (n.) உடலைத் தண்டத்தைப்போல் நீட்டி, விரைவில் கொல்லும் ஒரு நோய்; a prostating disease bringing collapse and death (சா.அக.).

**தண்டாலரத்தம்விழல்** *taṇḍālarattam-viḻal,* பெ. (n.) ஆண்குறியின் வழியாக அரத்தம் கசிதல்; a venereal disease followed by discharge of blood, through the penis (சா.அக.).

*[தண்டால் + இல் + அரத்தம் + விழல்]*

**தண்டாலு** *taṇṭālu,* பெ. (n.) யாமிகக் கிழங்கு, தட்டையான திரண்ட தண்டுள்ள கிழங்கு; yam.

*[தண்டு → தண்டாலு.]*

**தண்டாளர்முதல்** *taṇṭāḷar-mudal,* பெ. (n.) பழைய வரி வகை; an ancient tax.

*[தண்டாளர் + முதல். தண்டுதல் - வரி செலுத்துதல். தண்டு + ஆளர் - வரி செலுத்துபவர்]*

**தண்டான்** *taṇḍāṉ,* பெ. (n.). 1. கோரை வகை; a species of sedge, Cyperus rotundus - tuberosus. "தண்டானாகிய கோரையை" (பெரும்பாண். 217, உரை). 2. புடலங்காய் வகை (சங்.அக.); a kind of snake-gourd.

*[தள் → தண்டு → தண்டன் → தண்டான் தடித்த, தண்டுள்ள கிரைவகை, தண்டு போல் உருண்டு திரண்ட புடலை.]*

**தண்டான்கட்டைப்புல்** *taṇḍāṉ-kaṭṭai-p-pul,* பெ. (n.) இஞ்சி வேர்ப்புல்; ginger grass (செ.அக.).

**தண்டான்வேர்** *taṇḍāṉ-vēr,* பெ. (n.) மருந்து வேர்; herbal root (சா.அக.).

**தண்டி**[1] *taṇḍi,* பெ. (n.) தண்டற்காரன் (யாழ்ப்.); collector of dues, tax-collector (செ.அக.).

*[தண்டு → தண்டி]*

**தண்டி**[2]**-த்தல்** *taṇḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஒறுத்தல்; to chastise, scourge, punish. "நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்" (திருவாச. 12:4). 2. வெட்டுதல் (வின்.); to cut off, sever, mutilate, hack. "தாறத் தண்டித்த தண்டி" (சிவரக. பாயி. 7). 3. கட்டளையிடுதல்; to order, direct. அவனை அவ்விதஞ் செய்யத் தண்டித்தேன் (இ.வ.).

*[தள் → தண் → தண்டு → தண்டம் → தண்டி-.]*

**தண்டி**[3]**-த்தல்** *taṇḍi-,* 4 செ.குவி. (v.i.) வருந்தி முயலுதல்; to take pains, try hard. "இதிலே நன்றாய்த் தண்டிக்கிறான்" (யாழ்ப்.).

*[தள் → தண் → தண்டு → தண்டம் → தண்டி-.]*

**தண்டி**[4] *taṇḍi,* பெ. (n.) 1. பருமன்; thickness, bigness. "எத்தனை தண்டி" (வின்.). 2. மிகுதி; abundance, plenty. மழை தண்டியாய்ப் பெய்தது (உ.வ.). 3. தரம்; degree of competence, quality, etc., of persons or things compared with each other. அவன் தண்டிக்கு இவனில்லை (வின்.).

*[தடி → தண்டி]*

**தண்டி**[5]**-த்தல்** *taṇḍi-,* 4 செ.குவி. (v.i.) பருத்தல்; to become fat, plump, to swell in size. ஆள் தண்டித்துவிட்டான் (உ.வ.) (செ.அக.).

*[தள் → தண் → தடி → தண்டி-.]*

**தண்டி**[6] *taṇḍi,* பெ. (n.) 1. தண்டியலங்காரத்தைத் தமிழிற் செய்த ஆசிரியர்; author of Taṇḍi-y-alaṅgāram, a work on rhetoric, translated from Šanskrit in to Tamiḻ. 2. நாயன்மார் அறுபத்து மூவரில் ஒருவர், a canonised Šaiva šaint, one of 63. "நாட்ட மிகு தண்டிக்கு மூர்க்கற்கு

மடியேன்" (தேவா. 737, 5). 3. கூற்றுவன்; Yaman. "தண்டி நன்காஞ்சுகர் வினை செய்ய" (திருவிளை. திருமண. 108). 4. செருக்குள்ளவன்–ள்; proud person. "தன்சொல்லே மேற்படுப்பான் தண்டிதடி பிணக்கன்" (அறநெறி. 5).

*[தள் → தண் → தண்டி.]*

**தண்டி**[7] *taṇḍi*, பெ. (n.) சிவனடியார் அறுபத்து மூவரில் ஒருவரான சண்டேசுரர்; a canonised Šaiva šaint. "அண்ணலந் தண்டித னடிகள் போற்றுவாம்" (தணிகைப்பு. கடவுள்வா. 9).

மறுவ. சண்டேசுரர், தண்டீசர்

**தண்டி**[8] *taṇḍi*, பெ. (n.) எட்டடியுள்ள இசைப் பாட்டு வகை; a kind of metrical composition in eight lines, the last containing the burden of the song.

*[தண்டு + இ. தண்டு = தண்டு கொண்டு தாளமிட்டுப் பாடும் பாடல்.]*

**தண்டி**[9] *taṇḍi*, பெ. (n.) 1930ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் காந்தியடிகள் உப்பெடுத்த கூர்ச்சரம்; கடலோர ஊர்; a seashore place in Gujarat state where Gandhi conducted salt satyagraha.

**தண்டி**[10] *taṇḍi*, பெ. (n.) தண்டிகை பார்க்க; see *taṇḍigai*. வால் நீண்ட கரிக்குருவி வலமிருந்து இடஞ்சென்றால் கால்நடையாய்ச் சென்றவரும் கனதண்டி யேறுவரே (பழ.).

*[தள் → தண்டு → தண்டி; தண்டால் தூக்கப்பெறும் பல்லக்கு (வ.வ.)]*

**தண்டிக்கா** *taṇḍi-k-kā*, பெ. (n.) தண்டுக்கோல் பார்க்க; see *taṇḍu-k-kōl*.

**தண்டிக்கால்** *taṇḍi-k-kāl*, பெ. (n.) தண்டுக் கோல் பார்க்க; see *taṇḍu-k-kōl*.

**தண்டிகொள்(ளு)-தல்** *taṇḍi-koḷ(ḷu)-*, 16 செ. குன்றாவி. (v.t.) தண்டு[1]-தல் பார்க்க; see taṇḍu[1]-. நாலு வேலிக்கும் உள்பட்ட மனையால் மாதம்தொறும் இருநாழி அரிசி தண்டிக் கொள்ளக் கடவதாகவும் தண்டும் இடத்து இதுக்குத் தாழ்வு சொன்னாருண்டாகில் (S.I.I. iv. 399/1986).

*[தண்டு → தண்டி + கொள்–.]*

**தண்டிகம்**[1] *taṇḍigam*, பெ. (n.) மீன்வகை; a kind of fish (சா.அக.).

*[தண்டு → தண்டிகம் – தட்டையான சதைப்பற்றுள்ள மீன்]*

**தண்டிகம்**[2] *taṇḍigam*, பெ. (n.) முத்துச்சரம்; wreath of pearls.

**தண்டிகை** *taṇḍigai*, பெ. (n.) பல்லக்கு வகை; a kind of palanquin. "பொற்றண்டிகை திரள்தாங்க (சூளா. கல். 23).

க. தண்டிகெ.

*[தண்டு → தண்டி → தண்டிகை]*



**தண்டிகைக்குச்சு** *taṇḍigai-k-kuccu*, பெ. (n.) தாழ்வாரந் தாங்கி; staff bearer (செ.அக.).

*[தண்டிகை + குச்சு]*



**தண்டிதரம்** *taṇḍi-daram*, பெ. (n.) ஆற்றல் (யாழ்ப்.) வல்லலை; worth, ability, capacity.

*[தண்டி[4] + தரம்]*

**தண்டிப்பன்னா** *taṇḍi-p-paṉṉā*, பெ. (n.) 'பன்னா' வகைக்கடல் மீன் (நெல்லை. மீனவ.); a kind of sea-fish.

**தண்டிப்பு** *taṇḍippu,* பெ. (n.) 1. தண்டனை; chastisement, punishment. 2. வெட்டுகை (யாழ்.அக.); cutting.

*[தண்டி² → தண்டிப்பு]*

**தண்டியக்கட்டு** *taṇḍiya-k-kaṭṭu,* பெ. (n.) கல்லுக்குக் கல் நீட்டிக்கொண்டே வந்து அமைக்கும் கட்டுமானம்; a kind of stone architecture.

*[தண்டியம் + கட்டு]*

**தண்டியக்கொம்பு** *taṇḍiya-k-kombu,* பெ. (n.) 1. நடிக்கப் பழகுவோர் ஆதரவாகக் கொள்ளுங்கழி (யாழ்ப்.); staff to support beginners learning to dance. 2. கூரைதாங்குங் குறுக்குகட்டை (யாழ்ப்.); cross-pole for the roof of a house. 3. மக்கள் நெருக்கியுட் புகாதபடி இடும் குறுக்குமரம் (யாழ்ப்.); wooden cross-bar on props to prevent people from crowding upon a reserved place. 4. பல்லக்குக்கொம்பு (நாஞ்.); palanquin-poles.

*[தண்டியம் + கொம்பு]*

**தண்டியடிகணாயனார்** *taṇḍi-y-aḍiga-ṇāyaṉār,* பெ. (n.) அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர்; Šaiva šaint one of 63.

*[தண்டி + அடிகள் + நாயனார்]*

**தண்டியபாலி** *taṇḍiyapāḷi,* பெ. (n.) சிவப்புச் சதுரக்கள்ளி; a red variety of square spurge (சா.அக.).

**தண்டியம்** *taṇḍiyam,* பெ. (n.) 1. கச்சூர்க்கட்டை (C.G.); under-prop of a bracket. 2. வாசற்படியின் மேற்கட்டை; lintel. "வாசற் கடையில் தண்டியத்தைப் பற்றிக்கிடக்கிற" (திவ். திருப்பா. 123: வியா.). 3. புறக்கூரையைத் தாங்குங்கட்டை (இ.வ.); corbel. 4. தண்டியக்கொம்பு, 1 (சிலப். 3. 10: உரை.); see *taṇḍiya-k-kombu, 1.*

*[தண்டு → தண்டியம் (வ.வ. 171)]*

**தண்டியமரம்** *taṇḍiya-maram,* பெ. (n.) தண்டய மரம்; wall bracket (செ.அக.).

மறுவ. கோக்காலி

*[தண்டயமரம் → தண்டியமரம்]*

**தண்டியல்** *taṇḍiyal,* பெ. (n.) 1. பெரிய வீடு (C.N.); large house. 2. பல்லக்கு (இவ.); palanquin.

*[தண்டியம் → தண்டியல்.]*

**தண்டியலங்காரம்** *taṇḍi-y-alaṅgāram,* பெ. (n.) வடமொழியில் தண்டியாசிரியரால் இயற்றப் பெற்ற காவியாதரிசமென்னும் அணிநூலின் மொழி பெயர்ப்பாகிய தமிழ்நூல்; a tamiḻ treatise on rhetoric being a translation of Daṅḍi's Kāvyādaršam in Šanskrit (செ.அக.).

*[தண்டி + அலங்காரம்]*

**தண்டியிற்புண்** *taṇḍiyiṟ-puṇ,* பெ. (n.) ஆண் குறியில் வரும் புண்வகை; chancre (செ.அக.).

**தண்டிலம்** *taṇḍilam,* பெ. (n.) சிவபூசனை செய்ததற்காக அமைத்துக்கொண்ட இடம்; place designed for worshipping Šivaṉ.

*[தண்டி → தண்டிலம்]*

**தண்டிலைநாமத்தி** *taṇḍilai-nāmatti,* பெ. (n.). கண்டங்கத்திரி; prickly brinjal (சா.அக.).

**தண்டிற்கொட்டி** *taṇḍiṟ-koṭṭi,* பெ. (n.) மருந்துப்பூடு வகை; a kind of herbal plant (சா.அக.).

**தண்டினம்** *taṇḍiṉam,* பெ. (n.) நீர்மேற்படர் கொடி; water weed (சா.அக.).

**தண்டீசுரன்** *taṇḍī-šuraṉ,* பெ. (n.) அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர்; name of a canonized Šaiva šaint, one of 63. தண்டீசுரனோலை (கல்.).

*[தண்டி + ஈசுரன்]*

**தண்டீத்து** *taṇḍittu,* பெ. (n.) நெல்லின் தாளினை இற்றுவிழச் செய்யும் நோய் (இ.வ.); a hardening disease in the stalks of paddy.

*[தண்டு + ஈத்து. தாளடி நெற்பயிரின் தண்டுப்பகுதியைத் தாக்கும் நோய். ஈற்று → ஈத்து. ஓ.நோ. காற்று → காத்து; மாற்று → மாத்து.]*

**தண்டு¹-தல்** *taṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சேர்த்தல், திரட்டுதல்; to collect, levy, gather, recover, as debts, rents, taxes etc., "தண்ட நிச்சயித்த காசில்" (S.I.I. iii. 2ll.). 2. வருத்துதல்;

to insist, trouble "பருகெனத் தண்டி" (பொருந. 104). 3. இணைத்தல்; to join, attach; "வாசுகியைத் தண்டி யமரர் கடைந்த கடல்" (தேவா. 387: 10). 4. நீங்குதல்; to leave, abandon; "கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்" (முது. காஞ். 10.3).

*[தள் → தண்டு-. தண்டுதல் = சேர்த்தல், திரட்டுதல்.]*

**தண்டு²-தல்** *tandu-*, 4 செ.குன்றா.வி. (v.i.) 1. தணிதல்; to decrease, diminish. "தண்டுத லின்றி யொன்றி" (கம்பரா. மிதிலை. 8). 2. கெடுதல்; to perish. "தண்டாக் காதல்" (பு.வெ.9.45:கொளு). 3. தடைப்படுதல்; to be hindered; "தண்டாதி யாருந் தாம்வேண்டிய" (ஞான. 15: 6). 4. விலகுதல்; to be in seclusion, to separate. "எவனொருவன் தண்டித் தனிப்பகை கோள்" (நாலடி. 324). 5. தொடுதல்; to come in contact. "நாக்கிலே தண்டாமல் மருந்தைச் சாப்பிட்டான்" (வின்.) 6. மனமமைதல்; to be satisfied. "கண்டு தண்டாக் கட்கின்பத்து" (மதுரைக். 16). 7. விருப்பங்கொள்ளுதல்; to be eager, keenly desirous. "தண்டித் தண்டிற் றாஅய்ச் செல்வாரும்" (பரிபா. 10: 100). 8. சின மூண்டெழுதல்; to rise in fury. "செங்கண் மழவிடையிற் றண்டி" (பு.வெ. 3: 1).

ம. தண்டுக; தெ. தண்டு, தண்டு; து. தண்டியுனி; கோத. தண்ட்; துட. தொட்; பட. தண்டு.

*[தள் → தண்டு-.]*

**தண்டு³** *tandu*, பெ. (n.) 1. கோல்; cane, staff, stick. "தண்டுகா லூன்றிய தனிநிலையிடையன்" (அகநா. 274). 2. மரக்கொம்பு; branch of a tree. 3. திருமால் முதலியோருக்கான படைக்கலம்; bludgeon, club, as a weapon especially of Thirumāl. "சங்குமலி தண்டுமுதற் சக்கரமு னேந்தும்" (திவ். பெரியதி. 3.9:10). 4. தண்டுக்கோல் பார்க்க; see *tandu-k-kōl*. (இவ.). 5. தண்டாயம்; pole of a palanquin or other vehicle. "இடையிடை தண்டிற் றாங்கினர்" (கம்பரா. கார்முக. 3). 6. பல்லக்கு; palanquin. எனக்குத் .. தண்டேற வேணும் (ஈடு. 4. 6:2). 7. உலக்கை; pestle. (பிங்.) 8. செடி, முதலியவற்றின் தாள்; stalk, stem. கீரைத்தண்டு. 9. விளக்குத்தண்டு; lampstand. "தண்டினின் றெரியுந் தகளி" (கல்லா. 23:33). 10. வீணை; lute. (பிங்.) "சரிகமபதநிப் பாடற் றண்டுதைவரு செங்கையோன்" (பாரத. இந். 42). 11. செவித்தண்டு; ear-lobe. 12. மூக்குத் தண்டு; bridge of the nose. 13. முதுகந்தண்டு; spinal cord. "தண்டுட னோடித் தலைப்பட்ட யோகி" (திருமந். 612). 14. ஆண்குறி (இவ.); penis. 15. வரம்பு; ridge, embankment in fields (அகநி.) 16. பச்சோந்தி (பிங்.); chameleon. 17. தொளையுடைப் பொருள் (பிங்.); tube, anything tubular. 18. மூங்கிற்குழாய்; bamboo receptacle. "மதுப்பெய் தண்டும்" (காஞ்சிப்பு. திருக்கண். 36). 19. மூங்கில் (மலை.); bamboo. 20. ஆடவை யோரை (பிங்.); gemini in the zodiac. 21. செருக்கு; pride. அவனுக்குத் தண்டு அதிகப்பட்டிருக்கிறது (நாஞ்). 22. தண்டீத்து பார்க்க; see *tandittu*. 23. பூவிதழ் (பிங்.); petal of flowers. 24. படை (பிங்.); army, troops.

*[துள் → தள் → தண்டு. திரட்சிக் கருத்தினின்று கிளைத்த வேரடி திரண்ட அடியினையுடைய வாழைத் தண்டு; விளக்குத் தண்டு. திரண்ட பொருள் உருளுந்தன்மைத்து. உருண்டு திரண்ட ஊன்றுகோல், திரண்ட உலக்கைப்பண்ட முதலானவை. உருட்சியையும், திரட்சியையும் ஒருங்கே குறித்தன. உருட்சியும் திரட்சியும் உடையவை நீளுந்தன்மையுள்ள நிலையில் முதுகந் தண்டு, வீணைத்தண்டு முதலான உருட்சி → திரட்சி = சொற்களை நீட்சிக்கருத்தில் தோற்றுவித்தன.*

*உருட்சியுந் திரட்சியுமிக்க (தள் → தண்டு → தண்டம் = படைக்கலம்) பருத்துத் திரண்டகம்பு, திரண்டபடை; படைக்கலன்களுடன் கூடிய திரண்ட படை. தண்டநாயகன் = படைத்தலைவன். படையெடுத்தலைக் குறிக்கத் தண்டு-தல் என்னும் வழக்கு ஏற்பட்டது. தண்டுதல் = சேர்த்தல், திரட்டுதல். வரிதண்டுபவன், தண்டற்காரன் போன்ற சொற்கள் மக்களிடையே இன்றும் வழக்கூன்றி யுள்ளன. (மு.தா. 232)]*

தண்டின் வகைகள்

அ. தரைக்குமேல் வளருந்தண்டு; shoot system

1. நிமிர்தண்டு; caudex
2. தென்னை, பனை, மா போன்றவற்றின் தண்டு;
3. மூங்கில்தண்டு; culm
4. பூக்குந்தண்டு; scape
5. நொய்யதண்டு அல்லது படர்தண்டு - பிரண்டை; trailing
6. கிடைத்தண்டு; prostrate
7. சாய்தண்டு; decumbent
8. பரவுதண்டு; diffuse
9. ஊர்தண்டு; creeping
10. ஓடுகொடித்தண்டு; runner
11. ஓடுதண்டு; stolen
12. குட்டையோட்டுத்தண்டு; offset
13. குருத்துத்தண்டு; sucker

இலைக்கறி (முட்டைக்கோசு)
பூங்கறி (காலிபிளவர்)

ஆ. தரைக்கிழ்தண்டு; subter ranean shoots
இஞ்சி, உருளை, சேம்பு, கிழங்குவகைகள் பூண்டு முதலானவை இவற்றுள் அடங்கும்.

**தண்டு**[4] *tanḍu*, பெ. (n.) 1. திரட்டும் பணம், (தானியம்) போன்றவை; collection, as of money or grain. "தனிசு தண்டுகள் வாங்கிக் கொடுத்து" (*S.I.I. V. 321*). 2. படைதங்கும் இடம்; cantonment. "இவரிருந்த இடம் பங்களூர்த்தண்டு" (*மீனாட். சரித். i:118*).

*[தன் → தண்டு]*

**தண்டு**[5] *tanḍu*, பெ. (n.) நடுநாடி; a principal tubular vessel of the human body. "பொட்டெழக் குத்தி பொறியெழத் தண்டிட்டு நட்டிடுவார்க்கு நமனில்லை தானே" (*திருமந். 691*).

*[தன் → தண்டு.]*

**தண்டுஇழு-த்தல்** *tanḍu-iḻu-*, 4 செ.குன்றாவி. (v.t.) தண்டு வலித்தல்; to pull a paddle.

ஈரவலை ஏத்தி ஏலேலோ
நால்வரும் தண்டிழுக்க ஏலேலோ
- நாட்டார் பாடல்

*[தண்டு + இழு-.]*

**தண்டுக்காரன்** *tanḍu-k-kāraṉ*, பெ. (n.) மரக்கலத்தை இயக்கத் தண்டுபிடிப்பவன்; கொம்பால் கட்டுமரத்தைச் செலுத்துபவன்; boat-man.

ம. தண்டுகாரன்

*[தண்டு + காரன்]*

**தண்டுக்கீரை** *tanḍu-k-kīrai*, பெ. (n.)
1. வெள்ளைத் தண்டுக்கீரை; common spinach.
2. தண்டங்கீரை பார்க்க; see *taṇḍaṅkīrai*.
3. குள்ளத்தண்டுக் கீரை; stunted spinach.

ம. தண்டன்சீர

*[தன் → தண்டு + கீரை = திரண்டு உருண்ட கீரைத்தண்டு]*

**தண்டுக்காரி** *tanḍu-k-kāri*, பெ. (n.) தொட்டாற் சுருங்கி; touch-me-not plant.

*[தண்டு + காரி]*



**தண்டுக்குத்தண்டு** *tanḍukku-t-tanḍu*, பெ. (n.) போட்டியிட்டு கொண்டு, தண்டு வலிக்கை; to push and pull an oar.

தண்டுக்குத் தண்டு ஏலேலோ
மாறுதண்டு ஏலேலோ
அணியத் தண்டு ஏலேலோ
போட்டு வலிக்கணும் ஏலேலோ
- நாட்டார் பாடல்

**தண்டுக்கை** *tanḍukkai*, பெ. (n.) துடுப்பில் பொருத்தப்பட்டிருக்கும் தடி; paddles joint pole.

*[தண்டு + கை.]*

கள்ளியின் தின்னம்பால் ஏலேலோ
ஒக்கம தண்டுக்கை ஏலேலோ
-நாட்டார் பாடல்

**தண்டுக்கோல்** *taṇḍu-k-kōl,* பெ. (n.) *1.* படகுத் துடுப்பு; oar, paddle. *2.* படகு தள்ளுதற்குரிய சவளமரம் (வின்.); iron-pointed pole for punting a boat (செ.அக.).

*[தண்டு + கோல்]*

**தண்டுகட்டு-தல்** *taṇḍu-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மந்திர வித்தையினால் ஆண் தன்மையைப் போக்குதல் (யாழ்ப்.); to deprive a man of his virility, by magic. *2.* ஒரு செயலுக்குத் தீவிர முயற்சி மேற்கொள்ளல்; to venture for a particular deed earnestly (இ.வ.). பக்கத்தூர் திருவிழாவை நடத்தவிடாமல் நிறுத்தியே தீருவதென்று தண்டுகட்டிக்கொண்டு புறப்பட்டனர். *3.* அம்மன் கோயிலுக்கான சுடுமண் குதிரையைக் கோயிலுக்குத் தூக்கிச்செல்ல, இருபுறமும் மூங்கில்வாரைக் கோர்த்துக் கட்டுதல்; to attach bamboo beams on both sides of terracotta horse to enable it to convey to the temple.

*[தண்டு + கட்டு-.]*

**தண்டுகை** *taṇḍugai,* பெ. (n.) வரி ஈட்டுகை; tax collecting.

*[தண்டு → தண்டுகை]*

**தண்டுச்சாறு** *taṇḍu-c-cāṟu,* பெ. (n.) செடித் தண்டின் சாறு; juice from the stem of the plant (சா.அக.).

*[தண்டு + சாறு]*

**தண்டுசுரம்** *taṇḍu-śuram,* பெ. (n.) ஆண்குறி வீக்கத்தால் உண்டாகும் சுரம்; fever due to inflammation of penis (சா.அக.).

*[தண்டு + சுரம்]*

**தண்டுசூலை** *taṇḍu-śūlai,* பெ. (n.) ஆண் குறியில் ஏற்படும் ஒரு குத்தல்நோய்; pricking pain in the penis (சா.அக.).

*[தண்டு + சூலை]*

**தண்டுத்துளை** *taṇḍu-t-tuḷai,* பெ. (n.) சிறுநீர் நாளம்; urethral oritice (சா.அக.).

*[தண்டு + தொளை → துளை.]*

**தண்டுதல்** *taṇḍudal,* பெ. (n.) உண்ணாக்குத் தொடுதல்; touching of the uvula (சா.அக.).

**தண்டுத்துளைத்தாசி** *taṇḍu-t-tuḷai-tāśi,* பெ. (n.) தாமரையிலை; lotus leaf (சா.அக.).

**தண்டுநிமிற்று-தல்** *taṇḍu-nimiṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மரக்கலத்தைச் செலுத்தத் துணைக்கருவியைச் செயற்படுத்துதல் (செங்கை.மீன); to row a oar.

*[தண்டு + நிமிர்த்து → நிமிற்று-.]*

**தண்டுநீர்** *taṇḍu-nīr,* பெ. (n.) பூணூலணியும் விழாவில், நான்காம் நாள் நடைமுறை; a ceremony on the fourth day of upanayaṉam, among certain Brahmin sects (செ.அக.).

*[தண்டு + நீர்]*

**தண்டுநோய்** *taṇḍu-nōy,* பெ. (n.) ஆண்குறியின் வலிவுகுறைந்து, எரிச்சலையும், வலியையும் உண்டாக்கிப், புணர்ச்சியின்போது வெறுப்பு ஏற்படுத்தி, விதைப்பைக்கேடும், வீக்கமும் உண்டாக்கும், ஒரு வகை வளி நோய்; a disease of the male genital marked by pain, burning sensation, disinclination to sexual intercourse, swelling of the penis and the scrotum, supression of urine etc., (சா.அக.).

*[தண்டு + நோய்.]*

**தண்டுப்பசை** *taṇṭu-p-paśai,* பெ. (n.) தண்டுப்பீ பார்க்க; see *taṇḍuppī* (சா.அக.).

*[தண்டு + பசை.]*

**தண்டுப்பற்று** *taṇḍu-p-paṟṟu,* பெ. (n.) ஆண்குறி நோய்; disease of the penis (சா.அக.).

*[தண்டு + பற்று.]*

**தண்டுப்பிளவை** *taṇḍu-p-piḷavai,* பெ. (n.) ஆண்குறியிலுண்டாகும் ஒரு வகை நோய் (யாழ்.அக.); scirrhus of the penis.

*[தண்டு + பிளவை.]*

**தண்டுப்பீ** *taṇḍu-p-pī,* பெ. (n.) ஆண்குறியின் முன்தோலின், கீழ் படியும் நாற்றமுள்ள பசை; smegma (சா.அக.).

**தண்டுப்பீர்க்கு** *taṇḍu-p-pīrkku,* பெ. (n.) மருந்துச்செடி வகை (இராச. வைத். 99, உரை); a medicinal plant.

*[தண்டு + பீர்க்கு]*

**தண்டுப்புண்** *tandu-p-puṇ*, பெ. (n.) ஆண்குறிப் புண்; ulcer penis (சா.அக.).

*[தண்டு + புண்]*

**தண்டுப்புற்று** *taṇḍu-p-puṟṟu*, பெ. (n.). ஆண்குறி நோய் வகை (யாழ்.அக.); a venereal ulcer at the tip of the penis chancre.

*[தண்டு + புற்று]*

**தண்டுபரு-த்தல்** *taṇḍu-paru-*, 4 செ.குன்றாவி. (v. t.) ஆண்குறி காமவிருப்பால் விம்முதல்; to erect of the penis due to lust (சா.அக.).

*[தண்டு + பரு-.]*

**தண்டுபீசம்** *taṇḍu-pīšam*, பெ. (n.) சிறுகீரை; Pig greens (சா.அக.).

**தண்டுபோடு-தல்** *taṇḍu-pōḍu-*, 20 செ.குவி. (v.i.). 1. தண்டுவலி (வின்.) பார்க்க; see *taṇḍu-vali*. 2. ஊர்தி சுமத்தல் (இ.வ.); to carry a vehicle by its poles.

*[தண்டு + போடு-.]*

**தண்டுமரம்** *taṇḍu-maram*, பெ. (n.) தண்டுக் கோல் (இ.வ.) பார்க்க; see *taṇḍu-k-kōl*.

*[தண்டு + மரம்]*

**தண்டுமலர்** *taṇḍu-malar*, பெ. (n.) ஆண்குறி மலர்; glans penis (சா.அக.).

**தண்டுமாரி** *taṇḍu-māri*, பெ. (n.). 1. ஊரகத் தாய்த்தெய்வம்; a village goddess. 2. அடக்க மற்ற பெண்; bold, headstrong woman, virago. பெண்கள் தனிவழியே தண்டுமாரியாத் திரியலாகாது (இ.வ.).

*[தண்டு + மாரி. தண்டு = படைக்கலம். மாரி = ஊரகத் தாய்த்தெய்வம்]*

**தண்டுமிண்டு** *taṇḍu-miṇḍu*, பெ. (n.) எளிதிலடங்காமை (இ.வ.); obstinacy, stubbornness, insubordination, contumacy.

மறுவ. தண்டாமுண்டா

*[தண்டு + மிண்டு]*

**தண்டுமுடுக்கம்** *taṇḍu-muḍukkam*, பெ. (n.) குறி எழுச்சி; erection of the penis (சா.அக.).

*[தண்டு + முடுக்கம்]*

**தண்டுமுடுகிநிற்றல்** *taṇḍu-muḍukiniṟṟal*, பெ. (n.) ஆண்குறி விறைத்து நிற்றல்; penis remaining in the irection posture (சா.அக.).

*[தண்டு + முடுகி + நிற்றல்]*

**தண்டுமுறி** *taṇḍu-muṟi*, பெ. (n.) செடி நோய் வகை (இ.வ.); a blight affecting plants.

*[தண்டு + முறி. தண்டுப்பகுதியை முறித்து விழச்செய்யும், செடிநோய்]*

**தண்டுரிணம்** *taṇḍuriṇam*, பெ. (n.) அரிசிக் கழுநீர்; rice washed water (சா.அக.).

**தண்டுலபலை** *taṇḍulapalai*, பெ. (n.) திப்பிலி; long pepper - Piper longum (சா.அக.).

*[தண்டுலம் → தண்டுலபலை]*

**தண்டுலம்**[1] *taṇḍulam*, பெ. (n.) 1. அரிசி; rice. "தண்டுலம் விரித்துநற் றருப்பை சாத்தியே" (கம்பரா. கடிமண. 85). 2. நெல்; paddy. 3. சிறு கீரை; pig. greens.

*[தண்டுதல் = விலக்குதல், நீக்குதல். தண்டு → தண்டுலம். பிணையடித்துப் புடைத்துப் பின் குத்தித் தவிடு போன்றவற்றை நீக்கியபின், மிஞ்சும் தவசமணி, அரிசி.*

*த. தண்டுலம் → Skt. taṇḍula]*

**தண்டுலம்**[2] *taṇḍulam*, பெ. (n.) 1. வேள்வி செய்யும் இடம்; place to do Homam. 2. தண்டிலம் பார்க்க; see *taṇḍilam*. "தருமணன் மணி முத்தாகத் தண்டுல மியற்றி" (சூளா. சுயம்வர. 277). 3. மூங்கில்; bamboo.

*[தண்டிலம் → தண்டுலம்]*

**தண்டுலம்பு** *taṇḍulambu*, பெ. (n.) அரிசிக் கழுநீர்; rice cleaned water (சா.அக.).

**தண்டுலாகன்** *taṇḍulāgaṉ*, பெ. (n.) கடல் மீன் வகை; a kind of sea - fish.

**தண்டுலாம்பு** *taṇḍulāmbu*, பெ. (n.) அரிசிக் கஞ்சி (யாழ்.அக.); rice gruel (செ.அக.).

*[தண்டுலம் + அம்பு = தண்டுலம்பு → தண்டுலாம்பு. தண்டுலம் = அரிசி]*

**தண்டுலி** *taṇḍuli*, பெ. (n.) 1. திப்பிலி; long-pepper. 2. தண்டுக்கீரை; common spinach (சா.அக.).

**தண்டுலியகம்** *taṇḍuliyagam,* பெ. (n.) *சிறுகீரை;* pig greens *(சா.அக.).*

*மறுவ. தண்டுலியம்*

**தண்டுலீகம்** *taṇḍulīgam,* பெ. (n.) *வாய் விளங்கம் (சங்.அக.);* worm - killer *(செ.அக.).*

**தண்டுலீயம்** *taṇḍulīyam,* பெ. (n.) *தண்டுலீகம் பார்க்க;* see *taṇḍulīgam.*

**தண்டுலேரம்** *taṇḍulēram,* பெ. (n.) *ஒருவகைக் கீரை;* a variety of of greens *(சா.அக.)*

**தண்டுலோகம்** *taṇḍulōgam,* பெ. (n.) *தண்டுலாம்பு;* metal.

**தண்டுலோதகம்** *taṇḍulōdagam,* பெ. (n.) *1. தண்டுலாம்பு (யாழ்.அக.) பார்க்க;* see *taṇḍulāmbu. 2. அரிசிக்கஞ்சி;* rice-gruel.

*[தண்டுலம் + ஓதகம். தண்டுலம் = அரிசி]*

**தண்டுவடம்** *taṇḍu-vaḍam,* பெ. (n.) *மூளை யிலிருந்து உடல் முழுதும் உணர்வு களைக் கொண்டுசெல்லும், முதுகெலும்பினுள் அமைந்திருக்கும் நரம்புத்தொகுப்பு;* spinal cord.

*[தண்டு + வடம்.]*

**தண்டுவலி[1]-த்தல்** *taṇḍu-vali-,* 4 *செகுவி.* (v.i.) *படகுத்துடுப்புத் தள்ளுதல்;* to row, paddle.

*மறுவ. தளாதோவுதல்*

*[தண்டு + வலி-.]*

**தண்டுவலித்தல்[2]** *taṇḍu-vali,* பெ. (n.) *1. ஆண்குறி நீளுதல்;* elongation of the penis. *2. ஆண்குறி வலி;* pain in the penis.

*[தண்டு + வலித்தல்.]*

**தண்டுவாரம்** *taṇḍu-vāram,* பெ. (n.) *மேல்வார தாரருக்குக் கொடுக்கும் துண்டுவாரம்;* land lords right *(செ.அக.).*

*மறுவ. சாமிவாரம்*

*ம. தண்டுவாரம்*

*[தண்டு + வாரம்]*

**தண்டுவிடுதல்** *taṇḍu-viḍudal,* பெ. (n.) *கட்டடிக்கப்பட்ட நெல்லில் கருக்காய், பதர் நீங்கத், தூற்றுதலில் மேற்கொள்ளும் செயல்;* to clean the paddy to remove the husk.

*[தண்டு + விடுதல்]*

**தண்டூலியம்** *taṇḍūliyam,* பெ. (n.) *சிறுகீரை (மலை);* species of amaranth.

*மறுவ. தண்டுலோம்*

**தண்டெடு-த்தல்** *taṇḍeḍu-,* 4 *செகுவி.* (v.i.) *படையெடுத்தல்;* to make a military expedition. "மன்னவர்க்குத் தண்டுபோல்" *(பெரியபு. கலிப்பகை.)*

*மறுவ. போர் தொடுத்தல்*

*[தண்டு + எடு-. இஃதும், திரட்சிக்கருத்து பற்றியதே. திரண்ட படையுடன் சென்று பகைவருடன், போர்தொடுத்தல். தண்டெடுத்தல் என்றறிக.]*

**தண்டெடுப்பார்** *taṇḍeḍuppār,* பெ. (n.) *பல்லக்குச் சுமப்பவர் (M.E.R. 570 - 26);* palanquin bearers.

*[தண்டு + எடுப்பார் - தண்டெடுப்பார். தண்டு = பல்லக்கு. எடுப்பார் = சுமப்பவர்]*

**தண்டெரிவு** *taṇḍerivu,* பெ. (n.) *ஆண்குறி யெரிச்சல்;* burning sensation of the penis *(சா.அக.).*

*[தண்டு + எரிவு]*

**தண்டெலும்பு[1]** *taṇḍelumbu,* பெ. (n.) *முதுகெலும்பு (யாழ்.அக.);* spine, back-bone.

*ம. தண்டெல்லு*

*[தண்டு + எலும்பு]*

**தண்டெலும்பு[2]** *taṇḍelumbu,* பெ. (n.) *முள்ளந் தண்டெலும்பு;* spine bone of the vertebral column *(சா.அக.).*

*மறுவ. முள்ளெலும்பு, முதுகந்தண்டு*

*ம. தண்டெலும்பு, தண்டெல்லு*

*[தண்டு + எலும்பு]*

**தண்டேசன்** *taṇḍēśaṉ,* பெ. (n.) *சண்டேசுர நாயனார் (வின்.) பார்க்க;* see *taṇḍēśura-nāyaṉār,* a Šaiva šaint.

*மறுவ. சண்டீசர், தண்டியடிகள்*

*[தண்டு = படைக்கலம். தண்டு + ஈசன் = தண்டீசன் → தண்டேசன்]*

**தண்டேசுரப்பெருவிலை** *taṇḍēśura-p-peru-vilai,* பெ. (n.) *கோயிலதிகாரிகள் உறுதிப் படுத்தும் விலை (S.I.I. iv. 129);* price fixed by the temple authorities *(செ.அக.).*

*[தண்டேசுரம் + பெருவிலை → தண்டேசுவர பெருவிலை. தண்டேசுரர் கோயில் உடைமைகளை. மேற்பார்வை யிடும் அதிகாரிகள். இறுதியாக உறுதிப் படுத்தும் விலை. இவ்விலையினை அதிகாரிகள் இறுதியாக்கிய பின்பு, யாவராலும் கூட்டவோ, குறைக்கவோ முடியாது.]*

**தண்டேசுரன்** *taṇḍēšuraṉ,* பெ. (n.) சண்டேசுர நாயனார் (வின்.) பார்க்க; see *šaṇḍēšura-nāyaṉār.*

மறுவ. சண்டீசுரன்

*[தண்டு + ஈசுரன் = தண்டீசுரன் → தண்டேசுரன்]*

**தண்டேல்** *taṇḍēl,* பெ. (n.) தண்டல்[3] (இ.வ.) பார்க்க; see *taṇḍal*[3] (செ.அக.).

*[தண்டு → தண்டேல்]*

**தண்டேறு[1]-தல்** *taṇḍēṟu-,* 5 செ.குன்றாவி. (v.i.) பல்லக் கேறுதல்; to ride in a palanquin. "நன்மைக்குத் தண்டேறப் பெறுவார்களாகவும்" *(S.I.I. v, 103).*

*[தண்டு + ஏறு-.]*

**தண்டேறு[2]** *taṇḍēṟu,* பெ. (n.) எலும்பு (யாழ்.அக.); bone.

**தண்டேறுவரிசை** *taṇḍēṟu-varišai,* பெ. (n.) பல்லக்கு ஏறும் உரிமை; the right to climb into the palanquin. "இவனுக்கு தண்டேறு வரிசையுங் குடுக்க"

*[தண்டு + ஏறு + வரிசை]*

**தண்டை[1]** *taṇḍai,* பெ. (n.) 1. குழந்தைகள், பெண்கள் ஆகியோர் காலில் அணிவதும், ஒன்றிற்கொன்று தொட்டாற்போலுள்ள முனைகளைக் கொண்டதும், உருட்டுக்கம்பி வடிவிலோ, அல்லது குழல் வடிவிலோ அமைந்த, வெள்ளியாற் செய்த காலணி; a kind of hollow anklet, made of silver worn by childred or girls. 2. வெள்ளியாற் செய்த குதிரைக் காலணிவகை (வின்.); a silver ornament put round the feet of horses. 3. கேடகம்; shield. "வள்ளித் தண்டையும்" *(சீவக. 2218).* 4. வால்; tail. "வேங்கைவரித் தண்டை" *(திருவாலவா. 46, 19).* 5. தண்டைமாலை (இ.வ.) பார்க்க; see *taṇḍai-malai.*

க. தண்டெ

*[தண்டு → தண்டை (வ.வ.171)]*

**தண்டை[2]** *taṇḍai,* பெ. (n.) நச்சரிப்பு (வின்.); trouble, vexation.

க. தண்டெ; Mar., H. taṇṭā

*[தண்டு → தண்டை. தண்டெடுத்து ஏமாற்றித் திரியும் வல்லாண்மைக் காரனைத் தொந்தரைக்காரன் என்று, ஊர்ப்புறத்தே இன்றும் வழங்கி வருகின்றனர்]*

**தண்டைக்காரன்** *taṇḍai-k-kāraṉ,* பெ. (n.) 1. நச்சரிப்போன்; troublesome fellow. 2. ஏமாற்றுக்காரன் (யாழ்.அக.): crafty person (செ.அக.).

க. தண்டெயவ

*[தள் → தண் → தண்டை + காரன்]*

**தண்டைச்சுறா** *taṇḍai-c-cuṟā,* பெ. (n.) சுறாமீன் வகையுளொன்று; a kind of shark fish.

*[தண்டை + சுறா]*

இச் சுறா சங்கு குளிக்கும் 'முக்குவர்'க்குப் பெருந்தொந்தரை செய்யக்கூடியது. அதற்குப் பெரிதும் அஞ்சுவர். எனினும், எவ்வெதன் தீங்கினையும் பொருட்டாகக் கருதாமல், சங்கு குளிப்பார்தம் அருங்கலைத் தொழில் திறப்பாடுடைய தெனப் போற்றத்தக்கது.



**தண்டைச்சுறவு** *taṇḍai-c-cuṟavu,* பெ. (n.) மீன்வகை; a kind of fish. வெள்ளிறால் தண்டைச்சுறவு.

*[தண்டை + சுறா → சுறவு]*

**தண்டைநோய்[1]** *taṇḍai-nōy,* பெ. (n.) நோய்வகை; a disease. "தண்டைநோய் பிரமேகம்" *(திருவாலவா. 27:14).*

*[தண்டை + நோய்]*

**தண்டைநோய்**[2] *taṇḍai-nōy,* பெ. (n.) அருவருக்கத்தக்க நோய்; vexatious disease.

*[தண்டை + நோய்]*

**தண்டைப்பூடு** *taṇḍai-p-pūḍu,* பெ. (n.) சுவரில் ஒட்டி வளரும் உயிரினம் (தெய்வச்.406); a parasitic plant growing on walls.

*[தண்டை + பூடு]*

**தண்டைமாரம்** *taṇḍai-māram,* பெ. (n.) தண்டை மானம் (யாழ்.அக.) பார்க்க; see *taṇḍai-māṉam.*

*[தண்டை + மாரம்]*

**தண்டைமாலை** *taṇḍai-mālai,* பெ. (n.) பூமாலை வகை (கோயிலொ. 87.); a kind of small wreath.

*[தண்டு → தண்டை + மாலை]*

**தண்டைமானம்** *taṇḍai-māṉam,* பெ.(n.) விலங்குகள் வால்முறுக்குதல்; raising, coiling, and waving of the tail, as of beasts when mettlesome or angry. "தண்டை மானங் கொண்ட புலி".

*[தண்டு → தண்டை + மானம்*
*மானம் : சொல்லாக்க விகுதி*
*ஒ.நோ. வருமானம், வெகுமானம்]*

**தண்டையம்புல்** *taṇḍai-y-ambul,* பெ. (n.) ஒருவகைப்புல்; a kind of grass (சா.அக.).

*[தண்டை + அம்பல்]*

**தண்டையல்** *taṇḍai-yal,* பெ. (n.) வள்ளத்திற்கு உரிமையாளன் (யாழ்ப்.); the owner of a boat.

மறுவ. மரக்கலம், கட்டுமரம்

**தண்டைவெட்டி** *taṇḍai-veṭṭi,* பெ. (n.) தண்டொட்டி (இ.வ.) பார்க்க; see *taṇḍoṭṭi.*

ம. தண்டொட்டி

*[தண்டை + வெட்டி]*

**தண்டொட்டி** *taṇḍoṭṭi,* பெ. (n.) மகளிர் காதணி வகை; a kind of women's ear-ornament. "வயிரத்தண்டொட்டி தந்தான்" *(விறலிவிடு. 1116)* (செ.அக.).

மறுவ. தண்டட்டி

ம. தண்டொட்டி

*[தண்டு + ஒட்டி. தண்டு = காதுத்தண்டு ஒருகா. தண்டட்டி → தண்டொட்டி]*



**தண்டோபாயம்** *taṇḍōbāyam,* பெ. (n.) 1. தண்டம்[4] பார்க்க; see *taṇḍam*[4]. 2. எதிரிகளைக் கையாளும் நான்கு வகை வழிகளில் இறுதியான, ஒறுத்து அடக்குகை; fourth way of handling enemies, by force in four ways of handling enemies.

*[தண்டம் = ஒறுத்தல். உபாயம் = வழிகாட்டல், தண்டோபாயம் = ஒறுத்து வழிகாட்டல்]*

**தண்டோரா** *taṇḍōrā,* பெ. (n.) பறையறைந்து மக்களைக்கூட்டிச் செய்தி கூறுதல்; proclamation by beat of tom-tom (செ.அக.).

மறுவ. தமுக்கடித்தல்

*[தண்ணம் = ஒருகண் பறை. தண்ணம் + ஒலி - தண்ணொலி → தண்டொலி → தண்டோலி → தண்டோரா.]*

தமிழ்நாட்டில், இச் சொல் ஊரக மாந்தரிடையே இரண்டறக் கலந்துவிட்டது. தமுக்கடித்தல் என்பதன் மறுவழக்கு தண்டோராப் போடுதலாகும். தப்பட்டை என்னும் பறையில் தட்டி எழுப்பும் ஒலி.

**தண்டோராப்போடு-தல்** *taṇḍōrā-p-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) 1. தமுக்கடித்தல்; notify the public by the beat of tom-tom. 2. பரப்புதல்; tom-tom, make public. வேலை கிடைத்த செய்தியை அதற்குள் ஊர் முழுக்க; தண்டோரா போட்டு விட்டாயா? (உ.வ.).

*[தண்டோரா + போடு-.]*

**தண்டோற்பலம்** *taṇḍōṟpalam,* பெ. (n.) ஒரு பூடு; conscora decussata. 2. மஞ்சணிற மருந்து வகை; yellow variety of sida rhom boidia. (சா.அக.)

**தண்ண** *tanna*, கு.வி.எ. (adv.) எளிமையுடைய; sorely, distressingly. "எனதுள்ளந் தண்ண மெலிவிக்குமே" (இறை. 52: 293).

[தண் → தண்ண]

**தண்ணகாரர்** *tannagārar*, பெ. (n.) பழைய புத்தரிலொவருவர்; one of the ancient Buddhas.

[தண்ணகாரர் - மனங்குளிர்மையாளர்]

**தண்ணடை**[1] *tannadai*, பெ. (n.) 1. நாடு (திவா.); country. 2. மருதநிலத்தூர் (திவா.); village in an agricultural tract. "பிணங்குகதி ரலமருங் கழனித் தண்ணடை" (புறநா. 285). 3. சிற்றூர் (பிங்.); a small town. 4. பச்சிலை (திவா.); green leaves, foliage,herbage. 5. காடு (அக.நி.); forest.

[தண் → தண்ணடை]

**தண்ணடை**[2] *tan-n-adai*, பெ. (n.) உடுக்கை வகை (அக.நி.); a kind of drum (செ.அக.).

[தண்ணம் → தண்ணடை]

**தண்ணம்**[1] *tannam*, பெ. (n.) 1. ஒருகட்பறை; drum with one head, used at funerals. 2. மழு (திவா.); battle-axe (செ.அக.).

[தண் → தண்ணம்]

**தண்ணம்**[2] *tannam*, பெ. (n.) 1. குளிர்ச்சி; coldness, coolness. "தண்ணநின் றுதவலி னிறைமதி யாகி" (கல்லா. 48: 2). 2. காடு (யாழ்.அக.); forest.

[தண் + அம். தண் = குளிர்மை.]

**தண்ணவன்** *tannavan*, பெ. (n.) நிலவன் (பிங்.) (குளிர்ந்தவன்); moon, as cool.

ம. தண்ணவன்

[தண் + அவன். குளிர்ச்சி பொருந்திய மதியன்]

**தண்ணளி** *tan-n-ali*, பெ. (n.) அருள்; mercy, benevolence. "தண்ணளி வெண்குடை . . . வேந்தன்" (பெரியபு. மநுநீதி. 45).

ம. தண்ணளி

[தண் + அளி]

**தண்ணா-த்தல்** *tannā-*, 4 செ.கு.வி. (v.i.) தாழ்த்தல்; to delay. "தண்ணாவா தடியேனைப் பணிகண்டாய்" (திவ். திருவாய். 49:1).

**தண்ணாயகர்மகமை** *tannāyagar-magamai*, பெ. (n.) படைவரிவகை (M.E. R. 510 of 1921); a tax or contribution payable to the military activities.

[தண்டு + நாயகர் = தண்டநாயகர் → தண்ணாயகர் + மகமை]

**தண்ணி** *tanni*, பெ. (n.) 1. தண்ணீர் (இ.வ.) பார்க்க; see *tannīr*. 2. கள்; toddy. 3. ஏலக்காய் புத்தோடு; cardamon husk (செ.அக.)

[தண்ணீர் → தண்ணி. மரூஉவழக்கு]

**தண்ணிச்சாகை** *tanni-c-cāgai*, பெ. (n.) நீர் சார்ந்த இடப்பகுதி; seat of watter with place. "மூன்று மாவும் நிலம் தண்ணிச் சாகையினால்" (S.I.I. II. 4.).

[தண்ணி + சாகை]

**தண்ணித்திருக்கை** *tanni-t-tirukkai*, பெ. (n.) அளவின் மிகுதியாய் உப்புநீராய்ச் சொரியுமொரு திருக்கைமீன் (நெல்லை.); a kind of electrical ray-fish.

**தண்ணிப்பன்னா** *tanni-p-pannā*, பெ. (n.) கடல் மீன்களுளொன்று (முகவை. மீன.); a kind of sea-fish.

**தண்ணிமை** *tannimai*, பெ. (n.) தாழ்வு; inferiority. 'கால்மாற்று தண்ணியபொன்" (S.I.I. ii, 22) (செ.அக.).

[தள் → தண் → தணி → தண்ணிமை. தணிவு - குறைவு, தாழ்வு. தண்ணிமை - தரங் குறைகை.]

**தண்ணியசொல்** *tanniya-šol*, பெ. (n.) அமைதிப் படுத்துஞ் சொல் (சீவக. 747); words of reconciliation.

[தள் → தண் → தணி → தண்ணிய + சொல் - தண்ணியசொல். தண் → தண்ணிய = குளிர்ந்த, அமைதியான, இணங்கிய. அமைதியூட்டிச், சினம் தவிர்த்து நெஞ்சகத்தைக் குளிர்மைப் படுத்தும் இணக்கமான சொல்.]

**தண்ணியகுலம்** *tanniya-kulam*, பெ. (n.) கீழ்க்குலம்; lower stratea (untouchable).

[தள் → தண் → தணி → தண்ணிய + குலம் - தண்ணியகுலம் = தாழ்ந்தகுலம். தணிவு = தாழ்வு. தண்ணிய = தாழ்ந்த, கீழான]

**தண்ணியபொன்** *tanniya-pon*, பெ. (n.) மாற்றுக் குறைந்த பொன்; inferior-gold. "பண்டாரத்துப் பொன்கொடு செய்த திருப்பட்டிகை ஒன்று தண்டவாணிக்குக் கால்மாற்றுத் தண்ணியபொன் பதின்கழஞ்சே முக்காலே மஞ்சாடியும்" (S.I.I. II. 59.)

[தண் → தணி → தண்ணிய + பொன். தண்ணிய = தரங்குறைந்த, மாற்றுக் குறைந்த. தண்ணியபொன் = தரங்குன்றிய பொன்.]

**தண்ணியது** *tanniyadu,* பெ. (n.) 1. குளிர்ந்தது, தாழ்ந்தது; cold, coolness, least. "தண்ணிய சாதியினார்க்கு அவுத்திரியாகாமையின்" (சி.சி.க. 3 மறை).

[தள் → தண் → தண்ணிய + அது - தண்ணியது. தண்ணிய = குளிர்ந்த, அமைதியான. தணிவு = தாழ்வு. தண்ணிய = தாழ்ந்த. தண்ணியது = தாழ்ந்தது]

**தண்ணியமரவேர்** *tanniya-mara-vēr,* பெ. (n.) உடம்பினரம்பு; nerves in the body (சா.அக.).

[தண்ணிய + மரவேர்]

**தண்ணியர்** *tanniyar,* பெ. (n.) தாழ்ந்த குலத்தார்; low-caste. "தண்ணியராகையுமின்று சமைப்பாம்" (சிவதரு.சுவர்க்கநரக சேட.).

[தணி → தண்ணியர் - தாழ்ந்தவர்.]

**தண்ணீர்** *tannīr,* பெ. (n.) 1. குளிர்ந்த நீர்; cold fresh water. 2. நீர்; water. தண்ணீர், சுடு தண்ணீர் (உ.வ.).

[தண் + நீர் - தண்ணீர். தண் = குளிர்மை.]

தண்ணீர் வகைமை:

1. உப்புத்தண்ணீர்; salt water.
2. நல்லதண்ணீர்; fresh water.
3. ஆற்றுத்தண்ணீர்; river water.
4. ஊற்றுத்தண்ணீர்; spring water.
5. மழைத்தண்ணீர்; rain water.
6. பனித்தண்ணீர்; dew water.
7. கடல்தண்ணீர்; sea water.
8. கனிமத்தண்ணீர்; mineral water. (கனிச்சாரம் மிகுந்த நீர்).
9. ஆலங்கட்டி நீர்; ice melted water.
10. கொதிநீர்; boiled water.
11. வெந்நீர்; warm-water.
12. குளிர்நீர்; cold-water .
13. தூயநீர்; distilled-water.
14. குடிநீர்; decotion.
15. வாலைநீர்; pure distilled water.

[தண் + நீர்.]

**தண்ணீர்அட்டுவார்** *tannīr-aṭṭuvār,* பெ. (n.) தண்ணீர் கொடுப்பவர்; the philanthropist donating drinking water for public. "ஸ்ரீ ராஜராஜன் தண்ணீர் அட்டுவார்க்கு நிசதம் நெல் குறுணி" (S.I.I. ii. 59.).

[தண்ணீர் + அட்டுவார்]

**தண்ணீர்அறஓடு-தல்** *tannīr-ara-ōḍu-,* 5 செ.குவி. (v.i.) கடல்நீர், கரைப்பகுதிகளில் எண்மி, காருவா, வெள்ளுவா நாள்களில் (அஷ்டமி, அமாவாசை பௌர்ணமி) மேலேறி இறங்கிப் பொங்குதல்; the water flowing to the seashore during auspicious (full-moon and the new-moon) days etc.

[தண்ணீர் + அற + ஓடு.]

**தண்ணீர்ஊற்று** *tannīr-ūṟṟu,* பெ. (n.) நீரூற்று வருதல்; இயற்கையாக ஊறும் நீரூற்று; natural spiring-water (இ.வ.).

[தண்ணீர் + ஊற்று.]

**தண்ணீர்க்கசிவு** *tannīr-k-kaśivu,* பெ. (n.) நீர் ஊறி வெளியேறுகை; oozing (செ.அக.)

[தண்ணீர் + கசிவு.]

**தண்ணீர்க்கட்டு** *tannīr-k-kaṭṭu,* பெ. (n.) வயல் நீர் வெளியேறாமல் மடைகளை அடைத்து வைக்கை; the temperary stop-gap in the irrigation canal in paddy-fields.

[தண்ணீர் + கட்டு.]

**தண்ணீர்க்கண்டம்** *tannīr-k-kaṇḍam,* பெ. (n.) நீரில் மூழ்கிப்போதல் போன்ற நேர்ச்சி (விபத்து); peril by water, as drowning (செ.அக.)

[தண்ணீர் + கண்டம்]

**தண்ணீர்க்கதவு** *tannīr-k-kadavu,* பெ. (n.) ஏரி முதலியவற்றிலிருந்து நீர் விடுதற்குரிய கதவு (C.E.M.); flood - gate.

[தண்ணீர் + கதவு]



**தண்ணீர்க்கரை** *taṇṇīr-k-karai,* பெ. (n.) சுழல் வண்டு; whirling insect (சா.அக.).

**தண்ணீர்க்காணான்இலை** *taṇṇīr-k-kāṇāṉ-ilai,* பெ. (n.) மருந்திலை மூலி; a kind of medicinal herb (சா.அக.).

**தண்ணீர்க்காரன்** *taṇṇīr-k-kāraṉ,* பெ. (n.) நீர் சுமந்து கொடுப்போன்; waterman (செ.அக.).

*[தண்ணீர் + காரன்]*

**தண்ணீர்க்காரி** *taṇṇīr-k-kāri,* பெ. (n.) நீர் சுமந்து கொடுப்பவள்; woman supplying water. (செ.அக.)

*[தண்ணீர் + காரி. 'காரி' = உடைமை குறித்த 'உயர்திணைப் பெண்பாலீறு. ஒ.நோ. கீரைக்காரி; வீட்டுக்காரி, பூக்காரி]*

**தண்ணீர்க்காரிச்சி** *taṇṇīr-k-kāricci,* பெ. (n.) தண்ணீர்க்காரி (இ.வ.) பார்க்க; see *taṇṇīr-k-kāri.*

*[தண்ணீர் + காரி + இச்சி – தண்ணீர்க்காரிச்சி. 'இச்சி' சொல்லாக்க ஈறு. (ஒ.நோ.) இடைச்சி, சடைச்சி.]*

**தண்ணீர்க்கால்** *taṇṇīr-k-kāl,* பெ. (n.) நீரோடும் வழி (C.E.M.); water course (செ.அக.).

*[தண்ணீர் + கால்]*

**தண்ணீர்க்குடம்**[1] *taṇṇīr-k-kuḍam,* பெ. (n.) 1. நீர் முகக்குங் குடம்; water-pot. 2. நீர்வாழை (பிங்.); traveller's palm (செ.அக.).

ம. தண்ணீர்க்குடம்

*[தண்ணீர் + குடம்]*

**தண்ணீர்க்குடம்**[2] *taṇṇīr-k-kuḍam,* பெ. (n.) பனிக்குடம்; amniotic fluid (சா.அக.).

*[தண்ணீர் + குடம்]*

**தண்ணீர்க்குத்திவிழல்** *taṇṇīr-k-kutti-viḻal,* பெ. (n.) ஒருவகைக் கண்ணோய்; a kind of eye disease (சா.அக.)

**தண்ணீர்க்குளம்** *taṇṇīr-k-kuḷam,* பெ. (n.) செங்கை மாவட்டத்திலுள்ள ஓரூர்; a village in Cheṅgalpaṭṭu dt.

*[தண்ணீர் தேங்கிநிற்கும் தாழ்வான நிலப்பரப்பினையுடைய பகுதி.]*

**தண்ணீர்க்கொப்பு** *taṇṇīr-k-koppu,* பெ. (n.) புத்த மதத்தினர் கைக்கொள்ளும் ஒருவகை ஏனம் (நீலகேசி, 250, உரை); a water - vessel used by Buddhists (செ.அக.).

*[தண்ணீர் + கொப்பு]*

**தண்ணீர்கட்டல்** *taṇṇīr-kaṭṭal,* பெ. (n.) 1. தடுமம் பிடித்தல்; being attacked with cold. 2. தலைப் பாரம்; heaviness of the head. 3. கொப்புளங் கொள்ளல்; formation of a boil.

*[தண்ணீர் + கட்டல்]*

**தண்ணீர்கட்டு-தல்** *taṇṇīr-kaṭṭu-,* 5 செ.குவி. (v.i.) 1. வயல் முதலியவற்றில் மடைமாற்றி நீர் பாய்ச்சுதல்; to irrigate a field, garden bed, etc. 2. புண்ணில் நீர்க் கொப்புளங்கொள்ளுதல் (யாழ்.அக.); to form pus.

*[தண்ணீர் + கட்டு-.]*

**தண்ணீர்கழித்-தல்** *taṇṇīr-kaḻi-,* 4 செ.குவி. (v.i.) உப்புப் பாத்திகளிலிருந்து நீரை வெளி யேற்றுதல்; to let out water from salt-pan.

**தண்ணீர்காட்டு-தல்** *taṇṇīr-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கால்நடைகளுக்கு குடிநீர் காட்டுதல்; to water, as beasts. 2. ஏமாற்றுதல், நீரைக் காட்டிக் குடிக்கவொட்டாது செய்தல்; to deceive, overreach, as showing water without allowing one to drink. "முடிவில் உனக்குத் தண்ணீர்காட்டி விடுவான்" (வின்.). 3. அலைக் கழித்தல் (இ.வ.); to tantalize, harass. வாங்கிய கடனை ஒழுங்காகத் திருப்பித் தராமல் எனக்குத் தண்ணீர் காட்டுகிறான் (உ.வ.)

*[தண்ணீர் + காட்டு-.]*

**தண்ணீர்கால்** *taṇṇīr-kāl,* பெ. (n.) வழிப் போக்கர்தம் நீர்வேட்கை தணித்தற்குப் பயன்படும் மூங்கிலினாலான நீள் குழல்மரம்; a water-pipe made of a bamboo, given gratis to travellers.

*[தண்ணீர்கோல் → தண்ணீர்கால்]*

**தண்ணீர்குத்து-தல்** *taṇṇīr-kuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தொட்டானிலிருந்து உப்புநீரைப் பாத்திக்குத் திறந்துவிடுதல்; to let off the salt-water to the salt-pan.

**தண்ணீர்கொள்ளல்** *tannīr-kollal*, பெ. (n.) கொப்புளத்தில் நீர்கட்டுதல்; a boil filled with the water. 2. சீழ்கொள்ளல்; forming pus.

*[தண்ணீர் + கொள்ளல்]*

**தண்ணீர்கோலு-தல்** *tannīr-kōlu-*, 5 செ.கு.வி. (v.i.) கிணற்றிலிருந்து நீரிறைத்தல் (இ.வ.); to take up or bale water.

*[தண்ணீர் + கோலு-.]*

**தண்ணீர்ச்சாயையான்** *tannīr-c-cāyaiyāṉ*, பெ. (n.) நீலக்கல்; sapphire (சா.அக.).

*[தண்ணீர் + சாயையான்.]*

**தண்ணீர்ச்சாரை** *tannīr-c-cārai*, பெ. (n.) குளத்தில் வசிக்கும் நீர்ப்பாம்பு; rate-snake Yaocys mucosus.

*[தண்ணீர் + சாரை.]*

**தண்ணீர்ச்சாலை** *tannīr-c-cālai*, பெ. (n.) நீர்ச்சாலை, தண்ணீர்ப்பந்தல்; water pantar.

*[தண்ணீர் + சாலை]*

**தண்ணீர்ச்சுண்டிப்போதல்** *tannīr-c-cuṇḍi-p-pōdal*, பெ. (n.) நூல் வேகவைக்கும்போது, நீர் வற்றிப்போதல் (செங்கை.); vapour of water, when boiling thread.

**தண்ணீர்ச்சோறு** *tannīr-c-cōṟu*, பெ. (n.) நீர் விட்ட சோறு (யாழ்ப்.); left-over rice mixed with water.

மறுவ. பழையசோறு

*[தண்ணீர் + சோறு]*

**தண்ணீர்சேர்வேராக்கி** *tannīršer-vērākki*, பெ. (n.) தேத்தான்கொட்டை; water cleaning nut (சா.அக.).

**தண்ணீர்த்தட்டு** *tannīr-t-taṭṭu*, பெ. (n.) தண்ணீர்ப் பற்றாக்குறை (இ.வ.); scarcity of water.

மறுவ. நீர்த்தட்டுப்பாடு

*[தண்ணீர் + தட்டு]*

**தண்ணீர்த்தடாகத்துச்செல்வி** *tannīr-t-tadāgatt-c-celvi*, பெ. (n.) நாகசிங்கி; a kind of rare medicinal plant (சா.அக.).

**தண்ணீர்த்தவளம்** *tannīr-t-tavaḷam*, பெ. (n.) நீர்வேட்கை; thirst for water (சா.அக.).

*[தண்ணீர் + தவளம் = நாவறட்சி.]*

**தண்ணீர்த்தாகம்** *tannīr-t-tāgam*, பெ. (n.) நீர்வேட்கை; thirst (சா.அக.).

ம. தண்ணீர்த்தாகம்

*[தண்ணீர் + தாவம் + தாகம்.]*

**தண்ணீர்த்திப்பிலி** *tannīr-t-tippili*, பெ. (n.) துணைநஞ்சு ஏழிலொன்று; one of the seven sub-poisonous drugs (சா.அக.).

*[தண்ணீர் + திப்பிலி]*

**தண்ணீர்த்திருக்கை** *tannīr-t-tirukkai*, பெ. (n.) அளவின் மிகுதியாய் உப்படிக்க நீராய்ச் சொரியும் திருக்கை (நெல்லை); a kind of ray-fish.

*[தண்ணீர் + திருக்கை]*

**தண்ணீர்த்துரும்பு** *tannīr-t-turumbu*, பெ. (n.) இடையூறு (பருகுந் தண்ணீரிலுள்ள துரும்பு); obstruction, as a weed in drinking water. "தேவரீர் கிருபைக்குத் தண்ணீர்த் துரும்பாக" (ஈடு 1, 4, 7).

*[தண்ணீர் + துரும்பு]*

செ.ப.க அகரமுதலி: straw என்று கூறுகிறது. இதற்கு உறிஞ்சுகுழல் என்ற பொருள் வந்துவிட்டது. குழல் இடையூறு அன்று.

**தண்ணீர்த்துறை** *tannīr-t-tuṟai*, பெ. (n.) நீர் நிலையில், இறங்குமிடம் (இ.வ.); ghat, path of descent to a tank or river. தாயைத் தண்ணீர்த் துறையில் பார்த்தால், மகளை வீட்டில் பார்க்க வேண்டியதில்லை (பழ.).

*[தண்ணீர் + துறை. தண்ணீர்த்துறை = நீர் நிறைந்த துறை : படித்துறை : வழி]*

**தண்ணீர்த்துறையேறு-தல்** *tannīr-t-tuṟai-y-ēṟu*, 5 செ.கு.வி. (v.i.) மாதவிலக்காதல் (மூ.அ. அனுபந்.); to be in one's (lady) menstural periods.

*[தண்ணீர் + துறை + ஏறு-.]*

**தண்ணீர்த்தொட்டி** *tannīr-t-toṭṭi*, பெ. (n.) தண்ணீரைத் தேக்கிவைக்கும் தொட்டி; water cistern.

*[தண்ணீர் + தொட்டி.]*

**தண்ணீர்த்தேள்** *taṇṇīr-t-tēḷ*, பெ. (n.) நீர்வாழ் உயிரிவகை; water-scorpion (செ.அக.)

மறுவ. நீரி

*[தண்ணீர் + தேள். நீரில் வாழ்பவை]*

**தண்ணீர்த்தேற்றி** *taṇṇīr-t-tēṟṟi*, பெ. (n.) தேற்றாங்கொட்டை; water clearing nut (சா.அக.).

மறுவ. தண்ணீர் சேர்வேராக்கி

**தண்ணீர்தெளி[1]-த்தல்** *taṇṇīr-teḷi-*, 4 செகுன்றாவி. (v.t.) தூய்மையின் பொருட்டு நீர் தெளித்தல்(வின்.); to sprinkle water for purification.

*[தண்ணீர் + தெளி-.]*

வீட்டுவாயிலில், தூசு பறக்காமல் படிவதற்காக, நாடோறும் காலையில் தண்ணீர்தெளித்து வைத்தல் தமிழ்நாட்டுப் பழக்கம். தண்ணீரோடு, சாணமும் கலந்து கொள்வதுண்டு. அதன் மீது கோலமும் இடுவர்.

**தண்ணீர்தெளி[2]-த்தல்** *taṇṇīrteḷi-*, 4 செகுன்றாவி. (v.t.) 1. ஒதுக்குதல், புறக்கணித்தல்; to wash (one's hands) of. அப்பா அண்ணனை என்றோ தண்ணீர் தெளித்துவிட்டுவிட்டார் (உ.வ.). 'உன்னைத் தண்ணீர்தெளித்து விட்டார்கள்' என்றால் கைவிட்டு விட்டார்கள், என்பது வெள்ளிடை மலை.

'தாரை வார்த்தல்' என்பது, தண்ணீர்தெளித்து உடைமையைத் துறத்தல் என்ற பொருண்மையிலேயே, தமிழகத்தில் நாட்டுபுறத்தில் வழக்கூன்றியதென்பதை ஓர்ந்துணர்க; உரிமைப்பொருளை விடுதல் என்பது அதன் உட்கிடையாகும்.

**தண்ணீர்தெளித்துவிடு-தல்** *taṇṇīr-teḷttu-viḍu-* 18 செ.குன்றாவி. (v.t.) ஒருவனைத் தன் விருப்பப்படிச் செல்லும்படி விடுதல் (இ.வ.); to leave one to oneself. நாட்டு விடுதலைக் காலத்தில் பலர், தம் மக்களை நாட்டுப் பணிக்கெனத் தண்ணீர்தெளித்து விட்டனர் (உ.வ.).

**தண்ணீர்தெளிதல்** *taṇṇīr-teḷidal*, பெ. (n.) தண்ணீர்க்கசடு நீங்குதல்; cleaning of water from impurities (சா.அக.).

*[தண்ணீர் + தெளிதல்]*

**தண்ணீர்ப்பகை** *taṇṇīr-p-pagai*, பெ. (n.) 1. உடம்புக்குச் சிலநீர் ஒத்துக் கொள்ளாமையாலாகிய மாறுபாடு (இ.வ.); injuriousness of some kinds of water, allergy due to water. 2. தண்ணீரால் ஏற்படுங்குற்றம்; morbid affections due to drinking or using water.

*[தண்ணீர் + பகை]*

**தண்ணீர்ப்பட்டி** *taṇṇīr-p-paṭṭi*, பெ. (n.) 1. தண்ணீர்ப் பந்தலறத்துக்கு விட்ட நிலம் (S.I.I. III. 365); gift for providing drinking water. 2. கால்வாயில் நீர்மட்டத்தை ஏற்றி இறக்குவதன் மூலம், படகுப்போக்குவரத்தை ஒழுங்கு படுத்தும் நீரடைப்பு; lock to regulate boat transportation by raising or lowering water level in the canal.

*[தண்ணீர் + பட்டி.]*

**தண்ணீர்ப்பத்தாயம்** *taṇṇīr-p-pattāyam*, பெ. (n.) நீர்த்தொட்டி (இ.வ.); cistern, reservoir of water.

*[தண்ணீர் + பத்தாயம்]*

**தண்ணீர்ப்பந்தர்[1]** *taṇṇīr-p-pandar*, பெ. (n.) தண்ணீர்பந்தல் பார்க்க; see *taṇṇīr-p-pandal*. 'தண்ணீர் பந்தர் சயம்பெற வைத்து" (திருவாச. 2: 58).

*[தண்ணீர் + பந்தல் → பந்தர்]*

**தண்ணீர்பந்தல்** *taṇṇīr-p-pandal*, பெ. (n.) வெயிற்காலத்தில் வழிச்செல் வோர்க்குக் குடிநீர், மோர் முதலியன உதவும் அறச்சாலை; place where drinking water, buttermilk, etc. are given gratis to passers - by during the hot season. தண்ணீர்ப் பந்தலில் நீர் மோர் வழங்குவது பேரறம் ஆகும் (உ.வ.).

ம. தண்ணிர்ப்பந்தல்

*[தண்ணீர் + பந்தல்]*

**தண்ணீர்ப்பன்னா** *taṇṇīr-p-paṉṉā*, பெ. (n.) தண்ணீர்ப்பன்னா மீன்; a kind of sea-fish.

**தண்ணீர்ப்பாசி** *taṇṇīr-p-pāśi*, பெ. (n.) தண்ணீரிலுள்ள பாசி; water-moss (சா.அக.).

*[தண்ணீர் + பாசி]*

**தண்ணீர்ப்பாடம்** *tannīr-p-pāḍam,* பெ. (n.) 1. நன்றாக மனப்பாடமானது (இ.வ.); anything well learnt, as a lesson or science. 2. ஏதேனும் நோய்வாய்ப்பட்ட காலத்தில், ஒரு குவளையில் தண்ணீர் நிரப்பித் துணியால் மூடி, ஒரு குச்சிகொண்டு கலக்கி, மந்திரஞ் சொல்வது போல் உச்சரித்துப் பருகத் தரும் நீர்; a tumbler of water, supposed to immune with mantrās, and allowed to drink, during period of illness.

*[தண்ணீர் + பாடம்]*

**தண்ணீர்ப்பாம்பு** *tannīr-p-pāmbu,* பெ. (n.) நீர்ப் பாம்பு; water-snake. அவனைத் தண்ணீர்ப் பாம்பென்று விட்டுவிடக் கூடாது (உ.வ.).

*[தண்ணீர் + பாம்பு]*



**தண்ணீர்ப்பிடி** *tannīr-p-piḍi,* பெ. (n.) தண்ணீர்ப் பிடிப்பு (வின்.) பார்க்க; see *tannīr-p-piḍippu.*

*[தண்ணீர் + பிடி]*

**தண்ணீர்ப்பிடிப்பு** *tannīr-p-piḍippu,* பெ. (n.) 1. குளத்திற் கொள்ளும் நீரினளவு; water capacity of a tank. 2. குளம் முதலியவற்றில் நீர் பிடித்துள்ள, பரப்பளவு; quantity of water spread of a tank. 3. உணவு முதலியவற்றின் நீர்மத்தன்மை (வின்.); watery condition, as of food, of fruit, etc.

*[தண்ணீர் + பிடிப்பு]*

**தண்ணீர்ப்புரசு** *tannīr-p-purašu,* பெ. (n.) ஒரு வகைப் புரசு; a kind of portia tree (சா.அக.).

*[தண்ணீர் + புரசு]*

**தண்ணீர்ப்புரளி** *tannīr-p-puraḷi,* பெ.(n.) கண்மாயில் நீரின் பரப்பளவு; the catchment area of water in bund.

மறுவ. நீர்ப்பிடிப்புப் பகுதி

*[தண்ணீர் + புரளி - தண்ணீர்ப்புரளி. செட்டிநாட்டுப் பகுதியில், கண்மாயிலுள்ள, நீர்பிடிப்புப் பகுதியை இன்றும், தண்ணீர்ப்புரளி என்று, அழைக்கின்றனர்.]*

**தண்ணீர்ப்பேதி** *tannīr-p-pēdi,* பெ. (n.) நீராக ஆகும் கழிச்சல்; water stool (சா.அக.).

*[தண்ணீர் + பேதி]*

**தண்ணீர்ப்பட்டபாடு** *tannīr-p-paṭṭa-pāḍu,* பெ. (n.) எளிதாகச் செய்யக்கூடிய செயல்; that which can be easily done or performed; easy work."செய்யுளியற்றுவது இவர்க்குத் தண்ணீர் பட்டபாடு" (மீனாட். சரித். ii. 278). (செ.அக.)

*[தண்ணீர் + படு → பாடு; பாவேந்தருக்குப் பாவியம் பாடுவது, தண்ணீர் பட்டபாடாக இருந்தது.]*

**தண்ணீர்பாய்ச்சல்** *tannīr-payccal,* பெ. (n.) நிலத்திற்கு நீர் பாய்ச்சுகை; irrigating paddy-field.

*[தண்ணீர் + பாய்ச்சல்.]*

**தண்ணீர்போட்டுமிதி-த்தல்** *tannīr-pōṭṭu-midi-* 4 செ.குன்றாவி. (v.t.) உப்பளப் பாத்தியில் உழப்பு முடிந்ததும் தண்ணீர் விட்டு அடுக்கடுக்காக மிதித்தல்; to press the ground of salt-pan at stages, while letting salt water intermediately.

**தண்ணீர்மட்டம்** *tannīr-maṭṭam,* பெ. (n.) நீர் மட்டம் என்னுங் கருவி; spirit-level (செ.அக.).

மறுவ. நீர்மட்டம், இதளியமட்டம்

*[தண்ணீர் + மட்டம்]*

இயல்பான காற்றழுத்தம், வெப்பங் கொண்ட சூழலில், தொடர்ச்சியாக உள்ள நீர்மத்தின் மேல்மட்டம், சீரான ஒரே அளவினதாக இருக்கும். கட்டடங்களின் உயரங்களை அளப்பதற்கும், இணைமட்டம் வைப்பதற்கும், இக்கொள்கை பயன்படுகிறது. கொத்தனார் இதற்கெனப் பயன்படுத்தும் கருவி, தண்ணீர்மட்டம் (நீர்மட்டம்) (இரசமட்டம்) ஆகும். மூடிய கண்ணாடிக் குழாய்க்குள்ளாக, நிரப்பப்படும் சாராயத்தின் நடுவில் உள்ள வெற்றிடக்குமிழ்கொண்டு, மட்டம் அறியப்படுகிறது. புவியின் பல்வேறு

இடங்களின் அமைவு, கடல்மட்டத்திற்கு மேல் எவ்வளவு உயரத்தில் உள்ளது என்பதைக் காண்பதற்கு, இக்கருவி பயன்படுகிறது.

**தண்ணீர்மருந்து** *taṇṇīr-marundu*, பெ. (n.) தண்ணீரை மந்திரித்துக் கொடுக்கும் குடிப்பு; water cure (சா.அக.).

[தண்ணீர் + மருந்து]

**தண்ணீர்மாற்று-தல்** *taṇṇīr-māṟṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) கருவாடு அணியம் செய்யும் போது, அடிக்கடி உப்புநீரை மாற்றுதல்; to change salt-water to process karuvāḍu, dried fish.

[தண்ணீர் + மாற்று-.]

**தண்ணீர்மாறு-தல்** *taṇṇīr-māṟu-*, 5 செ. குன்றாவி. (v.t.) ஓரிடத்திலிருந்து, மற்றோரிடத்திற்கு நீரை மடைமாற்றிப் பாய்ச்சுதல் (யாழ்ப்.); to lead water, as from one field to another, from one channel to another. ஒவ்வொரு நாளும் வயல்களுக்குச் சீராகத் தண்ணீர் மாற்றுதல் நீர்பாய்ச்சுபவனின் வேலை (உ.வ.).

[தண்ணீர் + மாறு-.]

**தண்ணீர்மீட்டான்கிழங்கு** *taṇṇīr-mīṭṭāṉ-kiḻaṅgu*, பெ. (n.) தண்ணீர்விட்டான்கிழங்கு பார்க்க; see *taṇṇīrviṭṭāṉ-kiḻaṅgu* (சா.அக.).

[தண்ணீர் + மீட்டான் + கிழங்கு.]

**தண்ணீர்மீன்** *taṇṇīr-mīṉ*, பெ. (n.) ஓங்கில் மீன்; turny-fish (சா.அக.).

[தண்ணீர் + மீன்.]



**தண்ணீர்முட்டான்** *taṇṇīr-muṭṭāṉ*, பெ. (n.) தண்ணீர்விட்டான் பார்க்க; see *taṇṇīr-viṭṭāṉ* (செ.அக.).

**தண்ணீர்மேலேற்று-தல்** *taṇṇīr-mēlēṟṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) தொலைத்தீவு தண்டனை விதித்தல் (கடலின் மீது அனுப்புதல்); to sentence one to transportation, as sending across the water. விடுதலைப் போராட்டத்திற்காக வீரசாவர்க்கரைத் தண்ணீர் மேலேற்றி, அந்தமான் சிறையிலடைத்தனர்.

[தண்ணீர் + மேல் + ஏற்று-.]

**தண்ணீர்வரி** *taṇṇīr-vari*, பெ. (n.) நீரின் பொருட்டு விதிக்கும் வரிவகை; water-rate, water-cess. இந்த அரையாண்டிற்கான தண்ணீர் வரி கட்டிவிட்டீர்களா? (இ.வ.).

[தண்ணீர் + வரி]

**தண்ணீர்வாட்டம்** *taṇṇīr-vāṭṭam*, பெ. (n.) கட்டடம் முதலியவற்றில், தண்ணீர் தானே யோடுதற்கு அமைந்த சரிவு; water-fall, amount of slope required for unobstructed flow of water, gradient. தண்ணீர் வாட்டம் சரியாயிராததால், இங்கு நீர் தேங்குகிறது (உ.வ.).

[தண்ணீர் + வாட்டம்]

**தண்ணீர்வார்[1]-த்தல்** *taṇṇīr-vār-*, 4 செ.கு.வி. (v.i.) 1. வழிச்செல்வோர் முதலாயினோர்க்கு, நாவறட்சி தீர்த்திட நீர்தருதல்; to give water for drinking, as to travellers. 2. நோய் நீங்கினோர் முதலாயினோரை, நீராட்டுவித்தல் (வ.); to give a bath, as to a convalescent.

**தண்ணீர்வார்[2]-த்தல்** *taṇṇīr-vār*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. நோயினர், பேறுகாலமான பெண், மாதவிலக்கான பெண், இவர்களைக் குளிப்பாட்டுவித்தல்; to give a ceremonious bath to convelscents, delivered woman, menses woman etc. 2. தொடர்பற நீக்கிவிடுதல்; to wash one's hands of, give up, as a person.

[தண்ணீர் + வார்-.]

**தண்ணீர்விட்டான்** *taṇṇīr-viṭṭāṉ*, பெ. (n.) கொடிவகை (பதார்த்த. 429); climbing asparagus, m.cl., Asparagus racemosus.

**தண்ணீர்விட்டான்கிழங்கு** *taṇṇīr-viṭṭāṉ-kiḻaṅgu*, பெ. (n.) சதாமூலிக் கிழங்கு; water-root.

*[தண்ணீர்விட்டான் + கிழங்கு = தாறுமாறாகக் கொடிவிட்டுப் படரும் பூண்டு வகை; பித்தநோய் தீர்ப்பதற்கு தண்ணீர்விட்டான் கிழங்கு கைகண்ட மருந்தாகும். இக் கிழங்கு நீளமாகவும் வெண்ணிறமாகவும், சதைப்பற்றுத் மிக்கதாயு மிருக்கும்.அம்மைநோயகல, இக் கிழங்கினைத் தண்ணீரில் ஊறவைத்துத் துகளாக்கிப் பாலில் கலந்து பருகுவர். இக் கிழங்கு உடம்பிலுள்ள நீரிழிவு; எலும்புருக்கி, கவட்டைச்சூடு, மிகுசளி முதலான அனைத்து நோய்களையும் போக்கி, ஆண்மையைப் பெருக்கும் என சாம்பசிவ மருத்துவ அகரமுதலி கூறும்.]*

**தண்ணீர்விடாய்** *taṇṇīr-viḍāy*, பெ. (n.) தண்ணீர்வேட்கை பார்க்க; see *taṇṇīr-vēṭkai* (சா.அக.).

*[தண்ணீர் + விடாய்.]*

**தண்ணீர்விடு-தல்** *taṇṇīr-viḍu-*, 20 செ.குவி. (v.i.) நீர்கசிந்து பண்டங்கெடுதல்; to become stale or putrid. சோறு தண்ணீர்விட்டுப் போயிற்று (வின்.).

*[தண்ணீர் + விடு-.]*

**தண்ணீர்வேட்கை** *taṇṇīr-vēṭkai*, பெ. (n.) நாவறட்சி; thirst for water (சா.அக.).

மறுவ. தண்ணீர்த்தாகம்

*[தண்ணீர் + வேட்கை]*

**தண்ணீரா-தல்** *taṇṇīr-ā-*, 5 செ.குவி. (v.i.) *1.* நீர் வடிவாய்ப்போதல்; to become watery, diluted. *2.* நெட்டுருவாதல்; to be committed to memory. பாடம் தண்ணீராயிருக்கிறது (இ.வ.).

*[தண்ணீர் + ஆ-.]*

**தண்ணீராக்கு-தல்** *taṇṇīr-ākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1.* ஒருவனை இரக்கங் கொள்ளும்படி செய்தல்; to make one pity. *2.* மாழைகளை நீர்மவடிவிலாக்குதல்; to melt, dissolve, as metals. *3.* பால் முதலியவற்றில் நீர் கலத்தல்; to dilute, as milk. *4.* நெட்டுருப் பண்ணுதல்; to get by heart. பாடத்தைத் தண்ணீராக்கி விட்டான் (உ.வ.). *5.* கரையச்செய்தல்; to dissolve as sugar (சா.அக.).

*[தண்ணீர் + ஆக்கு-.]*

**தண்ணீராகஅடித்தல்** *taṇṇīr-āga-aḍittal*, பெ. (n.) தண்ணீராக மலம் வெளியேறுதல்; water motions (சா.அக.).

*[தண்ணீர் + ஆக + அடித்தல்]*

**தண்ணீரில்லாக்காடு** *taṇṇīr-illā-k-kāḍu*, பெ. (n.) ஏந்துகளற்ற இடம்; a place without basic amenition. அவரைப் பழிவாங்கக் கருதி தண்ணீரில்லாக் காட்டுக்கு அனுப்பிவிட்டார்கள் (உ.வ.).

*[தண்ணீர் + இல்லா + காடு]*

**தண்ணீருத்தாங்கல்** *taṇṇīru-t-tāṅgal*, பெ. (n.) கரிசலாங்கண்ணி; eclipse plant (சா.அக.).

**தண்ணீரூரி** *taṇṇīr-ūri*, பெ. (n.) தண்ணீர்க் கொடி; water-root (சா.அக.).

*[தண்ணீர் + ஊரி]*

**தண்ணீரூற்றிக்கொள்ளல்** *taṇṇīr-ūṟṟi-k-koḷḷal*, பெ. (n.) *1.* குளித்தல்; bathing. *2.* கள் முதலியவைக் குடித்தல்; drinking toddy etc. (சா.அக.).

மறுவ. தண்ணீர் போடுதல்

*[தண்ணீர் + ஊற்றிக்கொள்ளல்.]*

**தண்ணீரைச்சுருக்கி** *taṇṇīrai-c-curukki*, பெ. (n.) ஆரை; pseudo ferns (சா.அக.).

*[தண்ணீர் + ஐ + சுருக்கி]*

**தண்ணீரொவ்வாமை** *taṇṇīr-ovvāmai*, பெ.(n.) நீர் உடல் நலத்திற்கு ஒவ்வாமை; water disagreeable to ones health.

*[தண்ணீர் + ஒவ்வாமை]*

**தண்ணீரோதல்** *taṇṇīrōdal*, பெ. (n.) நீர் மந்திரித்துக் கொடுத்தல்; consecrating water by mantrās and given as water, cure as to a woman in labour or one possessed with devil (சா.அக.).

*[தண்ணீர் + ஓதல்]*

**தண்ணீரோது-தல்** *taṇṇīr-ōdu-,* 5 செ.குவி. (v.i.) பேறுகாலத்தில் துன்பப்படும் பெண்டிர் முதலியோர்க்குக் கொடுக்க, நீரில் மந்திரம் ஓதித்தருதல் (வின்.); to consecrate water by mantras, for being given to a woman in labour.

நோயாளிகளின் உள்ளத்திட்பத்தைக் கூட்டுவதற்காக, ஊரகப்புறங்களில் செய்யும் நடவடிக்கை. மந்திரம் ஓதிய நீரை அருந்தினால், பிணி தீரும் என உள்ளத்தில் தோன்றும் நம்பிக்கையே, மருந்தாம்.

*[தண்ணீர் + ஓது-.]*

**தண்ணீனி** *taṇṇīṉi,* பெ. (n.) வேங்கை மரம்; kina tree.

**தண்ணுமை** *taṇṇumai,* பெ. (n.) 1. அகப் புறமுழவுள் ஒன்றாகிய மத்தளம்; a kind of drum, one of aga-p-puṟa-muḻavu. "தண்ணுமைப் பின்வழி நின்றது முழவே" (சிலப். 3: 140). 2. முழவு; a large drum. "தண்ணுமை வளிபொருதெண்கண் கேட்பின்" (புறநா. 89: 7). 3. உடுக்கை (சூடா); the hour glass drum. 4. ஒருகட்புறை (வின்.); one-headed drum.

ம. தண்ணும

*[தண் → தண்ணுமை. "தண்" என்னும் ஒலிக்குறிப்பு வேரினின்று, முகிழ்த்த சொல்லாகும். ஒ.நோ. விண் → வீணை. 'விண்' என்னும் ஒலியினின்று வீணை என்னும் சொல்பிறந்ததை ஒக்கும்.]*

**தண்ணுமையோன்** *taṇṇumaiyōṉ,* பெ. (n.) மத்தள ஆசிரியன் (சிலப். 3: 45, உரை, தலைப்பு); drummer in a dancing group.

*[தண்ணுமை + ஒன்]*

**தண்ணுமையோனமைதி** *taṇṇumayōṉamaidi,* பெ. (n.) தண்ணுமையோன் பார்க்க; see *taṇṇumaiyōṉ.*

*[தண்ணுமையோன் + அமைதி]*

**தண்ணெனல்**[1] *taṇṇeṉal,* பெ. (n.) 1. குளிர்ச்சிக் குறிப்பு; being cool, refreshing. "குறுகுங் காற றண்ணென்னும்" (குறள், 1104). 2. இரங்கற்குறிப்பு; being-merciful.

*[தண் + எனல்]*

**தண்ணெனல்**[2] *taṇṇeṉal,* பெ. (n.) தட்டுகைக் குறிப்பு; onom, expr. of tapping.

*[தண் + எனல்]*

**தண்ணெனவு** *taṇ-ṇ-eṉavu,* பெ. (n.) 1. குளிர்ந்திருக்கை; being cool or refreshing. 2. இரங்குகை; being merciful. "தண்ணென வில்லை நமன்றமர்கள்" (திவ். பெரியதி. 4. 10:6).

*[தண் + எனவு]*

**தண்பகம்** *taṇbagam,* பெ. (n.) ஒருவகை மரம்; a kind of tree. "சண்பகந் தண்பகம் பாடலம்" (மேருமந். 585).

*[தண் + பகம் → தண்பகம்.]*

**தண்பணை** *taṇ-paṇai,* பெ. (n.) மருதநிலம்; agricultural tract. "நன்மதி வேட்கோட் சிறாஅர் தேர்க்கால் வைத்த பசுமண் குருஉத்திரள்போல அவன் கொண்ட குடுமித்து இத் தண்பனை நாடே" (புறநா. 32). "கரும்பல்லது காடறியாப் பெருந்தண்பணை பாழாக ஏம நன்னாடொள் ளெரி யூட்டினை" (புற. 16).

*[தண்பண்ணை → தண்பணை - குளிர்ந்த, செய்களையுடைய பண்ணை. பண்ணை → பணை. பண்ணைக்கு அடியான 'பண்' என்ற சொல்லும், 'செய்'யெனும் சொல்லும் முதற்கண் ஒரு தொழிலைக் குறித்துப் பின்பு, அத் தொழிலுக்கு, நிலைக்களனான இடத்தையும் குறித்ததெனலாம். செழித்த வேளாண் நிலம் சூழ்ந்த பகுதி]*

**தண்பதம்** *taṇ-padam,* பெ. (n.) 1. புதுப்புனல்; freshet in a river. "தாழ்பொழி லுடுத்த தண்பதப் பெருவழி" (சிலப். 10, 32). 2. புதுப்புனல் விழவு "தண்பதங் கொள்ளுந் தலைநாட்போல" (சிலப். 6:160). 3. தாழ்ந்தநிலை; low condition. "தண்பதத்தாற் றானே கெடும்" (குறள், 548).

*[தண் + பதம்]*

**தண்பதங்கொள்ளுந்தலைநாள்** *taṇpadaṅgoḷḷun-dalai-nāḷ,* பெ. (n.) புதுப்புனல் விழவு கொண்டாடுந் தலைநாள்; festival celebrated on the bank of a river.

*[தண்பதம் + கொள்ளும் + தலைநாள்.]*

**தண்பதப்பெருவழி** *taṇ-pada-p-peruvaḻi,* பெ. (n.) புதுப்புனலாடச் செல்லும் பெரிய வீதி; broad street ( like a sheet of water.)

*[தண்பதம் + பெருவழி.]*

**தண்பு** *taṇbu,* பெ. (n.) குளிர்ச்சி; coldness, coolness. "தண்பாரு முனதருளை" (திருப்பு. 368).

ம., க. தண்பு

*[தண் → தண்பு]*

**தண்புகை** *taṇpugai,* பெ. (n.) தண்புகைமரம் பார்க்க; see *taṇpugai-maram* (சா.அக.).

**தண்புகைமரம்** *taṇpugai-maram,* பெ. (n.) கருப்புக்குங்கிலிய மரம்; saul tree.

**தண்பொருநை** *taṇ-porunai,* பெ. (n.) 1. தாம்பிரபரணி ஆறு; the river Tāmpirabaraṇi. "தண்பொருநையும் ஆன்பொருநையும்" (தொல். பொருள். 191, உரை). 2. ஆன்பொருந்தம் (அமராவதி) என்ற ஆறு; the river Amarāvati. "தண்பொருநைப் புனற்பாயும் விண்பொரு புகழ் விறல்வஞ்சி" (புறநா. 11).

தண்பொருநை: தொல்காப்பியத்துள் குறிக்கப் பெற்றதும், தொன்மப்புகழ் மிக்கதுமான தாமிரபரணி; மேற்குறித்தவாறு, சோர்தம் தலை நகராம் விறல்வஞ்சியினை, வளப் படுத்துந் தண் பொருநையாய்த் திகழ்ந்ததெனப், புறநானூறு புகல்கிறது.

**தண்மை** *taṇmai,* பெ. (n.) 1. குளிர்ச்சி; coldness; coolness. "மதியிற் றண்மை வைத்தோன்" (திருவாச. 3: 21). 2. அமைதி; calmness, self-possession, tranquillity of mind, gentleness. "இன்னா தண்மையி லாளர் பகை" (இன். நாற். 32). 3. இன்பம்; pleasantness, agreeableness. 4. மென்மை (குறள், 1239, உரை); slendernes, gentleness. 5. தாழ்வு (பிங்.); baseness, meanness, inferiority. (நாஞ்.). 6. விளைவுக் குறைவு; poorness of yield. "கேடுகரிவுந் தண்மையும் நீக்கிக் கலம் நெல்" (நாஞ்.). 7. அறிவின்மை (திவா.); ignorane, shallowness.

ம. தண்ம; க. தண்பு; தெ. தழைபு; து. தம்பு; கோத. தண்; துட. தண்வ்; குட. தணிமி; பட. தணுபு

*[தண் → தண்மை. (மு.தா. 299)]*

**தண்மைச்சுறா** *taṇmai-c-cuṟā,* பெ. (n.) ஒருவகைச் சுறாமீன்; a kind of shark fish.

*[தண்மை + சுறா.]*



**தண**[1]**-த்தல்** *taṇa-,* 3 செ.குவி.(v.i.) 1. நீங்குதல்; to depart, go away. "தங்குதிமல நாளுந் தணந்திடும்" (பிரமோத். 10:38). 2. போதல்; to go; to pass.

*[தள் → தண் → தண-.]*

**தண**[2]**-த்தல்** *taṇa-,* 3 செ.குன்றாவி. (v.i.) 1. நீக்குதல்; to put away, remove. "மெலிவைத் தணப்பான்" (தணிகைப்பு. கள. 340). 2. பிரிதல்; to leave, separate from. "தணந்தமை சால வறிவிப்ப போலும்" (குறள், 1233).

*[தள் → தண் → தண-.]*

**தணத்தல்**[3] *taṇattal,* பெ. (n.) ஓதல் முதலியவற்றில் சென்றது குறித்துக்கூறும் பருவம்பொய்த்தல் (அடி. சிலம்பு. 8; 61); unseasonal late-arrival of šaṅgam literary hero for the sake of education.

*[தள் → தண் → தணத்தல்: காலந் தாழ்த்தல்; தாழ்த்தல்.]*

**தணக்கம்** *taṇakkam,* பெ.(n.) தணக்கு[2].1 பார்க்க; see *taṇakku*[2]*-1.* "பல்பூந் தணக்கம்" (குறிஞ்சிப். 850).

**தணக்காசிகம்** *taṇa-k-kāšigam,* பெ. (n.) இந்திய முசுக்கட்டை மரம்; Indian mulberry (சா.அக.).

**தணக்கு**[1] *taṇakku,* பெ. (n.) தடவுமரம்; இதன் விதைகள் மன்றாட்டு (செபம்) மாலையாகக் கோக்கப்படும்; catamaran, wood tree; necklace and rosaries are made from the seeds.

தணக்கு வகைகள்:
1. சாம்பல்தணக்கு; white catamaran tree
2. செந்தணக்கு; false kuteerah
3. வெண்தணக்கு; white tanak
4. கொட்டைத்தணக்கு; whirling nut
5. மலைத்தணக்கு; bastard cedar
வெள்ளைக்கடம்பு : bridal conch plant
6. மஞ்சள்தணக்கு; yellow flowered silk cotton
7. புல்தணக்கு
8. பஞ்சுத்தணக்கு; same as no. 6.
9. யானைவயிற்றுத்தணக்கு; elephant rope tree
10. நுணாத்தணக்கு; small ach root
11. வண்டுளைத்தணக்கு
12. சாம்பரித்தணக்கு; same as no. 1
13. முணுவுத்தணக்கு; potters tree
14. சிறுதணக்கு; small dying mulberry
15. முட்டைத்தணக்கு; same as no. 4
16. வெள்ளைத்தணக்கு; same as no. 13
17. சம்பீரத்தணக்கு; same as no. 1 (சா.அக.)

**தணக்கு**[2] *taṇakku*, பெ.(n.) 1. நுணா என்னுங் கொடி (L.); small ach root s.cl., Morinda umbellata. 2. முட்டைக்கோங்கு என்னுமரம்; whirling nut. 3. கோங்கிலவு; false tragacanth. 4. ஒடல்[2] பார்க்க; see *ōḍal*[2], elephant rope tree. 5. வால்; tail. "தணக்கிறப் பறித்த போதும்" (சீவக. 2887).

ம. தணக்கு

[தண் → தண → தணக்கு.]

**தணக்குப்பருத்தி** *taṇakku-parutti*, பெ. (n.) கோங்கிலவு; whirling nut (சா.அக.).

[தணக்கு + பருத்தி.]

**தணக்குப்பிசின்** *taṇakku-p-piśiṉ*, பெ. (n.) 1. வெண்மை, கருமை, செம்மை, நீலம்- வண்ணங்களுள்ள மரப்பிசின். செம்மை, வெண்மை சிறந்தது. சளிக்கோழையை நீக்கும். இளகியத்தைப் பயன்படுத்த ஆண்மை, வலுப்பெறும். நீர்ச்சுருக்கு, தொண்டைப் புகைச்சல் போன்ற நோய்களை நீக்கும். இது துவர்ப்பாகலின், குருதிப் போக்கை நிறுத்தும்; an excellent gum of false tragacanth tree. The other gum varieties are red black and purple. The red and white gum varieties are used with great advantage in suppressing phlegm in case of consumption. It is very useful in the irritation of the mucous membranes of the pulmonary and ganitourinary organs. Being an astringent it arrests bleeding. 2. வாதுமைக்கொண்டைப் பிசின்; true tragacanth or gum of almond tree.

[தணக்கு + பிசின்.]

**தணப்பு**[1] *taṇappu*, பெ. (n.) செலவு; பிரிவு; to spend, to separate.

[தண → தணப்பு.]

**தணப்பு**[2] *taṇappu*, பெ. (n.) 1. நீங்குகை; parting; separation. "தணப்பிலாக் கன்னிமுகங் கருக" (திருவானை. உலா, 116). 2. தடை; hindrance. "தணப்பறக் கொடுத்த பின்றை" (சீவக. 373). 3. செல்லுகை (வின்.); going, passing.

[தண → தணப்பு.]

**தணல்**[1] *taṇal*, பெ. (n.) 1. கனிந்தநெருப்பு; live coals, embers, cinders. "தணல் முழுகு பொடியாடுஞ் செக்கர்மேனி" (தேவா. 1090, 7). 2. நெருப்பு; fire. "வீதியெல்லாந் தணல்" (இராமநா. உயுத். 13).

[தழல் → தணல்; ஒ.நோ. அழல் → அனல். புழல் → புனல்]

**தணல்**[2] *taṇal*, பெ. (n.) நிழலிடம் (நாஞ்.); shade, shady-spot.

ம. தணல்

[தண் = குளிர்ச்சி. தண் → தண்மை = குளிர்மை. குளிர்மையுடைய நிழல். தண் → தண → தணல்]

**தணல்விழுங்கி** *taṇal-viḻuṅgi*, பெ. (n.) தீக்கோழி (வின்.) (தணலை விழுங்குவது); ostrich, as eating cinders (செ.அக.).

[தணல் + விழுங்கு. தணல் = நெருப்பு விழுங்கி = விழுங்குவது]

**தணலம்** *taṇalam*, பெ. (n.) எருக்கு (மலை); madar plant.

**தணலாற்றி** *taṇal-āṟṟi*, பெ. (n.) *1.* கொடிவேலி; lead wort. *2.* *மணித்தக்காளி;* black berried solanum (சா.அக.).

*[தழல் → தணல் + ஆற்றி. சூட்டைத் தணிக்கும் மணித்தக்காளி]*

**தணலி** *taṇali*, பெ. (n.) *1.* தணலம் பார்க்க; see *taṇalam*. *2.* நெருப்பு; fire.

*[தழல் → தணல் → தணலி.]*

**தணவகா** *taṇavagā*, பெ. (n.) *1.* மஞ்சள்கிழங்கு; yellow bulbous root. *2.* மஞ்சள் சிற்றகத்தி மரம்; sesbania aegyptica with the yellow flowers (சா.அக.).

**தணவம்** *taṇavam*, பெ. (n.) அரசு (மலை.); pipal tree.

**தணவையாதம்** *taṇavaiyādam*, பெ.(n.) *1.* ஆகாய கருடன்; skyroot. *2.* சிறுகாஞ்சொறி; small climbing nettle (சா.அக.).

**தணன்** *taṇaṉ*, பெ.(n.) குளிர்ந்த அருளாளன்; merciful person.

*[தண் → தணம் → தணன்.]*

**தணி[1]-தல்** *taṇi-*, 4 செ.குவி. (v.i.) *1.* ஆறுதல்; to be allayed, mitigated, alleviated, softened, appeased, pacified, soothed. "சினந் தணிந்திசின" (கலித். 16). *2.* குறைதல்; to be reduced. "தணியாத் துன்பந் தலைத்தலை மேல்வர" (மணிமே. 2:5). *3.* வற்றுதல்; to grow dry. "தணிவருங் கயத்துப் பூத்த" (சீவக. 1582). *4.* விளக்கு முதலியன அவிதல் (இ.வ.); to die out, expire, as flame. *5.* வேலை முதலியவற்றினின்றும் நீங்குதல்; to be free, as from work. "தணியும் பொழுதின்றி நீரணங் காடுதிர்" (திவ். திருவாய். 4:6:6). *6.* காலந் தாழ்த்துகை, தவக்கம்; to delay, slacken. "தணியா தொல்லை தான்வந்தருளி" (திருவாச. 32:8). *7.* தாழ்தல்; to yield, submit oneself. அவன் இவனுக்குத் தணியான். *8.* ஒன்றோடொன்று இசைதல் (வின்.); to be adapted, as the angle of a hoe to the haft, as the coulter to the plough. *9.* நிறைதல்; to abound; to be profuse. "தணிபொன் சொரியும்" (தஞ்சைவா. 25). *10.* பொந்திகையடைதல்; to be satisfied, fulfilled, as a desire. "தணியா வேட்கை தணித்தற் கரிதாய்" (மணிமே. 25:121). *11.* பருத்தல்; to increase in size, grow fat. இந்த மருந்தால் உடம்பு தணியும் (உ.வ.).

தெ. தணியு; க. தனி; ம. தணியுக

*[தள் → தண் → தணி-.]*

**தணி[2]-த்தல்** *taṇi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* ஆற்றுதல்; to relieve, appease, satisfy, heal. "நெடுவசி விழுப்புண் டணிமார் காப்பென" (மலைபடு. 303). *2.* குறைத்தல்; to cause to diminish, to moderate. *3.* தாழ்த்துதல்; to lower in height, set lower, strike, as a flag. *4.* புதைத்தல் (சூடா.); to bury. *5.* அவித்தல்; to extinguish, quench, as fire. *6.* தீர்த்தல்; to remove, cure. "நோய்முதனாடி யது தணிக்கும் வாய்நாடி" (குறள், 948). *7.* தண்டித்தல்; to punish. "தணித்தலு மளித்தலுந் தடிந்தோன்" (ஞானா. 48:20).

*[தள் → தண் → தணி-.]*

**தணி[3]-த்தல்** *taṇi-*, 2 செ.குவி. (v.t.) பொறுத்தல்; to bear. "மின்னு ... துன்னுவாட்டந் தணித்தலின்" (சீவக. 867).

*[தள் → தணி-.]*

**தணி[4]** *taṇi*, பெ. (n.) மலை (அக.நி.); mountain.

*[தண் → திண் → தணி.]*

**தணி[5]** *taṇi*, பெ. (n.) குளிர்ச்சி; coolness, coldness. "நணி புனலாடுந் தரைமிகு போர்க்கண்" (பரிபா. 6:29).

*[தண் → தண்மை = குளிர்மை. தள் → தண் → தணி: நீர்வேட்கையைத் தணித்துக் குளிர்ச்சியூட்டல்]*

**தணி[6]** *taṇi*, பெ.(n.) தேர்நெம்புங் கட்டை(இ.வ.); lever - beam for starting a chariot.

*[தடி → தணி.]*

**தணிக்கை** *taṇikkai*, பெ. (n.) *1.* அறத்திற்கு எதிரான பகுதியைத் திரைப்படம் போன்ற வற்றிலிருந்து நீக்குதல்; censorship. இந்தத் திரைப்படத்துக்குத் தணிக்கைச் சான்றிதழ் இதுவரை கிடைக்கவில்லை. *2.* கணக்குகளைச் சரிபார்த்தல்; auditing. *3.* மேற்பார்வையிடுகை;

inspection, inquiry, supervision. வனத்துறை அலுவலர், தணிக்கைக்காக நாளை வருவார் (உ.வ.).

[தண் → தணி → தணிக்கை = பணியை மேற்பார்த்துக் கணித்தல். ஒ.நோ. கண் → கணி → கணிக்கை. ஒருகா. கணிக்கை → தணிக்கை]

**தணிகி** *tanịki*, பெ. (n.) தணிக்கை பார்க்க; see *tanịkkai*.

[தணிக்கை → தணிகி.]

**தணிகை** *tanịgai*, பெ. (n.) திருவள்ளூர் மாவட்டத்திலுள்ள, திருத்தணிகையென்னும் முருகன் திருக்கோவிலுள்ள இடம்; Murugan temple in Tiruvaḷḷūre District (செ.அக.).

**தணிகைப்புராணம்** *tanịgai-p-purāṇam*, பெ. (n.) திருத்தணிகையென்னும் இடத்தைப் பற்றிப் பத்தொன்பதாம் நூற்றாண்டில், கச்சியப்ப முனிவர் இயற்றிய தொன்மம்; a tonmam on Thiruttaṇigai shrine, by Kacciyappa-munivar 19th c.

[தணிகை = திருத்தணிகை. புராணம் = தொன்மம்]

Skt. purāṇa → த. புராணம்

**தணிசு** *tanịšu*, பெ. (n.) 1. விலைமலிவு (வின்.); moderation, cheapness. 2. சதைபிடிக்கை (தஞ்.): picking up, putting on flesh. 3. வளைவு (வின்.); bending, as of a hoe, opp. to kaṭišu.

[தணி → தணிவு = குறைவு. தணிவு → தணிசு = பொருட்களின் மிகு விளைச்சலால், விலை தனிவது, இயல்பேயாம்]

**தணிந்தவேளை** *tanịnda-vēḷai*, பெ. (n.) சாயுங்காலம்; மாலைப்பொழுது (வின்.) (குளிர்ந்திருக்கும் நேரம்); evening, as being the cool part of the day.

[தண் → தணி → தணிந்த + வேளை.]

**தணிந்திரு-த்தல்** *tanịndiru-*, 4 செ.குவி. (v.i.) சதைபிடித்தல்; to pick up flesh.

[தணி → தணிந்து + இரு-.]

**தணிப்பு**[1] *tanịppu*, பெ. (n.) 1. தணிவு பார்க்க; see *tanịvu*. 2. அதிமதுரம் முதலியவற்றைக் கருக்குநீரிட்டுச் செய்த ஒருவகை மருந்து; demulcent extracted from liquorice and other herbs.

[தண் → தணி → தணிப்பு = தொண்டைக் கம்மலைத் தணிக்க, நீர்கருக்கிச் செய்த மருந்து]

**தணிப்பு**[2] *tanịppu*, பெ. (n.) அழற்சியைத் தணிக்கும் மருந்து; any medicine that lessens the effect of irritation.

The following are the examples.

1. குன்றிமணி: Indian liquorice
2. முள்ளுக்கீரை; thorny spinach
3. சதமூலி: Indian salap காட்டுக் காரட் கிழங்கு
4. கருங்காக்கணம்; crow creeper
5. பேதனா; bedaunea
6. கடற்பாசி: sea moss
7. வெண்டிக்காய்; common bendy
8. திருநீற்றுப்பச்சை (சப்ஜா): fragrant basil
9. இராமதுளசி; Rama thulasy
10. நெல்: paddy
11. ஆனைநெருஞ்சில்; elephant caltrope
12. இசுபகோல்; spogel seed
13. எள்: gingelly seed
14. கழுதைத்தும்பை; donkey leucas.

(சா.அக.)

[தண் → தணி → தணிப்பு]

**தணிமரம்** *tanịmaram*, பெ. (n.) தேர் நெம்புதடி (ஈடு, 1,4, 6 ஜீ. அரும்.); lever beam for starting temple car.

[தடி → தணி + மரம்.]



**தணிமார்** *tanimār,* பெ. (n.) ஆற்றுகை; relieve. "நெடுவசி விழுப்புண்டணிமார் காப்பென" (மலைபடு. 909).

*[தணி + மார்.]*

**தணியல்**[1] *taniyal,* பெ. (n.) தணிவு பார்க்க; see *tanivu.* (செ.அக.).

*[தணி → தணியல்.]*

**தணியல்**[2] *taniyal,* பெ. (n.) திருத்தணிகை; Murugan temple. "தணியல் மேவி" (குற்றா. தல. திருமண. 161).

*[தணி → தணியல்]*

**தணியல்**[3] *taniyal,* பெ. (n.) கள்; toddy. "அருந்தினன் றணியல்" (ஞானா. 33, 16).

*[தெளி → தளி → தணி → தணியல்]*

**தணியாமை** *taniyāmai,* பெ. (n.) காலந் தாழ்த்தாமை; without delay. "தணியா தொல்லை வந்தருளி" (திருவாத. பிரார்த்தனை. 8).

*[தணி + ஆ + மை - தணியாமை. 'ஆ' - எதிர்மறை இடைநிலை. 'மை' - சொல்லாக்க ஈறு. (ஒ.நோ.) போகாமை : குறையாமை.]*

**தணிவு** *tanivu,* பெ. (n.) *1.* குறைகை; abatement, modification, mitigation, alleviation, diminution. "தணிவில் வெம்பசி" (மணிமே. 17:73). *2.* அமைதி; calmness, mildness, coolness, softness. "கடலிற்றணி வெய்தி" (கம்பரா. நகர்நீ. 141). *3.* வணக்கம்; reverence, worship, submission. "தணிவளிக்கி னுயர்வளிக்கும்" (காஞ்சிப்பு. கழுவா. 307). *4.* நீர்வற்றுகை; becoming dry. "தணிவருங் கயத்துப் பூத்த" (சீவக. 1582). *5.* இழிவு (வின்.); inferiority in quality or performance. *6.* தாழ்வு (இவ.); lowness, as of height, price. தணிந்த வில்லுதான் தைக்கும் (பழ.).

*[தள் → தண் → தணி → தணிவு (மு.தா. 299)]*

**தணிவுசுரம்** *tanivu-šuram,* பெ. (n.) முறைக் காய்ச்சல்; intermittent fever.

மறுவ. முறைக்காய்ச்சல்

*[தணிவு + சுரம். ஒரு குறிப்பிட்ட கால இடைவெளியில், தொடர்ந்து வரும் காய்ச்சல். விட்டுவிட்டு வருஞ் சுரம்]*

**தணு** *tanu,* பெ. (n.) பொழுதுவணங்கி; sunflower (சா.அக.).

*[தள் → தண் → தணு. கதிரவனைக் கண்டதும் தணிவாகத் தலையைத் தாழ்த்தி நிற்கும், மலர்.]*

**தணுப்பு** *tanuppu,* பெ. (n.) *1.* குளிர்ச்சி (நாஞ்.); chillness. *2.* நீர்க்கோவை: cold.

*[தண் → தணு → தணுப்பு. 'பு' - சொல்லாக்க ஈறு. ஒ.நோ. கடுப்பு; விடுப்பு; அலுப்பு; வெளுப்பு.]*

**தத்**[1] *tat,* பொறுமையின்மை, வெறுப்பைக் காட்டும் அதட்டற் குறிப்பு (இவ.); exclamation meaning tut.

க. தத்

*[தத் = ஒலிக்குறிப்புச் சொல்லினின்று கிளைத்த வேரடி.]*

**தத்**[2] *tat,* கு.பெ.எ. (adj.) *1.* அந்த; that. "தத்திருப்பதி" (திருப்பு. 124). *2.* அது; that. "தத்தொமசி" (வேதா. சூ. 117).

*[தான் → தத் (வ.வ. 156)]*

**தத்சுத்தி** *tatšutti,* பெ. (n.) உண்மையை உள்ளபடி அறிதல்; ascertainment or correct knowledge of truth.

*[தான் → தத் + சுத்தி - தத்சுத்தி (வ.வ. 156)]*

**தத்தக்கபித்தக்கக்குத்துதல்** *tattakka-pittakka-k-kuttudal,* பெ. (n.) ஒருவன் மற்றொருவன் புறங்கையிற் குத்தும்போது, அந்தக்குத்துக் கைம்மேற்படாமல், அடித்தவனதுகை தரையைத் தாக்கும்படி கையை இழுத்துக் கொள்ளும் விளையாட்டு (யாழ்ப்.); a game in which one tries to strike on another's hand and the other draws it back, evading the blow.

*[தத்தக்க + பித்தக்க + குத்துதல்.]*

**தத்தக்கபித்தக்கவெனல்** *tattakka-pittakka-v-enal,* பெ. (n.) *1.* நடைதளர்தற் குறிப்பு; wobbling, as of a child. அவன் தத்தக்கபித்தக்க வென்று நடக்கிறான் (உ.வ.). *2.* பேச்சுத் தடுமாறற் குறிப்பு; babbling, faltering in speech. தத்தக்கபித்தக்கவென்று பேசுகிறான் (உ.வ.).

*[தத்தக்க + பித்தக்க + எனல் - தத்தக்க பித்தக்கவெனல்]*

ஒலிக்குறிப்பு வேரடியினின்று கிளைத்த சொல்லாகும். தத்தித்தத்திப் பேசும் பாங்கு, கொஞ்சுமொழி பயிலுங் குழவிகட்கே யுரியது. குறுகுறுநடந்து, சிறுகைநீட்டிக் குதலை மொழி பேசுங் குழவியைப் போன்றதே, அகவைமுதிர்ந்த, குடுகுடு கிழவர்தம் நடையும் பேச்சுமெனலாம். தளர்நடை நடக்கும் அகவைமுதிர்ந்தோர்தம், தத்துநடையும், பேச்சும், கிள்ளைமொழி பயிற்றும் பிள்ளைகளைப் போன்றதெனில், மிகையன்று. சேக்சுபியர் Seven Stages of Men, என்னும் பாடலிலும், இக் கருத்தைக் கூறியுள்ளார். குரானில் நபி - முதுமை மிகுதியால் வாழ வாய்ப்புத்தரும் இயற்கை குழந்தைபோல் தவழ வைக்கும் என்று, இக் கருத்தையே கூறுகிறார்.

**தத்தகன்** *tattagaṉ,* பெ. (n.) **மகவுக் கொடையிடப்பட்ட மகன்;** adopted son, son given by his parents to a person, who legally adopts him.

**மறுவ.** *தத்துமகன், தத்துப்பிள்ளை*

*[தத்து + அகம் → அகன் → தத்தகம் → தத்தகன் - மற்றொருவர் வீட்டிற்கு மகனாகக் கொடை கொடுக்கப்பட்டவன்]*

**தத்தகாபுத்தகா** *tattagā-puttagā,* பெ. (n.) குழந்தையின் ஒழுங்கற்ற, குறுகுறு நடை; wobbling walk of a child; toddling. தத்தகா புத்தகா நூலுகாலு (இ.வ.).

*[தத்தகா + புத்தகா.]*

**தத்தங்கொடு-த்தல்** *tattaṅ-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. **மகவுக்கொடை கொடுத்தல்** (வின்.) to give in adoption. 2. **தத்தம்பண்ணு** பார்க்க; see *tattam-paṇṇu-.*

**மறுவ.** *தத்துக்கொடுத்தல், மகவுக் கொடையளித்தல்*

*[தத்தம் + கொடு-.]*

**தத்தஞ்செய்-தல்** *tattañ-šey-,*1 செ.குன்றாவி (v.t.) **தத்தம்பண்ணு-தல்** பார்க்க; see *tattam-paṇṇu-* எல்லாவற்றையும் தத்தம் செய்துவிட்டு துறவியாகிவிட்டார் (உ.வ.) "புனிதவுன் றனதெனத் தத்தஞ் செய்து" (அறப். சத. 6).

*[தத்தம் + செய்-.]*

**தத்தடி** *tattaḍi,* பெ. (n.) குழந்தையின் தளர்நடை (இ.வ.); wobbling of a child.

*[தத்தி → தத்து + அடி = தத்தித்தத்தித் தளர்நடை பயிலும் குழவியின்நடையைத் தத்தடி என்று வழங்குவர். இவ் வழக்கு கல்லாதார் நாவில் வழங்கும், நல்லதமிழ் வழக்காகும். "தத்தித் தத்தி நடந்துவருஞ் சின்னப்பாப்பா" என்னுந் திரைப்படப் பாடல்வழக்கை நோக்குக]*

**தத்தபித்தவெனல்** *tatta-pitta-v-eṉal,* பெ. (n.) **தத்தக்கபித்தக்கவெனல்** (இவ.) பார்க்க; see *tattakka-pittakka-v-eṉal.*

*[தத்தக்கபித்தக்க → தத்தபித்த + எனல்]*

**தத்தநாகம்** *tatta-nāgam,* பெ. (n.) **தயிர்;** curd.

**தத்தபுத்திரன்** *tatta-puttiraṉ,* பெ. (n.) **தத்தகன்** பார்க்க; see *tattagaṉ* (செ.அக.).

**மறுவ.** *தத்துப்புத்திரன், தத்துப்பையன்*

*[தத்து + புத்திரன். தத்துப்புத்திரன் → தத்தபுத்திரன்]*

**தத்தம்**[1] *tattam,* பெ. (n.) 1. **புல்லுருவி** (புல்லூரி); parasite. 2. **ஒவ்வொன்று;** each.

**தத்தம்**[2] *tattam,* பெ. (n.) **நீர்வார்த்துக் கொடுக்கும் கொடை** (இ.வ.); gift, offering, etc, given away with water.

*[தத்து + அம் - தத்தம். தத்து = கொடை. 'அம்' பெருமைப்பொருள் பின்னொட்டு]*

**தத்தம்பண்ணு-தல்** *tattam-paṇṇu-,* 12 செ.குன்றாவி. (v.t.) 1. **நீர்வார்த்துக் கொடை கொடுத்தல்;** to give away in charity by pouring water into the hands of the recipient. 2. **இறந்தார்க்கு எள்ளுந் தண்ணீரும் இறைத்தல்;** to give oblations to manes with water. 3. **பொருளைத் திரும்பப் பெறாதபடி கொடுத்துவிடுதல்;** to give absolutely, lose entirely without any hope of regaining.

*[தற்று → தத்து → தத்தம் + பண்ணு-.]*

**தத்தம்மை** *tattammai,* பெ. (n.) **தத்தை**[1] (நாஞ்) பார்க்க; see *tattai*[1].

*[தத்தை + அம்மை - தத்தம்மை.]*

**தத்தமணியம்** *tatta-maṇiyam,* பெ. (n.) தொட்டாற்சுருங்கியை உள்ளடக்கிய துவரையினக் குத்துச்செடிவகை (விடத்தேர்); mimosa cinerea.

*[தத்தம் + மணியம்.]*

**தத்தமாழை** *tatta-māḻai,* பெ. (n.) உருக்கு; steel.

*[தத்தம் + மாழை.]*

**தத்தரசமயம்** *tattara-šamayam,* பெ. (n.) நெருக்கடியான நேரம் (இ.வ.); pressing occasion, critical moment.

*[தத்தரம் + சமயம்]*

**தத்தரம்**[1] *tattaram,* பெ. (n.) *1.* நடுக்கம் (இவ.); tremulousness, quivering. *2.* மிகுவிரைவு; over hastiness, flurry. "தத்தரமாய்க் காவிலிட்ட தண்டைகளும்" *(விறலிவிடு. 1052).*

தெ., த. தத்தர

*[தத்து → தத்தம் → தத்தரம். தத்து - நடுக்கம், அதிர்வு. தத்துகை - நடுங்குகை, அதிர்கை. நிலநடுக்கத்தால், அனைத்தும் அதிர்கை.]*

**தத்தரம்**[2] *tattaram,* பெ. (n.) வலக்காரம்; artfulness, cunning. "செலவுக்குத் தத்தரமாக் கேட்டாள்" *(விறலிவிடு. 755).*

*[தத்தம் → தத்தரம்.]*

**தத்தரம்**[3] *tatta-ram,* பெ. (n.) மிகுபுணர்ச்சி (தெய்வச். விறலி. விடு. 256); a mode of coition.

**தத்தல்** *tattal,* பெ. (n.) *1.* தத்து-தல் பார்க்க; see *tattu-. 2.* தவளை; frog (சா.அக.).

**தத்தவா** *tattavā,* பெ. (n.) பெருங்குறிஞ்சி; scammony swallow wort.

**தத்தவோகம்** *tatta-vōgam,* பெ. (n.) தீய வினைகளுள் ஒன்று; conjunction of a week day with certain date; considered inauspicious. "ஆன் பெரியோர் பழமையாய் வந்த நேயமதை யகல்வதே தத்தயோகம்" *(திருவேங்.சத. 39).*

*[தம்தம் → தத்தம் + ஓகம் → தத்தவோகம்]*

**தத்தவோமம்** *tatta-v-ōmam,* பெ. (n.) பிள்ளையை மகவுக்கொடையாகப் பெறும் போது, தீவார்த்துச் செய்யப்படும் வேள்விச் சடங்கு; an oblation in fire performed at the adoption of a son (செ.அக.).

*[தற்று - நீர்வார்க்கை. தற்று → தற்றம் → தத்தம் + ஓமம்.]*

**தத்தளங்கெனல்** *tattaḷaṅ-k-eṉal,* பெ. (n.) மத்தளவொலிக் குறிப்பு; onom. expr. signifying drum-beat. "தத்தளங்கென்றே பரதஞ் சாதிப்ப" *(கடம்ப. உலா. 107).*

*[தத்தளம் + எனல்]*

**தத்தளபஞ்சமம்** *tattaḷa-pañjamam,* பெ. (n.) மருதப்பண் வகை (பிங்.); an ancient melody-type of the marudam class.

*[தத்தளம் + பஞ்சமம்.]*

**தத்தளம்** *tattaḷam,* பெ. (n.) கட்டடத் தளங்களின் நெகிழ்ந்த நிலை (இ.வ.); loose or spoiled condition of floor, terrace, etc.

*[தத்தம் + அளம் → தத்தளம்.]*

**தத்தளி-த்தல்** *taṭṭaḷi-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* எதிர்பாராத நேர்ச்சியில் (விபத்து) அகப்பட்டுத் திகைத்தல்; to struggle for life, to gasp for breath, as a drowning person; to be at one's wit's end; to be greatly agitated. "ஒன்னார்கள் முறையிடத் தத்தளிக்கப் பொரும்" *(தனிப்பா, I: 355). 2.* பஞ்சம் முதலியவற்றால் வருந்துதல் (இ.வ.); to be in great straits, as persons in times of drought, famine or epidemic. அடைமழை பெய்ததால் மக்கள் வீடுகளை இழந்து தத்தளிக்கின்றனர் *(உ.வ.). 3.* மனங் கலங்குதல்; to be agitated in mind. *4.* மூச்சுத் திணறல்; to gasp for breath, to struggle for life. நீரில் தத்தளித்து மூழ்க இருந்தவரை மீனவர்கள் காப்பாற்றினர் *(உ.வ.).* புயலில் சிக்கிக் கப்பல் தத்தளித்தது *(உ.வ.).*

தெ. தத்தரில்லுபடு; க. தத்தளிசு

*[தத்து + அளி-.]*

**தத்தளிப்பு** *tattaḷippu*, பெ. (n.) 1. உயிர் தப்பவேண்டித் திகைக்கை; struggling for life. 2. மனங்கலங்குகை; perturbation, agitation. பள்ளிக்குச் சென்ற பிள்ளை, உரிய நேரத்தில் திரும்பாமை கண்டு, அன்னையின் உள்ளத் தத்தளிப்பிற்கு அளவே இல்லை (உ.வ.).

*[தத்தளி → தத்தளிப்பு.]*

**தத்தறிவு** *tattaṟivu*, பெ. (n.) காலவேறுபாடு, அகவைவேறுபாடு, நோயின்தன்மை ஆகிய வற்றை உணர்தல்; the knowledge of timely warning of the great complications likely to happen in the physical state of the doshas at the different periods of the year and at the different ages of the patient and the stages of the disease.

*[தத்து + அறிவு.]*

**தத்தன்** *tattaṉ*, பெ. (n.) 1. ஆண்பாற் பெயர்ச் சொல்; masculine proper name. "தத்தா இவர் நமர்" (பெரியபு.). 2. மகவுக்கொடைப் பிள்ளை; adopted son. "தத்தன் சகோடன்" (ஏலா. 31).

*[தத்து + அன். தத்து = மகவுக்கொடை. 'அன்' - ஆண்பாற் பெயரீறு.]*

**தத்தனம்** *tattaṉam*, பெ. (n.) இவறன்; miser.

*[தத்து + அனம். (ஒ.நோ.) மெத்தனம். 'அனம்' சொல்லாக்க ஈறு.]*

**தத்தனேரி** *tattaṉēri*, பெ. (n.) மதுரை மாவட்டத்திலுள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர்; an historical place in Madurai Dt.

*[தத்து + நரி = தத்தநரி → தத்தனேரி]*

மதுரை மாவட்டத்தின் தென்பகுதியில், இவ்வூர் அமைந்துள்ளது. கி.பி. 862 முதல் 885 வரை பாண்டியநாட்டை இரண்டாம் வரகுணவருமன் கோலோச்சியதாக, வரலாற்று வல்லுநர் கருதுகின்றனர். கல்லா மனத்தைக் கனிவிக்குந் திருவாசகமியற்றிய, மணிவாசகப் பெருமான், வரகுணரின் அமைச்சராவார். நரியைப் பரியாக்கிய நிகழ்வு, தத்தனேரியில் நிகழ்ந்ததாகத் திருவிளையாடற் புராணம் புகலும். மணிவாசகருந் தம் பாடலில் "நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்து" என்று, குறித்துள்ளார்.

இவ்வூருக்கு முதற்கண் அமைந்த பெயர் தத்துநரி என்பதாகும். இதுவே காலப்போக்கில், தத்துநரி → தத்தனேரியாக மாறியதென்பர்.

**தத்தா** *tattā*, பெ. (n.) புல்லுருவி (புல்லூரி); parasite.

**தத்தாங்கி** *tattāṅgi*, பெ. (n.) 1. சிறு குழந்தைகள் கைகொட்டுகை (இ.வ.); clapping of hands by children. 2. சிறுமியர் கைகொட்டிப்பாடும் ஒருவிளையாட்டு (யாழ்ப்.); a girls game of clapping hands and singing.

மறுவ. சப்பாணி கொட்டல்

*[தத்து → தத்தாங்கி = தத்துத்தத்தென்று சிறுகை நீட்டி, குறுகுறு நடந்து, தளர்நடை பயிலுதல், குழவிப்பருவத்திற் குரிய இயல்பாகும். இஃதும், ஒலிக்குறிப்பு வேரடியினின்று பிறந்த சொல்லாகும்.]*

**தத்தாத்திரயன்** *tattāttirayaṉ*, பெ. (n.) அத்திரியின் மகனும், திருமாலின் தோற்றரவுமான ஒரு முனிவன்; a sage, son of attiri, considered an incarnation of Tirumāl. "தத்தாத்திரயனாய் . . . அத்திரிக்கு நன்மகனென வுதித்து" (பாகவ. முதற். மாய வனமி. 26) (செ.அக.).

**தத்தாத்துமன்** *tat-t-āttumaṉ*, பெ. (n.) தானாகவே மகவுக்கொடையானவன்; son self-given, one who offers himself of his own accord to be adopted (R.F.).

*[தத்து + ஆத்துமன் - மனம்விரும்பி, பிறர் வீட்டிற்கு மகனாகச் சென்றவன்]*

**தத்தாரி** *tattāri*, பெ. (n.) கண்டபடி திரிபவ-ன்-ள் (இ.வ.); a wanton, self-willed person, vagabond.

*[தத்து → தத்தாரி]*

தத்தித்தாவிச் செல்லுதல், ஒழுங்கின்றிச் செல்லுதல்.

கால்போன போக்கில், குழவி நடைபயில்வது போன்று, வாழ்க்கையில் வாழும்வழி தெரியாது, குறிக்கோள் ஏதுமின்றி, வீணே சுற்றித்திரிபவன்.

**தத்தி**[1] *tatti*, பெ. (n.) கொடை (யாழ்.அக.); gift.

*[தத்து → தத்தி]*

**தத்தி**[2] *tatti*, பெ. (n.) சுறுசுறுப்பில்லாதவ-ன்-ள்; lazy person.

*[தடி → தத்தி. ட → த திரிபு. (ஒ.நோ.) ததிப்பயல் → தத்திப்பயல்.]*

**தத்தி**[3] *tatti,* பெ. (n.) *1.* பகுதி; part. *2.* தொகுதி; bunch.

**தத்திகாரம்** *tatti-gāram,* பெ. (n.) பொய் (பிங்.); lie, falsehood.

*[தந்து = உட்டுளை, உள்ளீடற்றல் உண்மையற்றது. துந்தி → துத்தி → தத்தி + காரம் – தத்திகாரம்.]*

**தத்திசத்திவிடங்கி** *tatti-šatti-viḍaṅgi,* பெ. (n.) இராசஇராசசோழனுடைய மனைவி; the wife of Rāja Rāja Cholan.

**தத்திதம்** *tattidam,* பெ. (n.) பெரும்பான்மை பெயர்ச்சொல்லின் மேல்வரும், விகுதி (தொல். விருத். முதற்: 55); affix forming nouns generally from other nouns.

*[தத்தி → தத்திதம்.]*

**தத்திதன்** *tattidaṉ,* பெ. (n.) தத்திதம் பார்க்க; see *tattidam.* "தத்திதன் வேறாமால்" (பி.வி.30).

*[தத்திதம் → தத்திதன்]*

**தத்திதாந்தம்** *tattitāndam,* பெ. (n.) பெயர்ச் சொல்லின் விகுதியைக் கொண்ட பெயர் (பி.வி. 29); nouns formed with the tattidam affix.

*[தத்தம் → தத்து → தத்திதம் + அந்தம் – தன்மைக் குறிக்கும் பெயர்ச்சொல்லின் விகுதி யென்றறிக.]*

**தத்தியம்**[1] *tattiyam,* பெ. (n.) மெய் (யாழ்.அக.); truth.

*[தத்து → தத்தி + அம்.]*

**தத்தியம்**[2] *tattiyam,* பெ. (n.) துகில்வகை (சிலப். 14 108: உரை.); a kind of cloth.

*[தத்தி + அம். "அம்" சொல்லாக்க ஈறு]*

**தத்தியன்** *tattiyaṉ,* பெ. (n.) மெய்யன்; one who talks truth.

*[தம்தம் → தத்தம் → தத்து → தத்தி + அன் – தத்தியன். தத்து – மெய். தத்தியன்– மெய்மையை அறிந்து, மெய்பேசும் மெய்யன்.]*

**தத்திரம்** *tattiram,* பெ. (n.) மறுமொழி (பதில்); answer.

*[தத்தி → தத்திரம்.]*

**தத்திரயமயம்** *tattiraya-mayam,* பெ. (n.) மூன்று உண்மைப் பொருள்களையடக்கியது; that which consists of three realities.

*[தத்திரையம் → தத்திரயம் + மயம்]*

**தத்திருக்கி** *tattirukki,* பெ. (n.) புகையிலை; tobacco.

*[தத்தி + உருக்கி → இருக்கி. எலும்புருக்கி, ஈளை முதலான நோயை யுண்டாக்கும் புகையிலை.]*

**தத்தினம்** *tattiṉam,* பெ. (n.) நாள்தோறும்; daily.

தெ. தத்தினமு

**தத்து**[1]**-தல்** *tattu-,* 5 செ.குவி. (v.i.) *1.* குதித்தல்; to leap, jump, skip, hop. "தத்தாவுறு தடந்தேரினைத் தொடர்ந்தான்" (கம்பரா. நிகும்பலை: 121). *2.* தாவிச்செல்லுதல்; to go by leaps and jumps; to move by jerks and starts, as cockroaches. "தத்திப்புக வரும் பொங்குளைப் புள்ளியன் மாவும்" (பரிபா. 10:14). *3.* தாவி யேறுதல்; to jump over. "ஏற்றுப்பிணை செருத்திற் றத்துபு" (கலித். 103:34). *4.* அடியால் அளத்தல்; to measure, as in pacing. "ஞாலந் தத்தும் பாதனை" (திருவிருத். 79). *5.* ததும்புதல்; to be agitated; to heave, shake, as water in a jar. "தத்து நீர்க்கடல்" (கம்பரா. படைத்தலைவ: 54). *6.* பரவுதல்; to spread. "தத்தரி நெடுங்கண்" (மணிமே. 2:7). *7.* ஒளி முதலியன வீசுதல்; to be emitted, as lusture. "தத்தொளி மணிமுடி." (சீவக: 144).

ம. தத்துக

*[தத்தி → தத்து-.]*

**தத்து**[2] *tattu,* பெ. (n.) *1.* தாவி நடக்கை; springing forward, hopping, moving by jerks, as cockroaches, as cattle tied by the forefeet. *2.* மனக்கவலை; anxiety. "தத்துற லொழி நீ" (கம்பரா. மிதிலைக்: 125). *3.* பிறப்பியத்தின்படி (சாதகத்தில்) நேரும் இடுக்கண்; peril, misfortune, critical period of one's life, as shown by the horoscope. *4.* தவறு; mistake, error. "தத்தின்றி யின்று னியல்புள்ளவாறு தமிபேனுணர்ந்து (விநாயகபு: 82. 4). *5.* வாய்க்காலின் குறுக்கே இடும் அணையில் நீர், சிறுகப் பாய்வதற்காகக் குடைந்த துவாரம் (நாஞ்.); a small opening in a dam thrown across a canal,



தத்துக்கிளி



தவிட்டுப்புறா



தவிட்டுச் சிலம்பன்



தண்ணீர்க்கோழி



தாழைக் கோழி



தாமரைஇலைக் கோழி

through which a small quantity of water is allowed to flow during the drought season.

*க. தத்து*

*[தத்தி → தத்து-.]*

**தத்து**[3] *tattu,* பெ. (n.) பூச்சிக்கடியாலாகிய தடிப்பு (இ.வ.); blotch, slight swelling, as from the bite of an insect.

**தத்து**[4] *tattu,* பெ. (n.) *1.* மகட்கொடை (தத்1); adoption. "தத்துக் கொண்டாள் கொலோ தானே பெற்றாள் கொலோ" (திவ். பெரியாழ். 2: 1: 7). *2.* தத்துப்பிள்ளை பார்க்க: see *tattu-p-piḷḷai.* இவன் அவருக்குத் தத்து (உ.வ.).

*க. தத்து*

*[தன் → (தா்) → தா → த. தரு = தருகிறான், தருவான், தருகை, தரவு. தா = தானம். த = தந்தான், தத்தம் → தத்து (வ.வ. 175). ஒருகா. தற்று → தத்து = மகட்கொடையில் கையால் நீர்வார்த்துத் தருதல்.]*

**தத்துக்கல்** *tattu-k-kal,* பெ. (n.) அருவிநீர் தத்தி விழுவதற்கான கல் (வின்.); stone obstructing waterfall and making it leap anew.

*[தத்து + கல்]*

**தத்துக்கிளி** *tattu-k-kiḷi,* பெ. (n.) *1.* வெட்டுக்கிளி (வின்.); grasshopper, locust. *2.* கிளிப்பிள்ளை (வின்.); parrot. *3.* பிள்ளைகளின் விளையாட்டு வகை (இ.வ.); game of leapfrog.

*[தத்து + கிளி]*



**தத்துகபித்தநோய்** *tattuga-pitta-nōy,* பெ. (n.) உடலில் தடித்தலுடன், நமைச்சல், நாக்கு, வாய் உலரல், மயிர்ச்சிலிர்ப்பு, சுரம், வியர்வை, இருமல் முதலியவைகளை உண்டாக்குமோர் பித்தநோய்; a form of bilious disease marked by pain of entire body with itching, parched tongue and mouth, horripillation, fever, sweating cough, etc.

*[தத்துரு + பித்தநோய்]*

**தத்துநீர்** *tattu-nīr,* பெ. (n.) கடற்கரையைத் தொட்டுக்கொண்டு, அலைபுரளும் கடல்நீர்; sea-water dashing against the shore. "தத்துநீர் வரைப்பின் கொற்கைக் கோமான்" (சிறுபாண்.) (செ.அக.).

*[தத்து + நீர்]*

**தத்துப்பத்திரம்** *tattu-p-pattiram,* பெ. (n.) மகட்கொடையை உறுதி செய்யும் ஆவணம் (இவ.); deed of adoption, document evidencing the fact of an adoption.

*[தத்து + பத்திரம்]*

Skt. pathra → த. பத்திரம்

**தத்துப்பித்துஎன்று** *tattu-p-pittu-eṉṟu,* கு.வி.எ. (adv.) முன்னுக்குப்பின் முரணாக; babblingly. அவரிடம் போய் தத்துப்பித்தென்று பேசிக் காரியத்தைக் கெடுத்துவிட்டான் (உ.வ.).

*[தத்து + பித்து + என்று - தத்துப்பித்து என்று. ஒரு வேலையை முறைமாற்றிச் செய்து, குழப்புதல்]*

**தத்துப்பிள்ளை** *tattu-p-piḷḷai,* பெ. (n.) மகட்கொடை எடுத்த மகன்; adopted son (செ.அக.).

*[தத்து + பிள்ளை]*

**தத்துப்புத்திரன்** *tattu-p-puttiraṉ,* பெ. (n.) தத்துபிள்ளை பார்க்க; see *tattu-p-piḷḷai* (செ.அக.).

*[தத்து + புத்திரன்]*

Skt. putra → த. புத்திரன்

**தத்துப்புரட்சி** *tattu-p-puraṭci,* பெ. (n.) (கணிய) காலச்சக்கர முறையில் கோள்களின் போக்கு ஒழுங்குதவறி இயல்வது (வின்.); irregularities by gaps or otherwise in the sequence of planetary regnal periods in the method of kāla-c-cakkaram.

*[தத்து + புரட்சி]*

**தத்துப்பூச்சி** *tattu-p-pūcci,* பெ. (n.) *1.* பழுப்பு நிறப்புள்ளிகளையுடைய தாவிச் செல்லும் ஒருவகைப் பூச்சி (வின்.); brown-spotted leaping insect with long antennae. *2.* விட்டில் பூச்சி; locust.

மறுவ. தத்து வெட்டியன், தத்துவண்டியன்

*[தத்து + பூச்சி]*

**தத்துமடை** *tattu-maḍai,* பெ. (n.) நீர் வாய்க் காலின் பக்கத்து மடை (வின்.); side-course in a water channel.

*[தத்து + மடை]*

**தத்துமீள்**[1]**-தல் (தத்துமீட்டல்)** *tattumīḷ-, 10* செ.குன்றாவி. (v.t.) நோயாளியை இக்கட்டில் (ஆபத்தில்) இருந்து காத்தல் (யாழ்ப்.); to save one from a critical, ill-patient.

*[தத்து + மீள்-.]*

**தத்துமீள்**[2]**-தல் (தத்துமீட்டல்)** *tattumīḷ-, 16* செ.கு.வி. (v.i.) கண்டம் என்று கருதப்பட்ட காலத்தைக் கடத்தல் (வின்.); to pass a critical period, indicated as critical in one's horoscope.

*[தத்து + மீள்-.]*

**தத்துரு** *tatturu,* பெ. (n.) *1.* தடிப்பு; swelling. *2.* ஆமை; tortoise. *3.* ஒருவகை குட்டம்; a kind of leprosy. *4.* தத்துருகுட்டம் பார்க்க; see *tatturu-k-kuṭṭam. 5.* படர்தாமரை; ring-worm.

*[தத்து + உரு]*

**தத்துருக்கினம்** *tatturu-k-kiṉam,* பெ. (n.) சீமை (சேய்மை) யகத்தி; foreign agatti ring-worm plant.

*[தத்துரு + உருக்கினம்.]*

**தத்துருகுட்டம்** *tatturu-kuṭṭam,* பெ. (n.) சிவந்து, தடித்துப் பின் கறுத்துத் தடிக்கும், ஒரு வகைக் குட்டநோய் (தொழுநோய்); a kind of leprosy marked by reddish swelling and ulceration in several parts of the body.

*[தத்துரு + குட்டம்.]*

**தத்துருநோய்** *tatturu-nōy,* பெ. (n.) சுணைத் தடிப்பு (சீவரட். 149); nettle-rash, urticaria.

*[தத்துரு + நோய்]*

**தத்துருபித்தநோய்** *tatturu-pitta-nōy,* பெ. (n.) உடல் முழுவதும் அரிப்பு ஏற்பட்டு, மிகு தடிப்பு, இருமல், காய்ச்சல், நாக்குளறுகை, மயிர்சிலிர்க்கை முதலானவற்றை உண்டாக்கும் நோய்; a form of bilious disease marked by pain of entire body with itching parched tongue and mouth, horripillation, fever, sweating, cough, etc.

*[தத்தம் → தத்து → தத்துரு + பித்தம் + நோய் - தத்துருபித்தநோய்]*

**தத்துருமாரி** *tatturumāri,* பெ. (n.) கொக்கிலித்திப் புல்; a kind of grass.

*[தத்துரு → தத்துருமாரி.]*

**தத்துரூக்கினம்** *tatturūkkiṉam,* பெ. (n.) குட்டத்தைக் (தொழுநோய்) குணப் படுத்துகை; remeding or curing leprosy.

**தத்துவக்கட்டளை** *tattuva-k-kaṭṭaḷai,* பெ. (n.) உடற்கோட்பாடுகளைப் பற்றிய நூல்; book on the function of the 96 constitutents principles of the body.

*[தத்து + அம் + கட்டளை - தத்துவக் கட்டளை. உடலின் அடிப்படை மெய்மைகளை உரைக்கும் நூல்.]*

**தத்துவக்கடுதாசி** *tattuva-k-kaḍu-dāsi,* பெ. (n.) *1.* செயலுரிமை ஆவணம்; power of attorney. *2.* பதிலி ஆவணம்; writ or authority of proxy. *3.* முறைமன்றத்திலிருந்து அதிகார முறையிற் பிறப்பிக்குங் கட்டளை; பிடியாணை; warrant.

*[தத்துவம் + கடுதாசி]*

**தத்துவக்கியானம்** *tattuva-k-kiyāṉam,* பெ. (n.) உண்மை விளக்கம்; knowledge of truth through knowledge or insight into the true principles of philosophy.

**தத்துவக்கினி** *tattuvakkiṉi,* பெ. (n.) செரிமானப் பொருள் வகை; enzyme.

**தத்துவக்கருவி** *tattuva-karuvi,* பெ. (n.) திறமிக்க உடல்; a strong body.

**தத்துவங்கு** *tattuvaṅgu,* பெ. (n.) பரங்கிப் பாடாணம்; a kind of arsenic.

**தத்துவசதுக்கம்** *tattuva-šadukkam,* பெ. (n.) மணமேடை (இவ.); marriage dais.

*[தத்துவம் + சதுக்கம்.]*

**தத்துவசாத்திரம்** *tattuva-šattiram,* பெ. (n.) உடல், அறிவு முதலானவற்றின் உண்மையினை உரைக்கும் நூல்; philosophy, as the science, including ontology, epistemology etc.

*[தத்துவம் + சாத்திரம்.]*

**தத்துவசாலி** *tattuva-šāli,* பெ. (n.) செயற் படுத்தும் உரிமை பெற்றோன் (யாழ்.அக.); one who has obtained power of attorney.

*[தத்துவம் + சாலி]*

**தத்துவஞானம்** *tattuva-ñāṉam,* பெ. (n.) முடிவான உண்மையுணர்வு (குறள், 36, அதி. உரை.); knowledge of the ultimate truth.

*[தத்துவம் + ஞானம். முடிவான வரையறுத்த உண்மை, மேலான பரம்; பரம்பொருள் பற்றிய மெய்மையான அறிவு.]*

**தத்துவஞானி** *tattuva-ñāṉi,* பெ. (n.) முடிவான உண்மையை உணர்ந்தோன்; one who has realised the ultimate truth. "திருக்கூத்துக்கிசைய மகிழ்ந்திசை பாடுந் தத்துவஞானி" (பாரத. இராசசூய. 11).

*[தத்துவம் + ஞானி. மேலான பரம் பொருளை மெய்மையாக, முழுதும் உணர்ந்து அறிந்தவன்.]*

**தத்துவண்டியன்** *tattu-vaṇḍiyaṉ,* பெ. (n.) ஒருவகைப் பூச்சி (யாழ்.அக.); a kind of insect.

*[தத்து + வண்டியன்.]*

**தத்துவதி** *tattuvadi,* பெ. (n.) ஒருவகைக் கழு; a kind of punishment mast.

*[தத்து + வதி]*

**தத்துவநூல்** *tattuva-nūl,* பெ. (n.) தத்துவ உண்மைகளையுரைக்கும் நூல்; a treatise on philosophical truths.

*[தத்துவம் + நூல். வாழ்வியல் மெய்மையை ஆதன் உணர்ந்து மேற்கொள்ளும்வண்ணம் உரைக்கும் நூல்.]*

**தத்துவப்பிரகாசம்** *tattuva-p-piragāšam,* பெ. (n.) தத்துவப்பிரகாசர் இயற்றிய சைவக்கொண் முடிவு நூல்; a Šaiva treatise by Tattuva-p-piragāšar.

*[தத்துவம் + பிரகாசம். ஆதனின் தன்மையை, வாழ்வியல் மெய்மையை, உண்மையாக உணர்ந்து மேற்கொள்ளும் ஒழுகலாறுகளையுரைக்கும் நூல். ஆதன் இறைவன், இவ் விரண்டிற்குமுரிய உறவுகளையும் விளக்கும் நூலென்றறிக.]*

**தத்துவப்பிரகாசர்** *tattuva-p-piragāšar,* பெ. (n.) கி.பி. 16-ஆம் நூற்றாண்டிலிருந்தவரும், தத்துவப்பிரகாசம் முதலிய சிவக்கொண் முடிவு நூல்களை இயற்றியவருமான சைவத் துறவி; a Šaiva šaint and poet of the 16th C., author of Tattuva-p-piragāšam and other works on Šaiva philosophy.

**தத்துவப்பொருள்** *tattuva-p-poruḷ,* பெ. (n.) மெய்ப்பொருள் பார்க்க; see *mey-p-poruḷ.*

*[தத்துவம் + பொருள்]*

**தத்துவபோதகன்** *tattuva-pōdagaṉ,* பெ. (n.) மெய்ப்பொருளைக் கற்பிப்பவன்; teacher of philosophy (செ.அக.).

மறுவ. தத்துவஆசான், தத்துவஆசிரியன்

*[தத்துவம் + போதகன் - தத்துவபோதகன். மெய்மையை, இறையுண்மையை ஆதனுக்கு உரைப்பவன். மெய்மையாம் உழவைச் செய்து, வாழ்வாங்கு வாழவைக்கும் வாழ்வியல் உண்மையை, ஆசிரியனாக இருந்து உரைப்பவன்.]*

**தத்துவம்** *tattuvam,* பெ. (n.) 1. உண்மை; truth. தமிழுக்கு இருவர் தத்துவத்திற்கு ஒருவர் (பழ.). 2. மெய்மை அல்லது பொருளின் மூலவியல்பு; reality. 3. பொருள்; substance. 4. பொருள்களின் குணம்; essential nature of things, quality. 5. இயல்பான அமைப்பு; constitution. 6. உடல் வலிமை, ஆற்றல் (யாழ்.அக.); bodily, vigour strength. 7. புலன்களின் ஆற்றல்; sexual energy or potency. 8. அதிகாரம் (யாழ்ப்.); power, authority. 9. தத்துவக்கடுதாசி பார்க்க; see *tattuva-k-kaḍudāši.*

[தம்தம் → தத்தம் → தத்து + அம் – தத்துவம். 'வ' உடம்படுமெய். 'அம்' சாரியை. 'தம்' என்னும் வேரடி, சொந்தம் அல்லது உடைமை யென்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. ஆதனுக்கு (ஆன்மா), எஞ்ஞான்றும் வேண்டப்படுவது, உண்மைத் தன்மையே.

உண்மைத் தன்மையே, ஆதனின் மெய்மையான உடைமை; உண்மையாக உள்ளுபவர்தம் உள்ளத்தில்தான் மேலான பரம்பொருள் வீற்றிருக்கின்றான். பரம்பொருள் உள்ளத்தின் கண்ணே. வதிவதால்தான் "உள்ளம் பெருங்கோயில்" என்று திருமூலர் உரைத்தார். இந்த உள்ளத்தின் உள்ளே மெய்யாம் பரம் பொருள், நிலைபெற்றுத் திகழ்வதால், வள்ளுவரும் யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும் வாய்மையின் நல்லபிற (குறள், 300) என்றார். உடல் ஆற்றல், உடல்வலிமை, உடம்பினுக்கே யுரிய உடைமையாகும். உடலைஆற்றலுடன் வளர்த்தால்தான், ஓங்குபுகழுடன் மன்பதையில் சிறக்கலாம். அதனால்தான் திருமூலர் உடலை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன் என்கிறார். இத்தகு ஈடில்லாச் சிறப்புப்பெற்ற உடலை, இனிது ஓம்பினால்தான் இறைவன் உறையும் பேரின்பமாக உள்ளம் மாறும். உடம்பினுக்குள்ளே உத்தமன் உறைவான்.

உடலினை மேலான, பரம்பொருள், உடைமையாகக் கொண்டுள்ளதால், உடலுக்கு வலிமை கூடுகின்றது. செ.ப.க. அகரமுதலியும் தத்துவம் என்னுஞ் சொல்லிற்கு உண்மை, பொருளின் தன்மை, மெய்மையின் மூலவியல்பு, இணைவிழைச்சுப் புலன்களின் வலிமை, மேலாம் பரத்தின் மெய்மைநிலை, உடலுக்கே சொந்தமான ஆற்றல் போன்ற பொருள்களைக் குறித்துள்ளது.

வடமொழியாளர் காட்டும் 'தத்' (that) (அது) என்னும் 'வேரடி', படர்க்கைப் பொருளையே சுட்டுகிறது. பொருளின் உண்மை நிலையையோ, மேலான பரம்பொருளின் உண்மைத்தன்மையையோ, அல்லது இணைவிழைச்சு புலன்களின் ஈடில்லாத் தன்மையையோ, உடல் வலிமையையோ ஓரிடத்துஞ் சுட்ட வில்லை. தமிழில் ஒருமையைக் குறிக்க தம்தம் (தந்தம்) என்றும், பன்மையைக் குறிக்கத் 'தத்தம்' என்றும் வருவது இயல்பே.

தமிழில் குறிக்கப்பெறும் பொருள் என்னுஞ்சொல் பால்பகா அஃறிணையைக் குறிப்பதாகும். இஃது ஒருமைக்கும் பன்மைக்கும் பொது என்னும் பொருண்மைத்து; மேலையாரிய மொழிகள் தோற்றநிலையில் இருந்த ஞான்று, ஒண்தீந்தமிழ், கற்றுத்துறை போகிய புலமக்களின் ஆய்வுநிலையில் இருந்தது. மணிவாசகரும், அருளியல்துறை (இறையியல்துறை) ஆய்வுநிலையில் இருந்த பான்மையினை, "ஒண்தீந்தமிழின் துறை" முதலான பல்வேறு துறைகளை, திருக்கோவையாரில் குறித்துள்ளார்.

"சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்து
மென் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலினாய்ந்த
வொண் டீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோவன்றி
யேழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடவரைத் தோட்கென்
கொலாம்புகுந் தெய்தியதே"

இப்பாடலின் மூலம், ஒண்தீந்தமிழின் துறை என்று பொருளிலக்கணத்தையும், 'ஏழிசைச்சூழல்' என்று இசைத்தமிழையும், இறுதிவரியில் அகப்பொருட்டுறையையும், மணிவாசகர் எடுத்துக்காட்டுகின்றார்.

தமிழ்மொழியில், தத்துவம் என்னுஞ் சொல், இறைவனுக்கும், ஆதனுக்கும் உரிய வாழ்வியல்உறவை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. மேற்குறித்த பாடல் தலைவன் – தலைவியர்தம் அக வாழ்வினையும், இணைக்கும்பான்மையில் அமைந்துள்ளது.

*தமிழில் உள்ள தத்துவ நூல்கள், இயல்பாக மறைந்திருக்கலாம்; அல்லது வடமொழியாளரால் மறைக்கப்பட்டு இருக்கலாம் என்று மொழிஞாயிறு கருதுகின்றார். இதுபற்றி அவர், வடமொழி வரலாறு என்னும் நூலில் மேலும் விளக்குங்கால்,*

*"வடமொழி பேச்சுமொழி அன்று; பிராமணர் தம் கூட்டரவியல் மேம்பாட்டைப் போற்றிக்காக்க, இன்றும், வடமொழியில், வேதவியாகரணம் பற்றிய கட்டுரை, வரவேற்பிதழ், திருமுகம், நூல் போன்றவை இயற்றித் தமது ஒப்புயர்வற்ற மொழிவெறியை, உலகுக்கு உணர்த்தி வருகின்றனர்.*

*கதிரவன் கரந்தபின் திங்கள் திகழ்வது போல், தென்னூல்கள் மறைந்தபின், அல்லது வடமொழியாளரால் மறைக்கப் பட்ட பின், வடமொழிச் சொற்களும், வியாகரணங்களும், தமிழகத்தில் தழைத்தன. சிவனியமும் மாலியமும் தமிழருக்கே யுரிய, தனிப்பெருஞ் சமையங்களாகும்" என்று கூறுகின்றார். 'தத்' (that) எனும் வேரடி பற்றி மேலுங் கூறுங்கால்,*

*வடமொழிப் பட்டாங்கு நூல்களில், பெருந்தொடரியம் (மஹாவாக்ய) எனப் பறைசாற்றப் பெறும் தத் த்வம் அஸி என்னும் சொற்றொடரே, முற்றும் தமிழ்த் திரிபாயிருந்து, வடமொழியாளரைத் தலைகவிழச் செய்கிறது. தான் → தத்; நூம் → நும் → தும் → த்வம், இரு → இஸ் (தியூத்) → எஸ் (இலத். கி.) → அஸ் (வ.), தி (முன்னிலையொருமையீறு) → ஸி (வ.வ. 156).*

*மேற்குறித்தவற்றால், 'தத்துவம்' தூய தென்சொல் என்று துணியலாம். தம்தம், தத்தம் என்னும் வேரடியினின்று கிளைத்தனவெனலாம். நீண்ட தொடர்ச்சியான, தமிழ்மொழியின் வரலாற்றை, மேலையாரியர் மறைத்துள்ளதால், தத்துவம் முதலான தமிழ் மொழிக்குப் பொருத்தமான சொற்களை, நிறுவுதல் தவறில்லையென்றறிக.]*

**தத்துவயம்** *tattuvayam*, பெ. (n.) குருணி; one marakkal or 2 madras measures.

**தத்துவராயர்** *tattuva-rāyar*, பெ. (n.) பதினாறாம் நூற்றாண்டிலிருந்தவரும், பாடுதுறை முதலிய மெய்ந்நூல்களை இயற்றியவருமான ஆசிரியர்; a Śaint, author of Pāduturai and other philosphical works in Tamiḻ, 16th C. (செ.அக.).

*[தத்துவம் + அரையர் → ராயர்.]*

**தத்துவவடிவம்** *tattuva-vaḍivam*, பெ. (n.) மெய்வடிவினை ஆதன் காணும் ஒரு பட்டறிவு நிலை; a spiritual experience of the soul in which it is cognizant of the operations of the 36 tattuvas or reals.

*[தத்தம் → தத்து + அம் + வடிவம் - தத்துவ வடிவம்.]*

**தத்துவவாதம்** *tattuva-vādam*, பெ. (n.) இயற்கையே இறைவனென்னும் ஏரணம்; a philosophical discussion, that nature is God.

*[தத்தம் → தத்துவம் + வாதம் - தத்துவ வாதம்]*

**தத்துவவாதி** *tattuva-vādi*, பெ. (n.) இயற்கையே இறையென்னுங் கொள்கையை உடையவன் (வின்.); one who professes that nature is God.

*[தத்துவம் + Skt. வாதி]*

**தத்துவவிளக்கம்**[1] *tattuva-viḷakkam*, பெ. (n.) மெய்ப்பொருளை விளக்கும் ஒரு நூல்; a book on phylosophical explanation.

*[தத்துவம் + விளக்கம்.]*

**தத்துவவிளக்கம்**[2] *tattuva-viḷakkam*, பெ. (n.) உயிரிகளின் இயல்பினை விளக்கும் நூல் (உயிரியல்); the science dealing with the function of living beings.

*[தத்துவம் + விளக்கம்]*

**தத்துவன்** *tattuvaṉ*, பெ. (n.) பேருண்மையா யுள்ள கடவுள்; God as the ultimate reality. "தத்துவனைத் தேனைப் பாலை" (தேவா. 12: 1).

*[தத்தம் → தத்து + அன்]*

**தத்துவாக்கினி** *tattuvākkiṉi*, பெ. (n.) உயிருக்கு அடிப்படையான பொருள்; a substance

consisting the books of living matter of animals and plants.

**தத்துவாகமம்** *tattuvāgamam,* பெ. (n.) உடற் கூற்றியல்; anatomical physiology.

*[தத்துவம் + ஆகமம்.]*

**தத்துவி** *tattuvi,* பெ. (n.) தத்துவங்களையுடைய உருவும், அருவுமாகிய உயிர்கள்; souls. "தத்துவம் பலவாய் தத்துவி பலவாய் இத்தகை விளங்கும் என்தனித் தந்தையே" (அருட்பா. 4615, 1220).

*[தத்தம் → தத்து + இ]*

**தத்துவெட்டியன்** *tattu-veṭṭiyaṉ,* பெ. (n.) தத்துப்பூச்சி (யாழ்ப்.); brown-spotted leaping insect with long antennae.

*[தத்து + வெட்டியன்]*

**தத்துவெடியன்** *tattu-veḍiyaṉ,* பெ. (n.) தத்து வெட்டியன் (யாழ்.அக.) பார்க்க; see *tattuveṭṭiyaṉ.*

மறுவ. தத்துப்பூச்சி

*[தத்து + வெட்டியன் → வெடியன்]*

**தத்துவோன்மதம் (தத்துவஉன்மதம்)** *tattuvōṉ madam,* பெ. (n.) 1. மருள்; religious excitement when crying a loud in praise of God. 2. மருள் பார்க்க; see *maruḷ.*

*[தத்துவம் + உன்மதம்.]*

**தத்துறு-தல்** *tatturu-,* 2 செ.குவி. (v.i.) 1. தத்தி வருதல்; to spring or leap forward, as a waterfall. "தத்துற்று நன்பொன் மணிநிறங் கிளர" (திருமுரு. 305). 2. வருத்தப்படுதல்; to be disturbed in mind; to suffer, as from difficulties. "தத்துற லொழிநீ" (கம்பரா. மிதிலைக். 125). 3. நேர்தல்; to happen, befall. "நண்ணா நாளவை தத்துறு மாகில்" (திவ்.பெரியாழ். 5. 1:6).

*[தத்து + உறு-.]*

**தத்துறு-தல்** *tatturu-,* 18 செ.குன்றாவி. (v.t.) கிட்டுதல்; to approach, meet. "சொல்லா யானுன்னைத் தத்துறுமாறே" (திவ். பெரியதி. 5. 1:7).

*[தத்து + உறு-.]*

**தத்தூரன்** *tattūraṉ,* பெ. (n.) தவளை; frog.

*[தத்து + ஊரன் - தத்தூரன்]*

**தத்தூரி** *tattūri,* பெ. (n.) 1. பொன்னூமத்தை; yellow flowered datura. 2. ஊமத்தை; datura.

*[தத்து → தத்தூரி.]*

**தத்தூரித்தைலம்** *tattūri-t-tailam,* பெ. (n.) ஊமத்தைநெய்மம்; medicated oil extracted form the seeds of datura.

*[தத்தூரி + தைலம்]*

**தத்தெடு-த்தல்** *tatteḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) மகவுக்கொடை பெறுதல் (கொ.வ.); to adopt.

*[தத்து + எடு-.]*

**தத்தெறி-தல்** *tatteri-,* 4 செ.குவி. (v.i.) 1. நீரில் தத்திச் செல்லும்படி ஓட்டுச் சில்லெறிதல்; to play ducks and drakes. 2. அலையெழுப்புதல்; to cast up waves, as the sea.

*[தத்து + எறி-.]*

**தத்தை**[1] *tattai,* பெ. (n.) கிளி; parrot, parakeet, Palaornis. "செவ்வாய்க் கிளியைத் தத்தை யென்றலும்" (தொல். பொருள். 623).

ம. தத்த; H. tōttā.

*[தொத்து → தொத்தை → தத்தை இலையைப் பற்றிக்கொண்டு தொங்கும் கிளி (வே.க. 261)]*

**தத்தை**[2] *tattai,* பெ. (n.) தமக்கை (பிங்.); elder sister.

*[தம் + த் + ஐ → தத்தை.]*

**தத்தை**[3] *tattai,* பெ. (n.) ஊருகை, படருகை; creeping.

*[தொத்தை → தித்தை → தத்தை.]*

**தத்தைமூக்கு** *tattai-mūkku,* பெ. (n.) ஏகம்பச் சாரம் பார்க்க; see *ēgamba-c-cāram.*

*[தத்தை + மூக்கு.]*

**ததகம்** *tadagam,* பெ. (n.) காற்று; wind.

**ததச்சதை** *tata-c-cadai,* பெ. (n.) 1. வாழைமரம்; plantain tree. 2. வாழைத்தண்டு; plantain-stalk.

**ததநம்** *tadanam,* பெ. (n.) கொடை; donation.

**ததம்**[1] *tadam,* பெ. (n.) *வாழைமரம்;* plantain tree.

**ததம்**[2] *tadam,* பெ. (n.) *1. அகலம்;* width. *2. பின்பு;* back. *3. விரிவு;* extension.

**ததர்[1]-தல்** *tadar-,* 4 செ.குன்றாவி. (v.i.) நெரிதல்; to be crushed. "ஊனுடை மல்லர் ததர்ந்த வொலி" *(திவ். திருவாய். 7. 4:5).*

*[தகர் → ததர். க → த-வாக மாறிற்று. ததர்தல் - சிதர்தல்]*

**ததர்[2]-த்தல்** *tadar-,* 4 செ.குன்றாவி. (v.t.) வருத்துதல்; to vex, annoy, trouble. "என்னைத் ததர்த்தாதே நீயுங் குயிலே" *(திவ். நாய்ச். 5, 10).*

*[ததல் → ததர்-.]*

**ததர்**[3] *tadar,* பெ. (n.) *1.* செறிவு; denseness. "சினைத் ததர் வீழ்பு" *(மணிமே. 3: 107).* *2.* கொத்து; cluster, bunch. "சிதர்நனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத் ததர்" *(சிறுபாண். 255).* *3.* சிதறுகை; scattering, sprinkling. "ததர்ப்பட்ட சாந்தமும்" *(கலித். 91).* (செ.அக.).

*[தகு → தகர் → ததர் - செறிவான அறிவு. தகர் → ததர் - பிறர் கருத்தைத் தகர்க்கும் செறிவான அறிவு; செறிந்து அடர்ந்துள்ள பூங்கொத்து. தகர் → ததர்]*

**ததர்ப்பணம்** *tadarppaṇam,* பெ. (n.) கொடுத்துப் பறிக்கை; give and flick.

*[தகர்ப்பு → ததர்ப்பு + அணம். 'அணம்' - சொல்லாக்க ஈறு]*

**ததர்முகம்** *tadar-mugam,* பெ. (n.) தொடக்கம்; beginning.

*[அதர் = வழி, தொடக்கம். அதர் → ததர் + முகம் - ததர்முகம்.]*

**ததல்** *tadal,* பெ. (n.) தளராநிலை (சது); stability, firmness, durability.

*[தக → தத → தது + அல் - ததல். 'அல்' - எதிர்மறை ஈறு.]*

**ததனந்தரம்** *tadaṉandaram,* பெ. (n.) அதன்பின்; after that.

*[ததன் + அந்தரம்.]*

**ததா** *tadā,* பெ. (n.) அப்படி; likewise.

*[ததி → ததா.]*

**ததாகதன்** *tadāgadaṉ,* பெ. (n.) புத்தன் (சூடா.); Buddha.

**ததாகாரம்** *tadāgāram,* பெ. (n.) விரிவாக; extensively.

*[ததா → ததாகாரம்.]*

**ததாமுகம்** *tadāmugam,* பெ. (n.) தொடக்கம்; beginning.

**ததாரி** *tadāri,* பெ. (n.) இதிரக்கிழங்கு (காட்டு கருணைக் கிழங்கு); yam.

*[ததா → ததாரி.]*

**ததி**[1] *tadi,* பெ. (n.) தக்கசமயம்; season, opportunity, suitable time. "ததியுறப் புகுந்து" *(பாரத. அருச்சுனன்றீர். 76).*

தெ. ததி.

*[தக்க → தக → தத → ததி.]*

**ததி**[2] *tadi,* பெ. (n.) தயிர்; curdled milk, curds. "பாலுந் ததியும்" *(கந்தபு. அசுரர்யாக. 70).*

*[ஒருகா. தை → தயிர் → ததி. ஒ.நோ. ஐ - அயிர் (நுண்மை) மை → மயிர் (கரியது) வை - வயிர் (கூர்மை). பை → பயிர் (பசியது). பாலிற்கு உறைமோரிடுதலை உறைகுத்துதல் பிரை குத்துதல் என்பது வழக்கு (வ.வ. 4). தயிர் → தசிர் → ததி. ச, த, ம, வ எனும் உயிர்மெய்யொலிகளை, ஒத்த ஒலியுடையனவென்று, யாப்பருங்கலம் வரையறுத்தலால், இதன் ஓசைத்தன்மையை நுண்ணிதின் உணரலாம். தயிர் → தசிர் → ததிர். ஈங்கு, இறுதி 'ர' கரம் குன்றித் 'ததி' என்று மக்கள் வழக்கில் வந்ததென்றறிக. ஒ.நோ. ய → ச. தோயை → தோசை, நெயவு → நெசவு.]*

**ததி**[3] *tadi,* பெ. (n.) *1.* ஆற்றல்; strength, power, influence. "அவன் ததியுள்ளவன் *(யாழ்ப்.).* *2.* பிசின் (சா.அக.); a kind of resin.

*[தடி → தத்தி → ததி. அறிவு தடித்துள்ளது (உ.வ.)]*

**ததிகமா** *tadigamā,* பெ. (n.) தேற்றான் கொட்டை; water cleaning nut.

**ததிகூர்ச்சிகை** *tadikūrccigai,* பெ. (n.) *1.* தயிர்ச் சோறு; rice mixed curd. *2.* தயிர்ப்பொங்கல்; rice boiled with ghee and curd.

*[தயிர் → தசிர் → ததி + கூர்ச்சிகை → ததிகூர்ச்சிகை]*

**ததிகேடு** *tadikēḍu*, பெ. (n.) *1.* வலியின்மை; weakness, infirmity inability. *2.* செல்வக் குறைவு; want of pecuniary means or influence.

*[ததி + கேடு]*

**ததிசம்** *tadišam*, பெ. (n.) *1.* வெண்ணெய்; butter. *2.* மோர்; butter-milk.

*[ததி → ததிசம். ததி = மோர், தயிர் இவற்றினின்று எடுத்த வெண்ணெய்]*

**ததிசாரம்** *tadišāram*, பெ. (n.) ததிசம் பார்க்க; see *tadišam*.

*[ததி + சாரம்]*

**ததிசி** *tadiši*, பெ. (n.) வைரம்; diamond.

*[ததி → ததிசி]*

**ததிசுவேதம்** *tadi-šuvēdam*, பெ. (n.) மோர்; butter-milk.

*[ததி + Skt. சுவேதம். ததி = மோர்]*

**ததிசோணம்** *tadišoṇam*, பெ. (n.) செங்குரங்கு; red faced monkey.

*[தத்தி → ததி + சோணம்]*

**ததிபத்திரி** *tadipattiri*, பெ. (n.) வாழையிலை; plantain leaf.

*[ததி + பத்திரி]*

**ததிபலம்** *tadipalam*, பெ. (n.) விளா (சங்.அக.); wood apple.

*[ததி → ததிபலம் - நெஞ்சாங்குலைக்கு வலுவினைத் தரும்பழம்]*

**ததிபுனல்** *tadi-puṉal*, பெ. (n.) தயிர்த் தண்ணீர்; water dripping from curd.

*[ததி + புனல்]*

**ததிமண்டம்** *tadi-maṇḍam*, பெ. (n.) ததிசுவேதம் பார்க்க; see *tadi-šuvēdam*.

**ததிமண்டரம்** *tadimaṇḍaram*, பெ. (n.) ஆமணக்கு; caster-plant.

*[ததி + மண்டரம்]*

**ததிமண்டலம்** *tadimaṇḍalam*, பெ. (n.) மோர்; butter-milk.

*[ததி + மண்டலம்]*

**ததிமத்து** *tadimattu*, பெ. (n.) *1.* ஆவின் தயிரைத் துணியில் முடிந்து, உயரக்கட்டி வடித்து எடுத்த நீர்; the fluid dripping from the cow's curd tied in a cloth and hung up. *2.* ததிபுனல் பார்க்க; see *tadi-puṉal*.

*[ததி + மத்து]*

**ததுமல்** *tadumal*, பெ. (n.) ததும்பல்; increase.

*[தகும் → ததும் → ததுமல்]*

**ததிமேரு** *tadimēru*, பெ. (n.) குடைவேல் மர வகை; a kind of tree.

**ததியர்** *tadiyar*, பெ. (n.) அடியார்; devotees. "தமிழ்வேதந் ததியர் பாட" (அஷ்டப். சீரங்கநாயகர். ஊச. 6). (செ.அக.)

**ததியாராதனை** *tadi-y-ārādaṉai*, பெ. (n.) திருமாலடியார்க்கு இடும் விருந்துணவு; feast offered to Thirumāl devotees (செ.அக.).

*[ததி + Skt. ஆராதனை]*

**ததியோதனம்** *tadi-y-ōdaṉam*, பெ. (n.) புளித்த தயிர்ச்சோறு; sour curd rice.

*[ததி + ஓதனம்]*

**ததீசி** *tatīši*, பெ. (n.) அசுரரைக் கொல்வதற்காக வச்சிராயுதமாக்கும் பொருட்டு, தம் முதுகெலும்பைத் தேவர்க்குக் களிப்புடன் கொடுத்த ஓர் முனிவர் (திருவிளை. இந்திரன். 25); a riṣi who willingly gave his backbone to the gods for making vaccira weapon to destroy the ašuras.

**ததீயாராதனம்** *tadīyārādaṉam*, பெ. (n.) ததியாராதனை (நோயிலோ. 19) பார்க்க; see *tadi-y-ārādaṉai*.

*[ததி → ததீ. Skt. ஆராதனம்]*

**ததீயாராதனை** *tadī-y-ārādaṉai*, பெ. (n.) ததியாராதனை பார்க்க; see *tadi-y-ārādaṉai*.

*[ததி → ததீ. Skt. ஆராதனை]*

**ததும்பு-தல்** *tadumbu-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* மிகுதல்; to increase. "போர்ததும்பு மரவம்போல" (பரிபா. 18: 44). *2.* நிறைதல்; to fill, become full. "நீர்மணி தெளித்தனையது ததும்பி" (சீவக. 1566). *3.* நிரம்பி வழிதல்; to

overflow, to heave with fulness. "நீர் ததும்புவன சுனை" (பரிபா. 18:32). 4. மன நிரம்புதல்; to be satisfied. "குறும்பிற் றதும்ப வைகி" (புறநா. 177:7). 5. அசைதல்; to wave, as a flag; to wobble, swing to and fro, as breasts. "கொங்கைக டதும்பிட நடந்தார்" (கம்பரா. மாரீ. 42). 6. முழங்குதல்; to resound, roar. "முழவிற் றதும்பின" (சிவக. 1560).

*[தள் → தள → தளம்பு → ததம்பு → ததும்பு-.]*

**ததுளன்** *tadulaṉ*, பெ. (n.) 1. காற்று; air. 2. இளைஞன்; youth.

**ததை¹-தல்** *tadai-*, 5 செ.குவி. (v.i.) 1. நெருங்குதல் (திவா.); to be thickset, crowded, densely packed. "ததையிலை வாழை" (ஐங்குறு. 460). 2. சிதைதல்; to be shattered, made fruitless. "சமந் ததைந்தவேல்" (பதிற்றுப். 70:3).

*[துதை → ததை (வே.க. 261)]*

**ததை²-த்தல்** *tadai-*, 4 செ.குவி. (v.i.) நிறைதல்; to be full abundant. "தண்டார் ததைக்கின்ற தண்ணந்துழாய்" (திவ்.இயற்.திருவிருத்.340).

*[துதை → ததை-.]*

**ததைவு** *tadaivu*, பெ. (n.) சிதைவு; scatter.

*[துதை → ததை → ததைவு]*

**தந்தக்கட்டி** *taṇda-k-kaṭṭi*, பெ. (n.) 1. தந்தசூலை (இ.வ.) பார்க்க; see *tanda-šūlai*. 2. பல்லில் உண்டாகும் கட்டி; an abcess on the gum of the teeth gum abscess, gum-boil.

*[தம் + த் + இ → தந்தி. 'தம்' என்னும் வேரடி, தருதற்கருத்துச் சொற்களுக்கு மூலமானது. ஒருகா. தந்தி → தந்தம் + கட்டி → தந்தக்கட்டி. தந்தம் = பல். கட்டி = சிலந்தி. பல்லிலேற்படும் கட்டி]*

**தந்தக்கட்டில்¹** *tanda-k-kaṭṭil*, பெ. (n.) 1. யானைமருப்பினாலியன்ற கட்டில்; ivory cot. 2. உயர்ந்த கட்டில் (இவ.): any fashionable cot.

*[தம் + த் + தி → தந்தி → தந்தம் + கட்டில் → தந்தக்கட்டில். தந்தி = ஆண் யானை. ஆண் யானைக்கு மருப்பினை, இயற்கை தந்ததால், வந்த பெயர். மருப்பினை யுடையது தந்தி. தந்தக் கட்டில் = யானைத் தந்தத்தினாற் செய்யப்பட்ட உயர்ந்த கட்டில்]*

**தந்தக்காரி** *tanda-k-kāri*, பெ. (n.) வாதமடக்கி (மலை) பார்க்க; see *vādamaḍakki*; sensitive plant.

*[தம் + தம் → தந்தம் + காரி → தந்தக்காரி]*

**தந்தக்கிருமி** *tanda-kirumi*, பெ. (n.) பற்புழு அல்லது பற்பூச்சி; worm found in the tooth (சா.அக.).

*[தந்தம் + கிருமி → தந்தக்கிருமி. தந்தம் = பல். Skt. kirumi. தந்தக்கிருமி = பல்லிலுண்டாகும், நுண்ணுயிரி]*

**தந்தக்குச்சி** *tanda-k-kucci*, பெ. (n.) பற்குச்சி; twig of a plant used for cleaning teeth (சா.அக.).

*[தந்தம் + குச்சி]*

**தந்தக்குறி** *tanda-k-kuṟi*, பெ. (n.) புணர்ச்சிக் காலத்திற் பல்லால் உண்டான, அடையாளம் (கொக்கோ.); marks made by the teeth of the lover on the limbs of his beloved.

மறுவ. பற்குறி

*[தந்தம் + குறி = பல்லால் ஏற்படுங்குறி: கழககால அகப்பாடல்களில், தலைவன் களவுப்புணர்ச்சியின்கண்ணே, தலைவியின் கன்னத்தில் ஏற்படுத்துங் குறி]*

**தந்தக்கோரை** *tanda-k-kōrai*, பெ. (n.) கோரை வகை (சங்.அக.); a kind of sedge.

*[தந்தம் + கோரை]*

**தந்தகபாலிகாநோய்** *tanda-kabāligā-nōy*, பெ. (n.) பற்களின் முனைகள் தேய்ந்து வெடித்துப் பொடிப்பொடியாக உதிரும் நோய்; a disease in which the edges of the teeth are softened cracked and sometimes crushed and dropped in pieces of particles.

**தந்தகராளநோய்** *tanda-karāḷa-nōy*, பெ. (n.) பல்லீறுகள் தேய்ந்து தந்தங்களை வெளியில் சாய்க்கும் ஒருவகைப் பல்நோய்; a disease in which the gums are eaten away leaving the teeth exposed to its full length.

*[தந்தகராளம் + நோய்]*

**தந்தகரிசனம்** *tanda-karišaṉam*, பெ. (n.) சுண்ணாம்பு; lime, calcium carbonate.

*[தந்தம் + கரிசனம்]*

**தந்தகரிடநோய்** *tanda-kariḍa-nōy*, பெ. (n.) பல்நோய் வகை; a disease of the teeth.

*[தந்தகரிடம் + நோய் = பற்களை இற்றுவிழச் செய்யும் பல்நோய்]*

**தந்தகரிநோய்** *tandagari-nōy*, பெ. (n.) பல் நோய்; a disease of the teeth.

*[தந்தகரி + நோய்]*

**தந்தகாட்டம்** *tanda-kāṭṭam*, பெ.(n.) 1. காசுக் கட்டி; black catechu - Terminalia alata. 2. கருமை மருதம்; black marudam (சா.அக.).

*[தந்தம் + காட்டம்]*

**தந்தங்கூசுதல்** *tandaṅ-kūšudal*, பெ. (n.) பல் கூசுதல்; a sort of morbid sensitive feeling in the tooth.

*[தந்தம் + கூசுதல்]*

**தந்தச்சவ்வு** *tanda-c-cavvu*, பெ. (n.) தேயாத பற்களில் மேற்பகுதிச் சவ்வு; the membrane covering the enamel of an unworn tooth.

*[தந்தம் + சவ்வு]*

**தந்தச்சிமிழ்** *tanda-c-cimil*, பெ. (n.) கண்மை போன்றவற்றை அடைக்கும் சிமிழ்; a small ivory box for preserving collyrium for eye etc.

*[தந்தம் + சிமிழ். தந்தச் சிமிழ், தந்தம் = மருப்பு. யானையின் மருப்பிற் செய்த சிமிழ்]*

**தந்தச்சீப்பு** *tanda-c-cīppu*, பெ. (n.) மருப்பு அல்லது கொம்பினாற் செய்த சீப்பு; comb of horn or ivory (செ.அக.).

*[தந்தம் + சீப்பு. தந்தச் சீப்பு = யானைக் கொம்பிற் செய்து, செல்வர் பயன் படுத்தும் சீப்பு]*

**தந்தசடம்** *tanda-šaḍam*, பெ. (n.) 1. எலுமிச்சை (தைலவ.தைல. 85); bergamotte-orange. 2. விளா (மூ.அ.); wood-apple. 3. தமரத்தம் பழம்; sweet blimbing, coromandal carambola - Carambola apple.

**தந்தசடை** *tanda-šaḍai*, பெ. (n.) புளியாரை (M.M. 58) பார்க்க; see *puḷiyārai*; yellow wood-sorrel.

**தந்தசம்** *tantašam*, பெ. (n.) 1. பல்லீறு; gum of teeth. 2. யானைக் கொம்பு; elephant tusk.

மறுவ. தந்தச்சதை

**தந்தசருக்கரை** *tanda-šarukkarai*, பெ. (n.) பல் ஊத்தை (சீவரட்.); tartar on the teeth (செ.அக.).

மறுவ. பற்காறை

*[தந்தம் + சருக்கரை தந்தம் = பல். சருக்கரை அழுக்கு. பல்லின்கண் உண்ணுங்கால் ஏற்படும் அழுக்கு.]*

**தந்தசருக்கரைநோய்** *tandašarukkarai-nōy*, பெ. (n.) பற்களின் பின்புறம் கரடுகட்டிய செதில்கள் போன்ற காறை; a hard reddish crust, which is sometimes formed behind the teeth.

*[தந்தம் + சருக்கரை + நோய்]*

**தந்தசலனநோய்** *tanda-šalaṉa-nōy*, பெ. (n.) தந்தநோய்[2] பார்க்க; see *tanda-nōy*.

**தந்தசவுத்தாமா** *tandašavuttāmā*, பெ. (n.) தந்தசிகம் பார்க்க; see *tanda-šigam*.

**தந்தசானம்** *tanda-šāṉam*, பெ. (n.) பற்பொடி; tooth-powder.

*[தந்தம் + சானம்]*

**தந்தசிகம்** *tanda-šigam*, பெ. (n.) எலுமிச்சை; lime fruit.

**தந்தசிரம்** *tanda-širam*, பெ. (n.) தந்தசீரை (யாழ். அக.) பார்க்க; see *tanda-širai*, gum of the teeth.

**தந்தசிரா** *tanda-širā*, பெ. (n.) பின்பல்; bak teeth.

*[தந்தம் + சிரை → சிரா → தந்தசிரா]*

**தந்தசீரை** *tanda-šīrai*, பெ. (n.) பல்லின் ஈறு (வின்.); gum of teeth (செ.அக.).

*[தந்தத் + சீரை]*

**தந்தசூகம்** *tanda-šūgam*, பெ. (n.) 1. பாம்பு (வின்.); snake. 2. பாம்புகள் நிரம்பிய நிரையம்

(சேதுபு. துனுக்கோ.4): a hell infested with serpents. 3. நச்சுயிரி; reptile.

[தந்தம் + சூகம்]

**தந்தசூகன்** *tanda-šūgaṉ*, பெ. (n.) கொடியவன் (யாழ்.அக.): malignant person.

[தந்தம் + சூகன்]

**தந்தசூலை** *tanda-šūlai*, பெ. (n.) 1. பல்வலி (இங். வை. 369); tooth-ache, inflammation of the dental pulp, Odontalgia. 2. பல்நரம்பில் உண்டாகும் குத்தல்நோய்; a nervous pain experienced in the gum of the teeth (சா. அக.).

[தந்தம் + சூலை – தந்த சூலை. தந்தம் = பல். சூலை = பல்லிலேற்படும் வலி]

**தந்தசைவு** *tanda-šaivu*, பெ. (n.) பல்லாட்டம்; looseness of teeth.

[தந்தம் + அசைவு]

**தந்தசைவுஇறுகப்பிடித்தல்** *tanda-šaivu-iṟuga-p-piḍittal*, தொ.பெ. (vbl.n) பல்லீறுகள்; strengthening of the gum and teeth.

[தந்தசைவு + இறுகப்பிடித்தல்]

**தந்தத்தண்ணீர்**[1] *tanda-t-taṇṇīr*, பெ. (n.) அத்திபேதி; a medicine which dissolves bone.

[தந்தம் + தண்ணீர்]

**தந்தத்தண்ணீர்**[2] *tanda-t-taṇṇīr*, பெ. (n.) யானைக் கழிச்சல் (யாழ்.அக.); purgative for elephants.

[தந்தம் + தண்ணீர்]

**தந்தத்தையுதிரப்பண்ணி** *tandattai-y-udira-p-paṇṇi*, பெ. (n.) தில்லைமரம், பால்பற்களை விழச்செய்யும் மரம்; tigers spurge for its milky juice is capable of making the teeth fall when coming in contact with.

மறுவ. பாற்பல் உதிரப்பண்ணி

[தந்தத்தை + உதிரப்பண்ணி.]

**தந்ததாவனம்** *tanda-tāvaṉam*, பெ. (n.) 1. பல் விளக்குகை; cleansing the teeth. 2. பற்குச்சி (வின்.); stick used as tooth-brush. 3. கருங்காலி வகை (மலை); glabrous-foliaged cutch, m. tr., Acacia catechu - sundra.

[தந்தம் + தாவனம்]

**தந்ததாளனநோய்** *tanda-tāḷaṉa-nōy*, பெ. (n.) பல் குத்தல்; acute pain of teeth.

[தந்ததாளனம் + நோய்]

**தந்ததாளி** *tanda-tāḷi*, பெ. (n.) பல்நோய்வகை (பரராச. i, 218); a kind of tooth-ache.

[தந்தம் + தாளி]

**தந்ததி** *tandadi*, பெ. (n.) மரபுவழி; lineage. "இரவி சிரிகண்டன் தந்ததிப் பிர கிருதியாய்" (T.A.S. ii, 175).

[சந்ததி → தந்ததி. ச → த]

**தந்தநாகம்** *tanda-nāgam*, பெ. (n.) துத்தநாகம்; zinc.

[துத்தநாகம் → தந்தநாகம் – த → ந திரிபு]

**தந்தநாடி** *tanda-nāḍi*, பெ. (n.) பல்துளை; sinus in the teeth.

[தந்தம் + நாடி.]

**தந்தநோய்**[1] *tanda-nōy*, பெ. (n.) தந்தசூலை பார்க்க; see *tanda-šūlai* (செ.அக.).

[தந்தம் + நோய்.]

**தந்தநோய்**[2] *tanda-nōy*, பெ. (n.) 1. மிகு வலியுடன் பற்கள் ஆடும் ஒருவகை நோய்; a disease in which the teeth are rendered loose and painful. 2. பற்குத்தல் நோய்; a disease of the teeth causing acute pain, Pyorrhoea.

[தந்தம் + நோய்]

**தந்தப்பல்லக்கு** *tanda-p-pallakku*, பெ. (n.) மருப்பினால் வேலை செய்யப்பெற்ற சிவிகை வகை; palanquin made of, or ornamented with, ivory.

[தந்தம் + பல்லக்கு. தந்தப் பல்லக்கு. யானையின் மருப்பினால், நுணுக்க வேலைப்பாட்டுடன் அமைக்கப்பட்ட பல்லக்கு]

**தந்தப்பிரலூனம்** *tanda-p-piralūṉam,* பெ. (n.) *பல்லரணை;* a disease of the gum marked by small boils in between teeth, swelling of the gum and oozing of pus and blood and sometimes worms are seen.

*[தந்தம் + பிரலூனம் - தந்தப்பிரலூனம். பல்லிடுக்குகளில் ஏற்படும் நோய். இந் நோயின் விளைவால், பற்சந்துகளில் கொப்புளங்கள் ஏற்படும். தாடை வீங்கும். பல்லீறுகளில் அரத்தக் கசிவு ஏற்படும் என்று சா.அக. கூறும்]*

**தந்தப்புழு** *tanda-p-puḻu,* பெ. (n.) *பற்பூச்சி;* worm of falling from the gum of the teeth.

*[தந்தம் + புழு → தந்தப்புழு = பல்லீறுகளில் கட்டிகளையேற்படுத்திச் சீழ்ப்பிடிக்கக் காரணமான உயிரி.]*

**தந்தப்புழுநீர்தோசம்** *tanda-p-puḻu-nīr-tōšam,* பெ. (n.) பற்புழுத் தடுமன்; cold due to pyorrhoea.

*[தந்தம் + புழு + நீர் + தோசம்.]*

**தந்தப்பூண்** *tanda-p-pūṇ,* பெ. (n.) யானைக் கொம்பில் அணியும் கிம்புரி *(சூடா. 11, 146);* ferrule or metal cap on the tip of an elephant's tusk.

*[தந்தம் + பூண்]*

**தந்தபத்தி** *tanda-patti,* பெ.(n.) *பல்வரிசை;* row of teeth.

*[தந்தம் + பத்தி]*

**தந்தபத்திரம்** *tanda-pattiram,* பெ. (n.) மல்லிகை வகை *(வின்.);* a kind of jasmine.

*[தந்தபத்திரம் = வெண்மைமிக்க தந்தம் போன்ற மல்லிகை; இச்சொல்லின் கண்ணே வெண்மை மல்லிகையின் நிறத்தை யொக்கும், ஒருபுடையொப்புமை யாகும்.]*

**தந்தபத்திரி** *tanda-pattiri,* பெ. (n.) வாழைமரம்; plantain tree.

*[தந்தம் + பத்திரி]*

**தந்தபலம்** *tanda-palam,* பெ. (n.) *விளா;* wood-apple.

*[தந்தம் + பலம்]*

**தந்தபலை** *tanda-palai,* பெ. (n.) *திப்பிலி;* long-pepper.

*[தந்தம் + பலை]*

**தந்தபாகம்** *tanda-pāgam,* பெ. (n.) யானையின் மத்தகம் *(யாழ்.அக.);* elephant's forehead.

*[தந்தம் + பாகம்]*

**தந்தபாலிநோய்** *tanda-palinōy,* பெ. (n.) குழந்தையின் பல்லீறுகளில் ஏற்படும் நோய்; the dental disease of the child.

*[தந்தபாலி + நோய்]*

**தந்தபாலினி** *tanda-pāliṉi,* பெ. (n.) *இசங்கு;* sangu plant.

*[தந்தம் + பாலினி]*

**தந்தபீசகம்** *tanda-pīsagam,* பெ. (n.) மாதுளை *(சங். அக.)* பார்க்க; pomegranate. see *māduḷai.*

*[தந்தம் + பீசகம்]*

**தந்தபுட்பம்** *tanda-puṭpam,* பெ. (n.) *தேற்றா;* water clearing nut.

*[தந்தம் + புட்பம்]*

**தந்தபுடநோய்** *tanda-puḍa-nōy,* பெ. (n.) பல்லீறு புடைத்துப் புண்ணாகி வலியுண்டாக்கும் நோய்; a dental disease marked by a growth of morbid flesh.

*[தந்தபுடம் + நோய்]*

**தந்தபுற்பம்** *tanda-puṟpam,* பெ. (n.) பல்நோய் வகை *(பரராச. ண், 218);* a kind of tooth-ache.

*[தந்தம் + புற்பம்]*

**தந்தபேதநோய்** *tanda-pēda-nōy,* பெ.(n.) *பல்வேறு பல்நோய்கள்;* different diseases of the teeth.

**தந்தம்**[1] *tandam,* பெ. (n.) *1.* யானையின் மருப்பு; tusk, as of elephant. *"காழுற்ற தந்த மின்ன" (கந்தபு. தெய்வயா. 105). 2.* பன்றியின் மருப்பு; hog's horn. *3.* மலைமுகடு *(யாழ்.அக.);* peak of a mountain. *4.* பல் *(திவா.);* tooth.

*[ஒருகா. தம் + த் + இ → தந்தி → தந்தம் = மருப்பு. தும்பு → துந்து → துந்தி → தந்தி = தும்பிக்கையுடைய யானை; தந்தி → தந்தம் = யானையின்*

*மருப்பு; தந்தம் என்பது முதற்கண் யானையின் மருப்பினையே குறித்து வழங்கியது; தந்தத்தை, மருப்பு என்று வழங்குவது, பழந்தமிழ் இலக்கிய மரபாகும்; நாளடைவில் மருப்பென்பது முதனிலைப் பொருளாகவும், 'பல்' என்பது வழிநிலைப் பொருளாகவும் வளர்ந்த தெனலாம்.]*

**தந்தம்**[2] *tandam*, பெ. (n.) நறுக்கி வைத்திருக்கும் பழந்துண்டம்; piece of a fruit, as cut for sale or use.

*[துண்டம் → துந்தம் → தந்தம்]*

**தந்தமலம்** *tanda-malam*, பெ. (n.) ஊத்தை அல்லது பல்லழுக்கு; dirt of tooth.

*[தந்தம் + மலம்; மலம் = ஊத்தை]*

**தந்தமா** *tandā-mā*, பெ. (n.) யானை (தந்தத்தையுடைய விலங்கு); elephant, as the animal having tusks.

மறுவ. மத்தகமா; மருப்புமா

*[தந்தி → தந்தம் + மா : தந்தமா, தும்பி = யானையின் தும்பிக்கை, துல் → துள் → துண்பு → தும்பு = உட்டுளை. துளை உள்ள உறுப்பு; உறிஞ்சி; தும்பு → துந்து → துந்தி → தந்தி → தந்தம். தந்தம் = யானையின் மருப்பு. மா = யானை = வெண்மையான மருப்பினை யுடைய யானை. ஒருகா. தம் + த் + இ → தந்தி → தந்தம் + மா = மருப்பினை உடைய யானை]*

**தந்தமாமிசம்** *tanda-māmišam*, பெ. (n.) 1. பல்லின் ஈறு (யாழ்.அக.); gum of teeth. 2. பல்முரசு; gums of the upper and the lower jaw.

*[தந்தம் + மாமிசம். தந்தம் = பல். மாமிசம் = ஈறு]*

**தந்தமாய்ச்சாய்** *tandamāyccāy*, பெ. (n.) செவ்வலரி; red oleander.

**தந்தமிறக்கம்** *tanda-mirakkam*, பெ. (n.) இருபிளவான தாடித்தசை; double chin.

*[தந்தம் + இறக்கம்]*

**தந்தமிறங்கு-தல்** *tandam-irangu-*, 5 செ.குவி. (v.i.) தாடிச் சதை பற்றுதல் (யாழ்ப்.); to have a double chin.

*[தந்தம் + இறங்கு-.]*

**தந்தமுத்து** *tanda-muttu*, பெ. (n.) யானை மருப்பிலிருந்து தோன்றும் முத்து; pearl formed, about the tusk of elephant.

*[தந்தம் + முத்து]*

**தந்தமூலநோய்** *tanda-mūla-nōy*, பெ. (n.) பல்லழற்சி; a dental disease due to inflammation of the roots of the teeth.

மறுவ. பல்லீறு நோய்

*[தந்தமூலம் + நோய்.]*

**தந்தமூலம்** *tanda-mūlam*, பெ. (n.) பல்வேர்; root of the tooth.

*[தந்தம் + மூலம். மூலம் = வேர், அடி]*

**தந்தயாவனம்** *tanda-y-āvanam*, பெ. (n.) கருங்காலி மரம்; ebony wood.

**தந்தயோடதம்** *tanda-y-ōḍadam*, பெ. (n.) பல், உதடு போன்றவற்றின் தொடர்பு; relation to teeth and the lip - Dentilabial.

**தந்தரீணம்** *tanda-rīṇam*, பெ. (n.) அரிசிக் கழுநீர்; rice cleaned water.

**தந்தரூடி** *tanda-rūḍi*, பெ. (n.) பல்வேர் புண்ணாகித் தீநாற்றம் வீசும் நோய்; a disease of the teeth marked by ulceration at the root followed by a discharge of pus and blood with fetid smell - Pyorrhoea.

**தந்தரோகம்** *tanda-rōgam*, பெ. (n.) தந்தநோய் பார்க்க; see *tanda-nōy*.

*[தந்தம் + Skt. ரோகம்.]*

**தந்தலக்கம்** *tanda-lakkam*, பெ. (n.) அடக்கமான பண்பு (இ.வ.); modesty; self-control.

**தந்தலைக்கொட்டி** *tandalai-k-koṭṭi*, பெ. (n.) வட்டக்கிலுகிலுப்பை; rattle nail dye.

**தந்தவக்கிரன்** *tanda-vakkiraṉ*, பெ. (n.) இடை வள்ளல்கள், எழுவரில் ஒருவன் (சூடா.); a liberal chief, one of seven iḍai-vaḷḷalgaḷ.

*[தந்தவக்கிரன் = வக்கரன் என்ற பெயரை, மக்கள் வைத்துக் கொள்ளும் பழக்கம், காலங்காலமாகத் தொடர்ந்துள்ளதாகத் தெரிகிறது. திருக்கோவலூரை அடுத்துள்ள ஆயந்தூர் என்னுமிடத்திலுள்ள, ஏரியின் மதகைச் செப்பம் செய்தவன் பெயர். "வக்கரன் பாக்கமுடையான் கொங்கராயன்" என்று மதகுக்கல்லில், இக் கல்வெட்டு செதுக்கப்பட்டுள்ளது. கி.பி. பதினான்காம் நூற்றாண்டைச் சார்ந்தது]*

**தந்தவத்திரம்** *tanda-vattiram,* பெ. (n.) *இதழ்;* lips covering the teeth.

**தந்தவத்திரன்** *tanda-vattiran,* பெ. (n.) சிவன்; Šivan.

**தந்தவலகம்** *tanda-valagam,* பெ. (n.) பல் *மினுக்கு;* enamel of the teeth.

**தந்தவள்** *tandavaḷ,* பெ. (n.) *தாய்;* mother. "தந்தவளைப் பணிந்தவளுந் தபோவனத்தினிடைச் சார்ந்தாள்" *(சேதுபு. தேவிபுர. 7).*

*[தந்த + அவள் = தருதற் கருத்து வேரினின்று, இச் சொல் கிளைத்தது. புகுந்தகுடிக்குப் பிள்ளைநிலையில் மகவினைத் தந்தவள் தாய்]*

**தந்தவன்** *tandavan,* பெ. (n.) *தகப்பன்;* father. தந்தவன் இல்லை யென்றால் வந்தவன் என்ன செய்வான் *(உ.வ.).*

*[தந்த + அவன் = இஃதும், தருதற்கருத்து வேரினின்று பிறந்த சொல்லாகும்; தாய், ஈன்று புறந்தரக் கரணியமான, வெண்ணீர் (விந்து) நிலையைத் தந்தவன் தந்தை என்பார், மொழி ஞாயிறு.]*

**தந்தவாசம்** *tandavāsam,* பெ. (n.) *உதடு;* lip.

**தந்தவாதம்** *tanda-vādam,* பெ. (n.) தந்தசூலை (வின்.) பார்க்க; see *tanda-šūlai.*

*[தந்தம் + Skt. வாதம்]*

**தந்தவிதர்ப்பம்** *tanda-vidarppam,* பெ. (n.) *பல்லாட்டம்;* a disease which is consequent upon the friction of the gums marked by the appearance of violent swelling.

*[தந்தம் + விதர்ப்பம்]*

**தந்தவியசனம்** *tanda-viyāšanam,* பெ. (n.) பல் *சொத்தை;* decay of tooth.

**தந்தவிரிசம்** *tanda-virišam,* பெ. (n.) தந்தங்கூசு-தல் பார்க்க; see *tandaṅ-kūšu-.*

**தந்தவேட்டம்** *tanda-vēṭṭam,* பெ. (n.) பல்லீறு (யாழ்.அக.); the gums.

மறுவ. பல்முரசு

*[தந்தம் + வேட்டம்]*

**தந்தவைதர்ப்பம்** *tanda-vaidarppam,* பெ. (n.) *அழற்சியினாலேற்படும் பல்லாட்டம்;* looseness of the teeth, through external injury.

**தந்தன்** *tandan,* பெ. (n.) *1. தாடியுள்ளவன்;* a men with beard. *2. நாலுணர்வினன்;* one provided with only four senses. *3. நூலுணர்வினன்;* one with scientific knowledge.

**தந்தனத்தான்பாட்டு** *tandanattān-pāṭṭu,* பெ. (n.) தந்தனப்பாட்டு பார்க்க; see *tandana-p-pāṭṭu.* (செ.அக.).

*[தந்தனத்தான் + பாட்டு. தும்தனத்தான் → துந்தனத்தான் → தந்தனத்தான் + பாட்டு. ஒரு.கா. துந்தனம் → தந்தனம்]*

**தந்தனப்பாட்டு** *tandana-p-pāṭṭu,* பெ. (n.) பெரும்பாலும் பிச்சைக்காரச் சிறுவர்கள் பாடும் பாட்டுவகை (இ.வ.); a kind of song, generally sung by beggar-boys.

க. தந்தனகாடு; தெ. தந்தனமு

*[தம்தனம் → தந்தனம் + பாட்டு. ஒருகா. துந்தனம் → தந்தனம்]*

**தந்தனப்பாட்டுப்பாடு-தல்** *tandana-p-pāṭṭu-p-paḍu-,* 5 செ.கு.வி. (v.i.) ஏழைபோல் நடித்தல் (இ.வ.); to play the part of a beggar.

*[தந்தன எனும் எளிய நாட்டுப்புறப் பாட்டு இசை, இரவலர்தம் கைவந்த கலையாகும். 'துந்தனா' எனும் கம்பிக் கருவி கொண்டு, இசைபாடி வருவது இரவலர் வழக்கம். அவர் பாடும் பாட்டு. துந்தனப்பாட்டு → தந்தனப்பாட்டு → தந்தனாப்பாட்டுப் பாடுதல், என்றாயிற்று. தந்தனம் + பாட்டு + பாடு-.]*

**தந்தனம்**[1] *tandanam,* பெ. (n.) வலக்காரம் *(தந்திரம்);* stratagem, trick, device, scheme. "பண்ணுந் தந்தனத்துக் குள்ளாய்த் தளர்வாரும்"

(விறலிவிடு. 324). 2. தெம்மாங்கு இசை வடிவம்; base for folk musical form (செ.அக.).

[தம் + தம் + அனம். எளிய இசைக் கருவியில் எழும்பும் ஒலிக்குறி. உணர்ச்சிப் பெருக்கின் போது நாட்டுப்புற மக்கள் எளிய இசைக்கருவியைக், கையால் தட்டிக்கொண்டே பாடத் தொடங்கினர். தந்தன, தனனன, தன்ன, தன்னன்ன போன்ற பல இசைவடிவங்கள் தனித்தும், கூடியும், செய்யுள் வரிகளுக்கு, அடிப்படையாக அமைந்தன. திருப்புகழ் போன்ற சந்தம் நிறைந்த பாடல்களுக் கெல்லாம் அடிப்படை ஒலியாயின.]

**தந்தனம்**[2] *tandanam*, பெ. (n.) 1. அடிப்படை யின்மை; lack of foundation, support. அது தந்தனமாய் நிற்கின்றது. 2. தற்பெருமை; self - conceit. 3. பாராமுகம்; indifference. 4. சூழ்ச்சி; stratagem, trick, device, scheme. "பண்ணுந் தந்தனத்துக் குள்ளாய்த் தளர்வாரும்" (விறலி விடு. 324).

[தம்தனம் → தந்தனம் = எளிய இசை வடிவமாதலால், இரவலர், பரவலாகப் பாடத் தலைப்பட்டனர். ஏழை பாடும் பாட்டானதாலும், ஏழைகளைப் போற்று வாரின்மையாலும், அடிப்படையின்மை என்ற பொருள் வந்துவிட்டது. எளிய இசையிலேயே, பிறரை மயக்கும் பெற்றி வந்துவிட்டதால், தற்பெருமையையும் குறிக்கலாயிற்று. பிறரால் மதிக்கப் படாமை கருதி 'பாராமுகம்' (வடமொழியில் பராமுகம் என்பர்) என்ற பொருளையும் ஏற்றது. பாராமுகத்தின் விளைவு, சூழ்ச்சி ஆயிற்று.]

**தந்தனவெனல்** *tandana-v-enal*, பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of stamping sound. "தந்தனவென்று கூத்தாடினனே" (அருட்பா. VI, நாம. 136).

[துந்தனவெனல் → தம்தனவெனல் → தந்தனவெனல்]

**தந்தாம்** *tandām*, பெ.(n.) தங்கள்; தங்களுடைய; theirs, severally or individually. "ராஜசேவை பண்ணுவார் தந்தாம் அடையாளங்களோடே" (ஈடு. 2. 2: 10).

[தம்தாம் → தந்தாம்]

**தந்தாயுதம்** *tandāyudam*, பெ. (n.) 1. தந்தத்தை ஆயுதமாக உடைய யானை; elephant. 2. ஆண் பன்றி (யாழ்.அக.): hog.

[தந்தம் + ஆயுதம்.]

**தந்தார்** *tandār*, பெ. (n.) பெற்றோர்; parents. "தந்தா ரவரொடும்" (பரிபா. 15: 46).

[தந்த + அவர் = ஈன்று புறந்தந்தோர்]

**தந்தாலிகை** *tandāligai*, பெ. (n.) கடிவாளம்; horse-bit, bridle.



**தந்தாவளம்** *tandāvāḷam*, பெ. (n.) யானை (சூடா.); elephant. "தந்தாவள சேனை" (பாரத. நான்காம். 9).

[தந்தம் + ஆவளம்]

**தந்தாவனம்** *tandā-vanam*, பெ. (n.) 1. குச்சியால் பல்துலக்குதல்; cleaning the teeth with twigs. 2. பற்குச்சி; any twig of plant used as tooth brush. 3. கருங்காலி; glabros foliaged cutech.

**தந்தாந்தம்** *tandāndam*, பெ. (n.) தொட்டி நஞ்சு; red arsenic.

**தந்தி**[1] *tandi*, பெ. (n.) 1. ஆண்யானை, களிறு (பிங்); male elephant. "தந்தியும் பிடிகளுந் தடங்க ணோக்கின" (கம்பரா. சித்திரக்கூட. 43). 2. பாம்பு (நச்சுப் பற்களையுடையது); snake, as having fangs. "தந்தி நஞ்சந் தலைக்கொளச் சாய்ந்தவர்" (கந்தபு. சயந்தன்கனவு. 21).

[தந்தி = தும்பிக்கையுடைய ஆண் யானை தும்பு = யானையின் தும்பிக்கை. தும்பு → துந்து → துந்தி → தந்தி. ஒருகா. தம் + த் + இ → தந்தம் → தந்தி. 'த்' இடைநிலை. 'இ' சொல்லாக்க ஈறு. தந்தி என்பது மருப்பினையுடையது எனும் பொருளில் வந்தது]

**தந்தி**[2] *tandi*, பெ. (n.) *1.* கம்பி; wire. "நார் தந்திமிடையப் பின்னி" (தைலவ. பாயி. 22). *2.* யாழ் நரம்பு (வின்.); catgut, string of a musical instrument. *3.* நரம்பு; sinew, tendon. குதிகால் தந்தியை அறுத்து விடுவேன் (இவ.). *4.* தொலைவரி (மின்கம்பிவழி யனுப்புஞ்செய்தி); telegram. *5.* யாழ் (பிங்.); lute.

*[தந்தி = துளை வழியே இழுக்கப்பட்ட மெல்லிய மாழைக்கம்பி; உல் → துல் → துளை. துளைத்தக் கம்பிகள் பொருத்தப் பட்டதும், 'விண்' 'விண்' என்று இசை தருவதுமான வீணை அல்லது யாழ்.*

*ஒருகா. தம் + த் + இ - தந்தி. இஃதும் தருதற்கருத்து வேரினை அடிப்படையாகக் கொண்டு, பொருள்தருஞ் சொல்லாகும். 'இ' சொல்லாக்க ஈறு. 'த்' இடைநிலை, இன்னியங்களில் தருதற்கருத்து அடிப் படையில், தந்தியிழை அல்லது கம்பி இசையைத் தருகிறது. அறிவியல் வளர்ச்சியில் கம்பியில்லாத் தந்தி செய்தியினைத், தருகிறது. இவ்வாறு 'தம்' எனும் தருதற்கருத்து வேரடி, இன்னியக் கருவிகளில், இசையைத் தரும் பான்மையிலும், அறிவியல் வளர்ச்சியில், தொலைவரி, தொலைக் காட்சி முதலான வற்றில், ஒலி, ஒளி, அனைத்தையுந்தரும் பான்மையில் அமைந்துள்ளமை அறிதற் பாலது. தமிழ் மொழியின் சொற் கட்டமைப்பு, முன்னைப் பழைமைக்கும், பின்னைப் புதுமைக்கும், ஈடுகொடுக்கும் வண்ணம் இயைந்து அமைந்துள்ளமையை, 'தரு' என்னும் வேரடி, விளக்குகிறது.]*

**தந்தி**[4] *tandi*, பெ. (n.) தந்திவருமபல்லவன் (கி.பி. 796-846) நாணயத்தில் உள்ள பெயர்; name found in thd coin of Tandivaruman, 796-846 AD.

தமிழ் எழுத்தில் 'த' எழுத்தும், 'ந்தி' என்ற கூட்டெழுத்தும், பல்லவகிரந்தத்தில் உள்ளன. பல்லவமன்னர்கள், அரசுப்பணிகளில் கிரந்தத்தைப் பயன்படுத்தியதை இந்த நாணயம் காட்டுகிறது.

*[அளக்குடி - தமிழகத் தொல்லியல் சான்றுகள்]*

**தந்தி**[4] *tandi*, பெ. (n.) தந்திபீசம் (மலை.) பார்க்க; see *tandi-pīšam.*

**தந்தி**[5] *tandi*, பெ. (n.) *1.* வட்டக்கிலுகிலுப்பை; rattle wort. *2.* நாடி; pulse. *3.* சீமையாமணக்கு; foreign castor. *4.* வாலுளுவை; thorny staff tree. *5.* சிவதை; turpeth root.

**தந்திக்கடவுள்** *tandi-k-kaḍavuḷ*, பெ. (n.) பிள்ளையார் (பிங்.) (யானை முகத்தையுடைய கடவுள்); Gaṇēšaṉ, as elephant - faced, God.

*[தந்தி + கடவுள் → தந்தி = யானை. யானை முகத்தோன்]*

**தந்திக்கம்பி** *tandi-k-kambi*, பெ. (n.) *1.* வீணை முதலியவற்றின் நரம்பு; string of a lute. *2.* தொலைவரி அல்லது தொலைபேசிக் கம்பி; telegraph or telephone wire. *3.* புடைவை வகை; a kind of saree.

*[தந்தி + கம்பி = ஒரு பொருட்பன்மொழி]*



**தந்திக்கள்ளன்** *tandi-k-kaḷḷaṉ*, பெ. (n.) உரித்துலுக்கன் (m.m.375) பார்க்க; see *urittu-lukkaṉ.*

*[தந்தி + கள்ளன்]*

**தந்திகர்ணி** *tandi-garṇi*, பெ. (n.) வெருகங் கிழங்கு (தைலவ. தைல. 23); a tuberous-rooted herb.

மறுவ. மெருகன் கிழங்கு

த. கரணை → வ. கர்ணி.

*[தந்தி + கரணை = காருதற் சுவையுள்ள நீண்ட கிழங்கு]*

**தந்தித்தீ** *tandi-t-tī*, பெ. (n.) *யானைத்தீ யென்னும் பசிநோய்;* morbid appetite, as elephantine. "தந்தித் தியாற் றனித்துய ருழந்து" *(மணிமே. 17:44).*

*[தந்தி + தீ.]*

**தந்திதந்தியாய்** *tandi-tandi-y-āy*, கு.வி.எ. (adv.) *வரிசைவரிசையாய்;* row after row. "தந்தி தந்தியாய் வருங்கைத் தந்திகளின்" *(கொண்டல் விடு. 397).*

*[தந்தி = வரிசை. தந்தி + தந்தி + ஆய்.]*

**தந்திப்படு-தல்** *tandi-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *எரிச்சற்படுதல்* (யாழ்.அக.); to be irritated.

*[தந்தி + படு-.]*

**தந்திப்பிரமேகம்** *tandi-p-piramēgam*, பெ. (n.) *அடிவயிற்று நோவால், ஆண்குறி வழியாய்ச் சளியைப்போலொழுகும் நோய்;* a transparent mucous wiry discharge from the urethra.

மறுவ. இணைவிழைச்சு நோய்

*[தந்தி + பிரமேகம்]*

**தந்திபீசம்** *tandi-pīšam*, பெ. (n.) நேர்வாளம் (தைலவ. தைல. 116) *சிறுமர வகை;* a kind of tree. Croton oil-plant.

**தந்திபூட்டு-தல்** *tandi-pūṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) *வீணை, யாழ் முதலியவற்றிற்குக் கம்பி யமைத்தல்* (வின்.); to fit up with strings, as in a lute.

*[தந்தி + பூட்டு-.]*

**தந்திபேசல்** *tandi-pēšal*, தொ.பெ. (vbl.n.) *நாடியடித்தல்;* beating of the pulse.

*[தந்தி + பேசு + த் + அல். அல் = தொ.பொ. ஈறு]*

**தந்திபேசு-தல்** *tandi-pēšu-*, 5 செ.கு.வி. (v.i.) தொலைவரி பார்க்க; see *tolai-vari*.

*[தந்தி + பேசு-.]*

**தந்திபோல்தெரித்தல்** *tandi-pōl-terittal*, பெ. (n.) *விட்டுவிட்டுச் சுரீர்எனநோதல்;* a sort of pain experienced in hemicrania.

*[தந்தி + போல் + தெரித்தல்.]*

**தந்திமதம்** *tandimadam*, பெ. (n.) *யானைமதம்;* elephant with desere.

*[தந்தி + மதம்]*

**தந்திமருப்பு**[1] *tandi-maruppu*, பெ.(n.) முள்ளங்கி (தைலவ. தைல. 135) பார்க்க; see *mul̥l̥aṅgi*.

*[தந்தி + மருப்பு]*

**தந்திமருப்பு**[2] *tandi-maruppu*, பெ. (n.) *யானைக் கொம்பு;* tusk of elephant.

*[தந்தி + மருப்பு]*

**தந்திமுகன்** *tandi-mugan̲*, பெ. (n.) *யானைமுகக் கடவுள்* (திவா. காப்பு.); elephant faced God.

மறுவ. தந்திக்கடவுள்

*[தந்தி + முகன். மருப்பினை முகத்திலுடையவன்]*

**தந்திமுறுக்கு**[1]**-தல்** *tandi-mur̲ukku-*, 5 செ. குன்றாவி. (v.t.) *யாழ்நரம்பை இறுக்குதல்;* to tighten the lute-string.

**தந்திமுறுக்கு**[2]**-தல்** *tandi-mur̲ukku-*, 5 செ.கு.வி. (v.i.) *தீச்செயலில் தூண்டி விடுதல்;* to egg on, instigate to evil (செ.அக.).

*[தந்தி + முறுக்கு-.]*

**தந்திமுறுக்குதல்**[3] *tandi-mur̲ukkudal*, பெ. (n.) *நரம்பிற்குச் சுறுசுறுப்பையுண்டாக்கல்;* stimulating the nerves.

*[தந்தி + முறுக்குதல்.]*

**தந்திமேகம்** *tandi-mēgam*, பெ. (n.) தந்தி வெட்டை பார்க்க; see *tandi-veṭṭai* (செ.அக.).

*[தந்தி + மேகம்.]*

**தந்தியடி**[1]**-த்தல்** *tandi-y-aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) *தொலைவரிச் செய்தியனுப்புதல்;* to send a telegram, wire (செ.அக.).

*[தந்தி + அடி-.]*

**தந்தியடி**[2]**-த்தல்** *tandi-y-aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) *வீணை, யாழ் முதலியவனவற்றில் மீட்டும் மெல்லிய கம்பியை மேலுங்கீழுமாக அசைப்பது போன்று ஆட்டுதல்;* to tremble.

*[தந்தி + அடி-.]*

**தந்தியடி**[3]**-த்தல்** *tandi-y-aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) *நாடிபேசல்;* to beat the pulse.

*[தந்தி + அடி-.]*

**தந்தியம்**[1] *tandi-y-am*, பெ. (n.) பல்லடுக்கு; filth in the teeth.

*[தந்தி → தந்தியம்.]*

**தந்தியம்**[2] *tandi-y-am*, பெ. (n.) முலைப்பால்; woman's breast milk.

**தந்தியறுதல்** *tandi-y-aṟudal*, பெ. (n.) *1.* நாடிவிழல்; dropping of the pulse. *2.* நரம்புவீழ்ச்சி; nervous break down.

*[தந்தி + அறுதல்]*

**தந்தியாரிட்டம்** *tandiyāriṭṭam*, பெ. (n.) மூலநோய்க்கான ஆயுள்வேதமருந்து; an āyurvēdic wine prescribed for piles.

**தந்தியுரியோன்** *tandi-y-uriyōṉ*, பெ. (n.) சிவன் (சூடா.) (யானைத் தோலைப் போர்த்தவன்); Šivaṉ, as wearning elephant's skin.

*[தந்தியுரி = யானைத் தோல். தந்தியுரி → தந்தியுரியோன்]*

**தந்தியூசிவன்னச்சேலை** *tandi-y-ūši-v-vaṉṉa-c-cēlai*, பெ.(n.) கம்பியூசிபோலும் மெல்லிய கோடுகள் அமைக்கப்பெற்ற, புடைவை வகை (இ.வ.); a kind of saree with needle-like stripes.

*[தந்தி + ஊசி + அன்ன + சேலை (அன்ன = உருபினுளொன்று) – தந்தியூசியன்னச் சேலை → தந்தியூசிவன்னச்சேலை]*

**தந்திரக்காரன்** *tandira-k-kāraṉ*, பெ. (n.) *1.* சூழ்ச்சியுள்ளவன்; cunning man, crafty fellow. *2.* நுண்மான் நுழைபுலமிக்கவன்; a person of subtle mind.

*[தந்திரம் + காரன் = தந்திரக்காரன் கரவாளன். கரவு = மறைப்பு. கரவாளன் = மறைத்துப் பேசுவதில் திறமையாளன். காரன் = உடைமைப் பெயரீறு. ஒ.நோ மந்திரக்காரன்]*

**தந்திரகம்** *tandiragam*, பெ. (n.) சீந்தில் (மலை) படர்கொடிவகை; gulancha (செ.அக.).

*[தந்தி → தந்திரகம்]*

**தந்திரகரணம்** *tandira-karaṇam*, பெ.(n.) *1.* திருட்டைப் பற்றிய நூல்; treatise dealing with the art of thieving. *2.* திருட்டைப் பற்றிய நூலில் சொல்லப்படுந் தொழில்கள்; acts prescribed in the treatise on theft. "தந்திரகரண மெண்ணுவராயன்" (சிலப். 16:180).

*[தந்திரம் + கரணம்]*

**தந்திரகலை** *tandira-kalai*, பெ. (n.) கரணங்களைப் பற்றிக் கூறும் தோன்றியம் (ஆகமப்பகுதி) (வின்.); a section of the Āgamā's treating of rites and ceremonies.

*[தந்திரம் + கலை]*

**தந்திரசாத்திரம்** *tandira-šāttiram*, பெ. (n.) தெய்வபூசைக்குரிய மந்திர தந்திரங்களைக் கூறும் நூல்; treatise on mantrā's or magical and mystical formulae for the worship of deities.

*[தந்திரம் + சாத்திரம்]*

**தந்திரநூல்** *tandira-nūl*, பெ. (n.) வெற்றிக்கான வழிமுறை பற்றிக் கூறும் நூல்; tantric science.

*[தந்திரம் + நூல்.]*

**தந்திரபாலன்** *tandira-pālaṉ*, பெ. (n.) படைத் தலைவன் (வின்.); commander of an army.

*[தந்திரம் + பாலன் = பல்கலை வல்லுநன்]*

**தந்திரம்**[1] *tandiram*, பெ. (n.) *1.* வழிவகை; stratagem, scheme, expedient, means. "இத்தந்திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்கு" (திருவாச. 3:131). *2.* தொழிற்றிறமை; craft, handicraft, workmanship. "தந்திரத்தாற் றமநூல் கரைகண்டவன்" (சீவக. 234). *3.* **ஊகம்;** intellectual subtlety. *4.* உருமாற்றுப் பாசாங்கு, ஏய்ப்பு (வின்); dissembling, dissimulation. வருமானவரி கட்டாமல் ஏய்ப்பதற்கு இழப்புக்கணக்கு காட்டுவது ஒரு தந்திரம் (உ.வ.). அவனுடைய தந்திரமான பேச்சில் மயங்கிவிடாதே (இ.வ.). *5.* கல்விநூல் (சூடா.); treatise, literary, scientific or religious. "தந்திரத்தின் வாழுந் தவசிகள்" (இனி. நாற். 19). *6.* தந்திரசாத்திரம் பார்க்க: see *tandira-šāttiram*. *7.* கடவுள்வழிபாட்டிற் காட்டுங் கைச்செய்கை (இ.வ.); manual acts in performing sacrifices, worship, etc., *8.* படை (பிங்.); army, forces. "தந்திரவினைஞரும்" (சிலப். 26:41). *9.* காலாள்; infantry. "இவுளியானை தந்திரம்" (கோயிற்பு.

*இரணி: 117).* **10.** **யாழ்நரம்பு** *(வின்.);* wire or string of a lute.

*[தம் → தன்; துல் → தில் → திர் → திரள் → திரம். ஒருகா. தன் + திறம் → திரம் → தந்திரம் ஒருவனது திறமையினை பல்கலைப் பயிற்சியினை, நுண்மாண் நுழைபுலத்தை, வாழ்வாங்கு வாழும் வழிவகைமையினை, எழிலுற இயம்புவது தந்திரமாகும். தந்திரம். துல் → தில் → திர் → திரள் → திரம். திரம் = 1. உரம் 2. வலிமை 3. உறுதி 4. நிலைபேறு 5. மலை 6. பேரின்பவீடு 7. ஒரு தொழிற் பெயர் ஈறு]*

த. திரம் → வ. ஸ்திர

திறம் → திரம் = 1. உறுதி. 2. வலிமை. 3. நிலைபேறு, 4. கற்பு, 5. சமர்த்து, 6. கூட்டம், 7. ஆடு, மாடு, எருமை எவ்வெண்பது கூடின கூட்டம், 8. மிகுதி., 9. இயல்பு, 10. வகை, 11. கூறுபாடு, 12. சார்பு, 13. கிளைப்பண், 14. செயல், 15. கோலம், 16. கொள்கை, 17. இடையாட்டம் (விஷயம்), 18 செய்தி, 19. ஆம்புடை (உபாயம்), 20. திருவம் (பாக்கியம்), 21. பக்கம்., 22 படித்தரம்.

தன் + திரம் - தந்திரம். தன்னாற்றல்; தன்னாற்றல் மிக்கவன், கூர்த்த அறிவினன்

தந்திரி; தந்திரவாதி அவன் கையாளும் வழிவகைகள், கூர்த்த அறிவுத்திறம் மிக்கவை. தொழிலில் காட்டும் தந்திரம், திறமைக்கு வழி கோலும். வெற்றிக்கான அவ்வழிகளை நூலாக்கினால், அதுவும் தந்திரம் எனப்படும். வடநூலார், தந்திரசாத்திரம் என்பர். கடவுள் வழிபாட்டின்போது, காட்டும் கைச் செய்கைகள், தந்திரம் எனப்படும். போர்க் களத்திற்கனுப்பும் படைகளும் தந்திரம் எனப்படும்.

நல்வழி தவிர, அல்வழியையும் சுட்டும் வகையில், திருட்டையும் தந்திரமென்னுஞ் சொல் குறித்தது. திருட்டைப் பற்றிய நூல் தந்திரகரணம் எனப்பட்டது.

தந்திரம், திருக்கோயில் வினைகளுக்குப் பயன்படும்போது, பேரின்பம் தொடர்புடைய தாகிறது. கோயில் பூசனை செய்வோன் தந்திரி ஆகிறான்.

**தந்திரம்**[2] *tandiram,* பெ. (n.) **மறையின் ஒரு பகுதி நூல்;** a tantric science which is a branch of Vēda.

*[தன் + திரம்.]*

**தந்திரமணம்** *tandira-maṇam,* பெ. (n.) **மெதுவான நடை** *(யாழ்.அக.);* slow pace.

*[தந்திரம் + மணம்]*

**தந்திரமா** *tandira-mā,* பெ. (n.) **நரி (சூழ்ச்சி செய்யும் விலங்கு)** *(சங்.அக.);* fox, as a cunning animal.

*[தந்திரம் + மா.]*

**தந்திரர்** *tandirar,* பெ. (n.) **கந்தருவர் (யாழ் வாசிப்போர்)** *(திவா.);* celestial musicians, as lute-players. "தந்திரர்க் குரிய பாணந் தருகுவன்" *(இரகு. அயனெ: 17).*

*[தந்தி = யாழ்நரம்பு. தந்தி → தந்திரர்]*

**தந்திரவாக்கியம்** *tandiira-vākkiyam,* பெ. (n.) **நகைச்சுவை தோற்றும் ஒருபழைய தமிழ்நூல்** *(தொல். பொருள். 485, உரை.);* a humorous work in Tamil, now extant.

*[தந்திரம் + வாக்கியம்]*

**தந்திரவாதம்** *tandira-vādam,* பெ. (n.) **ஒரு சமயம்;** a religion.

*[தந்திரம் + வாதம்]*

**தந்திரவாதி** *tandira-vādi,* பெ. (n.) **கூர்த்த அறிவினன்;** clever, subtle person *(செ.அக.).*

*[தந்திரம் + வாதி]*

**மறுவ.** நுண்ணறிவாளன்

*[தம் + திறம் → திரம் + வாதி]*

**தந்திரவாயன்** *tandira-vāyaṉ,* பெ. (n.) **1. சிலந்தி;** spider. **2. நெசவுகாரன்;** weaver *(செ.அக.).*

*[தந்திரம் + வாயன் - தந்தி = நூல், இழை]*

நூல், இழை முதலானவற்றைக் கொண்டு நெசவுத் தொழிலாற்றுபவன்

**தந்திரவியன்** *tandiraviyaṉ,* பெ. (n.) **நெய்வோன்;** weaver.

*[தந்தி → தந்திரம் + இயன் → தந்திரவியன்]*

**தந்திரவுத்தி**[1] *tandira-v-utti,* பெ. (n.) **உத்தி**[4]**-3** *(நன்.15)* பார்க்க; see *utti*[4] *3,* devices employed in standard literary works *(செ.அக.).*

*[தந்திரம் + உத்தி]*

**தந்திரவுத்தி**[2] *tandira-v-utti,* பெ. (n.) குழூஉக் குறி; code-words.

*[தந்திரம் + உத்தி]*

**தந்திரன்** *tandiran,* பெ. (n.) கூர்த்த அறிவினன்; schemer, crafty person (செ.அக.).

*[தந்திரம் → தந்திரன் = பல்கலை வல்லுநன்]*

**தந்திரி**[1] *tandiri,* பெ. (n.) 1. சூழ்ச்சியாளன்; schemer; crafty person. 2. படைத்தலைவன்: commander of an army. 3. அமைச்சர் (யாழ்.அக.); minister. 4. கோயிலில் பூசனை செய்பவன் (நாஞ்.); arch-priest of a temple. 5. யாழ்; lute. "நிரைந்த தந்திரி திருத்தி" (திருவாலவா. 57: 24). 6. குழலின்துளை; holes of a flute. "தந்திரிகண் மெலிவித்துஞ் சமங் கொண்டும் வலிவித்தும்" (பெரியபு. ஆனாய. 27).

*[தம் + திறன் → தந்திரன் → தந்திரி]*

**தந்திரி**[2] *tandiri,* பெ. (n.) யாழ்நரம்பு; string of musical instruments. "வீணைத் தந்திரியும்" (பிரமோத். 2, 62).

*[தந்தி → தந்திரி]*



**தந்திரி**[3] *tandiri,* பெ. (n.) சுறாமீன்; shark fish (சா.அக.).

**தந்திரிகம்** *tandirigam,* பெ. (n.) தந்திரிகரம் பார்க்க; see *tandirigaram;* string of a musical instrument.

*[தந்தி → தந்திரி → தந்திரிகம்.]*

**தந்திரிகரம்** *tandiri-garam,* பெ. (n.) செங்கோட்டியாழ் உறுப்புகளில் ஒன்று; a part of seṅgōṭṭiyāḻ. "செங்கோட்டியாழிற் றந்திரிகரத் தொடு" (சிலப். 13:107).

*[தந்தி → தந்திரி → தந்திரிகரம்.]*

**தந்திரிகன்** *tandirigan,* பெ. (n.) 1. (சாக்தம்) காளிய வழிபாட்டினன்; worshippers of the energy. 2. எந்திர மந்திரத்தைக்கொண்டு வேலை செய்பவன்; a magician working with the aid or mystic diagrams. 3. பில்லி சூனியக் காரன்; one skilled in witch craft and sorcery.

*[தந்திரி → தந்திரிகன்.]*

**தந்திரிகை** *tandirigai,* பெ. (n.) கம்பி; wire "தந்திரிகை சுற்றி" (தைலவ. தைல. 41) (செ.அக.).

*[தந்திரி → தந்திரிகை]*

**தந்திரிகை**[2] tandirigai, பெ.(n.) 1. தூக்கம்; sleep. 2. மடி (சோம்பல்); laziness. 3. நூல்; science in general.

*[தந்திரி → தந்திரிகை.]*

**தந்திரிபாலன்** *tandiripālan,* பெ. (n.) சகாதேவனின் ஒருபெயர்; another name for *šahādēvan.*

**தந்திரீகம்** *tandirīgam,* பெ. (n.) உலர்ந்த பேரீச்சம்பழம்; dried date fruit.

*[தந்திரி → தந்திரீகம்]*

**தந்திரீதம்** *tandirīdam,* பெ. (n.) குந்துருக்கம் (வெள்ளைப் பிசின்); white dammer.

*[தந்திரீகம் → தந்திரீதம்]*

**தந்திரை** *tandirai,* பெ. (n.) 1. மடி; laziness. 2. துயிலுதல்; sleep.

**தந்திலத்தி** *tandilatti,* பெ. (n.) யானைக்கழிவு; elephants excreta.

*[தந்தி: யானை; இலத்தி: கழிவு; தந்தி + லத்தி.]*

**தந்திவந்தறம்** *tandivandaram,* பெ. (n.) மேலுலகம்; heaven above.

**தந்திவன்னம்** *tandi-vannam,* பெ. (n.) தந்தியூசி வன்னச்சேலை (இவ.) பார்க்க; see *tandi-y-ūši-vanna-c-cēlai.*

*[தந்தி + வன்னம்.]*

**தந்திவாளம்** *tandi-vāḷam,* பெ. (n.) நேர்வாளம்; croton seed.

*[தந்தி + வாளம்.]*

**தந்திவிரை** *tandivirai,* பெ. (n.) நேர்வாள விதை; croton seed.

*[தந்தி + விதை → விரை.]*

**தந்திவீழுரியோன்** *tandivīḻuriyōṉ,* பெ. (n.) சிவன்; lord Šivaṉ.

*[தந்திவீழ் + உரியோன்.]*

**தந்திவெட்டை** *tandi-veṭṭai,* பெ. (n.) ஆணுறுப்பு நோய் வகை (M.L.); gleet, partial hardening of the penis, chordee (செ.அக.).

*[தந்தி + வெட்டை]*

**தந்திவெள்ளை** *tandi-veḷḷai,* பெ. (n.) தந்தி வெட்டை (M.L.) பார்க்க; see *tandi-veṭṭai.*

*[தந்தி + வெள்ளை]*

**தந்து**[1] *tandu,* பெ. (n.) *1.* நூல்; thread. "வேரிக் கமலத்தின் றந்துவினாற்கட்டச் சமைவ தொக்கும்" (நள. பாயி.6). *2.* கயிறு; string, cord. "தந்து வீசியுடல் சிந்துமால்" (திருவிளை. நகரப்: 26). *3.* கல்விநூல் (திவா.); science, scientific or literary treatise. *4.* கான்முளை (சந்ததி) (யாழ்.அக.); descendant, progeny.

*[தந்தி → தந்து.]*

**தந்து**[2] *tandu,* பெ.(n.) தந்திரம் 1,2,3. பார்க்க; see *tandiram.1,2,3.* "தந்துபண்ணுகிறான்" (வின்.)

*[தந்திரம் → தந்து]*

**தந்து**[3] *tandu,* பெ. (n.) தம்பலப்பூச்சி; a scarlet insect appearing after rain in the cochineal.

**தந்துக்காரன்** *tandu-k-kāraṉ,* பெ. (n.) நகைச்சுவையாளன் (வின்.); witty person.

*[தந்து + காரன். "காரன்" உடைமைப் பெயரீறு. ஒ.நோ. தந்திரக்காரன், மந்திரக்காரன்]*

**தந்துக** *tanduga,* பெ.எ. (adj.) சிறு துளையுள்ள; capillary.

**தந்துகக்கவர்ச்சி** *tanduga-k-kavarcci,* பெ. (n.) நுண்ணிய அரத்தக் குழலின் கவர்ச்சி; spontaneous elevation of liquids in fine hair like tubes - Capillary attraction.

*[தந்துகம் + கவர்ச்சி.]*

**தந்துகக்குழல்** *tanduga-k-kuḻal,* பெ. (n.) சிறுதுளையுள்ள குழல்; capillary vessel.

*[தந்துகம் + குழல்.]*

**தந்துகடம்** *tandugaḍam,* பெ. (n.) சிலந்தி (யாழ்.அக.); spider.

*[தந்து → தந்துகடம்]*

**தந்துகநுகர்ச்சி** *tanduga-nugarcci,* பெ. (n.) நுண்ணிய அரத்தக் குழலின் விலக்கு; capillary repulsion.

*[தந்துகம் + நுகர்ச்சி.]*

**தந்துகம்** *tandugam,* பெ. (n.) *1.* கடுகு (மலை.); Indian mustard. *2.* தூக்கணங்குருவி; Indian tailor bird.

*[தந்து → தந்துகம்]*

**தந்துகாசிதம்** *tandugāšidam,* பெ. (n.) மகர வாழை; a kind of plantain tree.

**தந்துகி** *tandugi,* பெ. (n.) நாடி நுட்பக்குழல்கள் (சங்.அக.); capillaries.

*[தந்து → தந்துகி]*

**தந்துகிசஞ்சயம்** *tandugi-šañjayam,* பெ. (n.) நுண்ணிய அரத்தக் குழலின் திரட்சி; capillary congestion.

**தந்துகிப்புடைப்பு** *tandugi-p-puḍaippu,* பெ. (n.) தந்துகிக் குழல் பெரிதாதல்; enlargement of capillaries.

*[தந்துகி + புடைப்பு.]*

**தந்துகிப்பொசிவு** *tandugi-p-pošivu,* பெ. (n.) நுண்ணிய அரத்தக்குழல் கசிவு; capillary infilteration.

*[தந்துகி + பொசிவு.]*

**தந்துகிருமி** *tandu-kirumi,* பெ. (n.) புழுப்போன்ற நுண்ணுயிரிகள்; vermicularis.

*[தந்து + கிருமி.]*

**தந்துகிவிரிவு** *tandugi-virivu,* பெ. (n.) நுண்ணிய அரத்தக்குழாய் விரிகை; dilatation of capillary vessels.

*[தந்துகி + விரிவு.]*

**தந்துகீடம்** *tandu-kīḍam,* பெ. (n.) சிலந்திப்பூச்சி (சங்.அக.); spider, as a spinning creature.

மறுவ. நூலிழைக்கும் பூச்சி.

*[தந்து = நூலிழை; தந்து + கீடம்]*

**தந்துசாரம்** *tandu-šāram,* பெ. (n.) கமுகு (மலை.); areca-palm.

*[தந்து + சாரம்]*

**தந்துசாலை** *tandu-šālai,* பெ. (n.) நெசவு வீடு; weaving quarters.

*[தந்து + சாலை.]*

**தந்துசீர்** *tanduśīr,* பெ. (n.) மாமேதை என்னும் அறியப்படா மரம்; an unknown tree.

**தந்துநாபம்** *tandu-nābam,* பெ. (n.) ஆவின்கன்று; cow calf.

**தந்துநிறை** *tandu-niṟai,* பெ.(n.) பகையிடத் தினின்று, ஆனிரையை வீரர் தம்மூர்ப்புறத்துத் தந்துநிறுத்துதலைக் கூறும் புறத்துறை (தொல். பொருள். 58); theme which describes the capturing of cows from the enemy's territory and securing them within the confines of one's own country (செ.அக.).

*[தந்து + நிறை. தந்து = படை]*

**தந்துப்பிரமேகம்** *tandu-p-piramēgam,* பெ. (n.) சிறுநீர்க் கடுத்துத் துளித் துளியாய் விழல்; stricture of urethra.

**தந்துபம்** *tandubam,* பெ. (n.) கடுகு (மலை.); mustard.

மறுவ. தந்துகம்

*[தந்துகம் → தந்துபம்.]*

**தந்துபலை** *tandu-palai,* பெ. (n.) திப்பிலி; long pepper.

**தந்துபாகம்** *tandu-pāgam,* பெ. (n.) நூல்போல் வரும் மருந்தின் பக்குவம் (பைஷஜ9); a stage in the prepration of medicine, when it can be drawn out like thread.

*[தந்து + பாகம். தந்து = நூல்]*

**தந்துமந்து** *tandumandu,* பெ. (n.) குழப்பம் (யாழ். அக.); confusion.

*[தந்து + மந்து.]*

**தந்துரம்**[1] *tanduram,* பெ. (n.) ஒழுங்கின்மை; irregularity, disorderliness. "தந்துர சங்க்ராம நிருதர்" (திருப்பு. 1091).

*[தந்து → தந்துரம்]*

**தந்துரம்**[2] *tanduram,* பெ. (n.) தாமரைக்கொடி; lotus creeper.

**தந்துரன்** *tanduran,* பெ. (n.) உயர் பல்லன்; one having prominent teeth.

**தந்துருமம்** *tandurumam,* பெ. (n.) பிரண்டை; adamantine creeper.

*[தந்துரு → தந்துருமம்.]*

**தந்துரை**[1]**-த்தல்** *tandurai-,* 4 செ.கு.வி. (v.i.) மூலத்திற் கூறப்படாத சொற்பொருள் முதலியவற்றை, வருவித்துரைத்தல்; to supply the ellipses and bring out the implications of a text, as in commentary.

*[தா → தந்து + உரை-.]*

**தந்துரை**[2] *tandurai,* பெ. (n.) பாயிரம் (நன்.1) (நூற்குள் நுதலிய பொருளல்லாதனவற்றைத் தந்து கூறுவது); preface, introduction, as giving what is not mentioned in the body of the work.

மறுவ. பாயிரம்.

*[தா + உரை = தந்துரை; ஒருகா. தன் + உரை = தந்துரை எனினுமாம்]*

**தந்துரைக்கிளவன்** *tandurai-k-kiḷavan,* பெ. (n.) பல்லுயிர் போல் குரல் மாற்றிப் பேசுபவன்; one who is skilled in ventriloquial is the art of imiating the voice of living animals, birds, etc.

**தந்துரைக்கிளவி** *tandurai-k-kiḷavi,* பெ. (n.) பிறவுயிர்களைப் போன்று செய்யும் ஒலி; ventriloquial sound. "தந்துரைக் கிளவியிற் றந்துரை முடித்த .... ஆயம்" (பெருங். உஞ்சைக் 54:31).

*[தன் + உரை + கிளவி]*

**தந்துலம்** *tandulam,* பெ. (n.) தந்துரம் பார்க்க: see *tanduram.*

**தந்துவர்** *tanduvar,* பெ. (n.) தந்துவாயர் (வின்.) பார்க்க; see *tandu-vāyar.*

*[தந்து → தந்துவர்]*

**தந்துவாயர்[1]** *tandu-vāyar,* பெ. (n.) கைக்கோளர் (திவா.) (நெசவுத்) தொழிலையுடையவர்; the kaikkōḷar caste whose profession is weaving.

*[தந்து + வாயர்]*

**தந்துவாயர்[2]** *tanduvāyar,* பெ. (n.) சிலம்பி; spider.

*[தந்தி → தந்து. தந்தி = நூல், இழை. நூலிழையால் ஆடை நெய்பவர் தந்திவாயர். தந்திவாயர் என்பது தந்துவாயராயிற்று. நூலிழையில் ஆடை நெய்வதுபோல், சிலந்திப்பூச்சி, தமது உடலினின்று வெளிப்பட்ட மெல்லிழை கொண்டு, கூடு கட்டுவதால், இப் பெயர் பெற்றதெனலாம்.]*

**தந்துவாயி** *tanduvāyi,* பெ. (n.) *1.* நெய்வோன்; weaver. *2.* தந்துவாயர் பார்க்க; see *tandu-vāyar.*

**தந்துவிக்கிரியை** *tandu-vikkiriyai,* பெ. (n.) வாழை (மலை); plantain, Musa.

*[தந்துவி + கிரியை]*

**தந்துவிகா** *tandu-vigā,* பெ. (n.) தந்துவிக்கிரியை பார்க்க; see *tanduvi-k-kiriyai.*

**தந்துவை** *tanduvai,* பெ. (n.) *1.* தம்மாமி, தாய்மாமனின் மனைவி (தொல். சொல். 400, உரை); mother's brother's wife. *2.* மாமியார்; mother-in-law.

*[தா + அவ்வை = தந்துவை]*

**தந்தை** *tandai,* பெ. (n.) தகப்பன்; father. "தந்தையுந் தன்னையும்" (தொல்.பொருள். 137).

தெ. தந்தரி; க. தந்தெ; ம. தந்த

*[தம் + ஐ = தந்தை]*

விந்து நிலையில், மனைவிக்கு பிள்ளையைத் தருபவனே தந்தை.

**தந்தைபெயரன்** *tandai-peyaraṉ,* பெ. (n.) மகன் (தன் தந்தையின் பெயரினையுடையான்); son, as bearing his grand-father's name. "தந்தைபெயரன் . . . சிறு தேருருட்டுந் தளர்நடை" (ஐங்குறு: 403).

*[தந்தை + பெயரன்]*

**தந்தையர்** *tandaiyar,* பெ. (n.) தந்தையரைவர் பார்க்க; see *tandai-y-araivar.*

*[தந்தை + அர் → தந்தையர்]*

**தந்தையரைவர்** *tandai-y-araivar,* பெ. (n.) அரசன், தலைவன், தந்தை, முன்னோன், குரவன் (பிங்.); அரசன், ஆசிரியன், தாய், தந்தை தம்முன் (ஆசாரக்.); பிறப்பித்தோன், கற்பித்தோன், மணமுடிப்பித்தோன், உணவு தந்தோன், பேரிடருக்கு உதவினோன் (வின்.) என்ற ஐவகைத் தந்தையர்; five fathers, viz, king, cheif, father, elder brother and preceptor according to Piaṅgalandai king, preceptor, mother, father and elder brother according to Āšāra -k-kōvai; father, teacher, father-in-law, food-giver and helper in danger according to Winslow.

*[தந்தையர் + ஐவர்]*

**தந்தையன்** *tandaiyaṉ,* பெ. (n.) தந்தை பார்க்க; see *tandai.* "தந்தையன் றனக்கு முதவினன்" (திருவாலவா. 49:12).

*[தம் + ஐ + அன்.]*

**தந்தோமம்** *tandōmam,* பெ. (n.) நரம்புக் கட்டி; fibroma.

**தந்தோற்பவரோகம்** *tandōrpava-rōgam,* பெ. (n.) குழந்தைகள் நூல், கயிறு, மயிர் போன்ற வற்றை விழுங்குவதால் உண்டாகும் நோய்கள்; a disease in children marked by fever vomitting due to swallowing thread, cord hairs etc.

**தந்நகரம்** *tannagaram,* பெ. (n.) 'ந' என்ற மூக்கொலி எழுத்து; the dental nasal 'n', as dist. fr. ṟaṉṉagaram (செ.அக.).

**தந்நாகமம்** *tannāgamam,* பெ. (n.) சமய நிகழ்வுகளைப் பற்றிய ஆகமநூல்; one of the divition of the Āgama Philosophy treating on rite operation of diagrams.

**தந்நீர்** *tannīr,* பெ. (n.) தன்னுடைய சிறுநீர்; self urine.

*[தன்னீர் → தந்நீர்]*

**தந்நுகர்ச்சி** *tannugarcci,* பெ. (n.) *1.* தானே நுகர்ந்து மகிழ்தல்; self enjoyment. *2.* நுகர் வினை; experience of ones pleasure or pain from farmer deeds.

**தப்பக்குட்டித்திருக்கை** *tappa-k-kuṭṭi-t-tirukkai,* பெ. (n.) 1. சப்பைத்திருக்கை பார்க்க; see *sappai-t-tirukkai,* a kind of sea-fish. 2. செம்பழுப்பு நிறமும், ஆறடி அகலமும், மூன்றடி நீளமும் உள்ள மீன்வகை; sting-ray, reddish-brown, attaining 6 ft. across, 3 ft. in length, Pteroplatea micrura.

மறுவ. தப்பக்குழி.

தெ. தப்புக்குட்டி

*[தப்பைக்குட்டி → தப்பக்குட்டி + திருக்கை]*

**தப்பக்குழி** *tappa-k-kuḻi,* பெ. (n.) தப்பக்குட்டித் திருக்கை பார்க்க; see *tappa-k-kuṭṭi-t-tirukkai* (செ.அக.).

*[சப்பை → தப்பை + குழி. சப்பை - ஆழக்கடலின் சிறுபள்ளத்தில் தங்கும் திருக்கைமீன்]*

**தப்பட்டம்** *tappaṭṭam,* பெ. (n.) தப்பட்டை பார்க்க; see *tappaṭṭai.*

*[தப்பட்டை → தப்பட்டம்]*

**தப்பட்டை** *tappaṭṭai,* பெ. (n.). 1. ஒருகட்பறை; one-headed drum. 2. இடத்தோளில் மாட்டிக் கொண்டு, குறுந்தடியால் அடிக்கப்படும் சிறுபறை வகை; a small drum hung from the left - shoulder and beaten with a small stick.

மறுவ. சிறுகொட்டு

தெ. தப்பெட்ட; க. தப்பட்டே; ம. தப்பிட்ட

*[தப்பட்டை - சிற்றூர்களிற் சிறப்புச் செய்தியினைத் தப்புத் தப்பென்றுத் தப்பியடித்து, அறிவிக்கப் பயன்படுஞ் சிறுபறை]*



**தப்பட்டைக்காரன்** *tappaṭṭai-k-kāraṉ,* பெ. (n.). பறையடிப்போன்; drummer (செ.அக.).

*[தப்பட்டை + காரன். 'காரன்' உடைமைப் பெயரீறு. ஒ.நோ. கொட்டுக்காரன் தோட்டக்காரன்]*

**தப்பட்டைமேளம்** *tappaṭṭai-mēḷam,* பெ. (n.) 1. சிறுபறை வகை; small tomtom. 2. பறை தட்டி இசைக்கும் குழு; group to beat drums.

*[தப்பட்டை + மேளம் = தப்பட்டை மேளம் போன்றவற்றைக் கொண்டு இசைக்கும் இன்னியக்குழு.]*

**தப்படி** *tappaḍi,* பெ. (n.) 1. தவறான செய்கை (வின்.); false step. 2. விரைந்த நடையில் ஒரெட்டுத் தூரம்; one step distance in fast walking. 3. ஐந்தடி அல்லது மூன்றடி கொண்ட கால்வைப்பு; stride pace of five or three feet.

க. தப்படி.

*[தப்பு + அடி - தப்படி]*

**தப்பணம்** *tappaṇam,* பெ. (n.) கோணியூசி (C.G.); tacking needle.

தெ. தப்பனமு; க. தப்பல

**தப்பல்**[1] *tappal,* பெ. (n.) குற்றம்; fault, mistake, crime. "புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்கு" (குறுந். 292).

தெ. தப்புட்டு; ம. தப்பல்

*[தப்பு → தப்பல்]*

**தப்பல்**[2] *tappal,* பெ. (n.) அடி; blow (செ.அக.).

*[தப்பு → தப்பல். தப்பு = தப்புத் தப்பென்று தப்புதல், அடித்தல், எனினும் ஒன்றேயாகும்.]*

**தப்பளங்கொட்டு-தல்** *tappaḷaṅ-koṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தப்பளைகொட்டு பார்க்க; see *tappaḷai-koṭṭu* (செ.அக.).

*[தப்பளம் + கொட்டு-.]*

**தப்பளம்**[1] *tappaḷam,* பெ. (n.) எண்ணெய் முதலியன நிரம்பத் தேய்க்கை (இ.வ.); smearing, rubbing, as oil.

*[தப்பு → தப்பளம்]*

**தப்பளம்**[2] *tappaḷam,* பெ. (n.) பல காய் கறிகளைப் புளியிலிட்டுப் பதப்படுத்திய குழம்பு (இ.வ.); tamarind soup containing pieces of vegetables.

*[தப்பு → தப்பளம் (மு.தா. 122)]*

**தப்பளம்**[3] *tappaḷam,* பெ. (n.) பற்று; grasp, grip.

*[தப்பு → தப்பளம் (மு.தா. 122)]*

**தப்பளம்போடு-தல்** *tappaḷam-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) எண்ணெய் முதலியன நிரம்பத் தேய்த்தல் (இ.வ.); to smear profusely, as oil.

*[தப்பளம் + போடு. தப்பு + அளம் – தப்பளம் = தப்புகை, தேய்க்கை, அரைக்கை, தோய்க்கை "அளம்" சொல்லாக்க ஈறு]*

**தப்பளாக்கட்டை** *tappaḷā-k-kaṭṭai,* பெ. (n.) சப்பளாக்கட்டை (நாஞ்.) தாளக்கருவி; a pair of wooden pieces a set of musical instruments.

*[தப்பளம் + கட்டை. தப்பு → தப்பளம். கட்டையை ஒன்றோடொன்று பொருத்திச் சேர்த்து அடித்தல். அடித்தற் கருத்தினின்று ஒலித்தற் கருத்து தோன்றியது 'பண்' பொருந்த இசைபாடுதற்குத் தப்பளாக்கட்டை பேருதவி, புரிந்தது]*



**தப்பளை** *tappaḷai,* பெ. (n.) 1. தவளை; frog. 2. பெருவயிறு (வின்.); big belly. 3. அடித்த விடத்துப் பெருத்துத் தோன்றும் சதைப்பகுதி; protruding biceps when struck. 4. மீன் வகை (இ.வ.); a kind of fish.

க. தப்பலெ

*[தவளை → தப்பளை]*

**தப்பளைக்கொக்கி** *tappaḷai-k-kokki,* பெ. (n.) அணியின் கொக்குவாய் வகை; a kind of hook in jewels (செ.அக.).

*[தப்பளை + கோக்கி – தப்பளைக்கோக்கி → தப்பளைக்கொக்கி. அணிகலனின் ஒரு முனையுடன் பிறிதொரு முனையைக் கோர்க்கும் கோக்கை. கோக்கை → கோக்கி → கொக்கி]*



**தப்பளைகொட்டு-தல்** *tappaḷai-koṭṭu-,* 5 செ.குவி. (v.i.) நீந்துகையில் கை கால்களை யடித்தல் (நாஞ்.); to strike out in swimming.

மறுவ. தப்பளங்கொட்டுதல்

*[தப்பு → தப்பளை + கொட்டு-. நீந்துங்கால், தப்புத்தப்பென்று நீரினைக் கையினாலும் காலாலும் துழாவி, நீச்சற் பயிலுதல்]*

**தப்பளைப்பூட்டு** *tappaḷai-p-pūṭṭu,* பெ. (n.) பூட்டுவகை; a kind of padlock (செ.அக.).

*[தப்பளை + பூட்டு. தப்பளை = தட்டையான அமைப்பு. தட்டையாக அமைந்த பூட்டு.]*

**தப்பறை** *tappaṟai,* பெ. (n.) 1. பொய் (வின்.); lie, falsehood. 2. ஏமாற்றுகை; deception fraud. "தப்பறைக் காரியென்று சண்டைக்கு வாய் திறந்தான்" (விறலிவிடு. 733). 3. தப்பு (வின்.); irregularity, error. 4. கெட்டப் பேச்சு (வின்.); obscenity, obscene language.

தெ. தப்பற; I. tabbara.

*[தப்பு + அறை. தப்பு = சூழ்ச்சி. அறைகை = பேசுகை; சூழ்ச்சியாகப் பேசுகை]*

**தப்பறைக்காரன்** *tappaṟai-k-kāraṉ,* பெ. (n.) பொய்யன்; liar (செ.அக.).

*[தப்பறை + காரன். தப்பு → தப்பறை = பொய்யை மூலதனமாக வைத்துப் பிழைப்பவன். "காரன்" உடைமைப் பெயரீறு.]*

**தப்பாமல்** *tappāmal,* பெ. (n.) *1.* தவறாமல்; without fail. *2.* இம்மியும் பிசகாமல்; without the slightest deviation. அப்பனுக்குப் பிள்ளை தப்பாமல் பிறந்திருக்கு *(பழ.).*

**தப்பி-த்தல்** *tappi-,* 4 செ.கு.வி. (v.i.) குற்ற முதலியவற்றினின்று விலகுதல்; to escape, get-free.

தெ. தப்பிஞ்சுகொனு; ம. தப்புக

*[தப்பு = தவறுதல், விலகுதல்; தப்பு → தப்பி-.]*

**தப்பிச்சி** *tappicci,* பெ. (n.) ஆவி; an unknown tree.

**தப்பித்தவறி** *tappi-t-tavaṟi,* கு.வி.எ. (adv.) *1.* தவறுதலாய்; by mistake; unintentionally. அந்தச் செய்தியைத் தப்பித்தவறிக் கூட அவனிடம் சொல்லி விடாதே *(இ.வ.).* *2.* தற்செயலாய்; by chance.

*[தப்பு + தவறு → தப்புத்தவறு → தப்பித்தவறி]*

**தப்பித்தான்** *tappittāṉ,* பெ. (n.) தப்புச் செய்தவன்; one who commits blunders. "தப்பித் தான் பொருளே போற் றமியவே தேயுமால்" *(கலித். 149:5).*

*[தப்பு + இழைத்தான் - தப்பிழைத்தான் → தப்பித்தான்]*

**தப்பிதம்** *tappidam,* பெ. (n.) *1.* தவறு; blunder, mistake, error, wrong. "என்ன தப்பிதம் சொன்னேன்" *(இராமநா. அயோத். 8, சரணம். 16).* *2.* நெறிதவறுங் குற்றம்; evil-doing, deviation from moral rectitude, violation of rule .

மறுவ. தவறு

தெ. தப்பிதமு; ம. தப்பிதம்; க. தப்பித

*[தப்பு + இதம். இதம் = சொல்லாக்க ஈறு]*

**தப்பிப்பிழைத்தல்** *tappi-p-piḻaittal,* பெ. (n.) உயிர் பிழைக்கை; escaping death.

**தப்பியார்** *tappiyār,* பெ. (n.) *1.* குற்றம் செய்தோர்; those who have committed a crime. *2.* பகைவர்; enemies. "தப்பியா ரட்ட களத்து" *(களவழி. 5).*

*[தப்பு → தப்பி + ஆர் - தப்பியார்]*

**தப்பிலாவேளான்** *tappilā-vēḷāṉ,* பெ. (n.) திருமயம் வட்டம் பொன்னமராவதியில் உள்ள திருமால் கோயிலின் கணக்கை வைத்திருக்கும் அதிகாரி; an officer of the Thirumāl temple at Poṉṉamarāvadi in Thirumayam taluk. "இப்படிக்கு கோயில் கணக்கு தப்பிலா வேளான் எழுத்து" *(S.I.I. XXVI. 15 - 17)*

*[தப்பு + இலா + வேளான். வேளான் என்பது குலாலர் குடியினரின் பட்டப் பெயர்]*

**தப்பிலி**[1] *tappili,* பெ. (n.) குற்றமற்றவன்; faultless person *(செ.அக.).*

*[தப்பு + இலி]*

**தப்பிலி**[2] *tappili,* பெ. (n.) போக்கிலி; knave, rogue *(செ.அக.).*

தெ. தப்பிலி, க. தப்பிலி

**தப்பு**[1]**-தல்** *tappu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* தவறுதல்; to err, mistake, blunder, fail. "தப்பாமே தாளடைந்தார்" *(திருவாச. 8:11).* *2.* பயன்படாது போதல்; to be unserviceable, fruitless or valueless. "மருந்தாகித் தப்பா மரத்தற்றால்" *(குறள், 217).* *3.* பிறழ்தல்; to go wrong, as a tune, a recitation, a calculation. பாடந் தப்பி விட்டது *4.* விட்டுப்போதல்; to be omitted. "முற்றும் பற்றித் தப்புதலின்றிக் கொன்று" *(கம்பரா. இரணிய. 142).* *5.* பேரிடரினின்று காப்பாக நீங்குதல்; to escape injury; to be saved, rescued, preserved ஓடம் கவிழ்ந்தபோது அவனொருவனே நீந்தித் தப்பினான். *6.* காணாமற் போதல்; to be lost. *7.* இறத்தல்; to die. "சாவதுறுதியான் றப்பிய பின்றை" *(பெருங். உஞ்சைக். 36, 65).* *8.* தடவுதல்; to grope, feel about.

ம. தப்புக; தெ. தப்பு; க. தப்பு, தப்பிசு; து. தப்புனி

*[தபு → தப்பு-.]*

**தப்பு²-தல்** *tappu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **பிழை செய்தல்;** to offend, commit, offence against. "பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்" *(புறநா. 34). 2.* **அழித்தல்;** to kill, destroy. "அரவுந்தப்பா" *(பெரும்பாண். 42). 3.* **அடித்தல்;** to strike. அவனைத் தேவையின்றித் தப்புகிறான் *(உ.வ.). 4.* **துணி துவைத்தல்;** to beat on a stone, as in washing clothes. "நாமதனைத் தப்பினா னம்மையது தப்பாதோ" *(பெருந்தொ. 1576). 5.* **அப்பம் முதலியன தட்டுதல்** *(யாழ்ப்.);* to beat into cakes, as flour, mud. *6.* **கையால் தட்டுதல்;** to pat, clap. *7.* **தடவிப்பார்த்தல்** *(இ.வ.);* to feel about and search. *8.* **அப்புதல்** *(யாழ்ப்.);* to smear, as sandal paste; to put on and rub, as cooling ingredients. *9.* **விட்டு விலகுதல்** *(பெருந்தொ. 1576);* to escape, slip away from. எதிர்பாராத நேர்ச்சியில், தலை தப்பினார் *(உ.வ.). 10.* **செய்யத்தவறுதல்;** to fail to do. "தப்புதி யறத்தை யேழாய்" *(கம்பரா. நிந்தனை. 54). 11.* **தண்டுதல்** *(பிங்.);* to collect, as money.

தெ., க. தப்பு; து. தப்புனி; ம. தப்புக; U. தப்னா

*[ஒருகா. தொப்பு → தப்பு-. (மு.தா. 112).]*

**தப்பு³** *tappu,* பெ. (n.) *1.* **குற்றம், தவறு;** fault, error, mistake, misdeed, misdemeanour, slip, failure. "தன்கைகால் தப்புச்செய்த தென்று பொடிய" *(திவ். திருப்பா. 28, வ்யா. பக். 244).* தப்பில் ஆனவனை உப்பிலே போடு *(பழ.). 2.* **பொய்;** lie, falsehood. *3.* **ஏமாற்றுகை** *(வின்.);* fraud, deception. தப்பும் திப்பும் தாறுமாறும் *(பழ.). 4.* **தப்பித்துக் கொள்ளுகை** *(வின்.);* escape, flight, slipping away, release, extrication. *5.* **துவைக்கை** *(இ.வ.);* beating clothes in washing. *6.* **ஒருவகைப் பறை;** a small tomtom. "தப்பென வங்கை கொட்டி" *(திருவாலவா. 58:6).* தப்பு அடித்தவன் தாதன், சங்கு ஊதினவன் ஆண்டி *(பழ.).*

தெ., க., ம., து. தப்பு

*[தொப்பு → தப்பு]*

**தப்புக்கணக்கு** *tappu-k-kaṇakku,* பெ. (n.) **உண்மைக்கு மாறான மதிப்பீடு;** miscalcula tion assessment wrongly.

*[தப்பு + கணக்கு]*

**தப்புக்கணக்குப்போடு-தல்** *tappu-k-kaṇakku-p-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) **ஒன்றைக் குறித்துத் தவறாக மதிப்பிடுதல்;** to assess wrongly. அவனைப் பற்றித் தப்புக்கணக்குப் போடாதே *(உ.வ.).*

*[தப்பு + கணக்கு + போடு-.]*

**தப்புக்காய்ப்பு** *tappu-k-kāyppu,* பெ. (n.) *1.* **காலந்தவறிக் காய்க்கை** *(இ.வ.);* fruitage out of season. *2.* **எண்ணும்போது விடுபட்ட பொருள்;** left out article during counting.

*[தப்பு + காய்ப்பு. தப்புகை = பருவந் தவறுகை]*

**தப்புக்குட்டித்திருக்கை** *tappu-k-kuṭṭi-t-tirukkai,* பெ. (n.) *1.* **சப்பைத்திருக்கை மீன்;** a kind of flat ray fish. *2.* **ஒரு வகைச் சிவப்புக் கடல் மீன்;** sting ray fish.

மறுவ. தப்புக்கூலி

*[தப்புக்குட்டி + திருக்கை]*



**தப்புக்கூலி** *tappu-k-kūli,* பெ. (n.) **சப்பைத் திருக்கை;** sea fish.

மறுவ. சப்பைத் திருக்கை

*[தப்பு + கூலி]*

**தப்புக்கொட்டை** *tappu-k-koṭṭai,* பெ. (n.) **அறுவடைக் காலத்தில் சிதறிப்போன நிலக் கடலை;** ground-nuts left in the ground after harvest. *2.* தப்புச்செடி பார்க்க; see *tappu-c-ceḍi.*

**தப்புச்செடி** *tappu-c-ceḍi,* பெ. (n.) **தானே தோன்றிய செடி;** self-sown, uncultivated plant *(செ.அக.).*

*[தப்பு + செடி]*

**தப்புத்தண்டா** *tappu-t-taṇḍā*, பெ. (n.) *1.* குற்றம்; misdemeanour. *2.* தொந்தரை; trouble *(செ.அக.).*

*[தப்பு + தண்டா]*

**தப்புத்தண்ணீர்** *tappu-t-taṇṇīr*, பெ. (n.) பள்ளங்களிலுள்ள ஆழமில்லாத நீர் *(வின்.)*; shallow, stagnant water, as in hallows. *2.* பரவு நீர்; spreading water.

*[தப்பு + தண்ணீர் = இயல்பாகவமைந்த ஆழமற்ற பள்ளப்பகுதிகளில் உள்ள நீர். இந்நீர் பள்ளப்பகுதியிலூறியதும், மழைக்காலத்தே தேங்கியதுமாகும்]*

**தப்புந்தவறுமாக** *tappun-tavaṟum-āga*, கு.வி.எ. (adv.) மிகையான தவறுகளுடன்; faultily; in a faulty way. மிகுவிரைவில் எல்லாவற்றையுமே தப்புந்தவறுமாகச் செய்துவிட்டான் *(உ.வ.).*

*[தப்பும் + தவறும் + ஆக]*

**தப்புநடத்தை** *tappu-naḍattai*, பெ. (n.) தீய வொழுக்கம் *(இ.வ.)*; bad conduct.

*[தப்பு + நடத்தை]*

**தப்புமீன்** *tappu-mīṉ*, பெ. (n.) காலந்தவறி கடற்பரப்பில் வலைப்படும் மீன் *(செங்கை)*; a kind of fish.

*[தப்பு + மீன்]*

**தப்புமுதல்** *tappu-mudal*, பெ. (n.) வயல்களில் தானே முளைக்கும் பயிர் *(தஞ்சை.)*; casual growth in fields.

*[தப்பு + முதல்]*

**தப்புமேளம்** *tappu-mēḷam*, பெ. (n.) ஒருவகைப் பறை; a small tom-tom.

*[தப்பு + மேளம். தப்பு = கொட்டு]*

**தப்புவிரால்** *tappuvirāl*, பெ. (n.) பூசிப்புணர்தல்; to besmear and embrace.

**தப்புவீணை** *tappu-vīṇai*, பெ. (n.) வீணை வகை *(யாழ்.அக.)*; a kind of lute.

*[தப்பு + வீணை]*

**தப்பெண்ணம்** *tappeṇṇam*, பெ. (n.) தவறான எண்ணம் *(இ.வ.)*; mistaken opinion; wrong idea; prejudice.

*[தப்பு + எண்ணம்.]*

**தப்பை**[1] *tappai*, பெ. (n.) மாலிய அடியார் கையிற் கொள்ளுஞ் சிறுபறை வகை; tabret, used by vaishnava mendicants *(செ.அக.).*

*[தப்பு → தப்பை]*

**தப்பை**[2] *tappai*, பெ. (n.) *1.* மூங்கிலை நெடுகப் பிளந்த பிளாச்சு; reapers obtained by splitting the bamboos longitudinally. *2.* முறிந்த எலும்பு பொருந்தும்படி வைத்துக்கட்டும் மூங்கிற் பற்றை *(வின்.)*; bamboo splints for a broken bone. தப்பை வைத்துக் கட்டுதல் *(உ.வ.)*; தப்பை வைத்துக் கட்டினர் *(உ.வ.)*. *3.* கூரைக்குரிய மூங்கிற்சட்டம் *(இ.வ.)*; bamboo splits for roofing.

தெ. தப்ப; க. தப்பெ.

*[சப்பை → தப்பை (மு.தா. 122)]*

**தப்பை**[3] *tappai*, பெ. (n.) அடி *(இ.வ.)*; blow.

தெ. தப்ப.

*[தப்பு → தப்பை (மு.தா. 112)]*

**தப்பைக்காய்** *tappai-k-kāy*, பெ. (n.) நாரத்தங்காய்; bitter orange.

*[தப்பை + காய்]*

**தபச்சரணம்** *taba-c-caraṇam*, பெ. (n.) தவஞ் செய்கை; practice of penance. "தபச்சரணம் பண்ணி யருளாநின்ற பகவானை" *(மணிமே. பக். 155. ஸ்ரீபுராணம்).*

*[தவம் → தபம் + சரணம்]*

**தபசம்** *tabašam*, பெ. (n.) பறவை; bird *(சா.அக.).*

**தபசி**[1] *tabašī*, பெ. (n.) தவசி பார்க்க *(இ.அ.)*; see *tavaśi.*

*[தவசி → தபசி]*

**தபசி**[2] *tabašī*, பெ. (n.) ஆயா மரம்; entire-leaved elm *(செ.அக.).*

*[தப → தபசி]*

**தபசியம்** *tabašiyam,* பெ. (n.) *1.* **மீன மாதம்** *(பங்குனி) (சங்.அக.);* the Tamil̠ month Paṅgun̠i. *2.* **முல்லை** *(மூ.அ.)* **காட்டுமல்லிகை;** wild jasmine.

*[தபசி → தபசியம்]*

**தபசிலே** *tabašilē,* குவி.எ. (adv.) **முன்பாக** (இ.வ.); at the head.

*[தபசில் + ஏ]*

**தபசு** *tabašu,* பெ. (n.) **தவம்** (இ.வ.) பார்க்க; see *tavam.*

*[தவம் → தபம் → தபசு]*

**தபசுகாலம்** *tabašu-kālam,* பெ. (n.) **கிறித்தவர் கொண்டாடும் நோன்பு நாட்கள்;** lent, as the period of fasting.

**தபசுநாள்** *tabašu-nāḷ,* பெ. (n.) **தபசுகாலம்** பார்க்க; see *tabašu-kālam* (செ.அக.).

**தபசுநாளொருசந்தி** *tapašunāḷ-oru-šandi,* பெ. (n.) **தபசு நாட்களில் ஒரு பொழுது உண்ணுதல்;** lent fast (செ.அக.).

*[தவசு → தபசு + நாள் + ஒருசந்தி]*

**தபசுவினி** *tapašuvin̠i,* பெ. (n.) **சடாமாஞ்சில்;** Indian spikenard, valeriane root (சா.அக.).

**தபதபவெனல்** *tapa-tapa-v-en̠al,* பெ. (n.) **விரைவாகத் தொடர்தற் குறிப்பு** (இ.வ.); expr. signifying quick succession.

**தபநீயம்** *tapanīyam,* பெ. (n.) **பொன்;** gold (சா.அக.).

*[தகதக → தக → தகநீயம் → தபநீயம். தகதக – தகதகவென்று எரிகை. 'தீ' போல் மின்னுகை. மின்னும் பொன்]*

**தபம்**[1] *tapam,* பெ. (n.) *1.* **தவம்** பார்க்க; see *tavam.* "தபநய நட்பிற்றாய தாபதன்" *(இரகு. இரகுவுற். 40).* *2.* **மாசிமாதம்** (வின்.); the tamil̠ month māši.

*[தவம் → தபம்]*

**தபம்**[2] *tapam,* பெ. (n.) *1.* **வெப்பம்**; heat. *2.* **வேனிற் காலம்;** summer.

*[தகம் = எரிவு, சூடு. தகம் → தபம்]*

**தபமேதம்** *tabamēdam,* பெ. (n.) **செந்நாய்;** hound, a ferocious dog.

**தபரியோன்** *tabariyōn̠,* பெ. (n.) **பச்சைப்பாம்பு;** green snake (சா.அக.).

**தபலத்தி** *tapalatti,* பெ. (n.) **காளி;** the Goddess Šakti (சா.அக.).

**தபலை**[1] *tapalai,* பெ. (n.) **ஏனவகை;** a kind of metal vessel. "தம்பிக்கை யென்றுந் தவலை யென்றும்" *(விறலிவிடு. 747).*

தெ. தபெல. க. தபல

**தபற்சனதேக்கம்** *tapaṟšan̠a-tēkkam,* பெ. (n.) **மரவட்டை;** a kind of milli pedes.

**தபன்** *tapan̠,* பெ. (n.) **ஞாயிறு** (யாழ்.அக.); sun.

மறுவ. கதிரவன், செஞ்சுடரோன்

*[தகம் → தவம் → தபம் → தபன். தகம் = எரிவு, சூடு.*

*ஒருகா. தகன் → தபன் – சுட்டெரிக்கும் கதிர்களையுடைய செஞ்சுடரோன்]*

**தபனகம்** *tapan̠agam,* பெ. (n.) **கொடுவேலி;** hedge creeper Leadwort (சா.அக.).

**தபனம்** *taban̠am,* பெ. (n.) *1.* **வெப்பம்;** heat. *2.* **வேனிற்காலம்** (யாழ்.அக.); hot season. *3.* **நீர்வேட்கை** (வின்.); thirst. *4.* **அளறு** (மணிமே. 5: 181, அரும்.); a hell. *6.* **மனத்துயர்;** grief.

*[தகம் → தவம் → தபம் → தபன் → தபனம். தகம் = எரிவு, சூடு. ஒருகா. தகனம் → தபனம். தபம் = மிகுதியான வெப்பம்; வெப்பம் முழுமையாகச் சுட்டெரிக்கும் வேனிற்காலம். மிகுதியான வெப்பத்தாலேற்படும் தாகம்; தாகத்தினாலேற்படும் தவிப்பு, முதலான பொருண்மையில் வருவது கண்டுகொள்க]*

**தபனமண்டபம்** *tapan̠a-maṇḍapam,* பெ. (n.) **மகிழ்மண்டபம், இளவேனில் மண்டபம்;** a maṇḍapam where the spring festival of a temple is celebrated (செ.அக.).

*[தகம் → தவம் → தபம் → தபன் → தபனம் + மண்டபம். தபன் + 'அம்' பெருமைப் பெயரொட்டு. தகனம் → தபனம் = எரிவு; வெப்பம்; சூடு.*

*வெப்பத்திலிருந்து விலகிச்சென்று இளைப்பாறி, மகிழ்ந்திருக்கும் நிழல் மண்டபம். ஒருகா: தகனமண்டபம் → தபனமண்டபம்]*

**தபனமணி** *tapaṉa-maṇi,* பெ. (n.) சூரியகாந்தக் கல் (யாழ்.அக.); sun-stone.

*[தபனம் + மணி]*

**தபனற்கஞ்சி** *tapaṉaṟkañji,* பெ. (n.) மஞ்சள் (தைலவ.தைல.); (வெயிலில் நிறமிழப்பது); saffron, as losing its colour in the sun (செ.அக.).

*[தபனன் + கு + அஞ்சி]*

**தபனன்** *tabaṉaṉ,* பெ. (n.) 1. ஞாயிறு; sun. "தங்கள்குலக் கலைமதியைத் தபன னென்னும்" (பாரத. அருச்சுனன்றீர். 32). 2. தீக்கடவுள் (திவா.); Agni, the god of fire. 3. கொடுவேலி (மலை.); leadwort.

*[தகம் → தவம் → தபம் → தபனன். தகம் = எரிவு, சூடு, சூடு தரும் பரிதி. தபனம் → தபனன் "அன்" ஆண்பாற் பெயரீறு. ஒருகா. தகன் → தபன் + அன்]*

**தபனாக்கினி** *tapaṉā-k-kiṉi,* பெ. (n.) சேங்கொட்டை; marking-nut (சா.அக.).

**தபனியம்** *tapaṉiyam,* பெ. (n.) பொன்; gold. "தபனியப்பொது" (கந்தபு. சூரனரசி. 2).

*[தகன் → தபன் + இயம். பொன்னின் ஒளிருந்தன்மையால் தமனியம் எனப்பட்டது. இயம் = சொல்லாக்க ஈறு]*

**தபனீயகம்** *tapaṉīyagam,* பெ. (n.) தபனியம் பார்க்க; see *tapaṉiyam.*

*[தபனியம் → தபனீயகம்]*

**தபாற்கஞ்சி** *tapāṟkañji,* பெ. (n.) மஞ்சள்; saffron (சா.அக.).

**தபி-த்தல்** *tapi-,* 4 செ.குவி. (v.i.) 1. காய்தல்; to be hot, as the sun. சூரியன் தபிக்கிறான் (உ.வ.). 2. வருந்துதல்; to be distressed. "தண்ட மோதத் தபித்து" (சேதுபு. சேதுசரு. 27).

*[தகம் = எரிவு, சூடு. தகி → தபி-. மிகு வெப்பத்திலும், கடுந் துன்பத்திலும் ஆட்பட்டு உழலுதல்]*

**தபிஞ்சம்** *tapiñjam,* பெ. (n.) 1. பச்சிலை; green leaf. 2. ஆமணக்கு; castor seed (சா.அக.).

**தபு[1]-தல்** *tapu-,* 4 செ.குவி. (v.i.) 1. கெடுதல் (சூடா.); to perish, come to an end. "புரைதபு நாளொடு" (கம்பரா. மந்தரை. 86). 2. இறத்தல்; to die. "தாய்தபுநிலை" (பு. வெ. 10, சிறப்பிற் பொதுவி. 5: கொளு).

க. தவு

*[தகு → தவு → தபு (வ.வ. 171)]*

த. தபு → Skt. dabh = இருக்கு வேதம்.

**தபு[2]-த்தல்** *tapu-,* 4 செ.குவி. (v.i.) கெடுத்தல்; to destroy. "உள்ளமழியய வூக்குநர் மிடறபுத்து" (பதிற்றுப். 13:18).

*[தகு → தவு → தபு-. (வ. மொ. வ. 172)]*

*ஒருகா. தபு - தல் → தபு-த்தல்; கெடு-தல் → கெடு-த்தல்*

**தபுக்கெனல்** *tabu-k-keṉal,* பெ. (n.) 1. விழுதல் முதலியவற்றின் விரைவுக்குறிப்பு; expr. signifying haste, rashess, etc., as in falling. 2. ஓர் ஒலிக்குறிப்பு; Onom. expr. of sharp sound.

க. தபக்கனெ

*[தபுக்கு + எனல்]*

**தபுத்து-தல்** *tabuttu-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஈரம் புலர்த்துதல்; to warm. "முழுக்கியுந் தபுத்தியும்" (கல்லா. 53: 16).

*[தபம் → தபுத்து. தபம் = வெப்பம். தபு = காய்தல்]*

**தபுதாரநிலை** *tabu-tāra-nilai,* பெ. (n.) கணவன் தன் துணையிழந்து, துயருறும் நிலையைக் கூறும் புறத்துறை; theme describing the grief of a husband at the death of his wife. "காதலி யிழந்த தபுதார நிலையும்" (தொல். பொருள். 79).

*[த. தபு → வ. தப் (இருக்குவேதம்). தபு-தல் = கெடுதல். "அதங்கோட்டா சாற்கரில் தபத் தெரிந்து" (தொல். சிறப்புப். (வ. மொ. வ. 171). தபுதாரம் + நிலை]*

**தபுதி** *tabudi,* பெ. (n.) அழிவு; ruin, death. "தலைவர் தபுதிப் பக்கமும்" (தொல். பொருள். 72).

க. தவுதி.

*[தபு → தபுதி]*

**தபோக்கினி** *tabōkkini*, பெ. (n.) *1.* தவத்தால் தோன்றும் கனல்; fire of austere penance. *2.* தவஞ்செய்தற்கு வளர்க்கும் தீ; fires kindled for doing penance (செ.அக.).

*[தவம் → தபம் + அக்கினி. தவம் + அக்கினி → தவக்கினி → தபக்கினி → தபோக்கினி. தவம்செய்பவரே உண்மையில் தம் கருமம் செய்பவர் ஆவார். இது வள்ளுவரின் வாய்மொழி. நீராப்பசியடக்கிப் பிறவுயிர்கட்குத் தீங்கு செய்யாதிருத்தலே பேரறம். தவஞ் செய்பவர், காமத்தையும், பசியையும் அடக்குங்கால், சுடச்சுடரும் பொன்போல் உள்ளமும், உடலும், மிளிர்கின்ற தென்பதே, இச் சொல்லின் உட்கிடக்கை]*

**தபோதன்** *tabōdan*, பெ. (n.) தபோதனன் பார்க்க; see *tabōdanan*. "தபோதரிற் பெரியோன்" (*கம்பரா. மீட்சிப். 189*).

*[தகம் → தவம் → தபம் + உதன் → தபோதன்]*

**தபோதனன்** *tabō-danan*, பெ. (n.) முனிவன்; hermit, ascetic. "தங்கி வைகுந் தபோதனர்" (*கம்பரா. கங்கை, 10*).

*[தகம் → தவம் → தபம் → தபன் + உதன் → தபோதன் → தபோதனன்.*

*ஒருகா. காமத்தையும், மிகு பசியினையுந் தாங்கிநிற்குந் தன்மையன், காமத்தையும், பசியையுந் தாங்கித் துறவு மேற் கொள்பவனே, கடுந்துறவி ஆவான். தவம்:*

*"உற்ற நோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை அற்றே தவத்திற்குரு"*

*(குறள், 261).*

*உற்ற நோயுள், வெயிலின் வெம்மையும், பசிப்பிணியாலுண்டாகும் உடம்பின் வெம்மையும், அடங்கும் (வ. மொ. வ. 175)]*

**தபோதனி** *tabōdani*, பெ. (n.) முனிவன் (யாழ்.அக.); sage, anchorite.

மறுவ. துறவி

*[தவோதனன் → தவோதனி → தபோதனி]*

**தபோதி** *tabōdi*, பெ. (n.) தவத்தி (யாழ்.அக.); female ascetic.

மறுவ. தபோதனி.

*[தவோதனன் → தபோதனன் → தபோதி]*

**தபோதுக்கம்** *tabōtukkam*, பெ. (n.) உலக வெறுப்பு; disgust with the world (சா.அக.).

*[தவம் → தபம் + துக்கம் → தபதுக்கம் → தபோதுக்கம்]*

**தபோநிதி** *tabōnidi*, பெ. (n.) தபோதனன் பார்க்க; see *tabōdanan* (செ.அக.).

**தபோபலம்**[1] *tabō-palam*, பெ. (n.) தவப்பயன்; fruits of penance or religious austerities. "மணிதன்னை யணிந்த தபோபலத்தின் றன்மையான்" (*பிரமோத். 20, 71*).

*[தவம் → தபம் + பலம். தபபலம் → தபோபலம். தபம் + 'அம்' பெருமைப் பெயரொட்டு. தவம் செய்பவர்தம் பலத்தால் கூற்றையுங் காலால் உதைப்பர். வேண்டியதை வேண்டுபவர்க்கு நல்குவர்]*

**தபோபலம்**[2] *tabō-palam*, பெ. (n.) தவத்தால் உண்டாம் வல்லமை; power resulting from penance or religious austerities. தபோபலத்தால் எதனையும் சாதிக்கலாம் (*உ.வ.*) (செ.அக.).

*[தவம் → வ. தபம். தவபலம் → தபோபலம்]*

**தபோயாகம்** *tabō-yāgam*, பெ. (n.) ஐவகை வேள்விகளுளொன்று (சிவதரு. ஐவகை. 11, உரை.); one of aivagai-vēḷvi.

*[தவயாகம் → தபோயாகம்]*

**தபோலோகம்** *tabō-lōgam*, பெ. (n.) தவவுலகம்; an upper world, sixth of mēl-ēḻ-ulagam.

*[தவம் → தபம் + உலகம்]*

**தம்**[1] *tam*, இடை. (part.) பெரும்பான்மை படர்க்கைப் பன்மையுடன் சேர்ந்துவரும் சாரியை; flexional increment generally used along with the nouns of third pers. pl."தம்மிடை வரூஉம் படர்க்கை மேன" (*தொல். எழுத்து. 191*).

*[தாம் → தம்]*

**தம்**[2] *tam*, இடை (part.) *1.* மூச்சடக்குகை; holding the breath. *2.* மூச்சு; breath. அவன் தம் பிடிக்கிறான் (*உ.வ.*).

*[உம் → தம். மகரமெய் ஒலிப்பின் மூலம் ஒட்டிக் கொள்வதால், வாய்வழியே மூச்சு விட இயலாது. மூச்சை அடக்குவதற்கும் ஆகி வந்தது.]*

**தம்அடி-த்தல்** *tam-adittal,* பெ. (n.) பீடி வெண் சுருட்டுப் போன்ற புகைபிடித்தல் (இ.வ.); bīḍi or cigarette smoking. பணியிடையே ஒரு தம்மடித்தால்தான் சுறுசுறுப்பே வருகிறது (உ.வ.).

*[தம் + அடி-.]*

**தம்நியமத்துஇயற்று-தல்** *tam-niyamattu-iyarru-,* 5 செ.குன்றாவி. (v.t.) தன் முன்னோர் வழிமுறைப்படி ஆட்சியேற்றல்; to be sworn in as per ancestral tradition. "கங்காபுரி புரிந்தருளி தராதி பராகத் தம் நியமத்தியற்றி" (வீரராசேந்திரன் மெய்க்கீர்த்தி).

*[தம்நியமத்து + இயற்று-.]*

**தம்பக்காமாலை** *tamba-k-kāmālai,* பெ. (n.) காமாலை வகை (தஞ்.சர.122); a kind of jaundice.

*[தம்பம் + காமாலை]*

**தம்பகம்** *tambagam,* பெ. (n.) கருப்புக்குங்கிலிய மரம்; saul tree (சா.அக.).

**தம்பசும்பால்** *tampašum-pāl,* பெ. (n.) கலப்பில்லாத ஆவின்பால்; unadulterated cow's milk (சா.அக.).

*[தம் + பசும்பால்]*

**தம்பட்டங்காய்** *tampaṭṭaṅ-gāy,* பெ. (n.) வாளவரை (வின்.); sword-bean.

*[தம்பட்டம் + காய்]*

**தம்பட்டம்**[1] *tambaṭṭam,* பெ. (n.) ஒரு வகைப் பறை (பிங்.); a small drum, tomtom. "பறை திமிலை திமிர்தமிகு தம்பட்டம்" (திருப்பு. 18).

தெ. தம்பட்டமு

*[தப்பு = பறை. தப்பட்டம் → தம்பட்டம்]*

**தம்பட்டம்**[2] *tambaṭṭam,* பெ. (n.) தம்பட்டங்காய் பார்க்க; see *tampattaṅ-gay.*

மறுவ. வாளவரை, தம்பட்டை, தம்பட்டங்காய்.

*[தம்பட்டை → தம்பட்டம்]*

**தம்பட்டம்**[3] *tambaṭṭam,* பெ. (n.) தன் பெருமைகளைத் தாமே கூறிக்கொள்ளுதல்; tom-tom boast. இவன் தம்பட்டம் அடித்துக் கொள்கிறான் (உ.வ.).

*[தம் + பட்டம். தம் = தன். பட்டம் = தகுதிகள்]*

**தம்பட்டமடி-த்தல்** *tambaṭṭam-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. பலரறியப் பரப்புதல்; to spread the news. 2. தற்பெருமையுடன் கூறுதல்; tom-tom boast. வீடுவாங்கி இருப்பதை ஊர் முழுக்கத் தம்பட்டமடிக்காதே (உ.வ.).

*[தம்பட்டம் + அடி-.]*

**தம்பட்டன்கொடி** *tambaṭṭaṉ-koḍi,* பெ. (n.) தம்பட்டை பார்க்க; see *tambaṭṭai* (சா.அக.).

*[தம்பட்டன் + கொடி]*

**தம்பட்டை** *tambaṭṭai,* பெ. (n.) தம்பட்டங்காய் பார்க்க; see *tambaṭṭaṅ-gāy.*

*[தம்பட்டம் → தம்பட்டை]*



**தம்படி** *tambaḍi,* பெ. (n.) அணாவில் பன்னிரண்டில், ஒன்றாகிய காசு; cash, a small coin - 1/12 anna (செ.அக.).

மறுவ. காசு, சல்லி

12 காசு = ஓரணா, 16 அணா = ஒரு ரூபாய் என்று நாணயவழக்கு இருந்த நாளில், தம்படி எனப்பட்டது.

**தம்பதங்கம்** *tambadaṅgam,* பெ. (n.) விருசு; an unknown tree (சா.அக.).

**தம்பதி**[1] *tambadi,* பெ. (n.) மருது (யாழ். அக.); arjun tree.

**தம்பதி**[2] *tambadi*, பெ. (n.) **இணையர்; கணவனும் மனைவியும்** (சூடா.); wedded couple, husband and wife.

**தம்பதிபூசை** *tambadi-pūšai*, பெ. (n.) **சிவனும் மலைமகளுமாக எண்ணி, இணையர்களுக்குச் செய்யும் பூசை**; ceremony in which a wedded couple is worshipped as representing Umai and Šivan.

மறுவ. அம்மையப்பர் பூசை

*[தம்பதி + பூசை = தம்பதியரை அம்மையப்பர் வடிவிற்கண்டு, அவர்கட்குச் செய்யும் வழிபாடு. இருமுது குரவரை அம்மையப்பராகக் கருதிச் செய்யும் வழிபாடு, தமிழர்கட்கேயுரிய தனிப் பெரும் பண்பாட்டைச் சுட்டு மென்றறிக]*

**தம்பநிறுத்து-தல்** *tamba-niruttu-*, 4 செ.கு.வி. (v.i.) **வெற்றி, கொடை முதலியவற்றை விளக்குமாறு அடையாளத்தூண் நாட்டுதல்**; to set up a post or pillar in celebration of a victory or as a memorial of a munificent deed.

மறுவ. தூண்நாட்டல்

*[கம்பம் → தம்பம்; தம்பம் + நிறுத்து-]*

**தம்பம்**[1] *tambam*, பெ. (n.) *1.* **தூண்**; pillar, column. "தம்பத்தி னனக மாநர மடங்கலா யவதரித்து" (பாகவத. 1. 1:31). **2. யானை முதலியன கட்டுந் தறி**; post to which elephants, etc., are tied. **3. விளக்குத்தண்டு** (திவா.); lamp-post. **4. கோயில் கொடிக்கம்பம்**; flagstaff, mast, temple flag-pole. "நின்றிருவாயிற் றனித்தம்பமே" (திருநூற்.22). 5. **பற்றுக்கோடு**; support. "தம்பமில்லை நமக்கு" (உத்தரரா. இராவணன்பிற. 31). 6. **தம்புகை** பார்க்க; see *tambugai*. **7. தம்பனம்** பார்க்க; see *tambanam*. "அக்கினித் தம்பம்".

*[கம்பம் → தம்பம்]*

**தம்பம்**[2] *tambam*, பெ. (n.) **காப்புடை** (பிங்.); armour, coat of mail.

மறுவ. படைக்கவசம், போர்ச்சட்டை, புறச் சட்டை

*[தம் → தம்பு → தம்பம். தம்பம் = காப்புடை அல்லது கவசம். வீரனது மார்பில் எஞ்ஞான்றும், கவ்வுந்தன்மையது. இக் காப்புடை வீரர்க்கே உடைமையானது. இங்கு 'தம்' என்றும் வேரடி, உடைமை. உரிமைப்பொருளில் வந்துள்ளமை, கண்கூடு]*

**தம்பம்**[3] *tambam*, பெ. (n.) **ஊருணி** (Rd); pond, tank, natural spring (செ.அக.).

*[சும் → தம் → தம்பு + அம் → தம்பம். சுமம் நிறைந்து இயலுமென்பார் தொல்காப்பியர்.*

*ஒருகா. சுமம் → தமம் → தம்பம். நீர்நிறைந்த ஊருணி. இச் சொல் தருதற் பொருளையும், நிறைதல் பொருளையுங் குறித்து நின்றது. ஊரார்க்கு நீரைத் தருவது தம்பம். ஊரார் உண்பதற்கு நீர் நிறைந்து திகழ்வதும் தம்பமே (ஊருணியே) என்றறிக.]*

**தம்பர்** *tambar*, பெ. (n.) **தம்பல்**[1] பார்க்க; see *tambal*[1].

தெ. தம்ம.

*[தம்பல் → தம்பர். வெற்றிலை தின்று சிவந்த எச்சில் (மாறனலங். 470)]*

**தம்பல்**[1] *tambal*, பெ. (n.) **தம்பலம்,2** பார்க்க; see *tambalam,2*. "வெள்ளிலைத் தம்பல்" (கம்பரா. வரைக்கா. 49).

*[ஒருகா. தம்பலம் → தம்பல். தும் → தம் → தம்பு + அல் → தம்பல். தும் = சிவப்பு]*

**தம்பல்**[2] *tambal*, பெ. (n.) **மழையால் வயல் இறுகுகை** (யாழ்ப்.); hardening of rice-fields after heavy rain (செ.அக.).

தெ. தம்பு

*[தம்பர் → தம்பல்]*

**தம்பலக்கருதம்** *tambala-k-karudam*, பெ. (n.) **வட்டக்கிலுகிலுப்பை**; a round shaped rattle box.

*[தம்பலம் + கிருதம் → கருதம் → தம்பலக் கருதம். தம்பல் = வட்டம். தம்பலம் வட்டவடிவமான, கிலுகிலுப்பை]*

**தம்பலங்காய்** *tambalaṅ-gāy*, பெ. (n.) **பூவரசு மரத்தின் காய்** (நாஞ்.); seed pod of portia tree.

*[தம்பல் + அம் + காய்]*

**தம்பலச்சாறு** *tambala-c-cāṟu,* பெ. (n.) வெற்றிலைச் *சாறு;* betel juice.

*[தம்பலம் + சாறு]*

**தம்பலடி-த்தல்** *tambal-aḍi-, 4* செ.குன்றாவி. (v.i.) *1.* பெருமழையால் இறுகின வயலை உழுதல்; to plough a field after it has been hardened, by rain. *2.* வயலிறுகித் திணிதல்; to become even and hardened, as a field after rain.

*[தம்பல் + அடி-.]*

**தம்பலப்படிகம்** *tampala-p-paṭikam,* பெ. (n.) எச்சிலுமிழும் ஏனம்; a vessel to receive discharges of spittle (சா.அக.).

*[தம்பலம் + படிகம்; தம்பலம் = தாம்பூல எச்சில். படிக்கம் → படிகம் = ஏனம்]*

**தம்பலப்பூச்சி** *tambala-p-pūcci,* பெ. (n.) *1.* பூச்சிவகை; scarlet moth, Mutilla occidentalis. *2.* இந்திரகோபம்; cochineal, Coccus cacti.

மறுவ. செம்பூச்சி, அந்துப்பூச்சி

*[தம்பலம் + பூச்சி]*

**தம்பலம்**[1] *tambalam,* பெ. (n.) *1.* வெற்றிலை பாக்கு; betel with areca-nut. "தையா றம்பலந் தின்றியோ" (கலித். 65). *2.* தம்பல எச்சில்; red spittle caused by chewing betel; refuse of chewed betel. "தில்லைநல்லார் பொதுத்தம்பலங் கொணர்ந்தோ" (திருக்கோ. 396). *3.* தம்பலப்பூச்சி பார்க்க; see *tambala-p-pūcci.*

தெ. தம்ம; த. தம்பல்

*[தம்பலம் → வ. தாம்பூல. தம்பரம் → தம்பலம் (தமி. வ. 58)]*

**தம்பலம்**[2] *tambalam,* பெ. (n.) இலந்தை; jujube (சா.அக.).

*[தம்பல் → தம்பலம்]*



**தம்பலாடு-தல்** *tambal-āḍu-, 5* செ.குன்றாவி. (v.i.) வயலில் நீர்பாய்ச்சி மிதித்துச் சேறாக்குதல் (யாழ்ப்.); to water a field and turn it soft and muddy by trampling.

*[தம்பல் + ஆடு-.]*

**தம்பலி** *tambali,* பெ. (n.) மருதமரம்; a species of the (Termimalia alata) (சா.அக.).

*[தம்பல் → தம்பலி]*

**தம்பலை**[1] *tambalai,* பெ. (n.) நிலவிலந்தை (மலை.); a small shrub.

*[தும் → தம் → தம்பல் → தம்பலை. பழுக்கும் முட் செடியிலுள்ள சிவந்த இலந்தைப் பழம் (தமி.வ.58)]*

**தம்பலை**[2] *tambalai,* பெ. (n.) பாக்குவெட்டி மரம்; a tree resembling the nut cracker.

*[தம்பல் → தம்பலை]*

**தம்பனகாரன்** *tambaṉa-kāraṉ,* பெ. (n.) பொருள்களின் இயற்கையைக் கட்டுப்படுத்தும் மந்திரவாதி; magician, conjurer exercising magic powers to arrest or control nature's forces.

மறுவ. கண்கட்டு வித்தைக்காரன்

*[தம்பனம் + காரன். தம்பனம் = மறைப்பு. "காரன்" உயர்திணையொருமையீறு. ஒ.நோ. தந்திரக்காரன், மந்திரக்காரன்]*

**தம்பனகுளிகை** *tambaṉa-kuḷigai,* பெ. (n.) செயலிழக்கச் செய்யும்பொருட்டு மந்திரவாதி பயன்படுத்தும் மாத்திரை; magical pill used to arrest the natural forces.

*[தம்பனம் + குளிகை]*

**தம்பனசக்தி** *tambaṉa-šakti,* பெ. (n.) பொருள்களைக் கட்டச்செய்யும் ஒரு மந்திரம்; the art of binding a thing motionless through magic (சா.அக.).

*[தம்பனம் + சக்தி. தம்பனம் = ஒருவன் இயக்கத்தை மந்திரத்தால் கட்டுகை]*

**தம்பனத்தொழில்** *tambaṉa-t-toḻil,* பெ. (n.) ஒன்றின் அல்லது ஒருவனுடைய இயக்கத்தை தடுத்து நிறுத்துஞ் செயல்; the art of making

one incapable to speak or rendering him unable to speak and move about by arresting his limbs.

1. நெருப்பைக்கட்டுதல்; restraining the power of fire.
2. வாயைக்கட்டுதல்; checking the ferocity of wild animals.
3. அசைவறநிறுத்துதல்; causing one to stand motionless.
4. கைகால் விழச்செயல்; arresting the faculties.
5. நாவெழாமற்செய்தல்; depriving the power of speech etc.
6. சிறுநீர், அரத்தம் ஓடாமற்செய்தல்; stopping the flow of urine or blood.
7. இயற்கைப் பண்பை நிறுத்தல்; suspending the natural qualities.
8. மலங்கட்டுதல்; bring about constipation.
9. விந்தைக்கட்டுதல்; suppressing the secretion of semen.

மறுவ. தம்பனக் கலை

*[தம்பனம் + தொழில். தம் → தம்பு + அனம் + தொழில் → தம்பனத்தொழில் - கண்கட்டும் கலை; தந்திரக்கலை; ஒருவர்தம் இயக்கத்தைத் தடுத்து நிறுத்தும் கலையைப் பயின்று, அக்கலையினை தமதுடைமையாக்கி, தமக்குச் சொந்தமாக்கி, பிறர் பொருளை, உடைமையைக் கவர்தல் என்று கொள்க]*

**தம்பனம்**[1] *tampanam*, பெ. (n.) 1. இயக்கத்தைத் தடுத்துச் செயலிழக்கச் செய்கை; arresting the natural forces; making stiff or rigid; paralysing. 2. எட்டுவகைக் கருமத்துள் ஒருவனியக்கத்தை மந்திரத்தால் தடுத்துக் கட்டுகை; magic art of paralysing a person's activity, one of eṇ-karumam (செ.அக.).

*[தம் → தம்பு + அனம் → தம்பனம்.*

*தம் - சொந்தம்; உடைமை, உரிமை பற்றிய பொருள்களைக் குறிக்கும் வேரடி என்று மொழி ஞாயிறு கூறுகின்றார்.*

*ஒ.நோ. தம் + இல் → தமில் → தமிள் → தமிழ், தமிழருக்குச் சொந்தமான மொழி. ஒருவர் தம் இயக்கத்தைத் தடுத்து நிறுத்தும் கலைக்குச் சொந்தக்காரன். தம்பனக்காரன் = கண்கட்டும் கலைக்கு உரியவன். 'அனம்' - சொல்லாக்க ஈறு.]*

**தம்பனம்**[2] *tambaṉam*, பெ. (n.) 1. உடலிலுள்ள எல்லாத் துளைகளையும் சுருக்குதல்; contraction of all the pores or passages. 2. தூய்மைசெய்யும் ஐவகைக் கருமியங்கள்; the cleaning processes of the body.

1. கக்கலுண்டாக்கல்; vomitting.
2. கழிச்சலுண்டாக்கல்; purging.
3. குடற்றூய்மைப்படுத்தல்; enema.
4. மூக்கில் பீச்சாங்குழலிடல்; nasal douche.
5. அரத்தத்தை வெளியாக்கல்; blood letting (சா.அக.).

*[தம் → தம்பனம். தம் = உயிர்ப்பு மற்றும் உணர்வோட்ட மடக்குகை]*

**தம்பனமூலிகை** *tambaṉa-mūligai*, பெ. (n.) ஒருவர் தம் இயக்கத்தைத் தடுத்து நிறுத்தத் தம்பனத்தொழில் செய்வார் கையாளும் மூலிகை; the magician's herbal medicine to prevent once activities (சா.அக.).

1. கட்டுக்கொடி
2. பாற்புரண்டி
3. பரட்டைச்செடி
4. நீர்முள்ளி
5. நத்தைச்சூரி
6. சத்திசாரணை
7. சருக்கரைக்கிழங்கு
8. குதிரைவாலி

*[தம்பனம் + மூலிகை = தம்பனத் தொழில் செய்பவர் பயன்படுத்தும் மூலிகை]*

**தம்பனவாதம்** *tambaṉa-vādam*, பெ. (n.) 1. திருத்தமாகப் பேசவொட்டாமல் நாக்கை இழுத்துக்கொள்ளும் நோய்; paralysis of the tongue. 2. இரும்பு, செம்பு போன்ற மாழைகளைப் பொன்னாக்கும் வாதம்; transmutation of inferior metals, such as iron copper into gold.

*[தம் → தம்பு → தம்பனம் + வாதம் → தம்பனவாதம். தம் = தருதற் கருத்து வேர். இங்கு சொந்தம்: உடைமைக் கருத்தும் பொருந்தும். இரும்பைப் பொன்னாக்கித் தரும் கலை. தம்பனத்தொழில் புரிவோர் இரும்பு முதலான மாழைகளைப் பொன் னாக்கித் தருங்கால், தருதல்கருத்தும் தந்தபின்பு, சொந்தம், உரிமை முதலான உடைமைக்கருத்தும் பொருந்துவதறிக.]*

**தம்பனவித்தகன்** *tambaṉa-vittagaṉ*, பெ. (n.) 1. கண்கட்டிக்கலைஞன்; magician 2. செய்வினைக்காரன்; sorcerer (சா.அக.).

*[தம்பனம் + வித்தகன்]*

**தம்பனவித்தை** *tambaṉa-vittai*, பெ. (n.) 1. மந்திரத்தால் நாவெழாமற் செய்தல்; the art of making one incapable to speak. 2. நெருப்புக்கு ஓடும் பொருள்களை, ஓடாது நிறுத்துதல்; the art of consolidating from evapourating substances. 3. கண்கட்டுக் கலை; the art of creating illusion and making one beleive what he would not do in the ordinary course (சா.அக.).

*[தம்பனம் + வித்தை]*

**தம்பனவித்தைக்காரன்** *tambaṉa-vittai-k-kāraṉ*, பெ. (n.) மந்திரத்தால் கட்டுபவன்; Magician, who ties with his mantras (சா.அக.).

*[தம்பனம் + வித்தைக்காரன்]*

**தம்பனை**[1] *tambaṉai*, பெ. (n.) தம்பனம்2 பார்க்க; see *tambaṉam*[2]. "அங்கித்தம்பனை வல்லார்க்கு" (சி. சி. 10:6).

*[தம்பனம் → தம்பனை]*

**தம்பனை**[2] *tambaṉai*, பெ. (n.) தமன மரவகை; long leathery linear - oblong - obtuse - leaved tamana tree.

*[தம் + பனை]*

**தம்பா** *tambā*, பெ. (n.) கள்ளளக்குங் கருவி (இ.வ.); a measure of capacity used in liquor shops.

*[தம்பு → தம்பா]*

**தம்பாக்கு** *tambākku*, பெ. (n.) செப்பும் அளமியமும் கலந்த மாழை (m.m. 872); tambac, a kind of copper and zinc alloy.

**தம்பி**[1]**-த்தல்** *tambi-*, 4 செகுன்றாவி. (v.t.) மந்திர ஆற்றல் முதலியவற்றால் தடுத்தல்; to stop, check, suspend, restrain, counteract, by magical incantations. "உச்சுவாச நிச்சுவாசமாகிய வாயு இரண்டனையுந் தம்பித்து" (சி. சி. 8: 21: சுப்பிர.).

*[தம் → தம்பு → தம்பி-. தந்திரக்கலைக்கு உரியவனாக, உடைமையாளனாக இருந்து, பிறர் செயற்பாட்டைத் தடுத்தல்]*

**தம்பி**[2] *tambi*, பெ. (n.) 1. இளையவன்; younger brother. "மரவடியைத் தம்பிக்கு வான்பணையம் வைத்துப்போய்" (திவ். பெரியாழ். 4. 9:1). 2. தம்பி முறையான்; younger male cousin, who is the son of a paternal uncle or maternal aunt. 3. வயதிற் சிறியவனைக் குறிக்கும்சொல்; term of endearment applied to a younger male (செ.அக.).

தெ. தம்பு; க. தம்ம; ம. தம்பி

*[தம் + பின் – தம்பின் → தம்பி]*

**தம்பிக்கை** *tambikkai*, பெ. (n.) தம்பிகை பார்க்க; see *tambigai*. "வெள்ளித் தம்பிக்கை யென்றுந் தபலையென்றும்" (விறலிவிடு. 747).

**தம்பிகை** *tambigai*, பெ. (n.) ஒருவகைச் சிறுசெம்பு; a kind of small water-pot. "செம்பு தம்பிகை கெண்டிகை" (பிரபோத. 11:31).

தெ. தம்புக; க. தம்பிகெ

*[தம்பி + கை = தம்பிகை. தம்பி = இளையவன், சிறியவன். கை = சிறுமைப் பொருள் பின்னொட்டு]*

**தம்பிசெட்டிவெட்டு** *tambi-śeṭṭi-veṭṭu*, பெ. (n.) பழைய நாணயவகை (சரவண பணவிடு. 56); an ancient coin.

**தம்பிடி**[1] *tampiḍi*, பெ. (n.) தம்படி (இவ.) பார்க்க; see *tambaḍi*.

**தம்பித்தோழன்** *tambi-t-tōḻaṉ*, பெ. (n.) ஆண் குழந்தைகளின் அரையிற்கட்டும் குஞ்சுமணி (உ.வ.); ornament for the waist of male infants resembling the membrum virile.

*[தம்பி + தோழன்]*

**தம்பிராட்டி** *tampi-rāṭṭi*, பெ. (n.) 1. தலைவி; mistress, queen. 2. உடன்கட்டையேறுபவள்; sattee (செ.அக.).

*[தம் + பிராட்டி. பெருமாட்டி → பிராட்டி]*

**தம்பிரான்** *tam-birāṉ*, பெ. (n.) 1. கடவுள்; god. "தம்பிரா னடிமைத் திறத்து" (பெரியபு. இளையான்குடி. 1). 2. தலைவன்; master, lord, king. "தம்பிரா னமரர்க்கு" (திவ். பெருமாள். 3, 5). 3. திருவிதாங்கோட்டு அரசர்க்கு வழங்கும் பட்டம் (நாஞ்.); title of Travancore kings.

4. மடங்களிலுள்ள சைவத்துறவி; non-brahman monk of Saiva mutt. 5. துறவிகட்குத் தலைவர் (யாழ்ப்.); overseer of monks.

ம. தம்புரான்

[தம் + பிரான் (பெருமான் என்பதன் திரிபு). திருச்செங்கோட்டில், மலைமேலல்லாமல் தரையில் அமைந்திருக்கும் சிவன்கோயில், நிலத்தம்பிரான்கோயில், என்றழைக்கப் படுகிறது.]

**தம்பிரான்தோழன்** *tambiraṉ-tōḻaṉ*, பெ. (n.) (சிவனுக்குத் தோழனான) சுந்தரமூர்த்தி நாயனார்; Šundara-mūrtti-nāyaṉār as the friend of Šivaṉ. "தம்பிரான் றோழனார் நம்பியென்றார்" (பெரியபு. தடுத்தாட். 171).

[தம்பிரான் + தோழன்]

**தம்பிரான்பூடு** *tambiraṉ-pūḍu*, பெ. (n.) கருமத்தை; a black variety of datura (சா.அக.).

**தம்பிரான்மாடு** *tambiraṉ-māḍu*, பெ. (n.) மதுரை மாவட்டத்தில், கம்பம் பகுதியில் காப்பிலியரால் கொண்டு வரப்படும், மாட்டுத் தொகுதிகளில் தலைமை மாடு; leader of the herd of cattle brought by the Kāppiliyar, when they originally migrated to the Kambam Valley in Madura district (செ.அக.).

[தம்பிரான் + மாடு]

**தம்பு-தல்** *tambu-*, 5 செ.குன்றாவி. (v.t.) கிட்டுதல் (யாழ்.அக.); to approach.

[தம் → தம்பு-.]

**தம்புகை** *tambugai*, பெ. (n.) மரவகை; green dammar (செ.அக.).

[தம்பு → தம்புகை]

**தம்புசிந்தாமணி** *tambu-šindāmaṇi*, பெ. (n.) வேங்கடசுப்பு பிள்ளை எழுதிய தமிழ்நூல்; a book written by Vēṅkaḍa-subbu-piḷḷai.

[தம்பு → சிந்தாமணி]

**தம்புரா** *tamburā*, பெ. (n.) தம்புரு பார்க்க; see *tamburu* (செ.அக.).

[தம்புரு → தம்புரா]

**தம்புரு** *tamburu*, பெ. (n.) இசைநிகழ்ச்சியில் ஒலியைக் குறிப்பிட்ட கட்டை அளவில் ஒத்திருப்பதற்காக, இசைக்கப்படும் நரம்புக் கருவி வகை; a kind of guitar producing the key-note. "தம்புரு கின்னரங்கள்" (குற்றா. குற. 13).

மறுவ. தம்புரா, தம்பூர், தம்பூரா, தம்பூரு

[தம்புரு - என்னும் இசைக்கருவி நரம்புக் கருவியாகும். தம் + புரு - இன்னிசையைத் தரும் தந்தி அல்லது இழையால், அமைக்கப்பட்ட கருவியே, தம்புரு அல்லது தம்புரா - ஆகும். தருதல் கருத்தைத் தந்து கொண்டிருக்கும் தந்தியினையுடைய நரம்புக்கருவி, தம்புரு எனப்படும்]



**தம்புவான்** *tambuvāṉ*, பெ. (n.) வெளிர்சிவப்பு நிறமும், 9 அங்குல நீளமும், உள்ள கடல்மீன் வகை; sea-fish, rosyscarlet attaining 9 in. in length, Holocentrum andamanense (செ.அக.).

**தம்பூர்**[1] *tambūr*, பெ. (n.) தம்புரு பார்க்க; see *tamburu*.

[தம்புர் → தம்பூர் - இன்னிசை தரும் தன்மையில் அமைக்கப்பட்ட தந்தியினை யுடைய தம்பூர் அல்லது தம்புரா என்றறிக]

**தம்பூர்**[2] *tambūr*, பெ. (n.) பறைவகை (இ.வ.); a drum.

[தம்புர் → தம்பூர்]

**தம்பூரா** *tambūrā*, பெ. (n.) தம்புரு பார்க்க; see *tamburu* (செ.அக.).

[தம்புரா → தம்பூரா]

**தம்பூரு** *tambūru*, பெ. (n.) தம்புரு பார்க்க; see *tamburu*. "தம்பூருமுழங்க" (கொண்டல் விடு. 511).

[தம்புரு → தம்பூரு]

**தம்பைக்காய்** *tambai-k-kāy,* பெ. (n.) நாரத்தை; bitter orange (சா.அக.).

*[தம்பை + காய்]*

**தம்போலி** *tambōli,* பெ. (n.) மின்னலின் கருக்கூறு எனக் கருதப்படும் கோல்; thunder bolt.

மறுவ. இடியேறு

**தம்மட்டை** *tammaṭṭai,* பெ. (n.) நச்சுண்டை, மஞ்சள் நிறமுள்ள பிசின்மரம்; yellow flowered resin wood (சா.அக.).

**தம்மடக்கு-தல்** *tam-m-aḍakku-,* 5 செ.குவி. (v.i.) மூச்சடக்குதல்; to hold one's breath (செ.அக.).

*[தம் = உயிர்ப்பு. தம் + அடக்கு-,]*

**தம்மதம்**[1] *tammadam,* பெ. (n.) சம்மதம் (நாஞ்.) பார்க்க; see *sammadam.*

*[சம்மதம் → தம்மதம்]*

**தம்மதம்**[2] *tammadam,* பெ. (n.) நஞ்சுண்டை பார்க்க; see *nañjuṇḍai.*

**தம்மம்** *tammam,* பெ. (n.) தருமம் பார்க்க; see *tarumam.* "தம்ம தம்மத்தி" (மேருமந். வைசயந். 92).

Pkt. dammam

*[தருமம் → தம்மம்]*

**தம்மலை** *tammalai,* பெ. (n.) இலந்தை; jujube tree (சா.அக.).

**தம்மவன்** *tam-m-avaṉ,* பெ. (n.) தமன் பார்க்க; see *tamaṉ* (செ.அக.).

க. தம்மவனு

*[தம்மவன் - தமன்]*

**தம்மனை** *tam-m-aṉai,* பெ. (n.) தாய்; mother. "தம்மனை தம்முன் வீழ்ந்து மெய் வைத்தலும்" (மணிமே. 6, 131).

*[தம் + அன்னை - தம்மன்னை - தம்மனை]*

**தம்மாகும்மா** *tammā-gummā,* இடை. (int.) மகிழ்ச்சிக் குறிப்பு; expr. signifying delight, enjoyment. ஆட்டுக் கறியும் நெல்லுச் சோறுந் தம்மாகும்மா (உ.வ.). தம்மாகும்மாவென்று செலவு செய்கிறான் (உ.வ.).

*[தம்மா + கும்மா]*

**தம்மாகும்மாசெய்-தல்** *tammā-gummā-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) வீண்செலவு செய்தல்; to squander, waste. "பொருளை யெல்லாம் தம்மாகும்மா செய்கிறான்" (இ.வ.).

*[தம்மாகும்மா = மரபிணை மொழி. தம்மாகும்மா + செய்-.]*

**தம்மான்** *tammāṉ,* பெ. (n.) தலைவன்; lord, chief. "தம்மானை யறியாத சாதியாருளரே" (தேவா. 973, 1).

*[அம் → தம் + ஆன் = தம்மான். (ஒ.நோ.) பெம்மான், எம்மான்.]*

**தம்மி** *tammi,* பெ. (n.) தாமரை பார்க்க; see *tāmarai,* lotus. "தாண்மிடைந்தன தம்மி மிடைந்தென" (கம்பரா. எழுச்சி. 30).

தெ. தம்மி

*[தும் → தம். தும் = சிவப்பு]*

**தம்மிடுதல்** *tammiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. நிறுத்தப்படுதல்; to be stopped, impeded, interrupted. 2. தணிதல்; to be abated, reduced, lessened.

*[தம் + இடு-.]*

**தம்மிலம்** *tammilam,* பெ. (n.) மகளிரின் மயிரிற் செய்த கொண்டை முடி (பிங்.); woman's hair done up into a knot.

**தம்முன்** *tam-muṉ,* பெ. (n.) அண்ணன்; elder brother. "மருதிபொருட்டான் மடிந்தோன் றம்முன்" (மணிமே. 22, 147).

*[தம் + முன்]*

**தம்மோய்** *tam-mōy,* பெ. (n.) தாய்; mother. "தம்மோய் விளங்குதோள் பிணிப்ப" (சீவக. 1138).

*[அம்மை → தம்மை + ஓய் = 'ஓய்' படர்க்கை விளியீறு தம் + ஆய் = தம்மாய் → தம்மோய். ('ஆ'காரம் ஓகாரமாதல் செய்யுள் வழக்கென்க).*

*ஒருகா. அம்மோய் → தம்மோய்]*

**தம்மோன்** *tam-mōṉ,* பெ. (n.) தம்மான் பார்க்க; see *tammāṉ.* "தம்மோன் கொடுமை நம்வயி னேற்றி" (நற். 88).

*[தம்மான் → தம்மோன்]*

**தம-த்தல்** *tama-,* 4 செ.குவி. (v.i.) 1. தணிதல்; to be abated, appeased, dulled, as appetite. பசி தமத்துப் போயிற்று (உ.வ.). 2. விலை மலிதல்; to become cheap. தவசம் தமத்தது (உ.வ.). 3. நிரம்புதல்; to be filled up. உண்டு வயிறு தமத்தது (உ.வ.) (செ.அக.).

*[நமுத்தல் → நமத்தல் → தமத்தல். ஈரம் ஏறுதல் நமுத்தல் ஆகும். கடுமையைக் குறைக்கும் பொருளில், பசி தணிதலைக் குறித்தது. விலைமலிதலும் அவ்வாறே. பசிதணிதல், வயிறு நிரம்புதலுக்கு முன்பு நிகழ்வதாகும்; முதற்கண் தணிதற் கருத்தும், அவற்றினின்று மலிதற்கருத்தும், மலிவின் விளைவால், வயிறு நிறைதலாகிய முழுமைக்கருத்துந் தோன்றிற்று எனலாம்.]*

**தமக்கு** *tamakku,* பெ. (n.) தமுக்கு பார்க்க; see *tamukku* (செ.அக.).

**தமக்கை** *tamakkai,* பெ. (n.) 1. அக்காள்; elder sister. "நேசத்தொடு தமக்கையர்" (பதினொ. திருநாவுக். திருவேகாதச. 1). 2. தமக்கை முறையாள்; elder female cousin who is the daughter of a paternal uncle or a maternal aunt. தங்கையைப் போன்று தமக்கையும் தளதளக் கிறாள் (உ.வ.) (செ.அக.).

*[தம் + அக்கை]*

**தமகசுவாசம்** *tamaga-šuvāšam,* பெ. (n.) ஈளைநோய், ஓவ்வாமை; asthma (செ.அக.).

*[தமகம் + சுவாசம்]*

**தமகன்** *tamagan̲,* பெ. (n.) கொல்லன் (யாழ். அக.); smith.

*[கும்மம் → தம்மம் → தமகன்]*

**தமசம்** *tamašam,* பெ. (n.) தமசு (யாழ்.அக.) பார்க்க; see *tamašu.*

**தமசு** *tamašu,* பெ. (n.) 1. இருள்; darkness. 2. மந்தகுணம் (வின்.); mental blindness, delusion.

மறுவ. மருட் குணம்.

*[கமம் → தமம் → தமசு]*

'கம்'மிருட்டு கருங்கும்மிருட்டு ஊரக மக்களிடையே வழக்கூன்றி இருப்பது, நாம் அறிந்த வொன்றேயாம். "கமம் நிறைந்து இயலும்" என்ற தொல்காப்பிய நூற்பாவும் இக்கருத்திற்கு, அரணமைக்கின்ற தெனலாம்.

**தமட்டன்** *tamaṭṭan̲,* பெ. (n.) வாளவரங்காய்; Canavalica unsiformis (செ.அக.).

*[தமுக்கு அடிப்பதற்கான, வார் போன்றிருக்கும் காய்.]*

**தமதம்** *tamadam,* பெ. (n.) ஐம்பொறி வெறுப்பு; preventing the action of the five senses, showing disgust with operation of the five senses.

**தமதமவெனல்** *tama-tama-v-en̲al,* பெ. (n.) நெருப்பு முழங்கியெரியும் ஒலிக்குறிப்பு; Onom. expr. of crackling, roaring sound, as of burning fire (செ.அக.).

*[தகதகவெனல் → தமதமவெனல். தழல் எரியுங்கால் 'தகதக' வென்று எரிகின்ற தென்பது, தென்பகுதியில் பேசப்படும் பெருவழக்காகும், கோடை வெயில் தகிக்கின்ற தென்பதும், உய்த்துணரத் தக்க வொன்றேயாம்.]*

**தமப்பன்** *tam-appan̲,* பெ. (n.) தந்தை; father. "தமப்பன்மார் கற்றானிரைப் பின்பு போவர்" (திவ். பெரியாழ். 3. 1:9).

*[தம் + அப்பன்]*

**தமத்தமப்பிரபை** *tama-t-tama-p-pirabai,* பெ. (n.) எழு நிரைய வட்டங்களுள், இருள் நிறைந்த பகுதி (சீவக. 2817, உரை); a hell of darkness, one of ēḻu-naragam (செ.அக.).

*[தமம் + தமம் + பிரபை]*

**தமம்**[1] *tamam,* பெ. (n.) 1. இருள் (பிங்.); darkness, gloom. "தமந்திரண் டுலகியாவையும்" (கம்பரா. மிதிலைக். 132). 2. தமசு,[1] 2 பார்க்க; see *tamašu,*[1] 2. "சிவசேதன மறைத்துத் தமமயலாகிய வுலகத்திற் கெல்லாம்" (வேதாசூ. 60). 3. கருங்கோள் (இராகு) (பிங்.); moon's ascending node. 4. சேறு (யாழ். அக.); mire. 5. கள்வரை வாட்டும் ஒரு நிரையம்; a hell for thieves. "திருடும் வஞ்சகனை . . . தமத்திடுவர்" (சேதுபு. தனுக்கோ. 6).

*[கமம் → தமம். கருமைக்கருத்து வேரான "கமம்" எனுஞ் சொல்லினின்றே தமம் வந்ததெனலாம். கருமைக்கருத்தினின்றே இருண்மைக்கருத்தும், கருங்கோட் கடவுளுக்கும் உரிய, அடிப்படைக் கருத்தாகும். "கமம் நிறைந்து இயலும்" (தொல்.சொல். 838) என்ற தொல்காப்பிய நூற்பாவும் நினைவு கூரத்தக்கது.]*

**தமம்**[2] *tamam*, இடை. (part.) மேம்பட்டது என்னும் பொருளில் வரும் வடமொழி விகுதி; a Šanskrit particle, denoting superlative degree. "மந்ததமம்".

த. கமம் → வ. தமம்

**தமம்**[3] *tamam*, பெ. (n.) தமை பார்க்க; see *tamai*. "தமம்புறக் கரணதண்டம்" (கைவல். தத்துவ. 9.).

**தமயந்தி** *tamayandi*, பெ. (n.) 1. நளவெண்பாவின் கதைத் தலைவி (நள. 29); Damayandi, wife of Naḷan̲ and heroine of Naḷavēṇbā by Pugazhendhi pulavar. 2. மல்லிகை வகை; a kind of jasmine.

*[கமம் → தமம் → தமயந்தி.]*

**தமயந்திவிசிறி** *tamayandi-viširi*, பெ. (n.). சேலை வகை (இ.வ.); a kind of saree.

*[தமயந்தி + விசிறி]*

**தமயன்** *tamayan̲*, பெ. (n.) தமையன் பார்க்க; see *tamaiyan̲* (செ.அக.).

*[தம் → ஐயன் → தமையன் → தமயன்]*

**தமர்**[1] *tamar*, பெ. (n.) 1. சுற்றத்தார்; relations, kindred. "தமருட் டலையாதல்" (பு. வெ. 3: 6). 2. தமக்கு வேண்டியோர்; friends, well-wishers. "தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்" (புறநா. 157). 3. சிறந்தார்; counsellors, men guiding one's affairs. "தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்" (குறள், 444). 4. பணியாளர்; servants. "நலியார் நமன்றமர்" (தேவா. 907: 1). 5. நம்மவர்; kith and kin. "நீண்ட கையாற் றறைப்படு மளவிற் றத்தா நமரெனத் தடுத்து வீழ்ந்தார்" (பெரியபு. மெய்ப்பொ. 16).

க., ம. தமர்.

*[தம் → தமர் = சுற்றத்தார். உற்றார் உறவினர். தமக்குப் பணி செய்பவர்]*

**தமர்**[2] *tamar*, பெ. (n.) 1. கருவியால் அமைத்த துளை; hole, as in a plank, commonly bored or cut. "தமரிடு கருவியாம்" (திருவிளை. மாணிக்க. 61). 2. துளையிடுங் கருவி; gimlet, spring awl, boring instrument.

ம. தமர்.

*[உல் - துளைத்தற் கருத்துவேர் உல் → துல். தும் → தம் → தமர் = துளை. துளையிடு கருவி]*



**தமர்**[3] *tamar*, பெ. (n.) மயிருடுதுளை; hair follicle.

*[தும் → தம் → தமர்]*

**தமர்காயாச்சிலந்தி** *tamar-kāyā-c-cilandi*, பெ. (n.) துளை ஆறாத குழிப்புண்; an ulcer in which the sinus is not healed, the opening of the sarpent.

*[தமர் + காயா + சிலந்தி]*

**தமர்ப்படு-தல்** *tamar-p-paḍu-*, 20 செ.குவி. (v.i.) 1. இணங்குதல்; to agree. 2. விரும்புதல்; to desire; to like.

*[தம் → தமர் → தமர்ப்படு-.]*

**தமர்மை** *tamarmai*, பெ. (n.) நட்பு; friendship. "கல்வியில்லாத புரவிபோல் வாரது தமர்மையில்" (குறள், 814, உரை).

*[தமர் → தமர்மை. "மை" பண்புப்பெயரீறு.]*

**தமர்வாசல்** *tamar-vāšal*, பெ. (n.) 1. குண்டலி ஆற்றலின் வாய்; power at the base of the vertebral colum. 2. மேல்வாய்க்கு அடியிலுள்ள துளை; opening in the upper part of the mouth.

*[தம் → தமர் + வாசல் → தமர்வாசல்]*

**தமர்வாயு** *tamar-vāyu*, பெ. (n.) நெஞ்சாங்குலை நோய் வகை; heart disease, heart affections, whether organic or functional.

மறுவ. தமருதை

*[தமர் + வாயு. தமர் = துளைத்தல். குத்தல் பொருளின்று தொளைத்தற்பொருள் தோன்றியது. மரத்தைத் தொளைக்கும் தமர் போன்று நெஞ்சகத்தைத் தொளைத்துக் குத்தி வருத்தும் வளி நோய்]*

**தமரகசாகைநாடி** *tamaraga-šāgai-nāḍi,* பெ. (n.) காற்றுக்குழல் நாடி; wind-pipe pulse.

*[தமரகம் + சாகை + நாடி.]*

**தமரகசுவாசம்** *tamaraga-šuvāšam,* பெ. (n.) *1.* கோழையை இளைப்போடு வெளியேற்றும் மேல்மூச்சு; difficulty in breathing attended with fatigue due to frequent exertion in coughing to bring out the phlegm obstructing the bronchial tubes. *2.* ஈளைநோய்; an attack of āsthma during the rainy season.

*[தம் → தமர் + அகம் + சுவாகம்]*

**தமரகதபம்** *tamaraga-dabam,* பெ. (n.) காற்றுக் குழல் அழற்சி; inflammation the wind pipe.

*[தமரகம் + தபம்]*

**தமரகம்**[1] *tamaragam,* பெ. (n.) *1.* மூச்சுக்குழல்; windpipe, trachea. *2.* தமருகம் (யாழ்.அக.) பார்க்க; see *tamarugam.*

*[தமர் + அகம்]*

**தமரகம்**[2] *tamaragam,* பெ. (n.) தமருகம் (யாழ்.அக.) பார்க்க; see *tamarugam* (செ.அக.).

*[தமரகம் → தமருகம். "அம்" பெருமைப் பொருளீறு]*

**தமரகம்**[3] *tamaragam,* பெ. (n.) நெஞ்சாங்குலை; heart.

மறுவ. நெஞ்சுக்காய்; நெஞ்சுப்பை

*[தமர் + அகம் → தமரகம். நெஞ்சகத்தே, தமர் தொளைத்தாற் போன்று உட்டுளையாய் அமைந்துள்ள நெஞ்சாங்குலை]*

**தமரகம்**[4] *tamaragam,* பெ. (n.) உடுக்கை; kettle-drum.

மறுவ. நெஞ்சுக்காய்; நெஞ்சுப்பை

*[தமருகம் → தமரகம்]*



**தமரகலம்** *tamaragalam,* பெ. (n.) மூச்சுக்குழல் திறப்பு; openingof the treaches.

*[தமர் + அகலம்.]*

**தமரகவளி** *tamaraga-vaḷi,* பெ. (n.) *1.* மார்பு நோய்; chestpain. *2.* மாரடைப்பு; angina pectoris. *2.* ஈழைநோய்; āsthma.

**தமரகவாயு** *tamaraga-vāyu,* பெ. (n.) *1.* தமரகவளி பார்க்க; see *tamaraga-vaḷi.* *2.* மூச்சுவிட முடியாமை; difficulty in breathing.

**தமரகவொலி** *tamaraga-v-oli,* பெ. (n.) கிலுகிலுப்பை (மலை.); rattle-wort.

*[தமரகம்[4] + ஒலி]*

**தமரகி** *tamaragi,* பெ. (n.) கொடுவேலி; leand-wort (சா.அக.).

**தமரத்தை** *tamarattai,* பெ. (n.) மரவகை (பதார்த்த. 7443); carambola tree.

ம. தமரத்த

*[தமரத்தம் → தமரத்தை]*

தமரத்தம் மரத்தை, தமரத்தை என்று சா.அக. அழைக்கிறது. இலங்கையிலிருந்து தமிழகத்திற்கு கொண்டு வந்து பயிராக்கப் பட்ட மரம். இம் மரத்தின், இலை, பூ, காய், பழம், விதை முதலானவை, மாந்தருக்கு முழுமையான பயனைத் தருபவை. மனிதருக்கு ஏற்படும் மிகுகுளுமையைத் தவிர்க்க, தமரத்தம் மரத்தின் வேர், காய், பட்டை கலந்த மருந்து பயன்படும்.

தமரத்தம்பழம், ஊறுகாய்க்கு உதவுந் தன்மைத்து. தமரத்த மரத்தின் இலையை உணவில் புளிக்கு மாற்றாகப் பயன்படுத்துவர். தமரத்தங்காய் மிகு துவர்ப்புடையது. இலங்கையில் காரச்

சுவைக்காக, உணவில் பயன்படுத்துவர். இக் காயின் சாறு, துணியிலேற்பட்ட இருப்புக் கறையை அகற்றும். தமரத்தம் பழத்தின் சாறு இனியபருகம் (சர்பத்) காய்ச்சப் பயன்படும். இப் பழச்சாறு பித்தத்திற்கு கைகண்ட மருந்து.

தமரத்தம் பழச்சாற்றுடன், சருக்கரை கலந்து, மருந்துசெய்து, உட்கொண்டால், வாந்தி மனக்கோட்டம் (சித்தப் பிரமை) பித்தம், குரல்கம்மல் போன்ற நோய்கள், அகலும், தமரத்தங்காய், இலை, பட்டை, வேர், தேன் முதலியவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கருக்கு (கியாழம்) நீர், (விந்து) வெண்ணீர்க்குறைவு மிகுகோழை, அரத்தமூலம் முதலான நோய்களைப் போக்கும் என்று சா.அக. கூறும்.

**தமரம்**[1] *tamaram,* பெ. (n.) **ஒலி** *(பிங்.);* noise, din, sound. "தமரம துடன்வளர் சதுமறை" *(கம்பரா. திருவ. 126).*

*[சமர் → தமர் + அம் → தமரம்]*

**தமரம்**[2] *tamaram,* பெ. (n.) *1.* **தமரத்தை** பார்க்க; see *tamarattai. 2.* **அரக்கு** *(அகநி);* lac, gum-lac, sealing-wax. *3.* **ஈயம்**; lead.

**தமரல்** *tamaral,* பெ. (n.) **பெரிதொலித்தல்**; blaring.

*[தமர் + அல் → தமரல் = ஆரவாரம்; பேரொலி. அமர்க்களத்தில் உண்டாகும் பேரொலி. ]*

**தமரவர்** *tamaravar,* பெ. (n.) **உறவினர்**; neighbour. "அன்பர் - தமரவர்க்கு வயன்மருதூர்' *(மரு. தி. 67).*

*[தமர் + அவர் → தமரவர். தம்மவர், உற்றார், உறவினர்]*

**தமராக்கவம்** *tamarākkavam,* பெ. (n.) **பீர்க்கு**; luffa gourd *(சா.அக.).*

**தமராசம்** *tamarāšam,* பெ. (n.) **ஒருவகைச் சருக்கரை**; a kind of sugar *(சா.அக.).*

**தமராணி** *tamar-āṇi,* பெ. (n.) *1.* **தமரில் மாட்டித் துளையிடும் தமரூசி**; tool for the gimlet or drill.

*[தமர் + ஆணி = துளைக்கப் பயன்படும் ஆணி]*

**தமரி-த்தல்** *tamari-,* 4 செ. கு. வி. (v.i.). **ஒலித்தல்**; to sound. "சங்கமன்பர் வந்தாரென்று . . . தமரித்து" *(குலோத். கோ. 320).*

*[அமரி → சமரி → தமரி-. அமர்க்களம் போன்று ஆரவாரித்தல்]*

**தமரிடு-தல்** *tamariḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) **துளையிடுதல்;** to drill. "தமரிடு கருவியாம்' *(திருவிளை. மாணிக்க. 61).*

*[தமர் + இடு-.]*

**தமரிப்பு** *tamarippu,* பெ. (n.) *1.* **ஒலி;** sound. "வேழத் தமரிப்பும்" *(கோயிற்பு. இரணிய. 121). 2.* **விருப்பம்** *(யாழ். அக.);* desire.

*[அமரிப்பு → சமரிப்பு → தமரிப்பு]*

**தமரு** *tamaru,* பெ. (n.) **தமருகம்** பார்க்க; see *tamarugam.*

*[தமர் → தமரு]*

**தமருகம்** *tamarugam,* பெ. (n.) **உடுக்கை;** kettle-drum. "மொகுமொகென் றொலிமிகுந் தமருகங்கள் பலவே" *(கலிங். 100).*

மறுவ. இடைசுருங்கு பறை

*[தமரகம் → தமருகம் = தோலினால் தொளைத்துத் தைக்கப்பட்ட உடுக்கை]*

**தமரூசி** *tamar-ūši,* பெ. (n.) **தமரில் மாட்டும் ஆணி;** bits of a brace *(செ.அக.).*

*[தமர் + ஊசி]*

**தமரோசை** *tamar-ošai,* பெ. (n.) **கிலுகிலுப்பை**[2] 2 *(மலை.)* பார்க்க; see *kilu-kiluppai*[2].

*[தமர் + ஓசை]*

**தமலி** *tamali,* பெ. (n.) **சட்டுவம்** *(அகநி.);* ladle.

**தமள்** *tamaḷ,* பெ. (n.) **உற்றாள்** (நன். 276, உரை.) **நம்மவள்;** a female relative or friend.

*[தமர் = உற்றார்: உறவினவர். தமர் → தமல் → தமள்]*

**தமற்காவம்** *tamaṟ-kāvam,* பெ. (n.) **சுக்கு;** dried ginger *(சா.அக.).*

**தமறைவாகி** *tamaṟaivāgi,* பெ. (n.) **வேங்கை மரம்;** kino-tree *(சா.அக.).*

**தமன்** *tamaṉ,* பெ. (n.) **உற்றான்;** a male relative or friend. "ஆழிப்படை யுடையான்றமன்" *(சூளா. அரசி. 182).*

*[தமர் → தமன்.]*

**தமனகக்கொழுந்து** *tamanaga-k-koḻundu,* பெ. (n.) தமனகம் (சீவக. 827, உரை) பார்க்க; see *tamanagam.*

*[தமனகம் + கொழுந்து]*

**தமனகம்** *tamanagam,* பெ. (n.). மருக்கொழுந்து; southern wood. "பச்சைத் தமனகத்தோடு பாதிரிப்பூச் சூட்டவாராய்" (திவ். பெரியாழ். 2: 7: 3).

**தமனகன்** *tamanagan,* பெ. (n.) ஒரு வகை நரி; a kind of jackal. "புலம்பிய பிங்கலன் தமனகன் போய்ப் பொருமவனைக் கொன்று புலம்புவதே" (பஞ்சதந். மித்திரபே 206).

*[தமன் + அகன் → தமனகன்]*

**தமனசதுர்த்தசி** *tamana-saturttasi,* பெ. (n.) மீன மாத வளர்பிறை (நவமி) ஒன்பதாம் நாளன்று, மருக்கொழுந்து முதலியவற்றாற் பூசிக்கும் ஒரு நோன்பு (பஞ்.); a fast on the fourteenth day of the bright fortnight of the lunar month phālgunam, when worship is performed with marikkoḻundu and flowers.

*[தமனம் + சதுர்த்தசி]*

**தமனம்**[1] *tamanam,* பெ. (n.) 1. தமனகம் பார்க்க; see *tamanagam.* 2. கண்டங்கத்திரி; prickly night shade. 3. நெஞ்சாங்குலை; heart.

*[தம் + அன் + இ → தமன் + அம் → தமனம். 'அம்' சாரியை. இஃதும், தருதற் கருத்து வேரடி. உடலுறுப்புகள் சீராக இயங்கும் பொருட்டுத், தூய்மையான அரத்தத்தை தருவது தமனி. இந்தத் தமனி நெஞ்சாங்குலை வாயிலாக, உடலுறுப்பு களுக்குத் தூய அரத்தத்தை தருவதால், தமன் + அம் → தமனம் ஆயிற்று]*

**தமனம்**[2] *tamanam,* பெ. (n.) 1. மருக்கொழுந்து; southern wood (சா.அக.). 2. சாரைப்பாம்பு; rat snake.

*[தமன் → தமனம்]*

**தமனி**[1] *tamani,* பெ. (n.) வன்னி (அக. நி.) பார்க்க; see *vanni.*

*[தமன் + இ → தமனி.]*

**தமனி**[2] *tamani,* பெ. (n.) 1. தூய அரத்தம் ஓடும் குழாய்; blood vessel carrying blood away from the heart. 2. நீரோடும் கால்வாய்; canal by which fluid is conveyed duct. 3. காற்றுக்குழல்; wind pipe. 4. மூச்சுக்குழலின் கிளை; one of the bifurcations of the wind pipe. 5. வெண்ணீர்க் (விந்துக்) குழாய்; spermatic card. 6. நரம்புத் தொடரி; nerve chain (சா.அக.).

*[தம் + அன் + இ → தமனி = தூய்மையான அரத்தத்தை நெஞ்சாங் குலையினின்று, உடலின் ஏனைய உறுப்புகளுக்குத் தருவது தமனி. 'அன்' சாரியை. 'இ' சொல்லாக்க விகுதி. இச் சொல்லிலும் தருதற்கருத்தே அடிப்படையாக உள்ளது. உடலுக்குள் இருக்கும் உறுப்புகள் சீர்மையாகக் கட்டுக்கோப்புடன், இயங்குதற் பொருட்டுத், தூய்மையான அரத்தத்தை தரும் பணியினைத் தமனி ஆற்றுகிறது. "வம்மின்கள் தாயரீர் மாலை அது வாங்கித் தம்மின்கள்" என்ற விக்கிரமச் சோழனுலாப் பாடல் தருதற்கருத்து இலக்கியத்தில் பயின்று வருவதைக் காட்டுகிறது. 'தம்' ஈங்கு, படர்க்கைப் பன்மையாகும்.]*

**தமனித்தமனி** *tamanittamani,* பெ. (n.) அரத்தக் குழாய்களைக் காக்கும் சிறிய நாடி, தந்துகி, நாளம் முதலானவை; the small nutrient arteries and veins in the walls of the large blood vessels.

*[தமனி + தமனி]*

**தமனிதா** *tamanidā,* பெ. (n.) கொட்டைப் பாக்கு; areca-nut (சா.அக.).

*[தமனி → தமனிதா.]*

**தமனிதி** *tamanidi,* பெ. (n.) 1. தமனி பார்க்க; see *tamani.* 2. தொண்டை; throat. 3. கழுத்து; neck. 4. ஒரு வகை மணம்; a kind of scent. 5. மஞ்சள்; turmeric.

*[தமனி → தமனிதி.]*

**தமனியக்கநரம்பு** *tamaniyakka-narambu,* பெ. (n.) அரத்தக்குழாய்களைக் கட்டுப் படுத்தும் நரம்பு; nerve the controls the blood vessels.

*[தமனியக்கம் + நரம்பு]*

**தமனியக்கமாக்கு-தல்** *tamaniyakkam-ākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) பொன்னாக்குதல்; to transmit into gold.

*[தமனியக்கம் + ஆக்கு-.]*

**தமனியக்கூடம்** *tamaniya-k-kūḍam*, பெ. (n.) தமனியப்பொதியில் பார்க்க; see *tamaniya-p-podiyil*. "இணையற வகுத்த தமனியக்கூடத்து" (பெருங். உஞ்சைக். 33: 101).

*[தமனியம் + கூடம்]*

**தமனியப்பொதியில்** *tamaniya-p-podiyil*, பெ. (n.) பலர் கூடுதற்குரிய பொன் வேய்ந்த அம்பலம்; golden roofed assembly hall. "சாலையுங் கூடமுந் தமனியப் பொதியிலும்" (மணிமே. 28: 66).

மறுவ. பொற்சபை; பொன்னம்பலம்.

*[தமனியம் + பொதியில்]*

**தமனியம்** *tamaniyam*, பெ. (n.) பொன் (திவா.); gold.

*[தமனி → தமனியம்]*

**தமனியன்** *tamaniyan*, பெ. (n.) 1. குரு (சாதகசிந். 3); Jupiter. 2. காரி (யாழ்.அக.); Saturn. 3. நான்முகன்; Brahmān. 4. இரணியன்; Iraṇiyan, an Ašura

*[தமனியம் → தமனியன்.]*

**தமனோயிருத்தி** *tamanōyirutti*, பெ. (n.) ஏழிலைப்புன்னை; a kind of punnai tree (சா.அக.).

*[தமன் + ஓ + இருத்தி.]*

**தமனோருபனி** *tamanōrupani*, பெ. (n.) வேளைச்செடி; five leaved cleome.

*[தமன் + ஓ + உருபனி - தனனோருபனி. தமன் = பொன். பொன்போன்ற இலைகளையுடைய வேளைச்செடி.]*

**தமா** *tama*, பெ. (n.) கசகசா; poppy seeds (சா.அக.).

**தமார்க்கதம்** *tamār-k-kadam*, பெ. (n.) தமார்க்கவம்,1 பார்க்க; see *tamārkkavam,1.*

**தமார்க்கவம்** *tamārkkavam*, பெ. (n.) 1. பீர்க்கு (மலை.); common luffa. 2. வேங்கை; kino-tree.

*[தள் → தம் → தமார்க்கு + அவம் - தமார்க்கவம்.]*

**தமால்** *tamāl*, பெ. (n.) மக்கி மரவகை; a kind of makki tree.

*[தம் + ஆல் → தமால்.]*

**தமாலகம்** *tamālagam*, பெ. (n.) தாளிசபத்திரி; Himalayan silver tin.

*[தமால் + அகம் → தமாலகம்.]*

**தமாலகி** *tamālagi*, பெ. (n.) கீழ்க்காய்நெல்லி (தைலவ. தைல.) பார்க்க; see *kīl-k-kāy-nelli*. forest small-leaved featherfoil.

*[தமாலகம் → தமாலகி.]*

**தமாலகிரி** *tamālagiri*, பெ. (n.) தமாலகி (சங். அக.) பார்க்க; see *tamālagi*.

*[தமாலகி → தமாலகிரி.]*

**தமாலதளம்** *tamālataḷam*, பெ. (n.) பச்சிலை; green herb (சா.அக.).

*[தமாலம் + தளம் - தமாலதளம்.]*

**தமாலபத்திரி** *tamālapattiri*, பெ. (n.) 1. திலக மரம்; wild cinnamum tree. 2. பெரிய இலவங்கப் பட்டை; Cassia cinnamn.

*[தமாலம் + பத்திரி - தமாலபத்திரி. காய்ச்சல், கோழை, நச்சுத்தன்மை, இடைவிடாத சொறி போன்ற, நோயினைத் தணிக்கும் மருந்து.]*

**தமாலம்** *tamālam*, பெ. (n.) 1. மூங்கில்தோல்; bamboo skin. 2. மலைப்பச்சை அல்லது மலைப்புளி; yellow mangosteen, hill green (சா.அக.). 3. பச்சிலை பார்க்க; see *paccilai*. "சம்பக மாதவி தமாலங் கருமுகை" (சிலப். 8, 45). 4. இலை (திவா.); leaf.

*[தமால் + அம் → தமாலம்.]*

**தமாலோமயம்** *tamālōmayam*, பெ. (n.) செம்பரத்தை; shoe-flower.

*[தும் → தம் = செம். தம் → தமர் = சிவப்பு. தமலம் → தமாலம் → தமாலோமயம். சிவப்பு வண்ணமுள்ள செம்பரத்தை மலர்.]*

**தமி[1]-த்தல்** tami-, 4 செ.குவி. (v.i.) தனியாதல்; to be alone, lonely. "நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே" (புறநா. 184: 3).

*[தனி → தமி-.]*

**தமி²-த்தல்** *tami-,* 4 செ.குன்றாவி. (v.t.) **தண்டித்தல்;** to punish. "என் குற்றத்தைப் பார்த்துத் தமிக்க நினைத்தாராகில்" *(ஈடு. 1. 4:7).*

*[தண்டி → தண்மி → தமி-.]*

**தமி³** *tami,* பெ. (n.) *1.* **தனிமை;** solitude, loneliness. "தமிநின்று" *(திருக்கோ. 167). 2.* **ஒப்பின்மை** *(சங். அக.);* inequality. *3.* **துணையின்மை** *(யாழ்ப்.);* destitution, helplessness.

*[தனி → தமி. தனித்தியங்குந் தன்மை பெற்ற, தன்னேரில்லாத் தமிழ்மொழி, ஒப்புயர்வில்லா ஞாலமுதன்மொழி.]*

**தமி⁴** *tami,* பெ. (n.) **இரவு** *(அக. நி.);* night.

*[தனி → தமி.]*

**தமிசிரம்** *tamiširam,* பெ. (n.) *1.* **இருள்;** darkness. *2.* **குறைவு** *(யாழ். அக.);* deficiency.

*[தமி → தமிசிரம்]*

**தமிசு** *tamišu,* பெ. (n.) **வேங்கை** *(அக. நி.);* Indian kino.

*[தமி → தமிசு.]*

**தமிட்டம்** *tamiṭṭam,* பெ. (n.) **தம்பட்டம்** பார்க்க; see *tambaṭṭam.* "தமிட்ட ராணுவம் பெருக்கி" *(தனிப்பா. i, 318, 9).*

*[தமட்டம் → தமிட்டம்]*

**தமியம்** *tamiyam,* பெ. (n.) *1.* **கள்** *(மூ.அ);* toddy, spirituous liquor. *2.* **பதனீர்;** sap of palm tree.

*[தனியம் → தமியம். பனங்கள்ளில் சுண்ணாம்பு கலந்து அனைவரும் பருகும் வண்ணம் மாற்றப்பட்ட பருகம்.]*

**தமியவம்** *tamiyavam,* பெ. (n.) **விடமருது;** a kind of murdah *(சா.அக.).*

**தமியள்** *tamiyaḷ,* பெ. (n.). **தனியா யிருப்பவள்;** solitary, lonely woman. "தமியளாய சீதைக்கும்" *(கம்பரா. மாயாசீதை. 80).*

*[தனி → தமி → தமியள். எஞ்ஞான்றும் துணையின்றித் தனித்திருப்பவள்.]*

**தமியன்** *tamiyaṉ,* பெ. (n.) *1.* **தனித்திருப்பவன்;** solitary, lonely person. "தானேதமியன் வந்தனனியன்" *(மணிமே. 16: 58). 2.* **துணையற்றவன்;** destitute person. "தமியனேன் தனிமை தீர்த்தே" *(திருவாச. 5: 18)* (செ.அக.).

*[தனி → தமி → தமியன் - மனைவியின்றித் தனித்திருக்கும் தன்மையன்.]*

**தமியாட்டி** *tami-y-āṭṭi,* பெ. (n.) **தமியள்** பார்க்க; see *tamiyaḷ.* "தமியாட்டி தளர்ந்ததுவே" *(திவ். இயற். திருவிருத். 73).*

*[தனி → தமி → தமியள் + ஆட்டி → தமியாட்டி. ஒ.நோ. மணவாட்டி, பெருமாட்டி]*

**தமிரவிருட்சம்** *tamira-viruṭcam,* பெ. (n.) **வேங்கை;** east Indian Kino.

மறுவ. தமிசு

*[தமிரம் + Skt. விருட்சம்.]*

**தமிரவேதை** *tamira-vēdai,* பெ. (n.) **பொன்னாக்க மருந்து வகை** (T. C. M. ii, 2, 441); a kind of drug used in alchemy (செ.அக.).

*[தமிரம் + வேதி → வேதை → தமிரவேதை.]*

**தமிழ்** *tamiḻ,* பெ. (n.) *1.* **இனிமை** *(பிங்.);* sweetness, melodiousness. *2.* **நீர்மை** *(பிங்.);* refined quality. *3.* **இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என மூவகையாக வழங்கும் மொழி;** Tamiḻ language, being divided into iyaṟ-ṟamiḻ, išai-t-tamiḻ, nāḍaga-t-tamiḻ. *4.* **ஒப்பிலாது தனித்துநிற்றல்;** independent and that which has no parallel. *5.* **தமிழ் நூல்** ;Tamiḻ literature, Tamiḻ work. *6.* **தமிழர்;** The Tamiḻs. "அருந்தமி ழாற்ற லறிந்திலர்" *(சிலப். 26: 161). 7.* **தமிழ்நாடு;** the Tamiḻ country. "தண்டமிழ் வினைஞர்" *(மணிமே. 19: 109).*

*[தம் + இல் → தம்மில் → தமில் → தமிள் → தமிழ். ஒருகா. தனி → தமி + ழ். தம் + இழ் → தமிழ். ஒ.நோ. மால் → மாழை. ஏலா → ஏழா. கல் → கள் → காள் → காழ். நாளிகை → நாளம் → நாழி.]*

கி.மு. 10,000 ஆண்டுகட்கு முன்பே, குமரிக்கண்டத்தில் வாழ்ந்த தமிழர்தம் இல்லத்தில் அல்லது நாட்டில் தோன்றி வளர்ந்த இயன்மொழியே, தமிழ். வடவர் வருகைக்குப் பின்னரே, வேற்றுமொழி

வழக்கு, தென்னகத்தில் புகுந்தது. ஆரியர் வரும்வரை, தம் வீட்டிலும், நாட்டிலும், பேசும் தனிப்பெரும் மொழியாகத், தமிழ் திகழ்ந்தது.

மொழிகட்குப் பெயர், முதற்கண் நாடுபற்றியும், பின்பு மக்கள் பற்றியும், அதன்பின், மொழியின் தன்மைபற்றியும், தோன்றியுள்ளன. கருநடம் (கன்னடம்), குடகு முதலியவை நாடுபற்றித் தோன்றியவை. மலையாளம், ஆங்கிலம் முதலியவை, மக்களை அடிப்படையாகக் கொண்டு முகிழ்த்தவை. பிராகிருதம், சமற்கிருதம் போன்றவை, மொழியின் தன்மையால் பெயர்பெற்றவை. வடமொழி, தென்மொழி எனும் பாகுபாடு திசை பற்றியும், உருது (பாளையம்) என்பன இடம்பற்றியும், பெயர் பெறுவது, நாட்டினாற் பெயர் பெறுவது போன்றதே. வழக்கற்ற மொழியாயின், வேதமொழி என்பதுபோல், நூலாலும் பெயர்பெறும். தேவமொழி என்பது, ஏமாற்றுப் பற்றிய கருத்தென்பார், மொழிஞாயிறு.

"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ் கூறும் நல்லுலகத்து"

என்று தொல்காப்பியம் கூறுவதினின்று, கி.மு. 7 ஆம் நூற்றாண்டில், வேங்கடத்திற்குத் தெற்கில், தமிழ் தவிர, வேறொரு மொழியும் வழங்கவில்லை. கடைக்கழகக் காலத்திலும், இந் நிலைமையேயிருந்தமை, கழகச்செய்யுள் களாலும், கழக மருவிய வனப்புகளாலும் அறியப்படும். திராவிடம் (தமிழ்), ஆந்திரம், கன்னடம், மராட்டி, கூர்ச்சரம் என்னும் ஐந்தையும் பஞ்சதிராவிடம் என்று, பண்டுதொட்டே, வடவர் வழங்குவர். ஆரியர் வந்தபின்பும், விந்தியமலை வரையும், தமிழும், அதன் திரிபான திரவிடமுமே வழங்கியமை பெறப்படும். அவர் வருகைக் காலத்திலோ, வடஇந்தியாவிலும், திரவிடம் வழங்கியதை, பிராகுவீயும், இராசமாகலும் இன்றும் காட்டும்.

**பல்துறை அறிஞர்தம் கருத்துக்களை, மக்கள் வழக்கு, இலக்கியவழக்கு, மொழி யியல் வழக்கு முதலானவற்றின் அடிப் படையில் ஆய்வுசெய்து, "தமிழருக்கே தமிழ்மொழி சொந்தமானது" என்று மொழிஞாயிறு நிறுவுவது, வருமாறு:-**

**இராமச்சந்திர தீட்சதர் கருத்து:** தமிழ் அல்லாத ஒருமொழி, திரவிடத்தாயாகத், தமிழுக்கு முற்பட்டு இருந்ததேயில்லை; மொழித்துறைக்குச் சொன்னதே, இனத் துறைக்கும். "திரவிட முன்னையர்" (*Pre-Dravidians*) என்றோ, "மூலத்திரவிடர்" (*Protp-Dravidians*) என்றோ, வேறுபாடு இருந்ததாக நமக்குத் தோன்றவில்லை. இவர்கள் எல்லாம், புதுக்கற்காலத்தினின்றும், அதற்கு முன்பிருந்தும், வந்த மக்களின் நேர்வழித் தோன்றிய ஓரினத்தாரே" என்பார். (*Pre-Historic South India - p. 246*).

**மொழிஞாயிறு கருத்து:** தமிழ் குமரிக் கண்டத்தில் தானே தோன்றிய மொழி. தென்னாட்டில், ஆரியர் வரும்வரை, வேற்றுமொழி யென்று எதுவும், எங்கும் வழங்கப்படவில்லை, தமிழவணிகர் மொழி பெயர் தேயம் செல்லும்வரை, அல்லது அயலாரொடு, அரசியல் அல்லது வணிகத் தொடர்பு கொள்ளும்வரை, மொழி அல்லது பேச்சு என்னும் பொதுப்பெயர் தவிர, யாதொரு சிறப்புப்பெயரும், தமிழுக்கு வழங்கியிருக்க முடியாது.

தமிழ்மொழியின் சிறப்புப்பெயர், தமிழ் (தமிழம்), திரவிடம் என்னும், இரு வடிவில் காணப்படுகின்றது. இவ்விரண்டும் வெவ்வேறு சொற்போல் தோன்றினும், உண்மையில் ஒரே சொல்லின் இருவேறு வடிவங்களாகும். இவற்றுள் முன்னையது தமிழ் என்பதே; சான்றுகள் வருமாறு.

**I. தமிழ் என்னும் பொருண்மையிலேயே திராவிடம் என்னும் சொல் வழங்கியமை.**

1. வடநூலார் தமிழைத் திரவிடம் என்ற சொல்லாலேயே, குறித்துள்ளனர். தமிழை வடநூலார், ஒரு பிராகிருதமாகக் கொண்ட போது, 'த்ராவிட' என அழைத்தனர்.
2. பாகவதபுராணத்தில், குறிக்கப்பெறும், சத்தியவிரதன் என்னும் அரசன், 'திரவிடபதி' என்று அழைக்கப்படுகின்றான்.
3. கி.பி.470-இல், வச்சிரநந்தி என்னும் சமணர், மதுரையில் நிறுவிய தமிழ்க்கழகம், 'திரவிடசங்கம்' என்று அழைக்கப்பட்டது.
4. 500 ஆண்டுகட்கு முன்பு, பெரிய திருமொழிச் சிறப்புப்பாயிரத்திற்கு, உரை வரைந்த பிள்ளை லோகாசார்யசியர், தமிழிலக்கணத்தைத் திரவிடசாஸ்திரம் என்று குறித்துள்ளார்.
5. நாலாயிரத் தெய்வப்பனுவல் - திரவிட வேதம் என்று குறிக்கப்படுகிறது.
6. சிவஞானமுனிவரின் மெய்கண்டான் நூல் அகலவுரை, 'திரவிடமாபாடியம்' என்று பெயர்பெற்றுள்ளது.

7. சபாபதி நாவலரின், 'தமிழிலக்கிய வரலாறு' 'திராவிடப் பிரகாசிகை' என்று அழைக்கப் படுகிறது.

8. தாயுமானவர், ''கல்லாத பேர்களே நல்லவர்கள்" என்னும் பாட்டில், தமிழைத், 'திராவிடம்' எனக் குறித்துள்ளார்.

9. கிறித்துவிற்கு முன்பு இலக்கியம்பெற்ற மொழி தமிழேயாம். திராவிடமொழியில் கிறித்துவிற்கு முந்தைய இலக்கியம் ஏதுமில்லை. ஆகையால் வடவர், திரவிடம் என்னும் பெயரால், தமிழையே தலைமையாகக் குறித்தனர்.

10. கி.பி 7இல், குமரிலபட்டர், தெலுங்கைத் தமிழினின்று பிரித்து, "ஆந்திர-திராவிட பாஷா" என்று அழைத்தார்.

**II. வெளிநாடுகளில் தமிழ் என்னும் சொல்லையொத்த பெயர்களே வழங்கியமை.**

1. கி.மு. 4-இல், எழுதப்பட்ட பெரிப்புளுசு என்னும் கிரேக்கநூல், 'தமிராய்' என்று, தமிழை அழைக்கிறது.

2. உரோமஞாலப் படத்தில் தமிழகம், 'தமிரிக்கே' எனக், குறிக்கப்பட்டுள்ளது.

3. கி.பி. 139-61-இல் வதிந்த, தாலமி என்னும் வரலாற்று வல்லுநர், 'திமிரிக்கே' என்னும் பெயரைத் தவறுதலாக, 'லுமிரிக்கி' என்று, எழுதிய ஞான்றும், அவருக்குப் பின்பு வந்த, ரேவண்ணா என்பவர், 'தமிரிக்கா' எனத் திருத்திக் கொண்டார்.

4. கி.பி. 7-இல், இவென்திசாங் என்னும், சீன வழிப்போக்கர் குறிப்பில், 'சிமொலொ' என்று, தமிழ் குறிக்கப்பட்டுள்ளது.

5. கால்டுவெல் கண்காணியர், 'திமில' அல்லது 'திமிர' என்று தமிழைக் குறிக்கின்றார்.

6. இலங்கை மகாவம்ச வரலாற்றில், 'தமிலோ' என்ற குறிப்புக் காணப்படுகிறது.

7. ஐரோப்பியர் 'தமுல்' என்று, தமிழை அழைத்தனர்.

8. தேனியவிடையூழியர் 'தமுலிக்க மொழி' என்று தமிழைக் குறித்துள்ளனர்.

9. ஆங்கிலத்தில் 'தமில்' (Tamil) என்ற வடிவம் காணப்படுகிறது. இது பாவணர் குறித்த, தொன்முது வடிவமாகும்.

10. மாக்சுமுல்லர், தென்மொழிக் குடும்பத்திற்கு, 'தமுலிக்கு' என்று, பெயர் சூட்டியுள்ளார்.

**III. திராவிடம் என்னும் சொல் தமிழ் என்னுஞ் சொல்லிற்கு நெருங்கிய, 'திரமிலங்' (திரமிளம்) என்னும் வடிவில் வழங்கியமை.**

**குண்டெர்ட்டுப் பண்டாரகர் கூற்றாக கால்டுவெல் கூறுவது:**

1. கி.பி. 6-இல் எழுதப்பட்ட, வராகமிகிரரின் பழைய கையெழுத்துப் படிகளில், 'த்ரமிட' என்னும் வடிவம் உள்ளது.

2. மங்கலேச மன்னனின் பட்டங்களில் 'த்ரமில' வடிவம் காணப்படுகிறது.

3. கி.பி. 1573-இல், தாரநாதர் திபெத்தில் எழுதிய 'இந்தியாவில் புத்தமதத்தைப் பரப்பின வரலாறு' என்னும் நூலில் திராவிடர், 'திரமிலர்' என்று, குறிக்கப் பட்டுள்ளனர்.

4. பழைய தொன்மமொழிபெயர்ப்புகளில், திராவிடர், 'திரமிலர்' என்றும், திரவிடம் 'த்ரமிட' என்றும் குண்டர்ட் பண்டாரகர் குறித்துள்ளதாகக் கால்டுவெல் கண்காணியர் தமது, 'திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணம்' எனும் நூலில் குறித்துள்ளார். 'த்ரமிட' என்பது திரவிடம் என்பதன் மிகப்பழைய வடிவம். இது தமிழ் என்னும் பொருண்மையில் வழக்கூன்றிய தாகக் கால்டுவெல் குறித்துள்ளார்.

**'அம் ஈற்றின் பெற்றிமை'** 'அம்' ஈறு தமிழ் மொழிக்குரிய தனிப்பெரும் சொல்லாக்க ஈறாகப் பயின்று வந்துள்ளது. நாட்டுப் பெயர்களும், மொழிப்பெயர்களும் பண்டைக் காலத்தில் பெரும்பாலும், 'அம்' ஈறு பெற்றுத் தமிழில் வழங்கியதை நோக்கும்போது, 'தமிழ்' என்னும் சொல்லும், சிறுபான்மை (தமிழ் + அம்) தமிழம் என்றும், வழங்கியதாகக் கருதலாம்.

தமிழ் + அம் - தமிழம் - த்ரமிலம் → த்ரமிளம் → த்ரமிடம் → த்ரவிடம் என்னும் வடிவுகளை முறையே நோக்கின், 'தமிழ்' என்பதன் திரிபே, திரவிடம் என்று, வளர்ந்துள்ளமை கண்கூடு. ஆயின் கால்டுவெலார், இவ் வெளிய முறையில் உண்மையைக் காணாமல், இயற்கைக்கு மாறாகத் தலைகீழாய் நோக்கி, திரவிடம் → த்ரமிடம் → த்ரமிளம் → த்ரமிலம் → தமிழம் → தமிழ் என்று, திரிந்ததாக முடிவு செய்துவிட்டார். கால்டுவெலாரின், இத் தலைகீழாய்வை,

கிரையர்சன் திருத்தியமைத்துவிட்டதாக மொழிஞாயிறு, குறித்துள்ளார். (தவ. 33).

மேலும், "த்ரமிளம் என்பது, தமிழ் எனத் திரிதலும் அது" என்று பிரயோக நூலார் (பக். 4) குறித்துள்ளது. அவரது தமிழ் வெறுப்பையே காட்டும்.

***IV.* தமிழ்நாட்டுலக வழக்கில், திராவிடம் என்னும் வடிவம் அருகியும் வழங்காமை குறிக்கத்தக்கவொன்றாகும்.**

***V.* வடமொழி நாடகங்களிலும், சமண நூல்களிலும் 'த்ரமிடம்', 'த்ரவிடம்' என்னும் ரகரமேற்றிய வடிவுகளே யன்றி, 'தபிள', 'தவிட' என்னும் மிக நெருங்கிய வடிவுகளும், காணப்படுகின்றன.**

**'தமிழ்' என்னும் சொல்வழக்கு: மொழியியல் அறிஞர்கள் கருத்து:**

1. கிரேக்க நாட்டில் வழங்கிய 'தெர்மிலே', அல்லது 'தெர்மிலர்' அல்லது 'திரிமிலர்' என்னும் இனப்பெயரினின்று திரிந்த சொல்லே 'தமிழ்' என்பார், ஞானப்பிரகாசக் குரவர்.
2. 'தம்ரலித்தி' என்னும் வங்கநாட்டு நகர்ப் பெயரினின்று, 'தமிழ்' என்னுஞ்சொல், வந்தது என்று, கனகசபைப்பிள்ளை கருதுகின்றார்.
3. ஈழநாட்டுத் தமிழறிஞர் கந்தையாப் பிள்ளை, "தாமம்", (ஞாயிறு + ஈழம் (இலங்கை) என்னும் இருசொல்லும் சேர்ந்து முறையே, தாம் + ஈழம் → 'தமிழ்' என மருவி வழங்கியதாகக் கூறுகிறார்.
4. தமிழ் என்னும் சொல்லின் முதனிலை 'தமி' யென்னும் சொல்லினின்று, முகிழ்த்ததாகும். இஃது தன்னேரில்லாத் தன்மைத்து; ஒப்பற்றதெனப் பொருள்படும் என்று, ஒரு சாரார் நிறுவுகின்றனர்.
5. வலிமெலியிடையாகிய, மூவினமெய்களைக் கொண்ட நிலையினைக் குறிக்குமென்று, மற்றொரு சாரார் கருதுவர்.
6. கிரேக்க நாட்டிலிருந்து, தமிழ் வந்தது என்பதற்கும், கிரேக்கநாட்டில் தமிழர் வாழ்ந்தனர் என்பதற்கும், அடிப்படையான ஆதாரம் எதுவுமில்லையென்று, மொழி ஞாயிறு மொழிகின்றார்.

**'தெர்மில' என்னும் சொல்லினின்று 'தமிழ்' தோன்றவில்லை.**

தமிழ்ச்சொற்களும், தமிழர் பழக்க வழக்கங்களும், கிரேக்க நாட்டில் மட்டுமின்றி, உலகத்தில், பல இனத்தாரிடையும் காணப் படுவதாலும், கிரேக்க நாட்டிற்கும், இந்தியாவிற்கும் இடையில், ஒரு திரவிட மொழியும் வழங்காமையானும், "தெர்மில்" என்னும் சொல்லைத் திர + இல் + அர் என்று பிரித்துக் கடற்கரையில் குடிகொண்டவர் என்று பொருள் கூறுவது, 'கேசவக் கிருட்டிணனே ஏசுக் கிறித்து' என்று சொல்வ தொக்கும். (தவ. 34).

"ஒருசொல்லின் (திர + இல் + அர் - திரமிலர்) ஒருபுடையொப்புமையைச் சுட்டிக்காட்டி, ஒரு நாட்டவரை 5000 கல் தொலைவினின்று வந்தவராகக் கொள்வது, மொழிநூன்முறைக்கு முற்றிலும் முரணானது" (தவ. 34).

**"தம்ரலித்தி" அல்லது "தமிலப்தி" அல்லது "தமிலூக்" என்பதினின்று, தமிழ் தோன்ற வில்லை**

வங்கநாட்டில் திரவிடரேயன்றித் தமிழர், ஒருகாலும் வாழ்ந்ததில்லை. இற்றை வங்க மொழி, ஆரியவண்ணமாய் மாறிவிட்டது. காசி என்னுஞ் சொற்குக், "காஞ்சி" என்னும் சொல்லோடுள்ள தொடர்புப்போன்றதே, 'தம்ரலித்தி' அல்லது 'தமிலப்தி' என்னுஞ் சொல்லினின்று 'தமிழ்' வந்தது, என்று கூறுவது. (தவ. 34).

**"விருப்பக்கருத்தும்" – தவறேயாகும்**

தமிழர் நாகரிகமடைந்த காலந்தொட்டுத் தமிழகம், சேரசோழபாண்டியராட்சிக்குட்பட்ட முத்தமிழ் நாடாயிருந்து வந்துள்ளது. கி.மு. 7ஆம் நூற்றாண்டினரான தொல்காப்பியரும்,

> வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
> நாற்பெயர் எல்லை யகம் *(தொல். 1336)*

என்று தமிழகத்தின் எல்லையை வரையறை செய்துள்ளார். இலங்கை, வரலாற்றுக் காலந்தொட்டு, குடியேற்ற நாடாகவிருந்து, அந்நியரால் ஆளப்பட்டு வந்துள்ளது. தமிழ் என்னும் பெயர், குமரிக்கண்டமாந்தன் தமது இல்லத்துமொழிக்கு அமைத்துக்கொண்ட பெயர். 'தாமமெல்லாம்' அல்லது 'தாமீழம்' என்பது, இலங்கையை நோக்கிப் புதுவதாகப் படைத்த, பொருந்தாப் புணர்ப்பாகும்.

இத்தகைய பொருந்தாப்புணர்ப்புச் சொல்லினின்று, தமிழ் என்னும்பெயர் தோன்றிற்றென்பது, நாட்டுப்பற்றினால் எழுந்த விருப்பக்கருத்தே யாகும். ஆகையால், இதுவும் தவறேயாகுமென்றறிக. *(தவ. 34).*

**"ஒப்புயர்வற்றது" என்ற கருத்தும் பொருந்தாது**

பிறமொழிகள் தோன்றியபின்பே, அம் மொழிகளோடு ஒப்புமைகாட்டித், தமிழ்

மொழியின் உயர்வுகண்டு, 'தமிழ்' எனப் பெயரிட்டதாக வரையறை செய்யவேண்டும். பெயரீட்டுநிகழ்ச்சி மிகப் பிந்தியதாக அமைந்துவிடுவதால், இக்கருத்து ஏற்புடைத் தன்று.

**மூவினமெய் பற்றிய கருத்தும் பொருந்தாது**

மூவினமெய் எல்லா மொழிகட்கும் பொதுவானது. தமிழ் என்னும் பெயர், அது குறித்துத் தோன்றிற்று என்பதும் தவறானதே.

**இனிமைக் கருத்தும் ஏற்புடைத்தன்று**

தம் + இழ் - தமிழ். சொல்லமைப்பிலேயே இனிமை இயைந்துள்ளது என்பார் எசு. சீநிவாசையங்கார். 'இழ்' என்னும் ஈறு இனிமைப் பொருள்தரும், 'இழும்' என்பதன் சிதைவே. இன்னும் சிலர், ''இனிமையு நீர்மையுந் தமிழென லாகும்'' என்னும் பிங்கலந்தை நூற்பாவைத் தழுவி, "தமிழ் என்றாலே இனிமை; இனிமை என்றாலே தமிழ். இனிமையுந் தமிழும் இரண்டறக் கலந்தது. பின்னிப் பிணைந்தது. பிரிக்க வியலாதது" என்று கூறுவர். தமிழ் அன்பின் மொழி, அருளின் இருப்பிடம், பண்பின் விளைநிலம். அதனாற்றான் திருமூலரும், "என்னை நன்றாக இறைவன் படைத்தனன். தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே" என்று திருவாய் மலர்ந்தருளினார். எல்லா மொழியாளரும், தத்தம் மொழியே இனிமையுடைத்தென்பர். மாடு என்னுஞ் சொற்குச் செல்வம் என்னும் பொருள் தோன்றியதுபோல், தமிழ் என்னும் சொற்கு இனிமை என்பது மதிப்பும், பற்றும் பற்றித் தோன்றிய வழிப்பொருளேயாகும்; தம் + இம் (இழும்) என்னும் சொற்பகுப்பில், 'தம்' என்னும் முன்னொட்டு தொடர்பற்றும், 'இழும்' என்னும் தலைமைச்சொல், ஈறாகக் குன்றியும் இருக்க வேண்டிய சூழல் ஏற்படுவதால், இனிமைப்பொருட் கரணியமும், பொருந்தாதென்றறிக *(தவ. 35)*.

(எ.கா.) இழும் = இனிமை.

இழுமெனல் = இனிதாயிருத்தல்
இழுது = தேன், தித்திப்பு

**சிறப்பு 'ழ'கரக்கருத்தும் சிறப்புடைத்தன்று**

தனிமையாக 'ழ'கரத்தைக் கொண்ட தன்னேரில்லா மொழி தமிழ்மொழி. மேலோட்டமாக நோக்கினால், பொருந்துவது போல் தோன்றும். ஏனைய மொழிகளுடன் நோக்கினால், இஃதும், ஏற்புடைத்தன்று. குமரிக்கண்டத்திலேயே தமிழ் என்னும் பெயர் ஏற்பட்டுவிட்டது. தமிழ் என்னுஞ் சொல்லில் 'ழ்' இயல்பீறன்று.

(ஒ.நோ.) அம் + இழ் - அமிழ்
இம் + இழ் - இமிழ்
உம் + இழ் - உமிழ்
கும் + இழ் - குமிழ்
சிம் + இழ் - சிமிழ்

என்பவற்றிற்போல், (தம் + இழ் → தமிழ்) 'இழ்' என்பது 'இல்' என்பதன் திரிபு. தனிமையாக 'ழ'கரத்தைக் கொன்டதென்னும் பொருளில், 'தமிழ்' என்பது, தமி + ழ் என்று பிரிதல் வேண்டும். தமி = தனிமை. 'ழ' கரம், இனிதாய் ஒலிப்பதால், தனிமையாக 'ழ'கரத்தைக் கொண்ட தென்னுங் கூற்றும், இனிமைக் கருத்தைத் தழுவியதே.

இனிமையென்பது தமிழுக்கு 'ழ'கரத்தால் மட்டும் ஏற்பட்டதன்று. எழுத்தினிமை போன்றே, சொல்லினிமை உண்டு. இதுபற்றி, மாணிக்கவாசகர், தமது திருக்கோவைச் செய்யுளில்,

*"சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்*
*பலத்துமென் சிந்தையுள்ளும்*
*உறைவான் உயர்மதிற் கூடலி னாய்ந்தவொண்*
*டீந்தமிழின்*
*துறைவாய் நுழைந்தனை யோவன்றி*
*யேழிசைச் சூழல் புக்கோ*
*இறைவா தடவரைத் தோட்கென் கொலாம்*
*புகுந் தெய்தியதே'*

என்று பாடியுள்ளார். ஈங்கு, "ஒண்டீந்தமிழின் துறை" என்று, ஏனைய மொழிகட்கு இல்லாத பொருளிலக்கணமும், ''ஏழிசைச்சூழல்'' என்று இசைத்தமிழும், இன்பத்துறைகளாகக் குறிக்கப்பட்டுள்ளமையால், தமிழின் தனிச் சிறப்புகள், நன்கு புலனாகும். ஏனென்றால், மாணிக்கவாசகர் காலத்தே, ஆரியமொழிகள் மேற்குறித்த ஆய்வுப்புலத்தை எட்டியிருத்தல் அரிதினும் அரிதாகும்.

ஒருநாட்டில், ஒரே மொழி வழங்குமாயின், அதற்குச் சிறப்புப்பெயர் தோன்றாது. பேச்சு அல்லது மொழி என்னும் பொதுப்பெயரே அதற்கு வழங்கும். ஓர் ஊரில், ஒரே ஓர் ஆறிருப்பின், அதை ஆறென்று, பொதுப் பெயரலாலேயே குறிப்பர். ஒரு மொழி ஆயிரங்கல் தொலைவிற்கு, அப்பாற் படரின், பல்வேறு கரணியம் பற்றித் திரிதல் இயல்பு. அத் திரிபு திடுதிப்பென்று, சின்னாளில் தோன்றாது. மெல்லமெல்லப் படிப்படியாகத் தோன்றும். அது மொழிபெயர்தல் எனப்படும். கீழ்க்காணும் கழகவிலக்கியப் பாக்கள், தமிழர்தம் மொழிபெயர்தேயச் செலவினைத் தெளிவுறுத்துகின்றன.

"குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற்கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும்
வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே"
*(குறுந். 11: 5-8)*

"மொழிபெயர் பன்மலை யிறப்பினும்
ஒழிதல் செல்லா தொண்டொடி குணனே"
*(ஐங். 321: 4-5)*

"தமிழ்கெழு மூவர் காக்கும்"
மொரீபெயர் தேஎத்த பன்மலை யிறந்தே"
*(அகம் 31: 14 - 15)*

"பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும் நல்குவர்"
*(அகம் 211: 7 - 8)*

தொன்றுதொட்டுத் தமிழுக்கு அடுத்த நிலையில், வடபால்வழங்கும் மொழி தெலுங்கு. தமிழர், தெலுங்கை, 'வடகு' என்றனர். வடகு உயிரியைபு மாற்றத்தால் 'வடுகு' என்று மாறும். நீலமலையில் வாழும் கன்னடத் திரவிடரைக் குறிக்கும் 'படகர்' என்னும் பெயர், வடகர் என்பதன் திரிபே. தெலுங்கையடுத்துத் திரிந்த பெருந்திரவிட மொழி கன்னடமே.

தமிழவணிகர் வடக்கிலுள்ள மொழிபெயர் நாட்டிற்குச் சென்றபோது, அந் நாட்டார், அவ் வணிகர் பேச்சைத் 'தம்மில்' (தம் + இல்) என்று குறித்திருக்கலாம். 'இல்' என்பது வீட்டையுங் குடியையும், ஊரையும் உணர்த்தும். (ஒ.நோ.) அன்பில், கிடங்கில், பொருந்தில்.

இற்பிறந்தார் = குடிப்பிறந்தார் என்னும் பொருண்மையில் பாடல்களில் பயின் றுள்ளமை காண்க.

திருவள்ளுவர் குறிப்பது கீழ்வருமாறு: (எ.கா.)

"இற்பிறந்தார் கண் அல்லது இல்லை
இயல்பாகச்"
செப்பமும் நாணும் ஒருங்கு" *(குறள், 951)*

"இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை
இளிவந்த
சொற்பிறக்கும் சோர்வு தரும்" *(குறள்,1044)*

**தம் இல் மொழியாவது, தம் வீட்டில் அல்லது நாட்டில் பேசும் மொழி.**

தம்மில் → தமில். 'தம்மில்' என்பதே 'தமில்' எனத் தொக்குத் 'தமிழ்' என்று திரிந்தது. (ஒநோ.) வெய்யில் → வெயில் எனத் தொக்கு வழங்குதலை நோக்குக.

தமிழ் என்னும் திரிபில், மொழிப்பெயர்த் தன்மை முற்றிவிட்டது என்றறிக. *(தவ. 38)*

"தெலுங்கு என்னும் வடுகு, முதற்காலத்தில் தமிழினின்று மிக வேறுபட்டிருக்க முடியாது. இதைக் கீழ்க்காணும் பாடல் வரியால் அறியலாம்.

"வேங்கடத்தும்பர் மொழிபெயர் தேயம்" என்றது, வடுகு நாட்டையே என்பது தெளிவுறு தேற்றம். தாம் என்பது தாமு என்றும், தம் என்பது தம என்றும், தம்பின் என்பது தம்முடு என்றும், இல் என்பது இல்லு என்றும், இன்றும் தெலுங்கில் வழங்குவதால் தம்மில் என்பது தமில் என்னும் கூட்டுச்சொல், அக்கால வடுகிற்கு இயல்பானதே யென அறிக." (தவ. 38).

அலர்மேல் மங்கை →அலர்மேல்

என்று குறுகியது போல்,

தமில்மொழி → தமில்

என்று குறுகியது. 'தமில் → தமிள் → தமிழ்'. என்று நாளடைவில் குறுகி வழங்குதல் இயல்பே. 'ல → ள → ழ'கரத் திரிபு. பொருட் பொருத்தப்பாட்டிற்கு, முற்றிலும் ஒத்த நிலையில் அமைந்துள்ளது. லகரத்தினின்றே ளகரமும், ளகரத்தினின்றே ழகரமும் தோன்றி யிருத்தலால், லகரம் நேரடியாகவோ, ளகர வாயிலாகவோ, ழகரமாய்த் திரிதலுண்டு.

(எ.கா.)

மால் → மாழை; ஏலா → ஏழா (பழங்குடியினர் மனைவியை விளிக்கும் சொல்.) கல் → கள் → காள் → காழ் (கருப்பு). நாலிகை (மூங்கில்) → நாளம் (உட்டுளை) → நாழி (உட்டுளையுள்ளபடி).

ழகரம் லகரத்தின் மிகப் பிந்தியதாதலின், 'தமில்' என்னும் 'ல்'கா வீற்று வடிவம், அப் பெயரின் தொன்மையையும் சுட்டும்.

'தன்மானம்', 'தமர்' என்னும் சொற்களில், தன், தம் என்பன படர்க்கை சுட்டாது சொந்த என்று பொருள்படுதல் போல், தமிழ் என்னும் சொல்லிலுள்ள 'தம்' என்னும் முன்னொட்டு, சொந்தம், உடைமை என்னும் பொருள்களைத் தரும்பான்மையில் உள்ளது. இதுவே, பொருட்பொருத்தப்பாட்டிற்கும் இயல்பானது. தமிழ்மொழி இயன்மொழி என்பதற்கும், நற்சான்று நல்குகிறது.

### பாவாணரின் கொண்முடிபு

தமிழரே 'தமில்' என்னும் சொல்லில், 'சொந்த' என்று பொருள்தருமாறு, தம் மொழிக்கு, அப் பெயரை இட்டுக்கொண்டனர். (ஒ.நோ.)

சாயுங்காலம் → சாயங்காலம் என்று திரிவது போல், சாயம் என்னும் பெயரெச்சமே வடமொழியில் சாயுங்காலத்தைக் குறித்தல் போல், 'தமிழ்' என்னும் பெயரடை பெயர்த் தன்மைப்பட்டு, மொழியைக் குறித்ததென்க.

Skt. ஸாயம் → Hindi. ஸாம்

இதுகாறும், கூறியவற்றால், தமிழ் என்னும் பெயருக்குக் கூறப்பட்ட பொருட் கரணியங்கள், எல்லாவற்றுள்ளும், தனியாக 'ழ'கரத்தையுடையது, 'தந்நாட்டு மொழி' - என்னும் இரண்டே பொருத்தமானவை யென்றறிக. இவற்றினும், சிறந்தது தோன்றும் வரை, இவையே கொள்ளத்தக்கன வென்றும் எண்ணிக் கொள்க *(த.வ. 39).*

**தமிழ்க்குச்சரி** *tamil-k-kuccari,* பெ. (n.) குறிஞ்சி யாழ்த்திறவகை (பிங்.); a secondary melody - type of the kuriñji class.

*[தமிழ் + குச்சரி]*

**தமிழ்க்கூத்தர்** *tamil-k-kūttar,* பெ. (n.) தமிழக்கூத்து ஆடுபவர் (திவா.); dancers of the Tamils.

*[தமிழ் + கூத்தர்]*

**தமிழ்க்கோன்** *tamil-k-kōn,* பெ. (n.) சிவகங்கை வட்டம் சோழபுரம்கோயில் தான ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டவர்; a signatory of an agreement, recorded in the temple at Chōlapuram in Šivagangai Taluk. "இவை தமிழ்க்கோன் எழுத்து" (S.I.I. 26. 517).

*[தமிழ் + கோன்]*

**தமிழ்ச்செய்-தல்** *tamil-c-cey-,* 1 செ.குன்றாவி. (v.t.) தமிழில் அருளியற் பாக்களை இயற்றுதல்; to compose the eternal blissful hymns in Tamil. "என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே" *(திருமந்திரம்).*

*[தமிழ் + செய்-. தமிழில் அருள்நலம் கெழுமிய பாக்களைப் பாடியவர் திருமூலர். தமிழின் பல்வகைச் சிறப்புகளைக் கூறுங்கால், "திருமை" என்னும் திருவருட் சிறப்பினையும் பாவாணர் குறிக்கின்றார் (த.வ.xxvi). தமிழ் என்றாலே திருமையென்னும், திருவருள் நிறைந்தது. தமிழ்ச்செய்தல் என்றால், திருவருளை வழிபடுதல். திருவருளில் இரண்டறக் கலத்தல். தமிழென்னும் திருவருளில் திளைப்பதற்குத் தான் இறைவன் என்னைப் படைத்தான் என்று, திருமூலர் கூறுகிறார். தமிழ் என்னும், திருவருளைத் தாமும் துய்த்துப் பிறரையுந் துய்க்குமுகத்தான், திருமந்திரம் இயற்றினார் என்றறிக.]*

**தமிழ்நடவை** *tamil-naḍavai,* பெ. (n.) தமிழ் வழங்குமிடம்; the place where Tamil prevails.

*[தமிழ் + நடவை]*

**தமிழ்நதி** *tamil-nadi,* பெ. (n.) வைகையாறு; the Vaigai, as the river in the Šentamil country. "புதுநீர்த் தமிழ்நதிப்பால்" *(திருவாலவா. திருநாட். 7).*

*[தமிழ் + நதி. செந்தமிழ் நாட்டிற்குரிய ஆறு]*

**தமிழ்நர்** *tamilnar,* பெ. (n.) தமிழர்; the Tamils. "தீந்தமிழ்நர் கோமான்" *(இறை, 3, 49).*

*[தமிழ் → தமிழ்நர்]*

**தமிழ்நாடன்** *tamilnāḍan,* பெ. (n.) 1. தமிழ் நாட்டு வேந்தன்; king of the Tamil country. "குரங்கிள நீர் தனைக்கொண்டெறியுந் தமிழ்நாடா" *(தனிச்செய்யுட். 59:7).* 2. பாண்டியவரசன் (திவா.); king of the Pāṇḍya family. 3. தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்; one from Tamil country. 4. ஒரு தமிழ்க்கவிஞர்; one Tamil poet.

*[தமிழ் + நாடன்]*

**தமிழ்நாவலர்சரிதை** *tamil-nāvalar-šaridai,* பெ. (n.) புலவர் பலர் பாடிய தனிச் செய்யுட்களை, அவை பாடப்பெற்ற வரலாற்றுக் குறிப்புடன் கூறும், ஒரு தொகை நூல்; a collection of Tamil poems of various poets, along with their history.

*[தமிழ் + நாவலர் + சரிதை]*

**தமிழ்நாடு** *tamil-nāḍu,* பெ. (n.) தமிழ்மொழி பேசுவோர் வாழும், கிழக்குக் கடற்கரையை ஒட்டித் தென்முனைவரையில் உள்ள மாநிலம்; state of Tamil Nāḍu.

*[தமிழ் + நாடு - தமிழ்நாடு. முன்னாள் தமிழக முதல்வர், பேரறிஞர் அண்ணா அவர்களால், 1969-ஆம் ஆண்டு, சென்னை மாநிலம் என்ற பெயர், தமிழ்நாடு என்று, மாற்றம் பெற்றது.]*

**தமிழ்ப்படுத்து-தல்** *tamil-p-paḍuttu-,* 4 செ.குன்றாவி. (v.t.) *பிறமொழியிலுள்ளதனைத் தமிழில் மொழியாக்கம் செய்தல்;* to translate into Tamil.

*[தமிழ் + படுத்து-.]*

**தமிழ்ப்பரணிகொண்டோன்** *tamil-p-paraṇi-koṇḍōṉ,* பெ. (n.) 'பரணி' யெனுஞ் சிற்றிலக்கிய வகை மூலமாக, புலவர்தம் பாடு புகழ்க்குரிய (நாடுபல வென்றெடுத்த), இராசாதிராசன்; Rājādirājaṉ, the greatest and famous Tamil chōla-king.

**தமிழ்ப்பொழில்** *tamil-polil,* பெ. (n.) *காலாண்டுத் தமிழ் ஆய்விதழ்;* quarterly Tamil research edition.

*[தமிழ் + பொழில்]*

**தமிழ்மருந்து** *tamil-marundu,* பெ. (n.) *தமிழ் மருத்துவநூல்களிற் கூறியவாறு செய்யப் பட்ட சித்தமருத்துவம்;* medicine prepared according to the Tamil medical system, dist. fr. šiṅgaḷa-marundu, allopathy, homeopathy etc., (செ.அக.).

மறுவ. சித்தமருந்து, கைமருந்து, மூலிகை மருந்து

*[தமிழ் + மருந்து]*

**தமிழ்மலை** *tamil-malai,* பெ. (n.) *திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள பொதிய மலை* (சங். அக.); mount podiyam in Thirunelvēly, District.

*[தமிழ் + மலை]*

**தமிழ்மறை**[1] *tamil-maṟai,* பெ. (n.) *திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள்;* Thirukkuraḷ composed by Thiruvaḷḷuvar.

*[தமிழ் + மறை]*

**தமிழ்மறை**[2] *tamil-maṟai,* பெ. (n.) *திருஞான சம்பந்தப் பெருமானால் இயற்றப்பட்ட முதல்மூன்று திருமுறை;* the first three parts of Thirumuṟai by Thiruñāṉa Šambandar. "பன்னு தமிழ்மறையாம் பதிகம்பாடி" (பெரியபு. திருஞான. 319)

*[தமிழ் + மறை → தமிழ்மறை. பன்னிரு திருமுறைகளுள், முதல்மூன்று திருமுறை.]*

**தமிழ்முத்தரையர்கோவை** *tamil-muttaraiyar-kōvai,* பெ. (n.) *முத்தரையர் என்ற தமிழ்த் தலைவர் மேல் இயற்றப்பெற்ற கோவைநூல்* (யாப். வி. 486); a kōvai poem on certain Tamil chiefs called Muttaraiyar.

*[தமிழ் + முத்தரையர் + கோவை]*

**தமிழ்முனி** *tamil-muṉi,* பெ. (n.) *தமிழ்முனிவர் பார்க்க;* see *tamil-muṉivar.*

*[தமிழ் + முனி]*

**தமிழ்முனிவர்** *tamil-muṉivar,* பெ. (n.) *தமிழ் மொழியை இலக்கணத்தாற் செப்பஞ்செய்த அகத்திய முனிவர்;* Agaštya, as the sage, who wrote the first Tamil-grammar. "ஒண்டமிழ் முனிவனுண்ண" (கந்தபு. சூரபன். வதை. 289).

*[தமிழ் + முனிவர். அகத்தியர், பன்னெடுங் காலத்திற்கு முன்பு யாத்த தலைக் கழக இலக்கணம் அகத்தியம். இந்நூல் ஆரியர் வருகைக்குப் பன்னெடுங் காலம் முந்தியது. இவர் பொதியமலையில் வாழ்ந்தவர். சித்த மருத்துவம் இவரோடு, தொடர்புடையது. பிற்காலத்தில், ஆரியக்கதைகளுள், வரும் அகத்தியரோடு இவரை ஒப்பிட்டு மயங்குதல், சரியன்று.]*

**தமிழ்மூவாயிரம்** *tamil-mūvāyiram,* பெ. (n.) *பத்தாவது திருமுறையான திருமந்திரம்;* Tirumandiram, the 10th Thirumuṟai.

*[தமிழ் + மூவாயிரம். தமிழ் = திருமந்திரம்.]*

**தமிழ்மூன்று** *tamil-mūṉṟu,* பெ. (n.) *இயலிசை நாடகம் என முத்தமிழ்;* tamil language being divided into iyaṟṟamil, išai-t-tamil, nāḍaga-t tamil. "சங்கத் தமிழ் மூன்று" (ஔவைப் பாட்டு).

*[தமிழ் + மூன்று]*

**தமிழ்வழிக்கல்வி** *tamil-vaḷi-k-kalvi,* பெ. (n.) *தமிழ் வாயிலாக அறிவியல் தொழில்நுட்பம் பயிலுகை;* learning science and technology through Tamil.

*[தமிழ்வழி + கல்வி.]*

**தமிழ்வாணன்** *tamil-vāṇaṉ,* பெ. (n.) *தமிழால் வாழ்கிறவன்;* Tamil poet or scholar. "தெள்ளு

தமிழ்வாண ரிசைவாணர் சூழ" *(திருவாலவா. 57, 22).*

*[தமிழ் + வாழ்நன் → வாணன். (ஒ. நோ.) இசைவாணன். ]*

**தமிழ்வாழ்நர்** *tami̱l-vā̱lnar,* பெ. (n.) **தமிழ்ப் புலவர்;** Tami̱l-poets.

*[தமிழ் + வாழ்நர்]*

**தமிழ்விரகன்** *tami̱l-viragan̠,* பெ. (n.) **திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் (தமிழில் வல்லவன்);** Šaint Šambandhar, as proficient in Tami̱l. "தமிழ்விரகன் மொழிகள்" *(தேவா. 132: 11).*

*[தமிழ் + விரகன். நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பியதால், தமிழ்விரகன் என்றழைக்கப்பட்டார்]*

**தமிழ்வேதம்** *tami̱l-vēdam,* பெ. (n.) 1. **திருவள்ளுவரின் திருக்குறள்;** the Kuṟaḷ of Tiruvaḷḷuvar. 2. **தேவாரம் முதலிய சிவத் திருமுறைகள்;** Tēvāram and other sacred hymns of the Šaivās. "தமிழ் வேதம் பாடினார்" *(பெரியபு. திருஞான. 260).* 3. **நம்மாழ்வார் அருளிச் செய்த, திவ்யப்பிரபந்தங்கள்;** tivya-p-pirapandam by Nammā̱lvār. "தமிழ் வேத பாராயணா சடகோபா" *(அஷ்டப். திருவேங். மா. காப்பு).*

*[தமில் → தமிள் → தமிழ் + வேதம்]*

**தமிழ்வேளர்கொல்லி** *tami̱l-vēḷar-kolli,* பெ. (n.). **மருதயாழ்த்திறவகை** *(பிங்.);* a secondary melody-type of the marudam class.

*[தமிழ் + வேளர் + கொல்லி]*

**தமிழக்கூத்து** *tami̱la-k-kūttu,* பெ. (n.) **தமிழ் நாட்டுக்குரிய கூத்து** *(தொல். எழுத். 385, உரை.);* dance system of the Tami̱ls.

*[தமிழ் + கூத்து]*

**தமிழகம்** *tami̱l-agam,* பெ. (n.) **தமிழ்நாடு** பார்க்க; see *Tami̱lnāḍu.* "வையக வரைப்பிற் றமிழகங் கேட்ப" *(புறநா. 168: 18).*

*[தமிழ் + அகம்]*



**தமிழச்சி** *tami̱lacci,* பெ. (n.) **தமிழ்ப்பெண்;** lady of the Tami̱l clan.

*[தமிழ் + அச்சி. அத்தி → அச்சி. ஒ. நோ. செட்டிச்சி. 'அச்சி' - சொல்லாக்க ஈறு]*

**தமிழத்தி** *tami̱latti,* பெ. (n.) **தமிழச்சி** பார்க்க; see *tami̱lacci.*

*[தமிழ் + அத்தி. 'அத்தி' - சொல்லாக்க ஈறு]*

ஒ.நோ. மறத்தி, குயத்தி

**தமிழதரையன்** *tami̱la-taraiyan̠,* பெ. (n.) **பழைய பட்டப்பெயர்களுளொன்று;** an ancient title. "ஆதிராசேந்திரத் தமிழ தரையன்" *(S.I.I. iii, 116).*

**தமிழப்பல்லவதரையர்** *tami̱la-p-palla-va-daraiyar,* பெ. (n.) **தமிழ்நாட்டுப் பல்லவரைசர்** *(நன். 164, மயிலை.);* The Pallavās of the Tami̱l country.

*[தமிழ் + பல்லவ + தரையர்]*

**தமிழர்** *tami̱lar,* பெ. (n.) **தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட மக்கள்;** people whose mother tongue is Tami̱l.

*[தமிழ் + அர்]*

சென்னைப் பல்கலைத் தமிழ்ப் பேரகர முதலியில் ஆங்கிலச் சொல்லான Tumbler என்பதற்கு, இணையாகக் கருதி, விளிம்பில்லாத நீர்க் குவளை என்று கூறியுள்ளனர். அதுவும் சரியன்று; தரையில் நிற்க இயலாத, வளைந்த அடிப்பாகம் கொண்ட குவளையைத்தான் குறிக்கும்; விளிம்பின்மை பற்றிய கருத்து இல்லை.

*தமிழன் என்பதற்குப் பொருள் கூறித் தமிழர் என்னும் சொல்லை விடுத்தது, வியப்பாக உள்ளது. குவளை (டம்ளர்) போன்றவர் தமிழர் என்று இகழ்ந்து கூறுவது மடமை யென்றறியார் போலும்.*

**தமிழலங்காரம்** *tamilalaṅgāram,* பெ. (n.) வண்ணச்சரபம் தண்டபாணி அடிகளாரால் (சுவாமிகள்) எழுதப்பட்ட நூல்; a book written by vaṇṇa-c-carabam-Thaṇḍapāṇi-aḍigaḷār.

*[தமிழ் + அலங்காரம்]*

**தமிழவேள்** *tamila-vēḷ,* பெ. (n.) காஞ்சியைப் பிறந்தகமாகக் கொண்டு, வீரபாண்டியன் ஆட்சியில் அமைச்சனாக, சேனைத் தலைவனாகப் புலமை நிரம்பிய கல்வியாளனாக, இருந்தவன்; Tamiḻa-vēḷ, who was a native of Kāñci. served under Virapāṇḍiyaṉ was an able administrator, great Tamiḻ-scholar and also the chief of the army. "தண்டமிழோ டாரியநூல் வல்ல தமிழவேள்" *(S.I.I. v.xiv. 87).*

**தமிழறியும்பெருமாள்கதை** *tamil-ariyum-perumāḷ-kadai,* பெ. (n.) ஒரு தமிழ் உரைநடை நூல்; a prose work in Tamiḻ (செ.அக.).

*[தமிழ் + அறியும் + பெருமாள் + கதை]*

**தமிழன்** *tamilan,* பெ. (n.) 1. தமிழைத் தாய் மொழியாக உடையவன்; one whose mother tongue is Tamiḻ. 2. தமிழ் பேசுவோரில் பார்ப்பனர், அல்லாதார்; a Tamiliaṉ, as dist. fr. āriyaṉ. "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" *(தேவா. 744:5).* சைவத்தைச் சிவனியம் என்றும், வைணவத்தை மாலியம் என்றும், மொழி பெயர்த்த பாவாணர், பார்ப்பனர் என்பதற்கு முன்பே மொழிபெயர்ப்பிருப்பினும், வட மொழிக்குத் தமிழில் மூலமான உயிர்மெய்யையும் தென்மொழிகளுக்குத் திணிப்பு முயற்சியாகவும் இருந்த சமற்கிருதத்தைத் தாய்மொழியாகக் கருதும் ஆரியப் பார்ப்பனப் பூசாரியை பிராமணர் என்றே, பாவாணர் எழுதினார்.

*[தமிழ் + அன் = தமிழைத் தாய்மொழி யாகவோ, பண்பாட்டு - பயன்பாட்டு மொழியாகவோ, கொண்டவன்; தமிழ் மூதாதையர் வழி வந்தவன்.]*

**தமிழாக்கம்** *tamil-ākkam,* பெ. (n.) பிறமொழிச் சொற்கள், தொடர்கள், கருத்துக்களைத் தமிழ்மைப்படுத்தல்; தமிழ் ஒலிப்படுத்துகை; Tamiḻ translation/tamilization.

*[தமிழ் + ஆக்கம்]*

**தமிழாகரன்** *tamil-āgaran,* பெ. (n.) (தமிழுக்கு நிலைக்களமானவன்) திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார்; Šaint Šambandhar, as the mine of Tamiḻ learning. "தமிழாகரன்றன் புகலி" *(பதினொ. ஆளுடை. 35).*

*[தமிழ் + ஆகு + அரன். அரன் = நிலைக்கள மானவன். நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பி, ஊர்தோறுஞ் சென்று அருளியற்றமிழை வளர்த்தவர்.]*

**தமிழாசான்** *tamil-āšāṉ,* பெ. (n.) தமிழ்முனிவர் பார்க்க; see *tamil-munivar.*

*[தமிழ் + ஆசான்]*

**தமிழி** *tamili,* பெ. (n.) தமிழ்மொழியின், தொன்முது வரிவடிவம்; the earliest Tamiḻ letter.

*[தமிலி → தமிளி → தமிழி - வடமொழி வரவிற்கும், அசோகக் கல்வெட்டில் காணப்படும் பிராமி எழுத்திற்கும் முற்பட்ட எழுத்து. தமிழ்மொழியின் முதல் வரிவடிவம். இதன் காலம் கி.மு. 4.]*

**தமிழிச்சி** *tamilicci,* பெ. (n.) தமிழச்சி பார்க்க; see *tamilacci* (செ.அக.).

*[தமிழச்சி → தமிழிச்சி]*

**தமிழியக்கம்** *tamil-iyakkam,* பெ. (n.) புரட்சிக் கவிஞர் பாரதிதாசனால் இயற்றப்பட்ட நூல்; a remarkable poetic verse, written by Puraṭci-k-kaviñar Bhāradidāsaṉ.

*[தமிழ் + இயக்கம். தமிழின் விடுதலை குறித்து எழுதப்பட்ட பாவியம். இக்கவிதை நூலுள் பாரதிதாசன், தமிழ்நாட்டின் தமிழ்த்தெருவில் தமிழ் இல்லாத நிலையினை, மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறார். "வீசுகின்ற காற்றினிலே குளிராயில்லை . . . மாந்தோப்பில் நிழலாயில்லை . . . தமிழ்நாட்டின் தமிழ்த் தெருவில் தமிழ்தானில்லை". தமிழரின்*

*முன்னேற்றமே, தமிழின் முன்னேற்றம் என்பது இக்கவிதை நூலுள் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.]*

**தமிழியல்** *tamil-iyal,* பெ. (n.) தமிழ்மொழி, மக்கள், பண்பாடு முதலியன பற்றிய ஆய்வு; study related to Tamil language, people and culture, Tamilology.

*[தமிழ் + இயல். தமிழர் தம் வாழ்வியற் புலம்]*

**தமிழியல்வழக்கு** *tamil-iyal-valakku,* பெ. (n.) பண்டைக்காலத்துத் தமிழ்நூல்களிற் கூறப்படும் அகவாழ்க்கை; a system of love-marriage set forth in ancient Tamil works. "தமிழியல் வழக்கினன் றணப்புமிகப் பெருக்கி" *(பெருங். வத்தவ. 17: 67).*

*[தமிழ் + இயல் + வழக்கு]*

**தமிழெல்லை** *tamilellai,* பெ. (n.) தமிழ் உரிமையாய் வழங்கும் நிலம்; the frontier of the Tamil. "குமரி கடல் குமரி குடகம் வேங்கட" மென்பது *(நன். சிறப்பா.)*

*[தமிழ் + எல்லை]*

**தமிழோர்** *tamilōr,* பெ. (n.) 1. தமிழ்மக்கள்; the Tamils. 2. தமிழ்ப்புலவர்; Tamil poets or scholars. "மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்" *(நீதிநெறி. 7).*

*[தமிழார் → தமிழோர்]*

**தமினியம்** *taminiyam,* பெ. (n.) பேய்; devil.

**தமுக்கடி-த்தல்** *tamukkadi-,* 4 செ.கு.வி. & செ.குன்றாவி. (v.i & v.t.) 1. பறைசாற்றிச் செய்தி அறிவித்தல் ; to tomtom, publish orders by beat of drum. 2. தேவையில்லாத போதும், பிறருக்கு அறிவித்தல் (இவ.); to give unnecessary publicity to a news.

*[தமுக்கு + அடி. தமுக்கு = செய்தி தெரிவிக்க முழக்கும், ஒருகட்பறை]*

**தமுக்கம்** *tamukkam,* பெ. (n.) 1. யானையைப் போருக்கும் அனுப்பும் தாவளம் (வின்.); place where elephants are sent together to battle. 2. மதுரையில் திருமலை நாயக்கர் கட்டியது போன்ற, வசந்தமாளிகை; summer house, royal pavilion, as the Thirumalai Nāyak building at Madurai.

தெ. தமகமு; ம. தமுக்கம்

*[தன் → தளம் = இடம். தன் → தம் → தமம். தமுக்கு + அம் - தமுக்கம்]*

**தமுக்கு** *tamukku,* பெ. (n.) செய்தி தெரிவிக்க முழக்கும் ஒருகட் பறை ; a musical instrument in use for collecting people to pass on a message (செ.அக.).

*[தமுக்கு = தொம் தொம் என்றொலித்து முழக்கும், இசைக்கருவி. தும் → தொம் → தொமுக்கு → தமுக்கு]*



**தமுக்குப்போடு-தல்** *tamukku-p-pōdu-,* 8 செ.கு.வி. & 19 செ.குன்றாவி. (v.i & v.t) செய்தி கூறுவதற்காக மக்களைத் திரட்ட, தமுக்கு என்னும் ஒருகட் பறையில், ஒலி எழுப்புதல் ; to raise sound by beating the tamukku to collect people for propagation of a news (செ.அக.).

மறுவ. தமுக்கடிக்கடித்தல்.

*[தமுக்கு + போடு-.]*

**தமுக்கை** *tamukkai,* பெ. (n.) தமுக்கு (இ.வ.) பார்க்க; see *tamukku.*

*[தமுக்கு → தமுக்கை.]*

**தமுழநாடு** *tamulanādu,* பெ. (n.) காஞ்சிபுர வட்டத்தில், திருக்கச்சூர் அருகில் இருந்த சிறுநாட்டுப்பகுதி; name of a small region near Thirukkaccūr in Kāñjipuram taluk ; "இன்னாட்டு ஆமூர்க் கோட்டத்து தமுழனாட்டு உத்திப்பாக்கம் ஆன ஆதினாயகச் சதுர்வேலி மங்கலத்து" *(S.I.I.xvi. 333.).*

*[தமிழ் + நாடு → தமிழநாடு → தமுழநாடு]*

**தமை**[1] *tamai*, பெ. (n.) ஆசை; passion, desire. "அவனுக்கு அதிகத் தமையிருக்கிறது".

தெ. தமி.

*[அமை → தமை; தமை = ஆசை வசப்படுகை]*

**தமை**[2] *tamai*, பெ. (n.) அறிவுப்புலம், வினைப் புலம் ஆகியவற்றை அடக்குகை; restraint of ñāṉēndiriyam and kaṉmēndiriyam. "தமைதான் புறக்கரண மடக்கல்" (வேதா. சூ. 11).

*[தம் + ஐ → தமை.]*

**தமையம்** *tamaiyam*, பெ. (n.) அரிதாரம் (வின்.) தாளகச் செய்நஞ்சு; yellow arpiment.

*[தமை + அம் → தமையம்.]*

**தமையன்** *tam-aiyaṉ*, பெ. (n.) 1. தன் முன் பிறந்தவன், அண்ணன்; elder brother. "தமைய னெம்மையன்" (திருவாச. 9: 13). 2. அண்ணன் முறையான்; elder male cousin, who is the son of a paternal uncle or maternal aunt.

ம. தமயன்

*[தம் + ஐயன், ஐயன் = அண்ணன்]*

**தமோகுணம்** *tamō-kuṇam*, பெ. (n.) முக் குணங்களுள் காமம், வெகுளி, மயக்கம் முதலிய தீய பண்புகளுக்குக் காரணமாயிருப்பது; the subtle quality of darkness or ignorance manifested in torpor, sleep, lust, anger, etc., one of mu-k-kuṇam (செ.அக.).

*[தம்குணம் → தமோகுணம். தமை = காமம், வெகுளி, மயக்கம் ஆகியவற்றின் அடிப்படையான ஆசை, பாசம்.]*

**தய்யான்** *tayyāṉ*, பெ. (n.) தையற்காரன்; tailor. "தையானொரு வனுக்கு. . . பங்கு ஒன்றும்" (S.I.I. ii, 277).

மறுவ. துன்னற்காரன்

*[தை → தய் → தய்யன் → தய்யான். ஒருகா. தைய்யன் → தய்யன் → தய்யான்.]*

**தயக்கம்**[1] *tayakkam*, பெ. (n.) 1. ஒளிவிடுகை; glittering, shining. 2. தோற்றம்; appearance, manifestation. "அளகைமா நகருறை தயக்க மொக்கும்" (திருவிளை. நகரப். 69).

*[துளங்கு → தளங்கு → தயங்கு → தயக்கம் (மு.தா. 147)]*

**தயக்கம்**[2] *tayakkam*, பெ. (n.) 1. கலக்கம்; perplexity, dejection. 2. அசைவு; wavering, flexibility. 3. தடுமாற்றம்; staggering. உண்மையை எப்படி உரைப்பது என்ற தயக்கம் அவர் கண்ணில் தெரிந்தது (உ.வ.).

*[துளங்கு → தளங்கு = அசைவு. தளங்கு → தயங்கு = கலங்கு. கலக்கம். (மு.தா. 147) தயங்கு → தயக்கம்]*

**தயக்கம்**[3] *tayakkam*, பெ. (n.) உடனடியாகச் செய்யவிரும்பாமல் காலந்தாழ்த்தும் உள்நோக்கம்; hesitation. கேட்ட கேள்விக்கு விடையிறுக்கத் தயக்கம் காட்டக் கூடாது (இ.வ.). சிக்கலைத் தீர்ப்பதில் நிருவாகம் ஏன் தயக்கம் காட்டுகிறது என்று தெரியவில்லை (உ.வ.).

*[துளங்கு → தளங்கு → தயங்கு → தயக்கம் = அசைதல்; உறுதியான முடிவு எடுக்க முடியாமை]*

**தயங்கு**[1]**-தல்** *tayaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ஒளிவிடுதல்; to glitter, shine. "தயங்குதாரகை" (கம்பரா. வாலிவதை. 53). 2. தெளிவாயிருத்தல்; to be clear, lucid. "தன்போல்வா ரில்லுட் டயங்குநீர்த் தண்புற்கை" (நாலடி. 210).

*[துளங்கு → தளங்கு; தளங்குதல் = ஒளிருதல். தளங்கு → தயங்கு = கலக்கமற்றுத் தெளிதல். துளங்கு → தளங்கு → தயங்கு-. (வ.வ. 172)]*

**தயங்கு**[2]**-தல்** *tayaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. திகைத்தல்; to be perplexed, agitated in mind, confused; to hesitate, waver. "தயங்கியே மயங்கி வீழ்வாள்" (அரிச். பு. மயான. 17). 2. வாடுதல்; to droop; to lose heart. "தாமிடர்ப் பட்டுத் தளிர்போற் றயங்கினும்" (திருமந். 544). 3. அசைதல்; to sway, move to and fro. "தயங்கிய களிற்றின்மேல்" (கலித். 31: 10). 4. காலந் தாழ்த்துதல்; to delay. ஒரு முடிவு எடுத்தபின் தயங்குவது என்பது அவரிடம் கிடையாது (உ.வ.). 5. நடுங்குதல்; to tremble.

*[துளங்கு → தளங்கு → தயங்கு → தயங்கு-. = அசைதல்; (வ.வ.172).]*

**தயங்குவாளி** *tayaṅgu-vāḷi*, பெ. (n.) அரிதாரம் (மனோசிலை); red orpiment.

மறுவ. தாளகம்

*[தயங்கு + வாளி]*

**தயச்செவம்** *taya-c-cevam,* பெ. (n.) அவல்; flaked rice.

**தயந்திரம்** *tayan-diram,* பெ. (n.) உறிஞ்சுகை; sucking.

**தயநாதசாதி** *taya-nāda-šādi,* பெ. (n.) நால்வகை ஆண் பிரிவினருள் ஒன்று; one of the four classes of man.

**தயமணற்குன்றம்** *tayamaṇar-kuṉram,* பெ. (n.) கருமணல்; black-sand.

*[தயமணல் + குன்றம்]*

**தயல்** *tayal,* பெ. (n.) பெண்; woman. "தயல்வளர் மேனியன்" *(திருக்கோ. 117).*

*[தையல் → தயல்]*

**தயவு** *tayavu,* பெ. (n.) 1. அருள்; grace, mercy; compassion. "கண்டித்தொடையான் தயவுடையான்" *(சிவரக. நைமிசா.47).* 2. அன்பு; love, passion. 'தாசிமேல் வைத்தேன் தயவு நான்" *(விறலிவிடு. 106).* 3. இறைப்பற்று; piety. "உயர்தயவி னினையுமவர்" *(திருப்போ. சந். பெரியகட். 2:2.)* 4. பிறர் கொடையுள்ளத்துடன் நடப்பதால், கிடைக்கும் ஆதரவு; favour that one wins or receives. உங்களுடைய தயவினால்தான் இன்று ஒரு நல்ல நிலையில் இருக்கிறேன். *(உ.வ.).*

*[தாய் → தய் → தயய் → தயை → தயவு = தயையுடையவளே தாய். முதற்கண் தாயின் பண்பான அன்பையும் அருளையும், குறித்த இச் சொல், காலப் போக்கில், "தாயிற் சிறந்த தயவான தத்துவனே" என்று, இறைவனையுங் குறிக்க வழங்கிற்றெனவாம்]*

**தயவுசெய்து** *tayavu-šeydu,* கு.வி.எ. (adv.) பணிவு, மரியாதை போன்றவற்றை வெளிப்படுத்துஞ் சொல்; polite form of request; 'please'. தயவு செய்து அமைதியாக இருங்கள் *(உ.வ.).*

*[தவ → தய. தய + உ தயவு. வ → ய திரிவு. 'உ' சாரியை. தயவு + செய்து - பேச்சில் எழுத்தில், ஒன்றைச் செய்யுமாறு வேண்டும்போது, பணிவினையும், மரியாதையையும் வெளிக்காட்டும் பான்மையில், இச் சொல் பரவலாக பயன்படுத்தப்படுகிறது. தயவுசெய்து முழுமையாக என்னைப் புரிந்து கொள்ளுங்கள். தயவுசெய்து முழுப் பணத்தையும் அனுப்பிவையுங்கள். போன்ற வழக்குகள் அனைத்துப் பிரிவினரிடையேயும் வழங்குவது கண்கூடு.]*

**தயவுதாட்சண்யம்** *tayavu-tāṭcaṇyam,* பெ. (n.) ஈவிரக்கம்; pity or consideration.

*[தயவு + Skt. தாட்சண்யம் - பெரும் பாலும் எதிர்மறை வினை வடிவங்களுடன் இணைந்து, ஈவிரக்கம் என்னும் பொருளில், மக்களிடையே இச் சொல், வழக்கூன்றியுள்ளது. தவறு செய்தவர்கள் யாராக இருந்தாலும், தயவுதாட்சண்யம் பார்க்காமல் நடவடிக்கை எடுக்கப்படும் (உ.வ.).]*

**தயனியம்** *tayaṉiyam,* பெ. (n.) இரங்கத்தக்கது; that which deserves one's pity. "தயனியக்கவி பாடுவோம்" *(தமிழ் நா. 231).*

*[தயை → தயன் + இயம். 'தயம்' சொல்லாக்க ஈறு]*

**தயா** *tayā,* பெ. (n.) அன்பு, அருள்; love, grace. "தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்" *(திருவாச. 13: 3).*

*[தயவு → தயா. ஒ.நோ. நிலவு → நிலா; உலவு → உலா]*

**தயாகரம்** *tayāgaram,* பெ. (n.) இரக்கம்; pity.

*[தயை + ஆகரம்]*

**தயாகரன்** *tayāgaraṉ,* பெ. (n.) அருளுணர்வு மிக்கவன்; store-house of mercy.

மறுவ. அருளாளன்

*[தயை + ஆகரன். ஆகரன் = ஆண்பால் சொல்லாக்க ஈறு. ஒ.நோ. கருணாகரன்]*

**தயாகூர்ச்சன்** *tayā-kūrccaṉ,* பெ. (n.) புத்தன்; Buddhaṉ.

*[தயா + கூர்ச்சன். அன்பையும், அருளையும் மிக்குடையன்.]*

**தயாசமுத்திரம்** *tayā-šamuttiram,* பெ. (n.) அருட்கடல்; ocean of mercy.

மறுவ. அருளாழி

*[தயா + சமுத்திரம்]*

**தயாசீலன்** *tayā-šīlaṉ*, பெ.(n.) *அருளாளன்;* benevolent, merciful person (செ.அக.).

மறுவ. அருட்பண்பன்

*[தயை → தயா + சீலன் = பேரருளாளன். அருளொழுக்கம் பூண்டு அன்பின் பிறப்பிடமிகத் திகழ்பவனே, தயாசீலன்]*

**தயாதருமம்** *tayā-tarumam*, பெ.(n.) *அருளாகிய அறம்:* duty of love and mercy towards others. "அவனுக்குத் தயாதருமத்தை உபதேசஞ் செய்து" (மணிமே. 11: 10 உரை).

*[தயா + தருமம்]*

**தயாநிதி**[1] *tayā-nidi*, பெ. (n.) *அருட்செல்வர்;* benevolent, merciful. "இன்னருள் சேர் தயாநிதியே" (திருவாலவா. 24: 3).

மறுவ. அருணிதியான்

*[தயா + நிதி]*

**தயாநிதி**[2] *tayā-nidi*, பெ. (n.) *மூச்சகப்பயிற்சி;* regulation of respiration.

*[தயா + நிதி → தயாநிதி]*

**தயாபம்** *tayābam*, பெ. (n.) *அருள்* (புதுவை); grace, mercy.

*[தயா → தயாபம்]*

**தயாபரன்** *tayā-paraṉ*, பெ. (n.) *1. கடவுள் (தயை மிக்கவன்);* God, as All-merciful. "தானேயாகிய தயாபர னெம்மிறை" (திருவாச. 2:96). 2. தயாசீலன் பார்க்க; see *tayā-šīlaṉ*

மறுவ. அருட்பரமன், அருட்பரன்

*[தயா+பரம் → பரன் = தயாபரன், உயர்ந்தவன்; மேலான பரம்பொருள்: அருள்வடிவங் கொண்ட பேராளன்]*

**தயாவம்** *tayāvam*, பெ. (n.) *இரக்கம், அருள்* (யாழ். அக.); mercy.

*[தயா → தயவு → தயவம் → தயாவம். "அம்" பெருமைப் பெயரொட்டு]*

**தயாவீரன்** *tayā-vīraṉ*, பெ. (n.) *புத்தன்* (மணிமே. 30,11,உரை) *(தயையில் (அருளில்) மேம் பட்டவன்);* Buddhaṉ, as heroic in acts of grace.

மறுவ. அறிவன். தனித்தந்தை

*[தயை → தயா + வீரன் = அருட்பண்பில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாப் பேரருளான். அருட்பண்பில் உயர்ந்து நிற்கையும், வீரமென்றறிக.]*

**தயாவு** *tayāvu*, பெ. (n.) *அருள்;* mercy. "தயாவு தாங்கலால்" (கம்பரா. மாரீச. 126).

*[தயவு → தயாவு]*

**தயாளசிந்தை** *tayāḷa-šindai*, பெ. (n.) *பரந்த மனப்பான்மை;* large heartedness. கலைவாணர் மிகுந்த தயாளச்சிந்தை படைத்தவர் (உ.வ.).

*[தயை → தயா → தயாள் + அம் + சிந்தை தயாளசிந்தை. தயாளம் = ஈகம். 'அம்' பெருமைப்பொருள் பின்னொட்டு]*

**தயாளம்** *tayāḷam*, பெ. (n.) *1. ஈகம்; தாராளம்;* liberal. அவர் மிகுந்த தயாளகுணம் உடையவர் (உ.வ.). 2. பெருந்தன்மை; generosity. அவருடைய தயாளத்தைப் பாராட்டாதவர்களே இல்லை (உ.வ.).

மறுவ. அருண்மை, அருளாண்மை

*[தயை → தயா → தயாளம். ஒருகா. தயாள் + அம் → தயாளம் = அருண்மை. "அம்" பெருமைப் பொருள் பின்னொட்டு]*

**தயாளன்** *tayāḷaṉ*, பெ. (n.) *தாராளகுணம் கொண்டவன்;* one who has liberal mind.

மறுவ. போருளாளன், அருள்நெஞ்சன்

*[தயாளம் → தயாளன். தயாளன் = ஈகையாளன்]*

**தயாளு** *tayāḷu*, பெ. (n.) *தயாளன்;* one who is very liberal. "குற்றங் குணமாகக் கொள்ளுந் தயாளு" (அருட்பா, i திருவருள். 11).

மறுவ. அருளம்மை

*[தயாள் → தயாளு]*

**தயித்தமணி** *tayitta-maṇi*, பெ. (n.) *மரமஞ்சள்;* tree turmeric.

*[தயித்தம் + மணி]*

**தயித்தியர்** *tayittiyar*, பெ. (n.) *அரக்கர், அசுரர்;* ašurar. "தயித்தியர்க் கிறைபால்" (கந்தபு. கயமுகனுற். 43).

*[தயை → தயய் + த் + இயர். மிகுந்த இரக்கம் கொண்டஅரக்கர்]*

**தயித்தியன்** *tayittiyaṉ*, பெ. (n.) அன்பன்; kind, loving person. "தயித்தியனாத தமிழ்முள்ளி நாடன்" (நெல்விடு. 413).

*[தயை → தயம் + த் + இயன். அருளையும், அன்பையும் அனைவரிடத்தும் பூண்டொழுகுபவன்]*

**தயித்திரியம்** *tayi-t-tiriyam*, பெ. (n.) தைத்திரியரால் செய்யப்பட்ட நூல்; a poetic verse wrtten by Tayittiriyar.

**தயிதன்** *tayidaṉ*, பெ. (n.) கணவன்; husband.

**தயிதை** *tayidai*, பெ. (n.) பெண்; woman.

**தயிர்** tayir, பெ. (n.) 1. பால் பிரைவிட்ட பின்னர் உறைந்த பண்டம்; curds, tyre. "தயிர்காயம் பெய்தடினும்" (நாலடி. 116). 2. மூளைக்கொழுப்பு; brain matter. "வீரர்மூளைத் தண்ட யிரினுடன்" (கலிங். 506).

தெ., ம. தயிர்

த. தயிர் Skt. தகி. ய → க: போலி

ஒ.நோ. எயிர் → எகிர், வயிர் → வகிர்

*[தயிர் = பாலில் பிரைகுத்தியவுடன், தோயுந்தன்மை மிக்கதும் உடலுக்கு தண்மையூட்டுவதுந் தயிரேயாகும். தை → தய் → தயிர். தை → தயிர். ஒ.நோ. ஐ → அயிர் (நுண்மை); மை → மயிர் (கரியது). வை → வயிர் (கூர்மை); பை → பயிர் (பசியது). தைத்தல் = குத்துதல், முட்குத்துதல். "கானவேல்முட் டைக்குங் காடு" (பொய்யமொழிப் புலவர்). பாலிற்கு உறைமோரிடுதலை உறைகுத்துதல், பிரைகுத்துதல் என்பது வழக்கு (உ.வ.)]*

தயிர் வகைகள்

I. ஆடையெடுத்த தயிர்: வெண்ணெய் அகற்றிய தயிர், பாலேடு நீக்கிய தயிர். அதிகச் சூட்டைத் தணிக்கும். வேனிற்காலத்தில் உட்கொண்டால், உடலுக்கு குளுமையேற் படும்.

1. சிறுநீர் எரிச்சலைப் போக்கும்
2. இணைவிழைச்சு(மேகம்) நோயினைத் தணிக்கும்.
3. தொழுநோயினுக்கு கைகண்ட மருந்து.
4. தோலினுக்கு மினுமினுப்பை உண்டாக்கும்.
5. ஆவின்தயிர் கோழையினை அகற்றும்.

II. ஆடையெடுக்காத (பாலேடு அகற்றாத) எருமைத் தயிரின் தன்மை வருமாறு

1. உடம்பினுக்கு கொழுப்பைக் கொடுக்கும்
2. மந்தநிலையை யுருவாக்கும்
3. மிகுசோம்பலையும், அளவிற்கு அதிகமான தூக்கத்தையும், கொடுக்கும்.
4. கரப்பான் நோயினைத் தரும்.
5. சளியை உருவாக்கும்.

III. வெள்ளாட்டுத் தயிர் உடம்பிற்குச் சூட்டினைத் தரும்.

**தயிர்க்கடல்** *tayir-k-kaḍal*, பெ. (n.) எழு கடல்களுள் ஒன்றாய்த் தயிர்வடிவான கடல் (பிங்.); ocean of curds, one of eḻu-kaḍal.

*[தயிர் + கடல்]*

**தயிர்க்காய்ச்சி** *tayir-k-kāycci*, பெ. (n.) ஒரு வகைத் தென்னை; a species of coconut tree.

*[தயிர் + காய்ச்சி]*

**தயிர்க்கிச்சடி** *tayir-k-kiccaḍi*, பெ. (n.) தயிரிற் செய்த கிச்சடிவகை; a kind of fluid relish made of curd and other ingredients.

*[தயிர் + கிச்சடி]*

**தயிர்க்குழம்பு** *tayir-k-kuḻambu*, பெ. (n.) காமாலை நோய்க்குப் பயன்படும் தயிர் கலந்த, மருந்துவகை (வின்.); a thick medicine, made chiefly of curds, used for jaundice.

*[தயிர் + குழம்பு]*

**தயிர்க்கோல்** *tayir-k-kōl*, பெ. (n.) மத்து (பிங்); churning rod.

மறுவ. தயிர்க்கம்பு, தயிர்த்தறி

*[தயிர் + கோல்]*



**தயிர்கடைதறி** *tayir-kaḍai-taṟi,* பெ. (n.) தயிர் கடைதற்குப் பயன்படுத்துந் தம்பம் (திவா.); fixed post used in churning curds.

மறுவ. தயிர்மத்து

*[தயிர் + கடைதறி]*

**தயிர்கடைதாழி** *tayir-kaḍai-tāḻi,* பெ. (n.) மத்திட்டுக்கடையும் தயிர்ப்பானை (திவா.); pot used in churning.

மறுவ. குடாகு

*[தயிர் + கடை + தாழி]*

**தயிர்ச்சாதம்** *tayir-c-cādam,* பெ. (n.) தயிர் கலந்த சோறு; rice mixed with curds.

மறுவ. தயிர்ச்சோறு

*[தயிர் + சாதம்]*

**தயிர்ச்சுண்டி** *tayir-c-cuṇḍi,* பெ. (n.) 1. நீரை வடித்த தயிர்; dehydrated solid-curd. 2. இறுகிய தயிர்; solid-curd. 3. புளித்தயிர்; sour-curd.

மறுவ. கட்டித்தயிர்

*[தயிர் + சுண்டி → தயிர்ச் சுண்டி. சுண்டு → சுண்டி = நீர் வற்றுகை]*

**தயிர்ச்சுண்டிச்சூரணம்** *tayir-c-cuṇḍi-c-cūraṇam,* பெ.(n.) மந்தம், வயிற்றுப்பொருமல், பசியின்மை, கழிச்சல் போன்ற நோய்களுக்குக் கொடுக்கும் ஐவகை உப்பும், சுக்கும் கலந்த மருந்து; a medicinal powder prepared with solid curd, five salts and dried ginger and given for dullness of appetite diarrhoea.

*[தயிர்ச்சுண்டி + சூரணம்]*

**தயிர்த்தண்ணீர்** *tayir-t-taṇṇīr,* பெ. (n.) தயிர்த்தேட்டை பார்க்க; see *tayir-t-teṭṭai.*

*[தயிர் + தண்ணீர்]*

**தயிர்த்தேட்டை** *tayir-t-tēṭṭai,* பெ. (n.) தயிரிலிறுத்த நீர்; the watery portion of the curd.

*[தயிர் + தேட்டை]*

**தயிர்வடை** *tayir-vaḍai,* பெ. (n.) தாளித்த தயிர் ஊறிய வடை; cake of black-gram pulse soaked in curds.

*[தயிர் + வடை]*

**தயிர்வளை** *tayir-vaḷai,* பெ. (n.) தயிர்வேளை பார்க்க; see *tayir-vēḷai.*

மறுவ. நல்லவேளை

*[தைவேளை → தையில்வேளை → தயிர் வேளை → தயிர்வளை]*

**தயிர்வேளை** *tayir-vēḷai,* பெ. (n.) தைவேளை (யாழ்ப்.); a sticky plant, balck vailay.

*[தையிர்வேளை → தயிர்வேளை]*

**தயிரமுது** *tayir-amudu,* பெ. (n.) கடவுட்கு அல்லது அடியார்க்குப் படைக்குந் தயிர்ச் சோறு (S.I.I. iii, 116); offering of curds as given to idols, devotees, etc.

*[தை → தயிர் + 'முது = தயிரமுது]*

**தயிரமுர்து** *tayir-amurdu,* பெ. (n.) தயிரமுது (S.I.I. iii, 102) பார்க்க; see *tayir-amudu.*

*[தயிர் + அமுர்து = 'அமுர்து', கல்வெட்டு வழக்கு]*

**தயிரியம்** *tayiriyam,* பெ. (n.) உள்ளத்திட்பம்; courage, "தயிரியமாஞ் சிவபத்தி பூண்டே" (சிவா.க. ஞானவாலன்கலியாணநி. 20).

*[தகு → தகிர் → தயிர் + இயம் - தயிரியம், சமநிலையுடன் கூடிய மனத்திட்பம்]*

**தயிரிற்றிமிரல்** *tayiṟ-ṟimiral,* பெ. (n.) தயிர்ச் சோறு (பிங்.); curd-rice.

*[தயிர் + இல் + திமிரல்]*

**தயிரேடு** *tayirēḍu,* பெ. (n.) தயிரின் மேற்படர்ந்த பாலாடை; cream over the curdled milk.

*[தயிர் + ஏடு]*

**தயிலக்காப்பு** *tayila-k-kāppu,* பெ. (n.) கடவுள் திருமேனிக்கு எண்ணெய் சாத்துகை (கோயிலொ. 8); smearing an idol with oil.

*[தையிலம் → தயிலம் + காப்பு]*

**தயிலகித்தம்** *tayilagittam,* பெ. (n.) பிண்ணாக்கு; oil-cake.

*[தயிலம் + கிட்டித்தம் → இத்தம்]*

**தயிலகாதனம்** *tayila-gādanam,* பெ. (n.) நஞ்சு நெய்; ghee prepared with aconite.

*[தயிலம் + ஆகாதனம். உணவுக்கு ஆகாதது.]*

**தயிலத்தளுக்கு** *tayila-t-taḷukku,* பெ. (n.) வயிரம்; diamond.

*[தயிலம் + தளுக்கு.]*

**தயிலபாணிகம்** *tayila-pāṇigam,* பெ.(n.) வெண்சந்தனம் (மலை.); white sandal-wood.

மறுவ. சந்தனக்கட்டை

*[தயிலம் + பாணிகம்]*

**தயிலபீதம்** *tayila-pīdam,* பெ. (n.) அத்திப்பிசின் (மலை.); milk of the fig-tree.

*[தயிலம் + பீதம்]*

**தயிலம்** *tayilam,* பெ. (n.) 1. வடித்த மருந்தெண்ணெய் (சூடா.); ointment, medicated oil, balm. 2. எண்ணெய்; oil. "தயிலக்கடலின்றலை யுய்த்தார்" (கம்பரா. தைலமாட்டு: 75).

மறுவ. நெய்ம்மருந்து, வடிப்புநெய்மம்

*[தயிர் → தயில் + அம் → தயிலம்]*

*தயில் = அடர்த்தி மிக்கது. 'அம்' சாரியை. ஒ.நோ. தயில் → தயிர். பந்தல் → பந்தர் (கடைப்போலி)*

**தயிலம்வடி-த்தல்** *tayilam̄-vaḍi-,* 4 செ.குவி. (v.i.) தயிலமிறக்கு-தல் பார்க்க; see *tayilam-iṟakku-.*

*[தைலம் → தயிலம் + வடி-.]*

**தயிலம்வை-த்தல்** *tayilam-vai-,* 18 செ.குன்றாவி. (v.t.) தயிலமாட்டு (யாழ்.அக.) பார்க்க; see *tayilam-āṭṭu-.*

*[தயிலம் + வை-.]*

**தயிலமாட்டு-தல்** *tayilam-āṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பிணத்தை எண்ணெயிலிட்டுக் கெடாமற் காத்தல்; to embalm, preserve in medicated oil, as a corpse. "தயிலமாட்டு புடலம்" (கம்பரா.).

*[தையிலம் → தயிலம் + ஆட்டு-.]*

**தயிலமாடு-தல்** *tayilam-āḍu-,* 5 செ.குவி. (v.i.) 1. செக்காட்டி எண்ணெயெடுத்தல் (யாழ். அக.); to extract oil from oil-seeds, in an oil-press. 2. எண்ணெய் தேய்த்துக்கொள்ளுதல்; to besmear one's body with oil.

*[தையிலம் → தயிலம் + ஆடு-.]*

**தயிலமிறக்கு-தல்** *tayilam-iṟakku-,* 5 செ.குவி. (v.i.) பொருள்களினின்று நெய்மம் எடுத்தல்; to extract essence.

மறுவ. தயிலம் வடித்தல்

*[தையிலம் → தயிலம் + இறக்கு-.]*

**தயிலமெரி-த்தல்** *tayilam-eri-,* 4 செ.குவி. (v.i.) 1. சுடரெண்ணெய் இறக்குதல்; to prepare šuḍareṇṇey. 2. மருந்தெண்ணெய் காய்ச்சுதல்; to heat and prepare medicated oil.

*[தையிலம் → தயிலம் + எரி-.]*

**தயிலவருணம்** *tayila-varuṇam,* பெ. (n.) தேன்; honey.

*[தயிலம் + வருணம்]*

**தயிலவாரிப்பிரசாதனம்** *tayilavāri-p-prašādaṉam,* பெ. (n.) தேற்றான்கொட்டை; water clearing nut.

*[தயிலவாரி + பிரசாதனம்]*

**தயிலவினையாளன்** *tayila-viṉai-y-āḷaṉ,* பெ. (n.) செக்கான் (சேக்கிழார் 4: 36); oil-monger.

மறுவ. எண்ணை வாணிபன்

*[தயிலம் + வினை +ஆளன். செக்காட்டி எண்ணெய் எடுப்பவன்; "ஆளன்" உடைமைப் பெயரீறு (ஒ.நோ.) பொறியாளன், பேராளன்]*

**தயிலி** tayili, பெ.(n.) பணப்பை; purse, pouch "ரூபாயை ... தயிலியில் போட்டுக் கட்டி" (P.T.L. 176).

U. thaili.

*[தையிலி→ தயிலி. தைக்கப்பட்ட பணப்பை]*

**தயினியம்** *tayiṉiyam,* பெ. (n.) எளிமை வறுமை (சங்.அக.); poverty.

**தயை** *tayai,* பெ. (n.) தயவு (சூடா.) பார்க்க; see *tayavu* (செ.அக.).

*[தய - தயா → தயை]*

**தரக்கு** *tarakku,* பெ. (n.) 1. புலி; tiger. "தழற்கட் டரக்கின்" (கல்லா. 3:17). 2. கழுதைப் புலி (வின்.); hyena.

*[தள் → தர → தரக்கு]*

**தரக்கேடு** *tara-k-kēḍu,* பெ. (n.) இழிவு (இ.வ.); degradation (செ.அக.).

ம. தரக்கேடு

*[தரம் + கேடு]*

**தரகண்டிகை** *tarakaṇḍigai,* பெ. (n.) ஆனை நெருஞ்சி (மூ. அ.) பார்க்க; see *āṉai-neruñji.*

*[தரகண்டி → தரகண்டிகை]*



**தரகண்டிதம்** *taragaṇḍidam,* பெ. (n.) தண்ணீர் விட்டான்; water root.

*[தரகண்டி → தரகண்டிதம்]*

**தரகத்தி** *taragatti,* பெ. (n.) தேரகத்தி; a kind of figtree (சா.அக.).

*[தன் → தர → தரகத்தி]*

**தரகதி** *tara-gadi,* பெ.(n.) தரம் (இ.வ.); class,rank.

தெ., க., ம. தரகதி.

*[தரம் + கதி → தரகதி]*

**தரகம்புல்** *taragam-pul,* பெ. (n.) மணப்புல்; fragrant grass.

*[தரகம் + புல்]*

**தரகரி**[1] *taragari,* பெ. (n.) அழகு (இ.வ.); beauty.

*[தன் → தர → தரம் + கரி]*

**தரகரி**[2] *tarakari,* பெ. (n.) தரகன் பார்க்க; see *taragan̲.* "சரக்குகள் வாங்கித் தரகரியாயமைந்து" (ஆதியூரவதானி. 13).

தெ. தரகரி

*[தரகு + அர் → தரகர் + இ → தரகரி. 'இ' சொல்லாக்க ஈறு]*

**தரகன்** *taragan̲,* பெ. (n.) பண்டமாற்றில் இடை நின்று தீர்த்துக் கொடுப்போன்; broker. "தரகர் அளக்கும் மரக்கால்" (சிலப். 14:209:உரை).

ம. தரகன்

*[தரகு + அன் → தரகன். 'அன்' ஆண்பாலீறு]*

**தரகு**[1] *taragu,* பெ. (n.) மணப்புல்வகை (இ.வ.); a kind of coarse fragrant grass.

*[தன் → தரு → தர → தரகு. மணத்தைத் தரும் புல்]*

**தரகு**[2] *taragu,* பெ. (n.) 1. தரகர் பெறுங் கூலி; brokerage, fee, commission to a middleman. "தரகு செய்வார் . . . திரிதர" (சிலப். 14: 209). 2. பணமாக வழங்கும்போது குறைத்துக் கொடுக்க அனுமதிக்கப்படும் தொகை; discount allowed in cash payment. 3. தரகன் பார்க்க; see *taragan̲.* 4. தரகுபாட்டம் பார்க்க; see *taragu-pāṭṭam.* "மன்று பாடுந் தரகுந் தறிக்கூறையும்" (S.I.I.ii,509). 5. 2 படி கொண்ட முகத்தலளவுக் கருவி; a measure = nearly 2 paḍi.

ம., க., தரகு

*[ஒருபடி = ஏறத்தாழ 2 லிட்டர். தா → தரு → தரகு.]*

**தரகுக்காசு** *taragu-k-kāšu,* பெ. (n.) தரகுக்கூலி பார்க்க; see *taragu-k-kūli.*

மறுவ. தரகுப்பணம்

*[தரகு + காசு.]*

**தரகுக்காரன்** *taragu-k-kāran̲,* பெ. (n.) தரகன் (உ. வ.) பார்க்க; see *taragan̲.*

*[தரகு + காரன். காரன் = உடைமைப் பெயரீறு]*

**தரகுக்கூலி** *taragu-k-kūli,* பெ. (n.) தவசம் வாங்குவோன், அளப்பவனுக்கு வழங்கும் கூலி (இ.வ.); wages for a person who measures the grain in a sale.

மறுவ. தரகுக்காசு

*[தரகு + கூலி]*

**தரகுபாட்டம்** *taragu-pāṭṭam,* பெ. (n.) தரகரிடமிருந்து கொள்ளும் வரி (S.I.I. ii, 521); an ancient tax levied from brokers.

மறுவ. தரகுக்காரன்; தரகுக்கூலி; தரகுப்பணம்

*[தரகு + பாட்டம். பாட்டம் = பகுதி பெறும் இறை.]*

**தரங்கம்**[1] *tarangam,* பெ. (n.) *1.* அலை; wave, billow. "நீர்த்தரங்க நெடுங்கங்கை" *(பெரியபு. தடுத்தாட். 165). 2.* கடல்; ocean. 'தரங்கம் பரம பதம்'' *(அஷ்டப். திருவேங்கடத்தந். 56). 3.* மனக்கலக்கம்; distress, sorrow. 'தரங்கமெய்திச் சனங்களெல்லா மிரீஇ" *(கந்தபு. நகரழி. 78). 4.* இசையலைவு; modulation in music. "ஒண்டரங்க விசைபாடு மளியரசே" *(தேவா. 87:1).*

*[த. தரங்கம் → வ. தரங்க = அலை. "அம்" பெருமைப்பொருள் பின்னொட்டு துளங்குதல் = அசைதல், நிலைகலங்குதல். துளங்கு → தளங்கு → தயங்கு, தயங்குதல் = அசைதல். தளங்கு → தரங்கு = அசைந்தியங்கும் அலை. தரங்கு → தரங்கம் = அலை, இசையலை. ஒ.நோ. அரங்கு → அரங்கம். அலைதல் = அசைதல். அலை = அலையும் நீர்த்திரை. அம்போதரங்கம் = கரைநோக்கி வரும் நீரலைபோல், வரவரச் சிறுத்து வரும், கலிப்பாவுறுப்பு. வடவர். தரம் + க (ga) என்று பகுத்து, குறுக்கே செல்வது என்று மூலப்பொருளுரைப்பர். தரம் என்பதன் மூலம் த்ரூ. இது துருவு என்னும் தென் சொற்றிரிபு. 'க' என்பது 'ஏ' என்பதன் கான்முளை. ஏ-யா-ஜா-கா → க. (வ.மொ.வ. 172)]*

**தரங்கம்**[2] *tarangam,* பெ. (n.) ஈட்டி; spear. தரங்கத்தாற் பாம்பைக் குத்தினான்.

*[தரங்கு → தரங்கம்]*



**தரங்கம்பாடி** *tarangam-pāḍi,* பெ. (n.) நாகை மாவட்டத்திலுள்ள கடற்கரைப் பட்டணம் *(வின்.);* the sea-shore town of Tranquobar, it is in Nāgai district.

*[தரங்கம் + பாடி - தரங்கம்பாடி. அலைவாய்க் கரையில் அமைந்துள்ள இப் பட்டணத்தில், வரலாற்றுச் சிறப்பு மிக்க தேனீசுக்கோட்டை உள்ளது.]*

**தரங்கம்மி** *taran-gammi,* பெ. (n.) *1.* நிலத்தின் தாழ்ந்த தரம்; inferior quality or class of land. *2.* நிலவரிக் குறைவு; reduction from taram assessment or genereal percentage; reduction in old survey rates.

*[தரம் + கம்மி. தரம் = மதிப்பு. கம்மி = குறைவு]*

**தரங்கர்** *tarangar,* பெ. (n.) *1.* அலை; wave, billow. *2.* கடல்; ocean. *3.* மனக்கலக்கம்; distress sorrow *(யாழ். அக.).*

*[தரங்கம் → தரங்கர்]*

**தரங்கி-த்தல்** *tarangi-,* 4 செ.குன்றாவி. (v.i.) *1.* அலை யுண்டாதல்; to break into waves. *2.* மன மலைதல்; to be troubled, distressed. 'நின்று தரங்கிக்கின் றேற்கருள்வாய்" *(அஷ்டப் அழகர். 24).*

*[தரங்கம் → தரங்கி]*

**தரங்கிணி** *taranginị,* பெ. (n.) ஆறு *(யாழ்.அக.);* river.

*[தளங்கு → தரங்கு = அசைந்து செல்லும் அலை. தரங்கு → தரங்கிணி = தண்ணீர் செல்லும், ஆறு]*

**தரங்கு**[1] *tarangu,* பெ. (n.) *1.* வழி *(பிங்.);* way, path, road. *2.* இருபலகைகள் இணைவதற்குச் செதுக்கும் வெட்டு *(தஞ்.);* lap-joint.

**தரங்கு**[2] *tarangu,* பெ. (n.) *1.* ஈட்டிமுனை *(வின்.);* point of in lance. *2.* மண்வெட்டியிலை யினின்றும் நீண்டு, அதன் கையின் அடிப் புறத்தைச் சுற்றியிருக்கும், இரும்புக்கம்பி *(நாஞ்.);* the iron piece at the root of a mattock, wound round the handle.

*[துளங்கு → தளங்கு → தரங்கு]*

**தரங்கு**[3] *tarangu,* பெ. (n.) அலை; wave, billow. "தரங்காடுந் தடநீர்" *(தேவா. 463:1).*

*[துளங்கு → தளங்கு → தரங்கு = அசைந்தியங்கும் அலை. (வ.மொ.வ. 172)]*

**தரசம்** *tarašam,* பெ. (n.) ஊன்; flesh *(சா.அக.).*

*[தரசு + அம்]*

**தரசி** *taraši,* பெ. (n.) ஒட்டுப்புல்; a kind of grass with little colts.

*[துரசம் → தரசி]*

**தரட்டை** *tarattai,* பெ. (n.) சாம்பல் நிறத்துடன் பசுமைநிறங் கலந்தததும், 4 விரல நீளம் வளர்வதுமான கடல்மீன்; sea-fish, greyish green, attaining 4 in. in length, Ephippus orbis.

**தரண்** *taraṇ,* பெ. (n.) தூய்மையான பொன்; pure gold. "தரணென்று நன்றென்றாள்" *(நீலகேசி, 284).*

*[தள் → தரு → தர → தரன்]*

**தரணம்**[1] *taraṇam,* பெ. (n.) 1. தாண்டுகை; crossing over, passing, going across. "தரணம் என்னும் வடமொழி கடத்தலென்னும் பொருட்டாகலான்" *(சி.சி. 2:4, சிவஞா.).* 2. பாலம் *(யாழ்.அக.);* bridge.

*[தா → தர → தரண் + அம் → தரணம்.]*

**தரணம்**[2] *taraṇam,* பெ. (n.) 1. பற்றுகை, தரிக்கை; holding, bearing, possessing. 2. அரிசி *(யாழ்.அக.);* rice.

*[தள் → தரு → தரண் + அம் → தரணம்.]*

**தரணி**[1] *taraṇi,* பெ. (n.) 1. ஞாயிறு *(பிங்.);* the sun. "தரணியென விருளகல" *(திருப்போ.சந். பெரியகட். 2: 2).* 2. படகு; boat. 3. மருத்துவன்; physician. "மருத்துவனுக்குத் தரணி எனக் காரணக் குறியாயிற்று" *(சி.சி. 2:4: சிவஞா.).*

*[தள் → தரு → தரண் → தரணி.]*

**தரணி**[2] *taraṇi,* பெ. (n.) நிலம்; earth. 'தரணிமேற் றிலகமன்னாய்" *(சீவக. 1178).*

*[தரை → தர → தரணி.]*

**தரணி**[3] *taraṇi,* பெ. (n.) மலை *(பிங்.);* hill, mountain.

*[தரை → தர → தரணி. தரையிலிருக்கும் மலை.]*

**தரணி**[4] *taraṇi,* பெ. (n.) முட்பன்றிக் கொம்பு; quill or porcupine *(சா.அக.).*

*[தரு → தரண் → தரணி]*

**தரணிகந்தம்** *taraṇi-gandam,* பெ. (n.) கிழங்குச் செடி; esculent root of a bulbous plant *(சா.அக.).*

*[தரணி + கந்தம் → தரணிகந்தம்.]*

**தரணிகளைக்கொம்பு** *taraṇi-kaḷai-k-kombu,* பெ. (n.) பன்றிக்கொம்பு; hog's horn *(சா.அக.).*

*[தரணி + களைக்கொம்பு.]*

**தரணிசம்** *taraṇišam,* பெ. (n.) நுண்குழலிலான கண்விழி இடைத்தோல்; the vascular coat or layer of the eye *(சா.அக.).*

*[தரணி → தரணிசம்]*

**தரணிநாதம்** *taraṇi-nādam,* பெ. (n.) காந்தம்; magnet *(சா.அக.).*

*[தரணி + நாதம்.]*

**தரணிநாதன்** *taraṇi-nādan,* பெ. (n.) உவர்மண்; fullers earth *(சா.அக.).*

*[தரணி + நாதன்]*

**தரணிபன்**[1] *taraṇiban,* பெ. (n.) ஞாயிறு *(சாதக சிந். 27);* sun *(செ.அக.).*

*[தள் → தரு → தரண் → தரணி → தரணிபன்]*

**தரணிபன்**[2] *taraṇiban,* பெ. (n.) அரசன்; king. "தரணிபன் சமைத்த பாவறை" *(ஞானவா. தாசு. 84)*

*[தரை → தர → தரண் → தரணிபன். இந் நிலவுலகை ஆள்பவன்]*

**தரணிரத்தினம்** *taraṇi-rattinam,* பெ.(n.) 1. மாணிக்கம்; a kind of ruby. 2. நாகமணி; that variety which is supposed to be on the head of certain cobras *(சா.அக.).*

*[தரணி + இரத்தினம்]*

**தரணிவாரிக்கல்** *taraṇi-vāri-k-kal,* பெ. (n.) மாழைக்கல் *(யாழ்.அக.);* a kind of metallic ore.

*[தரணிவாரி + கல்]*

**தரணீதரம்** *taraṇī-daram,* பெ. (n.) ஆமை; tortoise.

*[தரணி → தரம் → தரணிதரம் → தரணீதரம்]*

**தரத்தீர்வை** *tara-t-tīrvai,* பெ. (n.) தரம்திர்வை பார்க்க; see *taram-tīrvai.*

*[தரம் + தீர்வை]*

**தரதம்** *taradam,* பெ. (n.) சாதிலிங்கம்; vermilion (சா.அக.).

*[தரு → தர → தரதம்]*

**தரந்தம்** *tarandam,* பெ. (n.) தவளை (மூ.அ.); frog.

*[தரை + அந்தம் → தரந்தம் = தரையை யொட்டித் தவழும் தவளை]*

**தரப்படி** *tara-p-paḍi,* பெ. (n.) 1. சிற்றூர் நிலங்களின் தரப்பாகுபாட்டு முறை; classification, statement of village - lands as arranged in classess. 2. நடுத்தரம் (யாழ். அக.); middling sort.

ம. தரப்படி

*[தரம் + படி]*

**தரப்படிக்கணக்கு** *tarappaḍi-k-kaṇakku,* பெ. (n.) சிற்றூர் நிலங்களின் தரம், விளைச்சல் இறையிலி, வரி முதலியவற்றைக் குறிக்கும் கணக்கு; account of the village-lands distinguishing the varieties of soil, produce and tenure, and the ancient dues and perquisities of the village office and servants.

*[தரப்படி + கணக்கு]*

**தரப்படுத்து-தல்** *tara-p-paḍuttu-,* 5 செ.கு.வி. (v.t.) ஒரே சீராக்குதல்; standardize.

*[தரம் → படுத்து-.]*

**தரப்புரட்டு** *tara-p-puraṭṭu,* பெ. (n.) ஊரிலுள்ள நிலங்களைத் தரம் பிரிப்பதிற் செய்யும் ஏமாற்று; fraud in classifying the lands of a village (செ.அக.).

*[தரம் + புரட்டு. புரட்டு = உண்மைக்குப் புறம்பானவை]*

**தரபடி**[1] *tara-paḍi,* பெ. (n.) தரப்படி பார்க்க; see *tara-p-paḍi.*

*[தன் → தரு → தரம் + படி]*

**தரபடி**[2] *tara-paḍi,* பெ. (n.) உட்சட்டை (வின்.); an under-garment.

மறுவ. உள்ளாடை

*[தரம் + படி]*

**தரம்**[1] *taram,* பெ. (n.) 1. தகுதி; fitness, match. 'தந்தரத்திற்கு ஏற்ப" (சீவக. 11: 2, உரை). 2. தக்க சமயம்; opportune, moment. தரம்பார்த்து அடித்துக் கொண்டு போனான் (உ.வ.). 3. மேன்மை; superiority, excellence. "நீதரமா வருளுடையை" (கோயிற்பு. பாயி. 23). 4. தலை (யாழ்.அக.); head. 5. வலிமை (யாழ்.அக.); strength. 6. தெப்பம் (யாழ்.அக.); float. 7. விழுக்காடு (வீதம்) (வின்.); rate, proportion. 8. வகுப்பு; sort, kind, class. முதல் தரம் (உ.வ.). 9. நிலப்பண்புக்கேற்றபடி வரி விதிக்கப் பெற்ற ஊர் நிலப்பிரிவு; diffierent classes of village lands separately assessed according to the quality of the soil. 10. தீர்வை; assessment. தரம் பெற்ற நிலம் (இவ.). 11. மட்டம்; level. "அடியார் படுதயராயின வெல்லாம் நிலந்தரஞ் செய்யும்" (திவ்.பெரியதி. 11:9).

க., தர., ம. தரம்

*[தடம் → தரம் = முறை: தகுதி. (மு.தா. 234).]*

**தரம்**[2] *taram,* பெ. (n.) 1. தடவை; time, turn. "நல்குவது முத்தரம்" (தைலவ. பாயி. 65). 2. வரிசை; row, series. "பரி. . . . தரந்தர நடந்தன" (கம்பரா. கடிமண. 42). 3. கூட்டம்; company, assembly, party, gang, herd, drove. "ஆதரக்கன்று" (மருதூ. 89).

ம. தரம்; க. தர; தெ. தரமு.

*[துடம் → தடம் = வளைவு, தடம் → தரம் = முறை ட → ர, போலி. ஒ.நோ. படவர் → பரவர். தடம் → தடவை = முறை (மு. தா.234)]*

**தரம்**[3] *taram,* பெ. (n.) 1. அச்சம் (சூடா.); fear. 2. சங்கு (யாழ்.அக.); conch.

*[தள் → தர் → தரு + அம் → தரம்]*

**தரம்**[4] *taram,* பெ. (n.) 1. மலை; hill, mountain. "கொன்று தரங்குவித்தாய்" (அஷ்டப். அழகர். 24). 2. பருத்திப்பொதி (யாழ்.அக.); flock of cotton.

*[தரை → தர் → தரு + அம் → தரம்]*

**தரம்**[5] *taram,* பெ. (n.) நிலவுலகம் (பிங்.); earth.

*[தரை → தரு + அம் → தரம்]*

**தரம்**[6] *taram,* பெ. (n.) அரக்கு (மூ. அ.); scaling wax, lac.

*[தரு + அம் → தரம்]*

**தரம்**[7] *taram,* பெ. (n.) பூண்டு; small plant.

*[தரை → தரு + அம் → தரம்]*

**தரம்**[8] *taram,* பெ. (n.) கருப்பை; uterus.

*[தரு + அம் → தரம் - குடிவியைத் தரும் கருப்பை]*

**தரம்**[9] *taram,* பெ. (n.) உடம்பின் நாளம் அல்லது குழாய்; tubulare vessel of the body or vain.

*[தள் → தர் → தரு + அம் → தரம் - அரத்தத்தைத் தரும் குழாய்]*

**தரம்சிட்டா** *taram-šiṭṭā,* பெ. (n.) நிலங்களின் விலை அல்லது தரத்தின் குத்துமதிப்பு; valuation or classification of lands (செ.அக.).

*[தரம் + சிட்டா. தரம் = நிலம், நில மதிப்பு. சிட்டா = நிலந்தொடர்பிலான குறிப்பேடு]*

**தரம்தரம்** *taram-taram,* பெ. (n.) கால்வழி; generation after generation. தரம் தரமாய் மொட்டை, அவள் பெயர் கூந்தலழகி.

*[தரம் + தரம். தரம் = வழி., வழிமுறை]*

**தரம்தார்** *taram-dār,* பெ.(n.) வரிக்காக நிலத்தரம் ஏற்படுத்துவோன்; one who superintends the classification of lands for purposes of revenue assessment, classifier (செ.அக.).

*[தரம் + தார். (தரம் = நிலம், நிலமதிப்பு தார் = சொல்லாக்க ஈறு]*

**தரம்தீர்வை** *taram-tīrvai,* பெ. (n.) நிலவகைக் கேற்றபடி விதிக்கப்பட்ட வரி; an assessment made according to the class of land (செ.அக.).

மறுவ. நிலவரி, நிலத்தீர்வை

*[தரம் + தீர்வை. தரம் = நிலம்; தீர்வை = வரி]*

**தரம்புகம்** *tarampugam,* பெ. (n.) ஒருவகைச் செடி; citrullus vulgairs (சா.அக.).

*[தள் → தரு + அம் + புகம்]*

**தரம்போடு-தல்** *taram-pōḍu-,* 19 செ.கு.வி .(v.t.) தரவாரியாக வரி ஏற்படுத்துதல்; to assess land according to its class (செ.அக.).

*[தரம் +போடு-.]*

**தரம்வாரி** *taram-vāri,* பெ. (n.) நிலத்தை வகைப் படுத்துகை; arrangement according to classes, as of land (செ.அக.).

*[தரம் + வாரி]*

**தரம்விட்டதாயாதி** *taram-viṭṭa-tāyādi,* பெ. (n.) பிறப்பு இறப்புக் காலங்களில் தீட்டுக் கொள்ளாதபடி, பதினான்கு தலைமுறைக்கு மேற்பட்ட தாயாதி; agnates beyond the fourteenth remove who do not observe pollution, on occasions of birth or death in the house of the propositus. (செ.அக.)

*[தரம் + விடு + தாயாதி. தாய் + ஆதி. தாயாதி. தாய் → தாயம் → தாயாதிகள்]*

**தரமிலிநிலம்** *taram-ili-nilam,* பெ. (n.) தரப் படுத்தப்படாத நிலம் (S.I.I.viii,30); unclassified land.

*[தரமிலி + நிலம். தரமற்ற = தாழ்ந்த நிலம், விலைமதிப்பற்ற நிலம்]*

**தரல்** *taral,* தொ.பெ. (vb.n.) தருதல்; giving.

*[தரு + அல் → தரல்]*

**தரவழி** *tara-vaḻi,* பெ. (n.) *1.* வகை; kind, sort, class, assortment. "அந்தந்தத் தரவழி" (வின்.). *2.* நடுத்தரம் (யாழ்.அக.); middling sort.

*[தரம் + வழி ]*

**தரவாரி** *tara-vāri,* பெ. (n.) ஆங்கிலேயர் காலத்தின் வரிவசூல் முறை; settlement with each individual cultivator without the intervention of a third party (செ.அக.).

தெ. தரவாரி

*[தரம் + வாரி. (வாரி = முறையில் என்னும் பொருளில் வரும்சொல்) ஒ.நோ. வகுப்புவாரி]*

**தரவிடுநெல்** *taraviḍu-nel,* பெ. (n.) கூலியாக அளக்கும் நெல்; paddy measured out in lieu of wages. "ஒருகூறு நெல்லு நிமந்தக் காரருக்குத் தரவிடு நெல்லாக இறுக்கவும்" *(S.I. I. vii, 487).*

*[தரகு → தரவு + இடு + நெல்]*

**தரவிணைக்கொச்சகம்** *taravinai-k-koccagam*, பெ. (n.) இரண்டு தரவு கொண்ட கொச்சகக் கலிப்பா வகை (கலித். 133, உரை); a species of koccaga-k-kali verse with two taravu.

*[தரவு + இணை + கொச்சகம். தரவு = கலிப்பாவின் முதலுறுப்பு. கொச்சகம் = அம்போதரங்க உறுப்புக்களுளொன்று)]*

"முன்னைப் பழம்பொருட்டு முன்னைப்
பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப்
பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றஉன் சீரடியோம்
உன்னடியார் தாள் பணிவோம் ஆங்கவர்க்கே
பாங்காவோம்
அன்னவரே எங்கணவர் ஆவார் அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப்
பணிசெய்வோம்
இன்னவகையே எமக்கெங்கோன் நல்குதியேல்
என்னகுறையும் இலோமேலோர் எம்பாவாய்"

(திருவாசகம் - திருவெம்பாவை)

**தரவு**[1] *taravu*, பெ. (n.) *1.* தருகை; giving, handing over. "புனிற்றான் றரவி னிளையர் பெருமகன்" (அகநா. 338). 2. கலிப்பாவின் முதலுறுப்பு (தொல்.பொருள். 444); first member of kali verse. 3. கட்டளை (கல்வெட்டு); order. 4. ஆய்விற்குத் தரப்படுபவை; data.

*[தா → தரு → தரவு.]*

**தரவு**[2] *taravu*, பெ. (n.) *1.* தரகர் பெறுங் கூலி; brokerage, fee, commission to a middleman. 2. முழுவிலையையும் பணமாக உடனடியாகத் தரும்போது, குறைத்துக்கொள்ள அனுமதிக்கப் பட்ட தொகை; discount allowed in cash payment. 3. பண்டமாற்றில் இடைநின்று தீர்த்துக் கொடுப்போன்; broker. 4. தரகரிடமிருந்து கொள்ளும் வரி; ancient tax levied from brokers. "தரவு தான்யம்" (குருபரம். 115). 5 வரிதண்டுகை (வின்.); collecting, tax-gathering.

*[தரகு → தரவு = புதுவரவு]*

**தரவு**[3] *taravu*, பெ. (n.) பிடரி (வின்.); nape of the neck.

**தரவுக்காரன்** *taravu-k-kāran*, பெ. (n.) தண்டக் கட்டளையை நிறைவேற்றுவோன்; one who executes the command of a chief. "கப்பம் வாங்கி வரும்படி தரவுக்காரரை அனுப்ப" (குருபரம். பக். 190).

*[தரவு + காரன். "காரன்" உடைமைப் பெயரீறு.]*

**தரவுகொச்சகம்** *taravu-koccagam*, பெ. (n.) கொச்சகக்கலிப்பாவகை (காரிகை, செய். 12, உரை); a species of koccaga-k-kali verse.

*[தரவு + கொச்சகம். தரவு = கலிப்பாவின் முதலுறுப்பு.]*

ஊனாய் உயிராய் உணர்வாய் என்னுட்கலந்து
தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின்
கட்டியுமாய்
வானோர் அறியா வழியெமக்குத் தந்தருளும்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார்
சீரொளிசேர்
ஆனாஅறிவாய் அளவிறந்த பல்லுயிர்க்கும்
கோனாகி நின்றவா கூறுதுங்காண்
அம்மானாய்

(திருவாசகம் - திருவம்மானை)

**தரவுகொள்(ளு)-தல்** *taravu-kol-*, 13 செ.கு.வி. (v.i.) பற்றுச்சீட்டு பெறுதல்; to take a receipt. "இவர் கையால் தரவுகொள்வோ மாகவும்" (S.I.I. V, 143).

*[தரவு + கொள்-.]*

**தரவுசாத்து** *taravu-šāttu*, பெ. (n.) சோழ அரசின் அதிகாரிகளுள் ஒருவர் (M.E.R. 119 of 1916); an officer in the Cola administration.

*[தரவு + சாத்து]*

**தரவூடான்** *taravūḍān*, பெ. (n.) வெண்ணிற முள்ள கடல்மீன்வகை; sea-fish, silvery.



**தரவை** *taravai*, பெ. (n.) *1. கரம்புநிலம்;* waste or uncultivated land. *2. களை மூடிய உவர் நிலம்;* saline soil overgrown with weeds.

*[தரை → தர → தரவை]*

**தரளதரம்** *tarala-daram*, பெ.(n.) அளறு *(சிவதரு. சுவர்க்கநரக. 107);* a kind of hell.

மறுவ. நிரையம்

*[தரளம் + தரை → தரம் → தரளதரம்]*

**தரளநீராஞ்சனம்** *tarala-nirāñjanam*, பெ. (n.) முத்தாரத்தி; waving a tray containing lighted lamps surrounded by pearls or beads as round an idol. "மரகதக்கலத் தரளநீராஞ்சனம் வளைப்ப" *(திருவிளை.திருநகரப்: 10).*

*[தரளம் + நீராஞ்சனம்.]*

**தரளம்**[1] *taralam*, பெ. (n.) *1.* நடுக்கம் *(உரி.நி.);* tremulousness. quaking. *2.* முத்து *(பிங்.);* pearl. "வாரித்தரள நகை செய்து" *(சிலப். 7: 38).* *3.* உருட்சி; திரட்சி *(சூடா.);* globularity.

*[திரள் → தரள் + அம் = தரளம் = உருண்டு திரண்டது]*

**தரளம்**[2] *taralam*, பெ. (n.) அரக்கு; lac *(சா.அக.).*

*[தரள் + அம் → தரளம்]*

**தரளை** *taralai*, பெ. (n.) *1.* கஞ்சி; boiled liquid rice. *2.* கள்; toddy. *3.* மது; any fermented liquor *(சா.அக.).*

*[தரள் → தரளை]*

**தரா**[1] *tarā*, பெ. (n.) எட்டுப்பங்கு செம்பும், ஐந்து பங்கு காரீயமுங் கலந்த ஒரு மாழை *(திவா.);* alloy of 8 parts of copper to 5 of tin, used for making metal vessels. "புகழ்தராப் போக்கில்லை" *(சினேந். : 169).*

*[தரை → தரா]*

**தரா**[2] *tarā*, பெ. (n.) திராய் *(தைலவ. தைல. 76)* பார்க்க; see *tirāy.*

*[தரு → தர → தரா]*

**தரா**[3] *tarā*, பெ. (n.) நிலவுலகம்; earth. தராபதி.

*[தரை → தரா.]*

**தரா**[4] *tarā*, பெ. (n.) சங்கு *(அக.நி.);* conch.

*[தன் → தரு → தரா]*

**தரா**[5] *tarā*, பெ. (n.) வகை; sort, kind, manner, mode.

*[தரம் → தரா.]*

**தரா**[6] *tarā*, பெ. (n.) ஒருவகைக் கசப்புக்கீரை; a kind of bitter green a low spreading bitter herb resembling chick weed *(சா.அக.).*

*[தன் → தரு → தரா]*

**தரா**[7] *tarā*, பெ.(n.) எங்கும் படரும் ஒரு வகைக் கொடி; common fumitory *(சா.அக.).*

மறுவ. துரா, பம்பந்திராய், மதுகம், செந்திராய்



படர்கொடி வகையைச் சார்ந்த இம் மூலிகை, உழுத நிலங்களில் செழித்து வளருந் தன்மைத்து. உடம்பினின்று வியர்வை, சிறுநீர் போன்ற கழிவுகளை அகற்றும், மிகச்சிறந்த நச்சுக்கொல்லி. மகளிர்தம் மாதவிடாய்ச் சிக்கலைப் போக்கும். கண்எரிச்சல், கண் காசம், உடம்பினில் உருவாகும் வேனற்கட்டி ஆகியவற்றிற்குக் கைகண்ட மருந்து.

தாய்மார்களுக்குத் தாய்ப்பாலை அதிகரிக்கச் செய்யும். மேலும் இம் மூலி சிறுவர் முதல் முதியவர் வரை, அனைவருக்கும் பயன்படும். மிகுதாகம், நீர்த்தாரையெரிச்சல், களைப்பு போன்ற நோய்களைப் போக்கும். சிவப்பு, நிறமுள்ள செந்தரா என்னும் மூலி, செம்புத் தகட்டைப் புடமிடப் பயன்படும்.

செந்தரா இலைகளைக் கருக்கு நீரிட்டுக் (கியாழம் செய்து) குடித்தால், மலக்கட்டு அகலும். செந்தரா இலையுடன், பன்னீர்ப்பூ சேர்த்துச் சுண்டக்காய்ச்சிக் குடித்தால், வெண்குட்டம் மாறும். பெரிய பிளவைக் கட்டிகளுக்கு, மஞ்சள் சேர்த்து, அரைத்துக் கட்டினால், இனிது உடைந்து, புண்ணீர்

வெளியேறும். காமாலை, கடுஞ்சுரம் போன்றவற்றிற்குச் செந்தராச் சூரணம் மிகச்சிறந்த மருந்து என்று, சா.அக. கூறும்.

*[தரை → தரா – தரையின் மீது படர்வது]*

**தராகதம்பம்** *tarā-kadambam,* பெ. (n.) கடம்பு வகை *(மலை);* common Indian oak.

*[தரை → தரா + கதம்பம்]*

**தராங்கம்** *tarāṅgam,* பெ. (n.) மலை *(யாழ்.அக.);* mountain.

*[தரை + அங்கம் → தராங்கம்]*

**தராச்சா** *tarāccā,* பெ. (n.) முந்திரி; grapes.

*[தரை → தரா → தராச்சா]*

**தராசத்து** *tarā-šattu,* பெ. (n.) மண்ணிலிருந்து வெட்டியெடுக்கப்படும் பொருள்; anything due out of the earth in the condition of fossic *(சா.அக.).*

*[தரை → தரா + சத்து → தராசத்து]*

**தராசதம்** *tarāšadam,* பெ. (n.) கொடுக்காய்ப் புளி; manilla tamarind *(சா.அக.).*

*[தள் → தரு → தரா → தராசதம்]*

**தராசம்** *tarāšam,* பெ. (n.) *1.* வயிரக் குணங்களுள் ஒன்று; a quality in diamonds. "இலகிய தாரையுஞ் சுத்தியுந் தராசமும்" *(சிலப். 14:180, உரை). 2.* மரகதக்குற்றம் எட்டனுள் ஒன்று *(சிலப். 14:184, உரை);* a flaw in emeralds, one of eight maragada-k-kuṟṟam.

*[தரை → தரா → தராசதம்]*

**தராசிகம்** *tarā-šigam,* பெ. (n.) பெருமருந்துப் பூடு; great medicine, Indian birth-wort.

மறுவ. இறைமூலி

*[தர் → தரு → தரா → தராசிகம்]*

**தராசிதா** *tarā-šidā,* பெ. (n.) கொட்டாஞ்சி; a kind of fruit *(சா.அக.).*

*[தர் → தரு → தரா → தராசிதா]*

**தராணி** *tarāṇi,* பெ. (n.) எருக்கு; madar plant.

*[தரை → தரா + ண் + இ → தராணி.]*

**தராதரம்**[1] *tarādaram,* பெ. (n.) மலை; mountain. "கடதராதரநிகர்" *(இரகு. குலமு. 1).*

*[தரை → தரா + தரம் → தராதரம். ஒ.நோ. சரி + சரி → சராசரி]*

**தராதரம்**[2] *tarā- taram,* பெ. (n.) *1.* ஏற்றத்தாழ்வு; distinction of rank, place, class or other particulars. "தராதரந் தெரிந்து" *(திருவிளை. திருமண. 94). 2.* நிலைமை *(தகுதி) (இ.வ.);* status, position.

ம. தராதரம்

*[தரம் + தரம் → தராதரம். ஒ.நோ. சரி + சரி → சராசரி. பரம் + பரம் → பராபரம்]*

**தராதரம்**[3] *tarā-taram,* பெ. (n.) மூல மையங்கள்; one of the six psychic centres of the human body.

*[தரம் + தரம் → தராதரம்]*

**தராதலம்**[1] *tarā-talam,* பெ. (n.) நிலவுலகம்; earth. "தராதலமுத லுலகனைத்தும்" *(கம்பரா. கடிமண. 47).*

*[தரை + தளம் → தலம் → தராதலம்.]*

**தராதலம்**[2] *tarā-talam,* பெ. (n.) கீழேழுலகத் தொன்று *(பிங்.);* a nether - world, fourth of kīḻ-ēḻ-ulgam.

*[தரை + தளம் → தலம் → தராதலம்.]*

**தராதிபன்** *tarādibaṉ,* பெ. (n.) அரசன்; king. *(செ.அக.)*

*[தரை + அதிபன் → தராதிபன்]*

**தராப்பு** *tarāppu,* பெ.(n.) கப்பலின் வெளியே வைக்கப்பட்டிருக்கும் ஏணி (M. Navi. 174); accomodation ladder.

*[தரை → தரா → தராபகம்]*

**தராப்பூடு** *tarā-p-pūḍu,* பெ. (n.) நாரத்தை; bitter orange *(சா.அக.).*

*[தள் → தரு → தரா + பூடு]*

**தராபகம்** *tarā-bagam,* பெ. (n.) இடம் விட்டுப் பாய்தல்; the escape of anything from its proper place *(சா.அக.).*

*[தரை → தரா → தராபகம்.]*

**தராபத்திரம்** *tarā-pattiram*, பெ. (n.) தருப்பைப் புல்; sacred grass (சா.அக.).

*[தரை → தரா + பத்திரம் → தராபத்திரம்.]*

**தராபதி** *tarā-padi*, பெ. (n.) அரசன்; king, ruler. "இவர்குலத் தராபதி காண்" (கம்பரா. குலமுறை: 1).

*[தரை → தரா + பதி.]*

**தராபற்று** *tarā-paṟṟu*, பெ. (n.) தராசேர்ந்த ஒரு கலவை மாழை; any alloy of tarā (சா.அக.).

*[தரு → தரா + பற்று]*

**தராமண்டலம்** *tarā-maṇḍalam*, பெ. (n.) 1. நிலவுலகு; earth. 2. மூல அடிப்படை; the lowest situated centre or support of the body (சா. அக.).

*[தரை → தரா + மண்டலம்]*

**தராமணல்** *tarā-maṇal*, பெ. (n.) வெள்ளி மணல்; sand mixed with silver (சா.அக.).

*[தரை → தரா + மணல்]*

**தராமலை** *tarā-malai*, பெ. (n.) நாகம் கிடைக்கும் மலை; mountain in which zinc is found (சா.அக.).

*[தரை → தரா + மலை.]*

**தராய்**[1] *tarāy*, பெ. (n.) மேட்டுநிலம்; mound, elevated place. "தராய்க்கண் வைத்த விலங்க லன்னபோர்" (மலைபடு. 460).

*[தரை → தராய்]*

**தராய்**[2] *tarāy*, பெ. (n.) 1. திராய், கீரை வகை (சீவக. 2703, உரை.); Indian chickweed. 2. பிரமிப் பூண்டு; hedge hyssop.'காடியாட்டித் தராய்ச் சாறும்" (சீவக. 2703).

*[தரை → தராய்]*



**தரி**[1]**-த்தல்** *tari-*, 4 செகுவி. (v.i.) 1. நிலை பெற்று நிற்றல்; to stop, stand still, rest. "தரியாதே ஓடாநின்றது" (பு.வெ. 11, ஆண்பாற். 7, உரை). 2. இருப்புக்கொள்ளுதல்; to abide. "வணிகன் கண்ட வண்தரித்து" (கடம்ப. பு. இலீலா. 53). 3. ஊன்றிநிற்றல்; to stand firm; to be firm. வேர் தரித்திருக்கிறது.

*[தரை → தரி-.]*

**தரி**[2]**-த்தல்** *tari-*, 4 செகுன்றாவி. (v.t.) 1. அணிதல்; to invest, put on, as dress, flowers, etc. ஆபரணந் தரித்தாள் (உ.வ.). 2. தாங்குதல்; to keep, support, carry. "உமையோர் பாகந் தரித்தானை" (தேவா. 442: 2). 3. பொறுத்தல்; to bear patiently, endure. "தார்க்குவளை கண்டு தரியா விவண் முகத்துக் கார்க்குவளை" (பு.வெ. 12, பெண்பாற். 11). 4. அடக்கிக்கொள்ளுதல்; to control. "மருதரைத் தரியா தேத்துவார்" (தேவா. 447:4). 5. மறவாது உள்ளத்துக் கொள்ளுதல்; to remember, bear in mind. "கல்விகளையும் அவற்றின் பொருட் கேள்விகளையுங் கற்றுந் தரித்தும்" (சிலப். 9: 30: உரை). 6. தாம்பூலம் போடுதல்; to chew, as betel. தாம்பூலந் தரிக்கவேண்டும் (உ.வ.). 7. சூலுண்டாகிப் பிறத்தல்; to be conceive and born.

*[தள் → தரை → தரி-.]*

**தரி**[3] *tari*, பெ.(n.) இருப்பு (யாழ்ப்.); abiding, tarrying rest.

*[தரை → தரி.]*

**தரிகொடு-த்தல்** *tari-koḍu-*, 4 செ.கு.வி. (v.i.) இடங்கொடுத்தல் (யாழ்ப்.); to allow, give room. (செ.அக.)

*[தரை → தரி + கொடு-.]*

**தரிகொள்(ளு)-தல்** *tari-koḷ(ḷ)u-*, 13 செ.கு.வி. (v.i.) இருப்புக்கொள்ளுதல்; to become settled, permanent; to abide, rest still; to be fixed, stationary. "தரிகொளாது கண்க ணீர்ததும்பி" (சேதுபு. இராமதீர். 71).

*[தரி + கொள்(ளு)-.]*

**தரிசநரம்பு** *tariša-narambu*, பெ. (n.) பார்வை நரம்பு; optic nerve.

*[தள் → தரி → தரிசம் + நரம்பு]*

**தரிசநரம்புச்சாலம்** *tariša-narambu-c-cālam*, பெ. (n.) பார்வைநரம்புகள் சேர்ந்த வலை போன்ற, பின்னல்கள்; a fine network of optic nerve (சா.அக.).

*[தள் → தரி → தரிசம் + நரம்பு + சாலம்.]*

**தரிசநூல்** *tariša-nūl*, பெ. (n.) கண்பார்வை நூல்; the science of the nature and laws of vision and light (சா.அக.).

*[தள் → தர் → தரி → தரிசம் + நூல்]*

**தரிசம்** *tarišam*, பெ. (n.) *1.* வலுவின்மை; weakness. *2.* அலித்தன்மை; impotence. *3.* பேடி; eunuch (சா.அக.).

*[தள் → தர் → தரி → தரிசம்]*

**தரிசவம்** *tarišavam*, பெ. (n.) சந்திரகாந்தச் செடி; a plant (சா.அக.).

*[தள் → தரி → தரிசவம்]*

**தரிசாப்பள்ளி** *tarišā-p-paḷḷi*, பெ. (n.) 9-ம் நூற்றாண்டிலே கொல்லத்தில் இருந்த சிரியன் கிறித்துவக் கோயில்; ancient Šyrian church at Quilon 9th c. "மருவான் சபீரீசோ செய்விச்ச தரிசாப்பள்ளி" (T.A.S. ii, 80).

*[தரிசா + பள்ளி]*

**தரிசி** *tariši*, பெ. (n.) *1.* பார்வை தெரியும்படியாக கண்ணில் ஏற்படுத்தப்பட்ட அமைப்பு; the innermost perceptive sturcture of the eye. *2.* தரிசநரம்பு பார்க்க; see *tariša-narambu.*

*[தன் → தர் → தரி → தரிசி.]*

**தரிசியம்** *tarišiyam*, பெ. (n.) விழித்திரை; retina (சா.அக.).

*[தன் → தர் → தரி → தரிசி + இயம் → தரிசியம்.]*

**தரிசு**[1] *tarišu*, பெ.(n.) பயிரிடப்பெறாத நிலம்; land lying waste or fallow. "தரிசுகிடந்த தரசுதரையை" (ஈடு, 2. 7:4).

ம. தரிசு; க. தரசு

*[தரை → தரி → தரிசு. மாந்தருக்குத் தவசம் தருவது.]*

**தரிசு**[2] *tarišu*, பெ. (n.) உள்ளீடுபரல்; pebbles, pieces of metal put into anklets for tinkling. "திருச்சிலம்புகளுக்குத் தரிசாகத் திருவடியிலே சாத்தியருளி" (கோயிற்பு. பதஞ்சலி. 36, உரை). (யாழ்ப்.).

*[தர் → தரி → தரிசு.]*

**தரிசுதூறுவிடு-தல்** *tarišu-tūṟu-viḍu-*, 18 செ. குன்றாவி. (v.t.) தரிசு[1] பார்க்க; see *tarišu*[1].

*[தரிசு + தூறு + விடு-.]*

**தரிஞ்சகம்** *tariñ-jagam*, பெ. (n.) அன்றில் (அகநி.); inantigale of India.

**தரிஞ்சி** *tariñji*, பெ. (n.) சுரபுன்னை; sorra poon, fragrant poon.

*[தள் → தர் → தரி → தரிஞ்சி]*

**தரித்திரி** *tari-t-tiri*, பெ. (n.) நிலவுலகம் (பிங்.); earth.

*[தரை + த் + திரி → தரித்திரி. 'த்' சாரியை]*

**தரிப்பு**[1] *tari-p-pu*, பெ. (n.) *1.* தங்குகை; staying abiding, remaining, halting, tarrying. அங்கே அவனுக்குத் தரிப்புக் கொள்ளவில்லை. (உ.வ.) *2.* நினைவில்வைக்கை (வின்.); retaining in the mind or memory. *3.* மனம் பொறுக்கை; bearing, enduring, tolerating. "தரிப்பரி தென்ன" (திருவாத. பு. மண். 15). *4.* உறுதி (திவா.); certainty. *5.* படிக்கும்போதும் பேசும்போதும் இடமறிந்து நிறுத்துகை (வின்.); pause, as in reading or speaking. *6.* இருப்பிடம்; lodging, resting-place, footing. அவனுக்கு எங்குந் தரிப்பில்லை (உ.வ.). *7.* கையிருப்பு; stock of money, cash in hand. அவனுக்குக் கையிலே தரிப்பு உண்டா? (இ.வ.). *8.* கரு உண்டாதல்; to the pregnant.

*[தள் → தர் → தரி → தரிப்பு. தரிப்பு என்னுஞ் சொல், வடமொழி வேரடியி னின்று வேறுபட்டுக் குலப் பண்புகளைத் தாங்குகை என்னும் தூயதென் சொற் பொருள் தந்து வழங்குகை அறிக]*

**தரிப்பு**[2] *tari-p-pu*, பெ. (n.) தருப்பு பார்க்க; see *taruppu.*

*[தரி → தரிப்பு]*

**தரிப்பு**[3] *tari-p-pu*, பெ. (n.) நிறுத்துகை; retention (சா.அக.).

*[தரை → தரி → தரிப்பு]*

**தரிப்புத்தட்டான்** *tarippu-t-taṭṭāṉ*, பெ.(n.) செல்வன் (வின்.); monied man.

*[தரிப்பு + தட்டான்]*

**தரிபடு-தல்** *tari-paḍu-*, 20 செ.குன்றாவி. (v.i.) நிலை பெறுதல்; to stop, stay permanently. "விண்ணவ ரோடினர் தரிபடாதுலைந்து" (குற்றா. தல. தக்கன் வேள்வி. 31).

*[தரி + படு-.]*

**தரிபெறு-தல்** *tari-peṟu-*, 20 செ.குவி. (v.i.) தரிபடு பார்க்க; see *tari-paḍu*. "சீர்மதுரை தரிபெற வேண்டும்" (திருவாலவா. திருவிளையாடற் பயகர மாலை: 11).

*[தரி + பெறு-.]*

**தரியலர்** *tariyalar*, பெ. (n.) பகைவர்; enemies, foes. "தரியலர் தம்புர மெய்தானை" (தேவா. 442: 2).

மறுவ. தரியலார், தரியார்

*[தரி + அலர் → தரியலர்]*

**தரியலார்** *tariyalār*, பெ. (n.) தரியலர் (சூடா.) பார்க்க; see *tariyalar*.

*[தரியலர் → தரியலார்]*

**தரியார்** *tariyār*, பெ. (n.) தரியலர் பார்க்க; see *tariyalar*. "விடை யொன்றேறித் தரியார்புர மெய்தார்" (தேவா. 1026: 4).

*[தர் → தரி + ஆர் → தரியார்]*

**தரியிடு-தல்** *tari-y-iḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) நிலைநிறுத்துதல்; to estabilish securely. "தொண்டர் குழாஞ் சற்றுமலை யாமல் தரியிட்டான்" (நெல்விடுதூது, 63).

*[தரை → தரி = நிலைப்பு. தரி + இடு-.]*

**தரு**[1] *taru*, பெ. (n.) மரக்கலப்பாய் இறக்குகை; striking of sail.

*[தா → தரு]*

**தரு**[2] *taru*, பெ. (n.) 1. மரம்; tree. "தருவனத்துள்" (கம்பரா. கையடைப். 10). 2. கற்பகமரம்; the kaṟpagam tree of Švarga. "தருநிலை" (மணிமே. 5:114).

*[தா → தரு]*

**தரு**[3] *taru*, பெ. (n.) 1. இசைப்பாட்டு வகை (இராமநா. பாலகா. 3); a stage-song in a peculiar metre and tune. 2. ஒரு வகைச் சந்தம் (வின்.); meaningless syllable sung to a tune as an interlude, formed of the letters த், ந், ன் combined with a long or short vowel.

க. தருவு

*[தா → தரு - பண்ணோடு இயைந்து இசையைத் தருவது]*

**தரு**[4] *taru*, பெ. (n.) தேவதாரு (தைலங். தைல. 17) பார்க்க; see *tēva-tāru*.

*[தா → தரு]*

**தருக்கசங்கிரகம்** *tarukka-šaṅgiragam*, பெ. (n.) வடமொழித் தருக்கசங்கிரகத்திலிருந்து சிவஞான முனிவர் செய்த தமிழ்மொழி பெயர்ப்பு நூல்; a Tamil translation of the Šānskrit Tarukkam šaṅgraham by Šivañāṉa-muṉivar.

*[தருக்கம் + சங்கிரகம்]*

**தருக்கசாத்திரம்** *tarukka-šāttiram*, பெ. (n.) அளவைநூல், சொற்போர் பற்றியநூல்; treatise on logic or dialectics, science of reasoning (செ.அக.).

த. தருக்கம் → வ. தர்க்கம்

*[தருக்கம் + சாத்திரம். தருக்கு → தருக்கம் = சொற்போர், தருக்க நூல். தமிழ்த் தருக்க நூல் அளவை, சொற்போர் முதலான பொருட் பாகுபாட்டை, அடிப்படையாகக் கொண்டது. "தர்க்க பரிபாஷை" என்னும் நூலிற் காட்டப்பெற்றுள்ள, அகத்தியத் தருக்க நூற்பாக்களைக் காண்க. தமிழ்த் தருக்க நூலையே வடவர் வைசேடிகம் என வகுத்தனர். (வ.மொ. வ. 173)]*

**தருக்கசாத்திரி** *tarukka-šāttiri*, பெ. (n.) தருக்க நூல் வல்லோன்; logician. (செ.அக.)

*[தருக்கம் + சாத்திரி]*

**தருக்கம்**[1] *taru-k-kam*, பெ. (n.) மேம்பாடு; pre-eminence. "தவம்புரி தருக்கத்து" (பெருங். இலாவாண, 2:23).

*[த. தருக்கம் → வ. தர்க்க. தருக்கு → தருக்கம்]*

**தருக்கம்**[2] *tarukkam,* பெ.(n.) *1.* **அளவையியல், சொற்போர் இயல்;** reasoning, arguing, discussion, debate, disputation. "பொருவரு தருக்கஞ் செய்யப் போயினர்" *(கந்தபு. ததீசியுத். 157). 2.* **சொற்போர்;** controversy, dispute, contention, wrangling. *3.* **தருக்கசாத்திரம்** பார்க்க; see *tarukka-šāttiram.* (செ.அக.)

**மறுவ.** தக்கம்

*[தருக்கு → தருக்கம்]*

த. தருக்கம் → **வ.** தர்க்கம்.

**தருக்கவாதம்** *tarukka-vādam,* பெ. (n.) *1.* **சொல்லாடுகை;** reasoning, arguing, discussion, detate, disputation. *2.* **சொற்போர்;** controversy, dispute, contention, wrangling.

**மறுவ.** சொற்போர்

*[தருக்கம் + வாதம்]*

**தருக்கி**[1] *tarukki,* பெ. (n.) **செருக்குள்ளவ-ன்-ள்** *(இ.வ.);* proud, self-conceited person.

*[தருக்கம் → தருக்கி]*

**தருக்கி**[2]**-த்தல்** *tarukki-,* 4 செ.கு.வி. (v.i.) **சொல்லாடுதல்;** to dispute, debate, argue, reason.

*[தருக்கம் → தருக்கி-.]*

**தருக்கி**[3] *tarukki,* பெ. (n.) *1.* **தருக்கசாத்திரி** (யாழ்.அக.) பார்க்க; see *tarukka-šāttiri.* *2.* **சொற்போரிடுவோன்** (வின்.); disputer, debater.

**மறுவ.** வாயாடி

*[தருக்கு → தருக்கி]*

**தருக்கு**[1]**-தல்** *tarukku-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **செருக்குக்கொளல்;** to be proud, vain, arrogant. "தன்னை வியந்து தருக்கலும்" *(திரிகடு. 38). 2.* **களித்தல்** *(பிங்.);* to be elated, intoxicated; to exult. "அவஞ்செய்து தருக்கினேனே" *(தேவா. 698: 9). 3.* **ஊக்கமிகுத்தல்;** to be zealous, enthusiastic. "வெம்போர்த் தருக்கினார் மைந்தர்" *(சீவக. 1679).*

*[தருக்கி → தருக்கு-.]*

**தருக்கு**[2]**-தல்** *tarukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **பெருகச்செய்தல்;** to enhance, enlarge. "தன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்து" *(தொல். பொருள். 50). 2.* **இடித்தல்;** to pound. "தண்மருப்பால் வெண்பிண்டி சேரத் தருக்கி மதுக்கலந்து" *(பதினொ. திருவீங்கோய். 40). 3.* **வருத்துதல்;** to injure, torment. "மேலால் தருக்கு மிடம்பாட்டி னொடும்" *(திவ். இயற். பெரியதிருவந். 22). 4.* **உடைத்துவிடுதல்;** to break, pierce. 'மரக்கல மியங்கவேண்டி .... தருக்கிய விடத்து' *(கம்பரா. மீட்சிப். 171). 5.* **மேற்கொள்ளுதல்;** to take to, have resort to. "கவறுங் கழகமுங் கையுந் தருக்கி" *(குறள், 935).*

*[தருக்கி → தருக்கு-. தருக்குதல் = செருக்குதல், மிகுத்துக் கூறுதல், போரூக்கங் கொள்ளுதல், தாக்குதல், இடித்தல், தகர்த்தல், (வ.மொ. வ. 173)]*

**தருக்கு**[3] *tarukku,* பெ. (n.) *1.* **செருக்கு;** pride, arrogance, ostentation, self-conceit, superciliousness. "தருக்கினர் கெடுவரன்றே" *(கம்பரா. மாரீச. 201). 2.* **வலிமை;** ability, power, boldness. "எதிர்செயுந் தருக்கி லாமையின்" *(கம்பரா. தாடகை. 40). 3.* **களிப்பு** (சூடா.); elation, exultation.

*[செருக்கு → தருக்கு. தருக்கு என்னுஞ் சொல், செருக்கித்திரிதல், வலிமையுடன் பொருதுதல், பொருதி மாற்றாரை அழித்து மேம்படுதல் என்னும் பொருளில் இலக்கியத்துள், ஆளப்பட்டுள்ளது]*

**தருக்கு**[4] *tarukku,* பெ. (n.) **தருக்கம்;** disputation. "தருக்கினாற் சமண்செய்து" *(திவ். பெரியதி. 2. 1:7).*

*[தருக்கி → தருக்கு]*

**தருக்குப்புடம்** *tarukku-p-puḍam,* பெ.(n.) **குறைந்த நெருப்பால் போடும் புடம்;** calcination effected with small fire.

*[தருக்கு + புடம்]*

**தருக்கோட்டம்** *taru-k-kōṭṭam,* பெ. (n.) **தருநிலைக்கோட்டம்** பார்க்க (சிலப். 5:145 - 6, உரை); see *tarunilai-k-kōṭṭam.*

*[தருக்கு + கோட்டம்]*

**தருகண்ணி** *tarukaṇṇi,* பெ. (n.) ஒருவகைச் சிப்பி; a kind of mussel, shell creeper.

*[தரு + கண்ணி]*

**தருகு[1]-தல்** *tarugu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தங்குதல்; to stay. 2. நிலைத்தல்; to continue (செ.அக.).

*[தரு → தருகு-.]*

**தருச்சா** *taruccā,* பெ. (n.) எரியணம் (கருப்பூரம்); camphor (சா.அக.).

**தருச்சாயி** *taru-c-cāyi,* பெ. (n.) பறவை; bird.

**தருச்சாரம்** *taru-c-cāram,* பெ.(n.) எரியணம் (கருப்பூரம்) (சங்.அக.) (மரத்தின் சாரமாயுள்ளது); camphor, as the essence of a tree.

*[தரு + சாரம். சாறு → சாரம்]*

**தருசாப்பள்ளி** *tarušā-p-paḷḷi,* பெ. (n.) தரிசாப் பள்ளி (T.A.S. ii, 67) பார்க்க; see *tariša-p-paḷḷi.* (செ.அக.)

*[தருசு + பள்ளி]*

**தருசு** *tarušu,* பெ. (n.) நெருங்கிய இழை; closely woven texture.

தெ. தருசு

*[தரு → தருசு]*

**தருடம்** *taruḍam,* பெ. (n.) தாமரை; lotus.

*[தரு → தருடம்]*

**தருணக்கஞ்சி** *taruṇa-k-kañji,* பெ. (n.) உரிமைக்கஞ்சி; a liquid food administered to a patient at the last moment of death.

*[தருணம் + கஞ்சி = இறக்குங் காலத்தே கொடுக்குங் கஞ்சி]*

**தருணகமாதி** *taruṇa-gamādi,* பெ. (n.) ஆமணக்கு; castor seed.

**தருணகாகித்தம்** *taruṇa-gāgittam,* பெ. (n.) குறண்டி; corandy.

**தருணசீரம்** *taruṇa-šīram,* பெ. (n.) பெருஞ்சீரகம்; large cumin.

**தருணசுரம்** *taruṇa-šuram,* பெ. (n.) 1. ஒன்பது நாள் காயுஞ் (காய்ச்சல்) சுரவகை (ஜீவரட். 30); a fever of nine day's duration. 2. தொடக்கக் காய்ச்சல்; incipient fever, slight fever.

*[தருணம் + சுரம்]*

**தருணசேபிகம்** *taruṇa-šēbigam,* பெ. (n.) குறட்டை; a kind of gourd (சா.அக.).

*[தருணம் + சேபிகம்]*

**தருணத்தி** *taruṇatti,* பெ. (n.) முருந்து எலும்புக் குருத்து; cartilage (சா.அக.).

*[தருணம் → தருணத்தி]*

**தருணநாரி** *taruṇa-nāri,* பெ. (n.) சிறு நன்னாரி; small leaved sarsaparilla.

**தருணப்பிரசவம்** *taruṇa-p-pirašavam,* பெ. (n.) மிக நெருங்கிய பேறுகாலநேரம்; pregnancy in which delivery is expected every day.

*[தருணம் = காலம், பொழுது. தருணம் + Skt.பிரசவம்]*

**தருணம்** *taruṇam,* பெ. (n.) 1. இளமை; prime of life, youthfulness. "தருண வஞ்சிக் கொம்பு" (கம்பரா. தைலமாட்டு. 15). 2. ஏற்றபொழுது; right time, proper season. "வெஞ்சமர் தொடர்ந்த தத்தருணமாம்" (சங்.அக.). "நல்ல தருண மிது நழுவிடலாமோ". 3. நல்லெண்ணம்; good intention. தருணங் கெட்டவன் (இ.வ.). 4. பெருஞ்சீரகம் (மலை); large cumin seed. 5. ஆமணக்கு (மூ.அக.); castor - plant.

*[தள் → தரு → தருள் → தருண் + அம். இச்சொல்லும் தருதற் கருத்தினின்று பிறந்த சொல்லேயாகும். தரு = தருகை. தருதல். தரு → தருணம். தருணம் = செயலுக்குத் தக்கநேரம். (ஒ.நோ.) மருள் → மருண். உடல் வனப்பிற்குரிய இளமையைத் தரும் பருவம். உடலின் கண்ணே வனப்புடன் மிளிரும் அழகை, ஆற்றலுடன் திகழும் இளமையாற்றலை, நற்செயல்கட்கு, நல்லெண்ணத்துடன் பயன்படுத்தும் பருவம். இளமையை வெளிக்கொணரும் உரிய பருவமென்றறிக]*

**தருணவக்கினி** *taruṇa-v-akkiṉi,* பெ. (n.) சித்திரமூலம்; Ceylon lead-wort (சா.அக.).

**தருணன்** *taruṇaṉ,* பெ. (n.) இளைஞன்; young man. "அறவுந்தருண னறவும் விருத்தன்" (சைவச. ஆசா. 16).

*[தருணம் → தருணன்]*

**தருணி**[1] *taruṇi*, பெ. (n.) *1.* இளமைப்பருவ முடையவள்; young lady. *2. 16 முதல் 30* ஆண்டு வரையுள்ள, மகளிர்பருவம் (திவா.); the period from the 16th to the 30th year in the lifetime of a woman. *3.* கற்றாழை (மலை); curacoa aloes.

*[தரு → தருணி]*

**தருணி**[2] *taruṇi*, பெ. (n.) ஒருசெடி வகை; rosa alba.

*[தா → தரு → தருணி]*

**தருணிகம்** *taruṇigam*, பெ. (n.) *1.* தருணி பார்க்க; see *taruṇi*. *2.* தகரை; ring-worm plant (சா.அக.).

*[தருணி → தருணிகம்]*

**தருணிமான்** *taruṇi-māṉ*, பெ. (n.) இளமை; youth.

*[தரு → தருணி + மான் → தருணிமான்.]*

**தருணீர்** *taruṇīr*, பெ(n.) குங்குமச் செவ்வந்தி; red chamomile (சா.அக.).

**தருணை** *taruṇai*, பெ. (n.) *16 முதல் 30* வயது வரையுள்ள பெண்; young woman between 16 and 30. "தரித்த வாலை தருணை பிரவுடை விருத்தை யாகும்வியன் பருவங்களின்" *(கந்தபு. இந்திரபுரி. 33).*

*[தருணி → தருணை]*

**தருத்தமனி** *taru-t-tamaṉi*, பெ. (n.) மரமஞ்சள் (மலை); tree turmeric.

**தருதல்** *tarudal*, பெ. (n.) *1.* கொடை (சூடா.); gift. *2.* வழங்குதல்; to give.

*[தள் → (தர்) → தரு. ஒ.நோ. கள் → கரு. தருதற் கருத்துவேர்; ஈன்று புரந்தவள் தாய்; வையகம் வாழ்வாங்கு வாழ்ந்து, வசியும் வளனுஞ் சுரப்பதற்கு, வானம், மழை தந்தது. பரிசில் வேண்டி வந்த பாணர்தம் துன்னர் சிதாரையகற்றிக் கொட்டைக்கரையப் பட்டுடை தந்தவர் பண்டைத்தமிழ் மன்னராவர். இவ்வாறு தருதற்கருத்து, பண்டைத்தமிழர் தம் வாழ்வியலில், இயைந்துள்ளமை காண்க]*

**தருதித்தம்** *taru-tittam*, பெ. (n.) அவுரிச்செடி; the indigo plant (சா.அக.).

**தருநன்** *tarunaṉ*, பெ. (n.) கொடுப்பவன்; giver, donor. "எல்லை தருநன்" *(பொருந. 233).*

மறுவ. வள்ளல், கொடையாளி

*[தரு → தருநன் = பசிப்பிணியாளர்க்கும், புலவர்க்கும், பொருள் தருபவன்; வாரி வழங்கும் வள்ளல்.]*

**தருநாடகம்** *taru-nāḍagam*, பெ. (n.) ஒரு மருத்துவ நூல்; a Tamil treatise on medicine.

*[தரு = மூலிகை. தரு + நாடகம்]*

**தருநிலைக்கோட்டம்** *taru-nilai-k-kōṭṭam*, பெ. (n.) காவிரிப்பூம்பட்டினத்தில், கற்பகத்தரு நின்று விளங்கிய கோயில்; temple of the Karpaga-t-taru in Kāviri-p-pūm-paṭṭiṉam. "தருநிலைக் கோட்டத்து மங்கல நெடுங்கொடி" *(சிலப். 5:145-6).*

*[தருநிலை + கோட்டம். கோட்டம் = கோயில். தருநிலைக்கோட்டமாவது, வேண்டுவார்க்கு வேண்டியதை, வேண்டியாங்கு நல்கும், கற்பகத்தரு வீற்றிருக்குங் கோவில்]*

**தருநிறப்பஞ்சரம்** *taru-niṟa-p-pañjaram*, பெ. (n.) *1.* காந்தம் (யாழ்.அக.); magnet. *2.* காந்தநஞ்சு; a kind of arsenic.

*[தருநிறம் + பஞ்சரம்]*

**தருப்பகச்சிலேட்டுமம்** *taru-p-paga-c-cilēṭṭumam*, பெ. (n.) உடலைக்காக்குந் தலையிலுள்ள, ஒரு பகுதி; cerebral-ventricles.

*[தருப்பகம் + சிலேட்டுமம்]*

**தருப்பகம்** *taru-p-pagam*, பெ. (n.) தாழ்வு (யாழ்.அக.); inferiority.

*[தா → தரு → தருப்பு + அகம்]*

**தருப்பகன்** *taru-p-pagaṉ*, பெ. (n.) காமவேள் (மன்மதன்) (சங்.அக.); God of love.

*[தரு → தருப்பு + அகன் = தருப்பகன் இன்பத்தைத் தருபவன்]*

**தருப்பசயனம்** *taruppa-śayaṉam*, பெ. (n.) திருமால் தருப்பைப்புல்லின் மீதுறங்கும்

நிலையிலுள்ள, திருப்புல்லாணி; a Thirumāl shrine in Ramnād District. "சேதுமூல நயங்கொ டருப்பசயனம்" (சேதுபு. சேதுவந்த. 42).

[தருப்பம் + சயனம். தருப்பம் → தருப்பை. Skt. சயனம் = படுக்கை.]

**தருப்படன்** *taru-p-paḍaṉ*, பெ. (n.) ஊர்க்காவற் காரன் (யாழ்.அக); village-watchman.

[தளம் → தலம். தலப்படன் → தருப்படன்]

**தருப்பம்**[1] *taruppam*, பெ. (n.) 1. செருக்கு (கருவம்); arrogance, self-conceit. "தருப்பமிகு சலந்தரன்" (தேவா. 575:8). 2. புனுகுச்சட்டம் (யாழ்.அக.); musk.

[தருக்கம் → தருப்பம். த. தருக்கம் → வ. தர்ப்ப.]

**தருப்பம்**[2] *taruppam*, பெ. (n.) தருப்பைப் புல், குசைப்புல்; kaus. the sacred grass.

[தரு → தருப்பம்]

**தருப்பி**[1] *taruppi*, பெ. (n.) தருவி (யாழ்.அக.) பார்க்க; see *taruvi*.

[தருவி → தருப்பி]

**தருப்பி**[2] *taruppi*, பெ. (n.) அகப்பை; wooden spoon.

[தரு → தருப்பி]

**தருப்பு** *taruppu*, பெ. (n.) குறைந்த விலையுள்ள ஒரு வகை வெள்ளைக்கல் (S.I.I.ii, 214,18); a white stone of inferior value.

தெ., க. தருப்பு

[தரு → தருப்பு]

**தருப்பூசணி** *taru-p-pūšaṇi*, பெ. (n.) சருக்கரைக்கொம்மட்டி; sweet water melon.

மறுவ. பிச்சப்பழம்

[தரு + பூசணி → தருப்பூசணி. இன் சுவையைத் தரும் பூசணி. பூசணிக்காய்த் தோற்றத்துடன் திகழும் இப் பழம், கோடைக்காலத்தில் அனைவருடைய தாகத்தையும் தீர்க்கும். இப் பழத்தினால் உடம்பில் உள்ள வேண்டாத கழிவு நீர்மம் அகலும். உடம்பு கலகலவென்று களைப்பற்று, இருக்கும். இதன் பழச்சாறு உடம்பிற்கு மிகுந்த குளிர்ச்சியைக் கொடுக்கும். சிறுநீர்ப்பையின் நோயினை அகற்றும். சிறுநீரை அதிகமாகப் பிரிக்குந் தன்மைத்து. தருப்பூசணியின் விதை, உடம்பிற்கு வலிமையை அளிக்கும். ஆண்மை (விந்து) வெண்ணீரை அதிகரிக்கும். ஆண் மலட்டைப் போக்கும் என்று சா.அக. கூறும்]



**தருப்பூசை** *taru-p-pūšai*, பெ. (n.) தெங்கம் பழத்தின் ஓடு; a variety of coconut tree which bears big fruits whose shell is used by beggars or medicants as bowl (சா.அக.).

[தரு + பூசை → தருப்பூசை]

**தருப்பை** *taruppai*, பெ. (n.) குசைப்புல்; kaus the sacred grass. "வசிட்டன் றருப்பையோ டினித னெய்தினான்" (கம்பரா. கடிமண. 84).

மறுவ. தருப்பம்

[தருப்பம் → தருப்பை]

**தருப்பைமுனை** *taruppai-muṉai*, பெ. (n.) நுண்ணறிவு; a sharp intellect of a clever man (சா.அக.).

[தருப்பம் + முனை]

**தருபகா** *tarupagā*, பெ. (n.) செம்பரத்தை; shoe-flowers shrub. (சா.அக.)

**தருபதில்** *tarupadil*, பெ. (n.) தொண்மணிகளுள் ஒன்று; one of nine gems.

[தரு + பதில்]

**தரும்பாறை** *tarum-pāṟai*, பெ. (n.) கருஞ் சுக்கான்கல்; black lime-stone.

[இரும் → தரும் + பாறை; இறுகிய கரும்பாறை]

**தருமக்கட்டு** *taruma-k-kaṭṭu,* பெ. (n.) காப்பிலியர் பிரிவுவகை (E.T. iii, 216); a sub-division of the Kāppiliyar cast.

*[தருமம் + கட்டு]*

**தருமக்கட்டை** *taruma-k-kaṭṭai,* பெ. (n.) *1.* ஏதிலியர் (ஆதரவற்றோர்) (பிறர் தருமத்தால் வாழும் உடல்); orphan, as supported by charity. *2.* ஆவுரிஞ்சு தறி; rubbing post for cattle, set up as a charity.

*[தருமம் + கட்டை]*

**தருமக்கல்** *taruma-k-kal,* பெ. (n.) ஒருவன் செய்த அறச்செயல் பொறிக்கப்பட்ட கல்வெட்டு (இ.வ.); memorial slab inscribed with the charitable deeds of a person.

*[தருமம் + கல்]*

**தருமக்கிழத்தி** *taruma-k-kiḻatti,* பெ. (n.) தரும தேவதை [1] (சங்.அக.) பார்க்க; see *taruma-tēvadai*[1].

*[தருமம் + கிழத்தி]*

**தருமக்கிழவர்** *taruma-k-kiḻavar,* பெ. (n.) *1.* அறத்தைக் காப்பவர் (சங்.அக.); guardians of virtue. *2.* வணிகர் (பிங்.) (தருமம் செய்வதற்கான பொருள் வசதி உள்ளவர்); Vaišiyar, with wealth for giving donations.

*[தருமம் + கிழவர்]*

**தருமக்குரல்** *taruma-k-kural,* பெ. (n.) இலவச உணவுக்காக விடுக்கப்படும் பொது அழைப்பு; general call or invitation, as in a free distribution of food.

*[தருமம் + குரல்]*

**தருமக்கூச்சல்** *taruma-k-kūccal,* பெ. (n.) தருமக்குரல் பார்க்க; see *taruma-k-kural.*

*[தருமம் + கூச்சல்]*

**தருமக்கொள்ளி** *taruma-k-koḷḷi,* பெ. (n.) அறநிலையத்தார் செய்யும் ஈமக்கடன்; cremation, in charity, of a person who dies homeless.

*[தருமம் + கொள்ளி]*

**தருமக்கோள்** *taruma-k-kōḷ,* பெ. (n.) மறை முகமாகச் செய்த குற்றத்தை குறிப்பாக வெளிப்படுத்தல் (யாழ்ப்.); indirect information as to a secret crime.

மறுவ. கோள்மூட்டி

*[தருமம் + கோள்]*

**தருமகருத்தா** *taruma-karuttā,* பெ. (n.) *1.* அறங்காவலர், திருக்கோயில் ஆட்சித் தலைவர்; manager or trustee of a Hindu temple. *2.* அறமுரைப்பவர், நீதியரசர் (R.T.); judge, arbitrator, magistrate.

*[தருமம் + கருத்தா. த. கருத்தன் → கருத்தா → வ. கர்த்தா.]*

**தருமகாரியம்** *taruma-kāriyam,* பெ. (n.) அறச்செயல்; act of charity.

*[தருமம் + காரியம்]*

**தருமச்செல்வி** *taruma-c-celvi,* பெ. (n.) *1.* அறச்செல்வி; Hindu deity of justice and righteousness. *2.* மலைமகள்; Pārvati.

*[தருமம் + செல்வி]*

**தருமச்செலவு** *taruma-c-celavu,* பெ. (n.) அறத்திற்காகச் செலவிடுஞ் தொகை; expenditure on charity.

*[தருமம் + செலவு]*

**தருமச்சேட்டை** *taruma-c-cēṭṭai,* பெ. (n.) நெற்களத்தில் ஏழைகட்குக் கொடுக்க வேண்டி முறத்தில் தனியே வைக்கப் பட்டுள்ள கூலம்; corn set apart in a winnowing fan at the threshing - floor to be given to the poor.

மறுவ. அறக்கொடை, அறச்செலவு

*[தருமம் + சேட்டை. நெற்கோட்டை = நெல்லளக்குங்களம். கோட்டை → சேட்டை. 'கோட்டை போடுதல்' 'கோட்டை கொடுத்தல்' மதுரை வழக்கு]*

**தருமசக்கரம்** *taruma-cakkaram,* பெ. (n.) அறவாழி; Buddham and Jaina the wheel of Dharmam. "தருமசக்கர முருட்டினன் வருவோன்" (மணிமே. 10:26).



மறுவ. அறச்சக்கரம்

*[தருமம் + சக்கரம்]*

**தருமசங்கடம்** *taruma-šaṅgaḍam,* பெ. (n.) மாறுபட்ட இரண்டு கடமைகளுள், எதனை முடிப்பது என்று தெரியாத நிலைமை, அறத் தடுமாற்றம்; difficulty of discerning which of two contradictory duties is proper.

*[தருமம் + சங்கடம்]*

**தருமசத்திரம்** *taruma-cattiram,* பெ. (n.) வழிப்போக்கருக்கு இலவயமாக உணவு வழங்கும் இடம்; rest-house for travellers with free provision for food.

மறுவ. அறச்சாலை, ஊட்டுப்புரை

*[தருமம் + சத்தரம்]*

**தருமசந்நிதி** *taruma-šannidi,* பெ.(n.) ஆயிரங் காய்ச்சித் தென்னை; a variety of coconut tree yielding abundant fruit. (சா.அக.)

**தருமசபை** *taruma-šabai,* பெ. (n.) முறை மன்றம்; council of arbitrators, court of justice, tribunal.

மறுவ. அறமன்றம், அறங்கூறவையம்.

*[தரு + ம் + அம் → தருமம் + சபை - தருமசபை. தருமம் = முறை; அறம். அவை → சபை. ஒ.நோ. அமர் → சமர்; அமை → சமை; சவை → சபை. தமிழில் தருதற்கருத்தினடிப்படையாகப் பிறந்த சொல்லே தருமம்; குறிலுக்கு அருகில் 'ர' கரம், 'ற' கரம், குற்றொற்றாக வாராது. (ஒ.நோ.) கருமம், பருமம், மருமம். சபா (sabha-) என்னுஞ் சொல்லிற்கு, வட மொழியில் வழங்கும் பொருள், 'விளக்கத்தோடு கூடியது' என்பதாகும். ஸ = கூட. பா (bha) = விளங்கு. ஈங்கு, தருமசபை என்பது, தென்சொல்லே யாகும். அறங்கூறுவோர் முறையுடன் கூடி நிறைந்துள்ள அவையே, தரும சபையாகும்.]*

**தருமசாட்சி** *taruma-šāṭci,* பெ. (n.) *1.* அற மன்றத்தாரால் அழைக்கப்பட்டுக் கேட்கப் படும் சான்று (இ.வ.); king's evidence, court witness. *2.* அறமகளறியக் கூறுஞ்சாட்சி; testimony given in the name of the Goddess of virtue.

*[தருமம் + சாட்சி]*

**தருமசாடி** *taruma-šāḍi,* பெ. (n.) தருமக்கோள் (வின்.) பார்க்க; see *taruma-k-kōḷ.*

*[தருமம் + சாடை - தருமசாடை → தரும சாடி.]*

**தருமசாத்திரம்** *taruma-šāttiram,* பெ. (n.) தருமநூல் பார்க்க; see *taruma-nūl.*

மறுவ. அறநூல்

*[தருமம் + சாத்திரம்]*

**தருமசாதனம்** *taruma-šādaṉam,* பெ. (n.) அறச் செயலைக் குறிக்குஞ் செப்புப் பட்டயம்; deed of endowment inscribed on a copper - plate.

*[தருமம் + சாதனம். தருமம் = அறம். சாசனம் → சாதனம்]*

**தருமசாலி** *taruma-šāli,* பெ. (n.) அறவோன்; charitable person.

மறுவ. குணசாலி

*[தருமம் + சாலி. தருமம் = அறம். சால் → சாலி. சாலுதல் = நிறைந்து விளங்குதல்]*

**தருமசாலை** *taruma-šālai,* பெ. (n.) தரும சத்திரம் பார்க்க; see *taruma-šattiram.*

மறுவ. அறச்சாலை

*[தருமம் + சாலை]*

**தருமசிந்தை** *taruma-šindai,* பெ. (n.) அறம் புரியும் எண்ணம்; charitable or virtuous disposition.

*[தருமம் + சிந்தை]*

**தருமசீலன்** *taruma-šīlaṉ*, பெ. (n.) தருமசாலி பார்க்க; see *taruma-šāli.*

மறுவ. கொடையாளி, அறவன்

*[தருமம் + சீலன்]*

**தருமசீலி** *taruma-šīli*, பெ. (n.) அறம்புரிபவள்; charitable woman.

*[தருமம் + சீலி]*

**தருமசூட்சுமம்** *taruma-šūṭcumam*, பெ. (n.) நுணுகி அறிதற்குரிய அறவியல்; a subtle point in ethics.

*[தருமம் + சூட்சுமம்]*

**தருமணம்** *tarumaṇam*, பெ. (n.) சடைச்சி; matted hair plant.

**தருமணல்** *taru-maṇal*, பெ. (n.) திருவிழா முதலியவற்றிற் புதிதாகக் கொண்டுவந்து பரப்பும் மணல்; sand newly spread, as on festive occasions. "தருமணன் முற்றம்" *(மதுரைக். 684).*

மறுவ. போடு(ம்) மண்

*[தரு + மணல்]*

**தருமணற்சுக்கான்** *tarumaṇaṟ-šukkāṉ*, பெ. (n.) கருப்புச் சுக்கான்கல்; black lime stone *(சா அக.).*

*[தருமணல் + சுக்கான்]*

**தருமத்தியானம்** *taruma-t-tiyāṉam*, பெ. (n.) ஆதனின் இயல்பு, அதன் இன்ப துன்ப உணர்வு, அது நல்வழியடை தலைத் தடுக்கும் தடைகள், அது முடிவில் நிலையாய இன்பத்தை எய்துகை ஆகிய மெய்ப் பொருளைப் பற்றிய உணர்வு; (Jainam) knowledge of the nature of the soul, its experiences of god and evil, the impediments in its progress, and its final attainment of eternal bliss. "இதனை ஆருகதர் தருமத்தியானம் என்ப" *(குறள், 286, உரை).*

*[தருமம் + தியானம்]*

**தருமதலைவன்** *taruma-talaivaṉ*, பெ. (n.) புத்தன் (தருமத்திற்கு உரிய தலைவன்); Buddham, as Supreme in virtue. "தருமத்தலைவன் றலைமையா னுரைத்த" *(மணிமே. 11: 30).*

*[தருமம் + தலைவன்]*

**தருமதனம்** *taruma-taṉam*, பெ. (n.) கன்னல் சருக்கரை; sugar obtained from sugercane.

*[தருமம் + தனம் → தருமதனம்]*

**தருமதாயம்** *taruma-tāyam*, பெ. (n.) அறத் திற்காக விடும் இறையிலி நிலம் (W.G.137.); inam granted for any charitable purpose; property or funds bequeathed and dedicated to pious uses.

*[தருமம் + தாயம்]*

**தருமதானம்** *taruma-tāṉam*, பெ. (n.) சமய நடை முறைப்படி செய்யும் கொடை; charity according to prescribed texts. 'எங்கோன் முற்பவத்திற் புண்ணியத்தையுந் தரும தானத்தையுஞ் செய்தோ னாதலின" *(சிலப். 15: 30: உரை).*

மறுவ. அறக்கொடை

*[தருமம் + தானம்]*

**தருமதி** *tarumadi*, பெ. (n.) நிலுவை (யாழ்ப்.); that which is due in money or goods, balance due.

*[தரு + மதி]*

**தருமதேவதை** *taruma-tēvadai*, பெ. (n.) *1.* இயக்கி (சூடா.); Jaina Goddess of Benevolence. *2.* யமன்; yaman. "தனைப்பயந்த நற்றருமதேவதை திருவருளால்" *(பாரத. நச்சுப்.47).* (செ.அக.)

*[தருமம் + தேவதை]*

**தருமநாள்** *taruma-nāḷ*, பெ. (n.) தாழி (பரணி) நாள் (பிங்.); the second star out of 27.

*[தருமம் + நாள்]*

**தருமநீதி** *taruma-nīti*, பெ. (n.) சட்ட நூல்களில் கூறப்படும் அறம்; justice, as based on the legal codes.

மறுவ. அறவுரை

*[தருமம் + நீதி]*

**தருமப்பள்ளி** *taruma-p-paḷḷi*, பெ. (n.) இலவயமாகக் கல்வி கற்பிக்கும் இடம்; charity school.

*[தருமம் + பள்ளி]*

**தருமப்பிணம்** *taruma-p-piṇam,* பெ.(n.) சுற்றம் இன்மையால், எரியூட்டப்படும் பிணம் (வின்.); corpse buried or cremated at the expenses of the public.

*[தருமம் + பிணம்]*

**தருமப்பிரபு** *taruma-p-pirabu,* பெ. (n.) வள்ளல்; benefactor, benevolent lord.

மறுவ. அறக்காவலன்

*[தருமம் + பிரபு]*

**தருமப்பிள்ளை** *taruma-p-piḷḷai,* பெ. (n.) கழைக் கூத்தரின் வளர்ப்புப் பிள்ளை (வின்.); one brought up by public charity in the profession of pole - dancing.

*[தருமம் + பிள்ளை]*

**தருமப்பூணூல்** *taruma-p-pūṇūl,* பெ. (n.) ஏழைப் பார்ப்பனப் பிள்ளைக்கு இலவயமாகச் செய்விக்கும் நூலணி விழா; investiture of a poor Brahmin boy with the sacred thread, performed in charity.

*[தருமம் + பூணூல்]*

**தருமப்பெட்டி** *taruma-p-peṭṭi,* பெ. (n.) அறக் காணிக்கையிடும் பெட்டி; charity - box, contribution boxes.

மறுவ. அறவுண்டி

*[தருமம் + பெட்டி]*

**தருமபத்திரம்** *taruma-pattiram,* பெ. (n.) அத்தி; fig-tree.

*[தருமம் + பத்திரம்]*

**தருமபத்தினி** *taruma-pattiṉi,* பெ. (n.) முறைப்படி திருமணஞ் செய்த மனைவி; legitimate wife entitled to take part along with her husband in all rituals.

மறுவ. வாழ்வரசி

*[தருமம் + பத்தினி]*

**தருமபீடிகை** *taruma-pīḍigai,* பெ. (n.) புத்தரது இணையடி அமைந்த இருக்கை-மேடை; pedestal bearing Buddha's feet, worshipped in many places. "புரையோ ரேத்துந் தருமபீடிகை தோன்றியது" *(மணிமே. 8: 63).*

*[தருமம் + பீடிகை]*

**தருமபுத்திரன்** *taruma-puttiraṉ,* பெ. (n.) *1.* மகாபாரதக் கதையில் பாண்டவர்களுள் மூத்தவன்; the eldest of the Pāṇḍavās of Mahābāratham. *2.* முறைப்படி மணந்து கொண்ட மனைவியின் மகன்; lawful son, son of legally wedded wife. *(செ.அக.)*

*[தருமம் + புத்திரன்]*

**தருமபுரம்** *taruma-puram,* பெ. (n.) *1.* கூற்றுவன் நகர்; city of yamaṉ. *2.* புகழ்மிக்க சிவ மடமுள்ள ஒரு சோணாட்டு ஊர்; தஞ்சை மாவட்டத்தில் மயிலாடுதுறைக்கு அருகில் இருக்கிறது; a Šiva shrine near Mayilāḍuturai, Tañjāvūr district, famous for Šaiva mutt.

**தருமம்** *tarumam,* பெ. (n.) *1.* கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறை; procedure to be followed by people. நெடுஞ்செழியன் அரச தருமத்தின்படி நடந்து கொள்ளவில்லை. *2.* அறநெறி; righteous path. *3.* நற்செயல் (பிங்.); virtuous deed. *4.* நெறி (விதி) (உரி.நி.); statute, ordinance, law, sacred law. *5.* அறநூல் (உரி.நி.); ancient text books on Hindu law. *6.* ஒழுக்கம் (உரி.நி.); usage, practice, prescribed conduct. *7.* கடமை; duty. "உன் தருமப்படி நீ நடந்து கொள்". *8.* அறம், நேர்மை (நீதி); justice, righteousness. "பொருது மென்கை தருமமோ" *(பாரத. சூதுபோர். 186).* *9.* தான முதலிய அறம்; charity, benevolence. "தருமமுந் தக்கார்க்கே செய்யா" *(நாலடி, 250).* *10.* இயற்கை (உரி.நி.); nature; inherent qualities characteristics, instinct. 'தருமமிஃதெனப் பன்னா மரபெனின்" *(ஞானா. 11. 23).*

*[தரு + ம் + அம் → தருமம். தருதற்கருத்தே தருமம் என்னும் சொல்லிற்கு அடிப்படை. 'தரு' என்னும் வேரடிக்கு, ஒத்தசொல், வடமொழியில் இல்லை. வடமொழியில் உள்ள வேரடியின் பொருள், தாங்கு என்பது. தருதல் வேறு, தாங்குதல் வேறு. தமிழில் உள்ள 'தரு' என்னும் வேரடியே பொருட் பொருத்தப்பாட்டிற்கு உகந்தது. குறிலுக்கு அருகில், 'ர'கரம், 'ற'கரம் குற்றொற்றாக வாராமையறிக. (ஒ.நோ.) கருமம்; பருமம்; மருமம்]*

*அறு → ஆறு = வழி; அறு → அரு*

தருமம் எனுஞ்சொல்லின் எல்லாப் பொருளும் நல்லாறு, நல்வழி என்னும் பொருளிலேயே வருதல் காண்க. "கல்பொருதிரங்கு மல்லல் பேர்யாற்று நீர்வழிப் படூஉம் புணைபோல், ஆருயிர் முறை வழிப்படூஉம்" (புறநா.)விதி என்னும் பொருளும், இதனால் பெறும்.

தர்மின் என்ற வடமொழிச் சொல்லின் மூலம் த்ரி → தர என்பதாகும். தாங்கு என்பதே. இதன் பொருள். இந்த வேர்மூலம் தருமம் என்பதற்குப் பொருந்தாமை காண்க. *(சர் மோனியர் மோனியர் வில்லியம்ஸ்: சமக்கிருதம் - ஆங்கில அகரமுதலி).*

**தருமமன்று** *taruma-maṉṟu,* பெ. (n.) அற (நீதி) மன்றம்; court of justice. "ஓரடியிடாமற் றடுத்துவா தரும மன்றுள்" *(திருவாலவா. 41, 10).*

மறுவ. நீதிமன்றம்

*[தருமம் + மன்று]*

**தருமமுதல்வன்** *taruma-mudalvaṉ,* பெ. (n.) அருகக் கடவுள்; Arhat. "சித்தன் பகவன் தருமமுதல்வன்" *(சிலப். 10:178).*

மறுவ. அறமுதல்வன், அறத்தலைவன்

*[தருமம் + முதல்வன்]*

**தருமமூர்த்தி** *taruma-mūrtti,* பெ. (n.) அறமே உருவானவன்; embodiment of Dharma. 'நந்த மாலவாய்த் தருமமூர்த்தி" *(திருவாலவா. 20, 8)* (செ.அக.).

மறுவ. அறத்தலைவன், அறத்தேவன் (வின்.).

*[தருமம் + மூர்த்தி]*

**தருமமைந்தன்** *taruma-maindaṉ,* பெ. (n.) தருமபுத்திரன் (பிங்.) பார்க்க; see *taruma-puttiraṉ* (செ.அக.).

மறுவ. அறமைந்தன்

*[தருமம் + மைந்தன்]*

**தருமராச்சியம்** *taruma-rācciyam,* பெ.(n.) அற வழியில் முன்னேறும் நாடு; country of righteous rule state.

மறுவ. நீதியரசு, அறவாட்சி

*[தருமம் + இராச்சியம்]*

**தருமராசன்** *taruma-rāsaṉ,* பெ. (n.) 1. தருமன் (சூடா.) பார்க்க; see *tarumaṉ.* "விண்ணிடைத் தருமராசன் விரும்பினால் விலக்குவாரார்" *(தேவா. 523:2).* 2. பாலை (மலை); silvery - leaved ape flower.

மறுவ. அறமன்னன்

*[தருமம் + அரசன் → தருமரசன் → தருமராசன், த. அரசன் → வ. ராசன்]*

**தருமராசன்** *taruma-rāšaṉ,* பெ. (n.) பாலை மரம்; iron wood tree.

**தருமராசாக்கல்** *taruma-rāšā-k-kal,* பெ. (n.) சமந்த கூடம்; இலங்கையிலுள்ள ஆதம் மலை; adam's Peak in Ceylon.

**தருமரேகை** *taruma-rēgai,* பெ. (n.) அறஞ்செய் குணத்தைக் குறிக்கும் கை வரைவு (திருவாரூ. குற. mss); (palmistry.) a line is a person's palm indicating his benevolent disposition.

*[தருமம் + இரேகை (இரேகை = கையிலமைந்திருக்கும் வரைவு)]*

**தருமலோபம்** *taruma-lōpam,* பெ. (n.) அறக்கடமை தவறுகை; omission to do one's duty.

*[தருமம் + லோபம். லோபம் = ஈகையிலாமை]*

**தருமவட்டி** *taruma-vaṭṭi,* பெ. (n.) முறையான வட்டி; equitable, fair rate of interest.

மறுவ. நேர்வட்டி, அறவட்டி

*[தருமம் + வட்டி. (வட்டி = பணத்தைப் பிறர் பயன்பாட்டிற்காகப் பெறும் ஊதியம்)]*

**தருமவதி** *taruma-vadi,* பெ. (n.) ஈகைக்குணம் மிகுந்த பெண்; charitable and virtuous woman.

மறுவ. அறச்செல்வி

*[தருமம் + விதி]*

**தருமவந்தன்** *taruma-vandaṉ,* பெ. (n.) தருமவான் பார்க்க; see *tarumavāṉ.*

**தருமவாகனன்** *taruma-vāgaṉaṉ,* பெ. (n.) தரும வடிவான காளையை, ஊர்தியாகக் கொண்ட சிவன் (யாழ்.அக.); Šivaṉ, as riding on bull which is Tarumam personified.

*[தருமம் + வாகனன் → தருமவாகனன்]*

**தருமவாசனம்** *taruma-v-āšaṉam,* பெ. (n.) **முறை மன்றம்;** court. 'தருமவாச னத்தி லேற' (திருவாலவா. 41, 13).

*[தருமம் + ஆசனம் (ஆசனம் = இருக்கை)]*

**தருமவாட்டி** *taruma-v-āṭṭi,* பெ.(n.) **அறவழி நடக்கும் தலைவி;** lady in the righteous way.

*[தருமம் + ஆட்டி. (ஆட்டி = பெண், தலைவி). ஒ.நோ. தேவராட்டி.]*

**தருமவாடி** *taruma-vāḍi,* பெ. (n.) **ஈகைக்கூடம்;** place in which alms are given.

*[தருமம் + வாடி]*

**தருமவாளன்** *taruma-v-āḷaṉ,* பெ. (n.) **அறவழி நிற்கும் தலைவன்;** a person in the righteous way.

*[தருமம் + ஆள் + அன் → தருமவாளன்]*

**தருமவாளி** *taruma-v-āḷi,* பெ. (n.) **தருமவாளன்** பார்க்க; see *taruma-vāḷaṉ.*

**மறுவ.** அறவன், அறவாளி, அந்தணன்

*[தருமம் + ஆளி. ஆளி = ஆள்வோன்]*

**தருமவான்** *taruma-vāṉ,* பெ. (n.) **அறநோக்குடையோன்;** charitable and virtuous man. "தணிகைவாழ் தருமவானையே" (அருட்பா, V, பணித்திறஞ் சாலாமை, 1).

**மறுவ.** அறவான், புண்ணியன்

**தருமவினைஞர்** *taruma-viṉaiñar,* பெ. (n.) **அறப்புறங்களைப் மேற்பார்க்கும் அரசு அலுவலர்கள்;** officers in charge of charities. "தரும வினைஞருந் தந்திர வினைஞரும்" (சிலப். 26: 41).

*[தருமம் + வினைஞர்]*

**தருமவைத்தியசாலை** *taruma-vaitiya-šālai,* பெ. (n.) **இலவய மருத்துவமனை, பணமின்றி மருத்துவம் செய்யுமிடம்;** hospital of free dispensory.

*[தருமம் + வைத்தியசாலை]*

**தருமன்** *tarumaṉ,* பெ. (n.) 1. **அறக்கடவுள்;** god of justice and righteousness. "தருமன் றண்ணளியால்" (சீவக. 160). 2. **எமன்** (பிங்.); yamaṉ. "தருமனு மடங்கலும்" (பரிபா. 3:8). 3. **பாண்டவர்களுள் மூத்தவன்;** elder brother of Pāṇḍavars. "தரும னித்தனை நாட்செய்த தருமமும் பொய்யோ" (பாரத. சூது. 191). 4. **புத்தன்** (பிங்.); buddhaṉ. 5. **அருகன்;** arhat. "தருமன் பொருளன்" (சிலப். 10:178). 6. **திருக்குறளுரை காரருள் ஒருவர்;** one of the commentators on Kuṟaḷ. "தருமர் மணக்குடவர்" (தனிப்பா.).

**தருமாசனத்தார்** *tarumā-šaṉattār,* பெ. (n.) **நடுவர்கள்;** judges. "அறங்கூறுந் தருமாசனத்தார் உரைக்கும் நடுவுநிலைமை" (சிலப். 5: 135: உரை).

*[தருமம் + ஆசனத்தார்]*

**தருமாசனத்துக்கருத்தாக்கள்** *tarumā-šaṉattu-k-karuttākkaḷ,* பெ.(n.) **தருமாசனத்தார்** (சிலப். 22: 8: அரும்) பார்க்க; see *tarumā-šaṉattār.*

*[தருமம் + ஆசனம் + கருத்தாக்கள்]*

**தருமாசனம்** *tarumā-šaṉam,* பெ. (n.) **தருமசபை** பார்க்க (சிலப். 10, கட்டுரை, 3,அரும்); see *taruma-šabai.*

*[தருமம் + ஆசனம்]*

**தருமாத்திகாயம்** *tarumāttigāyam,* பெ. (n.) **அறவழி நடக்கத் தேவையான பொருள்;** money required to live in the righteous way. "தருமாத்தி காயந் தானெங்கு முளதாய்" (மணிமே. 27: 187).

*[தருமம் + ஆஸ்தி + காயம். Skt. ஆஸ்தி – சொத்து]*

**தருமாத்துமா** *tarumā-t-tumā,* பெ. (n.) **தருமவான்** பார்க்க; see *taruma-vāṉ.*

*[தருமம் + ஆத்துமா]*

**தருமாதருமம்** *tarumā-tarumam,* பெ.(n.) **அறமும் அறமல்லாததும், அறமும், மறமும்;** justice and injustice, virtue and vice.

*[தருமம் + அதருமம்]*

**தருமாதிரை** *tarumādirai,* பெ. (n.) **இலவங்கப்பூ;** flower of cloves (சா.அக.).

**தருமி** *tarumi,* பெ. (n.) 1. **'கொங்குதேர் வாழ்க்கை' எனத்தொடங்கும் குறுந்தொகைப் பாடலைக் கடைக்கழகப் புலவர்களிடையே படித்துப் பாண்டியரசனிடம் பொற்கிழி**

பெற்ற கோயில் பூசாரி; person in the righteous temple priest, who read the poem commencing with "koṅgu tēr vāzhkkai" in front of Šaṅgam poets and received a purse from the pāṇḍiyaṉ king. "நன்பாட்டுப் புலவனாயச் சங்கமேறி நற்கனகக் கிழிதருமிக் கருளினோன் காண்" (தேவா. 885: 3). 2. அறவழி வந்த பொருள் (சி.போ.சிற்: 2, 4, பக். 73); concrete object, as possessing qualities.

*[தருமம் + இ → தருமி. 'அம்' சாரியை கெட்டு. 'இ' கர விகுதியேற்று, 'தருமி' என்றானது. இதற்குத் தரப்படுவோன் என்று பொருள். (ஒ.நோ.) "ஆறுவது சினம்" ஆற்றப்படுவது சினம் என்ற பொருளில் வந்துள்ளமை காண்க. செயப்பாட்டு வினை, செய்வினை வடிவத்தில் வந்தது, என்றறிக.]*

**தருமிருகம்** *taru-mirugam,* பெ. (n.) குரங்கு; monkey.

**தருமூலம்** *taru-mūlam,* பெ. (n.) மரவேர்; root of a tree (சா.அக.).

*[தரு + மூலம்]*

**தருராகம்** *taru-rāgam,* பெ. (n.) 1. தளிர்; tender leaves. 2. தழை; sprout.

*[தரு + இராகம்]*

**தருராசம்** *taru-rāsam,* பெ. (n.) பனைமரம்; palmyra tree.

*[தா → தரு + ராசம்]*

**தருராசன்** *taru-rāšaṉ,* பெ. (n.) பனை (மலை.) (மரங்களின் அரசன்); palmyra - palm, as king of trees.

*[தரு → தருமம் + ராசன். பனைபொருட்கள் அனைத்தும், மாந்தர்க்குப் பல்லாற்றானும் பயன்படுதலால், பனைமரம் மரங்களின் அரசன் எனச் சிறப்புற்றதெனலாம். தருமம் + அரசன் → தருமராசன். த. அரசன் → Skt. ராசன்.]*

**தருவதச்சுருட்டி** *taruvada-c-curuṭṭi,* பெ. (n.) மயில் சிகைப்பூடு; peacock's crest plant (சா.அக.).

*[தருவதம் + சுருட்டி]*

**தருவாய்** *taru-vāy,* பெ. (n.) தக்கநேரம்; right time, opportunity. "அத்தருவாயி லாருயிர் வழங்கிய" (பெருங். வத்தவ. 9:55).

தெ. தருவாயி; க. தருவாய்

*[தரு → தருவாய்]*

**தருவாரி** *taru-vāri,* பெ. (n.) கல்லுப்பு (சங்.அக.); rock-salt (சா.அக.).

*[தரு + வாரி → தருவாரி]*

**தருவாளி** *taru-vāḷi,* பெ. (n.) வேளைப்பூடு; vailay plant (சா.அக.).

*[தரு + வாளி]*

**தருவி[1]-த்தல்** *taruvi-,* 4 செ.கு.வி. (v.i.) வருவித்தல்; to cause to bring. (செ.அக.)

க. தரிசு

*[தரு → தருவி-.]*

**தருவி[2]** *taruvi,* பெ. (n.) 1. துடுப்பு (சீவக. 2466, உரை); a ladle. 2. வேள்வியிற் கொள்ளும் இலைக்கரண்டி; leaf-spoon, used in vēdic sacrifices. 3. பெயரளவில் மட்டும் உள்ளது; that which is nominal, that which saves appearances. அதனைத் தருவிக்கு வைத்துக் கொண்டு நடத்துகிறான்.

*[துருவி → தருவி.]*

**தருவிராகம்** *taruvi-rāgam,* பெ. (n.) பனை; palmyra tree.

**தருவிராகிகம்** *taruvi-rāgigam,* பெ. (n.) நில வாகை மரம்; a variety of cassia.

மறுவ. கொன்ன மரம்

**தருவிராசன்** *taruvi-rāšaṉ,* பெ. (n.) பாலை மரம்; iron wood tree. (சா.அக.)

**தருவீகரசர்ப்பம்** *taruvīgarašarppam,* பெ. (n.) உடலைக் கறுப்பாக்கி, வீங்கச் செய்யும் நச்சுப் பாம்பு; a snake which when bites causes the body, to swell and become black.

**தருவை** *taruvai,* பெ. (n.) பேரேரி; big lake.

**தரூடம்** *tarūḍam,* பெ. (n.) தாமரைப்பூ (மலை); lotus flower.

**தரை[1]-தல்** *tarai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **சம்மட்டி யால் அடித்தல்** *(யாழ்ப்.)*; to rivet with a hammer.

*[தள் → தறை → தரை-.]*

**தரை[2]** *tarai*, பெ. (n.) **கருப்பை;** womb - uterus. *2.* **நரம்பு;** nerve.

*[தரு → தரை]*

**தரை[3]** *tarai*, பெ. (n.) **ஆணித்தலை** *(வின்.)*; head of a nail, of a rivet.

*[தலை → தரை]*

**தரை[4]** *tarai*, பெ. (n.) *1.* **நிலவுலகம்;** the earth. "தரையொடு திரிதல நலிதரு... சலதரன்" *(தேவா. 568:2). 2.* **நிலம்;** soil, land, ground. "தரையில் விழுந்து பணிந்தனர்" *(கோயிற்பு. பதஞ்ச. 43). 3.* **கரை;** shore. கப்பல் தரை தட்டிவிட்டது *(உ.வ.).*

**தரைக்கருக்குநீர்** *tarai-k-karukku-nīr*, பெ. (n.) **மூலிகை சேர்த்துச் சுண்டக் காய்ச்சிய நீர்;** infusion made by steeping articles in hot water.

*[தரை + கருக்குநீர்]*

**தரைக்காரன்** *tarai-k-kāraṉ*, பெ. (n.) **நிலத்துக் குரியவன்** *(யாழ்ப்.)*; owner of the land.

*[தரை + காரன். தரை = நிலம். "காரன்" உடைமைப் பெயரீறு. ஒ.நோ. கடைக் காரன். வீட்டுக்காரன், ஊர்க்காரன், மாட்டுக்காரன்]*

**தரைக்காற்று** *tarai-k-kāṟṟu*, பெ. (n.) **தரையிலிருந்து கடல்நோக்கி வீசுங்காற்று;** land-breeze, as dist. from sea breeze.

மறுவ. கோடைக்காற்று

*[தரை + காற்று]*

**தரைகாண்(ணு)-தல்** *tarai-kāṇṇu-*, 16 செ.குன்றாவி. (v.t.) *1.* **அளவிடுதல்;** to measure. "இன்னம் மேன்மை தரைகாணலாம், நீர்மை தரைகாண வொண்ணாது" *(ஈடு, 1:3:1). 2.* **கீழ் விழுதல்;** to drop or fall to the ground. "காலுங் கரமுந் தரைகண்டனவால்" *(கம்பரா. நிகும்பலை: 24). 3.* **கரைதெரிதல்;** to sight the shore, while in the sea.

*[தரை + காண்-.]*

**தரைச்சக்கரம்** *tarai-c-cakkaram*, பெ. (n.) **தரையில் சுழலும் ஒருவகை வெடி;** a cracker with a knob that spins on the floor.



*[தரை + சக்கரம். சக்கரம் = வட்டம்]*

**தரைச்சம்பங்கி** *tarai-c-campaṅgi*, பெ. (n.) **சம்பங்கி வகை;** a white - flowering, creeper, Pergularia.

*[தரை + சம்பங்கி]*

**தரைச்சேனை** *tarai-c-cēṉai*, பெ. (n.) **தரையில் போர் செய்யவல்ல படை** (M.Navi. 26); army, land-force, dist. fr. sea-force; infantry.

மறுவ. தரைப்படை

*[தரை + சேனை]*

**தரைத்தளம்** *tarai-t-taḷam*, பெ. (n.) **முதல்தளம்;** ground-floor.

*[தரை + தளம் ( தரை = நிலம்]*

**தரைத்தேவர்** *tarai-t-tēvar*, பெ. (n.) **அந்தணர்** *(பூசுரர்)*; Andaṇar, as Gods on earth. "தரைத்தேவர் பணி சண்பை" *(தேவா. 145:5).*

*[தரை + தேவர்]*

**தரைதட்டு-தல்** *tarai-taṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **கப்பல் தரையில் மோதுதல்;** to run aground, as a ship. தரைதட்டின கப்பல் போல *(உ.வ.).*

*[தரை + தட்டு- (தட்டுதல் = மோதுதல்)]*

**தரைப்பங்கு** *tarai-p-paṅgu*, பெ. (n.) **விளைச்சலில், நில உரிமையாளனுக்குரியது;** owner's share in the produce.

மறுவ. தரைவாரம் (யாழ்.), மேல்வாரம், நிலக்கூலி (கல்)

*[தரை + பங்கு → தரைப்பங்கு. களத்திற் குவித்துள்ள நெற்பொலியில், அளந்தது போகத் தரையிற் கிடக்கும், குறிப்பிட்ட நெல்.]*

**தரைப்பசலி** *tarai-p-pašali,* பெ.(n.) *தரையில் படரும் பசலிக்கீரை;* low spreading spinach.

*[தரை + பசலி]*

**தரைப்படர்மரம்** *tarai-p-paḍar-maram,* பெ. (n.) *கொடிமாமரம்;* creeper mango.

*[தரைபடர் + மாமரம் = தரையிற் தாழ்ந்து காய்க்கும், மாமரம்]*

**தரைப்படு-தல்** *tarai-p-paḍu-,* 20 செ.குவி. (v.i.) 1. *கிழேவீழ்தல்;* to prostrate, to fall on the ground. "தரைப்படுமளவிற் றத்தா நமரெனத் தடுத்து வீழ்ந்தார்" (பெரியபு. மெய்ப்பொரு. 16). "இவ்வுக்தியோடே தரைப்பட்டு" (ஈடு, 7.4:10). 2. *அழுந்துதல்;* to be immersed. "அழுந்தி - தரைப்பட்டு" *(திவ். பெரியாழ். 5:3:7, வியா.).*

*[தரை + படு-.]*

**தரைப்படுத்து-தல்** *tarai-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *தோற்கச்செய்தல்;* to make one fall flat on the ground; to defeat. "கசதுரங்க பலத்தையுந் தரைப்படுத்தி" *(பாரதவெண். 785).*

*[தரை + படுத்து-.]*

**தரைப்படை** *tarai-p-paḍai,* பெ. (n.) *போர்க் கருவிகள், அணிகங்கள் (வாகனங்கள்) அடங்கிய போர்ப்படைப் பிரிவு;* army.

*[தரை + படை]*

**தரைப்பற்று** *tarai-p-parru,* பெ. (n.) *சமவெளி* (இ.வ.); plains.

*[தரை + பற்று.]*

**தரைப்பனை** *tarai-p-paṉai,* பெ. (n.) *நிலப் பனை;* ground-palm.

*[தரை + பனை (தரை = நிலம்)]*



**தரைமகன்** *tarai-magaṉ,* பெ. (n.) *செவ்வாய்* (பூமகளின் மகன்) (விதான. பஞ்சாங்க. 17); Mars, as son of earth.

மறுவ. மண்ணின் மைந்தன்

*[தரை + மகன்]*

**தரைமட்டம்**[1] *tarai-maṭṭam,* பெ. (n.) 1. *நில மட்டம்* (வின்.); ground level. 2. *கட்டுமானக் காலங்களில், கட்டடங்களின் சுற்றுப்புறத்தில் அமையும் புதியமட்டம்;* newly designed ground level around newly constructions. 3. *கடல் நடுமட்டத்திற்கு மேல், தரை உள்ள உயரம்;* mean sea-level.

மறுவ. நிலமட்டம்

*[தரை + மட்டம் = தரைமட்டம். கட்டடங்கள் அமைக்குங்கால், சுற்றுத் தரை தாழ்வாக விருப்பது இயல்பேயாகும். அங்கு மண்நிரப்பி, நிலத்தை உயர்த்தி, அமைக்கப்படும் பகுதி, தரைமட்டம் எனப்படும்.*

*மழைநீர் எளிதில் வடியும் வண்ணம், முன்புள்ள பகுதியைப் பின்னர் புதுப்பிக்குங்கால், உயரும் மட்டத்தைவிடச் சற்று உயர்த்தி, புதுத் தரைமட்டம் அமைப்பது, நெஞ்சில் நிறுத்த வேண்டிய ஒன்றாகும்.*

*கடல் ஓதங்களால், ஏறி இறங்கும் ஏற்றம், இறக்கம் ஆகியவற்றின் அடிப்படையில், நடுமட்டம் (அடிப்படைப் பாழ்-சுழியம்) அளவாக எடுத்துக் கொள்ளப்படும். பின்னர் பொறியியல் மரபுப்படி, குறிப்பிட்ட இடத்தினின்று, தரைமட்டம் எவ்வளவு உயரத்தில் உள்ளதெனக் கணக்கிடப்படும். MSL + 122மீ. என்று குறிப்பிட்டு, கனம் + 122 மீ எனக் கணக்கிடுவர்.]*

**தரைமட்டம்**[2] *tarai-maṭṭam,* பெ. (n.) *நிலப் பரப்பையொட்டிய நிலை;* being of the level of the ground.

*[தரை + மட்டம் (மட்டம் = அளவு)]*

**தரைமாது** *tarai-mādu,* பெ. (n.) 1. *கஞ்சா;* gunjah plant. 2. *நரம்பு;* nerve. 3. *நாளம்;* vein (சா.அக.).

**தரையர்** *taraiyar,* பெ. (n.) நிலவுலகி லுள்ளோர்; people on the earth, earthly beings. "வானத்தரு மானத் தரையரை வைப்பர்" *(மருது: 98).*

*[தரை + அர். தரை = நிலம். "அர்" படர்க்கைப் பலர்பாலீறு]*

**தரையாணி** *tarai-y-āṇi,* பெ. (n.) ஆணிவகை (வின்.); a double-headed spike, clinched and headed at the smaller end after being driven in.

*[தரை + ஆணி]*

**தரையாமை** *tarai-y-āmai,* பெ. (n.) ஆமை வகை; land - tortoise, Testudo elegans.

மறுவ. நிலத்தாமை

*[தரை + ஆமை]*



**தரையிடு-தல்** *tarai-y-iḍu-,* 18 செகுன்றாவி. (v.t.) அடித்தஆணியின் இருபுறத்தையும் மடக்குதல் (இ.வ.); to rivet a nail at both ends after fixing it.

*[தரை + இடு-.]*

**தரையில்லாக்குருவி** *tarai-y-illā-k-kuruvi,* பெ. (n.) 1. தரையில் தங்காது பெரும்பாலும் பறந்துகொண்டே இருக்குங் குருவிவகை (வின்.); swallow, Hirundinidae. 2. தகைவிலான் குருவி வகை; swift, Cypselinae.

*[தரை + இல்லா + குருவி]*

**தரையிறங்கு-தல்** *tarai-y-iṟaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) வானூர்தி ஓடுதளத்தில் இறங்குதல்; to land touch-down. (of planes). வானூர்தி தரையிறங்க இன்னும் சில மணித்துளிகளே உள்ளன (உ.வ.).

*[தரை + இறங்கு-. தரை = நிலம், ஓடுதளம்]*

**தரையோடு** *tarai-y-ōḍu,* பெ. (n.) தரையிற் பாவுதற்குரிய ஓடு; flooring tiles.

மறுவ. தளவோடு

*[தரை + ஓடு.]*

**தரைவாரம்** *tarai-vāram,* பெ. (n.) மேல்வாரம் (யாழ்ப்.); owner's share of agricultural produce.

மறுவ. தரைப்பங்கு

*[தரை + வாரம்]*

**தரைவிளாம்** *taraiviḷām,* பெ. (n.) நரிவிளா;

**தரோகம்** *tarōgam,* பெ. (n.) நீர்க்கடம்பு; water cadambu (சா.அக.).

**தல்லம்** *tallam,* பெ. (n.) 1. குழி; pit. 2. நீரிருக்கும் பள்ளம்; pond.

*[துள் = துளைக்கை; துளைத்தலால் உண்டான குழி. துள் → தள் → தள்ளம் → தல்லம்]*

**தல்லி** *talli,* பெ. (n.) தாய் (அக.நி.); mother. தில்லிக்குப் பாச்சாவானாலுந் தல்லிக்குப் பிள்ளைதான்.

மறுவ. தள்ள

தெ. தல்லி

*[தள்ளுதல் = ஈனுதல் (உள்ளிருந்ததை வெளித்தள்ளுதல்) (வாழை) குலை தள்ளுதல் என்னும் வழக்கை நோக்குக. தள் → தள்ளை = தாய். (வ.வ. 174). தள் → தள்ளி → தல்லி. மகவினை ஈன்றவள்]*

**தல்லு** *tallu,* பெ. (n.) புணர்ச்சி (யாழ்ப்.); sexual intercourse.

*[தல் → தல்லு.]*

**தல்லு-தல்** *tallu-,* 5 செகுன்றாவி. (v.t.) 1. இடித்து நசுக்குதல்; to beat, crush. "இஞ்சியைத் தல்லிப் பிழிந்து சாறெடுத் தான்" (நாஞ்.). 2. புணர்தல்; to copulate.

*[தல் → தல்லு-.]*

**தல்லுநீர்** *tallu-nīr,* பெ. (n.) வெண்ணீர் (விந்து); semen (சா.அக.).

*[தல்லு + நீர்]*

**தல்லுமெல்லு** *tallu-mellu,* பெ. (n.) இழுபறி (யாழ். அக.); scuffle.

மறுவ. போராட்டம்

*[தல்லுமெல்லு : மரபிணைமொழி. மகள் திருமணத்திற்கு நகை வாங்கப் பணம் தல்லுமெல்லாக இருந்தது (உ.வ.).]*

**தல்லை** *tallai,* பெ. (n.) 1. இளம்பெண்; young woman. 2. தெப்பம்; float.

*[தள்ளை = தாய். தள்ளை → (பெண்) தல்லை]*

**தலக்கம்** *talakkam,* பெ. (n.) இழிசெயல்; base conduct. "தலக்கமேசெய்து வாழ்ந்து" (தேவா. 523: 5).

*[தல் → தலக்கு → தலக்கம்.]*

**தலக்காவல்** *tala-k-kāval,* பெ.(n.) 1. கொள்ளைக் காரர்களுக்கு இடங்கொடாது செய்யும் நாட்டுக்காவல்; system of guarding a tract of country against open marauders. 2. விளைச்சல் (மாசூல்) முதலியவற்றின், காவல்வேலை; office of watching produce and performing general duties; as collecting revenue.

*[தலம் + காவல். ஒருகா. தலைக்காவல் → தலக்காவல்.]*

**தலக்கிருதயம்** *tala-k-kirudayam,* பெ. (n.) உள்ளங்கால்; sole of foot.

*[தலக்கு + Skt. இருதயம்]*

**தலக்கு** *talakku,* பெ.(n.) இலச்சை, வெட்க உணர்வு; sense of shame. "தலக்கற்றுச் சொல்லும்படியான ஆற்றாமை" (ஈடு. 10, 10, ப்ர.).

தெ. தலக்கு

*[தல → தலக்கு]*

**தலகபுட்பம்** *talagapuṭpam,* பெ. (n.) சதல புட்பம் பார்க்க; see *šadala-puṭpam* (சா.அக.).

*[தலகம் + புட்பம்]*

**தலகாணி** *talagāṇi,* பெ. (n.) தலையணை (இ.வ.); pillow (செ.அக.).

*[தலையணை → தலையாணி → தலகாணி]*

**தலகிதம்** *talagidam,* பெ. (n.) சிலந்தி; spider (சா.அக.).

*[தல → தலகிதம்.]*

**தலச்சன்** *talaccaṉ,* பெ. (n.) தலைச்சன் பார்க்க; see *talaiccaṉ* (சா.அக.).

*[தலை = முதல். தல → தலச்சன்.]*

**தலசம்** *talašam,* பெ. (n.) நிலமுத்து (திருவலாவா. 25, 16, அரும்.); pearls produced in the earth.

*[தளம் - இடம், நிலம். தளசம் → தலசம்]*

**தலசயனம்** *tala-šayaṉam,* பெ. (n.) மாமல்ல புரத்தில், திருமால் நிலத்திற் பள்ளிகொண்ட திருக்கோலம்; shrine where the image of Viṣṇu is in the sleeping posture, Māmallapuram. "மல்லைத் தலசயனம்" (திவ். பெரியதி. 2: 5: 1).

*[தலம் + சயனம்]*

**தலசுத்தி** *tala-šutti,* பெ. (n.) 1. உண்கலஞ் சேர்ப்பதற்குமுன், அது வைக்குமிடத்தை நீரிட்டுக் கழுவுகை; cleansing the place where leaves are spread for serving food. 2. பிறப்பிறப்புகள் நிகழ்ந்த வீட்டை மந்திரநீர் தெளித்துக் காப்புச்செய்கை (வின்.); ceremonial purification of a house, as after a death or - birth.

*[தலம் + சுத்தி. Skt. சுத்தி = தூய்மை செய்கை]*

**தலத்தாது** *tala-t-tādu,* பெ.(n.) நிலப்பனை (மலை.); ground-palm.

*[தலம் + தாது - தலத்தாது = நிலம் படு பொருள்]*

**தலத்தார்** *talattār,* பெ. (n.) கோயிலதிகாரிகள்; officers of a temple. "சாந்திக்காரர் பிள்ளைமார் தலத்தார்" (T.A.S. iv, 114).

*[தலம் + த் + ஆர். 'த்' - சாரியை. 'ஆர்' பலர்பாலீறு.]*

**தலதம்பவாதம்** *talatamba-vādam,* பெ. (n.) உள்ளங்காலில் குடைச்சலை ஏற்படுத்தும் ஊதைநோய் வகை; a kind of rheumatism.

*[தளம் → தலம் → இடம், நிலம், நிலத்தில் பதியும் கால். தலம்பம் + வாதம்]*

**தலதரிசனம்** *tala-tarišaṉam,* பெ. (n.) 1. பல இடங்களுக்குச் செல்லுதல்; tour to see places. 2. திருதலச் சுற்றுலா; religious tour.

*[தளம் → தலம் + தரிசனம். (தரிசனம் = தெய்வம் மற்றும் பெரியோர்களைக் காணுகை.]*

**தலதாலம்** *tala-tālam,* பெ. (n.) பனைமரம்; palmyra tree.

*[தலம் + தாலம்]*

**தலநீலி** *tala-nīli,* பெ. (n.) வேரில்லாத தாளி; Sita's knot (சா.அக.).

*[தளம் = இடம். தளம் → தலம் + நீலி]*

**தலப்பம்** *talappam,* பெ. (n.) தாளிப்பனை; South Indian talipot-palm.

மறுவ. கூந்தற்பனை

ம. தவப்பம்

*[தல → தலப்பம். 'அம்' பெருமைப் பெயரொட்டு]*

**தலப்பு** *talappu,* பெ. (n.) சம்பளம் (W.G. 504); salary, pay. 2. கூச்சம்; delicate (செ.அக.).

*[தலைப்பு → தலப்பு. பழங்காலத்தில், தலையைக் கணக்கிட்டே, தவசத்தை அல்லது காசினைச் சம்பளமாகக் கொடுத்ததைப் பண்டைய கல்வெட்டுகள் வாயிலாக, நாம் அறியுஞ் செய்தியாகும்.]*

**தலபம்** *talapam,* பெ. (n.) பொன்; gold (சா.அக.).

**தலபாடம்** *tala-pāḍam,* பெ. (n.) கடை தலைப்பாடம் (நெல்லை); that which is thoroughly learnt, as a lesson (செ.அக.).

*[தலை → தல + பாடம்]*

**தலபுட்பம்** *tala-puṭpam,* பெ. (n.) தாழை; fragrant screw-pine.

*[தளம் → தலம் + புட்பம்]*

**தலபுராணம்** *tala-purāṇam,* பெ. (n.) புனை கதைகள் மூலம் ஊர்ப்பெருமைகளையும், வரலாற்றுச் சிறப்புகளையும் கூறும் நூல். இது பெரும்பாலும் கோயில் சார்ந்ததாக அமையும்; literature to adore a place, particularly temple towns, with imaginative historical fame.

*[தளம் → தலம் = கோவில். புராணம் = தொன்மம். கோவில் குறித்த தொன்மச் செய்திகளையும், ஊர் பற்றிய பண்பாட்டு, அரசியல் வரலாற்றினையும் உரைக்கும் நூல்.]*

**தலபேதம்** *tala-pēḍam,* பெ. (n.) இட மாறுபாட்டு நோய்; ill health due to change of place (சா.அக.).

*[தளம் → தலம் + பேதம்]*

**தலபோடம்** *tala-pōḍam,* பெ. (n.) பொடுதலை (சங்.அக.); a small creeping plant.

*[தளம் → தலம் + போடம்]*

**தலபோடகம்** *tala-pōḍagam,* பெ. (n.) ஆவிரை; tanner's senna.

*[தலபோடம் → தலபோடகம்]*

**தலம்**[1] *talam,* பெ. (n.) 1. இடம் (பிங்.); place, site. 2. வணங்கும் தூய இடம்; sacred place, shrine. "பின்னரே தலத்தின் வீறும்" (பிரமோத். பஞ்சா: 42). 3. நிலவுலகம் (பிங்.); earth, land. 4. உலகம்; world. "ஏழ்தல முருவ விடைந்து" (திருவாச. 4: 7). 5. உடலுறுப்பு; region of the body, used in compounds like kai-t-talam, cevi-t-talam, etc. 6. செய், வேளாண்நிலம்; land under cultivation, as divided into plots. 7. வீடு; house. "தலமடைசு சாளரம்" (திருப்புகழ்த். 99). 8. தலைமை நகரம் (யாழ்ப்.); chief or principal place as the metropolis, head-quarters, the court; that part of a town, where the authorities reside. 9. பனை மரம்; palmyra tree.

*[தளம் → தலம். வடமொழியில் 'ஸ்தல' என்பதற்குள்ள பொருள்கள், பெரும்பாலும், தளம் என்னும் தமிழ்ச் சொல்லிற்கே பொருந்துபவை; செயற்கையில், மேடாக்கிய தரை, மேட்டு நிலம், இடம், வறண்ட நிலம், சமப்பரப்பு, கூரைத்தளம், ஆகியவை, 'ஸ்தல்' எனும் வடமொழிச் சொல்லிற்குரிய பொருளாகும், (மோனியர் வில்லியம்சு). எனவே, தளம் என்ற சொல்லே வடமொழிக்குச் சென்று, 'ஸ்தல' என்னும் வடிவைப் பெற்றுள்ளது. ஒ.நோ. தலை → தல → தலம். (எ.டு.) அருவாவடதலை சீத்தலைப் பேட்டை வாய்த்தலை, தண்டலை போன்றவை இடப் பெயர்களாகும்.]*

**தலம்**[2] *talam,* பெ. (n.) இலை (சூடா.); leaf, foliage.

*[தள் → தல → தலம்]*

**தலம்**[3] *talam,* பெ. (n.) இதழ் (திவ். திருச்சந்த. 25, வ்யா. பக். 74); petal.

*[தள் → தல → தலம்]*

**தலமாற்றம்** *tala-māṟṟam,* பெ. (n.) அரசு வேலையில் உள்ள ஒருவரை, ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்திற்கு மாற்றுகை (இவ.); transfer, as of a government servant, from one place to another.

மறுவ. இடமாற்றம்

*[தளம் → தலம் + மாற்றம். மாற்றம் = இடமாற்றம், பணிமாற்றுகை]*

**தலமுகம்** *tala-mugam,* பெ. (n.) நாட்டிய முத்திரை (சிலப். 3: பக். 81: கீழ்க்குறிப்பு); a hand pose.

*[தலம் + முகம்.]*

**தலரூபகத்தாதி** *talarūpāgattādi,* பெ. (n.) ஆமணக்கு வேர்; root of castor plant (சா.அக.).

*[தலரூபகம் + அத்து + ஆதி. 'அத்து' சாரியை ஆதி = மூலம், வேர்]*

**தலரூபகம்** *tala-rūpagam,* பெ. (n.) சிற்றாமணக்கு (தைலவ. தைல. 85) பார்க்க; see *ciṟṟāmaṇakku.*

*[தலம் + ரூபகம்]*

**தலவாசம்** *tala-vāsam,* பெ. (n.) தூய இடத்தில் குடியிருக்கை; residence in a sacred shrine. "செண்பக வனத்தி லோர்நாட் செயுந் தல வாசம்" (குற்றா. தல. திருக்குற். 46).

*[தளம் → தலம் = இடம். த. வசி → Skt. வாசம். தூய்மையான இடத்திற் குடியிருத்தல்.]*

**தலவாடம்** *tala-vāḍam,* பெ.(n.) தளவாடம் பார்க்க; see *taḷa-vāḍam* (செ.அக.)

*[தளவாடம் → தலவாடம்]*

**தலவாரி** *tala-vāri,* பெ. (n.) வயல்வாரி (வின்.); enumeration of cultivated lands.

*[தலம் + வாரி.]*

**தலவாரியம்** *tala-vāriyam,* பெ. (n.) விளைநிலைக் கணக்கு (வின்.); enumeration of cultivated lands.

*[தலம் = விளைச்சல் நிலம். வாரி → வாரியம் = ஊரிலுள்ள விளைச்சல் நிலம் பற்றிய கணக்குகளை, மேற்கொள்ளும் குழு.]*

**தலவிருச்சம்** *talaviruccam,* பெ. (n.) கோ(யில்) மரம்; sacred tree related to a temple (கிரி. அக.)

*[தளம் → தலம் + விருச்சம்.]*

**தலன்** *talaṉ,* பெ.(n.) கீழானவன்; mean person. "தலன்குண்டன்" (திருப்பு. 561).

மறுவ. கீழ் (குறள்)

*[தளம் → தலம் → தலன். கீழ்ப்பகுதி, கீழான குணம், போன்ற சொல்லாட்சிகள் ஒப்பு நோக்கத்தக்கனவாம்.]*

**தலனம்** *talaṉam,* பெ. (n.) மான்; deer (சா.அக.).

**தலா** talā, பெ. (n.) ஒவ்வொருவருக்கும், அல்லது ஒவ்வொன்றுக்கும்; each.

**தலாகினி** *talāgiṉi,* பெ. (n.) நிலநெல்லி; Indian gooseberry tree (சா.அக.).

**தலாடகம்** *talāḍagam,* பெ. (n.) 1. தலாடம் பார்க்க; see *talāḍam.* 2. காட்டெள்; wild sesamum seed (சா.அக.).

**தலாடம்** *talāḍam,* பெ. (n.) அணில்; squirrel.

**தலாதலம்** *talā-talam,* பெ. (n.) தராதலம்[2] பார்க்க; see *tarātalam*[2] (செ.அக.).

**தலாமலம்** *talā-malam,* பெ. (n.) மருக்கொழுந்து; southern wood (சா.அக.).

மறுவ. தவனம்

**தலிகம்** *taligam,* பெ. (n.) 1. விறகு; fuel. 2. மரம்; tree (சா.அக.).

**தலிதம்** *talidam,* பெ. (n.) மலர்ந்தது; blossomed.

*[தலிகம் → தலிதம்]*

**தலூரப்பனை** *talūra-p-paṉai,* பெ. (n.) தாளிப்பனை பார்க்க; see *tāḷippaṉai.*

**தலூரம்** *talūram,* பெ. (n.) 1. கருமருது; bastard saul, L.tr. Shorea talura. 2. பச்சையரக்கு; raw lac.

**தலை**[1] *talai,* பெ. (n.) 1. மனிதன் அல்லது விலங்குகளின் உடலின் மேலுறுப்பு; head the upper most part of the human or animal body. 2. சிறந்தது; that which is first, best, highest. "தலையே தவமுயன்று வாழ்தல்" (நாலடி. 365). 3. உயர்ந்தோன்; person of highest quality and

rank. "தலையெலாஞ் சொற்பழி யஞ்சிவிடும்" *(நாலடி, 297).* 4. **தலைவன்;** leader; husband. "தலையிழந்த பெண்டாட்டி" *(ஏலாதி. 78).* 5. **முதல்** *(பிங்.);* origin, beginning, source, commencement. "உயர்ந்தோர் தலையா விழிந்தோ ரீறா" *(பெருங். வத்தவ. 2: 51).* 6. **உச்சி;** top, apex. "தலையு மாகமுந் தாளுந் தழீஇ" *(கம்பரா. ஆற்றுப். 6).* 7. **நுனி;** end, tip. "தலைவிரல் தாக்க" *(கல்லா. 8).* 8. **முடிவு;** finish, close. "தலைவைத்த காப்பு விஞ்சை" *(சீவக. 1881).* 9. **ஒப்பு** (பு. வெ. 4.12: உரை); resemblance. *10.* **வானம்** *(பிங்.);* sky, ethereal region. "தலையின் மின் கறுத்ததென்ன" *(அரிச். பு. சூழ்வினை. 5.).* 11. **ஆள்;** unit, person, hand. தலைவரி. 12. **அஞ்சலில் ஒட்டும் முத்திரைத் தலை;** postage stamp, as bearing the figure of a king's head. *13.* **மண்டையோடு;** skull. "தலைக்கலத் திரந்தது" *(கம்பரா. சடாயுவு. 195).* 14. **தலைமயிர்;** hair. தலையவிழ்ந்து கிடக்கிறது *(இ.வ.).* 15. **ஏழாம்வேற்றுமைச் சொல்லுருபு;** (gram) word used as a locative case-suffix. "முன்னிடை கடைதலை" *(தொல். சொல். 77).*

- கு.வி.எ. (adv.). **மேலே;** in addition to. "அகன்றலை........ சான்றோர் பலர் யான் வாழு மூரே" *(புறநா. 191).* /

- இடை. (part.) **வினைகட்கு முன் வரும் ஓர் இடைச்சொல்** *(பி.வி. 45)* ; prefix with the force of preposition.

**தெ., ம., துட.** தல; **க.** தலெ.

*[உல் → துல் → தல் → தலை]*

தலையென்னும் வேரடி, பொருந்துதற் கருத்தினின்று முகிழ்த்தது : முதற்கண் உயரம், நுனி, உச்சி மனிதன் அல்லது விலங்கின் மேலுறுப்பு முதலானவற்றைக் குறித்தது. அடுத்த நிலையில் இருதலை மணியன், இருதலைக் கொள்ளி, இருதலைக்காமம், முதலிய தொடர்களில், தலை என்பது முனையை அல்லது கடையைக் குறித்தல் காண்க *(மு.தா. 103).*

**தலை வகைகள்:**

1. சட்டித்தலை; large sized head.
2. பறட்டைத்தலை; head with very little over spread loose hair.
3. சுருட்டைத்தலை; curly hair head.
4. உருக்கைத்தலை; hour glass head.
5. பொடுகுத்தலை; scald head.
6. கோபுரத்தலை; tower head.
7. வழுக்கைத்தலை; bald head.
8. சொட்டைத்தலை; head with depression.
9. மாங்காய்த்தலை; tiny head.
10. பெருந்தலை; large sized head.
11. மொட்டைத்தலை; clean shaven head.
12. இரட்டைத்தலை; head of an oblong shaped head.

**தலை**[2] *talai,* பெ. (n.) **இடம்;** place. "நனந்தலை நல்லெயில்" *(புறநா. 15).*

*[தல் → தலை.]*

**தலை**[3] *talai,* பெ. (n.) **ஞாயிற்றின் கலை** *(பிங்.);* phase of the sun. "காலுந் தலையு மறிந்து கலந்திடில் சாலவும் நல்லது தான்" *(ஔவை. குறள், 266).*

இச்சொல் ஒகம் தொடர்பிலான குழூஉக்குறி.

**தலை**[4]**-தல்** *talai-,* 2 செ.கு.வி. (v.i.) 1. **மேன்மையாதல்;** to be exalted; to be superior. "தலைஇய நற்கருமஞ் செய்யுங்கால்" *(ஆசாரக். 93).* 2. **கூடுதல்;** to join, mix. "வளித்தலைஇய தீயும்" *(புறநா. 2: 4).* 3. **மழைபெய்தல்;** to rain. "எழிலி தலையாதாயினும்" *(பதிற்றுப். 20, 25).* 4. **மிகக் கொடுத்தல்;** to give away liberally. "கலந்தலைஇய" *(புறநா. 361).* 5. **பரத்தல்;** to spread. "மலிர்புனல் தலைத்தலைஇ" *(பரிபா. 6: 3).*

*[துல் → தல் → தலை-.]*

**தலைக்கட்டியமொழி** *talai-k-kaṭṭiya-moḻi,* பெ. (n.) **இருபத்தெட்டணிகளுள் ஒன்று** *(பிங்.);* one of 28 alaṅgārams *(திவா.).*

*[தலை + கட்டிய + மொழி]*

**தலைக்கட்டு**[1]**-தல்** *talai-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **நிறைவேறுதல்;** to succeed, to be accomplished. "இது ரக்ஷணமாய்த் தலைக் கட்டின வித்தனை" *(ஈடு. 4. 2: 1).* 2. **இறப்பு நிகழ்ச்சியின் இறுதியில் தலைப்பாகை கட்டுதல்** *(வின்.);* to perform the ceremony of putting on the turban at the end of the period of mourning.

*[தல் → தலை + கட்டு-.]*

**தலைக்கட்டு**[2]**-தல்** *talai-k-kaṭṭu-,* 5 செகுன்றாவி. (v.t.) *1.* **நிறைவேற்றுதல்;** to accomplish, complete, finish. 2. **ஆதரவாய் நடத்துதல்;** to treat kindly. தன்னை யடுத்தவர்களைத் தலைக் கட்ட வேணும் *(நெல்லை).* 3. **காப்பாற்றுதல்;** to protect. தருமம் தலைக்கட்டும் *(உ.வ.)* 4. **ஒப்புவித்தல்;** to entrust. இதை அவனிடம் தலைக்கட்ட வேண்டும் *(இ.வ.).*

*[தல் → தலை + கட்டு-.]*

**தலைக்கட்டு**[3] *talai-k-kaṭṭu,* பெ. (n.) 1. முடிவு; completion. "தலைக்கட்டின் றிக்கே" (ஈடு. 7.2:7). 2. குடும்பம்; family taken as a unit. இந்த ஊரில் முந்நூறு தலைக்கட்டு உண்டு (உ.வ.). 3. தலைப் பாகை; turban. "தலைக்கட்டினை யுடைய பாகர் புரவிகளைத் தேருடனே பிணித்துப் பண்ணினார்" (சீவக. 2213, உரை.) 4. நீத்தார் கடனிறுதியில் தலைப்பாகை கட்டும் நன்னிகழ்வு (வின்.); ceremony of putting on the turban at the end of the period of mourning. 5. வீட்டின் முதற்கட்டு; front quadrangle of a house.

க. தலெக்கட்டு; ம. தலக்(எ)கட்டு

*[தலை + கட்டு]*

தலையில் துணி முடிகட்டியும், கழுத்தில் தாலிகட்டியும், இறுதியில் கோடித் துணியைக் குறித்து வழங்கும் சொல்லாட்சி.

**தலைக்கட்டு** *talai-k-kaṭṭu,* பெ. (n.) பெற்றோரும், திருமணம் ஆகாத பிள்ளைகளும் கொண்ட குடும்பம்; family both the parents and unmarried children taken as a unit.

*[தலை + கட்டு.]*

**தலைக்கட்டுமாறி** *talai-k-kaṭṭu-māṟi,* பெ. (n.). ஏமாற்றுக்காரன்; cheat.

மறுவ. தலைகொட்டினமாறி.

*[தலைக்கட்டு + மாறு → மாறி - தலைக்கட்டுமாறி. கட்டுமாறி = வன்னெஞ்சக் கள்வர், பிறழ்ந்து பேசுபவர்]*

**தலைக்கட்டுவரி** *talai-k-kaṭṭu-vari,* பெ. (n.). குடும்பவரி ; tax paid by each family (செ.அக.).

மறுவ. ஆள் வரி, தலைவரி

*[தலைக்கட்டு + வரி (தலைக்கட்டு = குடும்பம்)]*

ஆடவன் ஒரு தலைக்கட்டாகக் கணிக்கப் படுகிறான். திருமணமாகாதவர் தந்தையின் தலைக்கட்டைச் சேர்ந்தவராவார்; திருமணமான பெண்கள், தத்தம் கணவர்தம் தலைக்கட்டில், இயல்பாய்ச் சேர்ந்துவிடுகின்றனர்.

**தலைக்கடுவன்** *talai-k-kaḍuvaṉ,* பெ. (n.). மண்டைத்தோலரிப்பு; irritation of the scalp (சா.அக.).

*[தலை + கடுவன்]*

**தலைக்கடை** *talai-k-kaḍai,* பெ. (n.) முதல் வாசல்; front entrance of a house, opp. to puḻai-k-kaḍai "தம்மகம் புகுதாதே கோயிற்றலைக்கடைச் சென்று" (இறை. பக். 117).

மறுவ. தலைவாசல்

*[தலை + கடை]*

**தலைக்கண்விருத்தி** *talai-k-kaṇ-virutti,* பெ. (n.) ஓகநிலையில் தாமரையிருக்கை (பத்மசானம்); one of the poses in yoga (சா.அக.).

*[தலைக்கண் + விருத்தி]*

**தலைக்கணை**[1] *talaikkaṇai,* பெ. (n.). தலையணை பார்க்க; see *talai-y-aṇai* (சா.அக.).

தெ. தலகட; ம. தலெக்கண.

*[தலையணை → தலைக்கணை = அணையாயிருந்து, தலையைத் தாங்குவது தலையணையாகும். தலை + கு + அணை]*

**தலைக்கணை**[2] *talai-k-kaṇai,* பெ. (n.) மொச்சைக்காய்; country bean (சா.அக.).

**தலைக்கணைமந்திரம்** *talai-k-kaṇai-mandiram,* பெ. (n.) படுக்கையறையில் மனைவி, முன் நடைமுறைக்கு எதிராக, கணவனை மாற்றப் பயன்படுத்தும் சொற்கள்; entising words of the wife, while the husband and wife are in the bed.

மறுவ. தலையணை மந்திரம்

*[தலை + கு + அணை + மந்திரம்]*

**தலைக்கயிறு**[1] *talai-k-kayiṟu,* பெ. (n.) மாட்டின் மூக்குக்கயிற்றிற் கட்டப்பட்டுக் கையிற் பிடிக்குங் கயிறு (இ.வ.); reins of a bullock.

*[தலை + கயிறு]*



**தலைக்கயிறு**[2] *talai-k-kayiṟu,* பெ. (n.) மாட்டின் கழுத்துக்கயிறு, மூக்கணாங்கயிறு ஆகியவற்றுடன் இணைக்கப்பட்ட கயிறு; rope used for tethering cow, etc., to a post. மாடு தலைக்கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடியது (உ.வ.)

**மறுவ.** தாம்புக்கயிறு, தாமணிக்கயிறு

*[தலை + கயிறு.]*

**தலைக்கருவி** *talai-k-karuvi,* பெ. (n.) தலைக் கவசம்; helmet (செ.அக.).

**மறுவ.** தலைச்சீரா.

*[தலை + கருவி]*

**தலைக்கரை** *talai-k-karai,* பெ. (n.) வயலை அடுத்துள்ள நிலம்; land adjoining a field. "இதன் றலைக்கரையும்"(T. A. S. i. 199).

*[தலை + கரை]*

**தலைக்கல்** *talai-k-kal,* பெ. (n.) 1. கட்டட வளைவின் முதன்மையானக் கல்; key stone. 2. ஏந்திரத்தின் மேற்பாகமான ஆட்டுக்கல்; upper mill-stone.

*[தலை + கல்]*

**தலைக்கவசம்** *talai-k-kavašam,* பெ. (n.) தலைக்காப்புக் கவிப்பு; helmet.

**மறுவ.** தலைக்கருவி

*[தலை + கவசம்]*



**தலைக்கழல்** *talai-k-kaḻal,* பெ. (n.) தலைக் கட்டி; kind of tumour in the head. (சா.அக.).

**மறுவ.** தலைத்தோற்கழலை, தலைக்கழலை

*[தலை + கழல்]*

**தலைக்கழி-தல்** *talai-k-kaḻi-,* செ.குவி. (v.i.) பிரிதல்; to depart. "கொண்டு தலைக் கழியினும்" (தொல். பொருள். 15).

*[தலை + கழிதல்]*

**தலைக்கறிச்சாறு** *talai-k-kaṟi-c-cāṟu,* பெ. (n.) ஆட்டின் தலைக்கறியை கொதிக்கவைத்து இறுத்த சாறு; essence from the flesh and bones of sheep's head (சா.அக.).

**மறுவ.** மண்டைச்சாறு

*[தலைக்கறி + சாறு]*

**தலைக்கனப்பு**[1] *talai-k-kaṉappu,* பெ. (n.). தலைக்கனம் பார்க்க; see *talai-k-kaṉam*

*[தலை + கனப்பு]*

**தலைக்கனப்பு**[2] *talai-k-kaṉappu,* பெ. (n.) நீர்க் கோவையால் ஏற்படும் தலைக்கனம்; heaviness of head from cold (சா.அக.).

**மறுவ.** தலைக்குத்து; மண்டையிடி; மண்டைக்கனம்; மண்டைவலி

*[தலை + கனப்பு]*

**தலைக்கனம்** *talai-k-kaṉam,* பெ. (n.) 1. தலை நோவு; heaviness of head. "பிரமேகந் தலைக்கனம்" (திருவாலவா. 27: 14). 2. தானுணர்வு, செருக்கு; head-weight, ego, self-conceit. பணம் வந்ததும், அவனுக்குத் தலைக்கனம் கூடிவிட்டது (உ.வ.).

**மறுவ.** தன்முனைப்பு, செருக்கு

*[தலை + கனம் , கனம் = இறுமாப்பு, அகந்தை, ஆணவம்]*

**தலைக்காஞ்சி** *talai-k-kāñji,* பெ. (n.) பகைவரை யழித்துப்பட்ட வீரனது தலையைப் புகழ்ந்து கூறும் புறத்துறை (பு.வெ. 4: 11); theme describing the head of a great warrior, who destroyed his foes but lost his life.

*[தலை + காஞ்சி]*

**தலைக்காநாள்** *talai-k-kā-nāḷ,* பெ. (n.) முந்தின நாள் (நாஞ்.); the previous day.

*[தலைக்கு + ஆ + நாள்]*

**தலைக்காய்**[1] *talai-k-kāy,* பெ. (n.) முதலிற் காய்த்த நற்காய் (இ. வ.); the first fruits of a tree.

மறுவ. முதலறுப்பு, முதற்காய்ப்பு, முதல் போகம், முதல் விளைச்சல்.

ஒ. நோ. தலை நாள் = முதல் நாள்.

*[தலை + காய்]*

**தலைக்காய்**[2] *talai-k-kāy,* பெ. (n.) தலைக்கழலை; a tumour of the head (சா.அக.).

*[தலை + காய்]*

**தலைக்காவல்** *talai-k-kāval,* பெ. (n.) முதன்மைக்காவல் (சூடா.); main guard. "தொண்டர் தலைக்காவல்" (திருக்களிற்றுப். 96).

மறுவ. முதற்காவல்

*[தலை + காவல்]*

**தலைக்காவேரி** *talai-k-kāvēri,* பெ. (n.) காவேரியின் பிறப்பிடம்; source of the Cāuvēry (செ.அக.).

*[தலை + காவேரி]*

**தலைக்கிறுகிறுப்பு** *talai-k-kiṟu-kiṟuppu,* பெ. (n.) *1.* பித்தமயக்கம்; dizziness, biliousness. *2.* தன் முனைப்பு (இ.வ.); arrogance. *3.* தலைநடுக்கம்; dizziness of the brain.

மறுவ. தலைமயக்கம், தலைச்சுற்று, தலை நடுக்கம்.

*[தலை + கிறுகிறுப்பு]*

**தலைக்கீட்டுயர்மொழி** *talai-k-kīṭṭuyar-moḻi,* பெ. (n.) தலைக்கட்டியமொழி பார்க்க; see *talai-k-kaṭṭiya-moḻi.*

*[தலைக்கிடு + உயர்மொழி]*

**தலைக்கீடு**[1] *talai-k-kīḍu,* பெ. (n.) காரணம்; cause. "இறைதரியாரெனு நிலைமை தலைக்கீடா" (பெரியபு. திருஞான. 61).

மறுவ. கரணியம்

*[தலை + இடு → ஈடு]*

**தலைக்கீடு**[2] *talai-k-kīḍu,* பெ. (n.) *1.* போலிக் காரணம்; pretext, alleged cause. "புள்ளோப்புத றலைக்கீடாக" (சிலப். 7: 9). *2.* தலைப்பாகை (சிலப். 26: 137); turban, warrior's head-dress.

மறுவ. சாக்குப்போக்கு

*[தலையிடு → தலைக்கீடு]*

**தலைக்குசரம்** *talai-k-kušaram,* பெ. (n.) தலையணை பார்க்க; see *talai-y-aṇai.*

மறுவ. தலைக்குயரம்

ம. தலெக்குயரம்

*[தலை + கு + உயரம் = தலைக்குயரம் → தலைக்குசரம்.]*

**தலைக்குட்டை** *talai-k-kuṭṭai,* பெ. (n.) தலைப்பாகை; turban (செ.அக.).

க. தலகுட்டெ; தெ. தலகுட்டா.

*[தலை + குட்டை]*

**தலைக்குடை** *talai-k-kuḍai,* பெ. (n.) தலையில் வைத்துக் கொள்ளும் ஓலைக்குடை (நாஞ்.); cover of plaited palmyra leaves used as a protection for the head against rain.

*[தலை + குடை]*



**தலைக்குடைச்சல்** *talai-k-kuḍaiccal,* பெ. (n.) தலைக்குள் குடைச்சல், வலி ஏற்படுத்தும் நோய்; boring pain in the region of the head (சா.அக.).

மறுவ. தலைநோவு, தலைக்குத்து

*[தலை + குடைச்சல்]*

**தலைக்குத்தண்ணீர்விடுதல்** *talaikku-t-taṇṇīr-viḍudal,* பெ. (n.) நோய் நீங்கியபின் தலையை நனைத்துக் குளித்தல்; take a bath on recovering from illness.

*[தலைக்கு + தண்ணீர் + விடுதல்]*

**தலைக்குத்து** *talai-k-kuttu,* பெ. (n.) தலைவலி; head-ache. "தலைக்குத்துத் தீர்வு சாத்தற்கு" (வள்ளுவமா. 11).

மறுவ. மண்டைக் குத்து தலைக்குடைச்சல்

*[தலை + குத்து]*

**தலைக்குமேலே** *talaikku-mēlē,* குவி.மு. (adv.) அளவுக்கு மிஞ்சி; exceeding all bounds, as price, anger, shame, pride, etc., தலைக்கு மேலே வெள்ளம் போனால் சாண் என்ன முழம் என்ன? (உ.வ.).

*[தலை + கு + மேலே]*

**தலைக்குயர்ந்தபிள்ளை** *talai-k-kuyarnda-piḷḷai,* பெ. (n.) ஆளாக வளர்ந்த பிள்ளை (இ.வ.); one who has attained maturity.

*[தலை + கு + உயர்ந்த + பிள்ளை]*

**தலைக்குலை**[1] *talai-k-kulai,* பெ. (n.) 1. முதற் குலை (வின்.); first-bunch of the season. 2. குலையின் நுனிப்பாகம் (யாழ்ப்.); tip of a bunch of fruit.

*[தலை + குலை → தலைக்கலை = முதற்கண் ஈனுங்குலை = குலையின் நுனிப்பகுதி]*

**தலைக்குலை**[2] *talai-k-kulai,* பெ. (n.) தென்னை, பனை முதலியவற்றிலிடும் முதற் குலை; the first bunch yielded by cocanut tree or palmyra tree (சா.அக.).

*[தலை + குலை (தலை = முதல்)]*

**தலைக்குழம்பு** *talai-k-kuḻambu,* பெ. (n.) தலையில் மட்டும் தேய்த்துக்கொள்ள உதவும் மருந்தெண்ணெய் (நாஞ்.); a medicinal oil used for applying on the head only.

*[தலை + குழம்பு]*

**தலைக்குற்றல்** *talai-k-kuṟṟal,* பெ. (n.) தலைக் குத்தல் பார்க்க; see *talai-k-kuttal.*

*[தலை + (குத்தல் →) குற்றல்]*

**தலைக்குறை**[1] *talai-k-kuṟai,* பெ. (n.) சொல்லின் முதற்குறை (சீவக. 365, உரை.); aphaeresis.

மறுவ. முதற்குறை

*[தலை + குறை. தலை = முதல்]*

**தலைக்குறை**[2] *talai-k-kuṟai,* பெ. (n.) 1. தலையின் வடிவத்திலேற்படும் குறைவு; diminution of head. 2. சிறியதலை; abnormally small head (சா.அக.).

*[தலை + குறை]*

**தலைக்குனிவு** *talai-k-kuṉivu,* பெ. (n.) மானக்கேடு; humiliation, loss of face.

*[தலை + குனிவு.]*

**தலைக்கூட்டு**[1]**-தல்** *talai-k-kūṭṭu-,* 5 செகுன்றாவி. (v.t.) 1. கூட்டுவித்தல்; to unite. 2. நிறை வேற்றுதல்; to accomplish an object. "தலைக்கூட் டுபாயமொடு" (பெருங். உஞ்சைக். 33:15).

*[தலை + கூட்டு-.]*

**தலைக்கூட்டு**[2] *talai-k-kūṭṭu-,* பெ. (n.) 1. வாணிபத்தின் தலைமைப் பங்கினர் (இ.வ.); principal partner in a business. 2. தலைக் கட்டிய மொழி (சூடா.) பார்க்க; see *talai-k-kaṭṭiya-moḻi.*

மறுவ. முதற்கூட்டு

*[தலைக்கூடு → தலைக்கூட்டு = இருவர் இணைந்து வணிகஞ் செய்யுங்கால், பணத்தை முதலீடு செய்பவர், தலைக் கூட்டாளி எனப்படுவர்.]*

**தலைக்கூடு-தல்** *talai-k-kūḍu-,* 5 செ.குவி. (v.i.) 1. ஒன்றுசேர்தல்; to assemble, join, come into association. "உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்" (குறள், 394). 2. நிறைவேறுதல்; to be accomplished, to succeed. காரியந் தலைக்கூடும் (உ.வ.).

*[தலை + கூடு]*

**தலைக்கூற்றல்** *talai-k-kūṟṟal,* பெ. (n.) தலை முழுக்காட்டல்; giving a head bath (சா.அக.).

*[தலைக்கு + ஊற்றல்]*

**தலைக்கெண்ணெய்** *talai-k-keṇṇey,* பெ. (n.) முப்பத்திரண்டறங்களுள், தலையில் தேய்த்துக்கொள்ள எண்ணெய் உதவும் அறச்செயல் (திவா.); distributing oil for the head, one of muppattiranḍaram.

*[தலை + கு + எண்ணெய்]*

**தலைக்கேறல்** *talai-k-kēṟal,* பெ. (n.) மண்டைக்கேறல்; ascending to the cerebral region as bile (சா.அக.).

*[தலை + கு + ஏறல்.]*

**தலைக்கேறு**[1]**-தல்** *talai-k-kēṟu-*, 5 செ.குவி. (v.i.) அளவிற்கதிகமாகுதல்; முதிர்தல்; to grow in intensity. அவனுக்கு செருக்கு தலைக்கேறி யிருக்கிறது (உ.வ.).

*[தலை + கு + ஏறு-.]*

**தலைக்கேறு**[2]**-தல்** *talai-k-kēṟu*, 5 செ.குன்றாவி. (v.t.) விரைவாக மிகுதல்; to increase in intensity.

*[தலை + கு + ஏறு-.]*

**தலைக்கை** *talai-k-kai*, பெ. (n.) தலைமை யானவ-ன்-ள்; most eminent person. "தூப்பாலமைச்சர் மேற்பாலறிவிற் றலைக்கை யாகிய . . . சாலங்காயன்" (பெருங். நரவாண. 7:83).

*[தலை + கை. முதன்மையானவன், செயற்பாடுடையவன்.]*

**தலைக்கைதா-தல் (தலைக்கை தருதல்)** *talai-k-kai-tā-*, 18 செ.குவி. (v.i.) கையால் தழுவி அன்பு காட்டுதல்; to show one's great love, as to a woman, by clasping in the arms. "எல்வளை மகளிர்க்குத் தலைக்கை தரூஉந்து" (புறநா. 24:9).

*[தலை + கை + தா-.]*

**தலைக்கொம்பு** *talai-k-kombu*, பெ. (n.) 1. பல்லக்குத்தண்டின் வளைந்த முன்பாகம்; the bent front of a palanquin pole. 2. பல்லக்குச் சுமப்போரின் முதற்றானம்; front place among palanquin - bearers. 3. சிறந்தவ-ன்-ள்; superior person.

*[தலை + கொம்பு = ஒரு செயலின், அல்லது பொருளின், முதன்மைச் சிறப்பினை, இச்சொல் உணர்த்திற்று எனலாம். இங்கு தலைக்கொம்பு என்பது சிறப்பாகப் பல்லக்கின் முதற்பகுதியையும், அதைச் சுமப்பவரின் முதன்மைத் தன்மையையுங் குறித்து நின்றது. பொருளின் முதற்பகுதிக் காகி வந்த இச் சொல், நாளடைவில் தலைமைப்பண்பு சான்ற பெரியோரையுங் குறித்து வழங்கலாயிற்று]*



**தலைக்கொள்(ளு)**[1]**-தல்** *talai-k-koḷ(ḷu)-*, 13 செ.குவி. (v.i.) 1. தலைக்கேறுதல்; to rise to the head, affect the head, as poison, bile, liquor. 2. மிகுதல்; to overflow, as a torrent, to grow in abundance. "காமச் செந்தீத் தலைக்கொளச் சாம்பினாளே" (சீவக. 1259). 3. இறத்தல்; to die. "தாப்புலி யொப்பத் தலைக்கொண்டான்" (பு. வெ. 2, 10).

*[தல் → தலை + கொள்(ளு)-,]*

**தலைக்கொள்(ளு)**[1]**-தல்** *talai-k-koḷ(ḷu)-*, 7 செ.குன்றாவி. (v.t.) 1. வெல்லுதல்; to overcome. 2. மேற்கொள்ளுதல்; to undertake. "வேந்தன் போர்தலைக்கொண்ட பிற்றை ஞான்று" (தொல். பொருள். 63). 3. கிட்டுதல்; to approach, go near. "கொள்ளைகொ ளாயந் தலைக் கொண்டார்" (பு.வெ.2: 7). 4. கைப்பற்றுதல்; to capture, take possession of. "தலைக் கொண்ட நிரை பெயர்த்தன்று" (பு. வெ. 2, 1, கொளு). 5. தொடங்குதல்; to commence. "சாறு தலைக்கொண்டென" (புறநா. 82). 6. கெடுத்தல்; to destroy. "ஒண்படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்" (புறநா. 15, 14).

*[தல் → தலை + கொள்(ளு)-.]*

**தலைக்கோடி** *talai-k-kōḍi*, பெ. (n.) மணமகனுக்கு முதல்திருவிழா நாளிற் கொடுக்கும் புதுவேட்டி (நாஞ்.); new clothes presented to the bridegroom on the day of the first festival.

*[தலை + கோடி]*

**தலைக்கோடை** *talai-k-kōḍai*, பெ. (n.) தலைச் சோழகம் (வின்.) பார்க்க; see *talai-c-cōlagam*.

*[தலை + கோடை]*

**தலைக்கோதை** *talai-k-kōdai*, பெ. (n.) நெற்றிக் கட்டு மாலை; wreath worn by women on their foreheads. "தார்கொண்டா டலைக் கோதை" (கலித். 66:15).

மறுவ. நெற்றிப்பட்டம், நெற்றிப்பொட்டு, தலைப்பட்டம், தலைப்பொட்டு

*[தலை + கோதை]*

**தலைக்கோல்** *talai-k-kōl,* பெ. (n.) **ஆடற் கணிகையர் பெறும் பட்டம்;** title given to a dancing - girl, who is an adept in her profession. "மலைப்பருஞ் சிறப்பிற் றலைக்கோ லரிவையும்" *(சிலப். 14: 154).*

*[தலை + கோல்]*



**தலைக்கோலம்** *talai-k-kōlam,* பெ. (n.) **மகளிர் தலையணிவகை** *(பிங்.);* a kind of head-ornament worn by women. "தலைக்கோலமாகிய முத்தும்" *(சீவக. 349, உரை.).*

*[தலை + கோலம்]*

தலைக்கோலம் - தலையிலுள்ள முடியினை அள்ளிச் சொருகி தலைக்கு மென்மேலும் எழிலூட்டுதற் பொருட்டு, செயற்கை முடியினைக் கொண்டு அழகுபடுத்துவது. மாழையால் (உலோகம்) அமைக்கப்பட்ட, தலைக்கோலங்கள் பற்றிய சிறப்புச் செய்தியினை, சிற்பச்செந்நூல் எழிலுற இயம்புகின்றது. இத் தலைக் கோலங்கள் அனைத்தும், செயற்கை வடிவங்கள் அன்று. கற்பனைப் படைப்புகள் என்று கருதி ஒதுக்கி விட முடியாது. அரச மகளிரும், செல்வப் பெண்டிரும் செய்து கொண்டவை. இதன் வகைகள் வருமாறு:-



1. சடை மகுடம்
2. சடைபார மகுடம்
3. சடை மண்டல மகுடம்
4. சடைப்பந்து மகுடம்
5. விரிசடை மகுடம்
6. சுடர்முடி மகுடம்
7. முடிக்கட்டு மகுடம்
8. நீர்க்குமிழ்ச் சடை மகுடம்
9. குந்தள மகுடம்
10. தமிழமகுடம் (தம்மில்ல மகுடம்)
11. சுருள்முடி மகுடம்
12. முடிக்கோல மகுடம்
13. கரண்ட மகுடம்

மேற்குறித்த 13 வகைக் கோலங்களும், பொதுவாக முடி என்றும் சிறப்பாக மகுடம் (மௌலி) என்றும், பெயர்பெறும். இத் தலைக் கோலங்கள் கலைநலம் மிளிருங் கவின்மிகு சிற்பங்களின் அருங்காட்சியகமாக விளங்கும் திருக்கோயில்களில் காணப்படும் கருவூல மென்றறிக.

**தலைக்கோலாசான்** *talai-k-kōl-āšāṉ,* பெ. (n.) **நட்டுவன்;** one who gives training in dancing, dancing - master. "தலைக்கோ லாசான் பின்னுள னாக" *(சிலப். 30: 20.).*

**மறுவ.** நட்டுவனார்.

*[தலைக்கோல் + ஆசான் (ஆசான் = ஆசிரியன்)]*

**தலைக்கோலி** *talai-k-kōli,* பெ. (n.) **தலைக் கோல் பட்டம் பெற்ற, ஆடி முதிர்ந்த கணிகை;** dancing woman who is an adept in her profession. "கூத்தன் நம்பிராட்டி யான மனஞ் செய்த பெருமாள் தலைக்கோலி" *(S.I.I. V. 145).*

*[தலை + கோலி. தலைக்கோல் பட்டம் பெற்றவள் தலைக்கோலி. ஆடற் கலையிலும், நட்டுவாங்கஞ் செய்வதிலும், தன்னிகரற்றுத் திகழும் ஆடற்கணிகை யரைக் குறிக்கப் பொதுவாக வழங்கிய இச் சொல், அரசர்க்கரசன் இராசராசன் காலத்தில் சிறப்பாகத் திருக்கோயிலில், கூத்தப்பெருமான் திருமுன்பு, திருநட்டம் பயிலும், ஆடல் அணங்குளைக் குறித்து வழங்கிய தெனலாம். இளங்கோவடிகள் காலத்தே, இச் சொல் வழக்கூன்றி இருந்தது. "மாந்தளிர் மேனி மாதவி மடந்தை" தலைக்கோற் பட்டம் பெற்றவள் என்பது சிலப்பதிகாரம் காட்டும் வரலாற்றுண்மையாகும்.]*

## தலைக்கோல வகைகள்



சடை மகுடம்



சடைபார மகுடம்



சடைமண்டல மகுடம்



சடைப் பந்து



விரிசடை மகுடம்

## தலைக்கோல வகைகள்



சுடர்முடி மகுடம்



முடிக்கட்டு மகுடம்



குந்தள மகுடம்



நீர்குமிழ்ச் சடை



தமிழ மகுடம்



முடிக்கோல மகுடம்



சுருள்முடி மகுடம்



சுரண்ட மகுடம்

**தலைக்கோழி** *talai-k-kōḻi,* பெ. (n.) வைகறையில் முதலிற் கூவுங்கோழி; cock that crows first in the early morning. *தலைக்கோழி கூவும் நேரம்.*

மறுவ. சாமக்கோழி

*[தலை + கோழி]*



**தலைக்கோற்றானம்** *talai-k-kōṟṟāṉam,* பெ. (n.) நாடக அரங்கு; stage for dancing. *"தலைக்கோற் றானத்துச் சாபநீங்கிய.. மாதவி" (சிலப்.3:3அரும்.).*

*[தலைக்கோல் + தானம்]*

**தலைகட்டு-தல்** *talai-kaṭṭu-,* 5 செ.குவி. (v.i.) *1.* மயிர்முடித்தல்; to dress the hair. *2.* விளிம்பு கட்டுதல் (வின்.); to make selvage for a mat, a cloth, etc., *3.* கணக்குப்புத்தகம் முதலியவற்றில் தலைப்பெழுதுதல் (இ.வ.); to write headings, as in books, accounts.

*[தலை + கட்டு-.]*

**தலைகவிழ்-தல்** *talai-kaviḻ-,* 2 செ.குவி. (v.i.) *1.* நாணம் முதலியவற்றால் தலைசாய்த்தல்; to hang down one's head, as through shame, discomfiture, etc., *2.* மேல்கீழாதல்; to be turned upside down, topsy - turvy. *3.* மானக் கேட்டால் தலைகவிழ்தல்; to bow down due to shame. *மகன் செய்த பிழைக்காகத் தகப்பன் தலை கவிழ்ந்தான் (உ.வ.).* *4.* செறுக்குருதல்; to be proud. *அந்தப் பணிஉயர்வு வந்ததும் தலை கவிழ்ந்திருக்கிறான் (உ.வ.).*

*[தலை + கவிழ்-.]*

**தலைகழி-த்தல்** *talai-kaḻi-,* 4 செகுன்றாவி. (v.t.) *1.* கடமை முதலியவற்றைச் செய்துதீர்த்தல்; to discharge fully, as one's duty, debt. *"கழிந்தோர்க் கொத்தகடந் தலைகழிக்கென" (பெருங். வத்தவ. 1, 29).* *2.* தலைமுடிகழித்தல் (இ.வ.); to get one's head shaved.

*[தலை + கழி-.]*

**தலைகாட்டல்** *talai-kāṭṭal,* தொ. பெ. (vbl.n.) நோய்க்குறி காட்டுதல்; showing symtoms as diseases *(சா.அக.).*

*[தலை + காட்டல்.]*

**தலைகாட்டாதோடல்** *talai-kāṭṭādōḍal,* பெ. (n.). முழுதும் நீங்கல்; being cured radically as diseases *(சா.அக.).*

*[தலை + காட்டாது + ஓடல்.]*

**தலைகாட்டு-தல்** *talai-kaṭṭu-,* 5 செ.குவி. (v.i.) *1.* சிறிது நேரம் வந்து தங்கியிருத்தல்; to attend for a short time, give attendance. *திருமண வரங்கு வந்து தலை காட்டி விட்டுச் சென்றார் (உ.வ.).* *2.* பலருமறிய வெளி வருதல்; to appear in public. *அந்த அவமானத்தால் தலைகாட்டக் கூடவில்லை (உ.வ.).* *3.* நன்னிலைமைக்கு வரத் தொடங்குதல் (இ.வ.); to rise to prominence.

மறுவ. தலை தூக்குதல்

*[தலை + காட்டு-.]*

**தலைகாண்(ணு)-தல்** *talai-kāṇ(ṇu)-,* 16 செகுன்றாவி. (v.t.) காத்தல்; to patronize, protect, maintain. *"தண்டமிழ்நூல் கலங்காமற் றலைகண்டானே" (பாரத. சிறப்புப். 18).*

*[தலை + காண்-.]*

**தலைகிழக்கா-தல்** *talai-kiḻakkā-,* 6 செ.குவி. (v.i.) *1.* அழிவடைதல் (குறள், 488); to perish. *"இறுவரைக் காணிற் கிழக்காந் தலை" (குறள், 488).* *2.* தலைகீழாக மாறுதல்; to reversal of position. *3.* மீண்டும் தோன்றுதல்; to reappear.

*[தலை + கிழக்கு + ஆ-.]*

**தலைகீழ்த்தொங்கி** *talai-kīḻ-t-toṅgi,* பெ. (n.) வௌவால்; bat.

மறுவ. பாலூட்டி

*[தலைகீழ் + தொங்கி = குட்டிப்போட்டுப் பாலூட்டுவதில் விலங்கு போன்றும், பறக்கும் இயல்புள்ள வௌவாலைத் தலைகீழ்த் தொங்கும் பறவை என்றும் சா.அக. கூறும்..]*

**தலைகீழாய்** *talai-kīḻ-āy,* குவி.எ. (adv.) 1. நேர் நிலை தவறி; upside, down. *அவன் நிலைமை தலைகீழாய் மாறிவிட்டது. (உ.வ.).* 2. முற்றவும் நன்றாய் *(நுனி முதல் அடி வரை);* perfectly, through and through, as from top to bottom. *தலைகீழாய்ப் படித்திருக்கிறான் (உ. வ.).*

*[தலை + கீழ் + ஆய்]*

**தலைகீழாய்நில்-தல் (தலைகீழாய்நிற்றல்)** *talai-kiḻāy-nil-,* 14 செ.கு.வி. (v.i) 1. மிகுதியாகத் இறுமாப்புக் கொள்ளுதல்; to be arrogant. 2. பெருமுயற்சியெடுத்தல் (இவ.); to take pains. *தொட்ட காரியத்தை முடிப்பதில் அவன் தலைகீழாய் நிற்கின்றான். நீ தலைகீழாய் நின்றாலும் அந்தக் கல்லூரியில் இடம் வாங்க முடியாது (உ.வ.).*

*[தலை + கீழாய் + நில்-.]*

**தலைகுப்புற** *talai-kuppuṟa,* குவி.எ. (adv.) தலை அல்லது முன்பகுதி முதலில் விழும் முறையில் நிற்றல்; head first down; headlong. *பேருந்து பள்ளத்தாக்கில் தலைகுப்புற விழுந்து உருண்டது (உ.வ.).*

*[தலை + குப்புற.]*

**தலைகுலை-தல்** *talai-kulai-,* 2 செ.கு.வி. (v.i.) நிலைகெடுதல்; to be routed. "*உளைந்தமரர். . . தலைகுலைந்தோடி" (சேதுபு. தேவிபு. 15).*

மறுவ. நிலைகுலைதல், தட்டழி-தல்

*[தலை + குலை-.]*

**தலைகுலுக்கம்** *talai-kulukkam,* பெ. (n.) தலைநடுக்கம் பார்க்க; see *talai-naḍukkam* *(சா.அக.).*

*[தலை + குலுக்கம்]*

**தலைகுனி¹-தல்** *talai-kuṉi-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. தலைவணங்குதல்; to bow one's head in respect.

*[தலை + குனி-.]*

**தலைகுனி²-தல்** *talai-kuṉi-,* 2 செ.கு.வி (v.i.) நாணம் முதலியவற்றால் தலை கவிழ்ந் திருத்தல்; to bow down due to modesty, shyness. *மணமகள் நாணித் தலைகுனிதல்.* 3. மானக் கேட்டால் தலைகுனிதல்; to bow down due to shame. *திருட்டுப் பழி வந்து விட்டதால் அவன் தலைகுனிந்து நடக்கிறான் (உ.வ.).*

*[தலை + குனி-.]*

**தலைகெட்டநூல்** *talai-keṭṭa-nūl,* பெ. (n.) நுனி அகப்படாத நூல்; tangle thread. *"தலைகெட்ட நூலதுபோல் தட்டழிந்தாய் நெஞ்சமே" (பட்டினத். நெஞ்சொடு. 21).*

மறுவ. சிக்குநூல்

*[தலை + கெடு + நூல்]*

**தலைகெட்டோடு-தல்** *talai-keṭṭu-ōḍu-,* 5 செ.கு.வி. (v.i.) முற்றும் நோய்நீங்குதல்; to be radically cure from a disease *(சா.அக.).*

*[தலைகெட்டு + ஓடு-.]*

**தலைகொட்டினமாறி** *talai-koṭṭiṉa-māṟi,* பெ. (n.) தலைக்கட்டுமாறி பார்க்க; see *talai-k-kaṭṭu-māṟi (சா.அக.).*

தெ. தலகொட்லமாறி

*[தலை + கொட்டினமாறி]*

**தலைகொடு-த்தல்** *talai-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. செயலை முடிக்க முழுப்பொறுப்பேற்றல்; to undertake entire responsibility. 2. பிறர் செயல்களில் தேவை நேராதபோதும், இடைப் புகுதல்; to interfere unnecessarily in another's affairs. 3. பிறரது அல்லல் காலங்களில், தன் உயிர்பொருள்களின் கேடுகளை நோக்காமல், உதவிபுரிதல்; to help another in an emergency even at one's own risk.

மறுவ. தோள்கொடுத்தல்

*[தலை + கொடு-.]*

**தலைகொழு-த்தல்** *talai-koḻu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. செருக்குடனிருத்தல்; to be haughty; to have a swelled head.

*[தலை + கொழு-.]*

**தலைச்சங்கம்** *talai-c-caṅgam,* பெ. (n.) கடல் கொள்ளப்பட்ட தென்மதுரையில் இருந்ததாகச் சொல்லப்படும், முதலாந் தமிழ்ச்சங்கம் *(இறை. 1, உரை.);* the earliest Šaṅgam, first of the three ancient Tamiḻ academies, said to have flourished at South Madurai now under sea.

மறுவ. முதற்சங்கம்.

*[தலை + சங்கம் = தலைச்சங்கம். தன்னேரில்லாத் தமிழ்மொழியின் தலைச் சங்கம், குமரிக்கண்டத்திற்குத் தென்பால்*

கடல்கொண்ட, தென்மதுரையிலிருந்தது. இச்சங்கத்தைக் காய்சினவழுதி முதல் கடுங்கோன்மாறன் ஈறாகவுள்ள, எண்பத்தொன்பது பாண்டிய மன்னர்கள் வளர்த்தனர். ஏழு பாண்டிய மன்னர்கள் அவைக்களப் புலவர்களாக வீற்றிருந்தனர். மேலுமிச் சங்கத்தில் சிவமூர்த்தி, குமரவேள், அகத்தியர் முரிஞ்சியூர் முடிநாகராயர் முதலான 549 புலவர்கள் தமிழாய்ந்தனர். இவர்களை யுள்ளிட்ட 4449 புலவர்கள், பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை போன்ற நூல்களை இயற்றினர். அச்சங்கம், 4440 ஆண்டுகள் செயல்பட்டதென்றும், அகத்தியமே இலக்கண நூலாகப் பின்பற்றப்பற்றதென்றும், இறையனார் களவியலுரை, இயம்புகின்றது.]

**தலைச்சம்மாடு** *talai-c-cammāḍu*, பெ. (n.) பொறுப்பு; responsibility. "இப் பொன்னுக்குத் தலைச்சம்மாடாய் ஒரு நொந்தாவிளக் கெரிப்போம்" (*S.I.I.V. 238*).

*[தலை + சும்மாடு → சம்மாடு]*

**தலைச்சவரம்** *talai-c-cavaram*, பெ. (n.) தலை முழுதும் மழிக்கை; shaving of the head. "தலைச்சவரம் பண்ணுவதேன்?"

*[தலை + சவரம்.]*

**தலைச்சன்** *talaiccaṉ*, பெ. (n.) முதற்பிள்ளை (இ.வ.); first born. தலைச்சன் பிறந்து பத்தாண்டிற்குப் பின்னரே, அடுத்தவன் பிறந்தான். தலைச்சன் பிள்ளை. பெண்தான் உனக்குத் தலைச்சனா? (உ.வ.).

**மறுவ.** தலைப்பிள்ளை, மூத்தப்பிள்ளை, முதற்பிள்ளை, தலைக்குழந்தை

*[தலை → தலைச்சன். 'தலை' யென்னுஞ் சொல் 'முதல்', "மூத்த" என்னும், பொருளது; "அன்" ஆண் பாலொருமை ஈறு]*

**தலைச்சன்பிள்ளை** *talaiccaṉ-piḷḷai*, பெ. (n.) தலைச்சன் பார்க்க; see *talaiccaṉ*.

**தலைச்சன்பிள்ளைத்தாச்சி** *talaiccaṉ-piḷḷai-t-tācci*, பெ. (n.) முதற்கருப்பமுற்ற பெண்; female being pregnant for the first time (சா.அக.).

*[தலைச்சன் + பிள்ளை + (தாய்ச்சி→) தாச்சி]*

**தலைச்சாத்து** *talai-c-cāttu*, பெ. (n.) தலைப் பாகை; head-dress, turban. "மென்றலைச் சாத்தணிந்து" (*பிரபுலிங். பிரபுதே. 7*).

*[தலை + (சார்த்து →) சாத்து. தலையை யொட்டிச் சார்த்திக் கட்டப்படுவது, தலைச்சாத்தாகும்.]*

**தலைச்சாமான்** *talai-c-cāmāṉ*, பெ. (n.) இடப் பக்கம் மதிப்பிறை போலவும், வலப்பக்கம் சூரியன் போலவும் உள்ளதும், நடுக்கோடு வகிர்மேற் செல்வதுமான, மகளிர் தலையணி வகை; set of jewels consisting of a central piece lying along the parting of the hair, a left limb in the form of the cresent moon and a right limb in the form of the sun (செ.அக.).

**மறுவ.** தலைச்சுட்டி, தலைக்கோலம்

*[தலை + சாமான்]*

**தலைச்சாவகன்** *talai-c-cāvagaṉ*, பெ. (n.) முதல் மாணாக்கன்; chief pupil. "பெரியோன்றனக்குத் தலைச்சாவகனாய்" (*மணிமே. 21: 179*).

**மறுவ.** தலைமாணாக்கன்.

*[தலை + சாவகன்]*

**தலைச்சாவிவெட்டு-தல்** *talai-c-cāvi-veṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.i.) பயிர் மதர்த்துப் போகாதபடி நுனியை வெட்டுதல்; to poll the plants preventing overgrowth. "செருக்குக்குத் தலைச்சாவிவெட்டி யாடினபடி" (*ஈடு. 2. 7: 4*).

**மறுவ.** வெண்ஞ்சாவி வெட்டுதல் , பூட்டை வெட்டுதல்

*[தலைச்சாவி + வெட்டு-. சாவி = பயிரின் உள்ளீடில்லாப் பதரான பகுதி]*

**தலைச்சி**[1] *talaicci*, பெ. (n.) தலைமூத்த மகள்; eldest daughter, first-born daughter. தலைச்சனுக்கும் தலைச்சிக்கும் திருமணம் செய்தால் ஆகாது (உ. வ.).

*[தலை → தலைச்சி. தலை = முதல், 'மூத்த' என்னும் பொருளது. 'இ' பெண்பால் ஒருமையீறு]*

**தலைச்சி**[2] *talaicci*, பெ. (n.) பத்துவகை நாடியுளொன்றான சங்கினிநாடி; one of the ten tubular vessels in the region of the heart, said to raise from (šuḻi-muṉai) the spot between the eye-brows and terminate ingenitalibus etano.

**தலைச்சிரங்கு** *talai-c-cirangu,* பெ. (n.) தலையில் வரும் புண்; eczema, scald head, Taenia capitis.

*[தலை + சிரங்கு. சிரங்கு = புண்]*

**தலைச்சிற-த்தல்** *talai-c-ciṟa-,* 3 செ.குவி. (v.i.) 1. மிகப்பெருகுதல்; to increase. "நன்முனிவ ரின்பந் தலைச்சிறப்ப" (திவ். திருவாய். 10:7:5). 2. மேன்மையுறுதல்; to become prominent. "தானநகர்கள் தலைச்சிறந்து" (திவ். திருவாய். 8. 6: 9).

மறுவ. தலை சிறத்தல்.

யாப்பிற்காகச் சகர ஒற்று மிகுந்தது, எனக் கொள்க. இது முற்காலவழக்கு. தற்காலத்தில் ஒற்றில்லாமல் பேசுவதும், எழுவதும் வழக்கமாகிவிட்டது.

*[தலை + சிற-,]*

**தலைச்சீரன்** *talai-c-cīraṉ,* பெ. (n.) கூகைநீறு; Malabar arrowroot flour (சா.அக.).

**தலைச்சீரா** *talai-c-cīrā,* பெ. (n.) தலைக் காப்பணி (சூடா.); helmet, head-piece.

*[தலை + சீரா]*

**தலைச்சீலை** *talai-c-cīlai,* பெ. (n.) 1. தலைப் பாகை; turban, head-dress. 2. மேலாடை (நாஞ்.); upper cloth. பஞ்சாபியரின் தலைச்சீலை 16 முழம் நீளம்.

மறுவ. தலைச்சாத்து

*[தலை + சீலை]*

**தலைச்சுட்டி** *talai-c-cuṭṭi,* பெ. (n.) தலையில் அணியப்பெறும் பொன்னணி; an ornament worn on the forehead by women and children.

மறுவ. நெற்றிச்சுட்டி, தலையணி, தலைச் சாமான்

*[தலை + சுட்டி]*



**தலைச்சுண்டு** *talai-c-cuṇḍu,* பெ. (n.) பொடுகு; scurvy head, dandruff (செ.அக.).

*[தலை + சுண்டு]*

**தலைச்சுமடு** *talai-c-cumaḍu,* பெ. (n.) தலைச் சுமை பார்க்க; see *talai-c-cumai.*

*[தலை + (சும்மாடு →) சுமடு. ஒருகா. சுமைமேடு → சும்மாடு → சுமாடு → சுமடு. சுமையைத் தாங்கும் சும்மாடு மேடே சுமடு என்றறிக.]*



**தலைச்சுமை** *talai-c-cumai,* பெ. (n.) 1. பாரம்; load. 2. தலையில் தூக்கிச்செல்லும் பாரம்; head-load.

மறுவ. தலைப்பாரம்.

*[தலை + சுமை]*

**தலைச்சுருணி** *talai-c-curuṇi,* பெ. (n.) தலைச்சுருளி பார்க்க; see *talai-c-curuḷi.*

*[தலை + சுருணி]*

**தலைச்சுருள்** *talai-c-curuḷ,* பெ. (n.) தலைச் சுருளி பார்க்க; see *talai-c-curuḷi* (சா.அக.).

*[தலை + சுருள்]*

**தலைச்சுருள்வல்லி** *talai-c-curuḷ-valli,* பெ. (n.) தலைச்சுருள்வள்ளி பார்க்க; see *talai-c-curuḷ-vaḷḷi.*

*[தலைச்சுருள்வள்ளி → தலைச்சுருள்வல்லி]*

**தலைச்சுருள்வள்ளி** *talai-c-curuḷ-vaḷḷi,* பெ. (n.) ஈசுரமூலி (பிங்.); a herb. Indian birth - wort.

*[தலைச்சுருள் + வள்ளி]*

**தலைச்சுருளி**[1] *talai-c-curuḷi,* பெ. (n.) தலைச் சுருள்வள்ளி (பதார்த்த. 281), ஈசுரமூலி; a herb.

*[தலைச்சுருள் → தலைச்சுருளி]*

**தலைச்சுருளி**[2] *talai-c-curuḷi,* பெ. (n.) 1. பெரு மருந்துப்பூடு; great medicine Indian birth wort. 2. சீந்தில்; moon-creeper. 3. கலப்பைக்கிழங்கு; plough root (சா.அக.).

மறுவ. தலைச்சூடுவல்லி, தலைச்சுருணி, தலைச்சுருள்வள்ளி

*[தலை + சுருளி]*

**தலைச்சுருளிவள்ளி** *talai-c-curuḷi-vaḷḷi,* பெ. (n.) கருடக்கொடி; braminy kit-creeper (சா.அக.).

*[தலைச்சுருளி + வள்ளி]*

**தலைச்சுழல்**[1] *talai-c-cuḻal,* பெ. (n.) தலைச் சுற்றல் பார்க்க; see *talai-c-cuṟṟal.*

*[தலை + சுழல்]*

**தலைச்சுழல்** *talai-c-cuḻal,* பெ. (n.) தலைச் சுழற்சி பார்க்க; see *talai-c-cuḻaṟci.*

*[தலை + சுழல்]*

**தலைச்சுழல்மூலி** *talai-c-cuḻal-mūli,* பெ. (n.) கஞ்சாங்கோரை; white-basil (சா.அக.).

*[தலைச்சுழல் + மூலி]*

**தலைச்சுழற்சி** *talai-c-cuḻaṟci,* பெ. (n.) 1. தலைச்சுற்றல் (வின்.) பார்க்க; see *talai-c-cuṟṟal.* 2. தலைமயக்கம்; giddiness.

மறுவ. தலைக் கிறுகிறுப்பு

*[தலைச்சுழல் → தலைச்சுழற்சி. ஒ.நோ. அழல் → அழற்சி]*

**தலைச்சுழி** *talai-c-cuḻi,* பெ. (n.) தலையெழுத்து (இ.வ.); fate.

*[தலை + சுழி]*

**தலைச்சுற்றல்** *talai-c-cuṟṟal,* பெ. (n.) 1. தலைக் கிறுகிறுப்பு; vertigo, giddiness, dizziness. 2. உள்ளம் குழம்பிப்போய், முடிவெடுக்க முடியாமல் இருத்தல்; confused stage of mind, not possible to take a decision. 3. ஆட்டுநோய் வகை (இ.வ.); turnsick, staggers, a disease of sheep.

*[தலை + (சுற்று →) சுற்றல்]*

**தலைச்சுற்று** *talai-c-cuṟṟu,* பெ. (n.) 1. தலைச் சுற்றல் பார்க்க; see *talai-c-cuṟṟal.* 2. மரத்தின் அடிச்சுற்றளவு (யாழ்ப்.); circumference of the buttend of a tree.

*[தலை + சுற்று]*

**தலைச்சூடி** *talai-c-cūḍi,* பெ. (n.) கொன்றை; cassia tree.

*[தலை + சூடி]*

**தலைச்சூடுவல்லி** *talai-c-cūḍu-valli,* பெ. (n.) தலைச்சுருளி பார்க்க; see *talai-c-curuḷi* (சா.அக.).

*[தலைச்சூடு + வல்லி]*

**தலைச்சூல்** *talai-c-cūl,* பெ. (n.) முதன் முதலிற் கொள்ளும் கருப்பம்; first pregnancy.

மறுவ. முதற்சூல், தலைக்கருப்பம்

*[தலை + சூல்]*

**தலைச்சூலை** *talai-c-cūlai,* பெ. (n.) கடுந்தலைவலி; severe head-ache (சா.அக.).

மறுவ. தலைக்குத்து, தலைவலி

*[தலை + சூலை]*

**தலைச்செல்(லு)-தல்** *talai-c-cel(lu-),* 7 செ.குன்றாவி. (v.t.) 1. முற்சென்று வரவேற்றல்; கூடுதல்; to go and meet in advance. "தன்னொப்பாரை யில்லானைத் தலைச்சென்று" (சீவக. 1365). 2. எதிர்த்துச்செல்லுதல்; to attack. "பகைவர்பணிவிட நோக்கி . . . தலைச்செல்லார்" (நாலடி, 241).

*[தலை + செல்லு-. பெரியோர், நல்லோர்களை, எதிர்கொள்ளும்போது, இருந்த இடத்திலிருந்து சற்று முன்னேறி வரவேற்பது மரபு. அதனால் தலைச் செல்லுதல், என்று வழங்கலாயிற்று.]*

**தலைச்செறி** *talai-c-ceṟi,* பெ. (n.) தலைச்சிரன் பார்க்க; see *talai-c-ciraṉ.*

**தலைச்சேர்வை** *talai-c-cērvai,* பெ. (n.) ஒரு செய்தியின் தலைப்பெயர் (வின்.); title, heading.

மறுவ. தலைப்பு

*[தலை + சேர்வை]*

**தலைச்சேரிப்பட்டை** *talai-c-cēri-p-paṭṭai,* பெ. (n.) கசப்புவெப்பாலை; tellicherry bark Nerium-antidum.

*[தலைச்சேரி + பட்டை]*

**தலைச்சொறி** *talai-šoṟi*, பெ. (n.) 1. தலையில் ஏற்படும் சொறி; scurf which forms on the head attended with itching. 2. தலைச்சுண்டு; dandruff.

*[தலை + சொறி]*

**தலைச்சோடு** *talai-c-cōḍu*, பெ. (n.) தலைச்சீரா (வின்.) தலைப்பாகை; helmet.

*[தலை + சோடு]*

**தலைச்சோழகம்** *talai-c-cōḻagam*, பெ. (n.) தென்மேல்காற்றின் தொடக்கம் (வின்.); the setting-in of the south - west monsoon (செ.அக.).

*[தலை + சோழகம் (சோழகம் = தென்காற்று)]*

**தலைச்சோறு** *talai-c-cōṟu*, பெ. (n.) மூளை (நாஞ்.); brain.

*[தலை + சோறு]*

**தலைசாமான்** *talai-šāmāṉ*, பெ. (n.) தலைச்சாமான் (இ.வ.) பார்க்க; see *talai-c-cāmāṉ*.

*[தலைச்சாமான் → தலைசாமான்]*

**தலைசாய்¹-தல்** *talai-šāy-*, 1 செ.கு.வி. (v.i.) 1. நாணுதல்; to bow one's head, as in shame, modesty, etc., "ஏதிலார் தலைசாய யானுய்யு மாறுரையாய்" (இலக். வி. 738, உரை, பக். 751). 2. இறத்தல் (இ.வ.); to die. 3. உறங்குதல்; to sleep.

*[தலை + சாய்-.]*

**தலைசாய்²-த்தல்** *talai-šāy-*, 4 செ.கு.வி. (v.i.) 1. தலைசாய்¹ பார்க்க; see *talai-šāy*- "தம் புகழ் கேட்டார்போற் றலைசாய்த்து மரநந்த" (கலித். 119). 2. வணங்குதல்; to bow one's head in reverence. "முனி திருக்கழலில்.... தலைசாய்த்து" (பாரத. நாடுகரந். 18). 3. கீழேபடுத்தல்; to lie down in rest. தலைசாய்க்க நேரமில்லை (உ.வ.).

*[தலை + சாய்-.]*

**தலைசாய்ந்தவளி** *talai-šāynda-vaḷi*, பெ. (n.) 1. தலையை ஒரு பக்கமாகச் சாய்க்க வைக்கும் வளி; a disease causing the head to incline on one side. 2. வலிப்பினால் தலைசாய்க்க வைக்கும் நோய்; a kind of fits causing contortion of the head (சா.அக.).

*[தலைசாய்ந்த + வளி]*

**தலைசிற-த்தல்** *talai-šiṟa-*, 3 செ.கு.வி. (v.i.) தலைச்சிற பார்க்க; see *talai-c-ciṟa-*.

*[தலை + சிற-. ஒற்றுடன் புணரும் முற்கால வழக்கம் இன்றில்லை]*

**தலைசிறந்த** *talai-šiṟanda-*, கு.பெ.எ. (adj.) சிறப்பு வாய்ந்த; be outstanding.

*[தலை + சிறந்த]*

**தலைசீய்¹-த்தல்** *talai-šīy-*, 4 செ.குன்றாவி. (v.t.) முற்றுந்துடைத்தல், துப்புரவுசெய்தல்; to sweep completely.

*[தலை + சீய்-.]*

**தலைசீய்²-த்தல்** *talai-šīy-*, 4 செ.கு.வி. (v.i.) வருந்துதல்; to grieve. "நாம் மறுத்துப் போந்தோம் என்று ... தலைசீய்க்கும் விஷயத்தை" (ஈடு. 4. 1:3).

*[தலை + சீய்-.]*

**தலைசீவுதல்** *talai-šīvu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. தலைமுடி வாருதல்; to comb the hair. 2. தலையைத் துண்டித்துக் கொலைசெய்தல்; to murder by cutting the head. தன் மனைவியின் நடத்தையில் ஐயங்கொண்ட கணவன், அவள் தலையைச் சீவிக் கையில் எடுத்து சென்று காவல் நிலையத்தில் கொடுவாளுடன் சரணடைந்தான். (உ.வ.).

மறுவ. தலைவாங்குதல்

*[தலை + சீவு]*

தருமபுரி மாவட்டம் பஞ்சப்பள்ளி அணையின் கீழ்ப்பகுதியில் உள்ள குடியிருப்புகளின் அருகில், ஒரு வீரன் இடதுகையில் வெட்டப்பட்ட தலக்குடுமியைப் பிடித்துக் கொண்டு, வலக்கையில் வாளொடும் நடப்பது போன்ற, புடைப்புப்பலகைக் கற்சிற்பம் உள்ளது. அந்த நடுகல்லில் எழுத்து எதுவும் இல்லை.

**தலைசுருளி** *talai-šuruḷi-*, பெ. (n.) பூடுவகை (யாழ்.அக.); a herb.

**தலைசுழி** *talai-šuḻi*, பெ. (n.) 1. விதி; ஊழ்; fate. 2. மண்டையோடுகளின் இணைப்பு; joints of parts of skull with one another (lit.).

மறுவ. தலையெழுத்து, தலைவிதி

*[தலை + சுழி = தலைச்சுழி ; பல துண்டங்களாகவுள்ள மண்டையோட்டின் பொருத்துவாயின் இணைப்புப்பகுதியில், நெளிவுசுழிவுகள், காணப்படுவது இயல்பேயாகும்; அவை சுழி சுழியாகத் தென்படுவதால், தலைச்சுழி எனப் பெயர் பெற்றது. யாவராலுங் கணிக்கவியலாத எதிர்காலம், இச்சுழியின் கண்ணே பொதிந்து இருக்கின்றதெனும், மூட நம்பிக்கை, மக்களிடையே தொன்று தொட்டுப் பல்கிப்பெருகியுள்ளது. அவ் வரைவுகளை விதியின் குறியீடென்று விதந்து பேசலாயினர். இக் கோடுகள், கிறுக்கெழுத்துப் போலிருப்பதால், "மாந்தர்தம் தலையெழுத்து" என்று பேசத் தலைப்பட்டனர்]*

**தலைசுற்றியாடு-தல்** *talai-šuṟṟi-y-āḍu-*, 5 செ.கு.வி. (v.i.) **இறுமாப்புக் கொள்ளுதல்;** to have one's head turned, to exhibit arrogance. "பூமியிடைபோந்து தலைசுற்றியாடும்" *(தாயு. எங்குநிறை. 4).*

*[தலை + சுற்றி + ஆடு-.]*

**தலைசூடுவல்லி** *talai-šūḍu-valli*, பெ. (n.) ஈசுரமூலி *(மலை.);* a herb; Indian birth-wort.

*[தலை + சூடுவல்லி]*

**தலைசெய்-தல்** *talai-šey-*, 1 செ.கு.வி. (v.i.) *1.* **தலைமை ஏற்றல்;** to take the lead. "தலை செயுமென்னை" *(தமிழ்நா. 206).* **2. தலை யெடுத்தல்;** to grow, flourish, as a plant. "கானந் தலைசெயக் காப்பார் குழறோன்ற" *(திணைமாலை 122).* 3. **தலைவைத்துப்படுத்தல்;** to lie down, as in sleeping. "வடக்கொடு கோணந் தலை செய்யார்" *(ஆசாரக். 31).*

*[தலை + செய்-.]*

**தலைசெய்துகொள்(ளு)-தல்** *talai-šeydu-koḷ(ḷu)-*, 13 செ.கு.வி. (v.i.) *1.* **(தலை முடி) மழித்துக் கொள்ளுதல்;** to get one's head shaved.

**மறுவ.** மொட்டையடித்தல்

*[தலை + செய்துகொள்-.]*

**தலைத்தரம்** *talai-t-taram*, பெ. (n.) முதல்தரம்; that which is first, of the highest grade. "தலைத் தரமான கழனிகளை" *(திவ். திருவாய். 8. 9.9,:ஆறா.).*

**மறுவ.** தலைநிலம்; முதல் நிலம்.

*[தலை + தரம்]*

**தலைத்தலை**[1] *talai-t-talai*, கு.வி.எ. (adj.) ஒவ்வொரு வரும்; each one. "தண்டா ரகலந் தலைத் தலைக் கொளவே" *(ஐங்குறு. 33).*

*[தலை + தலை]*

**தலைத்தலை**[2] *talai-t-talai*, கு.வி.எ. (adv.) *1.* மேன் மேல்; more and more. "தாழ்வி லுள்ளந் தலைத்தலைச் சிறப்ப" *(அகநா.29).* **2.** இடந் தோறும்; in all places, every where. "தத்தரிக் கண்ணார் தலைத்தலை வருமே" *(பரிபா. 16: 10).*

*[தலை + தலை]*

**தலைத்தா-தல் (தலைத்தருதல்)** *talai-t-tā-*, 2 செ.கு.வி. (v.i.) **தலைமையான அன்பினைக் கையால் தழுவிக்காட்டுதல்;** to show one's great love to a woman by clasping here in the arms. "மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து" *(திருமுரு. 216).*

*[தலை + (தரு →) தா-.]*

**தலைத்தாது** *talai-t-tādu*, பெ. (n.) நிலப்பனை *(மலை.)* பார்க்க; see *nila-p-paṉai;* ground-palm.

*[தலை + தாது]*

**தலைத்தாழ்வு** *talai-t-tāḻvu*, பெ. (n.) **இழிவு (தலைகவிழ்க்கச் செய்வது);** disgrace, as causing one to hang down his head. "மற்றவரைச் சேர்ந்தவர்க்கும் வந்த தலைத்தாழ்வு" *(அருட்பா, 6, நாமாவளி, 163).*

*[தலை + தாழ்வு]*

**தலைத்தாள்**[1] *talai-t-tāḷ*, பெ. (n.) **(அடிமுன்பு) பெரியவ-ன்-ள்;** lit., front of the foot. Great personage. "சாவக மாளுந் தலைத்தாள் வேந்தன்" *(மணிமே. 14, 103).*

*[தலை + தாள்]*

**தலைத்தாள்**[2] *talai-t-tāḷ*, கு.வி.எ. (adv.) முன்னிலையில் *(திவா.);* before, in the presence of. "மனைவி தலைத்தாள்" *(தொல். பொருள். 165).*

*[தலை + தாள் = தலைத்தாள் ; பெரியோர் தம் தாள்முன்பு, தலையைத்தாழ்த்தி வைத்து வணங்கும் பண்பு தென்னாட்டிற்கேயுரிய தனிப்பெரும் பண்பாகும். முன்னிலையிலென்றதும், அவ்வாறேயாகும்.]*

**தலைத்திண்ணை** *talai-t-tiṇṇai,* பெ. (n.) முகப்புத்திண்ணை; front pial (செ.அக.).

மறுவ. திண்ணைமுகப்பு; திண்ணைத்திண்டு

*[தலை + திண்ணை = தலைத்திண்ணை திண்ணைகளிற் திண்டுவைத்துக் கட்டும் பாங்கினைச் சிறப்பாகத் தமிழகத்துச் செட்டிநாட்டார் வீடுகளிற் பரவலாக இன்றும் காணலாம்]*



**தலைத்திமிர்** *talai-t-timir,* பெ. (n.) 1. தலைக் கனம் (வின்.); heaviness of the heads, as through cold. 2. கொழுப்பு; arrogance, headstrongness.

மறுவ. தலைக்கொழுப்பு; மண்டைக் கொழுப்பு, மண்டைக்கனம்.

*[தலை + திமிர்]*

**தலைத்திராணம்** *talai-t-tirāṇam,* பெ. (n.) தலைச்சீரா (சூடா.) தலைப்பாகை; head dress.

*[தலை + திராணம்]*

**தலைத்திருப்பம்**[1] *talai-t-tiruppam,* பெ. (n.) தலைச்சுற்றல் பார்க்க; see *talai-c-cuṟṟal.*

*[தலை + திருப்பம்]*

**தலைத்திருப்பம்**[2] *talai-t-tiruppam,* பெ. (n.) குழந்தைத் தலையினைக் கருப்பையினுள் விரல் விட்டுத் திருப்புதல்; the manual turning of foetus by which the foetal head is caused to present. 2. மயக்கம்; giddiness (சா.அக.).

*[தலை + திருப்பம் (திருப்பம் = முறை மாறுகை)]*

**தலைத்திருப்பு** *talai-t-tiruppu,* பெ. (n.) 1. தலைச் சுற்றல்; giddinesss. 2. மூளையில் பரவும், அரத்தத்தால் ஏற்படும் தலைமயக்கம்; dizziness in the head due to some disorder in the circulation of blood in cerebral region. 3. ஒரு பனை; a kind of palmyra (சா.அக.).

*[தலை + திருப்பு]*

**தலைத்திவசம்** *talai-t-tivaśam,* பெ. (n.) இறந்தவர் பொருட்டு நிகழ்த்தும், முதல் நினைவுநாள்; first annual ceremony of a deceased person.

மறுவ. முதல் நினைவுநாள்

*[தலை + Skt. திவசம்]*

**தலைத்தீபாவளி** *talai-t-tīpāvaḷi,* பெ. (n.) திருமணமானபின், மணமகள்வீட்டில் முதன் முதற் கொண்டாடுந் தீபாவளிவிழா; the first tīpāvaḷi festival after marriage, celebrated at the bride's house.

மறுவ. முதல் தீபாவளி

*[தலை + தீபம் + ஆவளி – தலைத் தீபாவளி. (ஆவளி = உரிமை, ஒழுங்கு, வரிசை]*

**தலைத்துலுக்கம்** *talai-t-tulukkam,* பெ. (n.) தலையாட்டம்; nodding one's head, as in agreement. "தலைத்துலுக்கங் கொண்டுதன் விசுவாசம்போல்" (சரவண. பணவிடு. 115).

மறுவ. தலைக்குலுக்கு

*[தலை + துலுக்கம். ஆடு, கோழி, பலியிடும் போது, அவற்றின் தலையில் தண்ணீர் தெளிப்பர். அத் தண்ணீரை அகற்று வதற்காகத் தலையை அவை குலுக்கும். அதனையே 'துலுக்குதல்' என்பர். தன்னை வெட்டுவதற்குத் தானே இசைவு தெரிவித்ததாக எடுத்துக் கொள்வர்.]*

**தலைத்தூகம்** *talai-t-tūgam,* பெ. (n.) இரும்பகம்; black rats ear plant (சா.அக.).

**தலைத்தோற்கழலை** *talai-t-tōṟ-kaḻalai,* பெ. (n.) தலையில் உண்டாம் தசைத்திரளை (m.l); wen on the scalp.

மறுவ. தலைக்கழலை

[தலை + தோல் + கழலை]

**தலைத்தோற்றம்** *talai-t-tōṟṟam,* பெ. (n.). வீரனொருவன் பகைவர் ஆனிரையைக் கைப்பற்றிவருதலறிந்து, அவனுறவு முறையார் மனமகிழ்தலைக்கூறும் ஒரு புறத்துறை (புறநா. 262); theme describing the exultation of a warrior's kinsmen over his exploits in capturing his enemy's cattle.

[தலை + தோற்றம்]

**தலைதகர்-தல்** *talai-tagar-,* 4 செ.கு.வி. (v.i.). முனைமுறிதல்; to be broken at the top, as an instrument. "குன்றின்மேற் கொட்டுந் தறிபோற் றலைதகர்ந்து" (நாலடி, 257).

[தலை + தகர்-.]

**தலைதட்டி** *talai-taṭṭi,* கு.வி.எ. (adv.) தவசம் முதலியவற்றை விளிம்புக்கு இணையாக வரும் வகையில் அல்லது தட்டி அகற்றி; while using a measure with the portion of grain above the brim knocked off.

[தலை + தட்டி]

**தலைதட்டு-தல்** *talai-taṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அளவுப் படியின் தலை மீது கூம்பாகவுள்ள கூலத்தை வழித்தல்; to strike off the excess of grain, at the top of measure, in measuring. 2. அடக்குதல்; to put down (செ.அக.).

[தலை + தட்டு-.]



**தலைதடவு-தல்** *talai-taḍavu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தலையைத் தடவுதல்; lit., to stroke the head. 2. வஞ்சித்துக் கெடுத்தல்; to ruin a person by deceit. "தலைதடவி மூளைதனை யுறிஞ்சுவார்" (விறலிவிடு. 750). அவன் தலையைத் தடவியே எல்லாச் சொத்தையும் பறித்துக் கொண்டார். (உ.வ.).

மறுவ. இரண்டகவாதி, ஏமாற்றுப் பேர்வழி

[தலை + தடவு-.]

**தலைதடுமாற்றம்** *talai-taḍu-māṟṟam,* பெ. (n.) பெருங்குழப்பம்; utter confusion (செ.அக.).

[தலை + தடுமாற்றம்]

**தலைதடுமாறு[1]-தல்** *talai-taḍu-māṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கலங்குதல்; to be bewildered. "தலை தடுமாறா வீழ்ந்து புரண்டலறி" (திருவாச. 3: 152). 2. சீர்கேடடைதல்; to be thrown into confusion. "தாரணி வழக்கமெல்லாந் தலை தடுமாறிற் றம்மமா" (பிரபோத. 6, 45).

[தலை + தடுமாறு-.]

**தலைதடுமாறு[2]** *talai-taḍu-māṟu,* பெ. (n.) மயங்குகை; daze, bewilderment. "தையனல்லா ரொடுந் தலைதடுமாறாகி" (திருவாச. 41:2).

[தலை + தடுமாறு]

**தலைதடுமாறு[3]-தல்** *talai-taḍu-māṟu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒழுங்கு மாறுபடுதல்; to become derange.

மறுவ. தலை மயங்குதல்

[தலை + தடுமாறு-.]

**தலைதப்பு-தல்** *talai-tappu-,* 5 செ.கு.வி. (v.i.) உயிர்பிழைத்தல்; to escape death. "தாசிவீடு வந்தவர்கள் தலைதப்பிப் போகிறதோ" (கோவ. க. 42). இந்த வழக்கில் அவன் தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் (உ.வ.).

மறுவ. உயிர்தப்புதல்

[தலை + தப்பு-.]

**தலைதப்பல்** *talai-tappal,* தொ.பெ. (vbl.n.) பேரிடரைக் கடத்தல்; escaping a danger (சா.அக.).

[தலை + தப்பல்]

**தலைதா[1]-தல் (தலைதரு-தல்)** *talai-tā-*, 15 செ.குன்றாவி. (v.t.) *முதன்மை அளித்தல்;* to raise one to eminence. "தாடந்தபோதே தலைதந்த" *(திருமுரு. 216).*

*[தலை + (தரு →) தா-.]*

**தலைதா[2]-தல் (தலைதரு-தல்)** *talai-tā-*, 8 செ.கு.வி. (v.i.) தலைகொடு- பார்க்க; see *talai-koḍu-.*

*[தலை + (தரு →) தா-.]*

**தலைதாங்கி** *talai-tāṅgi,* பெ. (n.) *கழுத்து உள்ளெலும்பு;* the first vertebra of the neck, so named because it supports the head.

*[தலை + தாங்கி-.]*

**தலைதாழ்-தல்** *talai-tāḻ-*, 2 செ.கு.வி. (v.i.) *1. வணங்குதல்;* to show reverence by bowing one's head. *2. நாணுதல்;* to show modesty by inclining one's head, become shame - faced. *3. நிலைகெடுதல்;* to be reduced in circumstances *(செ.அக.).*

*[தலை + தாழ்-.]*

**தலைதின்(னு)-தல்** *talai-tiṉ(ṉu)-*, 14 செகுன்றாவி. (v.t.) *1. முற்றுங்கெடுத்தல்;* lit., to eat one's head. to destroy utterly. *2. ஒருவர் பற்றிப் பொல்லாங்கு பேசுதல்;* to speack ill of one. அடுத்தவர் தலையைத் தின்னுதலே அவன் பிழைப்பாகப் போய்விட்டது *(உ. வ.).*

*[தலை + தின்(னு)-.]*

**தலைதுலக்குதல்** *talai-tulakkudal,* தொ.பெ. (vbl.n.) *அச்சத்தால் தலைநடுங்கல்;* shaking of the head due to fear *(சா.அக.).*

*[தலை + (துலுக்கு →) துலக்கு-.]*

**தலைதுலுக்கு-தல்** *talai-tulukku-*, 5 செ. குன்றாவி. (v.t.) *தலையசைத்து இசைவைக் காட்டுதல்;* to nod one's head in agreement or approbation. "அவன் செய்கிறோமென்று தலைதுலுக்கினால்" *(ஈ. டு:10, 1:ப்ர.).*

மறுவ. தலை குலுக்குதல்

*[தலை + துலுக்கு-. தலையில் விழும் நீரைப் போக்குவதற்காகத் தலையைக் குலுக்குதல், துலுக்குதல் எனப்படும். சிற்றூர்க் கோயில்களில் ஆடு, கோழி பலியிடும் முன்னர், அவற்றின் தலையில் தண்ணீர் தெளிப்பது, இன்றுங் காணப் படும் நிகழ்வேயாகும். அத் தண்ணீரை விலக்கிடத், தம் தலையையும் உடலையும் வேகமாகக் குலுக்குஞ் செயலை, அவற்றை வெட்டுவதற்கு, இறைவன் இசைவுதந்ததாக, எடுத்துக் கொள்ளுகின்றனர். துலுக்கா விடில் அவற்றை வெட்டமாட்டார்கள். இந் நிகழ்வு ஊர்ப்புறத்தே இன்றுங் காணப்படுகிறது]*

**தலைதுவட்டு-தல்** *talai-tuvaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) *தலைமயிரின் ஈரந்துடைத்தல்;* to wipe and dry one's head after bath *(செ.அக.).*

மறுவ. தலையுணத்தல்; மயிருலர்த்தல்

*[தலை + துவட்டு-.]*

**தலைதூக்காமை** *talai-tūkkāmai,* *மயக்கத்தால் தலைதூக்க முடியாமை;* inability to raise the head due to dizziness *(சா.அக.).*

*[தலை + தூக்காமை]*

**தலைதூக்கு-தல்** *talai-tūkku-*, 5 செ.கு.வி. (v.i.) *1. தலைகாட்டுதல்;* to show up. வீட்டை நெருங்க நெருங்க அப்பா அடிப்பாரோ என்ற பயம் தலைதூக்கியது *(உ.வ.). 2. சற்று மேல் நிலைக்கு வருதல்;* to lift oneself up. மூத்த பிள்ளை சம்பாதித்த பின்புதான் குடும்பம் தலை தூக்கியிருக்கிறது *(உ. வ.).*

*[தலை + தூக்கு-.]*

**தலைதெறிக்க** *talai-teṟikka,* கு.வி.எ. (adv.) *பொறிகலங்கும்படி;* head long, impetuously. தலைதெறிக்க ஓடினான் *(உ. வ.).*

*[தலை + தெறிக்க. (தெறிக்க = சிதற, கலங்க = விரைவுக்குறிப்பு. பரபரப்புடன் விரைந்துசெல்லுதலைக் குறிக்கும், குறிப்பு. வினையெச்சச் சொல்லென்றறிக]*

**தலைதேய்த்தல்** *talai-tēyttal,* தொ.பெ. (vbl.n.) *நீராடல்;* having a bath.

*[தலை + தேய்த்தல்.]*

**தலைதொட்டபிதா** *talai-toṭṭa-pidā,* பெ. (n.) *அருள்பாலிக்குந் தந்தை* *(யாழ்.அக.);* God-father.

*[தலை + தொட்ட + பிதா]*

**தலைதொடு-தல்** *talai-toḍu-, 20* செ.குவி. (v.i.) *1.* தலையைத் தொட்டு ஆணையிடுதல்; to take an oath by touching one's head. "தலை தொட்டேன் தண்பரங்குன்று" *(பரிபா. 6: 95). 2.* திருமுழுக்காட்டிற்காகத் தலையைத் தொட்டு அருள்புரிந்து, திருத்தந்தையாதல் *(கிறித்து);* to become sponsor for a child in baptism.

*[தலை + தொடு-.]*

**தலைதோய்-தல்** *talai-tōy-, 1* செ.குவி. (v.i.) நீரில் தலைமுழுகுதல் *(யாழ்ப்.);* to bathe for ceremonial purification or for health.

*[தலை + தோய்-.]*

**தலைநகரம்** *talai-nagaram,* பெ. (n.) ஒரு நாட்டின் அல்லது மாநிலத்தின் ஆட்சிப் பணிகள் நடைபெறும் இடம்; capital city. சோழர்களின் தலைநகரம் முதலாம் இராசேந்திர சோழன்காலத்தில் தஞ்சையிலிருந்து கங்கை கொண்ட சோழபுரத்திற்கு மாறிற்று.

மறுவ. முதன்மை நகர்.

*[தலை + நகரம்]*

**தலைநகை** *talai-nagai,* பெ. (n.) தலையணி வகை; a head ornament.

மறுவ. தலையணி, தலைச்ச

*[துல் → தல் → தலை + நகை.]*

**தலைநசுக்குண்ணல்** *talai-našukkuṇṇal,* பெ. (n.) பேறுகாலத்தில் குழந்தை தலை நொறுங்குகை; crushing of the foetal head *(சா.அக.).*

*[தலை + நசுக்குண்ணல்]*

**தலைநஞ்சுக்கொடி** *talai-nañju-k-koḍi,* பெ. (n.) தலைப்பிள்ளையின் நஞ்சுக்கொடி; the navel cord of the first born child *(சா.அக.).*

மறுவ. முதற்கொப்பூழ்க்கொடி, தலைச்சன் கொடி

*[தலை = முதல். தலை + நஞ்சுக்கொடி]*

**தலைநடுக்கம்** *talai-naḍukkam,* பெ. (n.) *1.* கிறுகிறுப்பு; giddiness. *2.* முதுமையில் உண்டாகும் தலையசைவு; shaking of head in old persons. *3.* முடக்குஊதை நோய், தலையை நடுங்கச் செய்யும் ஊதைநோய்; giddiness, shaking palsy. *4.* அச்சம்; fear.

மறுவ. தலையாட்டம்

*[தலை + நடுக்கம்]*

**தலைநடுக்கு** *talai-naḍukku,* பெ. (n.) தலை நடுக்கம்[2] பார்க்க; see *talai-naḍukkam*[2] (செ.அக.).

*[தலை + நடுக்கு]*

**தலைநடுக்குவளி** *talai-naḍukku-vaḷi,* பெ. (n.) ஊதை நோயினாலேற்படும் தலை நடுக்கம்; shaking palsy due to aggrevated vaḷi (vāyu) *(சா.அக.).*

*[தலை + நடுக்கு + வளி]*

**தலைநடுக்குவூதை** *talai-naḍukku-v-ūdai,* பெ. (n.) *1.* தலையாட்டம்; shaking palsy. *2.* தலைச்சுற்று; giddiness. *3.* அச்சம்; fear *(செ.அக.).*

மறுவ. முடக்குவளிநோய்

*[தலை + நடுக்கு + ஊதை.]*

**தலைநடுங்கு-தல்** *talai-naḍuṅgu-, 5* செ.குவி. (v.i.) *1.* மயக்கமுறுதல்; to be dizzy, giddy. *2.* தலையாட்டமடைதல்; to suffer from palsy. *3.* அச்சமுறுதல்; to fear (செ.அக.).

மறுவ. தலையாடுதல்.

*[தலை + நடுங்கு-.]*

**தலைநறுக்கு** *talai-naṟukku,* பெ. (n.) ஓலையின் முன் பாகம் *(வின்.);* the head part of a palm leave.

*[தலை + நறுக்கு → தலைநறுக்கு. = பனை மடலின் தலைப்பகுதி. அஃதாவது அவிழ்பனையின், நுனிக்குருத்துப் பகுதி.]*

**தலைநாள்** *talai-nāḷ,* பெ. (n.) *1.* இரலை (அசுவதி) *(பிங்.);* the first star of 27 stars. *2.* முதல்நாள்; the first day. "தலைநாட் போன்ற விருப்பினன்" *(புறநா. 101). 3.* முந்திய நாள்; the previous day. *4.* முற்காலம்; early times, former days. *5.* முற்பிறவி; previous birth. "வெட்டுப் பட்டாய் மகனே தலைநாளின் விதிப்படியே" *(தனிப்பா. 1. 149: 54).*

மறுவ. முதல்நாள்.

*[தலை + நாள்]*

**தலைநான்கு** *talai-nāṉgu,* பெ. (n.) ஊதை, பித்தம், கோழை ஆகியவற்றின் ஒருமித்த நிலை; wind, bile, phlegm and their combination (சா.அக.).

[தலை + நான்கு]

**தலைநித்தம்** *talai-nittam,* பெ. (n.) பித்தளை; brass (சா.அக.).

**தலைநிம்பகி** *talai-nimbagi,* பெ. (n.) நில வேம்பு; ground-neem (சா.அக.).

**தலைநிம்பம்** *talai-nimbam,* பெ. (n.) சிவனார் வேம்பு (மலை.); Shiva's neem.

[தலம் → தலை + நிம்பம். நிம்பம் = வேம்பு.]

**தலைநிமிர்-தல்** *talai-nimir-,* 2 செ.குவி. (v.i.) 1. தலையை உயர்த்துதல்; to carry one's head erect, as in pride. 2. நிலைமேம்படுதல்; to improve in circumstances. தன் பிள்ளை முதல் மதிப்பெண் பெற்றதால், தந்தை தலை நிமிர்ந்து நடக்கிறான் (இ.வ.).

[தலை + நிமிர்-.]

**தலைநிமிர்ச்சி** *talai-nimircci,* பெ. (n.) 1. நன்னிமித்தமாக ஆடுமாடு முதலியன தலையை உயர்த்துகை (வின்.); carrying the head erect, as a good sign in cattle. 2. உரிய பருவமடைகை (வின்.); being grown up, passed from childhood. 3. வளர்ச்சியுற்று முன்னேறுகை; improving in circumstances. 4. செருக்கு; pride, superciliousness.

[தலை + நிமிர்ச்சி]

**தலைநிமிர்த்து-தல்** *talai-nimirttu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. தலையை உயர்த்துதல்; to raise one's head. ஒரு குடும்பத்தில் பெண் தலை குனிந்து நடந்தால், ஆண் தலைநிமிர்ந்து நடப்பார் என்பது ஆணாதிக்கக் குமுகாயமொழி (உ.வ.). 2. நிலையை முன்னேற்றுதல்; to improve one's circumstances. 3. உரியபருவம் வரும்வரை வளர்த்தல்; to bring up a person, till he reaches manhood. 4. நிலைபெறச் செய்தல்; to establish one in business.

[தலை + நிமிர்த்து-.]

**தலைநில்லாப்பருவம்** *talai-nillā-p-paruvam,* குழவிகட்குத் தலைநில்லாத பருவம்; that state of infancy or early child-hood, when the head cannot support itself (சா.அக.).

[தலைநில்லா + பருவம்]

**தலைநிலம்** *talai-nilam,* பெ. (n.) முதன்மையான இடம்; first place. "தலைநிலத்து வைக்கப் படும்" (நாலடி, 133).

மறுவ. முதல்நஞ்சை, முதல்நிலம்

[தலை + நிலம்]

**தலைநிலைக்கீற்று** *talai-nilai-k-kīṟṟu,* பெ. (n.) முதலில் தோன்றும் குருத்து; white tender leaf of coconut, palm, etc.

[தலைநிலை + (கித்து →) கீற்று → தலை நிலைக்கீற்று = தென்னை, பனை, வாழை போன்ற மரங்களின், விரியாத குருத்து நிலை]

**தலைநிற்றல்** *talai-niṟṟal,* பெ. (n.) குழந்தைகளது தலை, சோர்வின்றி நிற்கை; the child's head is capable of supporting itself and remaining errect (சா.அக.).

[தலை + நிற்றல்]

**தலைநின்றொழுகு-தல்** *talai-niṉṟ-oḻugu-,* 5 செ.குவி. (v.i.) தலைமையாக நின்று பணி செய்தல்; to serve in an intimate capacity. "தலைநின்றொழுகும் பரத்தையர்" (தொல். பொருள். 147, உரை.).

[தலை + நின்று + ஒழுகு-.]

**தலைநீங்கு-தல்** *talai-nīṅgu-,* 5 செ.குவி. (v.i.) விட்டொழிதல்; to abondon, renounce. "அரசு தலைநீங்கிய வருமறை யந்தணன்" (மணிமே.11:84).

[தலை + நீங்கு-.]

**தலைநீட்டராசன்** *talai-nīṭṭarāšaṉ,* ஓணான்; lizard (சா.அக.).

**தலைநீட்டு-தல்** *talai-nīṭṭu-,* 5 செ.குவி. (v.i.) 1. சிறிதுநேரம் வந்து கலந்துகொள்ளுதல்; to attend for a short time. நேற்று நடந்த ஈமச் சடங்கில், அவர் வந்து தலையை நீட்டிவிட்டுச் சென்று விட்டார் (உ. வ.).

[தலை + நீட்டு-.]

**தலைநீர்க்கோவை** *talai-nīr-k-kōvai*, பெ. (n.) *1.* தலைநீரோட்டம் பார்க்க; see *talai-nīrōṭṭam.* *2.* குளிர்ச்சியால் தலையில் நீர்க்கோர்க்கை; heaviness of the head, through affection of cold (சா.அக.).

மறுவ. மண்டைச்சளி, மண்டைத்தடுமம், தலைநீரோட்டம், தடுமன்.

*[தலைநீர் + (கோர்வை →) கோவை]*

**தலைநீர்ப்பாடு** *talai-nīr-p-pāḍu*, பெ. (n.) கிளைக்கால்கள் பிரியும் முதல்மடை; chief sluice of a tank, from which smaller channels branch out. "சௌந்தரிய சாகரத்தைத் தலைநீர்ப் பாட்டிலே அநுபவிக்கிறார்" (திவ். திருநெடுந். 18, வ்யா.).

*[தலைநீர் + பாடு → தலைநீர்ப்பாடு. தலைநீர் = முதல்மடை நீர். பாடு = சொல்லாக்க ஈறு.]*

**தலைநீர்ப்பெருந்தளி** *talai-nīr-p-peru-n-taḷi*, பெ. (n.) தண்ணீர்ப்பந்தல்; place where drinking water is given in charity. "தலைநீர்ப் பெருந்தளி நலனணிகொளீஇ" (பெருங். வத்தவ. 3: 21).

*[தலைநீர் + பெருந்தளி]*

**தலைநீரேற்றம்** *talai-nīrēṟṟam*, பெ. (n.) சளி; cold (சா.அக.).

*[தலைநீர் + ஏற்றம்]*

**தலைநீரோட்டம்** *talai-nīrōṭṭam*, பெ. (n.) மண்டையோட்டுள் ஏற்படும் நீரேற்றம்; water in the head Hydrocephalus (சா.அக.).

*[தலைநீர் + ஓட்டம்]*

**தலைநெரிதல் (தலைநெரித்தல்)** *talai-neridal talai-nerital*, பெ. (n.) தலைநசுக்குண்ணல் பார்க்க; see *talai-našu-k-kuṇṇal.*

*[தலை + நெரிதல்]*

**தலைநெரிப்பிரசவம்** *talai-neri-p-prašavam*, பெ. (n.) குழந்தையின் தலையை நசுக்கி வெளியேற்றுகை; delivery attended with the crushing of the foetal head.

*[தலைநெரி + Skt. பிரசவம்]*

**தலைநோ** *talai-nō*, பெ. (n.) தலைநோவு பார்க்க; see *talai-nōvu.*

மறுவ. தலைநோவு

*[தலை + நோ]*

**தலைநோய்** *talai-nōy*, பெ. (n.) தலைநோவு பார்க்க; see *talai-nōvu.*

மறுவ. தலைவலி, மண்டையடி

*[தலை + நோய்]*

**தலைநோய்ச்செடி** *talai-nōy-c-ceḍi*, பெ. (n.) மருளூமத்தை; head-ache tree (சா.அக.).

*[தலை + நோய் + செடி]*

**தலைநோவு**[1] *talai-nōvu*, பெ. (n.) *1.* தலைவலி; head-ache. "தலைநோவுற்றோ னவிநயம்" (சிலப். பக். 87). *2.* தலைநோய் வகை; neuritis.

மறுவ. தலைநோ, தலைநோய், மண்டைக் குத்து, மண்டையடி

தெ. தலநொப்பி

*[தலை + நோவு]*

தலைநோவு வகைகள்:

1. வளித்தலைவலி
2. பித்தத்தலைவலி
3. கோழைத்தலைவலி
4. முக்கோளாற்றுத்தலைவலி
5. அரத்தத்தலைவலி
6. மூளை, கொழுப்பு, அரத்தக்குறைவுத் தலைவலி
7. புழுக்களாலேற்படுந்தலைவலி
8. கொடுவெப்பத்தலைவலி
9. ஒற்றைத்தலைவலி
10. உயிர்க்கொல்லித்தலைவலி

என்று தலைநோவின் வகைமை பற்றி, சா.அக. கூறும்.

**தலைப்பட்டை** *talai-p-paṭṭai*, பெ. (n.) மீனவர் அணியும் கூம்புவடிவ ஓலைக்குல்லா (வின்.); conical basket-cap, worn by fishermen.

மறுவ. தலைக்குல்லா

*[தலை + பட்டை]*



**தலைப்படி** *talai-p-paḍi,* பெ. (n.) ஆறுபலங் கொண்ட நிறை *(தைலவ. தைல. 121);* measure of weight = 6 palam.

*[தலை + படி. படி = எடைக்கல்]*

**தலைப்படு[1]-தல்** *talai-p-paḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஒன்றுகூடுதல்; to unite, be in communion with. "சிவனைத் தலைப்பட்டுச் சென்றொடுங்கும் ஊழியிறுதி" *(திருக்கோ. 25, உரை).* "தலைப்பட்டாள் நங்கை தலைவன்தாளே" *(தேவா.திருத்தாண்டகம்).* 2. எதிர்ப்படுதல்; to meet, cross. "ஓர் வேட்டுவன் றலைப்பட்டானே" *(சீவக. 1230).* 3. மேற்கொள்ளு-தல்; to undertake, enter upon. "ஏவல் தலைப்பட விரும்பும்" *(சேதுபு. துரா. 2).* 4. பெறுதல்; to obtain, attain. "சிலரதன் செவ்வி தலைப்படுவார்" *(குறள், 1289).*

*[தலை + படு-.]*

**தலைப்படு[2]-தல்** *talai-p-paḍu-,* 20 செ.குவி. (v.i.) 1. முன்னேறுதல்; to advance; to improve in circumstances. 2. தலைமையாதல்; to be noble, exalted. "தலைப்படு சால்பினுக்குந் தளரேன்" *(திருக்கோ. 25).* 3. புகுதல்; to enter, as a character on the stage. "கூரிய பல்லினை யுடையாள் தலைப்பட்டாள்" *(பு.வெ. 10, பொதுவி. 5, உரை).* 4. வழிப்படுதல்; to follow. "தம்மிற் றலைப் பட்டார் பாலே தலைப்பட்டு" *(திருக் களிற்றுப். 2).* 5. தொடங்குதல்; to commence. "அந்தக் காரியத்தைச் செய்யத் தலைப்பட்டான்" *(உ.வ.).*

தெ. தலபடு.

*[தலை + படு-.]*

**தலைப்படுத்து-தல்** *talai-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கூட்டுதல்; to cause to gain, reach. "ஏதுமில்லாவிடந் தலைப்படுத்தினள்" *(சிலப். 16: 16).*

*[தலை + படுத்து-.]*

**தலைப்படுதானம்** *talai-p-paḍu-tāṉam,* பெ. (n.) நல்வழியில் ஈட்டிய பொருளைத் தக்கார்க்கு வழங்குகை; gift offered to worthy person, from the self earned wealth in the proper way *(செ.அக.).*

*[தலைப்படு + தானம்]*

**தலைப்பணி** *talai-p-paṇi,* பெ. (n.) 1. ஒருவகை தலையணி *(நாஞ்.);* a kind of head ornament. 2. முதல்வேலை; first work.

மறுவ. தலைக்கோலம் ; தலைச்சாமான்

*[தலை + பணி. உடலில் முதலாவதாக அமைந்துள்ள தலையை அழகுபடுத்துகை. முதற்கண் ஆற்ற வேண்டிய பணியை, செய்துமுடிக்கும் தன்மையைக் குறிக்கும் முதன்மைக் கருத்தினின்று இவ்வேரடி தோன்றியுள்ளமை அறிக.]*

**தலைப்பணிலம்** *talai-p-paṇilam,* பெ. (n.) வலம்புரிச்சங்கு; a superior kind of conch. "பலவளைசூழ் தலைப்பணிலம் பல்ல சூழும்" *(தணிகைப்பு. நகரப். 61).*

மறுவ. தலைக்கோலம்

*[தலை + பணிலம். பணிலம் = சங்கு; வலம்புரிச்சங்கு]*

**தலைப்பதமிடல்** *talai-p-padamiḍal,* தொ.பெ. (vbl.n.) 1. தலைக்கு எண்ணெயிடல்; anointing the head. 2. எண்ணெய்தேய்த்து முழுகல்; having an oil bath.

*[தலை + பதமிடல்.]*

**தலைப்பந்தி** *talai-p-pandi,* பெ. (n.) விருந்தின் போது உண்ணுவோரில் முதல்வரிசை; first set or row of guests entertained *(செ.அக.).*

மறுவ. முதல்வரிசை, முதற்பந்தி

*[தலை + பந்தி]*

**தலைப்பளுவு** *talai-p-paḷuvu,* பெ. (n.) தலைப்பாரம் பார்க்க; see *talai-p-pāram.*

*[தலை + பளுவு]*

**தலைப்பற்று[1]** *talai-p-paṟṟu,* பெ. (n.) தாளிப் பனையின் ஓலை *(யாழ்ப்.);* large leaf of the tali-pot tree.

மறுவ. நுனிக்குருத்து, தலைக்குருத்து, நுனியோலை, குருத்தோலை, முதற்குருத்து, முதலோலை

*[தலம் → தலை + பற்று]*

**தலைப்பற்று²** *talai-p-paṟṟu,* பெ. (n.) தலைக்கிடும் மருந்துப்பற்று; an application of ointment.

*[தலை + பற்று = தலையில் ஏற்பட்ட நீர்க் கோர்வையின், பாரத்தைப் போக்குவதற்கு, மூலிகைகளால் இடப்படும், மருந்துப் பற்று.]*

**தலைப்பறை** *talai-p-paṟai,* பெ. (n.) யானை முதலியவற்றின் முன்னே கொட்டும் பறை; tom - tom beaten in front, as of an elephant. "மத்த கஜமானது முன்னே தலைப்பறை கொட்ட வருமா போலே" *(ஈடு. 10. 3: 5).*

*[தலை + பறை]*

**தலைப்பனி** *talai-p-paṉi,* பெ. (n.) முன்பனி; the early part of the dew season.

மறுவ. முதற்பனி

*[தலை + பனி]*

**தலைப்பா** *talai-p-pā,* பெ. (n.) தலைப்பாகை பார்க்க; see *talai-p-pāgai.*

*[தலை + பாகை → தலைப்பாகை. பாகை → பா. கடைக்குறை]*

**தலைப்பாக்கட்டிக்கோரை** *talai-p-pā-k-kaṭṭi-k-kōrai,* பெ. (n.) பூங்கோரை (A); sedge with culms triquetrous at the base, Cyprus haspam.

*[தலைப்பாக்கட்டி + கோரை]*

**தலைப்பாக்கட்டு-தல்** *talai-p-pā-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தலையில் உருமாலை கட்டுதல்; to tie a turban in the head *(செ.அக.).*

*[தலைப்பா + கட்டு. ஊரக மக்களின் தீர்ப்பாயக் கூட்டத்தின்போது, அதில் கலந்து கொள்ளுதற்குரிய ஊர்ப் பெரியோர், தலையில் கட்டும் துணியாலாகிய உருமாலை]*

**தலைப்பாகு** *talai-p-pāgu,* பெ. (n.) தலைப்பாகை பார்க்க; see *talai-p-pāgai.*

மறுவ. உருமால்கட்டு; தலைப்பாகைக்கட்டு, தலைக்கட்டு; மண்டைக்கட்டு

க. தலெபாகு

*[தலைப்பாகை → தலைப்பாகு]*

**தலைப்பாகை** *talai-p-pāgai,* பெ. (n.) தலையிற் கட்டுந் துணி; turban. "ஒன்று புகாத் தலைப்பாகு பற்ற" *(இரகு. அயனெ. 104).*

*[தலைப்பாகு → தலைப்பாகை]*



**தலைப்பாட்டு** *talai-p-pāṭṭu,* பெ. (n.) கூத்தின் முதலில் தொடங்கும் பாட்டு; the song sung first in a dance. "தலைப் பாட்டுக் கூத்தியும்" *(சிலப். 14:156).*

மறுவ. முதற்பாட்டு

*[தலை + பாட்டு = ஊர்த்திருவிழாவின் போது, கூத்து அல்லது நாடகம் தொடங்கு முன்பு, கூத்தின் கருத்தமைவினைக் கூறும் முகப்புப்பாட்டு]*

**தலைப்பாடு** *talai-p-pāḍu,* பெ. (n.) 1. கலந்திருக்கை; cordial intercourse. "தோழனைக் கண்டு தலைப்பாடெய்தி" *(பெருங். வத்தவ. 4, 99).* "தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே". *(தேவா. திருத்தாண்டகம்).* 2. தற்செயல் நிகழ்ச்சி; chance occurrence. "விறகொய் மாக்கள் பொன்பெற் றன்னதோர் தலைப் பாடன்றவ னீகை" *(புறநா. 70).*

*[தலைப்படு → தலைப்பாடு = இருமன மொன்றித் திருமணம் புரிந்த காமக் காதலர், ஒருங்குகூடுதல் தலைப் பாடெனப்படும். ஆதன் இறையுணர்வுடன் ஒன்றுதலும், தலைப்பாடாகும்]*

**தலைப்பாத்தூக்கி** *talai-p-pā-t-tūkki,* பெ. (n.) தலைப்பாமாட்டி பார்க்க; see *talai-p-pā-māṭṭi.* hanger for head dress.

*[தலைப்பா + தூக்கி]*

**தலைப்பாமாட்டி** *talai-p-pā-māṭṭi,* பெ. (n.) தலைப்பாகை முதலியவற்றை மாட்டுதற்கு உதவுங்கருவி; hat-rack, coat-stand (செ.அக.).

மறுவ. தலைப்பாத்தூக்கி

*[தலைப்பா + மாட்டி]*

**தலைப்பாமாற்றி** *talai-p-pā-māṟṟi,* பெ. (n.) தலைப்பாமாறி பார்க்க; see *talai-p-pā-māṟi*.

*[தலைப்பா + மாற்றி]*

**தலைப்பாமாறி** *talai-p-pā-māṟi,* பெ. (n.) 1. பெருமோசக்காரன் (தலைப்பாகை மாற்றுவோன்); lit., one who changes turban consummate cheat. 2. திறன்மிக்க திருடன்; clever thief.

*[தலைப்பா + மாறி. நாடகமாந்தர் ஏற்றுள்ள வேடப்புனைவிற்கேற்பத் தலைப்பாகையை மாற்றுதல் போல், ஆளுக்குத் தகுந்தவண்ணம் சொற்களை மாற்றிப் பேசி, சூழ்ச்சி செய்யும் வன்னெஞ்சக் கள்வன். திறமை நிறைந்த திருடனையும், இச்சொல் குறிக்குமென்றறிக]*

**தலைப்பாரம்** *talai-p-pāram,* பெ. (n.) 1. தலைச் சுமை; head-load. "புவியோ வரவினுக் கொரு தலைப்பாரம்" (தனிப்பா. i, 112, 56). 2. தலைக் கனம்; heaviness in the head from cold. 3. தோணியின் முற்பாகத்தில் மிக்க பாரத்தை யேற்றுகை (யாழ்ப்.); overloading of a vessel in the bow. 4. தலைவலி; head-ache.

மறுவ. மண்டைக்கனம், மண்டைச்சுமை, மண்டைப்பாரம்

*[தலை + பாரம்]*

**தலைப்பாளை** *talai-p-pāḷai,* பெ. (n.) 1. தென்னை முதலியவற்றில், முதலில் வரும் பாளை; first spathe of the coconut and other palm trees. 2. மகளிர் தலையணி வகை; a kind fo head-ornament for women. "சிகை நடுவில் தலைப் பாளை நான்றுு" (சீவக. 2731, உரை.)



*[தலை + பாளை]*

**தலைப்பிடித்தல்** *talai-p-piḍittal,* பெ. (n.) கூட்டிக் கொடுத்தல்; ministering to the passions of others - Pandering (சா.அக.).

*[தலை + பிடி-.]*

**தலைப்பிண்டச்செயநீர்** *talai-p-piṇḍa-c-ceyanīr,* பெ. (n.) முத்திங்கள் தலைக்கருவின் உப்பை, இராப்பனியில் இறக்கி வடித்த செயநீர்; a strong alkaline salt prepared from the first foetus (3 month old) and exposed to night's dew to convert it into a liquid (சா.அக.).

*[தலைப்பிண்டம் + செயநீர்.]*

**தலைப்பிணி** *talai-p-piṇi,* பெ. (n.) 1. தலைச் சூலி; a women who is pregnant for the first time. 2. தலைநோய்; diseases in general of the head.

*[தலை + பிணி]*

**தலைப்பித்தம்** *talai-p-pittam,* பெ. (n.) தலைச் சுற்றல் (இ.வ.); giddiness of the head.

மறுவ. மண்டைப்பித்தம்; மண்டைநீர்; தலைநீர்

*[தலை + பித்தம். தலையில் நிற்கும் பித்தம்.]*

**தலைப்பிரட்டை** *talai-p-piraṭṭai,* பெ. (n.) தவளைவளர்ச்சியின் நான்கு நிலைகளுள் ஒன்று; tadpole.

*[தலை + பிரட்டை]*

**தலைப்பிரி-தல்** *talai-p-piri-,* 2 செ.கு.வி. (v.i.) நீங்குதல்; to separate, depart, deviate. "பண்பிற்றலைப் பிரியாதார்" (குறள், 810).

*[தலை + பிரி-.]*

**தலைப்பில்முடிந்துகொள்(ளு)-தல்** *talaippil-muḍindu-koḷ-(ḷu)-,* 7 செ.குன்றாவி. (v.t.) நினைவில் வைத்துக்கொள்ளுதல்; to remember, as by tying up a knot in the corner of one's cloth. இந்த வார்த்தையைத் தலைப்பில்

முடிந்து கொள் (உ.வ.). 2. **கணவனை அடக்கி ஆளும் பெண்;** woman who keeps her husband under control (செ.அக.).

*[தலைப்பு + இல் + முடிந்து + கொள்(ளு)-.]*

பெண்கள் முந்தானையிலோ, ஆண்கள் மேல் துண்டிலோ, ஒரு முடிச்சுப்போட்டு வைத்துக் கொள்ளும் வழக்கம், ஊர்ப்புறத்தே இன்றும் காணப்படும் பழக்கமாகும். அம் முடிச்சினைப் பின்பு கண்ணுறும்போது, எதையெண்ணி முடிந்தோமோ, அது, நினைவிற்கு வரும். கணவனைக் கட்டுக்குள் வைத்திருக்கும் பெண், அவனைத் தன் முன்றானையில் முடிந்து வைத்திருக்கிறாள் என்பது உலகவழக்கு இங்கு தலைப்பு என்பது முன்றானை அல்லது துணியின் நுனியைச் சுட்டும்.

**தலைப்பில்வைத்துக்கொள்(ளு)-தல்** *talaippil-vaittu-k-koḷ(ḷu)-*, 7 செ.குன்றாவி. (v.t.) **தலைப்பில்முடிந்துகொள்(ளு)-தல்** பார்க்க; see *talaippil muḍindu-koḷ(ḷu)-*.

*[தலைப்பு + இல் + வைத்துக் + கொள்(ளு)-.]*

**தலைப்பிள்ளை** *talai-p-piḷḷai,* பெ. (n.) **முதல் மகன்;** first son. "தனித்தலைவன் றலைப்பிள்ளை நானே" (அருட்பா. vi, திருமு. தான்பெற்றபேறு, 18).

**மறுவ.** முதற்பிள்ளை, மூத்தபிள்ளை, தலைச்சன்பிள்ளை

*[தலை + பிள்ளை]*

**தலைப்பிள்ளைச்சூல்** *talai-p-piḷḷai-c-cūl,* பெ. (n.) **தலைச்சூல்** பார்க்க; see *talai-c-cūl*.

**மறுவ.** முதற்சூல்

*[தலை + பிள்ளை + சூல்]*

**தலைப்பிறை** *talai-p-piṟai,* பெ. (n.) **வளர் பிறையில் முதல்நாள்;** the first day of the bright fortnight (செ.அக.).

**மறுவ.** முதற்பிறை

*[தலை + பிறை]*

**தலைப்பு**[1] *talaippu,* பெ. (n.) **தோற்றுவாய்;** source; origin, as of a river. கங்கைக்குத் தலைப்பாகிய இமவானில் (இ.வ.) வாய்க்கால் தலைப்பு மண்மூடிக் கிடக்கிறது (உ.வ.).

*[உல் → துல் → தல் → தலை → தலைப்பு (ஒ. நோ.) மலைப்பு, களைப்பு, இளைப்பு]*

**தலைப்பு**[2] *talaippu,* பெ. (n.) 1. **நூலின்பெயர்;** heading, title, as of a book. 2. **தொடக்கம்;** beginning. தலைப்பிலே சொன்னேன் (உ.வ.). 3. **முன்றானை;** front part of a woman's cloth. அவள் புடவைத் தலைப்பை இழுத்து மூடிக் கொண்டாள் (உ.வ.). 4. **சீலைவிளிம்பு;** end, edge or corner of a cloth.

*[துல் → தல் → தலை → தலைப்பு. "பு" சொல்லாக்க ஈறு. (ஒ.நோ.) களைப்பு, உழைப்பு, வெளுப்பு, கொழுப்பு.]*

**தலைப்பு**[3] *talaippu,* பெ. (n.) **கதை, கட்டுரை, சொற்பொழிவு ஆகியவற்றின் பொருள் தலைப்பு;** title song, essay, lecture etc., 2. **குறிப்பானபொருள் தரும் சொல்,தொடர் அல்லது குறியீடு;** caption under a picture photograph etc., ஓவியர் தன் ஓவியத்தின் தலைப்பாக ஒரு கேள்விக்குறி இட்டிருந்தார் (உ.வ.).

*[தலை → தலைப்பு.]*

**தலைப்புச்செய்தி** *talaippu-c-ceydi,* பெ. (n.) **(வானொலி, தொலைக்காட்சி, இதழ்கள் ஆகியவற்றில்) முதன்மைச்செய்தி;** headline of a news, bulletin or story in a newspaper.

*[தலைப்பு + செய்தி]*

**தலைப்புணர்-த்தல்** *talai-p-puṇar-,* 4 செ.குன்றாவி. (v.t.) **பை முதலியவற்றின் வாயைக் கட்டுவதற்காகச் சுருக்குதல்;** to pucker, gather. "தலைப்புணர்த்தசைத்த பல்தொகைக் கலப்பையர்" (அகநா. 301).

**மறுவ.** சுருக்குப்போடுதல்.

*[தலை + புணர்-. சுருக்குப்பை என்பது தமிழக ஊரக மகளிர் வைத்திருக்கும் பை. இரண்டு அல்லது மூன்று அறைகள் இருக்கும். இருமுனையிலுள்ள குஞ்சங்களை இழுத்தால், பையின் வாய் சுருங்கி மூடிக் கொள்ளுந்தன்மையது. இடுப்பில் செருகி எடுத்துச்செல்வதற்கு, எளிதானது.]*

**தலைப்புணை** *talai-p-puṇai,* பெ. (n.) **சான்று;** main prop. "தலைப்புணை தழீஇ" (அகநா. 166).

*[தலை + புணை. முதன்மையான சான்று.]*

**தலைப்புரட்டல்** *talai-p-puraṭṭal,* பெ. (n.) தலையை அடிக்கடி உருட்டும் சாவின் அறிகுறி; rolling the head very often.

*[தலைப்புரட்டு → தலைப்புரட்டல்]*

**தலைப்புரட்டன்** *talai-p-puraṭṭaṉ,* பெ. (n.) பெரும் பொய்யன்; audacious liar (செ.அக.).

மறுவ. அண்டப்புழுகன், பெரும்புழுகன்,

*[ஒருகா. தலைப்புரட்டு → தலைப் புரட்டன்]*

**தலைப்புரட்டு** *talai-p-puraṭṭu,* பெ. (n.) 1. பெரும் பொய்; audacious lie. 2. நச்சரவு (தொந்தரவு) (வின்.); annoyance, vexation, trouble. 3. குழப்பம்; agitation, as of river, torrent. 4. கருவம்; haughtiness, insolence (செ.அக.).

மறுவ. அண்டப்புழுகு.

*[தலை + புரட்டு → தலைப்புரட்டு = யாரையும் பொருட்படுத்தாது, தருக்கித் திரியும் இறுமாப்பு; வீண்செருக்கு.]*

**தலைப்புரட்டையெறும்பு** *talai-p-puraṭṭai-y-erumbu,* பெ. (n.) கறுப்பெறும்பு வகை; black ant, as shaking its head, Camponotus compressus.

*[தலைபுரட்டை + எறும்பு]*

**தலைப்புரள்(ளு)-தல்** *talai-p-puraḷ(ḷu)-,* 16 செ.குவி. (v.i.) நீர் சுருண்டு பாய்தல்; to roll, flow impetuously, as the sea (செ.அக.).

*[தலை + புரள்(ளு)-,]*

**தலைப்புழுவெட்டு** *talai-p-pulu-veṭṭu,* பெ. (n.) தலையை வழுக்கையாக்கும் நோய்; baldness, Alopecia.

மறுவ. பூச்சிகடி; கரப்பான்வெட்டு.

*[தலை + புழுவெட்டு. புழுவெட்டு = மயிரை உதிரச்செய்யும் நோய்வகை)]*

**தலைப்புற்று** *talai-p-puṟṟu,* பெ. (n.) 1. தலையிலுண்டாகும் புற்றுநோய்; a disease attacking the scalp. 2. தலையிலுண்டாகும் ஒருவகைபுண்; canker on the head. 3. மண்டைக் கரப்பான்; scald head achor. 4. ஒரு எறும்பு; a species of ant.

*[தலை + புற்று. புற்று = புரை வைத்த புண்]*

**தலைப்பெட்டி** *talai-p-peṭṭi,* பெ. (n.) தலையிற் கவிழ்த்துக் கொள்ளும், ஓலையாலான பெட்டி (யாழ்.அக.); a kind of palm ōla covering for the head.

*[தலை + பெட்டி.]*

**தலைப்பெய்[1]-தல்** *talai-p-pey-,* 1 செ.குவி. (v.i.) ஒன்று கூடுதல்; to gather together, as clouds. "தலைப்பெய்து குமுறிச் சலம்பொதி மேகம்" (திவ். பெரியாழ். 4. 7:6).

*[தலை + பெய்-.]*

**தலைப்பெய்[2]-தல்** *talai-p-pey-,* 1 செ.குன்றாவி. (v.t.) 1. கிட்டுதல்; to meet, approach. "சங்க மிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்" (திவ். திருப்பா. 22). 2. பெய்துரைத்தல், இடைச் செறுகல்; to interpolate, superadd. "பொய் தலைப்பெய்தலும்" (தொல். பொருள். 237). 3. கூடுதல்; to join. "நும்மனை மடந்தையொடு தலைப்பெய்திமே" (ஐங்குறு. 86).

*[தலை + பெய்-.]*

**தலைப்பெய்தல்** *talai-p-peydal,* பெ. (n.) மூலத்தைப் பிடித்தல்; getting to the origin.

*[தலை + பெய்தல்]*

**தலைப்பெயர்-த்தல்** *talai-p-peyar-,* 4 செ.குன்றாவி. (v.t.) மீளச்செய்தல்; to redeem, recover. "இயன்ற நெஞ்சந் தலைப்பெயர்த்து" (தொல். பொருள். 147).

*[தலை + பெயர்-.]*

**தலைப்பெயல்** *talai-p-peyal,* பெ. (n.) முதன் மழை; first-rains. "தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்து" (திருமுரு. 9).

*[தலை + பெயல். வறட்சிக் காலத்தே முதன் முதலாகப் பெய்யும் புதுமழை]*

**தலைப்பெயலுவமை** *talai-p-peyal-uvamai,* பெ. (n.) எதிர்நிலையணி (புறநா. 60, உரை.); a figure of speech in which uvamāṉam and uvamēyam are inverted (செ.அக.).

*[தலைப்பெயல் + உவமை]*

**தலைப்பெயனிலை** *talai-p-peyaṉilai,* பெ. (n.) 1. மகப்பேறாகிய கடனையிறுத்து, தாய்இறந்த நிலையைக் கூறும் புறத்துறை (பு.வெ. 10, சிறப்பிற். 5) (puṟap); theme describing the death

of a mother on doing her duty of bringing forth a son. 2. (புறப்.) போர்க்களத்தினின்று புறங்காட்டிச் சென்ற மகனது செயற்காற்றாது, தாய் இறந்துபட்ட நிலைகூறும் புறத்துறை (தொல்.பொருள். 79, உரை.) (puṟap); theme describing the death of a mother in utter shame at the flight of her son from the battle-field.

*[தலைப்பெய் + நிலை → தலைப் பெயனிலை]*

**தலைப்பேரண்டம்** *talai-p-pēraṇḍam,* பெ. (n.) தலைப்பிள்ளையின் மண்டையோடு; the skull of the first-born child (சா.அக.).

**தலைப்பேழை** *talai-p-pēḻai,* பெ. (n.) வாய்க்காலின் தலைப்பு மதகு (S.I.I. i. 151.); head-sluice.

மறுவ. முதல்மதகு, தலைமதகு, முதன்மடை

*[தலை + பேழை; பேழை = பெட்டி; மதகுப் பெட்டி. தளமுகட்டின் உட்குழிவான கண்ணறை]*

மதகின் பின்புறம் பெட்டிபோன்று கட்டப் பட்டிருக்கும். வரும் நீரை எத்தனை காலாகப் பிரிக்க வேண்டுமோ, அத்தனை காலாகப் பிரிக்கத்தக்க துளைகள் இருக்கும். பேழை போன்ற கட்டுமானத்தைப் பின்புறம் பெற்றுள்ளதால், தலைமதகு, தலைப்பேழை ஆயிற்று.

**தலைப்பேறு** *talai-p-pēṟu,* பெ. (n.) 1. முதற் பிள்ளை; first issue, son or daughter. 2. முதல் மகப்பேறு (இவ.); first confinement.

மறுவ. முதற்பேறு, முதன்மகப்பேறு

*[தலை + பேறு. பேறு = மகப்பெறுகை]*

**தலைப்பேன்** *talai-p-pēṉ,* பெ. (n.) தலை முடியில் உள்ள பேன்; lice on the head, as dist. for. šilai-p-pēṉ (செ.அக.).

*[தலை + பேன். பேன் = தலை மயிரிலுண்டாகுஞ், சிற்றுயிரி]*

பேன் தலைமுடியிலும், அழுக்குத்துணியிலும் தோன்றும். தலைப்பேன், சீலைப்பேன் என்று வேறுபடுத்தப்படுகின்றது.

**தலைப்பேன்சிரங்கு** *talai-p-pēṉ-širaṅgu,* பெ. (n.) தலையிற் பேனால் உண்டாஞ் சொறி சிரங்கு; itch caused by lice on the head.

*[தலை + பேன் + சிரங்கு.]*

**தலைப்பொடிப்பு** *talai-p-poḍippu,* பெ. (n.) தலைப்பொடுகு பார்க்க; see *talai-p-poḍugu*.

*[தலை + பொடிப்பு]*

**தலைப்பொடுகு** *talai-p-poḍugu,* பெ. (n.) தலைச்சுண்டு; dandruff (செ.அக.).

மறுவ. தலைப்பொடிப்பு.

*[தலை + பொடுகு]*

**தலைப்பொத்தன்** *talai-p-pottaṉ,* பெ. (n.) பத்தடி நீளத்துக்கு மேல் வளரும் குழிமீன்; conger eel, olive, attaining more than 10 ft. in length, Muraenesox talabon (செ.அக.).

தெ. தலபொனு

*[தலை + பொத்தன்]*



**தலைப்போகு-தல்** *talai-p-pōgu-,* 8 செ.குவி. (v.i.) இறுதி வரை செல்லல்; to reach the very end. "தலைப்போகன்மையிற் சிறுவழி மடங்கி" (புறநா. 223).

*[தலை + போகு-.]*

**தலைப்போடகம்** *talai-p-pōḍagam,* பெ. (n.) பொடுதலை; a small creeping plant found in damp places.

**தலைப்போடம்** *talai-p-pōḍam,* பெ. (n.) தலைப்போடகம் பார்க்க; see *talai-p-pōḍagam.*

*[தலைப்போடகம் → தலைப்போடம்.]*

**தலைப்போடு-தல்** *talai-p-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) மேற்கொள்ளுதல் (யாழ்ப்.); to engage in, take on oneself.

*[தலை + போடு-.]*

**தலைமட்டம்** *talai-maṭṭam,* பெ. (n.) *1.* மேல் மட்டம் (இவ.); top level. *2.* ஆளுயரம்; height of a person. வீட்டுச்சுவர் தலைமட்டம் வளர்ந்துவிட்டது (உ.வ.).

மறுவ. ஆள்மட்டம்

*[தலை + மட்டம்]*

**தலைமடக்கு** *talai-maḍakku,* பெ. (n.) *1.* (அணி) செய்யுளடியின் முதற்சீரே, அவ்வடியில் மடங்கிவரும், மடக்கணிவகை; repetition of the first foot in one and the same line of a stanza (rhet.). *2.* சாவடி முதலியவற்றின் காவற்காகப் பெண்டிர்க்குக் கொடுக்கும் களப்பரிசு (வின்.) (கட்டித் தலைமீது கொண்டு போகப்படுமளவு); grain given at the threshing-floor to a woman in charge of a rest-house, as tied up and carried away on her head (செ.அக.).

மறுவ. முதல்மடக்கு

*[தலை + மடக்கு]*

**தலைமடங்கு-தல்** *talai-maḍaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* தலைகுனிதல்; to hang down one's head. *2.* கீழ்ப்படிதல் (பதிற்றுப். 71:8, உரை.); to submit. *3.* கதிர் முதலியன சாய்தல்; to bend, bow, as ears of grain.

மறுவ. தலைசாய்தல்

*[தலை + மடங்கு-.]*

**தலைமடி[1]-தல்** *talai-maḍi-,* 2 செ.கு.வி. (v.i.) *1.* இறத்தல்; to die. "இவ்வகை நூற்றிருபது புக்குத் தலைமடிய வேண்டுமென்பது" (இறை. 32, 150). *2.* கதிர் முதலியன சாய்தல்; to bend, bow, as ears of grain.

*[தலை + மடி-. மடிதல் = சாய்தல், இறத்தல்]*

**தலைமடி[2]-தல்** *talai-maḍi-,* 2 செ.கு.வி. (v.i.) குறைதல்; to wane; to lose intensity. "ஆசை தலை மடிந்ததுமல்ல" (திவ். அமலனாதி. 2: வ்யா. பக். 31).

*[தலை + மடி-.]*

**தலைமடு-த்தல்** *talai-maḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) தலையணையாகக் கொள்ளுதல்; to have, as a head-rest or pillow. "ஓடு தலைமடுத்துக் கண்படை கொள்ளும்" (மணிமே. 13:114.).

*[தலை + மடு-.]*

**தலைமடை** *talai-maḍai,* பெ. (n.) *1.* கிளைக் கால் பிரியும் முதல்மடை; head sluice of a tank, where a small channel branches off from the main channel, opp. to kaḍai-maḍai. *2.* நீர்ப்பாசனம் தொடங்கும் முதல்மடை; course of a channel where irrigation first begins.

மறுவ. தலைமதகு, கண்ணாறு (கல்.). முதல்மடை

தெ. தலமடவ

*[தலை + மடை (மடை = மதகு)]*

**தலைமண்டை** *talai-maṇḍai,* பெ. (n.) தலையோடு; skull (செ.அக.).

மறுவ. மண்டையோடு

*[தலை + மண்டை]*

**தலைமண்டையிடு-தல்** *talai-maṇḍai-y-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) மிதமிஞ்சுதல்; to exceed bounds. "பிரீதி தலைமண்டையிட்டுச் சொல்லுகிற வார்த்தை" (திவ்.திருமாலை. 44, 143: வ்யா.).

*[தலை + மண்டை + இடு-.]*

**தலைமண-த்தல்** *talai-maṇa-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* ஒன்றோடொன்று பின்னுதல்; to be intertwined together, entangled, as bamboos. "மூங்கில் தலைமணந்த காவற்காடு" (பு. வெ. 6, 20, கொளு, உரை). *2.* நெருங்கிக்கலத்தல்; to crowd, throng. "பகை தலைமணந்த பல்லதர்ச் செலவே" (அகநா. 105).

*[தலை + மண-.]*

**தலைமதகு** *talai-madagu,* பெ. (n.) ஏரி, கால்வாய் முதலியவற்றிலிருந்து தண்ணீர் திறந்து விடுவதற்கான கதவுள்ள, கட்டுமானம்; head sluice provided in the tanks and channel to let out water for irrigation, which has control to regulate supply of water (செ.அக.).

மறுவ. தலைமடை, தலைத்தூம்பு

*[தலை + மதகு. பாசனத்திற்கு விடும் தண்ணீரைத் தேவைக்கேற்றபடித் தேக்கி வைத்துத் திறப்பதற்காகக் கட்டப்படும் மூடி அல்லது கதவு, மதகு எனப்படும். மழைக்காலங்களில் கட்டுப்பாடின்றி அலைபுரளுந் தண்ணீரை, ஒழுங்குபடுத்தித் திறந்துவிடும் கட்டுமானம் உள்ள அமைப்பினை, மடை அல்லது தூம்பு என்று நமது முன்னோர் குறித்தனர்.*

**தலைப்போர்** *talai-p-pōr,* பெ. (n.) *1.* முற்செயல்; beginning, as of an act or process. *2.* முன்னிடம்; front.

*[தலை + போர்]*

**தலைபணி-தல்** *talai-paṇi-,* 2 செகுன்றாவி. (v.t.) வணங்குதல்; to bow one's head.

மறுவ. தலைவணங்குதல்.

*[தலை + பணி-. → தலைபணி-தல் = ஒருவரைக் கண்டு வணங்குங்கால், அவரவர்தம் பெருமை, சிறப்புகட்கேற்ப, தம் தலையைத் தாழ்த்திக்கொள்ளுதல் மரபாகும்; இறைமுன்பும், மதிப்புமிகு பெரியோர், பெற்றோர் முன்பும், நெடுஞ் சாண்கிடையாக விழுந்து வணங்குதல், தமிழகத்தின் தலையாய பண்புகளு ளொன்றாகும். பெற்றோர், ஆசிரியர், பெரியோர் முதலானோர், இதுகாறும் நடைபயின்று வந்த நல்வழியில், நானும் நடப்பேன் என்று நினைத்தலே, தலை பணிதலாகும். குனிந்து நிமிர்ந்து தலை பணிவதால், நிமிர்தற்கருத்தினின்று பணிதற்கருத்து உருவாயிற்றெனலாம்.]*

**தலைபரி-தல்** *talai-pari-,* 4 செ.கு.வி. (v.i.) எல்லை கடத்தல் (பு.வெ.12:8. கொளு, ஆண்பாற்.); to go beyond the limit.

*[தலை + பரி-.]*

**தலைபவனிவருவான்** *talai-pavaṉi-varuvāṉ,* பெ. (n.) சுழல்வண்டு; beetle.

*[தலைபவனி + வருவான்]*

**தலைபிடிக்கி** *talai-piḍikki,* பெ. (n.) கூட்டி வைப்போன்; one who procures for another the means of gratifying his passions.

*[தலை + பிடிக்கி]*

**தலைபிணங்கு-தல்** *talai-piṇaṅgu-,* 5 செ.கு.வி. (v.t.) ஒன்றோடொன்று மாறுபடுதல்; to contend, compete, strive. "கூடிநிரந்து தலைபிணங்கி யோடி" (ஐந். ஐம். 5).

*[தலை + பிணங்கு. பிணங்குதல் = மாறுபடுதல்.]*

**தலைபோகிற** *talai-pōgiṟa,* கு.பெ.எ. (adj.) தவிர்க்க இயலாத; urgent, compelling. வேளா வேளைக்குச் சாப்பிடாமல் அப்படி என்ன தலைபோகிற வேலை (உ.வ.).

*[தலை + போகிற]*

**தலைபோகுமண்டிலம்** *talai-pōgu-maṇḍilam,* பெ. (n.) இசைப்பா வகை (சிலப். 6: 35: உரை.); a kind of song.

*[தலை + போகு + மண்டிலம்]*

**தலைபோதல்** *talai-pōdal,* பெ. (n.) பெருங் கேடுறுகை; utter destruction. தலையே போகிறதென்றாலும், தொடங்கிய பணியை முடிக்காமல் விடமாட்டார் (உ. வ.).

*[தலை + போதல்]*

**தலைமக்கள்** *talai-makkaḷ,* பெ. (n.) *1.* மேன் மக்கள்; men of the first rank, great men, leaders. "தலைமக்க ளாகற் பாலார்" (நாலடி. 205). *2.* படைத்தலைவர்; commanders of armies. "தானை தலைமக்க ளில்வழி யில்" (குறள், 770).

மறுவ. உயர்ந்தோர்; சான்றோர்; அறவோர்; பெருமக்கள்

*[தலை + மக்கள்]*

**தலைமகள்** *talai-magaḷ,* பெ. (n.) *1.* மூத்தபெண்; eldest daughter. *2.* முதலாளி (வின்.); lady, matron. *3.* (அகப்.) அகப்பொருட்டலைவி; heroine of a love poem. "தலைமகள் கற்பினொடு மாறு கொள்ளாமையும்" (இறை. 14, 93, உரை). *4.* மனைவி (வின்.); wife.

மறுவ. முதற்பெண்; மூத்தபெண்; தலைச்சி

*[தலை + மகள்]*

**தலைமகன்** *talai-magaṉ,* பெ. (n.) *1.* தலைவன்; gentleman, lord, king. "தலைமக னுரைத்தது" (மணிமே. 3:97). *2.* (அகப்.) அகப்பொருட் டலைவன்; hero of a love poem. *3.* கணவன்; husband. "பூப்பின்கட்சாராத் தலைமகனும்" (திரிகடு. 17). *4.* மூத்தமகன்; eldest son. அவன் தாய்க்குத் தலைமகன். *5.* ஆதன் (ஆன்மா); soul. *6.* சிவன் (சித். குழுஉக். அக.); Śivaṉ.

மறுவ. முதற்பையன்; தலைச்சன்

*[தலை + மகன்]*

*"மடையும் அடைத்துத் தூம்பும் செய் வித்தான் பனைப்பூங்கிழான் தம்பி குமரன்" – திண்டிவனம் – கிடங்கில் காணப்படும் ஏரிக்கல்வெட்டு தொடக்கத்தில் இருப்பதால், தலைமதகு எனப்பட்டது.]*

**தலைமயக்கம்** *talai-mayakkam,* பெ. (n.) 1. **தலைமயக்கு** பார்க்க; see *talai-mayakku.* 2. **மனமயக்கம்;** dizziness of the mind.

மறுவ. தலைச்சுற்று

*[தலை + மயக்கம்]*

**தலைமயக்கு** *talai-mayakku,* பெ. (n.) **தலைச் சுற்று;** dizziness, giddiness (செ.அக.).

தெ. தலமயகமு.

*[தலை + மயக்கு]*

**தலைமயங்கு[1]-தல்** *talai-mayaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) *பிரிதல்;* to go astray, as a deer from its herd. "இனந் தலைமயங்கி" *(புறநா. 157: 9).*

*[தலை + மயங்கு–.]*

**தலைமயங்கு[2]-தல்** *talai-mayaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **பெருகுதல்;** to increase. "மறந்தலை மயங்கி" *(சூளா. மந்திர. 28).* 2. **கைகலத்தல்;** to fight at close quarters. "தமிழ் தலைமயங்கிய தலையாலங்கானத்து" *(புறநா. 19: 2).* 3. *கலந்திருத்தல்;* to be mixed up. "வளந்தலை மயங்கிய" *(சிலப். 14:178).* 4. **கெடுதல்;** to be ruined, to perish. "அறந்தலைமயங்கி வைய மரும்பட ருழக்கும்" *(சூளா. மந்திர. 25)* (செ.அக.).

*[தலை + மயங்கு–.]*

**தலைமயிர்வாங்கு-தல்** *talai-mayir-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **கைம்பெண் தலைமயிரை முதலில் எடுப்பித்தல்;** to shave a woman's head for the first time on her widowhood. 2. *முடியிறக்குதல்;* to shave the hair in fulfilment of a vow (செ.அக.).

மறுவ. மழித்தல் (குறள்); மொட்டையடித்தல்

*[தலைமயிர் + வாங்கு–.]*

**தலைமயிருதிரல்** *talai-mayir-udiral,* பெ. (n.) **தலையை வழுக்கையாக்கும் நோய்** (பைஷ. ஜ. 194); baldness, Alopecia.

மறுவ. முடிகொட்டுதல்; தலைப்புழுவெட்டு வழுக்கைவிழுதல்

*[தலை + மயிர் + உதிரல்]*

**தலைமழி-த்தல்** *talai-maḻi-,* 4 செகுன்றாவி. (v.t.) **மொட்டையடித்தல்;** to tonsure (செ.அக.).

*[தலை + மழித்–.]*

**தலைமறி-தல்** *talai-maṟi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. **நோய்முதலியன நீங்குதல்;** to disappear, as disease, distress, etc., "மாயனைக் காணில் தலைமறியும்" *(திவ். நாய்ச். 12:2).* 2. **செருக்கால் மகிழ்தல்** (இ.வ.); to be puffed up with pride.

*[தலை + மறி–.]*

**தலைமறை-தல்** *talai-maṟai-,* 2 செ.கு.வி. (v.i.) 1. **ஒளித்துக்கொள்ளுதல்;** to be concealed. 2. **மறைந்துபோதல்;** to abscond. விடுதலைப் போராட்ட காலத்தில், அரசின் அடக்கு முறைக்குப் பயந்து, பலர் தலைமறைந்து வாழ்ந்தனர் *(உ.வ.).*

மறுவ. தலைமறைவாதல்

*[தலை + மறை–.]*

**தலைமறைவாகு-தல்** *talai-maṟai-v-āgu-,* 5 செ.கு.வி. (v.i.) **ஒளிந்துவாழுதல்;** to go underground or into hiding abscond. அலுவலகப் பணத்தைக் கையாடிவிட்டுத் தலைமறைவாகி விட்டான் *(உ.வ.).*

*[தலை + மறைவாகு–.]*

**தலைமறைவு** *talai-maṟaivu-,* பெ. (n.) **(காவல் துறையினரால் அல்லது எதிரிகளால் தேடப்பட்டு வரும் ஒருவர், அல்லது அரசால் தடைசெய்யப்பட்ட இயக்கம்) மந்தணமாகச் செயல்படுகை;** (being secret of organization), underground. அந்தக்கட்சி சட்டப்படி தடை செய்யப்பட்டுவிட்டதால் தலைமறைவு இயக்கமாகச் செயல்படுகிறது *(இ.வ.).*

*[தலை + மறைவு.]*

**தலைமாட்டுவைத்தியன்** *talai-māṭṭu-vaittiyaṉ,* பெ. (n.) **மருத்துவந் தெரியாது உயிருக்குத் தீங்கு விளைவிப்போன்;** a pretender to medical skill likely to endanger life - Quack.

*[தலைமாடு + வைத்தியன்]*

**தலைமாடு** *talai-māḍu,* பெ. (n.) 1. **படுக்கையில் தலைப்பக்கம்;** head of a bed. 2. **தூரவளவு;** distance. ஏரை இரண்டுகாணித் தலைமாட்டிலே ஓட்டினேன் *(இ.வ.).* 3. **பக்கம்;** end, side, as of land. மேலைத்தலை மாட்டின் எல்லை *(இ.வ.).*

மறுவ. தலைப்பக்கம்

*[தலை + மாடு = பக்கம்]*

ஒரு கட்டிலில் தலைவைத்துப் படுக்கும் பகுதி தலைமாடு; கால் இருக்கும் பகுதி கால்மாடு. தலையணை வைத்துப்படுப்பதால், தலை சற்று உயர்ந்திருக்கும். கண் விழித்தவுடன் கால்மாட்டில் அமர்ந்திருப்பவர் தெரிவார்; தலைமாட்டில் அமர்ந்திருப்பவர் தெரியார். மாபாரதக் கதையில் இச்சூழல் பயன்படுத்திக் கொள்ளப்பட்டது.

**தலைமாணாக்கன்** *talai-māṇākkaṉ,* பெ. (n.) முதல்மாணவன் (நன்.38); ideal pupil (செ.அக.).

*[தலை + மாணாக்கன்]*

**தலைமாந்தம்** *talai-māndam,* பெ. (n.) குழந்தைகட்குக் காணும் வயிற்றுநோய் (பாலவா. 37); a disease of children caused by indigestion.

*[தலை + மாந்தம்]*

**தலைமாந்தநோய்** *talai-mānda-nōy,* பெ. (n.) தலை, கழுத்து, வீங்கி உடலில் வலியை உண்டாக்கும் செரியாமைநோய்; a kind of dyspepsia attended with swelling of the head and the neck and pain all over the body.

*[தலைமாந்தம் + நோய்]*

**தலைமாராயம்** *talai-mārāyam,* பெ. (n.) (புறப்.) பகைவனது தலையைக் கொடுவந்தவன் மனமுவக்கும்படி, மன்னன் செல்வமளித்ததைக் கூறும் புறத்துறை (பு. வெ. 4, 12); (puṟap) theme describing the bountiful reward bestowed by a king on a warrior, who brings in the head of an enemy.

*[தலை + மாராயம்]*

**தலைமாலை** *talai-mālai,* பெ. (n.) 1. தலைக் கணியும் கண்ணி; garland of flowers for the head. 2. சிவன் அணியுஞ் மண்டையோடுகள் கோர்த்த மாலை; garland of skulls worn by Šivaṉ. "தலைமாலை தலைக்கணிந்து" (தேவா. 1181: 1).

மறுவ. மண்டையோட்டு மாலை

*[தலை + மாலை]*

**தலைமாறு** *talai-māṟu,* பெ. (n.) மாற்றாள்; substitute, exchange. "அவ்விரண்டற்குந் தலைமாறாக, இக் காமநோயினையும் பசலையையும் எனக்குத் தந்து" (குறள், 1183, உரை).

*[தலைமாற்று → தலைமாறு]*

**தலைமிதழ்** *talai-midaḻ,* பெ. (n.) மூளை (C.G. 28); the brains; brain substance (செ.அக.).

தெ. மெதடு

மறுவ. தலைச்சோறு

*[ஒருகா. தல் → தலை + இதழ் → தலையிதழ் → தலைமிதழ்]*

**தலைமுகறந்தளன்** *talai-mugaṟandaḷaṉ,* பெ. (n.) தேற்றான்கொட்டை; water clearing nut.

**தலைமுடி** *talai-muḍi,* பெ. (n.) 1. தலையினுச்சி; crown of the head. 2. தலை மண்டையோடு; the skull. 3. தலைச்சிகை; lock of hair.

*[தலை + முடி. ஒ.நோ. கொடுமுடி, முடி = உச்சி]*

**தலைமுடிச்சுண்ணம்** *talai-muḍi-c-cuṇṇam,* பெ. (n.) 1. மயிர்ச்சுண்ணம்; any medicinal powder prepared from the skull. 2. தலைக் குழந்தை மண்டையோட்டிலிருந்து அணியமாக்கும் சுண்ணமருந்து; a calcined oxide prepared from the skull of the first bron child.

*[தலைமுடி + சுண்ணம்]*

**தலைமுடியுப்பு** *talai-muḍi-y-uppu,* பெ. (n.) தலைக்குழந்தை மண்டையோட்டை எரித்துச் சாம்பலிலிருந்து எடுக்கப்பட்ட உப்பு; salt extracted from the ash obtained by burning the skull of a first child.

*[தலைமுடி + உப்பு]*

**தலைமுண்டு** *talai-muṇḍu,* பெ. (n.) மேலாடை (நாஞ்.); upper cloth.

*[தலை + முண்டு (முண்டு = சிறுவேட்டி)]*

**தலைமுள்** *talai-muḷ,* பெ. (n.) முதலில் முளைக்கும் முள்; rostral spine.

மறுவ. முதல்முள்

*[தலை + முள்]*

**தலைமுழுக்கு** *talai-mulukku,* பெ. (n.) *1. மெய்ம்முழுதுங் குளிக்கை;* bathing head and all. *2. எண்ணெய்முழுக்கு;* bathing with oil. *3. மகளிர் தீட்டு;* catamenia, as requiring ceremonial bath. "பெண்கள் தலைமுழுக்க துண்டேல்" *(சினேந். 460).* 4. நோய்நீங்கிய பிறகு செய்யும் முதல்குளியல்; first bath in the convalescent stage. *5. கைவிடுதல்;* abandon. காதலனுடன் ஓடிப்போன மகளுக்காக தலைமுழுக்கு போட்டுவிட்டார் *(உ.வ.).*

*[தலை + முழுக்கு]*

**தலைமுழுகாமலிரு-த்தல்** *talai-mulugāmal-iru-,* 4 செ.குவி. (v.i.) *கருப்பமாயிருத்தல் (இ.வ.);* to be pregnant.

*[தலை + முழுகாமல் + இரு-,]*

**தலைமுழுகு[1]-தல்** *talai-mulugu-,* 5 செ.குவி. (v.i.) *1. மெய்முழுதுங்குளித்தல்;* to bathe head and all. *2. எண்ணெய்க்குளியல் செய்தல்;* to take an oil-bath. *3. மாதவிலக்கு முடிவில் குளித்துத் தூய்மையாதல்;* to take a ceremonial bath after menstruation. *4. நிலைகெடுதல் (இ.வ.);* to be ruined utterly.

*[தலை + முழுகு-.]*

**தலைமுழுகு[2]-தல்** *talai-mulugu-,* 5 செகுன்றாவி. (v.t.) *1. உறவை வெட்டிக்கொள்ளல்;* to server one's connection with, as a relative. *2. கை விடுதல்;* to give up as ir-recoverable, as a loan. கொடுத்த கடன் வராதென்று தெரிந்தால் தலை முழுகி விட வேண்டியதுதான் *(உ.வ.).*

*[தலை + முழுகு-.]*

**தலைமுறி[1]** *talai-muri,* பெ. (n.) *மீன் முதலியவற்றின் தலைக்கடுத்த துண்டம் (யாழ்ப்.);* portion near the head, as of yam, fish, etc.

*[தலை + முறி = முழுமைக்கருத்தினின்று முறித்தற்கருத்து தோன்றும்.]*

**தலைமுறி[2]** *talai-muri,* பெ. (n.) *ஆண்குறியின் நுனித்தோலையறுத்தல் (சுன்னத்து);* circumcision.

*[தலை + முறி. ஒ.நோ. நுனி → முனி, நுப்பது → முப்பது.]*

**தலைமுறியன்** *talai-muriyan,* பெ. (n.) *சுன்னத்து செய்து கொண்டவன்;* one who circumcised penis.

*[தலை + முறியன் = நுனித் தோலை அறுத்துக் கொண்டவன்.]*

**தலைமுறை** *talai-murai,* பெ. (n.) *கால்வழி, வழிவழி;* generation, lineal descent. "இவன் வழியாய்வரு மெட்டாந் தலைமுறையில்" *(பிரமோத் 5, 38).* கருப்புப்பன்றியை முழுதும் வெள்ளைப்பன்றியாக மாற்ற ஏழு தலைமுறை வேண்டும் *(உ. வ.).*

மறுவ. கொடிவழி.

*[தலை + முறை]*

**தலைமுறைதத்துவமாய்** *talai-murai-tattuvam-āy,* கு.வி.எ. (adv.) *வழிவழியாய்;* from generation to generation.

மறுவ. கொடிவழியாய், வாழையடி வாழையாய்.

*[தலைமுறை + தத்துவம் + ஆய். தத்துவம் = அசைச்சொல்லாக நின்றது.]*

**தலைமுறைப்பட்டவன்** *talai-murai-p-pattavan,* பெ. (n.) *பழங்குடியிற் பிறந்தவன் (வின்.);* scion of an ancient and honourable family.

*[தலைமுறை + பட்டவன். தொன்று தொட்டு வருந்தொல்பழங்குடியினன்]*

**தலைமூத்த** *talai-mūtta,* கு.பெ.எ. (adj.) *முதலாவதாகப் பிறந்த;* eldest-born *(செ.அக.).*

*[தலை + மூத்த]*

**தலைமூத்தமகன்** *talai-mūtta-magan,* பெ. (n.) *முதல்மகன்;* first-son.

மறுவ. தலைமகன்; தனையன்

*[தலை + மூத்தமகன்]*

**தலைமூர்ச்சனை** *talai-mūrccanai,* பெ. (n.) *வருத்தம், துன்பம்;* trouble, vexation, arduousness. "தலைமூர்ச்சனையான வேலை" *(வின்.) (செ.அக.).*

மறுவ. தலைநோவு

*[தலை + மூர்ச்சனை]*

**தலைமேற்கொள்(ளு)-தல்** *talai-mēṟ-koḷ(ḷu)-*, 7 செ.குன்றாவி. (v.t.) 1. **தலையால் வகித்தல், பணிவுடன் செய்தல்;** to accept with respect, as a command, etc., "இப்பணி தலைமேற் கொண்டேன்" *(கம்பரா. கைகேசி. 110)*. 2. **பொறுப்பையேற்றல்;** to undertake responsibility. அவன் எல்லாச் செயல்களையும் தலைமேற்கொண்டு பார்ப்பவன் *(உ. வ.)*.

*[தலைமேல் + கொள்(ளு)–.]*

**தலைமை**[1] *talaimai*, பெ. (n.) 1. **முதன்மைத் தன்மை;** headship, leadership. "முறைசெய்யான் பெற்ற தலைமை" *(திரிகடு. 80)*. 2. **மேன்மை;** superiority, pre-eminence, excellence. "சண்முகத் தலைமை மைந்தன்" *(சிவரக. மேரு. 21)*. 3. **முதன்மையான நிலைமை;** priority, as of rank, birth, etc., 4. **உரிமை** (உரி.நி.); ownership.

*[தல் → தலை + மை. "மை" பண்புப் பெயரீறு.]*

**தலைமை**[2] *talaimai*, பெ. (n.) **அதிகாரங்கள் நிறைந்த முதன்மை;** leadership.

*[தல் → தலை + மை.]*

**தலைமைஉரை** *talaimai-urai*, பெ. (n.) **கூட்டத் தலைமை தாங்குபவர் நிகழ்த்தும் உரை;** address of the president.

*[தலைமை + உரை]*

**தலைமைச்சிறியன்** *talaimai-c-ciṟiyaṉ*, பெ. (n.) **தலைமாணாக்கன், சட்டாம்பிள்ளை** (யாழ்ப்.); senior pupil in a school or class; monitor.

மறுவ. முதல்மாணாக்கன்

*[தலைமை + சிறியன். தலைமைப் பண்பினின்று கிளைத்த இச் சொல், அறிவு முதிர்ச்சியிலும், அகவையிலும் சிறந்த முதனிலைமாணவனைக் குறித்து வழங்கலாயிற்று]*

**தலைமைச்செயலகம்** *talaimai-c-ceyalagam*, பெ. (n.) **அரசின் முதன்மை அலுவலகம்;** head-quarters, secretariat. ஐக்கிய நாடுகள் அவையின் தலைமைச்செயலகம், நியூயார்க்கில் அமைந்துள்ளது. தமிழ்நாடு அரசின் தலைமைச் செயலக ஊழியர் நலச்சங்கம் தலைமைச் செயலகக் கோட்டையில் உள்ளது.

*[தலைமை + செயலகம்]*

**தலைமைஞ்சல்கொடி** *talaimaiñjal-koḍi*, பெ. (n.) **தலைமைந்தக் கொடி;** a kind of creeper.

*[தலைமைஞ்சல் + கொடி]*

**தலைமைதாங்கு-தல்** *talaimai-tāṅgu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **வழிநடத்தும் பொறுப் பேற்றல்;** preside over. நடக்கப் போகும் திரைப்பட வெள்ளிவிழாவிற்கு அமைச்சர் தலைமை தாங்குவார் *(உ.வ.)*.

*[தலைமை + தாங்கு–.]*

**தலைமைப்பாடு** *talaimai-p-pāḍu*, பெ. (n.) **பெருமை;** greatness, excellence. "இவன் தலைமைப் பாட்டிற்குப் போதாதென" *(திருக்கோ. 22, உரை.)*.

*[தலைமை + பாடு – தலைமைப்பாடு. கொண்ட, அரும்பணிக்குப் பெருமையும், புகழுஞ் சேர்க்குமுகத்தான், அரும்பாடு பட்டு உழைத்தல்; "தேவநேயர்தம் தலைமைப்பாடு பேரகரமுதலிக்குப் பெருமை சேர்த்தது"]*

**தலைமையாசிரியர்** *talaimai-y-āširiyar*, பெ. (n.) **பள்ளிக்குத் தலைமையேற்பவர்;** headmaster.

*[தலைமை + ஆசிரியர்]*

**தலைமைவகை** *talaimai-vagai*, பெ. (n.) **ஒன்றன் சார்பானன்றித் தலைமைப்பற்றிக் கூறும் முறை;** mode of stating a thing directly, dist. fr. šārttu-vagai. "அகத்திணைக்கட் சார்த்து வகையான் வந்தனவன்றித் தலைமைவகையாக வந்தில" *(தொல். பொருள். 54, உரை.)*.

*[தலைமை + வகை]*

**தலைமைவினை** *talaimai-viṉai*, பெ. (n.) **முதன்மை நிலையைச் சுட்டும் வினை;** main verb.

*[தலைமை + வினை.]*

**தலையகண்டம்** *talai-y-agaṇḍam,* பெ. (n.) ஓணான்; lizard.



**தலையகம்** *talai-y-agam,* பெ. (n.) நெல் அறுவடையானவுடன் விற்கும் விலை; price of paddy prevailing immediately after the harvest. "நீக்கி நின்ற நெல்லுக்குத் தலையகப் படிகாசு இடவும்" *(S.I.I.vii, 499).*

*[தலை + அக்கம் → தலையக்கம் → தலையகம் (அக்கம் = சிறுகாசு). தலையகம் = களத்துமேட்டில், அறுவடையாகிக் குவித்துவைத்துள்ள, நெற்பொலிக்கு இடப்படும் வரி.]*

**தலையங்கம்** *talai-y-aṅgam,* பெ. (n.) 1. செய்தித் தாள் ஆசிரியர் எழுதுங்கட்டுரை (editorial); leader, leading article. prevailing immediately after the harvest. 2. செய்தித்தாளின் தலைப்பில் செய்திகளைக் குறிப்பாக எடுத்துக்காட்டும் செய்திச்சுருக்கம்; heading; headline.

மறுவ. முகப்புரை

*[தலை + அங்கம் = செய்தித்தாளின் ஆசிரியர் எழுதும் முகப்புக்கட்டுரை.]*

**தலையடி[1]-த்தல்** *talai-y-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) அல்லற்படுத்துதல் (வின்.); to trouble, tease.

மறுவ. நெற்றியடி / துன்புறுத்துதல்.

*[தலை + அடி -.]*

**தலையடி[2]** *talai-y-aḍi,* பெ. (n.) தலையடிப்பு (வின்.) துன்பம், தொல்லை, தொந்தரவு; trouble, vexation, annoyance.

*[தலை + அடி]*

**தலையடித்துக்கொள்(ளு)-தல்** *talai-y-aḍittu-k-koḷ(ḷu)-,* 13 செ.குவி. (v.i.) தானே அல்லற்படுதல்; to trouble one-self. "தத்துவப் பேயோடே தலையடித்துக் கொள்ளாமல்" *(தாயு. உடல் பொய். 29).*

*[தலை + அடித்து + கொள்(ளு)-.]*

**தலையடிநெல்** *talai-y-aḍi-nel,* பெ. (n.) நெற் கதிரின் முதலடி நெல் (நெல்லை); paddy obtained at the first threshing of sheaves, considered superior (செ.அக.).

மறுவ. தலையடிப்பு

*[தலை + அடி + நெல் → தலையடிநெல் அறுவடைக்குப்பின்பு, முதற்கண் அடித் தெடுக்கப்படும் நெல்; இரண்டாவது முறை அடிக்கப்படும் நெல் சூட்டடிநெல் லாகும்.]*

**தலையடிநெற்றாள்** *talai-y-aḍi-neṟṟāḷ,* பெ. (n.) நெற்கதிர் முதலடிக்குப்பின் அடுக்கிவைக்கப் படும் வைக்கோற்போர்; hay stalk after first threshing.

மறுவ. வைக்கோற் போர்; வைக்கோற்படப்பு

*[தலை + அடி + நெல் + தாள். தாள் = வைக்கோல்.]*

**தலையடிப்பு** *talai-y-aḍippu,* பெ. (n.) 1. அலைக்கழிப்பு, தொந்தரவு (வின்.); trouble, vexation, annoyance. 2. நெற்கதிரின் முதலடி (இ.வ.); first threshing of paddy by beating the sheaves against the ground.

*[தலை + அடிப்பு]*

**தலையடு-த்தல்** *talai-y-aḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) சேர்த்துக் கூறுதல்; to add, as in speaking. "அன்பு தலையடுத்த வன்புறைக் கண்ணும்" *(தொல். பொருள். 114).*

*[தலை + அடு-.]*

**தலையண்டக்கருவழுக்கை** *talai-y-aṇḍa-k-karuvaḻukkai,* பெ. (n.) மூன்று திங்கள் நிரம்பிய தலைக்குழந்தைக் கரு; immature three month's first foetus.

மறுவ. இளவழுக்கை

*[தலையண்டம் + கரு + வழுக்கை]*

**தலையண்டம்** *talai-y-aṇḍam,* பெ. (n.) மண்டையோடு; skull bone.

**தலையணி** *talai-y-aṇi,* பெ. (n.) 1. தலைப் பாகை; head dress. 2. தலைக்கவசம்; helmet.

மறுவ. நெற்றிச்சுட்டி; தலைக்கோலம்

*[தலை + அணி]*



**தலையணை** *talai-y-aṇai,* பெ. (n.) 1. தலை வைத்துப்படுப்பதற்குப் பஞ்சு முதலியன அடைத்துத் தைத்த பை (திவா.); pillow. 2. ஆற்றுப்போக்கில், முதலில் உள்ள அணை; the very first dam or anicut near the source of a river (செ.அக.).

ம. தலயண

*[தலை + அணை → தலையணை. அணை = தண்ணீரைத் தேக்கும் தடுப்பு. தலையணை = தலைக்கு அணையாக உள்ள பை.]*

**தலையணைகண்டம்** *talai-y-aṇai-kaṇḍam,* பெ. (n.) முதிர்கரு; foetus.

*[தலையணை + கண்டம் → தலையணை கண்டம் = குழவியுருவடைந்த முழுக்கரு.]*

**தலையணைதாங்கி** *talai-y-aṇai-tāṅgi,* பெ. (n.) கட்டிலின் ஒருறுப்பு (யாழ்அக.); a constituent part of a cot.

*[தலை + அணை + தாங்கி]*

**தலையணைமந்திரம்** *talai-y-aṇai-mandiram,* பெ. (n.) மனைவி கணவனுக்கு இரவில் கமுக்கமாய்க் கூறும் அறிவுரை; curtain lectures, private advice of a wife to her husband, as given over the pillow. நான் சொன்னால் சரி என்று சொல்கிறவன் இன்று முடியாது என்கிறான். மருமகள் தலையணை மந்திரம் ஓதிவிட்டாளா? (உ.வ.).

*[தலையணை + மந்திரம்]*

**தலையரங்கேறு-தல்** *talai-y-araṅgēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) தான் கற்ற கலையை முதன் முறை அவையோர்க்குக் காட்டுதல்; to make one's first appearance on the stage as a performer. "தலைக்கோ லெய்தித் தலையரங்கேறி" (சிலப். 3: 161).

மறுவ. அரங்கேற்றம்

*[தலை + அரங்கேறு-.]*

**தலையரட்டை** *talai-y-araṭṭai,* பெ. (n.) 1. செருக்குடன் வீண்பேச்சுப் பேசுபவன்; to vain babbler. 2. வீண்பேச்சு; vain babbling (செ.அக.).

க. தலெகரதெ

*[தலை + அரட்டை → தலையரட்டை = வீண்பேச்சு ஒன்றையே மூலதனமாக உடையவன். செயற்பாடு ஏதுமின்றி, செருக்குடன் பதர்மொழி பலபகன்று, கிடைத்தற்கரிய காலத்தை வீணாக்குபவன். தலையரட்டைக்காரன், தலையரட்டை பிடித்தவன் என்பது தென்மாவட்டங்களிற் காணப்படும், வழக்காகும்.]*

**தலையரை** *talai-y-arai,* பெ. (n.) வரி வகை (S.I.I.vi, 155); a tax.

*[தலை + அரை = தலையரை. ஊரிலுள்ள ஒவ்வொருவருக்கும், ஊரவையார் விதித்த வரி.]*

**தலையல்** *talaiyal,* பெ. (n.) 1. சொரிகை (சூடா.); pouring, raining. 2. தலைப்பெய்மழை (பிங்.); first rains. 3. மழைபெய்து விடுகை (திவா.); cessation of rain. 4. புதுப்புனல் வரவு (அக.நி.); freshet.

மறுவ. தலைமழை, தலைப்பெயல், புதுப்பெயல்

*[தலை + பெயல் - தலைப்பெயல் → தலையல் = முதன்மழை, புதுத்தூறல்; விண்ணின்று மாரி வளங் குன்றியஞான்று, அஃதாவது, நீண்ட இடைவெளிக்குப் பின்பு பெய்யும், முதன்மழை.]*

**தலையலங்காரம்** *talai-y-alaṅgāram,* பெ. (n.) *1.* தலையை அழகு செய்தல் (இ.வ.); decoration of the head. *2.* தேர்க்கொடிஞ்சி (ஞானா. 7; உரை.); conical ornamental top of a car. "பொற்றே ரிருக்கத் தலையலங்காரம் புறப்பட்டதே" *(தனிப்பா. தி. i, 146: 45).*

மறுவ. தலைக்கோலம்.

*[தலை + அலங்காரம்]*

**தலையவதாரம்பண்ணு-தல்** *talai-y-avadāram-paṇṇu-,* 12 செ.குன்றாவி. (v.t.) தூக்கிடல்; to behead.

மறுவ. தலைவாங்குதல்.

*[தலை + அவதாரம் + பண்ணு-.]*

**தலையழி[1]-தல்** *talai-y-aḻi-,* 1 செ.கு.வி. (v.i.) அடியோடு கெடுதல், எச்சமின்றியழிதல், வசைமொழியாலழிதல்; to be ruined utterly ; to perish miserably, used in cursing.

மறுவ. முற்றுமழிதல், முழுதுங்கெடுதல்.

*[தல் → தலை + அழி-. = முழுவது மழிதல், முற்றுங்கெடுதல்]*

**தலையழி[2]-த்தல்** *talai-y-aḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* அடியோடுகெடுத்தல்; to ruin utterly. "தானவரை யென்றுந் தலையழித்தான்" *(இலக். வி. 646, உரை). 2.* தலைமை தீர்த்தல்; to destroy one's power. "சென்று தலையழிக்குஞ் சிறப்பிற் றென்ப" *(தொல். பொருள். 70).*

மறுவ. முற்றுங்கெடுத்தல்; முழுவதும் ஒழித்தல்; அனைத்தையும் அழித்தல்

*[தலை + அழி-.]*

**தலையழுக்கு[1]** *talai-y-aḻukku,* பெ. (n.) தலைமுழுக்கு (வின்.) பார்க்க; see *talai-muḻukku.*

*[தலை + அழுக்கு]*

**தலையழுக்கு[2]** *talai-y-aḻukku,* பெ. (n.) முதல் மாதவிலக்கு; the first monthly menstural blood of a female - Catamenia.

*[தலை + அழுக்கு]*

**தலையளி[1]-த்தல்** *talai-y-aḷi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* காத்தல்; to protect, save. "தானேவந் தெம்மைத் தலையளித்து" *(திருவாச. 7:6). 2.* அருளொடு நோக்குதல்; to regard with grace. "நாடுதலை யளிக்கு மளிமுகம்போல" *(புறநா. 67).*

*[தல் → தலை + அளி-.]*

**தலையளி[2]-த்தல்** *talai-y-aḷi-,* 4 செ.கு.வி. (v.i.) வரிசைசெய்தல்; to give presents. "தலைய ளித்தான் றண்ணடையுந் தந்து" *(பு. வெ. 2, 12).*

*[தலை + அளி-.]*

**தலையளி[3]** *taḷai-y-aḷi-,* பெ. (n.) *1.* முகமலர்ந்து இனிய கூறுகை; kind speech. "யாவர்க்குந் தலையளி செய்தலும்" *(குறள், 390). 2.* குறைவிலா அன்பு; ideal love. "ஆவிநீங்கின டலையளியாகிய ததுவன்றோ" *(கந்தபு. இரணியன்பு. 2). 3.* இரக்கங் காட்டுகை; அருள்பாலிப்பு; grace.

*[தலை + அளி. தல் → தலை; அள் → அளி. - தலையளி]*

எவ்வுயிருந் தம்முயிர்போ லெண்ணி அனைத்துயிர்களிடத்துங் காட்டும் மாசு மருவற்ற அன்பே, தலையைளி யெனப்படும்; அன்பின் முதிர்நிலை அருள்பாலித்தல்; உற்றார், அற்றார், பாராது எவரிடத்தும் அகமலர்ந்து, முகமலர்ந்து, நாம் நுவலுமினிய சொற்களே, மேற்கூறிய அனைத்திற்கும் அடிப்படை அறம்; இவ் வினிய சொற்களே, அறத்தின் முதுகெலும்பு; அனைவருக்கும் வேண்டப்படும் தனிப்பெரும் அறமும், இதுவேயாகும். இக் கருத்தினை, உலகத்தார்க்கு உணர்த்த விழைந்த வள்ளுவப் பேராசான், "முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானாம் இன்சொலினதே அறம்" என்றார்.

இத் தலையாய தலையளியைத்தான் திருவருட்பா வருளிய வடலூர் வள்ளற் பெருமானார், "அருட்பெருஞ் சோதி அருட்பெருஞ்சோதி, தனிப்பெருங் கருணை அருட்பெருஞ்சோதி" என்றார்.

ஈகத்தின் கரணியமாகக் காட்சிதரும், இத் தலையளி ஒன்றே, ஆதன் (ஆன்மா) அனைத்திற்குமுரிய உயர்பண்பு. சமயங்கள் அனைத்தும் ஆதனைச் சமைத்துப் பக்குவ மாக்குவதோடு அமையாது, அன்பையும், அளியையும் பலவாறு பாராட்டிப் பேசும் பான்மையில் அமைந்துள்ளன.

அதனற்றான் சிவணியத்தார், "அன்பே சிவம்" என்றனர். இதனையே கிறித்துவர் "அன்பே கடவுள்" [Love is god] என்று விதந்தோதினர்.

**தலையற்றநாள்** *talai-y-aṟṟa-nāḷ,* பெ. (n.) களை (புனர்பூசம்), கள்கு (விசாகம்), முற்கொழுங்கால் (பூரட்டாதி) என்ற விண்மீன்கள் (சோதிடகிரக. 40); the stars, puṉarpūcam, visāgam, pūraṭṭādi (செ.அக.).

*[தலை + அற்ற + நாள்.]*

**தலையற்றாள்** *talai-y-aṟṟāḷ,* பெ. (n.) கைம்பெண் (நிகண்டு) (தலைவனை யிழந்தவள்); widow, as one who has lost her husband (செ.அக.).

**மறுவ.** அறுதாலி, அறுதலி

*[தலை + அற்றாள் + தலையற்றாள்; தலை = தலைவன் அல்லது கணவன். கல்வாழ்விற்கு முதன்மையானவன் அற்றாள் = கணவனைத் துறந்தவள்]*

**தலையறை** *talai-y-aṟai,* பெ. (n.) **உடற்குறை** (நிகண்டு) **முண்டம்**; headless body (செ.அக.).

*[தலை + அறை = அறுபட்ட தலையை யுடைய முண்டம். தலையில்லாவுடல்.]*

**தலையன்பு** *talai-y-aṉbu,* பெ. (n.) தலையளி[3] (திருவுந்தி. 7, உரை) பார்க்க; see *talai-y-aḷi,[3]*.

**மறுவ.** பேரன்பு, தலையளி.

*[உல் → துல் → தல் → தலை. தலை + அல் + பு = தலையன்பு. 'பு' பண். பெ., தொ. பெ. ஈறு. ஒ. நோ: தெல் + பு = தென்பு, நல் + பு = நன்பு. உள்ளம் ஒன்றிப் பொருந்துவதன் விளைவே அன்பு.]*

தலையன்பு: எவ்வுயிருந் தம்முயிர் போலெண்ணி, எல்லோரிடத்தும் முதல் அன்பு பூண்டொழுகுவதே தலையன்பு; எல்லாம் வல்ல பேரருளாளன் இறைவன்; நில்லா வுலகத்தில், நிலைத்த புகழ் பெறவிழையும், எல்லா மாந்தர்க்கும், முதற்கண் வேண்டற்பாலது, முதலன்பாம், இத்தலையன்பேயாகும். இப்பொதுப் பண்புாம் தலையன்பே, மன்பதை மாந்தர்க்குரிய அடிப்படை அன்பாகும். இத் தலையன்புடையாரே எல்லா முடையார். அதனாற்றான் வள்ளுவரும், "அன்புடையார் எல்லாம் உடையார்" என்றார்.

இத் 'தலையன்பு' முதற்கண் தொடர்புடையார் மாட்டுத் தோன்றிப் பின்ன ரனைவரிடத்துஞ் சுரக்கும் அருள்வெள்ளமாக மாறுமென்பார்" தேவநேயர். அன்பகத்தில்லாத உயிரின் வாழ்க்கையால், பயன் ஏதுமில்லை.

அதனாற்றன் மொழிஞாயிறு, தலைவன், தலைவியரிடத்தே, இத் தலையன்பு, முதற்கண் முகிழ்க்கு மென்கிறார். இதுவே நாளடைவில், அருளாக வளருமென்பார்.

இல்வாழ்வாரிடத்து முகிழ்த்த, இத் தலை யன்பே, காலப்போக்கில், குழவியர்தம் மழலையிற் கரைந்து, உற்றார், உறவினரிடத்தே பற்றிப்படர்ந்து, கொடிவழி மலர்ந்து, விருந்தோம்பிக் காத்து, இனியவை கூறித் துறந்தாரைப்பேணி, நடுவுநின்றோங்கி, ஒழுக்கத்துட் சிறந்து, ஒழுகியுயர்ந்து, தொடர்பற்றாரிடத்தும் அருளாகக் கனிந்து, மாந்தர்தமை வாழ்விக்கின்றது.

இவ் வையகத்தை வாழ்வாங்கு வாழ்விக்க வந்த தாயே, தலையன்பு; இதுவே அனைவருக்கும் வேண்டப்படும் முதலன்பு; இத் தாயீன்ற குழவியே அருள்! இவ் வருளின் வடிவமாகத் தோன்றும் மன்பதை மாந்தர், தலையன்பினைக் காக்குந் தாழ் ஆவர்.

இத்தலையாய கருத்தினை, நெஞ்சிற் கொண்ட முப்பாலுரைத்த வள்ளுவப் பேராசான், "அன்பின் வழியது உயிர்நிலை" என்றார். இங்கு உயிர்நிலை யென்றது, ஆதன் நிலையையே.

இவண், ஓர்ந்துணரத்தக்க செய்தியும் ஒன்றுண்டு. தலையுள்ள எல்லா ஆதனை (ஆன்மா)யுமே "உயிர்" என்றுரைத்தா ரெனலாம்.

**தலையா-தல்** *talai-y-ā-,* 6 செ.கு.வி. (v.i.) **மேன்மையாதல்;** to become prominent. "தமருட் டலையாதல்" (பு. வெ. 3, 6).

*[தலை + ஆ-.*

*மாந்தரனைவரிடத்தும், அன்பும், அருளுங்கொண்டொழுகி, மேன்மையுடைத்தாதல். இதுவே, தலைமைத்தன்மைக்கு வேண்டப்படும் பண்புகளுள், தலையாய பண்பாகும்.]*

**தலையாகுமோனை** *talai-y-āgu-mōṉai,* பெ. (n.) **செய்யுளின் ஓரடியின் எல்லாச் சீரிலும், மோனையெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது** (காரிகை, ஒழிபி. 6, உரை.); (pros.) alliteration of the first letter of each foot in a line.

*[தலையாகு + மோனை]*

**தலையாகெதுகை** *talai-y-āgedugai,* பெ. (n.) முதற்சீர் முழுதும் ஒன்றிவரும் எதுகை (காரிகை. ஒழிபி. 6, உரை.); rhyming of the initial foot in each line of a stanza (செ.அக.).

*[தலையாகு + எதுகை]*

**தலையாட்டம்** *talai-y-āṭṭam,* பெ. (n.) 1. தலை நடுக்கம்; trembling of the head, as from palsy. "வந்த தலையாட்டமன்றி வந்தது பல்லாட்டம்" (அருட்பா. நாமாவளி. 164). 2. பேரச்சம் (இ.வ.); extreme fear. 3. செருக்கு (இ.வ.); arrogance. 4. குதிரைத் தலையணிவகை; plume of hair on a horse's head. "துஞ்சாகிய சிவந்த தலையாட்டத் தினையும்" (கலித். 96, உரை).

தெ. தலாயட்டமு; ம. தலையாட்டம்

*[தலை + ஆட்டம்]*

**தலையாட்டி** *talai-y-āṭṭi,* பெ. (n.) தலையாட்டிப்பொம்மை (இ.வ.) பார்க்க; see *talai-y-āṭṭi-p-pommai.*

*[தலை + ஆட்டி]*

**தலையாட்டிப்பொம்மை** *talai-y-āṭṭi-p-pommai,* பெ. (n.) எதற்கும் இணங்கி நடப்பவன் (இங்கு மங்கும் தலையசைத்தாடும் பொம்மை); lit., a doll moving its head to and fro. a servile person. நீ சொல்வதையெல்லாம் செய்வதற்கு நான் என்ன தலையாட்டிப் பொம்மையா? (உ.வ.).

மறுவ. தஞ்சாவூர்ப்பொம்மை

ஆமாம்சாமி போடுபவன்.

*[தலை + ஆட்டி + பொம்மை = தலையாட்டிப் பொம்மை. வண்ணத் தாள்களை ஒட்டிச் செய்யப்படும் சுடுமண் பொம்மை; இப் பொம்மையின் அடித் தளம் எவ்வளவு சாய்த்தாலும், நிமிர்ந்து கொள்ளுந் தன்மையில் வளைவாகச் செய்யப்பட்டிருக்கும்; தஞ்சாவூர்ப் பகுதியில், இது மிகுதியாகச் செய்யப் படுவதால், "தஞ்சாவூர்த் தலையாட்டிப் பொம்மை" எனப்பெயர் பெற்றது.*

*இப் பொம்மை நிலையாக நிற்காது. இப் பொம்மை போன்று நிலையற்ற குணத்தன். எடுப்பார் கைப்பிள்ளை போன்று, அனைவர் பேச்சினுக்கும், செயல்பாட்டினுக்கும், ஆமாம்சாமி போடுந்தன்மையன். கொள்கையிலோ அறத்திலோ, ஊட்டமின்றி வளைந்து கொடுப்பவன் ]*



**தலையாட்டு-தல்** *talai-y-yāṭṭu-,* 5 செகுவி. (v.i.) உடன்பாட்டை எளிதில் தெரிவித்தல்; nod, (as a gesture that he should agree to any proposal without thinking it over.) தன்னறிவு இல்லாதவன் யார் சொன்னாலும் தலையாட்டுவான் (உ.வ.).

*[தலை + ஆட்டு-.]*

**தலையாடி** *talai-y-āḍi,* பெ. (n.) 1. பனை மரத்தின் நுனிப்பாகம் (யாழ்ப்.); top most part of the trunk of a tree, commonly of a palm, as unfit for use. 2. ஒரு செய்யுளின் பிற்பகுதி (ஈடு, 7.5:10); latter half of a stanza. 3. திருமணமானபின் வரும் ஆடிப்பண்டிகை; the first āḍi month after marriage in which the bridegroom will receive gifts from father-in-law. 4. கடகத் (ஆடித்) திங்களின் முதல் நாள் - திருநாள்; the first day of the Tamiḻ āḍi month a festival (செ.அக.).

மறுவ. முதலாடி

*[தலை + ஆடி]*

**தலையாடை** *talai-y-āḍai,* பெ. (n.) கரும்பு முதலியவற்றின் நுனிப்பாகம்; தோகை; top portion of the stem of plants, like sugar - canes, etc., "எட்டுக் கண்ணான கரும்பிலே வேர்ப்பற்றுந் தலையாடையுங் கழிந்தால்" (ரஹஸ்ய. 820).

*[தலை + ஆடை = தலையாடை. கரும்பு, சோளம், கம்பு முதலான பயிர்களிடைத்*

*தோன்றும் நுனித்தாள் பகுதி அல்லது முதற்குருத்துதாள், தலையாடை எனப்படும்]*

**தலையாண்டு** *talai-y-āṇḍu,* பெ. (n.) ***1.*** **முதலாமாண்டு நினைவு நாள்;** first anniversary of a deceased person. ***2.*** **முந்தியஆண்டு;** previous year, as dist. fr. tannāṇḍu.

**மறுவ.** முதலாண்டு

*[தலை + ஆண்டு]*

**தலையாப்பு** *talai-y-āppu,* பெ. (n.) **வடிசோற்றின் மேற் பரந்துள்ள கஞ்சியாடை;** thin layer of crust formed over boiled rice gruel. "தலையாப்புப் பரத்தலை யுடைய அடிசிலை" *(பெரும்பாண். 476, உரை.).*

**மறுவ.** கஞ்சியேடு

*[தலை + அப்பு = தலையாப்பு (அப்பு = நீர்)]*

சோற்றுநீரை வடித்தெடுக்குங்கால், அந்நீற்றின் மேற்படர்ந்த ஆடை போன்ற மெல்லிய கஞ்சியேடு, 'தலையாப்பு' எனப்படும்.

**தலையாய்ச்சல்** *taḷai-y-āyccal,* பெ. (n.) **முன்னது** *(யாழ்ப்.);* first process; first time, front part.

*[தலை + ஆய்ச்சல். ஒருகா. பாய்ச்சல் → ஆய்ச்சல்]*

**தலையாய** *talai-y-āya,* பெகுஎ. (adj.) **முதன்மை வாய்ந்த; மிகச்சிறந்த;** foremost, principal. இவர் உலகின் தலையாய அறிவியல் வல்லுநர் *(உ.வ.).* ஊழல்களை வெளிப்படுத்தியதில், இந்தத் தாளிகைக்கு தலையாய பங்கு உண்டு *(உ.வ.).*

**தலையாயார்** *talai-y-āyār,* பெ. (n.) **பெரியோர்;** persons of the first rank, eminent persons. "கல்லாக் கழிப்பர் தலையாயார்" *(நாலடி., 36, 6).*

**மறுவ.** மேலோர்.

*[தலை + ஆயவர் = தலையாயவர் → தலையாயார்*

*அனைத்துப் பண்பிலும், முதன்மையாகத் திகழுஞ் சான்றோர்]*

**தலையாரி**[1] *talai-y-āri,* பெ. (n.) **ஊர்க்காவற்காரர்** *(G. D. I. 208);* village - watchman; one of the menial servants of a village administration, whose duty includes giving information of offences, guiding travellers etc., *(செ.அக.).*

தெ., க. தலாரி; ம. தலயாளி.

**மறுவ.** மேலோர்

*[தலைமை + ஆர் = தலைமையார் → தலையார் → தலையாரி*

*தலையாரி : ஊரவையாரால் பணியமர்த்தஞ் செய்யப்பட்ட ஊர்க் காவலன்]*

**தலையாரி**[2] *talai-y-āri,* பெ. (n.) **பம்பர விளையாட்டு வகையுளொன்று;** a kind of top-play.

*[தலை + ஆரி → தலையாரி. ஆரி → ஆரித்தல் = ஆட்டுதல். தலையில் கயிறு சுற்றி ஆட்டும் சிறுவர் விளையாட்டு (செ.ப.சி. 20)]*

**தலையாரிக்கம்** *taḷai-y-ārikkam,* பெ. (n.) **தலையாரிக் காவலுக்குச் செலுத்தும் வரி** *(I. M. TJ. 1312);* watchman's dues.

*[தலை + ஆரிக்கம்: ஊர்க்காவல் செய்வோர்; அவர் செலுத்தும் வரி]*

**தலையாரிப்பு** *taḷai-y-ārippu,* பெ. (n.) ***1.*** **கட்டிய கல்லுப்பு;** consolidated common-salt. ***2.*** **உப்பு மணி;** beads obtained by consolidated salt.

**தலையாலங்காடு** *taḷai-y-ālaṅgāḍu,* பெ. (n.) **தலையாலங்கானம்** பார்க்க; see *talai-y-ālaṅgāṉam* (செ.அக.).

*[தலை + ஆலங்காடு]*

**தலையாலங்கானம்** *talai-y-ālaṅgā-ṉam,* பெ. (n.) **சோணாட்டில் பாண்டியன் நெடுஞ்செழியன் போர்புரிந்து வெற்றி கொண்ட ஓர் ஊர்;** a place in Tañjore district, where the Pāṇḍyaṉ king Neḍuñ-šeḻiyaṉ won a great victroy. "தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து" *(புறநா. 19: 2).*

**மறுவ.** ஆலங்கானம்; தலையாலங்காடு (அபிதா. சிந்.) ஆலங்காடு

*[தலை + ஆலங்கானம் = தலையாலங் கானம். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், இருபெருவேந்தரையும், ஐம்பெருவேளிரையும், பொருதுவென்ற ஊர்]*

**தலையாறு** *taḷai-y-āṟu*, பெ. (n.) ஆற்றின் தோற்றுவாய் (வின்.); source of a river.

*[தலை + ஆறு = ஆற்றின் பிறப்பிடம்]*

**தலையானட-த்தல்** *taḷai-y-āṉaḍa-*, 3 செ.கு.வி. (v.i.) 1. செறுக்குமிகுதல்; to be reckless, haughty. 2. பெருமுயற்சி செய்தல்; to put forth great efforts. 3. முழு ஈடுபாட்டுடன் பணி செய்தல் (இ.வ.); to render service whole heartedly (செ.அக.).

*[தலை + ஆல் + நட-. ஆல் = மூன்றாம் வேற்றுமை உருபு.]*

**தலையிடி** *talai-y-iḍi*, பெ. (n.) தலைவலி; head-ache. "பொன்றிணி கழற்கான்மைந்தன் றலையிடி பொருந்திப்பட்டான்" (உபதேசகா. சிவத்துரோ. 476).

மறுவ. மண்டையிடி தலைக்குத்து, தலைநோவு

*[தலை + இடி. (இடி = குத்து நோவு)]*

**தலையிடிப்பு** *talai-y-iḍippu*, பெ. (n.) தலையிடி பார்க்க; see *talai-iḍi* (செ.அக.).

*[தலை + இடிப்பு]*

**தலையிடு[1]-தல்** *talai-y-iḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. நுழைதல்; to engage, venture, enter. "தலையிட்டு வாதுமுயல் சாக்கியர்" (அரிசமய. பாயி.) . 2. தேவையில்லாமல், பிறர்செயலில் புகுதல்; to meddle, interfere in other's affairs.

*[தலை + இடு-.]*

**தலையிடு[2]-தல்** *talai-y-iḍu-*, 19 செ.குன்றாவி. (v.t.) கூட்டுதல்; to add, superimpose. "மூன்று தலையிட்ட முப்பத்திற் றெழுத்தின்" (தொல். எழுத். 103).

மறுவ. மூக்கு நுழைத்தல்

*[தலை + இடு-.]*

**தலையில்லாச்சேவகன்** *talai-y-illā-c-cēvagaṉ*, பெ. (n.) 1. நண்டு (யாழ்.அக.); crab. 2. தலை யில்லாத வேலையாள்; lit., headless servant (செ.அக.).

*[தலை + இல்லா + சேவகன்]*

**தலையில்விடி-தல்** *talai-y-il-viḍi-*, 2 செ. குன்றாவி. (v.t.) பிறர்பொறுப்பு தன்மேல் விழல்; toll to one's lot. எதிர்பாராது தந்தை இறந்ததால் குடும்பத்தை நிருவகிக்கும் பொறுப்பு அவன் தலையில் விடிந்தது (உ.வ.).

*[தலையில் + விடி. பிறர் ஆற்ற வேண்டிய பணி, நிருவகிக்கும் பொறுப்பு முதலானவை, அவர் எதிர்பாராதவாறு அவரிடம் வந்து சேர்தல்]*

**தலையில்விழு-தல்** *talai-y-il-viḻu-*, 2 செ.கு.வி. (v.i.) தலையில் விடி-தல் பார்க்க; see *talai-y-il-viḍi-*.

*[தலை + இல் + விழு-.]*

**தலையிலடி-த்தல்** *talai-y-il-aḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஒருவனது தலையைத் தொட்டு ஆணையிடுதல்; to swear, take an oath, as by striking on the head of a person. 2. நேர்மையற்ற செயல் செய்தல்; to do injustice, as in offering an absurdly low price.

*[தலையில் + அடி-.]*

**தலையிலாக்குருவி** *talai-y-ilā-k-kuruvi*, பெ. (n.) குருவிவகை (பிங்.); sparrow, Hirundinidae (செ.அக.).

மறுவ. மழைக்குயில், தூக்கணாங்குருவி

*[தலை + இலா + குருவி]*



**தலையிலாவாணி** *talai-y-ilā-v-āṇi*, பெ. (n.) ஆணி வகை (C.E.M.); broad nail.

*[தலை + இலா + ஆணி = மேல் முகப்பில்லாத ஆணி]*

**தலையிலெழுத்து** *talai-y-il-eḻuttu*, பெ. (n.) தலையெழுத்து பார்க்க; see *talai-y-eḻuttu* (செ.அக.).

*[தலையில் + எழுத்து]*

**தலையிலெழுது-தல்** *talai-y-il-eḻudu-, 5* செ.கு.வி. (v.i.) **விதியமைத்தல்;** to predetermine one's fate or destiny, as writing on one's head (செ.அக.).

*[தலையில் + எழுது-.]*

**தலையிற்கட்டு-தல்** *talai-y-iṟ-kaṭṭu-, 5* செ.குன்றாவி. (v.t.) **ஒருவனை ஒன்றற்குப் பொறுப்பாக்குதல்;** to impose a responsibility upon another, as the care of a child, payment for goods, etc., நுகர்பொருள் அங்காடிக்குச் செல்லும் வேலையை யார் தலையில் கட்டலாம் என்று எண்ணுகிறாயா? (உ.வ.). இரண்டு பிள்ளைகளையும் என் தலையில் கட்டிவிட்டுத் திரைப்படத்திற்குச் சென்று விட்டார்கள் (இ.வ.). நீ சற்று ஏமாந்தால் கடைக்காரன் அழுகல் தக்காளியை உன் தலையில் கட்டிவிடுவான் (உ.வ.).

*[தலையில் + கட்டு-.]*

**தலையிற்போடு-தல்** *talai-y-iṟ-pōḍu-, 19* செ.குன்றாவி. (v.t.) *1.* **உறுதியாக்குதல்;** to make responsible as putting on one's head. *2.* **பழி சுமத்துதல்;** to impute blame, accuse (செ.அக.).

*[தலையில் + போடு-.]*

**தலையிறக்கம்** *talai-y-iṟakkam,* பெ. (n.) *1.* **(தலைசாய்கை) சாவு;** grief, chagrin, as hanging down one's head. *2.* **தலை நாணுகை;** looseness of the head. நாணத்தால் வெட்கி தலைசாய்கை.

*[தலை + இறக்கம். (இறக்கம் = இறப்பு). (ஒருகா உறக்கம் → இறக்கம்.]*

"உறங்குவது போலும் சாக்காடு" (குறள், 339).

**தலையிறக்கம்**[2] *talai-y-iṟakkam,* பெ. (n.) **சாவுக்குண்டான அறிகுறி;** head hangs down a death symptom.

**மறுவ.** சாக்குறி, தலையுருட்டல்.

*[தலை + இறங்கு → தலையிறங்கு → தலையிறக்கம் (இறக்கம் = சாவு)]*

**தலையீடு**[1] *talai-y-īḍu,* பெ. (n.) *1.* **தலையிடுகை;** engaging, undertaking. உங்கள் செயற்பாடு பற்றி, அவர் தெரிவித்த கருத்தைத் தலையீடு என்று கருத வேண்டாம் (உ.வ.). தொழிலாளர்கள் தங்கள் சம்பளத்தை முடிவு செய்ய, அரசின் தலையீட்டைக் கோரினர் (இ.வ.). *2.* **முதற்றரம்;** first quality, highest grade. தலையீட்டு நிலம் (உ.வ.).

*[தலை + இடு → ஈடு]*

**தலையீடு**[2] *talai-y-īḍu,* பெ. (n.) *1.* **தலைப்பிவிருப்பது;** that which is nearest or first. "ஆற்றங்கரையில் தலையீட்டுக் கொல்லையில்" (S.I.I. vii, 18). *2.* **முதலீற்று** (இ.வ.); first delivery or yeaning; first crop. *3.* **சுவரின் அழகுமுகடு;** (arch.) coping (செ.அக.).

*[தலை + ஈடு]*

**தலையீண்டு-தல்** *talai-y-īṇḍu-, 12* செ.கு.வி. (v.i.) **ஒன்றுகூடுதல்;** to assemble, gather. "மாயிரு ஞாலத்தரசு தலையீண்டும்" (மணிமே. 1: 25) (செ.அக.).

*[தலை + ஈண்டு-. (ஈண்டு-தல் = கூடுதல்)]*

**தலையீற்று** *talai-y-īṟṟu,* பெ. (n.) *1.* **முதலீனுகை;** first calving, yeaning. *2.* **முதற்கன்று;** firstling of cattle.

**ம.** தலயீற்று

**மறுவ.** முதலீத்து.

*[தலை + ஈத்து → ஈற்று (ஒ.நோ. காத்து → காற்று. மாத்து → மாற்று (ஈற்று = ஈனுகை)]*

**தலையீற்றுக்கடாரி** *talai-y-īṟṟu-k-kaḍāri,* பெ. (n.) **முதலில் ஈன்ற பெண்கன்று;** first-born female calf (செ.அக.).

**மறுவ.** தலயீத்துக்கடாரி

*[தலையீற்று + கடாரி. (கடாரி = ஆவின் பெண் கன்று)]*

**தலையீற்றுப்பசு** *talai-y-īṟṟu-p-pašu,* பெ. (n.) **முதன்முதற் கன்றீன்ற பசு;** cow that has calved but once (செ.அக.).

*[தலை + ஈத்து → ஈற்று + பசு]*

**தலையுடைத்துக்கொள்(ளு)-தல்** *talai-y-uḍaittu-k-koḷ(ḷu)-, 13* செ.கு.வி. (v.i.) **பெரும் முயற்சி எடுத்தல்;** to take great trouble, as breaking the head over a work.

*[தலை + உடைத்து + கொள்-.]*

**தலையுடைப்பு** *talai-y-uḍaippu,* பெ. (n.) 1. **அல்லல்மிக்க வேலை;** troublesome, intricate work. 2. **தலையிடி** பார்க்க; see *talai-y-iḍi.*

**மறுவ.** திருக்குமறுக்கு வேலை

*[தலை + உடைப்பு = தலையுடைப்பு மென்மேலும் தொல்லை தருந் தன்மையுள்ள தெளிவற்ற வேலை.]*

**தலையுண்டம்** *talai-y-uṇḍam,* பெ. (n.) **தலைச்சவ்வு;** membrane of the head (செ.அக.).

**தலையுதயம்** *talai-y-udayam,* பெ. (n.) **பேறு காலத்தில், தலை வெளிப்படுகை;** presentation of head in delivery.

**தலையுதிர்நெல்** *talai-y-udir-nel,* பெ. (n.) **பெரும்பான்மையும் விதைக்குப் பயன் படுவதும், முதலடிப்பில் எடுக்கப்படுவதுமான நெல்** (நாஞ்.); the paddy collected at the first threshing and used generally as seeds.

**மறுவ.** விதைநெல்; தலையடிநெல்

*[தலை + உதிர் + நெல் = தலையுதிர்நெல். நன்கு முற்றித்திரண்டு, முதிர்ந்த நெல்மணி; முதலடிப்பிலேயே தெரிவுசெய்து எடுக்கப்பட்ட நேர்த்தியான விதைநெல்]*

**தலையுருட்டல்** *talai-y-uruṭṭal,* பெ. (n.) **தலையை உருட்டிக்கொண்டேயிருத்தல், சாவின் அறிகுறி;** rolling of the head of a patient restlessly, while in bed which is considered as a symptom of death.

**தலையுலாஞ்சல்** *talai-y-ulañjal,* பெ. (n.) 1. **தலைநடுக்கம்;** involuntary trembling of the head. 2. **தலை கிறுகிறுத்தல்;** reeling of the head.

**தலையுவா** *talai-y-uvā,* பெ. (n.) **காருவா;** the new moon. "தலையுவாவிற் செய்யோ னாயிறெழ" (விதான. எச்ச. 38).

*[தலை + உவா]*

**தலையெடு[1]-த்தல்** *talai-y-eḍu-,* 4 செ.குவி. (v.i.) 1. **தலைநிமிர்தல்;** to stand with head erect, as in pride. "தேவரெதிர் தலையெடுத்து விழியாமைச் சமைப்பதே" (கம்பரா. சூர்ப்பன. 101). 2. **புகழ் பெறுதல்;** to become eminent, celebrated, distinguished. "வானவர் தலையெடுத்திலர்" (கம்பரா. கும்பக. 338). 3. **பெருகுதல்;** to flourish, become prosperous. "மனுநெறி தலை யெடுக்கவே" (கலிங். 251). 4. **தோன்றுதல்;** to sprout, come into being. செடி தலையெடுக்கிற போதே (உ.வ.). 5. **இழந்த நிலையைத் திரும்ப வடைதல்;** to recover, as a lost position. "வானவர்கோன் றலையெடுக்க" (கம்பரா. இந்திரசி. 63).

*[தலை + எடு-.]*

**தலையெடு[2]-த்தல்** *talai-y-eḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) **நீக்குதல்;** to remove. "தாழ்தரு துன்பந் தலையெடுத்தா யென" (மணிமே. 22: 103).

**தெ.** தலயெட்டு

**மறுவ.** ஆட்படுதல் (த. சொ. அக.)

*[தலை + எடு-.]*

**தலையெடு[3]-த்தல்** *talai-y-eḍu-,* 4 செ.குவி. (v.i.) 1. **வாழ்க்கைக்கு வேண்டும் செயல்களைத் தொடங்குதல்;** to begin one's life. பிள்ளை இப்படித் தலையெடுத்து விட்டான் (உ.வ.). 2. **மயிர்வெட்டுதல்;** to crop one's head. 3. **தலை மழித்தல்;** to shave one's head.

**மறுவ.** மொட்டையடித்தல்

*[தலை + எடு-.]*

**தலையெடுப்பு** *talai-y-eḍuppu,* பெ. (n.) 1. **தலை நிமிர்ச்சி;** holding the head erect. 2. **செருக்கு;** pride, arrogance. "அவட்கேது தலையெடுப்பே" (குமர. பிர. சிவகாமி. இரட். 14). 3. **தக்கபருவ மெய்தி, ஒரு துறையில் நிலையுறுகை;** growing up and establishing oneself in life, as a youth. 4. **மேன்மை;** loftiness, prominence, distinction. 5. **தாழ்நிலையினின்று மேம்படுகை;** improvement in circumstances, recovery from adversity.

*[தலை + எடுப்பு-. இச்சொல் நிமிர்தற் கருத்தினின்று கிளைத்தது. ஒருவன் தொழிற்றுறையிலோ, அல்லது தாம் தெரிவுசெய்த வேறுதுறையிலோ, ஆழங்காற் பட்டு வளர்ந்து, தன்னிகரற்ற தனிச்சிறப்புடன் மேம்படுதலைக் குறித்த தெனலாம்.]*

**தலையெலும்பு** *talai-y-elumbu,* பெ. (n.) **மண்டையெலும்பு;** cranial bone.

*[தலை + எலும்பு]*

**தலையெழுத்து**[1] *talai-y-eḻuttu,* பெ. (n.) *1.* **மண்டையோடு இணையும் பகுதியில் தெரியும் வளைவுக்கோடு;** the curved line in the joints of parts of skull. "தன றலையெழுத்தே யென்ன" *(பிரபுலிங். அக்கமா. உற். 35). 2.* **நூன் முகப்பு** *(வின்.);* heading or title of a book.

*[தலை + எழுத்து. மண்டையோட்டின் இணைப்புக்கோடு, பொருள் புரியா எழுத்தைப்போன்று தோன்றுவதால், தலையெழுத்து எனப்பட்டது. நாளை நடக்கப்போவதை யாரும் அறிந்து கொள்ள முடியாததாகலின், இதனைத் தலையெழுத்து என்று அழைக்கலாயினர்]*

**தலையெழுத்து**[2] *talai-y-eḻuttu,* பெ. (n.) **வாழ்க்கையை அமைப்பதாகக் கருதப்படும் விதி; ஊழாற்றல்; விலக்க இயலாத முடிவு; மாற்றமுடியா அமைவு;** fate destiny. இப்பேறு பெற வேண்டும் என்று என் தலையெழுத்து இருந்தால் அதை யார் மாற்ற முடியும்? இப்படி அலைய வேண்டும் என்று என் தலையெழுத்து இருந்தால் அதை மாற்றுவார் யார்?

*[தலை + எழுத்து]*

**தலையெழுத்து**[3] *talai-y-eḻuttu,* பெ. (n.) **உயிரெழுத்து** (பேரகத். 8, உரை); vowels, as the primary letters.

*[தலை+எழுத்து = மொழியின் முதலெழுத்து]*

**தலையேறுதண்டம்** *talai-y-ēṟu-taṇḍam,* பெ. (n.) *1.* **பொறுக்கக்கூடாத தண்டனை;** unbearable punishment. *2.* **துன்பப்படுத்தி வாங்கும் வேலை; கட்டாயமாகச் செய்யவிக்கும் பணி;** heavy labour; compulsory service. *3.* **மிக்க துன்பம்;** excessive trouble.

*[தலை + ஏறு + தண்டம்]*

**தலையைக்கொடு-த்தல்** *talai-y-ai-k-koḍu-, 4* செகுவி. (v.i.) **தலைகொடு-.** பார்க்க; see *talai-koḍu-*

*[தலையை + கொடு-.]*

**தலையைத்தடவு-தல்** *talai-y-ai-t-taḍavu-, 5* செகுன்றாவி. (v.t.) **ஏமாற்றிப் பொருளைப் பெற்றுக்கொள்ளுதல்** (ஒருவனது தலையைத் தடவுதல்) (இ.வ.); lit., to stroke one's head. to cheat a person out of his money. கேளிக்கை விடுதிக்குச் செல்ல யார் தலையைத் தடவுவது? (உவ.) திரைப்படம் செல்ல யார் தலையைத் தடவலாம்? (இவ.)

**மறுவ.** ஏமாற்றுதல், தலையில் மிளகாயரைத்தல்.

*[தலையை + தடவு-.]*

**தலையைவாங்கு-தல்** *talaiyai-vāṅgu-, 5* செகுவி. (v.i.) *1.* **தலையைவெட்டுதல் போன்ற கடுந்தண்டனை தருதல்;** cause heads to roll. *2* **சிறிய குற்றத்திற்கு எதிர்பாராவண்ணம் பெருந்தண்டனை தருதல்;** in a context where one is convinced that a severe punishment cannot be given to a small crime. நான் உன்னை அடித்ததாகச் சொன்னால் உன் அப்பா என் தலையை வாங்கிவிடுவாரா? (உ.வ.)

*[தலை + ஐ + வாங்கு-.]*

**தலையொடுமுடிதல்** *talai-y-oḍu-muḍidal,* பெ. (n.) **போர்க்களத்தில் மாண்ட கணவனது வெட்டுண்ட தலையைப் பிடித்துக்கொண்டு, இறந்துபட்ட மனைவியைப் பற்றிக் கூறும் புறத்துறை** (பு.வெ. 4,13); (puṟap) theme describing a wife who dies clasping the severed head of her husband slain in battle (செ.அக.).

*[தலையொடு + முடிதல்]*

**தலையோட்டுச்செயநீர்** *talai-y-ōṭṭu-c-ceyanīr,* பெ. (n.) **அண்டச்செயநீர்;** a strong alkaline liquid prepared from the human skull.

**தலையோட்டுப்பொருத்து** *talai-y-ōṭṭu-p-poruttu,* பெ. (n.) **தலையோடுகளை ஒன்றாகச் சேர்க்கும் பொருத்துகள்;** seams or joints which unit the bones of the skull.

**தலையோடு** *talai-y-ōḍu,* பெ. (n.) **மண்டையோடு;** skull. "ஊன்முகமார் தலையோட்டுண்" *(திவ். பெரியதி. 3:4:2).*

**மறுவ.** மண்டையோடு.

**ம.** தலயோடு.

*[தலை + ஓடு]*

**தலையோணம்** *talai-y-ōṇam,* பெ. (n.) **திருமணத்திற்குப்பின் வரும் முதல்ஓணம் பண்டிகை** (நாஞ்.); the first ōṇam celebration after one's marriage.

**மறுவ.** முதல் ஓணம்

*[தலை + ஓணம்]*

**தலைவட்டம்** *talai-vaṭṭam,* பெ. (n.) நெற்கதிர் சூடடித்தலில் முதற்சுற்று (நாஞ்.); the first round in threshing grain.

மறுவ. முதல் வட்டம்

*[தலை + வட்டம்]*

**தலைவடி** *talai-vaḍi,* பெ. (n.) சாராயச் சத்து (புதுவை); alcohol.

*[தலை + வடி]*

**தலைவணங்கு**[1]**-தல்** *talai-vaṇaṅgu-,* 5 செகுன்றாவி. (v.t.) **உரிய முறையில் மதித்து வணங்குதல்;** to do homage; to bow the head. தேர்தலில் மக்கள் வழங்கிய தீர்ப்பிற்கு நாங்கள் தலை வணங்குகிறோம் (இக்.வ.).

**தலைவணங்கு**[2]**-தல்** *talai-vaṇaṅgu-,* 7 செகுவி. (v.i.) **பயிரின் தலை வளைதல்;** to incline, bend down, as grain in the field. நெல்மணி முற்றித் தலை வணங்குதல் அறிவு சான்ற பெரியோர்தம் பணிவையொத்து இருந்தது (உ.வ.).

*[தலை + வணங்கு-.]*

**தலைவர்** *talaivar,* பெ. (n.) 1. **அணி, கட்சி முதலியவற்றின் செயற்பாடு, போக்கு, நிருவாகம் ஆகியவற்றிற்குக் கரணியமாக விருந்து, அனைவரையும் நன்முறையில் வழிநடத்திச் செல்பவர்;** leader, head of an organization, party, etc. (எ.டு.) கட்சித் தலைவர், சமயத் தலைவர்; தொழிற்சங்கத் தலைவர். 2. **வயதில் மூத்தவராகவும், பொருளீட்டுவதில் வல்லவராகவும் இருந்து, குடும்பத்தைத் தன்மேற்பார்வையில், கட்டிக்காக்கும் தலைவர்;** head of a family. 3. **கூட்டம், திருமணம் முதலானவற்றை, தலைமைதாங்கி நடத்தித் தருபவர்;** one who presides over a meeting, council, etc.

*[தல் → தலை + வ் + அர் – தலைவர். 'அர்' மரியாதை குறித்த ஈறு. 'வ்' சாரியை (ஒ.நோ.) இயக்குநர், கணவர்; நடத்துநர், ஓட்டுநர்]*

**தலைவரம்பு** *talai-varambu,* பெ. (n.) **மேலான எல்லை; கொடுமுடி;** acme, highest point. "முன்பெருமைக்குத் தலைவரம்பாகிய பெருமை" (நீலகேசி. 180: உரை.).

*[தலை + வரம்பு]*

**தலைவரி** *talai-vari,* பெ. (n.) 1. **மேல்வரிச் சட்டம்;** set line, as in a copy-book. 2. **ஆள் வரி;** poll-tax.

ம. தலவரி.

மறுவ. தலைக்கட்டுவரி.

*[தலை + வரி = தலைவரி. ஒவ்வொரு தலைக்கும் இடப்பட்ட வரி]*

**தலைவரிசை** *talai-variśai,* பெ. (n.) **உயர்ந்த பரிசு;** magnificent gift. "காலன் கொடுத்த மிக்க தலைவரிசையால்" (சிலப். 15:2: உரை.).

மறுவ. முதற்பரிசு, முதல்மரியாதை.

*[தலை + வரிசை = முதற்றரமான பரிசு.]*

**தலைவரை** *talai-varai,* பெ. (n.) **தரைமுனை** (வின்.); headland, cape, promontory.

மறுவ. தரைக்கோடி

*[தலை + வரை]*

**தலைவலி**[1] *talai-vali,* பெ. (n.) 1. **தலைநோவு;** head-ache, Cephalalgis. "தலைவலி மருத்திடு காமாலை" (திருப்பு. 153). 2. **முகத்திலுள்ள நரம்புநோவு;** facial neuralgia, Myalgia. 3. **தொந்தரவு;** painful task or labour. தலைவலியான காரியம் (உ.வ.) 4. **தொந்தரவு தருகிற ஆள்;** a person who action cause headache. அவன் ஒரு தலைவலியாயிருக்கிறான்.

*[தலை + வலி]*

**தலைவலி**[2] *talai-vali,* பெ. (n.) **நீக்குவதற்கு வழி இல்லாத துன்பம் தரும் தொல்லை;** painful task. புரட்சியாளர் அரசிற்குப் பெருந் தலை வலியாய் உள்ளனர் (உ.வ.).

*[தலை + வலி. எஞ்ஞான்றும், எவ் வழியினும், தீர்க்கவியலாத தொல்லை தரும், துன்பத்தாலேற்படுத் தலைவலி]*

**தலைவலித்தான்** *talai-valittāṉ,* பெ. (n.) **தலைமையானவன்;** pre-eminent, superior person, as one poweful in leadership. "தேவர்களில் தலைவலித்தானாயிருக்கிற" (ஈடு. 8. 4:9).

மறுவ. மேன்மையாளன், மேலோன்.

*[தலை + வலித்தான்]*

**தலைவலிபோக்கி** *talai-vali-pōkki,* பெ. (n.) *1.* கிச்சிலிக்கிழங்கு; orange root. *2.* மான் மணத்தி (கத்தூரி) மஞ்சள்; musk turmeric.

*[தலைவலி + போக்கி]*

**தலைவலிமருந்து** *talai-vali-marundu,* பெ. (n.) தலைவலியைப் போக்கும்பொருட்டு பயன்படுத்தப்படும் மருந்து; that which is acting remedically on the head; any medicine for head-ache.

மறுவ. தலைவலித் தைலம், தலைவலிச் சூரணம், தலைவலியுப்பு

*[தலைவலி + மருந்து]*

**தலைவழி[1]-தல்** *talai-vaḻi-, 2* செ.கு.வி. (v.i.) நிரம்பிவழிதல்; to overflow. தலைவழிந்தது *(உ.வ.).*

மறுவ. பொங்கிவழிதல்.

*[தலை + வழி-.]*

**தலைவழி[2]-த்தல்** *talai-vaḻi-, 4* செகுன்றாவி. (v.t.) *1.* தலைமழித்தல் (இ.வ.); to shave one's head. *2.* முகத்தல் அளவைகளில், கூம்பு வரை முழுமையாக அளக்காமல், விளிம்பு வரை மட்டமாகத்தட்டி அளத்தல்; to strike off the excess of grain at the top of measure, in measuring. தலைவழித்து ஒருபடி அரிசி கொடுத்தான் *(உ.வ.)*

மறுவ. மொட்டையடித்தல், மொட்டையாய் அளத்தல்

*[தலை + வழி-.]*

**தலைவழுக்கு[1]** *talai-vaḻukku,* பெ. (n.) தலைவழுக்கை பார்க்க; see *talai-vaḻukkai.*

*[தலை + வழுக்கு]*

**தலைவழுக்கு[2]** *taḷai-vaḻukku,* பெ. (n.) தலையழுக்கு பார்க்க; see *talai-y-aḻukku.*

*[தலை + வழுக்கு]*

**தலைவழுக்கை** *talai-vaḻukkai,* பெ. (n.) தலையை வழுக்கையாகச் செய்யும் நோய் வகை; baldness, Alopecia.

மறுவ. தலைப்புழுவெட்டு, பூச்சிகடி

*[தலை + வழுக்கை]*

**தலைவள்ளல்கள்** *talai-vaḷḷalgaḷ,* பெ. (n.) வரையாது வழங்கிய முதலேழு வள்ளல்கள்; munificent patrons of the first order *(செ.அக.).*

மறுவ. தலையேழு வள்ளல்கள்.

*[தலை + வள்ளல்கள். வரையாது கொடுப் போராகிய செம்பியன், காரி, விராடன், நிருதி, துந்துமாரி, சக்ரன், நளன் ஆகிய ஏழு வள்ளல்கள்]*

**தலைவளர்-த்தல்** *talai-vaḷar-, 4* செ.கு.வி. (v.i.) நோன்பு முதலியவற்றில், தலைமுடி வளர்த்தல்; to let the hair grow as required ceremonially.

*[தலை + வளர்-.]*

**தலைவறட்சி** *talai-vaṟaṭci,* பெ. (n.) சூட்டினால் ஏற்படும் தலைவறட்சி; dryness in the head due to excess of constitutional heat.

**தலைவறை** *talai-vaṟai,* பெ. (n.) தலைவரை (வின்.) பார்க்க; see *talai-varai.*

*[தலை + வறை]*

**தலைவன்** *talaivaṉ,* பெ. (n.) *1.* முதல்வன்; chief, headman, lord. "கயிலாய மென்னும் மலைத் தலைவா" *(திருவாச. 6: 40). 2.* அரசன் (பிங்.); king, ruler, governor. *3.* கணவன் (சூடா.); husband. *4.* ஆசிரியர் (பிங்.); preceptor. *5.* அண்ணன் (திவா.); elder brother. *6.* சிறந்தோன்; great person. "தரும முதல்வன் றலைவன்" *(சிலப். 10: 178). 7.* கடவுள்; God. "தலைவன் காக்கும்" *(மணி. 21, 63). 8.* அகப் பொருட்கிழவன்; hero of a love-poem. தலைவனும் தலைவியும் சந்திக்கும் இடம். காப்பியத் தலைவன் *(இலக்.வ.).* "தலைவனை இல்லிடத்தே வரக்காணினும்" *(தொல். பொருள். 115: உரை). 9.* கதைத்தலைவன்; hero of a story. "தன்னேரில்லாத் தலைவனை யுடைத்தாய்" *(தண்டி. 7).*

ம. தலவன்.

*[தல் → தலை + வ் + அன். ஆ.பா. ஒ.சுறு]*

**தலைவா-தல் (தலைவருதல்)** *talai-vā-, 18* செ.கு.வி. (v.i.) *1.* தோன்றுதல்; to happen, be fall. "தலைவரும் விழுமநிலை" *(தொல். பொருள்: 39). 2.* மிகுதியாக நேர்தல்; to increase. "அழிவு தலைவரினும்" *(தொல். பொருள்: 115). 3.* எதிர்க்குமாறு முன்வருதல்; to advance for an attack. "தலைவந்த போர் தாங்குந்

*தன்மையறிந்து" (குறள், 767).* 4. மேன்மையாதல்; to be lofty, eminent. "தலைவரும் பொருளைத் தக்காங் குணர்த்தி" *(பு.வெ. 10: காஞ்சி. 5: கொளு).*

*[தலை + வா-. (வரு-.)]*

**தலைவாங்கி** *talai-vāṅgi,* பெ. (n.) 1. தூக்குப் போடுவோன்; hangman. 2. கேடு விளைவிப்பவன்; villain (இ.வ.).

*[தலை + வாங்கி]*

**தலைவாங்கு[1]-தல்** *talai-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தலையை வெட்டுதல்; to behead.

*[தலை + வாங்கு-.]*

**தலைவாங்கு[2]-தல்** *talai-vāṅgu-,* 5 செ.குவி. (v.i.) தலைமயிர்வாங்கு-தல் (இ.வ.) பார்க்க; see *talai-mayir-vāṅgu-.*

*[தலை + வாங்கு-.]*

**தலைவாசகம்** *talai-vāšagam,* பெ. (n.) பாயிரம் (வின்.); introduction to a writing, preface, invocation.

**மறுவ.** முன்னுரை, முகவுரை.

**ம.** தலவாசகம்.

*[தலை + வாசகம்]*

**தலைவாசல்** *talai-vāšal,* பெ. (n.) 1. தலைவாயில் பார்க்க; see *talai-vāyil.* "பகைவர் பொறுத்த லாற்றாத போரினை யுடைய தலைவாசலிலே" *(மலைபடு. 529, உரை.).* "தன்னையும் தானே மறந்து தலைவாசல் தாழ்போட்டே உன்னை நினைத்துள்ளே உறங்குவதும் எக்காலம்" *(பத்திரிகிரியார் பாடல், 214).* தலைவாசலில் தோரணம் கட்டியிருந்தது *(உ.வ.).* தலைவாசலை இவ்வளவு உயரக்குறைவாகவா கட்டுவார்கள்? *(உ.வ.).*

**மறுவ.** முதல்வாசல்.

*[தலை + வாசல்]*

**தலைவாதை** *talai-vādai,* பெ. (n.) தலைநோய்; head-ache.

**தலைவாய்** *talai-vāy,* பெ. (n.) முதன்மடை; main-sluice. "தலைவா யோவிறந்து வரிக்கும்" *(மலைபடு. 475).*

**மறுவ.** முதல்மதகு, முதல்காண்ணாறு, தலைமடை.

*[தலை + வாய்]*

**தலைவாய்ச்சேரி** *talai-vāy-c-cēri,* பெ. (n.) முகப்பிலுள்ள ஊர்ப்பகுதி (S.I.I.ii,64); quarter near the gate of a village.

**மறுவ.** தலைச்சேறி, புறஞ்சேரி.

*[தலை + வாய் + சேரி. ஊர்க்காவல் புரிவோர், ஊரின்கண்ணே நிகழும் சிறப்புப் பணிகளைத் திறம்படச் செய்வோர், ஊரின் முதல் பகுதியில் அல்லது தலைப்பகுதியில் சேர்ந்து வதியுமிடம், தலைவாய்ச்சேரி என்று கல்வெட்டுகள் கூறுகின்றன.]*

**தலைவாய்தல்** *talai-vāydal,* பெ. (n.) தலைவாயில் பார்க்க; see *talai-vāyil.*

*[தலை + வாய்தல்]*

**தலைவாயில்** *talai-vāyil,* பெ. (n.) 1. முதல் வாயில்; main gate, as of a city, house. "தலைவாயி னிற்பள்" *(தனிப்பா. ii. 160: 398).* 2. வாயில்நிலையின் மேற்பகுதி; lintel. தச்சனடித்த தலைவாயிலெல்லாம் உச்சியிடிக்க உலாவித் திரிந்தான் *(உ. வ.).*

*[தலை + வாயில்]*

**தலைவாரி** *talai-vāri,* பெ. (n.) சீப்பு; comb.

**ம.** தலவாரி.

*[தலை + வாரி]*

**தலைவாரு-தல்** *talai-vāru-,* 5 செ.குவி. (v.i.) தலைமுடி வாருதல்; to comb the hair.

**மறுவ.** தலைசீவுதல்

*[தலை + வாரு-.]*

**தலைவாருகை** *talai-vārugai,* பெ. (n.) முதன்முறை கருவுற்ற பெண்ணுக்கு 4 அல்லது 6-ஆம் மாதத்தில், கணவன் வீட்டார் செய்யும் தலைக் கோலச் சடங்கு (இ.வ.); ceremony of adorning the head of a woman at the house of her father-in-law in the fourth or six month of her first pregnancy.

**மறுவ.** முதற்பூவைக்கை, தலைப்பூச் சூட்டுகை

*[தலை + வாருகை]*

**தலைவாரை** *talai-vārai,* பெ. (n.) தலை வாரைப்பட்டை பார்க்க; see *talai-vārai-p-paṭṭai.*

*[தலை + வாரை]*

**தலைவாரைப்பட்டை** *talai-vārai-p-paṭṭai,* பெ. (n.) **பனைஓலைத் தொப்பி** (யாழ்ப்.); head-cover made of palm-leaf.

**மறுவ.** தலைக்குடை

*[தலை + வாரை + பட்டை]*



**தலைவாழையிலை** *talai-vāḻai-y-ilai,* பெ. (n.) **நுனியோடு கூடிய வாழையிலை;** plantain leaf with pointed end. மாப்பிள்ளைக்குத் தலை வாழையிலையில் விருந்து போடுதல், இன்றும் காணப்படும் மரபாகும்.

*[தலை + வாழை + இலை]*

**தலைவாள்** *talai-vāḷ,* பெ. (n.) **மீனெலும்பு;** fish-bone.

*[தலை + வாள் → தலைவாள். வாள் போன்று நீண்ட கூரிய எலும்பு]*

**தலைவி** *talaivi,* பெ. (n.) *1.* **தலைமைப் பெண்** (பிங்.); lady, mistress, matron. *2.* **மனைவி;** wife. *3.* **அகப்பொருட்கிழத்தி;** heroine of a love-poem. "தலைவிகூற்று நிகழ்த்துமாறு" *(தொல். பொருள். III: உரை). 4.* **கதைத்தலைவி;** heroine of a story. *5.* **தலைவனின் மனைவி;** wife of hero.

*[தலை + வி (பெண்பால் விகுதி)]*

தமிழ்வழக்கின்படி, பெண் ஆணுக்கு அடங்கியவள் அல்லள்; கணவனுக்குச் சமமானவள் என்பதைத் தலைவன் தலைவி என்ற சொல்வழக்கால், அறியலாம். பல குடும்பங்களில் கணவனை அடக்கி ஆளும் தலைவியாகவும் உள்ளமை கண்கூடு.

**தலைவிதி** *talai-vidi,* பெ. (n.) **ஊழ்;** fate.

**ம.** தலவிதி.

*[தலை + விதி]*

இப்படித்தான் நிகழும் என்று (இறைவனால்) விதிக்கப்பட்டது, விதி என்பர். அதை யாராலும் முன்னரே கூற இயலாது. தலையில் மண்டை ஓட்டை இணைக்கும்கோடுகள் எழுத்துப்போல தோன்றினும், பொருளற்ற கோடுகள், விதி என்பது இன்றும் விளங்காத ஒன்றேயாம். தலையில் உள்ள விளங்கா எழுத்துப்போன்றது ஊழாகலின் "தலைவிதி" என்றாயிற்று.

**தலைவிதிபாராயணம்** *talai-vidi-pārāyaṇam,* பெ. (n.) **துயில்நிலை;** the highest degree next to absorption in which the ascetic attains entire quiescence.

**தலைவிரிகோலம்** *talai-viri-kōlam,* பெ. (n.) **தலைமுடியை வாரி முடியாமல் விரித்துப் போட்ட நிலை;** dishevelled hair, as of persons in fright or sorrow. நல்லநாளில் இது என்ன தலைவிரிகோலம்? தலைவிரி கோலமாக ஓடிவந்து தன் கணவனின் உடலின்மீது விழுந்து அழுதாள் *(உ.வ.).*

**மறுவ.** தலையவிழ்நிலை

*[தலை + விரி + கோலம்]*

தமிழ்நாட்டுப்பெண்கள், தலைமுடிக்கு எண்ணெயிட்டு வாரிமுடிப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். அல்லற் காலத்தும் தலையை முடித்து பின்னலிட்டு வாருவது, தமிழர்பண்பு. இந்தியாவின் வடபுலத்தில், தலைக்கு எண்ணெய் தடவிச் சீவுவது வழக்கமில்லை. எப்போதும் முழுநீள முடியும் காற்றில் தவழ்ந்து கொண்டிருக்கும்.

**தலைவிரிச்சான்** *talai-viriccāṉ,* பெ. (n.) *1.* **கூந்தல் முடியாதவன்;** person with dishevelled hair. *2.* **சாரணை** (மலை.); purslane - leaved trianthema. *3.* **செருப்படைவகை** (மலை.); a disffuse prostrate herb, Coldenia procumbens.

*[தலை + விரிச்சான்]*

முந்தைய காலத்தில் ஆண்கள் தலைநிறைய முடி வைத்திருப்பர். அதனைச் சீவிமுடித்து பக்கக்கொண்டையிட்டுக் கொள்வர். அவ்வாறின்றி வாராத்தலை கொண்டவர், தலைவிரிச்சான் எனப் பயர் பெற்றனர்.

**தலைவிரிச்சான்சோளம்** *talai-viriccāṉ-śōlam,* பெ. (n.) **மாட்டுத்தீனியின் பொருட்டு மானாமாரியாய்ப் பயிரிடும் சோளவகை**

*(G.Sm.D.I, i, 220)*; a variety of millet that is rain-fed and grown for fodder *(செ.அக.)*.

*[தலை + விரிச்சான் + சோளம்]*

**தலைவிரித்தாடு-தல்** *talai-viri-t-tāḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **பஞ்சம், கையூட்டு, வன்முறை முதலியவை கட்டுக்கடங்காமல் பரவிக்காணப்படுதல் அல்லது நிலவுதல்;** (of famine, bribe, etc.,) to be rampant. இரண்டு நாள் நடந்த இனக்கலவரத்தில் வன்முறை தலைவிரித் தாடியது *(உ.வ.)*. குறுக்குவழியில் செல்வந்தன் ஆகிவிடவேண்டும் என்னும் வெறி நாட்டில் தலைவிரித்தாடுகிறது.

*[தலைவிரித்து + ஆடு-.]*

**தலைவிரித்தான்** *talai-virittāṉ*, பெ. (n.) **ஒரு மூலிகை;** herbal-plant.

*[தலை + விரித்தான்]*

**தலைவிரிபறை** *talai-viri-paṟai*, பெ. (n.) **பறை வகை** *(பிங்.)*; a kind of drum.

*[தலை + விரி + பறை]*

**தலைவிலை** *talai-vilai*, பெ. (n.) *1.* **களத்தில் விற்கும் தானியவிலை;** price of grain fixed at the threshing floor. *2.* **அறுவடைக்கு முன் முடிவு செய்யும் நெல்விலை** *(நாஞ்.)*; price of paddy fixed before harvest. *3.* **இனவரி** (T.A.S. iii, 215); taxes imposed or individuals. "தலைவிலையும் முலைவிலையும்" *(T.A.S. ii, 81)* *4.* **உயிர் ஒறுப்பு;** life sentence.

**மறுவ.** முதல்விலை

**ம.** தலவில

*[தலை + விலை. "அற்றார், அழிபழி செய்தாரைக் குத்துதல், கொல்லுதலுக்குத் தலைவிலை யில்லையாக"]*

**தலைவிளை** *talai-viḷai*, பெ. (n.) **வயலின் முதல் விளைச்சல்;** first crop of a cultivated field. "தலைவிளை கானவர் கொய்தனர்" *(ஐங்குறு. 270)*.

**மறுவ.** முதல்போகம், முதலறுவடை முதல்விளைச்சல்

*[தலை + விளை]*

**தலைவீச்சு** *talai-vīccu*, பெ. (n.) *1.* **தலைச்சுழற்சி;** reeling of the head. *2.* **தலையாட்டம்;** shaking of the head. *3.* **நரம்புக் குறைபாட்டினால் ஏற்படும் தலையசைவு;** a spasmodic retroplexion of the head.

**தலைவெட்டிக்கருவாடு** *talai-veṭṭi-k-karuvāḍu*, பெ. (n.) *1.* **தலையில்லாது விற்கும் ஒருவகைக் கருவாடு;** the headless trunk of a (karuvāḍu) dried fish.

*[தலைவெட்டி + கருவாடு]*

**தலைவெட்டி** *talai-veṭṭi*, பெ. (n.) *1.* **தலை முடியைக் கத்திரித்துக்கொள்ளுவோன்;** one who has cropped his hair. *2.* **போக்கிரி;** vagabond. *3.* **நம்பிக்கை கொல்லி;** a treacherous person. *4.* **ஆட்டுநோய்வகை** (M.Cm.D. 249); a disease of sheep *(செ.அக.)*.

**மறுவ.** கீழறுப்புக்காரன்

சூழ்ச்சியாளன்

*[தலை + வெட்டி]*

**தலைவெட்டிமுனியப்பன்** *talai-veṭṭi-muṉi-y-appaṉ*, பெ. (n.) **சேலம் குகைப்பகுதியில் உள்ள மாற்றுத்தலை பொறுத்திய சமணத் தீர்த்தங்கரர், முனியப்பன் எனும் பெயரில் வணங்கப்படுகிற சிலை;** a jain Thīrthaṅgarar statue with a replaced head, worshipped as Lord Muṉiyappar.

தலையில்லாமல், வீணே கிடந்த சமணத் தீர்த்தங்கரர் சிலைக்கு, வேறு ஒருதலை பொறுத்தப்பட்டு, உள்ளூர் மக்களால், முனியப்பராக வணங்கப்படுகிறது. ஆடு, கோழி பலியிடப்படுகிறது. சமணத் தீர்த்தங்கரர் என்று அடையாளங் காணப் பட்ட பின்னும், ஆடு, கோழி பலியிடுவதை, மக்கள் நிறுத்தவில்லை.

*[தலை + வெட்டி]*

**தலைவெட்டு-தல்** *talai-veṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **தலையைவெட்டுதல்;** to behead, decapitate. மடிமாங்காய் போட்டுத் தலை வெட்டுகிறது *(பழ.)*. *2.* **தலைதட்டு-**, (இவ.) பார்க்க; see *talai-taṭṭu-*, *3.* **மோசஞ்செய்தல்;** to do a treacherous act. *4.* **முறைமன்ற அஞ்சல் வில்லையில் குத்துதல்;** to punch a court fee stamp. *5.* **தலைமுடி சீர்த்திருத்தல்** (இவ.); to crop one's hair.

*[தலை + வெட்டு-.]*

**தலைவை-த்தல்** *talai-vai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தலையிடு-, 1. 2. பார்க்க; see *talai-y-iḍu, l. 2;* to interfere. 2. நீர் முதலியன பாயத் தொடங்குதல்; to begin to flow. இப்பொழுது தான் தண்ணீர் வயலில் தலைவைத்திருக்கிறது (நாஞ்.) அவன் அந்தப் பக்கமே தலைவைத்துப் படுப்பதில்லை (உ. வ.)

[தலை + வை-.]

**தவ்வல்** *tavval,* பெ. (n.) 1. சிறுகுழந்தை; tiny infant. 2. விலங்கு மரமுதலியவற்றின் இளமை; young of animals and plants.

தெ. தவ்வ

[தவழ்தல் → தவ்வல்.]

**தவ்வி** *tavvi,* பெ. (n.) அகப்பை; ladle. "கையாற் றவ்வி பிடித்துச் சமைத்து" (தெய்வீகவுலா, 176).

ம. தவ்வி.

[தவ் → தவ்வி.]



**தவ்வு¹-தல்** *tavvu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. குறைதல் (அக.நி.); to lessen, decrease, shrink. 2. குவிதல்; to close the petals, as a flower. "தவ்வா திரவும் பொலிதாமரையின்" (கம்பரா. சரபங். 2). 3. கெடுதல், அழிதல், உருக்குலைதல்; to perish, decay, waste away. 4. தவறுதல்; to fail. "எறிந்த வீச்சுத் தவ்விட" (கம்பரா. அதிகாயன். 213).

[தபு → தவ்வு-.]

**தவ்வு²** *tavvu,* பெ. (n.) 1. முற்றுமழிகை, கெடுகை; shrinking, perishing, decay, failure. 2. பலகையிலிடுந் துளை; hole in a board (செ.அக.).

[தபு → தவ்வு-.]

**தவ்வு³-தல்** *tavvu-,* செ.கு.வி. (v.i.) 1. தாவுதல்; to leap, jump, spring. "தவ்வுபுனல்" (திருவாலவா. 30:32). 2. மெல்ல மிதித்தல்; to tread gently. "தவ்விக் கொண்டெடுத்த வெல்லாம்" (இரகு. ஆற்று. 19). 3. தன்முனைப்பாதல்; to boast; to be arrogant. அதிகமாகத் தவ்வாதே (உ.வ.).

க. தவு

[தாவு → தவ்வு-.]

**தவ்வு⁴** *tavvu,* பெ. (n.) பாய்ச்சல், தாவுகை; hopping, jumping, leaping. ஒரு தவ்வுத் தவ்வினான் (உ.வ.).

[தாவு + தவ்வு]

**தவ்வெனல்** *tav-v-enal,* பெ. (n.) 1. சுருங்குதற் குறிப்பு; expr. denoting shrinking, withering, fading. "தவ்வென்னுந் தன்மை யிழந்து" (குறள், 1144). 2. மழையின் ஒலிக்குறிப்பு; expr. denoting sound, as of rain, pattering. "தவ்வென் றசைஇத் தாதுளி மறைப்ப" (நெடுநல். 185).

[தாவு → தவ்வு + எனல்]

**தவ்வை** *tavvai,* பெ. (n.) 1. தாய்; mother. "பட்டோன் றவ்வை படுதுயர் கண்டு" (சிலப். 15: 80). 2. தமக்கை; elder sister. "தாரை தவ்வை தன்னொடு கூடிய" (மணிமே. 7:104). 3. மூதேவி (சூடா.) (இலக்குமியின் மூத்தாள்); goddess of misfortune, as the elder sister of Thirumagal. "செய்யவ டவ்வையைக் காட்டிவிடும்" (குறள், 167).

தெ. அவ்வ

[அவ்வை → தவ்வை.]

**தவ¹** *tava,* கு.வி.எ. (adv.) மிக; much, intensely. "உறுதவ நனியென" (தொல். சொல். 301).

க. தவெ

[தவ = மிகுதி குறித்து வழங்கும் உரிச்சொல்]

**தவ²-த்தல்** *tava-,* 4 செ.கு.வி. (v.i.) நீங்குதல்; to cease. "மயக்கந் தவந்த யோகியர்" (விநாயகபு. 49, 21).

க. தவெ

[தபு → தவ.]

**தவக்கணக்கு** *tava-k-kaṇakku,* பெ. (n.) கோயிலவைக் கணக்கு (நாஞ்.); account kept by the managing committee of a temple.

[அவை → சவை → தவை + கணக்கு]

**தவக்கம்** *tavakkam,* பெ. (n.) *1.* தடை, இடர்ப்பாடு, குறை; impediment, hindrance. *2.* இல்லாமை; scarcity, destitution, want, absolute need. *தண்ணீர்த் தவக்கத்தால் விளைவில்லை (உ.வ.). 3.* காலத்தாழ்வு (இ.வ.); delay. *4.* நெடுநீர்மை; procrastination. *5.* கவலை; anxiety, solicitude. *அவன் தவக்கமாய்த் திரிகிறான்; சுதைமாவு (சிமிண்டு) கிடைக்காததால் கட்டுமானப் பணியில் தவக்கம் ஏற்பட்டது (உ.வ.).*

க. தவக

*[தவங்கு → தவக்கம்.]*

**தவக்கரடி** *tavakkaradi,* பெ. (n.) தவழ்கரடி பார்க்க; see *taval-karadi* (சா.அக.).

**தவக்களை** *tavakkalai,* பெ. (n.) தவளை (இ.வ.); frog.

*[தவழ் → தவளை → தவக்களை - தவழ்கையினாற் பெற்ற பெயர்]*

**தவக்காய்** *tavakkāy,* பெ. (n.) தவளை பார்க்க; see *tavalai.*

*[தவழ்க்காய் → தவக்காய்]*

**தவக்கிடை** *tava-k-kidai,* பெ. (n.) நோன்பு கருதி உண்ணாமலிருத்தல் (நாஞ்.); observing a fast.

*[தவம் + கிடை]*

**தவக்கு** *tavakku,* பெ. (n.) நாணம்; sense of shame. *"தவக்குற்று" (மாறனலங். 279, பக்.202).*

*[தவங்கு → தவக்கு]*

**தவக்குறை** *tava-k-kurai,* பெ. (n.) முற்பிறப்பில் ஏற்பட்ட குறையை, இப் பிறப்பில் சமன் செய்தல்; a defect of penance in the former birth to be made up or compensated in the present birth (சா.அக.).

**தவக்கை** *tavakkai,* பெ.(n.) தவளை பார்க்க (வின்.); see *tavalai.*

*[தவழ்கை → தவக்கை]*

**தவக்கொடி** *tava-k-kodi,* பெ. (n.) தவப்பெண்; female ascetic, nun. *"மாபெருந் தவக்கொடியீன்றனை" (மணிமே. 7: 37.).*

*[தவம் + கொடி]*

**தவகரடி** *tavakaradi,* பெ. (n.) தவழ்கரடி பார்க்க; see *taval-karadi.*

*[தவழ் + கரடி. 'ழ்' இடைக்குறை.]*

**தவங்கம்** *tavangam,* பெ. (n.) வருத்தம், துயர், துன்பம் (துக்கம்) (யாழ்ப்.); sorrow, sadness, grief.

*[தவங்கு → தவங்கம்.]*

**தவங்கிடத்தல்** *tavankidattal,* பெ. (n.) தவநிலையில் நிற்றல்; being in a state of resolved penance (சா.அக.).

*[தவம் + கிடத்தல்]*

**தவங்கு-தல்** *tavangu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* தடைப்படுதல்; to be hindered, impeded. *வேலை தவங்கிப் போயிற்று (உ.வ.). 2.* பொருட்குறையால் வருந்துதல் (வின்.); to be in distress, as for necessaries of life. *3.* வாடுதல்; to be faint, sad, dejected, despondent.

தெ. தமகு

*[தபு → தவ → தவங்கு-.]*

**தவச்சட்டை** tava-c-cattai, பெ. (n.) முரட்டுத் துணியாலான ஆடை (புதுவை); sack-cloth.

*[தவம் + சட்டை]*

**தவச்சாலை** *tava-c-cālai,* பெ. (n.) தவஞ் செய்யும் இடம்; hermitage, as a place for the performance of austerities. *"விரதங்களை அனுட்டித்திருத்தற்குரிய தவச் சாலைகள்" (மணிமே. 28:67, உரை).*

*[தவம் + சாலை]*

**தவச்செறி** *tava-c-ceri,* பெ. (n.) தலைச்செறி பார்க்க; see *talai-c-ceri* (சா.அக.).

**தவசம்** *tavašam,* பெ. (n.) *1.* கூலம்; grain, especially dry. *2.* தொகுத்த கூலம்; grain and other provisions laid by in store. *"சலவையோ பட்டோ தவச தானியமோ" (குற்றா. குற. 70: 19).*

தெ. தவசமு, க. தவச.

**தவசத்தொம்பை** *tavaša-t-tombai,* பெ. (n.) நெற்களஞ்சியம்; granary.

மறுவ. தவசக்கோட்டகம்

*[தவசம் + தொம்பை]*



**தவசவட்டி** *tavaša-vaṭṭi,* பெ. (n.) கூல (தவச) மாகக் கொடுக்கும் வட்டி; interest payable in paddy.

*[தவசம் + வட்டி. பண்டையநாளில் பணமாகச் செலுத்துதற்குப் பதிலாக வேளாண்மை செய்வோர், தங்களிடமுள்ள தவசத்தையே, வட்டியாகச் செலுத்தினர்.]*

**தவசி**[1] *tavaši,* பெ. (n.) தவத்தோன்; ascetic, religious mendicant, recluse. "ஐயம் புகூஉந் தவசி" (நாலடி, 99).

மறுவ. துறவி, ஆண்டி

*[தவம் → தவசி]*

**தவசி**[2] *tavaši,* பெ.(n.) 1. நாரை; crane. 2. முருங்கை விதை; moringa seed. 3. முருங்கைப் பிசின்; gum of drum stick tree (சா.அக.).

**தவசிப்பட்சி** *tavaši-p-paṭci,* பெ. (n.) வவ்வால் (தவஞ்செய்யும் பறவை); flying fox, Pteropus giganteus, as seeming to perform penance.

மறுவ. தலைகீழ்த்தொங்கி

*[தவம் → தவசி + Skt. பட்சி]*

**தவசிப்பிள்ளை** *tavaši-p-piḷḷai,* பெ. (n.) 1. பூசைப்பணியாள்; Šaiva servant helping in the performance of pūjā. 2. சமையல் வேலை செய்வோன்; cook. 3. துறவிக்குச் சமைப்பவன்; a cook boy tending a ascetic.

மறுவ. மடையன், மடைப்பள்ளியாளன்

*[தவம் → தவசி + பிள்ளை.]*

**தவசு** *tavašu,* பெ.(n.) தவம்[1] பார்க்க; see *tavam*[1]; religious austerity. "தவசு வஞ்சித் துறையே" (பன்னிரு. பா. 211) (சூடா.).

மறுவ. துறவறம்

*[தவம் → தவசு]*

**தவசுமரம்** *tavašu-maram,* பெ. (n.) 1. நாட்டு வாதுமை மரம்; sage tree. 2. காட்டு மாமரம்; hermits tree (சா.அக.).

**தவசுமுருங்கை** *tavašu-muruṅgai,* பெ. (n.) மருந்துச்செடி (பதார்த்த. 542); Tranquebar gendarussa.

மறுவ. நரிமுருங்கை, புண்ணாக்குப் பூண்டு

*[தவசி → தவசு + முருங்கை = நரிமுருங்கை என்று அழைக்கப்பெறும். இம்மரத்தின் இலை, பூ அனைத்தும் மருந்துக் குணமுடையவை. மஞ்சள் நிறமுள்ள இம் முருங்கை மரத்தின் இலைச்சாறு, உடம்பிற்கு குளிர்ச்சி பயக்கும். நாட்பட்ட கோழையைப் போக்கும். மலத்தை இளக்கும். இம் மரத்தின் இலையை வதக்கி நாட்பட்ட, அடிப்பட்ட வெளிப்புண்களில் வைத்துக் கட்டினால், விரைவில் ஆறும். ஈளை, இருமல், சிணுக்குருமல் போன்ற நோய்களுக்கு, இம் முருங்கை மர இலையினின்று வடித் தெடுக்கப்பட்ட கருக்குநீர் (கியாழம்) கைகண்ட மருந்தென்று சாம்பசிவ மருத்துவ அகரமுதலி கூறும்]*

**தவட்டை** *tavaṭṭai,* பெ. (n.) கபிலப்பொடி (L); kamela dye.

**தவடுமரம்** *tavaḍu-maram,* பெ. (n.) தவசுமரம் பார்க்க; see *tavašu-maram* (செ.அக.).

*[தவடு + மரம்.]*

**தவடை** *tavaḍai,* பெ. (n.) கன்னம், தாடை; cheek, jaw.

தெ. தவட, க. தவடெ

*[செவிடு → செவிடை → தவிடை → தவடை.]*

**தவடைசுத்தி** *tavaḍai-šutti,* பெ. (n.) கன்னத்தில் விழும் அறை; a slap on the cheek.

*[தவடை + சுத்தி]*

**தவண்**[1] *tavaṇ,* பெ. (n.) கடித்த இடத்திலேயே நஞ்சு தங்குமாறு இடும், சுண்ணாம்புவட்டம் அல்லது கயிற்றுக்கட்டு (யாழ்ப்.); circle drawn with lime, or string tied round a limb, above the site of a poisonous bite with incantations to stop the spread of the poision.

*[தங்கு → தகு → தகன் → தவண். தகன் → தவண்]*

**தவண்**[2] *tavaṇ,* பெ. (n.) தகன், கிழங்கு விழுந்த பனங்கொட்டையின் உள்ளீடு; white pulpy matter in the palmyra nut.

*[தகன் → தவண்]*

**தவண்டை**[1] *tavaṇḍai,* பெ. (n.) *1.* பேருடுக்கை; a small drum. "தாரை நவுரி தவண்டைதுடி நாக சுரம்" (கூளப்ப. 282). *2.* நீரில் கைகால்களை அடித்துக்கொண்டு நீந்தும் நீச்சு; swimming by striking against the water with hands and feet. *3.* வாழ்க்கைக்குரிய பொருள்கள் இல்லாமையால் ஏற்படும் தவிப்பு (யாழ்ப்.); anxiety and distress for want of the necessaries of life.

க. தவடெ

*[தவழ் → தவண் → தவண்டை.]*

**தவண்டை**[2] *tavaṇḍai,* பெ. (n.) தவடை (இ.வ.); cheek.

*[தவண் → தவண்டை.]*

**தவண்டைப்படு-தல்** *tavaṇḍai-p-paḍu-, 20* செ.கு.வி. (v.i.) தவண்டையடி-,2. (யாழ்ப்.) பார்க்க; see *tavaṇḍai-y-aḍi-2.*

*[தவண்டை + படு-,]*

**தவண்டையடி-த்தல்** *tavaṇḍai-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* நீர்விளையாடுதல்; to splash and play in the water, as children. *2.* வறுமைப் படுதல்; to be in straits.

*[தவண்டை + அடி-.]*

**தவண்டையாடு-தல்** *tavaṇḍai-y-āḍu-, 5* செ.கு.வி. (v.i.) தவண்டையடி-. 2 பார்க்க; see *tavaṇḍai-y-aḍi-. 2.*

*[தவண்டை + ஆடு-.]*

**தவணியம்** *tavaṇiyam,* பெ. (n.) கந்தகம்; sulphur (சா.அக.).

*[தகன் → தகண். எரிப்பது. தகணியம் → தவணியம்]*

**தவணை**[1] *tavaṇai,* பெ. (n.) *1.* சட்டம் பதிக்குங் காடி; joint, in carpentry. *2.* கட்டுப்பானைத் தெப்பம் (வின்.); raft or float for crossing rivers, especially one made of earthen pots and bamboos.

*[கவம் = காடி. கவண் → தவண் → தவணை]*

**தவணை**[2] *tavaṇai,* பெ. (n.) *1.* தொகை செலுத்துதல் முதலியவற்றிற்கு ஏற்படுத்திய கெடு; limited time, fixed term for payment of a due or instalment, period of revenue collection, especially of land tax. 'உறுவன்கூறுந் தவணை யன்றாதலாலே" (சேதுபு. வேதாள. 70). இந்த மின்விசிறியைத் தவணை முறையில் வாங்கினேன் (இக்.வ.). வங்கியில் வாங்கிய கடனைப் பத்துத் தவணைகளில் செலுத்திவிட வேண்டும் (உ.வ.). *2.* தடவை, முறை; occasion, number of times. எத்தனை தவணைதான் இந்தத் திரைப்படத்தைப் பார்ப்பது? (உ.வ.).

தெ. தவந, ம. தவண.

*[தவண் → தவணை.]*

**தவணைக்கடை** *tavaṇai-k-kaḍai,* பெ. (n.) நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வட்டிக்கடை (தஞ்சை.); banking house of a Nāṭṭukkōṭṭai šeṭṭi.

*[தவணை + கடை.]*

**தவணைக்கணக்கு** *tavaṇai-k-kaṇakku,* பெ. (n.) கெடுவிற் செலுத்தற்குரிய நிலவரியின் கணக்கு; periodical accounts of land-revenues.

*[தவணை + கணக்கு]*

**தவணைக்காடி** *tavaṇai-k-kāḍi,* பெ. (n.) வரி வகை; a kind of tax. "தவணைக்காடி யென்றும்" (S.I.I. V, 383).

*[தவணை + காடி]*

**தவணைக்கிரயம்** *tavaṇai-k-kirayam,* பெ. (n.) தவணைக்குள் ஒத்தித்தொகை செலுத்தா விடில், ஒத்திக்காரனுக்கே நிலம் உரிமையாவது என்ற, கட்டுப்பாட்டிற்குட்பட்ட ஒற்றி; mortgage by conditional sale.

*[தவணை + கிரயம்]*

**தவணைகேட்டல்** *tavaṇai-kēṭṭal,* பெ. (n.) தவணை² பார்க்க; see *tavaṇai²*.

*[தவணை + கேட்டல்]*

**தவணைச்சீட்டு** *tavaṇai-c-cīṭṭu,* பெ. (n.) கெடு வைத்தெழுதிய ஓலை; bond specifying a fixed term.

*[தவணை + சீட்டு]*

**தவணைசெலுத்து-தல்** *tavaṇai-šeluttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) முறையாகச் செலுத்துதல்; to be paid instalments. பொன்னட்டிகைக்கு மூன்றாவது தவணை செலுத்த யாரிடம் போய் கடன் பெறுவது? (உ.வ.).

*[தவணை + செலுத்து-.]*

**தவணைத்திரட்டு** *tavaṇai-t-tiraṭṭu,* பெ. (n.) விளைச்சல்வரி தண்டும் கணக்கு (நாஞ்.); kistbundy or account showing the demand and collection of each kist.

*[தவணை + திரட்டு = ஒவ்வொரு அறுவடைக் காலத்தும், தவணை முறையிற் செலுத்தும் வரி.]*

**தவணைப்பணம்** *tavaṇai-p-paṇam,* பெ. (n.) கெடுப்படி செலுத்தவேண்டிய தொகை; money payable in instalments, periodical payment. "கருது நிலுவைப்பணந் தவணைப் பணங்கள் . . . கொடுத்தும்" (திருவேங். சத. 28). தொலைக்காட்சிப் பெட்டிக்கு இரண்டாவது தவணைப் பணம் கட்ட வேண்டும் (இக்.வ.).

*[தவணை + பணம்]*

**தவணைப்புளி**[1] *tavaṇai-p-puḷi,* பெ. (n.) தவனப்புளி (நெல்லை.) பார்க்க; see *tavaṉa-p-puḷi.*

*[தவணை + புளி]*

**தவணைப்பொருத்து** *tavaṇai-p-poruttu,* பெ. (n.) கதவுநிலை முதலியவற்றிலுள்ள சந்து; a groove or mortise on the top of a gate or door-post.

*[தவணை + பொருத்து]*

**தவணைபார்-த்தல்** *tavaṇai-pār-,* 4 செ.குவி. (v.i.) விளைச்சல் கணக்குப் பார்த்தல்; to record and inspect the register of growing crops.

*[தவணை + பார்-.]*

**தவணைமறியல்** *tavaṇai-maṟiyal,* பெ. (n.) குறிப்பிட்ட காலம்வரை அடைக்குஞ் சிறைக் காவல் (யாழ்ப்.); imprisonment for a limited term.

*[தவணை + மறியல்]*

**தவணைமுடக்கம்** *tavaṇai-muḍakkam,* பெ. (n.) நிலவரி தண்டும் கணக்கு (நாஞ்.); annual account showing particulars of the demand, collection and balance of land-revenue, arrears and current.

*[தவணை + முடக்கம்]*

**தவணைமுறை** *tavaṇai-muṟai,* பெ. (n.) மொத்தமாகச் செலுத்தவேண்டிய பணத்தை வகைப்படுத்தி முறையாகப் பகுத்துக் கொண்டு, குறிப்பிட்ட காலத்திற்குள் செலுத்துவது; hire-purchase. இந்த வீட்டு மனையைத் தவணைமுறையில் வாங்கினேன் (உ.வ.).

*[தவணை + முறை]*

**தவணையுண்டி** *tavaṇai-y-uṇḍi,* பெ. (n.) கெடுவில் கொடுத்தற்குரிய உண்டியற் சீட்டு; bill of exchange payable at a fixed period after presentation.

*[தவணை + உண்டி]*

**தவணைவட்டி** *tavaṇai-vaṭṭi,* பெ. (n.) வரையறுக்கப்பட்ட கெடுவுக்குள் திரும்பக் கொடுக்கும் பணத்துக்குரிய வட்டி (இ.வ.); interest on fixed deposit.

*[தவணை + வட்டி. குறிப்பிட்ட காலத்திற் குரிய வட்டி.]*

**தவத்தர்** *tavattar,* பெ. (n.) முனிவர்; ascetics. "தவத்த ரிரப்பெனக் கொண்டுசென்று குறுகினர்" (கந்தபு. ததீசியுத் 58).

[தவம் → தவத்தர் = தவ நிலையில் எஞ்ஞான்றும், மூழ்கியிருப்பவர். ஒருகா. தவம் + அத்து + அர் → தவத்தவர்]

**தவத்தி** *tavatti,* பெ. (n.) 1. தவப்பெண்; female ascetic. 2. மாதாகோயில் வேலைக்காரி; female care-taker in a Roman Catholic church.

[தவம் → தவத்தி]

**தவத்திரு** *tava-t-tiru,* பெ. (n.) சிவணிய மடங்களின் தலைவருக்கு வழங்கும் முன்னடை; வணக்கத்திற்குரிய என்னும் பொருளடை; title for the head of Šaiva mutt meaning 'His Holiness'.

[தவம் + திரு]

**தவத்துப்பொலவு** *tavattu-polavu,* பெ. (n.) மலையாளப் பூடு; Malabar croton (சா.அக.).

**தவத்துமுருங்கை** *tavattu-muruṅgai,* பெ. (n.) தவசுமுருங்கை பார்க்க; see *tavašu-muruṅgai.*

[தவத்து + முருங்கை]



**தவந்து** *tavandu,* பெ. (n.) தவசம் (யாழ்.அக.); grain.

[தவம் → தவந்து]

**தவநிலை** *tava-nilai,* பெ. (n.) தவச்செயல்; performance of penance. 'அருச்சுனன் தவ நிலைச் சருக்கம்" (பாரத.).

[தவம் + நிலை]

**தவப்பழி** *tava-p-paḻi,* பெ. (n.) நினைத்ததைப் பிறரிடம் பெறற்பொருட்டுக் கொலைப் பட்டினி கிடக்கை (கல்.); hunger - strike.

மறுவ. உண்ணாநோன்பு

[தவம் + பழி]

**தவப்பள்ளி** *tava-p-paḷḷi,* பெ. (n.) முனிவர் தவச்சாலை; hermitage. "எய்தினாள். தவப்பள்ளியே" (சீவக. 347).

மறுவ. தவச்சாலை

[தவம் + பள்ளி]

**தவப்பெண்** *tava-p-peṇ,* பெ. (n.) மடத்தில் வாழும் பெண், கன்னிப்பெண்; a virgin separated from the world-Nun (சா.அக.).

[தவம் + பெண்]

**தவபோடகம்** *tavapōḍagam,* பெ. (n.) ஆவிரை; tanners cassia (சா.அக.).

**தவம்**[1] *tavam,* பெ. (n.) 1. பற்றை நீக்கி, உடலை வருத்திக்கொண்டு, கடவுளை வழிபடுகை; penance, religious austerities. "தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்" (குறள், 266). இறவாவரம் வேண்டித் தவம் இருப்பவரை இக்காலத்தில் காண்பதரிது (இ.வ.). தவமிருந்து பெற்றபிள்ளை தாய்க்குச் சோறு போடவில்லை (உ.வ.). தலைவரைப் பார்க்கக் கட்சித் தொண்டர்கள் தவம் கிடக்க வேண்டியதாயிருந்தது. (இக். வ.). 2. நல்வினை (புண்ணியம்); result of menitorious deeds. "தவந்தீர் மருங்கிற் றனித்துய ருழந்தோய்" (சிலப். 14: 26). 3. இல்லறம்; house-holder's life, dist. fr. naṟṟavam. "தவஞ்செய்வார்க்கு மஃதிடம்" (சீவக. 77). 4. கற்பு; chastity. "தேவியுள்ளத் தருந்தவ மமையச் சொல்லி" (கம்பரா. திருவடி. 9). 5. தவத்தைப் பற்றிக் கூறும் கலம்பகவுறுப்பு; a section of the *kalampagam* poem dealing with *tavam.* 6. வெப்பம்; heat.

தவி → தவம் = உடலை எரித்தாற்போல் வருத்துந் துறவறப் பயிற்சி; வெப்பத்தால் உடலை வருத்தி ஐம்புலனை அடக்குதல். "உற்ற நோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை அற்றே தவத்திற் குரு" - குறள். 261. (திரு. தமி. மர. 155)

[த. தவம் → Skt. தபஸ். தவம் → தவம். உற்ற நோயுள், வெயிலின் வெம்மையும், பசிதாகத்தாலுண்டாகும், உடம்பின் வெம்மையும் அடங்கும் (வ.வ. 174)]



**தவம்²** *tavam,* பெ. (n.) வாழ்த்திப்பாடுகை; praise, adoration. "வேதபாதத் தவத்தால்" *(கோயிற்பு. இரணிய. 81).*

**தவம்³** *tavam,* பெ. (n.) *1.* காடு; forest. *2.* வெண் கருங்காலி; a whitish black wood.

**தவம்புரிமாதர்** *tavam-puri-mādar,* பெ. (n.) கலைமான்; the male red deer. முற்காலத்தே காட்டில் தவமியற்றும் மரபு காட்டில் வாழும் மானையும் தவமியற்றுதல் எனும் பொருண்மையில் குறித்திருக்கலாம்.

*[தவம்புரி + மாதர் – தவம்புரிமாதர்]*

**தவமுதல்வி** *tava-mudalvi,* பெ. (n.) தவமுதுமகள் பார்க்க; see *tava-mudu-magaḷ* "இருந்தவ முதல்வியொடு பின்னையு மல்லிடைப் பெயர்ந்தனர்" *(சிலப். 13: 135).*

*[தவம் + முதல்வி]*

**தவமுதுமகள்** *tava-mudu-magaḷ,* பெ. (n.) தவத்தில் முதிர்ந்தவள்; a female ripe in asceticism. "உரிமையோடு பயின்றாளொரு தவமுது மகளைவிட்டு" *(குறள், 501, உரை).*

*[தவம் + முதுமகள்]*

**தவமுதுமகன்** *tava-mudu-magaṉ,* பெ. (n.) தவத்தில் முதிர்ந்த முனிவன்; a male ripe in asceticism. "தவமுதுமகனொடு கருமங் கூறி" *(பெருங். இலாவாண. 20: 69).*

*[தவம் + முதுமகன்.]*

**தவமுருங்கை** *tava-muruṅgai,* பெ. (n.) தவசு முருங்கை பார்க்க; see *tavašu-muruṅgai.*

*[தவம் + முருங்கை.]*

**தவயாகம்** *tava-yāgam,* பெ. (n.) ஐவகை வேள்வி செய்து மேற்கொள்ளும் நோன்பு; performance of penance or religious austerities, as a sacrifice, one of five kinds of vēlvi. "தவயாகமாவது உடல்வாடச் சாந்திராயண முதலிய விரதங்களை யனுட்டித்தல்" *(சிவதரு. ஐவகை. 2, உரை).*

*[தவம் + யாகம்]*

**தவர்¹-தல்** *tavar-,* 4 செ.குன்றாவி. (v.t.) துளைத்தல்; to bore a hole. "வண் குறிஞ்சியிசை தவருமாலோ" *(திவ். திருவாய். 9. 9: 1).*

*[தள் → தம் → திமர் → தமர் → தவர்-. தமர் = துளையிடுகருவி. தமர்தல் – துளையிடுதல்.]*

**தவர்²** *tavar,* பெ. (n.) துளை; hole in a board.

*[தமர் → தவர்.]*

**தவர்³** *tavar,* பெ. (n.) வில் (திவா.); bow. "தவரிற் புரிநாணுற" *(பாரத. திரௌ. 47).*

*[தமர் → தவர்.]*

**தவராசம்** *tavarāšam,* பெ. (n.) வெள்ளைச் சருக்கரை (மூ.அ.); white sugar from Arabian manna.

*[தவர் → தவராசம்.]*

**தவராசன்** *tavarāšaṉ,* பெ. (n.) தவராசம் பார்க்க; see *tavarāšam.*

*[தவம் + ராசன்.]*

**தவருக்கம்** *tavarukkam,* பெ. (n.) வட மொழியில், தகர ஒலி நான்கும் நகரம் ஒன்றும் ஆகிய ஐந்து எழுத்துகள்; the dental series in Šānskrit ai-varukkam.

*[த + வருக்கம்]*

**தவல்¹(லு)-தல்** *taval(lu)-,* 3 செ.கு.வி. (v.i.) நீங்குதல்; to leave, depart. "அழுங்க றவலா வுள்ள மொடு" *(மணிமே. 4: 119).*

*[தவல் → தவல்(லு)-.]*

**தவல்²** *taval,* பெ. (n.) *1.* குறைவு; diminishing, decreasing. "தவலருங் கருநீர்க் குண்டகழ்" *(கல்லா. 54, 38).* *2.* கேடு; failure. "தவலருஞ் செய்வினை" *(கலித். 19).* *3.* குற்றம்; fault.

"தவலருந் தொல்கேள்வி" *(நாலடி., 137)*. 4. இறப்பு; death. "அவலமறுசுழி மறுகலிற் றவலே நன்று" *(புறநா. 238:18)*. 5. வறுமையால் வருந்துகை; suffering from poverty. "தவலுங் கெடலு நணித்து" *(குறள், 856)*.

க. தவு

*[தவி → தவல்.]*

**தவலம்** *tavalam*, பெ. (n.) 1. அவுபல செய்நஞ்சு (யாழ்.அக.); an arsenic. 2. புறா வகை; a kind of dove.

*[தவல் + அம் → தவலம்.]*

**தவலல்** *tavalal*, பெ. (n.) தவல்² – 1, 4 பார்க்க; see *taval*² - *1. 4*.

*[தவல் + அல் → தவலல்.]*

**தவலி** *tavali*, பெ. (n.) 1. எருது; bull. 2. ஒரு மீன்; a kind of fish. 3. வெள்ளை ஆ; white cow. 4. வெண்ணிறம்; white colour (சா.அக.).

*[தவல் → தவலி.]*

**தவலிமன்** *tavali-man*, பெ. (n.) வெண்ணிறம்; white colour (சா.அக.).

*[தவலி → தவலிமன்.]*

**தவலை** *tavalai*, பெ. (n.) அகன்ற வாயுடைய மாழையாலான ஏனவகை; metallic pot with a wide mouth.

தெ. தபெல; க. தபெலே; ம. தவல

*[தவ → தவலை.]*

**தவலைச்செம்பு** *tavalai-c-cembu*, பெ. (n.) செம்புவகை; a kind of vessel.

*[தவலை + செம்பு.]*

**தவலைப்பானை** *tavalai-p-pāṉai*, பெ. (n.) தவலை (நெல்லை) பார்க்க; see *tavalai*.

*[தவலை + பானை.]*

**தவலையடை** *tavalai-y-aḍai*, பெ. (n.) தவலையிலிட்டுச் சமைத்த அடை வகை; rice-cake cooked in a tavalai.

*[தவலை + அடை – தவலையடை. ஒருகா. தவளையடை → தவலையடை. தவளை போன்று தட்டையாயும், சிறிது தடித்து முள்ள வடை.]*

**தவலோகசீவன்** *tavalōga-sīvaṉ*, பெ. (n.) காந்தம்; magnet (சா.அக.).

*[தவம் + Skt. லோகசீவன்]*

**தவலோகம்** *tava-lōgam*, பெ. (n.) மேலேழுலகத்துள் ஆறாவது; an upper world, sixth of mēl-ēḻ-ulagam. "தவலோகங் கடந்துபோய்" *(திருவிளை. மலயத்துவ. 28)*.

*[தவம் + Skt. லோக]*

**தவவிளக்கு** *tava-viḷakku*, பெ.(n.) தவமாகிய பெருவிளக்கு (முக்காலத்தையும் விளக்க வல்லது); penance, considered as a light illuminating the past, present and future. "எதிர்வது மிறந்தது மெய்திநின்றது மதிர்வறு தவவிளக்கெறிப்பக் கண்டவன்" *(சீவக. 2850)*.

*[தவம் + விளக்கு]*

**தவவீரர்** *tava-vīrar*, பெ. (n.) தவம் இயற்றுவதில் வீரராயுள்ள முனிவர்; sages, as heroic in performing austerities. "தவவீரர் திசை சிலம்பத் துதியோதி" *(சீவக. 3104)*.

மறுவ. தவத்தர்.

*[தவம் + வீரர்]*

**தவவேடம்** *tava-vēḍam*, பெ. (n.) முனிவர் கோலம்; ascetic's garb or guise. "தகவில தவவேடம்" *(கம்பரா. வனம்புகு. 24)*.

மறுவ. தவக்கோலம்

*[தவம் + வேடம்]*

**தவவேள்வி** *tava-vēḷvi*, பெ. (n.) தவத்தில் செய்யப்படும் வேள்வி (யாகம்) (சி.சி. 8:23, சிவஞா.); performance of penance or religious austerities, as a sacrifice, one of aivagai-vēḷvi.

*[தவம் + வேள்வி]*

**தவழ்-தல்** *tavaḻ-*, 2 செ.குன்றாவி. (v.i.) 1. ஊர்தல், நகர்தல்; to creep, crawl, as infants, lizards, snakes. "தங்கள் பாடியில் வளர்ந்துமா மருதிடைத் தவழ்ந்த.... கருணையங்கடலே" *(பாரத. கிருட்டிணன். 91)*. குழந்தை மெல்லத் தவழ்ந்து வந்து தந்தையின் கால்களைக் கட்டிக் கொண்டது. (உ.வ.). 2. தத்துதல்; to leap and flow, as waves. "ஓதங் கரைதவழ்நீர் வேலியுலகினுள்" *(பு.வெ. 8: 9)*.

3. *பரத்தல்;* to extend, traverse, spread on all sides. '*உடன்று நோக்கும்வா யெரிதவழ" (புறநா. 38:5).*

க. தெவள்

*[தவ → தவழ்-.]*

**தவழ்கரடி** *tava[-karaḍi,* பெ. (n.) விலங்கு வகை; badger, Indian ratel, Mellivora indica, as a creeping bear.

*[தவழ் + கரடி]*

**தவழ்சாதி** *tava[-šādi,* பெ. (n.) தவழுயிரி பார்க்க; see *tava[uyiri.*

*[தவழ் + சாதி]*

**தவழ்புனல்** *tava[-puṉal,* பெ. (n.) மெல்லச் செல்லும் ஆற்று நீர்; water of a stream flowing gently. *"தவழ் புனலிருதுரணி" (தைலவ. தைல. 13).*

*[தவழ் + புனல்]*

**தவழ்வன** *tava[vaṉa,* பெ. (n.) தவழுயிரி பார்க்க; see *tava[uyiri.*

*[தவழ் → தவழ்வன]*

**தவழவாங்கிக்கட்டு-தல்** *tava[a-vāṅgi-k-kaṭṭu-* 5 செ.குன்றாவி.(v.t.) 1. *மாட்டுக்காலைக் கழுத்துடன் பிணைத்துத் தளைதல்;* to tie a bullock's neck to its forelegs to prevent straying. 2. *தண்டனையாக சிறுவரின் கால்விரலையும் கழுத்தையும். கயிற்றால் பிணைத்தல்;* to tie a string binding the neck of a boy and his toe together, as a punishment.

மறுவ. தாழக்கட்டு-தல்

*[தவழ் + அ + வாங்கிக்கட்டு-.]*

**தவழவாங்கு-தல்** *tava[a-vāṅgu-,* 5 செகுன்றாவி. (v.t.) 1. ஒருவனைக் குனியவைத்து துன்புறுத்தி அவன்சொத்து முழுமையும், தமதாக்கிக் கொள்ளுதல் (யாழ்ப்.); to deprive a person of all his property, holding him down and robbing him. 2. *மிகுதியாக வேலை கொடுத்து ஒருவனை வாட்டுதல் (இ.வ.);* to weary a person by over work.

மறுவ. தாழவாங்குதல்

*[தவழ் + அ + வாங்கு-.]*

**தவழுயிரி** *tava[uyiri,* பெ. (n.) ஊர்ந்து செல்லும் உயிரினம்; class of creatures that more slowly on all fours. ஊருயிரி.

*[தவழ் + உயிரி]*

**தவளச்சங்கு** *tava[a-c-caṅgu,* பெ. (n.) வெண்சங்கு; white conch *(சா.அக.).*

*[தவளம் + சங்கு]*

**தவளசத்திரம்** *tava[a-šattiram,* பெ. (n.) அரசர்க்குரிய வெண்கொற்றக்குடை; white umbrella, one of the insignia of royalty. "தவளசத்திரத்தையுமுடைய வேந்தற்கு" *(பு.வெ. 9, 23, உரை).*

*[தவளம் + சத்திரம்]*

**தவளத்திசைநாதம்** *tava[attišai-nādam,* பெ. (n.) தவளச்சங்கு பார்க்க; see *tava[a-c-caṅgu.*

*[தவளம் + திசைநாதம்]*

**தவளத்தொடை** *tava[a-t-toḍai,* பெ. (n.) தும்பைமாலை *(காளத். உலா, 132);* garland of tumpai flowers.

*[தவளம் + தொடை]*

**தவளநிறக்காக்கணம்** *tava[a-niṟa-k-kākkaṇam,* பெ. (n.) வெள்ளைக்காக்கணம்; clitoria ternatia bearing white flowers *(சா.அக.).*

*[தவளநிறம் + காக்கணம்]*

**தவளநீறு** *tava[a-nīṟu,* பெ. (n.) வெண் சாம்பல்; white ash.

*[தவளம் + நீறு]*

**தவளபக்கம்** *tava[a-pakkam,* பெ. (n.) வெண்ணாரை; white crane *(சா.அக.).*

*[தவளம் + பக்கம்]*

**தவளபாடலி** *tava[a-pāḍali,* பெ. (n.) வெண் பாதிரிமரம்; white trumpet flower tree *(சா.அக.).*

*[தவளம் + பாடலி]*

**தவளம்** *tava[am,* பெ. (n.) 1. வெண்மை; white; ash-colour, grey. '*தவளவாணகை கோவல னிழப்ப" (சிலப். 4:55).* 2. வெண்மிளகு (மலை.); white pepper, the mature seed of black pepper.

3. எரியணம் (கருப்பூரம்) (யாழ்.அக.); camphor. 4. சங்கநஞ்சு (யாழ்.அக.); an arsenic.

*[தவள் + அம். 'அம்' சொல்லாக்க ஈறு. ஓ.நோ. பவளம்.]*

**தவளம்பண்ணி** *tavaḷam-paṇṇi,* பெ. (n.) காட்டுத் துளசி; wild-basil.

*[தவளம் + பண்ணி]*

**தவளமாகை** *tavaḷam-āgai,* பெ. (n.) வெண்ணிறமாக மாறுகை; becoming white.

*[தவளம் = வெண்மை. தவளம் → தவளமாகை]*

**தவளமாய்நீறு-தல்** *tavaḷam-āy-nīṟu-,* 5 செகுன்றாவி (v.t.) 1. வெண்சாம்பலாய் போதல்; to be reduce to white ashes. 2. துகளாகுதல்; to become a full calcined powder.

*[தவளம் + ஆய் + நீறு-.]*

**தவளமிருத்திகை** *tavaḷa-miruttigai,* பெ. (n.) சுண்ணாம்பு (யாழ்.அக.); lime. 2. வெள்ளை நஞ்சு; white arsenic. 3. வெள்ளைமணல்; white sand (சா.அக.).

*[தவளம் = வெண்மை. தவளம் + மிருத்திகை]*

**தவளமிளகு** *tavaḷa-miḷagu,* பெ. (n.) வெண் மிளகு; white-pepper (சா.அக.).

*[தவளம் = வெண்மை. தவளம் + மிளகு]*

**தவளவருணம்** *tavaḷa-varuṇam,* பெ. (n.) தோல் நோய், இணைவிழைச்சு (மேக)நோய் 18 வகைகளுளொன்று; one of the 18 venerial diseases (சா.அக.).

*[தவளம் + வருணம்]*

**தவளவைசூரி** *tavaḷa-vaiśūri,* பெ.(n.) ஒரு வகை அம்மை நோய்; a kind of small pox (சா.அக.).

*[தவளம் + வைசூரி]*

**தவளாங்கம்** *tavaḷāṅgam,* பெ. (n.) 1. வெண்ணிறமானவுடம்பு; white body. 2. வெளுத்தவுடம்பு; pale-body.

*[தவளம் + அங்கம். தவளம் = வெண்மை. ஒருகா. தவளங்கம் → தவளாங்கம்.]*

**தவளாம்பரி** *tavaḷāmbari,* பெ. (n.) தலைமைப் பண்களுளொன்று; (மேளகருத்தாக்களு ளொன்று) (சங்.சந். 47); a primary rāga.

**தவளாமுரிகம்** *tavaḷā-murigam,* பெ.(n.) சிறுநீரக நோய்களிளொன்று; a disease of the kidneys.

*[தவளாமுரிகம் = சிறுநீரில் மிகுதியான உப்புடன், முட்டையின் வெண்கருவைப் போல் நீர் பிரியும், நோய் என்று சா. அக. கூறும்.]*

**தவளிதம்** *tavaḷidam,* பெ. (n.) வெண்மை (வின்.); whiteness.

*[தவளி → தவளிதம்.]*

**தவளை** *tavaḷai,* பெ. (n.) நீண்ட பின்னங் கால்களால் நிலத்தில் தாவியும், நீரில் நீந்தியும் செல்லும் உயிரி; animals of the frog and toad variety, Batrachia ecandata. "தவளைத் தண்டுறை கலங்கப் போகி" (பெருங். மகத., 3:21).

க., ம. தவள; வ. மண்டூகம்

*[தவழ் → தவள் → தவளை = தாவிச் செல்வதால் பெற்றபெயர். சதுப்புநிலத்தில் பூச்சி புழுக்களைத் தின்று வாழுந் தன்மைத்து. வேனிற்காலத்தே வயற் பொந்துகளில் வாழும். காலற்ற சிறு தவளை, நீண்ட வாலின் உதவியால் உலா வரும். அழுகிய பொருட்களையுந் தின்னுந் தன்மைத்து என்று சா.அக. கூறும்.]*



**தவளை வகைகள்:**

1. துடுப்புக்கால் தவளை;
2. மிடர்த்தவளை; bull frog.

## தவளை வகைகள்


சிவப்புத் தவளை
சிறுதவளை
சொறியாந் தவளை
கிணற்றுத் தவளை
மணற் தவளை
பச்சைத் தவளை
குளத்துத் தவளை
நாமத் தவளை
துடுப்புக்கால் தவளை

3. சொறியாந்தவளை; flying frog.
4. குளத்துத்தவளை; tank frog.
5. கிணற்றுத்தவளை; well frog.
6. பச்சைத்தவளை; green frog.
6. மணற்றவளை; sand frog.
7. சிறுதவளை; small frog.
8. சிவப்புத்தவளை; red frog.
9. வறட்டுத்தவளை; ventriloquist frog.
10. நாமத்தவளை (சா.அக.)

**தவளைக்கடி** *tavaḷai-k-kaḍi*, பெ. (n.) 1. சொறிப் புண்வகை (தஞ். சர. iii, 159); a kind of eruption. 2. தவளைக் கடியினால் உண்டாகும் ஒருவகை நோய்; a kind of frog bite disease (சா.அக.).

*[தவளை + கடி]*

**தவளைக்கல்** *tavaḷai-k-kal*, பெ. (n.) சொறிக்கல் (வின்.); laterite.

மறுவ. இரும்பகக்களிமண்

*[தவளை + கல்]*

**தவளைக்காய்** *tavaḷai-k-kāy*, பெ. (n.) 1. தவளை; frog. 2. நீரில் தத்திச் செல்லும்படி எறியுங்கல்; flat tile ricochetting on the water. 3. புடைத்தல் முதலியன செய்யும்போது, மேற்கையில் எழும்பித் தோன்றிமறையுந் தன்மையுள்ள சதைத் திரட்சி; swelling of the biceps, as caused by a blow.

*[தவழ் → தவளை + காய்]*

**தவளைக்கால்** *tavaḷai-k-kāl*, பெ. (n.) தவளைக் குரங்கு (வின்.) பார்க்க; see *tavaḷai-k-kuraṅgu*.

*[தவளை + கால்]*

**தவளைக்கிண்கிணி** *tavaḷai-k-kiṇkiṇi*, பெ. (n.) தவளைபோல் ஒலிக்கும் கிண்கிணி கொண்ட காலணிவகை (சீவக. 2481); an anklet with bells giving the sound of a frog's croak. "தவளைக் கிண்கிணி ததும்பு சீறடியர்" (பெருங். உஞ்சைக். 46, 246).

*[தவளை + கிண்கிணி]*

**தவளைக்குஞ்சு** *tavaḷai-k-kuñju*, பெ. (n.) தவளைக்குட்டி பார்க்க; see *tavaḷai-k-kuṭṭi*.

*[தவளை + குஞ்சு]*

**தவளைக்குட்டம்** *tavaḷai-k-kuṭṭam*, பெ. (n.) தோல்நோய்; ஒருவகைப்பெருநோய்; a variety of leprosy (சா.அக.).

*[தவளை + குட்டம்]*

**தவளைக்குட்டி** *tavaḷai-k-kuṭṭi*, பெ. (n.) தவளையின் இளமை; tadpole, periwinkle. "தவளைக் குட்டியென வரும்" (தொல். பொருள். 561: உரை).

*[தவளை + குட்டி]*

**தவளைக்குரங்கு** *tavaḷai-k-kuraṅgu*, பெ. (n.) 1. பணிப்பூட்டுவகை (வின்.); a kind of clasp in a chian, in jewellery. 2. கொக்கித்தாழ்ப்பாள்; hook for fastenting a door. 3. இரட்டைக் கொக்கி; double iron-hook for suspending, as a cradle.

*[தவளை + குரங்கு]*

**தவளைச்சங்கு** *tavaḷai-c-caṅgu*, பெ. (n.) சொறிச்சங்கு; rough conch.

*[தவளை + சங்கு.]*



**தவளைச்சுக்கான்** *tavaḷai-c-cukkāṉ*, பெ. (n.) கருஞ்சுக்கான்; a black lime stone.

*[தவளை + சுக்கான்]*

**தவளைச்சினை** *tavaḷai-c-ciṉai*, பெ. (n.) தவளை வயிற்றிலுள்ள சினை; the ovum of a frog.

*[தவளை + சினை.]*

**தவளைச்சொறி** *tavaḷai-c-coṟi*, பெ. (n.) சொறி புண்வகை; a kind of eruption.

த. தவளைச்சொறி → வ. கண்டகரோகம்

[தவளை + சொறி → தவளைச்சொறி. உடம்பில் வலியோ புண்ணோ இல்லாமல், கருப்பாகத் தடிப்புடன், தாமரைக் கொடியின் சிறியமுள் போன்று தோற்றந்தரும் தோல்நோய்.]

**தவளைதத்து-தல்** *tavaḷai-tattu-,* 5 செ.குன்றாவி. (v.i.) தத்திவிளையாடுதல் (வின்.); to play at leap frog.

மறுவ. பச்சைக் குதிரையாடுதல்; தவளைப் பாய்ச்சலாட்டம்; தவளைப்பாய்த்து (நன்.)

[தவளை + தத்து-.]

**தவளைதின்னி** *tavaḷai-tiṉṉi,* பெ. (n.) பறையருள் ஒரு பிரிவினர்; a subsect of Pariahs (G.Sm.D. 1.1:110).

[தவளை + தின்னி.]

**தவளைநஞ்சு** *tavaḷai-nañju,* பெ. (n.) தவளை தோலில் உள்ள நஞ்சு; a poisonous principle contained in the skin of toads.

[தவளை + நஞ்சு.]

**தவளைநுரை** *tavaḷai-nurai,* பெ. (n.) முட்டையுடன் உள்ள தவளையெச்சில் (வின்.); frog's froth containing spawn.

[தவளை + நுரை]

**தவளைநோய்** *tavaḷai-nōy,* பெ. (n.) 1. வாழை நோய் வகை; a plantain disease. 2. காலை நீட்டுவிக்கும் மாட்டுநோய் வகை; a cattle disease that lengthens the foot.

மறுவ. தவளைச்சுருட்டி

[தவளை + நோய் → தவளைநோய். சொறித்தவளையின் மஞ்சள்தோல் போன்று சுருங்கியும், திட்டுதிட்டாய்த் தீய்ந்தும் காணப்படும், வாழைமர நோய்.]

**தவளைப்பாய்ச்சல்** *tavaḷai-p-pāyccal,* பெ. (n.) தவளைப்பாய்த்து பார்க்க; see *tavaḷai-p-pāyttu.*

[தவளை + பாய்ச்சல்]

**தவளைப்பாய்த்து** *tavaḷai-p-pāyttu,* பெ. (n.) நூற்பா நான்கனுள், தவளைப்பாய்ச்சல் போல இடைவிட்டுச் செல்லும் நிலை (நன்.19); the principle of the frog's leap, whereby a šūttiram is so constructed as to have reference to the next but one that follows it, one of four šūttira-nilai.

மறுவ. தவளைப்பாய்ச்சல்

[தவளை + பாய்த்து]

**தவளைமுகம்** *tavaḷai-mugam,* பெ. (n.) மூக்கால் ஏற்பட்ட சப்பைமுகம்; flatness of the face due to intra-nasal disease Frag face.

[தவளை + முகம்]

**தவளைமூக்கடைப்பன்** *tavaḷai-mūkkaḍaippaṉ,* பெ. (n.) மாட்டுநோய் வகை (மாட்டுவா. 32); a cattle disease.

[தவளை + மூக்கடைப்பன்]

**தவளையம்மை** *tavaḷai-y-ammai,* பெ. (n.) சின்ன அம்மை; measles (சா.அக.).

[தவளை + அம்மை.]

**தவளையுடம்பு** *tavaḷai-y-uḍambu,* பெ. (n.) சொறியுடல்; body with eruptive itch.

[தவளை + உடம்பு.]

**தவளைவயிறு** *tavaḷai-vayiṟu,* பெ. (n.) பருத்த வயிறு; frog-belly.

மறுவ. சூனவயிறு

[தவளை + வயிறு.]

**தவளைவாய்** *tavaḷai-vāy,* பெ. (n.) அணிகலன் வகை (S.I.I. V, 212); an ornament.

[தவளை + வாய்]

**தவளைவெட்டு-தல்** *tavaḷai-veṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) கைமுண்டாவில் சதைதிரளும்படி குத்துதல் (இ.வ.); to strike at the muscles of the arm so that they gather up into a protuberance.

[தவளை + வெட்டு-.]

**தவளோற்பலம்** *tavaḷōṟpalam,* பெ. (n.) வெள்ளாம்பல் (மலை); Indian white water-lily.

[தவளை + உற்பலம்]

**தவறணை** *tavaṟaṇai,* பெ.(n.) (இலங்கை வழக்கு) மதுக்கடை; place where liquor is sold or consumed. கள்ளுத் தவறணை (இ.வ.) சாராயத் தவறணை (யாழ்ப்.).

**தவறவிடு-தல்** *tavaṟa-viḍu-,18* செ.குன்றாவி. (v.t.) *1.* **விடும்படி நேர்தல்;** to miss. இந்தப் பேருந்தைத் தவறவிட்டால், அலுவலகத்திற்கு உரிய நேரத்திற்குப் போகமுடியாது? *(உ.வ.). 2.* **தொலைத்தல்;** to lose. பொன் வளையலைத் தவறவிட்டு வந்து நிற்கிறாயே?

*[தவறு → தவற + விடு-.]*

**தவறாக** *tavaṟāga,* கு.வி.எ. (adv.) **தெரியாமல்;** by mistake. உங்களிடம் தரவேண்டிய கடிதத்தைத் தவறாக அவரிடம் கொடுத்துவிட்டேன் *(உ.வ.).*

*[தவறு + ஆக]*

**தவறாமல்** *tavaṟāmal,* பெ. (n.) **தவிர்த்து விடாமல்;** without fail. திருமணத்தில், தாங்கள் தவறாமல் கலந்துகொள்ள வேண்டும். என்று நண்பர் கூறினார் *(உ.வ.). 2.* **மாறாமல்;** without changing any. ஆண்டுதோறும் தவறாமல் நான் என்று சொந்த ஊருக்குச் செல்வேன் *(உ.வ.).*

*[தவறு + ஆம் + அல்.]*

**தவறிப்பேசு-தல்** *tavaṟi-p-pēsu-,5* செ.குவி. (v.i.) **பிழைபடக் கூறுதல்;** to slip of the tongue.

*[தவறி + பேசு-.]*

**தவறிப்போ-தல்** *tavaṟi-p-pō-,5* செ.குன்றாவி. (v.t.) *1.* **இறத்தல்;** to pass away. அவருடைய தந்தை தவறிப்போய், ஆறு ஆண்டுகள் ஆகிறது *(உ.வ.). 2.* **காணாமற் போதல்;** to be lost. திருவிழாவில் குழந்தை தவறிப் போய்விட்டது *(உ.வ.).*

*[தவறு → தவறி + போ-.]*

**தவறு[1]-தல்** *tavaṟu-,5* செ.குவி. (v.i.) *1.* **தப்பி விழுதல்;** to slip, miss, fall, tumble over, trip, lose one's hold. "உள்ளத்தன்பு தவறிலான் பொருட்டு" *(திருவிளை. மெய்க்கா: 36). 2.* **வாய்க்காமற்போதல்;** to fail, miscarry, prove abortive. *3.* **வெற்றிவாய்ப் பிழத்தல்;** to be unsuccessful. *4.* **குற்றப்படுதல்;** to fail in duty; to fall from moral rectitude; to transgress, sin. *5.* **காணமாற்போதல்;** to stray, lose the way; to be lost. *6.* **பிழையாதல்;** to err, mistake, blunder. கணக்குப் போடுவதில் தவறினான் (உவ). *7.* **சாதல்;** to die. *8.* **குறைதல்;** to fall short.

**தவறு[2]-தல்** *tavaṟu-,5* செ.குன்றாவி. (v.t.) **தாண்டுதல்** *(பிங்.);* to pass over, go beyond.

*[தாவு → தவல் → தவறு-.]*

**தவறு[3]** *tavaṟu,* பெ. (n.) *1.* **பிழை;** mistake, error, blunder. *2.* **செயல்நடவாமை;** failure in purpose or accomplishment, as in an examination. "தடுமாறுந் தாளாளர்க் குண்டோ தவறு" *(நாலடி, 191). 3.* **நெறிதவறுகை;** fault, delinquency, misconduct, transgression. "இல்லை தவறவர்க் காயினும்" *(குறள், 1321). 4.* **அழுக்கு;** dirt, uncleanness. "உடம்பினுறுந் தவறுதனை" *(சேதுபு. இராமனருச், 132). 5.* **குறைவு;** want; trouble. "நீயிருப்பவுண்டோ வெமக்குத் தவறென்றார்" *(உத்தரரா. திருவோல: 22). 6.* **பஞ்சம்;** drought, famine. "தவறு தீர்ந்து" *(பெரியபு. திருநாவுக்: 262).*

க. தவிர்.

*[தவ → தவல் → தவறு-.]*

**தவறுகம்** *tavaṟugam,* பெ. (n.) **எரிசாலை;** a plant *(சா.அக.).*

*[தவறு → தவறுகம்.]*

**தவறுதல்** *tavaṟudal,* பெ. (n.) **தவறு** பார்க்க; see *tavaṟu (கிரி.அக.).*

*[தவல் → தவறு-.]*

**தவறுதலாக** *tavaṟudal-āga,* கு.வி.எ. (adv.) **தவறாக** பார்க்க; see *tavaṟāga.*

*[தவறுதல் + ஆக.]*

**தவறை** *tavaṟai,* பெ. (n.) **சிறுகப்பலிற் சங்கிலி சுற்றும் கருவி;** capstan, machine for winding up a cable in small craft (naut.).

தெ. தபற.

*[தவர் → தவறை.]*

**தவறைப்பாள்** *tavaṟai-p-pāḷ,* பெ. (n.) **தவறையைச் சுற்றாமல் நிறுத்தற்குரிய இருப்புப்பட்டை;** pawl, short bar which acts as a catch to a windlass (naut.).

E. Paul

*[தவறை + பாள்]*

**தவறைமூட்டான்** *tavaṟai-mūṭṭāṉ*, பெ. (n.) நங்கூரச்சங்கிலி; anchor-chain (naut.).

*[தவறை + மூட்டான்]*

**தவறைவாரி** *tavaṟai-vāri*, பெ. (n.) கப்பலின் இருப்புக்கருவி வகை; handspike (naut.).

*[தவறை + வாரி]*

**தவன்**[1] *tavaṉ*, பெ. (n.) தவசி; ascetic. "குலத் தலைவர் தவர்குறிப்புக் குறித்து ளார்போல்" *(பெரியபு. புராணசா. 22).*

*[தவம் → தவன்.]*

**தவன்**[2] *tavaṉ*, பெ. (n.) தவம்[1] பார்க்க; see *tavam*[1]. religious austerity. "தவன்செயத் தவன்செய்த தவனென்" *(கம்பரா. சூர்ப்ப: 18).*

*[தவம் → தவன் = தவஞ்செய்தவன். மாதவன் = பெருந்தவஞ் செய்தவன். "மாதவர் நோன்பு மடவார் கற்பும்" (மணிமே. 22, 208) (வ.வ. 16)]*

**தவன்**[3] *tavaṉ*, பெ. (n.) கணவன் (சூடா.); husband.

*[தம் எனும் கருதற்கருத்து வேரடி. தம் → தமன் → தவன். அனைத்து நிலையிலும், அன்பினையும், அருளையுந் தந்து மனைவியைக் காத்து ஓம்புபவன். இல்லாளைக் காத்து, தவமியற்றுபவருக்கு உணவு தந்து வாழ்பவனே தவன்.]*

**தவனகம்** *tavaṉ-agam*, பெ. (n.) *1.* தவனம்[2] பார்க்க; see *tavaṉam*[2]. *2.* மருக்கொழுந்து; warmwood, maidslove.

**தவனகி** *tavaṉagi*, பெ. (n.) *1.* எரிபூடு; plant causing burning sensation. *2.* எரியும்பூடு; burning bush.

*[தகன் → தவன் → தவனகி.]*

**தவனச்செட்டி** *tavaṉa-c-ceṭṭi*, பெ. (n.) செட்டி வகையினர் (S.I.I. viii, 98); a sect of setti caste.

*[தவனம் + செட்டி.]*

**தவனட்சபுட்டம்** *tavaṉaṭca-puṭṭam*, பெ. (n.) குயில்; Indian cuckoo.

*[தவன் + Skt. அட்சம் + புட்டம்.]*

**தவனட்சம்** *tavaṉaṭšam*, பெ. (n.) ஒரு மருந்துப் பூடு; a medicinal plant.

*[தவனம் + அட்சம்.]*

**தவனட்சமாசி** *tavaṉatšamāši*, பெ. (n.) இரவில் பூக்கும் சிறுவழுதலை; Indian night shade.

*[தவனட்சம் → தவனட்சமாசி.]*

**தவனத்திராவகம்** *tavaṉa-t-tirāvagam*, பெ. (n.) வெடியக்காடி; nitric acid (சா.அக.).

*[தகனம் → தவனம் + திராவகம்.]*

**தவனப்புளி** *tavaṉa-p-puḷi*, பெ. (n.) *1.* மிளகாயும் உப்பும் சேர்த்திடித்த புளி; tamarind paste mixed with salt and chillies. *2.* நீர்வேட்கையை நீக்கவல்ல புளி; acid preparation potent in quenching thirst.

*[தவனம் + புளி]*

**தவனம்**[1] *tavaṉam*, பெ. (n.) *1.* வெப்பம்; heat. 'அனலூடே தவனப்படவிட்டு' *(திருப்புகழ்த். 308: 50).* *2.* நீர்வேட்கை; thirst. "தவனமா பசியுடையவன்" *(திருவிளை. அன்னக்.2).* *3.* ஆசை; longing, desire. "தவனசலதியின் முழுகியே" *(திருப்பு. 121).* *4.* வருத்தம்; distress. "தவனமுன் றடைந்து" *(கைவல். தத். 12).*

*[தவி → தவம் → தவன் → தவனம். தவம் = வெப்பம்]*

**தவனம்**[2] *tavaṉam*, பெ. (n.) *1.* மருக்கொழுந்து; southern wood, s. sh., Artemisia abrotanum. *2.* காஞ்சிரை (மாசிப்பத்திரி); Indian absinth. *3.* களைப்பு; fatigue (சா.அக.).

*[தவன் → தவனம்.]*

**தவனம்தீர்-த்தல்** *tavaṉam-tīr-*, 4 செ.குன்றாவி. (v.t.) நாவறட்சியைத் தணித்தல்; to quench the thirst.

மறுவ. தாகந்தணித்தல்

*[தவி → தவன் → தவனம் + தீர்-.]*

**தவனமடங்கல்** *tavaṉam-aḍaṅgal*, பெ. (n.) தாகம் தீரல்; thirst becoming quenched (சா.அக.).

மறுவ. நாவறட்சியடங்கல்.

*[தவனம் + அடங்கல்.]*

**தவனமாயிருத்தல்** *tavanam-āy-iruttal,* பெ. (n.) தாகமாயிருத்தல்; being thirsty.

மறுவ. நாவறட்சியாயிருக்கை

*[தவனம் + ஆய் + இருத்தல்.]*

**தவனன்** *tavanan,* பெ. (n.) 1. ஞாயிறு; sun. 2. நெருப்பு; fire.

மறுவ. வெய்யோன், பகலவன், கதிரவன், ஞாயிறு, சூரியன், காய்கதிர்ச்செல்வன்.

*[தவம் → தவன் + அவன். தவம் = வெப்பம்.]*

**தவனாட்சவல்லி** *tavanāṭca-valli,* பெ. (n.) புன்குமரம்; poongu tree (சா.அக.).

*[தவனாட்சம் + வல்லி.]*

**தவனி** *tavani,* பெ. (n.) உடற்கொதிப்புள்ளவள்; woman in a feverish condition. "வீதி விடங்களைக் கண்டிவள் தவனியாயினவா றென்றன் றையலே" (தேவா. 710:8).

மறுவ. சூட்டுடம்பினள்

*[தவி → தவம் → தவனம் →தவனி. 'இ' பெண்பாலீறு. தவம் = எரிவு, சூடு. தவனி = வெப்பமிக்கவுடம்பினள். எஞ்ஞான்றும் தகிக்கும் காங்கையான உடம்பு.]*

**தவனிபோதம்** *tavani-pōdam,* பெ. (n.) ஒருவகைப் புல்; a kind of grass (சா.அக.).

*[தவனி + போதம்.]*

**தவனியம்** *tavaniyam,* பெ. (n.) பொன்; gold. "தவனியப் பைம் பூண்" (பெருங். இலாவண. 8, 169).

*[தவன் + இயம் = தவனியம். தவன் = சூரியன்; ஞாயிறு போன்று ஒளிருவதால் பொன், தவனியம் எனப்பட்டது. 'அம்' அருமைப் பெயரீறு. ஒருகா. தமனியம் → தவனியம்]*

**தவா** *tavā,* பெ. (n.) தாதகி, காட்டத்தி; downy grislea (சா.அக.).

**தவாக்கினி**[1] *tavākkini,* பெ. (n.) 1. தவத்தால் தோன்றும் கனல்; fire of austere penance. 2. தவஞ்செய்வதற்கு வளர்க்கும் தீ; fire kindled for doing penance.

*[தவம் + அக்கினி]*

**தவாக்கினி**[2] *tavākkini,* பெ. (n.) காட்டுத் தீ (யாழ்.அக.); forest fire.

*[தவம் + அக்கினி. அழனி → அக்கினி]*

**தவாங்கம்** *tavāṅgam,* பெ. (n.) தவப்புனைவு (மகாராஜாதுறவு, 66); hermit's garb.

மறுவ. தவவேடம்

*[தவம் + அங்கம் → தவாங்கம்.]*

**தவாட்சரி** *tavāṭcari,* பெ. (n.) தவாட்சொரி பார்க்க; see *tavāṭcori* (சா.அக.).

*[தவாட்சொரி → தவாட்சரி]*

**தவாட்சொரி** *tavāṭcori,* பெ. (n.) ஒரு பூண்டு; an unknown plant (சா.அக.).

**தவாணகம்** *tavāṇagam,* பெ. (n.) காற்று; wind.

**தவாநிலை** *tavā-nilai,* பெ. (n.) உறுதிநிலை; stable condition (செ.அக.).

*[தவு + ஆ. எ.ம.இ. நிலை. தவு = குன்றுகை, குறைகை.]*

**தவாவினை** *tavā-vinai,* பெ. (n.) 1. வீடுபேறு; salvation, deliverance. 2. மலை; hill, mountain (செ.அக.).

*[தவம் + ஆ (எ.ம.இடைநிலை) + வினை) ஒருகா. தவம்வினை → தவாவினை.]*

**தவாளி**[1]**-த்தல்** *tavāḷi-,* 4 செ.கு.வி. (v.i.) கால்வாய் முதலியன தோண்டுதல் (யாழ்ப்.); to make flutings or grooves, as in carpentry; to dig a channel.

*[துவாளி → தவாளி-.]*

**தவாளி**[2]**-த்தல்** *tavāḷi-,* 4 செ.குன்றாவி. (v.t.) தாக்குப்பிடிக்கவியலாது தத்தளித்தல் (புதுவை); to be unable to manage.

*[தவு → தவா → தவாளி-.]*

**தவாளிப்பு**[1] *tavāḷippu,* பெ. (n.) எழுதகக்குழி (யாழ்ப்.); cavity in a moulding, groove.

*[தவா → தவாளி → தவாளிப்பு]*

**தவாளிப்பு**[2] *tavāḷippu,* பெ. (n.) பார்வைக்கு மதிப்பாயிருக்கை (யாழ்ப்.); maintaining a seemingly creditable appearance.

*[சமாளிப்பு → தவாளிப்பு]*

**தவி-த்தல்** *tavi-*, 4 செ.குவி. (v.i.) *1.* இல்லாமை பற்றி வருந்துதல்; to be distressed, to pant for. "தாகத்தாற் றடுமாறித் தவித்தேநின்று" *(சிவரக. பசாசு. 34). 2.* நீர்வேட்கையுண்டாதல்; to be feel thirst. தண்ணீர் தவிக்கிறது (உ.வ.). *3.* இளைத்தல் *(யாழ்.அக.);* to be wearied; to languish.

த. தவி → Skt. தப்

*[தவு → தவி-. தவித்தல் - வெப்பக் கருத்தினின்று கிளைத்த இச் சொல், தற்காலத்தே, மருத்துவச்செலவிற்குப் பணமின்றித் 'தவியாய்த் தவிக்கிறான்' போன்ற வழக்குகளில், வறுமைக் கருத்தையுங் குறித்தது]*

**தவிசணை** *tavišaṇai*, பெ. (n.) கட்டில் (வின்.); bed, cot.

*[தவிசு + அணை. தவிசு = இருக்கை]*

**தவிசம்** *tavišam*, பெ. (n.) *1.* கடல்; sea. *2.* மேலுலகம்; deliverance from rebirth.

**தவிசு**[1] *tavišu*, பெ. (n.) *1.* தடுக்கு முதலிய இருக்கை; small seat, stool, mat to sit on. "கோலத்தவிசின் மிதிக்கின்" *(திருக்கோ. 238). 2.* பாய்; mat. "செய்வினைத் தவிசின்" *(சிலப். 16: 37)* (வின்.). *3.* மெத்தை (பிங்.); mattress. *4.* யானை முதலியவற்றின் மேலிடும் மெத்தை (சூடா.); cushion, padded seat, saddle, as on an elephant. "அடுகளிற் றெருத்தினிட்ட வண்ணப்பூந் தவிசுதன்னை" *(சீவக: 202). 5.* பீடம் (பிங்.); platform.

மறுவ. சிற்றிருக்கை

Pers. divāsi

*[தவி → தவிசு = தரையின் மீது அமரும் வண்ணம் அமைக்கப்படும் அமைப்பு.]*

**தவிசு**[2] *tavišu*, பெ. (n.) நீர்மம்; distilled, liquid.

**தவிட்டம்மை** *taviṭṭammai*, பெ. (n.) சின்னம்மை (இ.வ.); chicken-pox, measles, rash.

*[தவிடு + அம்மை (தவிடு = சிறிய உலக்கையால் உரலில் இட்டுப் பொடியாக்கப்பட்ட பதர்போல் சிதறிக் கிடப்பதைக் குறிக்கும்.)]*

**தவிட்டான்** *taviṭṭāṉ*, பெ. (n.) பட்டைவிரசு வகை (யாழ்.அக.); rough ovate - leaved ivory - wood, m.tr., Ehretia laevisaspera. as having fruit like bran.

**தவிட்டுக்களி** *taviṭṭu-k-kaḷi*, பெ. (n.) தவிட்டாலாக்கிய களி; bran pap (செ.அக.).

*[தவிடு + களி]*

**தவிட்டுக்கிளி** *taviṭṭu-k-kiḷi*, பெ. (n.) ஒருவகை வெட்டுக்கிளி; grasshopper, Attilabus, as bran-brown.

ம. தவிட்டுக்கிளி

*[தவிடு + கிளி]*



**தவிட்டுக்குஞ்சு** *taviṭṭu-k-kuñju*, பெ. (n.) மீன் பூச்சியினங்களின் இளமை (வின்.); young of frog of fish, larva of insects.

மறுவ. மீன்பொடி

*[தவிடு + குஞ்சு]*

**தவிட்டுக்கூழ்** *taviṭṭu-k-kūḻ*, பெ. (n.) தவிட்டால் ஆக்கிய கூழ்; bran porridge (செ.அக.).

*[தவிடு + கூழ்]*

**தவிட்டுக்கொய்யா** *taviṭṭu-k-koyyā*, பெ. (n.) மரவகை (மலை); hill guava, s. tr., Rhodomyrtus tomentosa.

*[தவிடு + கொய்யா]*

**தவிட்டுச்செடி** *taviṭṭu-c-ceḍi*, பெ. (n.) தவிட்டுக் கொய்யா (யாழ்.அக.) பார்க்க; see *taviṭṭu-k-koyyā*.

*[தவிடு + செடி]*

**தவிட்டுச்சோளம்** *tavittu-c-cōlam,* பெ. (n.) சோளவகை (விவசா.3.); a kind of maize.

*[தவிடு + சோளம்]*

**தவிட்டுண்ணி** *tavittunni,* பெ. (n.) 1. ஆட்டு உண்ணிவகை (வின்.); small sheep tick. 2 புதர்களில் வசிக்கும் உண்ணி; ticks frequenting woody places. 3. சிறுஉண்ணி; small tick.

*[தவிடு + உண்ணி]*

**தவிட்டுநிறம்** *tavittu-niram,* பெ. (n.) தவிடு போன்ற மங்கல்நிறம்; brown, dun colour.

ம. தவிட்டுநிறம்

*[தவிடு + நிறம்]*

**தவிட்டுப்பழம்** *tavittu-p-palam,* பெ. (n.) 1. சிறுநெல்லி; otaheite gooseberry. 2. தவிட்டுக் கொய்யா (மலை.) பார்க்க; see *tavittu-k-koyyā.*

மறுவ. மலைநெல்லி

*[தவிடு + பழம்]*

**தவிட்டுப்பாற்சொற்றி** *tavittu-p-pār-šorri,* பெ. (n.) ஒருவகைப் பூடு; a plant, Ruellia.

*[தவிடு + பாற்சொற்றி]*

**தவிட்டுப்பிட்டு** *tavittu-p-pittu,* பெ. (n.) ஒருவகைப் பண்ணிகாரம் (வின்.); fried ball made of bran.

ம. தவிட்டுப்பிட்டு

*[தவிடு + பிட்டு]*

**தவிட்டுப்பில்லை** *tavittu-p-pillai,* பெ. (n.) வெண்ணிறமும் தவிட்டு நிறமும் கலந்திருக்கப் பெற்ற ஆ; cow, partly white and partly brown coloured.

மறுவ. பில்லைக்காளை

*[தவிடு + பில்லை. புல்லை → பில்லை = மங்கிய மஞ்சள்நிறம், முதற்கண் வண்ணத்தைக் குறிக்கப் பயன்பட்ட தவிடு, பில்லை போன்ற சொற்கள், அந்நிறம் கொண்ட ஆவினையுங் குறித்து வழங்கின]*

**தவிட்டுப்பு** *tavittuppu,* பெ. (n.) தவிட்டுமேனி பார்க்க; see *tavittu-mēni.*

*[தவிடு + உப்பு]*

**தவிட்டுப்புறா** *tavittu-p-purā,* பெ. (n.) தவிட்டு நிறமுள்ள சிறுபுறாவகை (பதார்த்த 909); little brown dove, Turtur cambayensis.

ம. தவிட்டுப்ராவு

*[தவிடு + புறா. பருந்து, பலாப்பழம் போன்ற மேலுதடும் கீழுதடும் ஒட்டிப் பிறக்கும் எழுத்துகள், ப்ராந்து, ப்லாப்பழம் என்று தமிழ் மக்களால் பலுக்கப்படும். மேற்பல் வரிசையும் கீழுதடும் ஒட்டிவரும் வகரமும் பகரமும் போன்று இரண்டு உதடும் ஒட்டிவரும் மகரம் ஆகாமை அறிக]*



**தவிட்டுப்பேன்** *tavittu-p-pēn,* பெ. (n.) சிறுபேன் வகை (வின்.); a kind of small louse.

*[தவிடு + பேன்]*

**தவிட்டுப்பொட்டு** *tavittu-p-pottu,* பெ. (n.) 1. கழி பட்ட தவிடு; refuse of bran. 2. ஆடைகளின் பூச்சியரிப்பு (வின்.); moth-eaten places in cloths.

*[தவிடு + பொட்டு]*

**தவிட்டுமச்சி** *tavittu-macci,* பெ. (n.) செடிவகை (விவசா. 6); a plant.

*[தவிடு + ஊமச்சி → தவிட்டுமச்சி]*

**தவிட்டுமயிர்** *tavittu-mayir,* பெ. (n.) 1. செம்பட்டமயிர்; brown hair. 2. முதன் முதலில் முளைக்கும் இறகு; first down of birds.

*[தவிடு + மயிர்]*

**தவிட்டுமாக்களி** *tavittu-mā-k-kali,* பெ. (n.) தவிட்டுக்களி; bran pap.

*[தவிடு + மா + களி]*

**தவிட்டுமுருங்கை** *taviṭṭu-muruṅgai,* பெ. (n.) முருங்கைவகை (நாஞ்.); a species of horse - radish tree.

*[தவிடு + முருங்கை]*

**தவிட்டுமேனி** *taviṭṭu-mēṉi,* பெ. (n.) **சவட்டுப்பு** (யாழ்.அக.); carbonate of soda.

**மறுவ.** கரிக்காடியுப்பு, கரியகை

*[தவிடு + மேனி.]*

**தவிட்டுவிலை** *taviṭṭu-vilai,* பெ. (n.) **மிகக் குறைவான விலை** (யாழ்.அக.); low, nominal price.

**மறுவ.** மலிவுவிலை, அடிமாட்டுவிலை

*[தவிடு + விலை]*

**தவிட்டை**[1] *taviṭṭai,* பெ. (n.) **தவிட்டான்** (யாழ்.அக.) பார்க்க; see *taviṭṭāṉ.*

*[தவிட்டு → தவிட்டை]*

**தவிட்டை**[2] *taviṭṭai,* பெ. (n.) **தவுட்டை** பார்க்க; see *tavuṭṭai* (சா.அக.).

*[தவுட்டை → தவிட்டை]*

**தவிட்டைப்புறா** *taviṭṭai-p-puṟā,* பெ. (n.) **தவிட்டுப்புறா** (யாழ்.அக.) பார்க்க; see *taviṭṭu-p-puṟā.*

*[தவிட்டுப்புறா → தவிட்டைப் புறா]*

**தவிடச்சு** *taviḍaccū,* பெ. (n.) **மஞ்சட்பூ பூக்கும் செஞ்சடைச்சிக் கொடி;** yellow-flowered climbing Indian linden.

*[தவிடு + அச்சு → தவிடச்சு.]*

**தவிடாதிகம்** *taviḍādigam,* பெ. (n.) **கொய்யா (உருளன் பழம்);** guava.

*[தவிடு + ஆதிகம் → தவிடாதிகம்.]*

**தவிடிலை** *taviḍilai,* பெ. (n.) **செடிவகை** (க); oblong leaved corymbose Indian linden, l.sh., Grewia columnaris.

*[தவிடு + இலை → தவிட்டிலை → தவிடிலை.]*

**தவிடு** *taviḍu,* பெ. (n.) 1. **நெல் முதலியவற்றைக் குத்தி அரிசி முதலியன எடுத்தபின், உமியொழியக் கழிந்தபகுதி;** bran. "நெல்லினுக்குத் தவிடுமிக ளனாதியாயும்" (சிசி.11,6). 2. **பொடி;** minute particle. "தவிடுபடு தொகுதி யென" (உத்தரகா. சந்திருவர். 50). 3. **தவுட்டைச் செடி;** felted lance-leaved Indian linden, m. sh., Grewia hirsuta.

*[தவு → தவிடு. தவு = குறைதல், குன்றுதல்.]*

**தவிடுபொடியா-தல்** *taviḍu-poḍi-yā-,* 6 செ.கு.வி. (v.i.) **பொடிப்பொடியாதல்;** to be broken into minute pieces. 2. **நிலைகுலைதல்;** to be ruined beyond recovery. ஆட்சியைக் கைப்பற்ற முயன்ற தலைவரின் எண்ணம் தவிடு பொடியானது (உ.வ.).

*[தவிடு + பொடியா-.]*

**தவிப்பில்லாக்குருவி** *tavippillā-k-kuruvi,* பெ. (n.) **தரையில்லாக்குருவி** (புதுவை); swallow.

*[தவிப்பு + இல்லா + குருவி]*

**தவிப்பு** *tavippu,* பெ. (n.) 1. **வருந்துகை;** anxiety, distress for a thing, languishing, as for a thing. 'நோன்பின் றவிப்பு" (சேதுபு. சேதுச. 50). 2. **வேட்கை;** thirst. "நிரப்புறு தவிப்பினை யொழித்திட" (அரிச். பு. விவாக. 107).

*[தவி → தவிப்பு]*

**தவிர்**[1]**-தல்** *tavir-,* 4 செ.கு.வி. (v.i.) 1. **விலகுதல்** (பிங்.); to abstain, refrain. 2. **இல்லாமற்போதல்;** to cease, become extinct. அவன் வேலை தவிர்ந்தது. (உ.வ.). 3. **தங்கிவருதல்;** to stay, abide. "இடைச்சுர மருங்கிற் றவிர்த லில்லை" (தொல். பொருள். 194). 4. **தணிதல்;** to subside, abate. அவன் சினந் தணிந்தது (உ.வ.).

*[தவி → தவிர்-.]*

**தவிர்**[2]**-தல்** *tavir-,* 4 செகுன்றாவி. (v.t.) 1. **பிரிதல்** (பிங்.); to leave, separate from, forsake. 2. **நீக்குதல்** (பிங்.); to shun, avoid, omit, renounce. 3. **ஒழிதல்;** to give up, cease from. "தவிரா வீகை" (புறநா. 3:5).

*[தவி → தவிர்-.]*

**தவிர்**[3]**-த்தல்** *tavir-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. **நீக்குதல்;** to put away, remove, dispel, chase away, expel, exclude. "அச்சந் தவிர்த்த சேவகன்" (திருவாச. 3:98). 2. **நிறுத்திவிடுதல்;** to discontinue. 3. **தடுத்தல்;** to check, hinder, interrupt, prevent, frustrate. 'தாயர் தெருவிற்

றவிர்ப்ப" (கலித். 84, 15). 4. அடக்குதல்; to control, restrain. "தம்பகைப் புலன்களைத் தவிர்க்கும்" (கம்பரா.நகர. 6).

*[தவி → தவிர்-.]*

**தவிர்ச்சி** *tavircci*, பெ. (n.) 1. தங்குகை; abiding, staying. "களவினுட் டவிர்ச்சி வரைவி னீட்டம்" (இறை. 32). 2. இடையீடு; interruption, cessation, break. "களவினுட் டவிர்ச்சி கிழவோற் கில்லை" (இறை. 33).

*[தவிர் → தவிர்ச்சி]*

**தவிர்த்துவினைசெயல்** *tavirttu-vinai-šcyal*, பெ. (n.) ஐவகைக் கரணங்களுள் பகைவ ரெய்யும் அம்பினைத்தடுத்து, அவர் மேல் அம்பு எய்யுஞ்செயல்; warding off hostile arrows and shooting arrows in return, one of pañja - kiruttiyam. "தொடையும்.... தவிர்த்து வினை செயலும் என ஐவினையாம்" (சீவக. 1676, உரை).

*[தவிர்த்து + வினைசெயல்]*

**தவிர்ந்த** *tavirnda*, இடை. (conj.) நீங்கலாக; தவிர; except. வீடு தவிர்ந்தி ஏனைய சொத்துகள் (உ.வ.).

*[தவிர் → தவிர்ந்த]*

**தவிர்**[1] *tavira*, இடை. (conj.) நீங்கலாக, ஒழிய; except. அது ஒன்றுதவிர எல்லாம் உண்டு (உ.வ.).

*[தவிர் → தவிர]*

**தவிர**[2] *tavira*, இடை. (conj.) ஒழிய; unless. நீ வந்தால் தவிர நடவாது (உ.வ.). மழை பெய்ததே தவிர வெப்பம் குறையவில்லை (உ.வ.).

*[தவிர் → தவிர]*

**தவிரவும்** *taviravum*, இடை. (conj.) மேலும்; further, moreover. அந்த மருந்து நோயைக் குறைக்கவும் இல்லை, தவிரவும் பக்கவிளைவு களையும், ஏற்படுத்தியுள்ளது.

*[தவிர → தவிரவும்]*

**தவில்** *tavil*, பெ. (n.) மேளவகை; a kind of two headed drum. "செந்தவில் சங்குடனே" (திருப்பு. 550).

*[தவில் எனும் சொல் தபல் என்னும் உருதுச்சொல்லிலிருந்து வந்ததாகச் சென்னை அகரமுதலி கருதுகிறது. தபலா என்ற ஒரு பக்கத் தோற்கருவியையே அது சுட்டும். தவில் என்பது இருபக்கத் தோற் கருவியைச் சுட்டும் தமிழ்ச் சொல்லே.]*



**தவிலை** *tavilai*, பெ. (n.) தவலை (யாழ்.அக.); one type of brass vessel.

*[தவலை → தவிலை]*

**தவிவு** *tavivu*, பெ. (n.) இடையீடு; obstruction "தவிவில் சீர்" (திவ். திருவாய். 3. 4:4).

*[தவிர் → தவிவு]*

**தவீசம்** *tavīšam*, பெ. (n.) தவிசம் பார்க்க; see *tavišam*.

*[தவிசம் → தவீசம்]*

**தவு-தல்** *tavu-*, 4 செ.குவி. (v.i.) 1. குன்றுதல்; to shrink; to be reduced; to be ruined. "எஞ்ஞான்றுந் தவாஅப் பிறப்பீனும் வித்து" (குறள், 361). 2. சாதல்; to die.

க. தவு.

*[தபு → தவு-.]*

**தவுக்கார்** *tavukkār*, பெ. (n.) 1. சுண்ணச்சாந்து (யாழ்.அக.); pounded lime. 2. எழுதக வளைவு (வின்.); curves of a cornice. 3. மதிற்செங்கலின் இடைவெளி (வின்.); interstices between the bricks of a wall.

*[தவள் = வெண்மை. தவள் → தவர் → தவுர் → தவுர்க்கார்]*

**தவுக்கார்பண்(ணு)-தல்** *tavukkār-paṇ(ṇu)-*, 5 செ.குன்றாவி. (v.t.) மட்டிக்காரை பூசித் தேய்த்தல் (இ.வ.); to plaster roughly.

*[தவுக்கார் + பண்(ணு)-.]*

**தவுக்கை** *tavukkai*, பெ. (n.) தட்டுவகை (S.I.I. ii, 15, வரிவு); a kind of plate.

க. தபகு.

*[தவு → தவுக்கை]*

**தவுகஞ்சம்** *tavugañjam*, பெ. (n.) தாமரைமணி; lotus bead.

*[தவுகம் → தவுகஞ்சம்]*

**தவுசயம்** *tavušayam*, பெ. (n.) தவுசலம் பார்க்க; see *tavušalam* (செ.அக.).

*[தவுசலம் → தவுசயம்]*

**தவுசலம்** *tavušalam*, பெ. (n.) முருங்கை (மலை.) மரம்; horse-radish tree.

*[தவுசயம் → தவுசலம்]*

**தவுசிலம்** *tavušilam*, பெ. (n.) 1. தண்டங்கிழங்கு; a tuber. 2. நிலப்பனை; ground-palm.

*[தவுசலம் → தவுசிலம்]*

**தவுசெலம்** *tavušelam*, பெ. (n.) தவுசலம் (யாழ்.அக.) பார்க்க; see *tavušalam*.

*[தவுசலம் → தவுசெலம்]*

**தவுட்டை**[1] *tavuṭṭai*, பெ. (n.) செடிவகை (வின்.); felted lance-leaved - Indian linden, m.sh;, Grewia hirsuta.

**தவுட்டை**[2] *tavuṭṭai*, பெ. (n.) 1. தவுட்டுமரம்; bran plant. 2. நாய்த்தவிட்டுச் செடி; dog bran plant. 3. ஐங்கணைக்கள்ளி; a kind of milkys shrub of the Euphorbia genus (சா.அக.).

**தவுடி** *tavuḍi*, பெ. (n.) ஆடமரம்; nilgiri elm Celtis tetrandra (சா.அக.).

**தவுடு**[1] *tavuḍu*, பெ. (n.) 1. குதிரைப்பாய்ச்சல்; running, galloping. 2. படையெடுப்பு; invasion, incursion, military expedition.

*[தாவு → தவு → தவுடு. தாவு = குதிரைப் பாய்ச்சல்]*

**தவுடு**[2] *tavuḍu*, பெ. (n.) தவிடு, பார்க்க; see *taviḍu*.

*[தவிடு → தவுடு]*

**தவுடு**[3] *tavuḍu*, பெ. (n.) தவடை (இ.வ.) பார்க்க; see *tavaḍai* (செ.அக.).

*[தவடை → தவுடு]*

**தவுடை** *tavuḍai*, பெ. (n.) தவடை (இ.வ.) பார்க்க; see *tavaḍai* (செ.அக.).

*[தவடை → தவுடை]*

**தவுதபடம்** *tavuda-paḍam*, பெ. (n.) வெண்டுகில் (வேதா.சூ. 43, உரை); white cloth.

மறுவ. தவுதம்

**தவுதம்** *tavudam*, பெ. (n.) தவுதபடம் (வேதா. சூ. 43) பார்க்க; see *tavuda-paḍam*.

*[தவு → தவுதம்.]*

**தவுதாயப்படல்** *tavutāya-p-paḍal*, பெ. (n.) தபு தாரநிலை பார்க்க; see *tabudāra-nilai* (சா.அக.).

**தவுரிதகம்** *tavuridagam*, பெ. (n.) குதிரை நடையுள் ஒன்று; trotting pace of a horse.

*[தவுரி = விரைவு. விரைவான குதிரை நடை. தவுரி + தகம் → தவுரிகம்]*

**தவுல்** *tavul*, பெ. (n.) தவில் (கொ.வ.) பார்க்க; see *tavil*.

*[தவில் → தவுல்]*

**தவுவறுத்துத்தை-த்தல்** *tavu-v-aṟuttu-t-tai-*, 4 செ.குன்றாவி. (v.t.) துளைசெய்து தைத்தல்; to perfore and stitch. (சா.அக.)

*[தவுவறுத்து + தை-.]*

**தவை** *tavai*, பெ. (n.) முருங்கை விதை; seed of Erythrina indica (சா.அக.).

*[தவு → தவை. தவு = முருங்கை வகை.]*

**தழங்கல்** *taḻaṅgal*, பெ. (n.) 1. பேரொலி; roaring. 2. யாழ்நரம்போசை; sound of a lute (செ.அக.).

மறுவ. ஆரவாரம்

*[துள் → தள் → தழ → தழங்கு + அல் - தழங்கல் = அசைதல், அதிரல், அதிர்வினால் உண்டாகும் ஒலி; யாழ் நரம்பினின்று எழும் இன்னொலி, கடுஞ் சினத்தாலுருவாகும் பேரொலி(மு.தா.234)]*

**தழங்கு-தல்** *taḻaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) முழங்குதல்; to sound, roar, resound. "தழுங்குகுரன் முரசமொடு" (அகநா. 24).

*[துள்→ தள்→ தழ→ தழங்கு-. (மு.தா. 234)]*

**தழங்குரல்** *taḻaṅgural*, பெ. (n.) ஒலிக்குமோசை; rattling sound, as of a drum. "தழங்குரன் முரசிற் சாற்றி" (சீவக. 378).

மறுவ. முழங்கோசை

*[தழங்கு + குரல். தழங்கு = முரசம், முரசிலெழும் பேரொலி.]*

**தழம்** *talam,* பெ. (n.) நெய்மம், எண்ணெய் (யாழ்.அக.); ointment medicated oil.

*[தையிலம் → தலம் → தளம் → தழம்]*

**தழல்**[1]**(லு)-தல்** *tala!(lu)-,* 5 செ.கு.வி. (v.i.) 1. அழலுதல்; to glow, to be very hot; to burn. "தழன்றெரி குண்டம்" (திருவிளை. நாக. 6). 2. ஒளி விடுதல்; to shine. "தழலுந் தாமரையானொடு" (தேவா. 1215:27).

*[தள → தழ → தழல்(லு)-. ஒருகா: உள் → அள் → அழல். அழல்(லு)- மிகுதியாகக் காய்தல், கனலுதல், கனலும், எரிகுண்டம்.]*

**தழல்**[2] *talal,* பெ. (n.) 1. நெருப்பு (பிங்.); fire. 2. தணல்; live coals of fire, embers. 3. நளி (கார்த்திகை) (திவா.); the third star of 27. 4. கேட்டை (திவா.); the l8th star of 27. 5. நஞ்சு; poison. "தழலுமி ழரவம்" (தேவா. 232:7). 6. கொடுவேலி (மலை.) (தைலவ. தைல. 72) பார்க்க; ceylon leadwort, see *koduvēli.* 7. கிளிகடி கருவி; a mechanism for scaring away parrots. "தழலுந் தட்டையும்" (குறிஞ்சிப். 43). 8. கவண் (குறிஞ்சிப். 43, உரை) (திவா.); sling.

*[தள் → தள → தழ → தழல். (வ.வ. 169). ஒருகா. உள் → அள → அழல் → தழல்.]*

**தழல்விழுங்கி** *talal-vilungi,* பெ. (n.) தணல் விழுங்கி (வின்.), நெருப்புக்கோழி; ostrich.

*[தழல் + விழுங்கி. ஒருகா. அழல் விழுங்கி → தழல்விழுங்கி.]*

**தழலகலல்** *talalagalal,* பெ. (n.) அழற்சி நீங்குதல்; subsiding inflammation.

*[தழல் + அகலல்]*

**தழலல்** *talalal,* பெ. (n.) 1. அழலல்; being inflammed. 2. சூடாயிருத்தல்; being very hot. 3. காந்தல்; glowing as body in fever.

*[உள் → அள் → அழல் → தழல். தழல் = தீ, நெருப்பு, சூடு, தீப்போல் உடலில் உண்டாகும் சுரம், மிகு காய்ச்சலால் உடம்பிலேற்படும் காந்தல்.]*

**தழலாடி** *talal-ādi,* பெ. (n.) சிவன் (தீயோடு ஆடுபவன்); Šivan, as dancing with fire. 'சடையானே தழலாடி" (திவாச. 39: 2).

மறுவ. அழலாடி, அனலாடி

*[தழல் + ஆடி. ஆடு → ஆடி 'இ' வினை முதலீறு]*

**தழலாடிவீதி** *talal-ādi-vīdi,* பெ. (n.) நெற்றி; forehead. "தழலாடி வீதிவட்ட மொளி" (திருப்பு. 320).

மறுவ. அழலாடிவீதி, அனலாடிவீதி, தியாடித் திருவீதி

*[தழலாடி + வீதி]*

**தழலி** *talali,* பெ. (n.) நெருப்பு (பிங்.); fire. "தழலியென்பா னுரக்கமோ டொருவ னின்றான்" (சேதுபு. சுத்துரு. 58).

மறுவ. அழலி

*[தள் → தழ → தழல் → தழலி (வ.மொ. 2. 169).]*

**தழற்கல்** *talar-kal,* பெ. (n.) சுக்கான்கல் (யாழ்.அக.); kunkar, lime-stone.

*[தழல் + கல்]*

**தழற்கொடி** *talar-kodi,* பெ. (n.) 1. கொடுவேலி; ceylon leadwort. 2. பெரிய தழற்காய்க் கொடி; buffalo cowitch.

*[தழல் + கொடி]*

**தழற்சி** *talarci,* பெ. (n.) 1. அழலுகை (வின்.); heat, glow, burning. 2. வேக்காடு; inflammation. 3. கொதிப்பு; intense heat.

மறுவ. அழற்சி

*[தள் → தழ → தழல் → தழற்சி. ஒருகா. அழல் → தழல். தழல் = மிகுவெப்பம். வெப்பத்தினால் விளையும் வேக்காடு.]*

**தழற்சொல்** *talar-šol,* பெ. (n.) அச்சத்தைத் தோற்றுவிக்கும் கொடுஞ்சொல் (தழலைப் போன்ற சொல்); threat, warning, as fiery words. "தண்ணிய சிறிய வெய்ய தழற்சொலாற் சாற்று கின்றான்" (சீவக. 747).

மறுவ. தீச்சொல், அழற்சொல், சுடுசொல்

*[தழல் + சொல்]*

**தழற்பூமி** *talar-būmi,* பெ. (n.) உவர்மண் (சங்.அக.); brackish soil.

*[தழல் + பூமி]*

**தழனாள்** *taḻaṉāḷ*, பெ. (n.) நளிநாள், விளக்கணி நாள் (திவா.) (விளக்கேற்றி வணங்கும் நாள்); the third star Kārttigai as having Agni as the presiding deity.

மறுவ. தீபத்திருநாள்

*[தழல் + நாள்]*

**தழாத்தொடர்** *taḻā-t-toḍar*, பெ. (n.) ஒரு சொல் அடுத்துவருஞ் சொல்லை, நேரே தழுவாது அமையுந்தொடர் (நன். 153, உரை); phrase in which a word does not qualify or govern the word immediately following it, opp. to taḻuvu - toḍar.

*[தழு(வு) + ஆ + தொடர். 'ஆ' எ.ம. இடைநிலை]*

**தழால்** *taḻāl*, பெ. (n.) தழுவுகை; embrace, union. "தழாஅல் வேண்டும்" (தொல். பொருள். 644). "சுற்றம் தழால்" (திருக். 35 அதி.).

*[தழு(வு) + ஆல்]*

**தழிச்சு-தல்** *taḻiccu-*, 5 செகுவி. (v.i.) 1. தழுவுதல்; to embrace, include. 2. புகுதல்; to penetrate,as an arrow. "பொருகணை தழிச்சிய புண்டீர் மார்பின்" (தொல். பொருள். 63, உரை).

*[துள் → தள் → தழ் → தழி → தழிச்சு-.]*

**தழிஞ்சி** *taḻiñji*, பெ. (n.) 1. போரில் படைக் கலங்களால் தாக்குண்டு, கேடுற்ற தன் படையாளரை முகமன்கூறியும், பொருள் கொடுத்தும், அரசன் தழுவிக்கோடலைக் கூறும் புறத்துறை; theme describing the honour and presents offered by the king to the soldiers maimed in battle. "அழிபடைதட்டோர் தழிஞ்சியொடு தொகைஇ" (தொல். பொருள். 63). 2. ஒரு வீரன் தனக்குத் தோற்றோடுவோர்மேற் படையெடாத மறப்பண்பினைக் கூறும் புறத்துறை (பு. வெ. 3, 20); theme describing the valour of a warrior who does not pursue and destroy a routed adversary in full retreat. 3. பகைவர்படை, தம்எல்லையிற் புகாதபடி அரியவழியைக் காத்தலைக் கூறும் புறத் துறை (பு. வெ. 4, 3); (purap) theme describing the guarding of a narrow passage through which an enemy might enter.

*[தழு → தழுவு → தழிஞ்சி (தமி. வ. 267).]*

**தழீஇந்தழீஇமெனல்** *taḻīin-taḻīim-eṉal*, பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of rattling, as of a drum. "தழீஇந்தழீஇந் தண்ணம் படும்" (நாலடி, 6).

*[தழீஇம் + தழீஇம் + எனல்.]*

**தழு¹-த்தல்** *taḻu-*, 4 செகுவி. (v.i.) தழுதழு-த்தல், பார்க்க; see taḻu-taḻu-. "குரல் தழுத்தொழிந் தேன்" (திவ். பெரியதி. 1. 1: 5).

*[துள் → தள் → தழு-]*

**தழு²** *taḻu*, பெ. (n.) தழுவுகை; embracing. 'தழுக்கொள் பாவம்" (தேவா. 156:4).

*[தள் → தழு.]*

**தழுக்கு-தல்** *taḻukku-*, 5 செ.குவி. (v.i.) செழிப்புறுதல்; to flourish, prosper. "தழுக்கிய நாளிற் றருமமுஞ் செய்யீர்" (திருமந். 254).

மறுவ. தழைத்தல்

ம. தழுக்குக

*[தள் → தழு → தழுக்கு-]*

**தழுக்கூமத்தை** *taḻu-k-kūmattai*, பெ. (n.) கொடியூமத்தை; creeper dahtura.

*[தழுக்கு + ஊமத்தை.]*

**தழுதணை¹** *taḻu-taṇai*, பெ. (n.) கற்பாசி (புதுவை); lichen.

**தழுதணை²** *taḻu-taṇai*, பெ. (n.) 1. படர்தாமரை (யாழ்.அக.); ring-worm. 2. தோலுரியும் படர்தேமல்; a skin disease, in which the epidermis peels off. 3. எச்சிற்றழும்பு; a contagious skin disease caused by the excreta of reptiles or lizard.

ம. தழுதணம்

**தழுதவப்பூடு** *taḻutava-p-pūḍu*, பெ. (n.) ஒருதலைப் பூடு; garlic with only one clover or bulb.

மறுவ. ஒருதலைப்பூண்டு

*[தழுதவம் + பூடு. தழுதவப்பூடு = ஒற்றைத் தலைவலிக்கு கைகண்ட மருந்து. வயிற்றில் மிகுவளியினால் ஏற்படுந்தொல்லை யையும், நெஞ்சாங்குலையையும், பேணிக் காக்கும் இயல் புடைத்து. பேறுகாலமான*

*பெண்களுக்கு, இப்பூண்டுக்குழம்பு நலம் பயக்கும்.]*

**தழுதவான்** *taḻudavāṉ,* பெ. (n.) **வெள்ளாடு;** goat.

**தழுதழு-த்தல்** *taḻu-taḻu-,* 4 செ.கு.வி. (v.i.) **நாக்குழறுதல்;** to falter or stammer from ecstatic joy, love or other emotion. "தழுதழுத்த வசனத்தன்" (ஞானவா. கசன். 19). குழந்தை இறந்ததைக் கூறவந்த தாயின் குரல் தழுதழுத்தது (உ.வ.).

*[தழு + தழு-.]*

**தழுதாழை** *taḻu-tāḻai,* பெ. (n.) **வளிமடக்கி (வாதமடக்கி);** medicine for gastric trouble (செ.அக.).

மறுவ. வளியடக்கி

*[தழு + தாழை → தழுதாழை = வளியடக்கி (வாதமடக்கி) என்றழைக்கப்பெறும். இம் மூலிகை வேலிகளில் சிறுசிறு மரங்களாக வளர்க்கப்பெறும். உடலிலேற் படும் அனைத்து வளிப்பிடிப்புகளுக்கும் தழுதாழை இலைச்சாறுக்கு நீர் (கியாழம்) மிகவும் சிறந்தது. ஆறாப்புண், தோல் நோய், வீக்கம், படை போன்றவற்றிற்கு, இம் மரத்தின் இலையை அரைத்து மேல் பூச்சு மருந்தாக இடுவர்.]*



**தழுதாளி** *taḻu-tāḷi,* பெ. (n.) தழுதாழை (பதார்த்த 537) பார்க்க; see *taḻu-tāḻai.*

*[தழுதாழி → தழுதாளி.]*

**தழுநெட்டி** *taḻu-neṭṭi,* பெ. (n.) **உப்பு;** salt.

**தழும்** *taḻum,* பெ. (n.) **பூசுநெய்மம்** (தைலம்); an ointment.

*[தழம் → தழும்]*

**தழும்பன்** *taḻumbaṉ,* பெ. (n.) **முற்காலத்துத் தமிழகத்தில் விளங்கிய வள்ளல்களில் கொடைமையிற் சிறந்த ஒரு சிற்றரசன்;** an ancient chief of the Tamil land, noted for his liberality. 'வாய்மொழித் தழும்ப னூணூரன்ன" (புறநா. 348).

*[தழும்பு → தழும்பல்]*

**தழும்பாதல்** *taḻumbādal,* பெ. (n.) **காயம் அல்லது புண், புரைகளினால் உடம்பில் தழும்பு உண்டாதல்;** the formation of a scar or cicatrix on the skin left by a healed wound - Cicatrization.

*[தழும்பு + இடு-.]*

**தழும்பிடு-தல்** *taḻumbiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) **புண்ணாறி வடுவாதல்;** to leave a scar, as a sore when healed.

மறுவ. தழும்பு படு-தல்

*[தழும்பு + இடு-.]*

**தழும்பு[1]-தல்** *taḻumbu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **தழும்புண்டாதல்;** to be scarred, bruised, marked. "தழும்பு மென்னா" (உபதேசகா. சிறப்புப். 6). 2. **பழகியிருத்தல்;** to become practised, addicted. "களவிற்றழும்பிய கள்வனுடைய கையகத்தாயின்" (சிலப். 16:152: உரை).

ம. தழம்பிக்குக

*[துள் → தழு → தழுவு → தழும்பு-.]*

**தழும்பு[2]** *taḻumbu,* பெ. (n.) 1. **வடு;** scar, cicatrice, bruise, weal. "தோளினு முளவினுந் தழும்பு" (கம்பரா. இலங்கை கே. 50). 2. **குறி;** mark, impression, dent made in the skin. 3. **சிதைவு** (வின்.); injury, blemish. 4. **குற்றம்** (வின்); stigma, defect in character.

ம. தழம்பு; க., தெ. சட்டு; கோத. தள்ம்

*[துள் → தழு → தழும்பு]*

**தழும்பு[3]** *taḻumbu,* பெ. (n.) 1. **நாத்தழும்பு;** a scar on the tongue. 2. **மறு;** wart. 3. **அம்மைத் தழும்பு;** scar of small pox. 4. **எச்சிற்றழும்பு;** a contagious skin disease caused by the excreta of reptiles of lizard.

மறுவ. காயவடு

*[தழுவு → தழும்பு]*

**தழும்புவலி** *talumbu-vali*, பெ. (n.) ஒருவகைக் கட்டிநோய்; painful keloid, a variety of hard tumour.

*[தழும்பு + வலி]*

**தழுவணி** *ta*l*u-v-aṇi*, பெ. (n.) குரவைக்கூத்து; dancing with clasped hands. "ஆயமொடு தழுவணி யயர்ந்து" (குறுந்தொ. 294).

*[தழு → தழுவணி]*

**தழுவணை** *ta*l*u-v-aṇai*, பெ. (n.) 1. பக்கத்தில் அணைத்துக் கொள்ளும் பஞ்சணை (வின்.); side bolster, cushion. 2. திண்டு (யாழ்.அக.); cushion for reclining. 3. கடலட்டை (யாழ்.அக.); sea-leech. (செ.அக.)

*[தழுவு + அணை]*

**தழுவல்**[1] *ta*l*uval*, பெ. (n.) கையில் எடுக்கக் கூடிய நெல்லரித் தொகுதி (இ.வ.); a handfull of ears of grain.

மறுவ. கைப்பிடிஅரிதாள்

பட. தப்பு

*[தழு → தழுவல்]*

**தழுவல்**[2] *ta*l*uval*, பெ.(n.) தழுவி உருவாக்கப் படுவது; adaptation. தழுவல் இலக்கியம் (இக்வ.).

*[தழு → தழுவல். கதை அல்லது பாட்டு முதனூலை அடிப்படையாகக் கொண்டு, உருவாக்குகை.]*

**தழுவாவட்டை** *ta*l*uvā-v-aṭṭai*, பெ. (n.) கடலட்டை (வின்.); sea-leech.

*[தழுவா + அட்டை]*

**தழுவிய** *ta*l*uvia*, பெ.எ. (adj.) முழுவதும்; breadth and length. நாடு தழுவிய போராட்டம் நடைபெறுமா? (இக்வ.).

*[தழு → தழுவிய]*

**தழுவு**[1]**-தல்** *ta*l*uvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. அணைத்தல்; to clasp, embrace, hug, entwine. "மகன்மெய் யாக்கையை மார்புறத் தழீஇ" (மணிமே. 6:139). 2. மேற்கொள்ளுதல்; to adopt, as an opinion, course of life; to keep, observe, as a command. "பணிமுறை தழுவுந் தன்மையார்" (கம்பரா. ஊர்தே. 50). 3. அணைத்தா தரித்தல்; to treat kindly. "குடிதழீஇ" (குறள், 544). 4. நட்பாக்குதல்; to make friendship. "உலகந் தழீஇய தொட்பம்" (குறள், 425). 5. சூழ்தல்; to surround. "தண்பணை தழீஇய" (பெரும்பாண். 242). 6. உள்ளடக்குதல்; to compress; to contain; to keep within oneself. "அணங்குசா லுயர்நிலை தழீஇ" (திருமுரு. 289). 7. பூசுதல்; to besmear rub on. "சாந்தங் கொண்டு நலமலிய வாகந் தழீஇ" (பதினொ. திருக்கைலா. 15). 8. பொருந்துதல்; to mix with, join. "தமிழ்தழிய சாயலவர்" (சீவக. 2026). 9. புணர்தல்; to copulate.

ம. தழுகுக; க. தழ்கெய்சு, தக்கெய்சு; து. தர்கொனுனி; துட. தெர்க்விள்; குட. தமப்; கோத. தப்; பட. தப்பு.

*[(துள்) → தழு → தழுவு-. தழுவுதல் = உறுதல். தழுவுதலெனப்படுவது யாதெனின் அன்பின் மிகுதியாற் கலந்தணைத்தலாகும்.]*

**தழுவு**[2] *ta*l*uvu*, பெ. (n.) 1. அணைப்பு; embracing, clasping. "அவன் தழுவுக்குப் பிடிபடவில்லை". 2. இரு கையாலும் அணைக்கும் அளவு; armful. ஒருதழுவு வைக்கோல்.

*[துள் → தழு → தழுவு = அன்பு செய்பவர் அன்புசெயப்பட்டாரைத் தழுவுகை. இருகை கோர்த்தெடுக்கும் தாள் அல்லது வைக்கோளின் அளவு.]*

**தழுவுதொடர்** *ta*l*uvu-toḍar*, பெ. (n.) ஒரு சொல் மற்றொரு சொல்லை நேரே தழுவி நிற்குந் தொடர் (நன். 152, உரை); phrase in which a word qualifies the word immediately following it, opp. to ta*l*ā-t-toḍar.

*[தழுவு + தொடர்]*

**தழூஉ** *ta*l*ūvu*, பெ. (n.) 1. அணைக்கை; embracing, uniting. "தண்டா ரகலந் தழூஉப்புணையா நீ நல்கி" (பு.வெ. 12, இருபாற். 4). 2. மகளிராடுங் குரவைக்கூத்து; women's dance with clasped hands. "துணங்கையந் தழூஉவின்" (மதுரைக். 329).

*[தழு → தழூ → தழூஉ]*

**தழை**[1]**-தல்** *ta*l*ai-*, 4 செ.குவி. (v.i.) 1. தளிர்த்தல்; to sprout, shoot forth. 2. செழித்தல்; to thrive, grow luxuriant, as plants. "தழைந்த சந்தனச்

சோலை" (கம்பரா. சித்திர. 9). 3. தாழ்தல்; to hang down; to bow down. "தழைந்தகாதும்" (சேதுபு. கடவுள்வாழ். 8).

ம. தலெக்க; தெ. தளிர்சு

[தள் → தழு → தழை (தமி. இல. வ. முன். பக். 52)]

**தழை²-த்தல்** *taḻai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. செழித்தல்; to flourish, thrive, grow luxuriantly, as plants. 2. பூரித்தல்; to over-flow with joy. "நோக்கித் தழைத்து" (திருவாச. 27:7). 3. மிகுதல்; to be abundant, as a flood; to multiply. "மைத்தழையா நின்ற மாமிடற் றம்பலவன் கழற்கே" (திருக்கோ. 102). 4. வளர்தல்; to grow, prosper, as a family, people, state. "மெய்தழை கற்பை" (திருவிளை. வளைய. 15). நட்பு தழைக்க விட்டுக் கொடுக்க வேண்டும் (இக்.வ.).

ம. தழப்க்குக; தெ. தளிர்சு

[தள் → தழு → தழை. தழைத்தல் - வளர்த்தல், செழிதல், அறுகுபோல் படர்ந்து தழைத்தல், ஆல்போல் குடும்பமும் குலமும் வேரூன்றித் தழைத்தல், செழித்து ஓங்குதல்.]

**தழை³-த்தல்** *taḻai-*, 4 செகுன்றாவி. (v.t.) சீட்டாட்டத்தில் எண்ணிக்கையிற் சேராத சீட்டுகளை, இறக்குதல்; to put down cards other than honours in a game of cards.

[தள் → தழ் → தழை-. (தமி.இல.வ.முன். பக்.52)]

**தழை³** *taḻai*, பெ. (n.) 1. தழைகை; sprouting. "தாளிணைக டழைகொண்ட வன்பினொடு" (அரிச். பு. பாயி. 3). 2. தளிர்; sprout, shoot. 3. இலை (திவா.); leaf, foliage. 4. இலையோடு கூடிய சிறுகொம்பு; spray, twig, bough with leaves. 5. மயிற்றோகை; peacock's tail. "தழைகோலி நின்றாலும்" (திருக்கோ. 347). 6. பீலிக்குடை (பிங்.); fan; bunch of peacock's feathers, used as an ornamental fan. "தழைகளுந் தொங்கலுந் ததும்பி" (திவ். பெரியாழ். 3:4:1). 7. தழையுடை (புறநா. 116, உரை) பார்க்க; see *ta̱ḻai-y-uḍai*. 8. ஒருவகை மாலை; a kind of garland. "தழையுங் கண்ணியுந் தண்ணறு மாலையும்" (சீவக. 1338). 9. பச்சிலை; gamboge. 10. சீட்டாட்டத்தில் எண்ணிக்கையிற் சேர்க்கப் படாத சீட்டு; cards other than honours in a game of cards.

ம. தழ; க. தளி, தழெ; தெ. தலரு.

[தள் → தழ் → தழு - தழை (த.வ. 63)]

**தழைக்கண்ணி** *taḻai-k-kaṇṇi*, பெ. (n.) இலையாலாகிய மாலை; garland of gamboge flowers. "இலையால் தொடுக்கப்பட்ட தழைக் கண்ணியையும்" (புறநா. 54, உரை).

மறுவ. குழைக்கண்ணி

[தழை + கண்ணி]

**தழைக்கள்ளி** *taḻai-k-kaḻḻi*, பெ. (n.) இலைக் கள்ளி; leaf spurge - Eupnorbia nierifolia.

[தழை + கள்ளி]



**தழைக்கை** *taḻaikkai*, பெ. (n.) 1. தளிர்க்கை; flourishing. 2. தழைப்பு பார்க்க; see *taḻaippu*.

[தழை → தழைக்கை]

**தழைக்கோரை** *taḻai-k-kōrai*, பெ. (n.) ஒருவகைக் கோரை; a kind of sedge grass.

[தழை + கோரை]

**தழைச்சத்து** *taḻai-c-cattu*, பெ. (n.) 1. இலை தழைச்சாறு; juice from leaves. 2. உப்புக் காற்று; nitrogen.

[தழை + சத்து]

**தழைத்தமொழி** *taḻaitta-moḻi*, பெ. (n.) கனிவான பண்பட்ட இன்சொல்; polite word.

[தழைத்த + மொழி - தழைத்தமொழி. அகனமர்ந்து முகனமர்ந்து, எஞ்ஞான்றும் கனிவாகக் கூறும், இன்சொல்.]

**தழைத்தவயிறு** *taḻaitta-vayiṟu,* பெ. (n.) *அழகான வயிறு;* a round abdomen.

*[தழைத்த + வயிறு]*

**தழைத்தானை** *taḻai-t-tāṉai,* பெ. (n.) இலையாற் செய்யப்பட்ட மேலாடை (பெரியபு. ஆனாய. 17); upper cloth made of leaves.

*[தழை + தானை]*

**தழைத்துகில்** *taḻai-t-tugil,* பெ. (n.) தழையுடை பார்க்க; see *talaiyuḍai.*

*[தழை + துகில்]*

**தழைதாம்பு** *taḻai-tāmbu,* பெ. (n.) தழையும் சிறு கொம்பும் (இ.வ.); leaves and twigs.

*[தழை + தாம்பு]*

**தழைந்த** *taḻainda,* பெ. எ. (adj.) பணிவோடு; மெதுவான; politely; softly (கிரி.அக.).

*[தழை → தழைந்த = கனிவாக, பணிவாக, மெதுவாக. ஒருகா. தழைத்த → தழைந்த]*

**தழைநாகம்** *taḻai-nāgam,* பெ. (n.) ஒருவகை இலைப்பாம்பு; foliage snake (செ.அக.).

*[தழை + நாகம். தழை = இலை]*

**தழைநோய்** *taḻai-nōy,* பெ. (n.) தாளடிப் பயிர்கட்கு ஏற்படும் நோய்; grossy sboot.

*[தழை + நோய் = நெல், கரும்பு, வாழை முதலான பயிர்கட்கு தழை (இலைகுருத்து) யில் தோன்றும் நோய்.]*

**தழைப்பு** *taḻaippu,* பெ. (n.) செழிக்கை, வளர்கை; flourishing, thriving.

*[தள் → தழு → தழை → தழைப்பு. (தவ63)]*

**தழைய** *taḻaiya,* வி.எ. (adv.) *1.* தரையைத் தொடும் அளவில்; low so as to be touching the ground. சேலையைத் தழையக் கட்டிக் கொண்டிருந்தாள். *2.* இறுக்கமில்லாமல்; தொய்வாக; loose. குளித்தபின் கூந்தலைத் தழையக் கட்டிக் கொண்டாள்.

*[தாழ் → தழை → தழைய. ஒருகா. தாழ → தழைய.]*

**தழையணி** *taḻai-y-aṇi,* பெ. (n.) தழையுடை பார்க்க; see *taḻai-y-uḍai* "தழையணி மருங்குன் மகளிர்" (குறுந். 125).

*[தழை + அணி]*

**தழையிடுவார்** *taḻai-y-iḍuvār,* பெ. (n.) திருத்துழாய் முதலிய பச்சிலைத் திருப்பணி செய்வார்; those who provide flowers and leaves for the temple. "கோவணவர்... பாடுவார் தழையிடுவார் என்று அஞ்சு கொத்திலே" (கோயிலொ. 44).

*[தழு → தழை + இடுவார். திருக்கோயில் வளாகத்திலுள்ள, திருநந்தவனத்தில் பணிபுரிவார்.]*

**தழையுடை** *taḻai-y-uḍai,* பெ. (n.) தழையாலான மகளிருடை; garment of strung leaves.

மறுவ. இலையாடை, தழையணி, தழை துகில், தழையாடை

*[தழை + உடை = தழையுடை. தழை = இலை.]*

**தழையுரம்** *taḻai-y-uram,* பெ. (n.) அடியுரமாக இடப்பெறும் மரங்களின் தழை; green manure.

*[தழை + உரம் = தழையுரம். பயிர்கள் செழித்து விளைவதற்குத் தேவையான இயற்கையுரம்.]*

**தழைவாரி** *taḻaivāri,* பெ. (n.) ஒருவன் கையிற் சீட்டுக் குவிதலால் அவன் தோல்வியைக் குறிக்குஞ் சீட்டாட்ட வகை (இ.வ.); a card game where an accumulation of cards in one's hands signifies one's defeat.

*[தழை + வாரி]*

**தழைவு** *taḻaivu,* பெ. (n.) *1.* தளிர்க்கை; sprouting, shooting, germinating. *2.* செழிப்பு; luxuriance of growth. *3.* குழை (வின்.); leaves, foliage. *4.* வளமை; plumpness, sleekness. *5.* மிகுதி; increase, abundance. "தழைவு படக் கொலைவினையினை யுட்கொடு" (இரகு. நகரப். 16).

*[தழை → தழைவு. 'வு' = தொ.பெ.ஈறு]*

**தழைவுகொடு-த்தல்** *taḻaivu-koḍu-,* 4 செ.குவி. (v.i.) உடம்பு பருமனாதல்; to become plump, as the body.

*[தழைவு + கொடு-.]*

**தள்**[1]**-தல் (தட்டல்)** *taḷ-,* 4 செ.குன்றாவி. (v.i.) *1.* தடுத்தல்; to kinder, obstruct, stop. "புள்ளிடை

தட்ப" *(புறநா. 124).* 2. நீர் முதலியவற்றைத் தளைத்தல்; to confine, as water in a tank; to dam up. "தட்டோரம்ம விவட் டட்டோரே தள்ளாதோரி வட்டள்ளா தோரே" *(புறநா. 18).*

க. தள்

*[துள் → தள்-.]*

**தள்**[2] *tal*, பெ. (n.) 1. தள்ளு,[1] பார்க்க; see *tallu*,[1]. 'ஒரு தள் தள்ளினான்' *(நெல்லை).*

ம. தள்ளுக, க. தள்ளு

*[உல் → துள் → தள்.]*

**தள்வம்** *talvam*, பெ. (n.) தளுவம் (இ.வ.) பார்க்க; see *taluvam*.

**தள்ளம்பாறு-தல்** *tallambāru-*, 5 செ.கு.வி. (v.i.) 1. தள்ளாடுதல் (யாழ்ப்.); to reel, stagger. "நடக்கப்புகுவது தள்ளம்பாறுவதான நடையாலே" *(திவ். பெருமாள். 7:6).* 2. அசைதல் (யாழ்ப்.); to totter, as a house about to fall, to sway, as a tree. 3. அலைதல் (யாழ்ப்.); to rock or roll, as a boat. 4. பெருங்கலக்கத்தில் இருத்தல் (யாழ்ப்.); to be in perturbation, as a family on the death of its head or on the verge of ruin. 5. தருக்கத்தில் தோல்வியடைதல் (யாழ்ப்.); to be baffled in argument. 6. தத்தளித்தல் (யாழ்.அக.); to struggle, as in water.

*[துள் → தள் → தள்ளம் + பாறு-.]*

**தள்ளமாறு-தல்** *tallamāru-*, 5 செ.கு.வி. (v.i.) தள்ளம்பாறு-தல் (யாழ்ப்.) பார்க்க; see *tallam-bāru-*.

*[துள் → தள் → தள்ளம் + ஆறு-.]*

**தள்ளல்** *tallal*, பெ. (n.) பொய் (சூடா.); lie.

*[பொள் → துள் → தள் → தள்ளல். பொள் → பொல் = உள்ளீடு அற்றது; உண்மையற்றது; பொய்மையானது. ஒருகா. துள் → தள் → தள்ளல்.]*

**தள்ளவாரம்** *tallavāram*, பெ. (n.) தள்ளாவாரம் பார்க்க; see *tallāvāram*.

**தள்ளாட்டம்** *tal-l-āttam*, பெ. (n.) 1. அசைவு; staggering, reeling, rocking. 2. தடுமாற்றம்; wavering, fluctuation. 3. சோர்வு; faltering as from old age.

ம. தள்ளாட்டம்

*[துள் → தள் + ஆட்டம்.]*

**தள்ளாடி** *tallādi*, பெ. (n.) தளர்ந்தநடை; faltering walk.

*[தள்ளாடு → தள்ளாடி.]*

**தள்ளாடு-தல்** *tal-l-ādu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. தளர்ச்சியாய் நடத்தல்; to move with faltering steps, as an aged person. "தாளிணை தளர்ந்து தள்ளாட" *(பாரத. கிருட்டிண. 238).* 2. தடுமாறுதல்; to stagger, reel, as a drunkard. 3. ஆடுதல்; to rock, as a ship, vacillate, sway, as a tree in a storm. "உலகுலையத் தள்ளாடிய வடமேருவின்" *(கம்பரா. முதற்போ. 177).* 4. மன மலைதல்; to waver, fluctuate, as the mind. "சிந்தையுந் தள்ளாடி" *(சிவரக. அபுத்திபூர். 12).*

ம. தள்ளாட்டம்; பட. தள்ளாடு

*[துள் → தள் + ஆடு-.]*

**தள்ளாதகாலம்** *tallāda-kālam*, பெ. (n.) முதுமைக் காலம்; time of infirmity, old age.

மறுவ. கிழப்பருவம்

*[தள்ளாத + காலம். தள்ளாத = முடியாத.]*

**தள்ளாதவன்** *tallādavan*, பெ. (n.) வலு வில்லாதவன் (இ.வ.); infirm person.

*[தள்ளாத = இயலாத. தள்ளாத + அன்: "அன்" ஆண்பாலீறு]*

**தள்ளாமை** *tallāmai*, பெ. (n.) 1. தளர்ச்சி (அ.வ.); inability, impotence, infirmity through old age. 2. இல்லாமை (யாழ். அக.); poverty.

*[தள் + ஆ + மை. 'ஆ' எ.ம. இடைநிலை]*

**தள்ளாவாரம்** *tallā-vāram*, பெ. (n.) சோம்பல் (பிங்.); laziness.

**தள்ளிச்சி** *tallicci*, பெ. (n.) பூநீறு (யாழ்.அக.); a white-coloured earthy matter containing a large proportion of carbonate of soda from which soda is prepared.

**தள்ளி** *talli*, கு.வி.எ. (adv.) 1. விலகி; aside. 2. தொலைவில் (தூரத்தில்); away. தள்ளி நில். தள்ளிச் செல் (இக்.வ.).

*[தள்ளு → தள்ளி]*

**தள்ளிப்போ-தல்** *talli-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) பின்னால்போதல்; காலந்தாழ்த்தல்; to get put

off; delayed. அவள் திருமணம் ஏனோ தள்ளிப் போய்க்கொண்டேயிருக்கிறது (உ.வ.).

*[(தள்ளு) → தள்ளி + போ-.]*

**தள்ளிப்போடு-தல்** *taḷḷi-p-pōḍu-,* 19 செ.குவி. (v.t.) **குறிப்பிட்ட காலத்தில் செய்ய வேண்டியதைச் செய்யாமல் காலந் தாழ்த்துதல்;** to postpone things to be done immediatly. விரைந்து முடிவு எடு, தள்ளிப் போட்டுக் கொண்டே போகாதே (இக்.வ.).

ம. தள்ளியிடுக

*[(தள்ளு) → தள்ளி + போடு-.]*

**தள்ளிவிடு[1]-தல்** *taḷḷi-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. **பொறுப்பு முதலியவற்றை விலக்குதல்** (புதுவை); to evade, as responsibility. தான் பார்க்கவேண்டிய கோப்புகளை, அடுத்தவருக்குத் தள்ளிவிடுதல் நன்றன்று (உ.வ.). 2. **உரியவிலை வாராவிடினும், குறைந்தவிலை கேட்பாருக்குப் பொருள்களை விற்றுவிடுதல்;** to sell to lower price and push the products out. ஆண்டு முடிவையொட்டிப் பொருள்களை வந்த விலைக்குத் தள்ளிவிட்டார்கள் (உ.வ.).

ம. தள்ளிவிடுக

*[(தள்ளு) → தள்ளி + விடு-.]*

**தள்ளிவிடு[2]-தல்** *taḷḷi-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) **விலக்கிவிடுதல்;** to reject, dismiss.

*[(தள்ளு) → தள்ளி + விடு-.]*

**தள்ளிவெட்டி** *taḷḷi-veṭṭi,* பெ. (n.) **மதிற்பொறி வகை** (சிலப். 15:216, உரை); a military engine for defence.

*[(தள்ளு) → தள்ளி + வெட்டி.]*

**தள்ளிவை-த்தல்** *taḷḷi-vai-,* 4 செகுன்றாவி. (v.t.) 1. **தள்ளிப்போடுதல்;** to postpone. கடும் தண்ணீர் பஞ்சம் காரணமாக பள்ளித் தேர்வுகளை தள்ளி வைத்து விட்டனர். (இக்.வ.). 2. **இடம்விட்டு வைத்தல்;** to remove a little further off, shift. பொத்தகத்தைத் தள்ளிவை (உ.வ.). 3. **நாளொற்றி வைத்தல்;** to adjourn, as a case. விசாரணை நாளைத் தள்ளிவைத் திருக்கிறார்கள் (உ.வ.). 4. **ஒழுக்கக்கேடு முதலியவற்றால் சாதிக் கூட்டங்களுக்குப் புறம்பாக்குதல்;** to caste off, exclude from society, excommunicate. ஒழுக்கக் கேட்டால் அவளைத் தள்ளிவைத்தார்கள் (உ.வ.). 5. **வேலையிலிருந்து விலக்கிவைத்தல்;** to suspend from office. வேலையிலிருந்து விலக்கி வைத்தார்கள் (உ.வ.). 6. **விலக்கிவிடுதல்** (இ.வ.); to abandon, as a wife.

*[(தள்ளு) → தள்ளி + வை-.]*

**தள்ளு[1]-தல்** *taḷḷu-,* 5 செகுவி. (v.i.) 1. **விலகுதல்;** to be removed. "உறுநோய்கள் தள்ளிப்போக" (தேவா.). 2. **தவறுதல்;** to be lost, to fail. "கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை" (குறள், 290). 3. **குன்றுதல்;** to shrink, diminish. "தள்ளா விளையுளும்" (குறள், 731.). 4. **மறப்பாற் சோர்தல்;** to be unconscious; to be forgetful. "தள்ளியும் வாயிற் பொய்கூறார்" (நாலடி, 157). 5. **தடுமாறுதல்;** to stagger, reel, stumble. 'தள்ளித் தளர்நடையிட்டு" (திவ். பெரியாழ். 2:10:6). 6. **வலியுடைத்தாதல்;** to be able; to be capable of. அவன் அது செய்யத் தள்ளவில்லை (உ.வ.). 7. **வெளியேறுதல்;** to emerge, come out, protrude. வாயில் நுரைதள்ளுகிறது (உ.வ.).

**தள்ளு[2]-தல்** *taḷḷu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. **முன் செல்லுமாறு தாக்குதல்;** to push, force forward, shove away. 2. **புறம்பாக்குதல்;** to expel, to cast off, excommunicate. சாதியினின்று தள்ளப்பட்டான் (உ.வ.). 3. **கைவிடுதல்;** to forsake, abandon, relinquish, renounce. "சுவாமி என்னைத் தள்ளாதிரும்" (வின்.). 4. **ஏற்றுக் கொள்ளா திருத்தல்;** to reject, disapprove. "தள்ளியுரை செய்யா முன்னர்" (திருவாலவா. 57, 22). 5. **விலக்குதல்;** to refute, confute. சொன்ன காரணங்களில் ஏராளமானவற்றைத் தள்ளி விட்டான் (உ.வ.). 6. **பாராமுகமாயிருத்தல் ஒதுக்குதல்;** to neglect. "தள்ளாத கேண்மை" (தணிகைப்பு. களவு.499). 7. **வழக்கைத் தள்ளுபடி செய்தல், முடிவு செய்தல்;** to dismiss, as a suit. 8. **முறை மன்றம் வழக்கை ஏற்க மறுத்தல்;** to refuse to admit, as a plaint. 9. **வரி முதலியன தள்ளுபடி செய்தல்;** to discharge from obligation, exempt, remit. 10. **கழித்தல்;** to deduct, subtract. வட்டித் தொகையைத் தள்ளிப்பார் (உ.வ.). 11. **அமுக்குதல்;** to press down. "மென்பூத் தள்ளத் தம்மிடைக ணோவ" (கம்பரா. உலாவி. 4). 12. **வெட்டுதல்;** to sever, cut off. "என் தலையைத் தள்ளத்தகும்"

(பதினொ. திருத்தொண்.14). 13. கொல்லுதல்; to kill. "சம்பரப்பேர்த் தானவனைத் தள்ளி" (கம்பரா. கிளை. 63). 14. மறத்தல்; to forget. "தள்ளியுஞ் செல்பவோ . . . அருளின் மறவ ரதர்" (திணைமாலை. 84). 15. புத்தகவிதழ் திருப்புதல்; to turn over, turn back, as the leaves of a book. 16. காலங்கழித்தல்; to pass, as one's days. காலந் தள்ளுகிறான் (உ.வ.). 17. தோணி செலுத்துதல் (யாழ்ப்.); to launch, row, sail, as a vessel. 18. தூண்டுதல்; to incite, stimulate. "காண்டு மென் றறிவுதள்ளி" (கம்பரா. சம்பா. 54).

ம. தள்ளுக; க., பட., தள், தள்ளு; தெ. தலகு, தல்கு, தலுகு; து. தல்லுணி, தள்ளுனி; கோத. தள்; துட. தொள்

[துள் → தள் → தள்ளு- (மு.தா. 54.)]

**தள்ளு**[2] *tallu*, பெ. (n.) 1. அகற்றுகை; pushing, rejecting. 2. கணக்கிற்கழிவு; deduction, discount. 3. நீக்குகை; dismissal, discharge, banishment, divorce. 4. கைவிடுகை; abandonment, renunciation, relinquishment.

[துள் → தள் → தள்ளு-.]

**தள்ளுண்டவன்** *tallundavan*, பெ. (n.) விலக்கப்பட்டவன்; rejected person, out- caste, reprobate.

[தள் → தள்ளு + உண்டவன்]

**தள்ளுதற்சீட்டு** *tallutar-cittu*, பெ. (n.) மணவிலக்குத் தாள் (வின்.); bill of divorcement.

[தள்ளுதல் + சீட்டு]

**தள்ளுநூக்குப்படு-தல்** *tallu-nūkku-p-padu-*, 20 செ.கு.வி. (v.i.) இழுபறிப்படுதல் (யாழ்.அக.); to be pushed this way and that.

[தள்ளு + நூக்கு + படு-.]

**தள்ளுப்புள்ளு** *tallu-p-pullu*, பெ. (n.) இழுபறி; scuffle, pushing and pulling.

மறுவ. தள்ளுமுள்ளு, தள்ளுமெள்ளு

[தள்ளு + புள்ளு]

**தள்ளுபடி** *tallu-padi*, பெ. (n.) 1. தள்ளப் பட்டது; that which is rejected, dismissed, discarded, abandoned, cancelled, refused. 2. கணக்கிற் கழிக்கப்பட்டது; deduction, discount, allowance. 3. விலக்கு; exception; exemption. 'கூட்டுறவுக் கடைகளில் விழாக் காலங்களில் 20 விழுக்காடு தள்ளுபடியில் விற்கிறார்கள். (இக்.வ.). இட்டலி, தோசை, வடை எதுவும் அவருக்குத் தள்ளுபடி இல்லை (இ.வ.).

[தள்ளு + படி]

**தள்ளுபடிசெய்-தல்** *tallubadi-šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) 1. புறந்தள்ளல் (நிராகரித்தல்); to reject. தன்னைப் பணி நீக்கம் செய்ததை எதிர்த்து அந்த அதிகாரி கொடுத்த வழக்கு உயர்நீதி மன்றத்தில் தள்ளுபடி செய்யப்பட்டது (இக்.கா.). 2. நீக்கஞ்செய்தல் (விலக்குதல்); to write off.

[தள்ளுபடி + செய்-.]

**தள்ளுபடியாகமம்** *tallubadi-y-āgamam*, பெ. (n.) விவிலிய நூற்பகுதி (கிறித்.); apocryphal books.

[தள்ளுபடி + ஆகமம்]

**தள்ளுமட்டம்** *tallu-mattam*, பெ. (n.) யானையின் இளங்குட்டி (வின்.) (பெரிய யானைகளால் தள்ளி நடைபயிற்றப் பெறுவது); young elephant, as having to be pushed forword and guided by the old ones.

[தள்ளு + மட்டம்.]

**தள்ளுமுள்ளு** *tallu-mullu*, பெ. (n.) தள்ளுப் புள்ளு (இ.வ.) பார்க்க; see *tallu-p-pullu*.

[தள்ளு + முள்ளு.]

**தள்ளுமெள்ளு** *tallu-mellu*, பெ. (n.) தள்ளுப்புள்ளு (வின்.) பார்க்க; see *tallu-p-pullu*.

[தள்ளு + மெள்ளு.]

**தள்ளுவண்டி** *tallu-vandi*, பெ.(n.) 1. கையால் தள்ளிச் செலுத்தும் சிறுவண்டி; wheel barrow, perambulator. தள்ளுவண்டியில் காய்கறி விற்றுக் கொண்டு வந்தான் (இக்.வ.). நகரங்களில் குழந்தைகளுக்கான தள்ளுவண்டி வாங்கலாம் (உ.வ.). 2. சிறுகுழந்தை நடந்து பழக ஆதரவாக உள்ள, சிறுவண்டி; small cart.

மறுவ. நடைவண்டி

[தள்ளு + வண்டி]



**தள்ளுறு-தல்** *tal-l-uru-,* 20 செ.கு.வி. (v.i.) 1. தள்ளப்படுதல்; to be rejected, removed. 2. வருந்துதல்; to be in distress. "உள்ளந் தள்ளுற லொழிந்து" (கம்பரா. மாயாசீ. 34).

ம. தள்ளூரம்

*[தள்ளு + உறு-.]*

**தள்ளை** *tallai,* பெ. (n.) தாய் (தொல்.சொல். 400, உரை); mother.

ம. தள்ள; தெ. தல்லி

*[தள் → தள்ளை (வ.மொ.வ.175)]*

**தளகருத்தம்** *talakaruttam,* பெ. (n.) படைத் தலைமை; office of commander. "மைசூரான் வாசல் தளகர்த்தம் கம்பணவுடை யார்" (மதுரைத் தடுப். மதுரைத்தல. பக்.2).

*[தள் → தளம் + கருத்தம் → தளகருத்தம். தளம் படைக்குழுமம் உள்ள இடம்]*

**தளகருத்தன்** *tala-karuttan,* பெ. (n.) படைத் தலைவன்; captain, general, marshal, commander-in-chief. "காலமுந் தன்பலமு மெண்ணியிகல் வென்றிடக் கருதுவோன் றளகர்த்த னாம்" (திருவேங். சத. 8).

*[தளம் + கருத்தன்]*

**தளகருத்தா** *tala-karuttā,* பெ. (n.) தளகருத்தன் பார்க்க; see *talakaruttan* (செ.அக.).

*[தளம் + கருத்தா]*

**தளசிங்கம்** *tala-šingam,* பெ. (n.) பெருவீரன் (போர்க்களத்திற் சிங்கம் போன்றவன்); a valiant soldier, as a lion in battle. "தளசிங்க மன்னநும் வீரம்" (பிரயோத. 24, 28).

*[தளம் + சிங்கம். போர்க்களத்தில் அரிமா நோக்குடன் சுற்றியுள்ள, பகைவர்களை அழிப்பவன்]*

**தளத்தி** *talatti,* பெ. (n.) தளர்ச்சி; depressed exhausted.

*[தள் → தள → தளத்தி (மு.தா.309)]*

**தளதள-த்தல்** *tala-tala-,* 4 செ.கு.வி. (v.i.) 1. விரிவடைதல், பருத்தல்; to plump, full, sleek, as the body. 2. ஒளிவிழுதல்; to be brilliant, transparent. "பசுநரம்பு தளதளப்ப" (குற்றா. தல. தருமசாமி. 34). 3. நெகிழ்தல்; to become loose, as a cloth worn upon the person. அரை வேட்டி தளதளத்து விட்டது (உ.வ.).

ம. தளதள

*[துள் → தள் → தள → தளதள- (திரு.தமி.மர. 155)]*

விரிந்த பொருள் தளருந்தன்மைத்து. பரந்த ஒளி குறைதலும் இயல்பேயாம். 'தளதள' - ஆடையின் நெகிழுந்தன்மை. தளதளத்தல் - ஆடைநெகிழ்தல்

**தளதளப்பு** *tala-talappu,* பெ. (n.) 1. விரிவாகுகை (புஷ்டி.), கொழுக்கை; being plump or full, as the face. 2. காந்தி, ஒளிர்வு; brilliance. உடல் தளதளவென்று வளர்ந்துவிட்டாள் (உ.வ.). 3. வீக்கம் (யாழ்.அக.); swelling.

*[துள் → தள் → தள → தளதளப்பு. (தமி.இல.வ.முன். 32)]*

ஒருகா. பளபளப்பு தளதளப்பு. பளீரென்று மின்னல் வெட்டியது என்னும் வழக்காலறிக. மிகுதிக் கொழுப்பாலும், அறிவின் முதிர்ச்சியாலும் முகமும் உடலும் பளபளப்பது இயல்பென்றறிக.

**தளதளெனல்** *talatalenal,* பெ. (n.) 1. ஒளி வீசுதற் குறிப்பு; being brilliant. 2. விரிவாதல்குறிப்பு; being plump. 3. இளகுதற்குறிப்பு; melting, as gold. "தளதளவென் றிளகி" (அருட்பா, vi, அமையங்கூற. 5). 4. ஒலிக்குறிப்பு; bubbling, as boiling water. சோறு தளதளவென்று கொதிக்கிறது (உ.வ.).

*[துள → தள → தளதள + எனல் (திரு. தமி. மர. 155)]*

**தளப்படி** *taḷa-p-paḍi,* பெ. (n.) மனவுலைவு (யாழ்ப்.); agitation of mind, wavering, anxiety.

*[தளம் + படி]*

**தளப்பம்**[1] *taḷappam,* பெ. (n.) 1. தளப்படி பார்க்க; see *taḷappaḍi.* "தளப்பந்தீருமிறே இவர்க்கு" (ஈடு, 6:10:1). 2. காதணிவகை; an ear - ornament. "தக்கையிட்ட காதிற் றளப்பமிட்டு" (விறலிவிடு. 184).

*[தளம்பம் → தளப்பம்]*

**தளப்பம்**[2] *taḷappam,* பெ. (n.) தாளிப்பனை (வின்.); South Indian talipot-palm.

*[தாள → தள → தளப்பம்]*

**தளப்பற்று** *taḷa-p-paṟṟu,* பெ. (n.) 1. திப்பலிப் பனை (மலை); jaggery-palm. 2. விருது குடையாக எடுக்கும் தாளிப்பனையோலை (வின்.); leaf of the talipot-ōalai, used as an umbrella or a badge of honour.

*[தள → தள + பற்று]*

**தளப்பற்றுக்காரன்** *taḷa-p-paṟṟu-k-kāraṉ,* பெ. (n.) ஓலை பிடித்தெழுதுவோன் (யாழ். அக); writer on palm leaf.

*[தளப்பற்று + காரன் = "காரன்" உடைமைப் பெயரீறு.]*

**தளப்பற்றுமீன்** *taḷa-p-paṟṟu-mīṉ,* பெ. (n.) கடல் மீன்வகை (யாழ்.அக.); a kind of sea - fish.

*[தளப்பற்று + மீன்]*

**தளப்பு** *taḷappu,* பெ. (n.) கேடு; injury, evil influence. "தளப்பிலா முகூர்த்தம் வல்லோன்" (பாரத. முகூர்த். 2).

*[தளம்பு → தளப்பு]*

**தளபஞ்சி** *taḷa-pañji,* பெ. (n.) நெற்றியில் வெள்ளைப் புள்ளியையும், வெண்மை யல்லாத வேறு ஒரே நிறத்தினையுமுடைய குதிரை (சுக்கிர நீதி, 317); horse that, except for a white spot in the forehead, is of a single colour other than white.

**தளபதி** *taḷa-padi,* பெ. (n.) தளகருத்தன் (யாழ்.அக.) பார்க்க; see *taḷakaruttaṉ.*

*[தளம்[3] + பதி]*

**தளபாடம்**[1] *taḷa-pāḍam,* பெ. (n.) தளவாடம் பார்க்க; see *taḷavāḍam* (செ.அக.).

*[தளம் + பாடம்]*

**தளபாடம்**[2] *taḷa-pāḍam,* பெ. (n.) பாடம் முழுமையும் நன்கு அறிந்திருத்தல்; that which is at one's finger's ends, as a lesson.

*[தளம் + பாடம்]*

**தளபாடம்**[3] *taḷa-pāḍam,* பெ. (n.) போர்ப்படை; army. "திருவடிராச்சியத்துக்கு மன்னரையும் தளபாடமும் அனுப்பியருளி" (S.I.I.vii, 21).

*[தள் → தளம் - படைக்குழும வீடு. தளம் + பாடம்]*

**தளம்**[1] *taḷam,* பெ. (n.) 1. பருமன்; thickness, as of a board, heaviness. "தளமாய்ச் சமநிலத்துத் தண்காற்று நான்கும்" (சீவக. 719, உரை). 2. வெண்சாந்து (பிங்.); white sandal paste. 3. செஞ்சாந்து (பிங்.); red sandal paste.

தெ. தளமு

*[தள் → தளம்]*

**தளம்**[2] *taḷam,* பெ. (n.) 1. செங்கல், கருங்கல், சுதைமா பாவிய தரை; floor or pavement , as of brick, stone or cement. 2. மொட்டைமாடி (அக. நி.); terrace roof, upper open space room or balcony. 3. தட்டு; loft, storey, deck of a ship. 4. மேடை (சூடா.); platform, mound. 5. அடுக்குமாடிகளில் முதல் தளம் இரண்டாம் தளம் என்றமைந்த குடியிருப்புகள்; various floors in residential flats or any building or tower.

ம. தளம்; க. தள; தெ. தளமு

*[தள் → தளம். த. தளம் → வ. தல]*

**தளம்**[3] *taḷam,* பெ. (n.) 1. இலை (சூடா.); leaf. 2. பூவிதழ் (சூடா.); petal. 3. முல்லை; jasmine. "தளவள முகைகொள் பல்லாட் சீவகன் றழுவி நின்றால்" (சீவக. 751). 4. போர்ப்படை; army. "எதிர்த்து வெட்டுந் தளமோ" (தாயு. பராபர. 283). 5. கூட்டம் (பிங்.); multitude of men or beasts. 6. சாணை பிடியாத கெம்பு; unpolished ruby. "தளம் பத்துமாக மாணிக்கம்" (S.I. I. ii, 81).

ம. தளம்; க. தள; தெ. தளமு

*[தள் → தளம்]*

**தளம்**[4] *taḷam*, பெ. (n.) சாடி (பிங்.); jar, water-pot.

**தளம்**[5] *taḷam*, பெ. (n.) *1.* **அடிப்படை;** basis; foundation. "நாராயணாதி சப்தங்களிலே விவக்ஷிதமான ஸம்பந்தத்தை சித்தாந்தத்துக்குத் தளமாக்கி" (ரஹஸ்ய. 166). *2.* **அடி; அடிபரப்பு;** base, lower-part. *3.* **சுண்ணாம்பு** (இவ.); chunnam

*[தள் → தளம் = அடியிடம், அடிபரப்பு]*

*[த. தளம் → வ. தல. இச் சொற்கு வடவர் காட்டும் 'ஸ்த்ரு' என்னும் மூலம் பொருந்தாமை காண்க. ஸ்த்ரு = சிதறு. 'சிதறு' என்னும் தென்சொல்லே, 'strew' என்னும், ஆங்கிலச்சொற்கும், 'ஸ்த்ரு' என்னும் வடசொற்கும் மூலமாகத் தெரிகின்றது (வ.வ. பகுதி, 2, பக்.6)]*

**தளம்பாறை** *taḷam-pāṟai*, பெ. (n.) ஒரு விரல நீளமும், நீலநிறமுமுள்ள கடல்மீன் வகை; sea - fish, bluish, attaining 1 in. in length, Caranx malabaricus.

*[தளம் + பாறை.]*



**தளம்பு**[1]**-தல்** *taḷambu-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* **ததும்புதல்;** to wabble, flap, fluctuate, as water in a moving vessel. *2.* **இருபுறமும் மாறிச் சாய்ந்தாடுதல்** (யாழ்ப்.); to be unsteady, as a floating pot; to sway, as a spinning top; to totter, stagger with the weight of a load; to shake, as the top of a car when drawn: to move, as drops of water on a leaf; to be shaky, as a load. *3.* **மனமலைதல்;** to fluctuate, waver, hesitate, vacillate. "தளம்பு நெஞ்சுடைய" (திருவாலவா. 38:49). *4.* **பழக்கமுறுதல்** (நான்மணி. 12, உரை); to get accustomed. *5.* **முட்டுப்படுதல்** (வின்.); to be in straits for a livelihood.

*[தளும்பு → தளம்பு (மு.தா. 68)]*

**தளம்பு**[2] *taḷambu*, பெ. (n.) *1.* மதகு (வின்.); flood-gate, sluice. *2.* **சேறுகுத்தி;** an instrument for working in mud. "செறுவிற் றளம்பு தடிந்திட்ட" (புறநா. 61:3).

**தளமெடு-த்தல்** *taḷam-eḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **படையெடுத்தல்** (யாழ்.அக.); to invade. *2.* **சண்டை தொடங்குதல்;** to begin to quarrel. "கள்ளி தளமெடுத்தாள்" (விறலிவிடு.).

*[தளம் + எடு-.]*

**தளர்**[1]**-தல்** *taḷar-*, 17 செ.கு.வி. (v.i.) *1.* **சோர்தல்;** to droop, faint, grow weary, enfeebled, infirm or decrepit. "தளர்ந்தே னெம்பிரா னென்னைத் தாங்கிக் கொள்ளே" (திருவாச. 6, 1). *2.* **நெகிழ்தல்;** to grow slack, become relaxed, as a tie or grasp. *3.* **உடற்கட்டுக் குலைதல்;** to become flappy from age. இரண்டு மாதமாகப் படுத்தப் படுக்கையாய்க் கிடந்ததில் மிகவும் தளர்ந்து போனார் (இக்.வ.). "தாழாத் தளராத் தலைநடுங்கா" (நாலடி. 14). *4.* **மனங்கலங்குதல்;** to suffer in mind, to be troubled at heart. to lose one's presence of mind. இந்த முறையும் தேர்வில் தேறவில்லை என்றதும் தளர்ந்து போனான் (இக்.வ.). *5.* **உயிரொடுங்குதல்;** to lose one's vitality. "தகைபாடவலாய் தளர்கோ தளர்கோ" (சீவக. 1379). *6.* **இறத்தல்;** to die. *7.* **நுடங்குதல்;** to be flexible, tender. "தண்டாக் காதற் றளரிய றலைவன்" (பு.வெ. 9, 45, கொளு.). *8.* **சோம்புதல்** (வின்.); to be remiss, to be indifferent in duty, to grow careless, to degenerate. *9.* **தவறுதல்;** to go astray. "நெறியிற் றளர்வார் தமநெஞ் சுருகி" (சீவக. 1190).

ம. தளருக; க. தளர்; தெ. தலநம; து. தளம்பன், தளமள; காத. தளர்; குட. தளெ; மா. தள்க்வரொ

*[துள் → (தள்) → தளர் (மு.தா.309) தொளதொளத்தற் கருத்தினின்று முகிழ்த்த சொல்லாகும்: தொளதொளத் தலாவது, ஒன்று இன்னொன்றுள், இறுகப் பொருந்தாதவாறு தளர்ந்திருத்தலாகும். ஒருகா. தொள → தொளர் → தளர் → தளர்- (வே.க. 288)]*

**தளர்**[2] *taḷar,* பெ. (n.) தளர்ச்சி (வின்.); slackening.

*[தள் → தளர்]*

**தளர்ச்சி** *taḷarcci,* பெ. (n.) 1. நெகிழ்ச்சி (தைலவ. தைல. 128); slackness, looseness, flexibility. 2. களைப்பு, சோர்வு; weakness, in firmity, decrepitude, faintness, langour, depression of spirits. 3. சோம்பல் (சங்அக.); remiss. 4. ஏழ்மை (சங்அக.); poverty.

ம. தளர்ச்ச

*[துள் → (தள்) → தளர் → தளர்ச்சி]*

**தளர்த்தி** *taḷartti,* பெ. (n.) தளர்ச்சி பார்க்க; see *taḷarcci.*

*[தள் → தள → தளத்தி.]*

**தளர்த்து-தல்** *taḷarttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நெகிழ்த்துதல்; to loosen (செ.அக.).

ம. தளர்த்துக

*[தள் → தளர் → தளர்ந்து → தளர்த்து-.]*

**தளர்ந்துகொடு-த்தல்** *taḷarndu-koḍu-,* 4 செகுவி. (v.i.) இணங்குதல் (யாழ்ப்.); to yield.

*[தள் → தளர் → தளர்ந்து + கொடு-.]*

**தளர்நடை** *taḷar-naḍai,* பெ. (n.) முதலில் குழந்தைகள் தடுமாறி நடக்கும் நடை; tottering walk, wobbling, as of a child. "தளர்நடை தாங்காக் கிளர்பூட் புதல்வரை" (மணிமே. 3:141).

*[தளர் + நடை : தட்டுத்தடுமாறி நடக்குஞ் சிறாஅர் நடை.]*

**தளர்பாடம்** *taḷar-pāḍam,* பெ. (n.) தளபாடம்[2] (யாழ்.அக.) பார்க்க; see *taḷa-pāḍam*[2].

*[தளர் + பாடம்]*

**தளர்வு** *taḷarvu,* பெ. (n.) 1. நெகிழ்கை, இளைப்பாறுகை; growing slack, relaxing. 2. தடுமாறுகை; staggering. 3. சோர்வு; faintness, weakness; depression of spirits. "தளர்வெய்திக் கிடப்பேனை" (திருவாச. 31:2). 4. வருத்தம்; sorrow. "தளர்வுறுமித் தாய்" (பெரியபு. மனுநீதி. 31).

ம. தளர்வ்வு

*[தள் → தளர் → தளர்வு.]*

**தளவட்டம்** *taḷa-vaṭṭam,* பெ. (n.) பூவிதழ்ச் சுற்று; corolla.

*[தளம் + வட்டம்]*

**தளவடாம்** *taḷa-vaḍām,* பெ. (n.) அரிசி கஞ்சியாலாகிய மெல்லிய வடாகம்; thin rice -cake.

மறுவ. இலைவடகம்

*[தளம் + வாடு. வாடு → வாடகம் → வடகம் → வடாம்]*

**தளவம்** *taḷavam,* பெ. (n.) 1. செம்முல்லை; golden jasmine. "முல்லையொடு தளவமல ருதிர" (ஐங்குறு. 422). 2. முல்லை (மலை); Arabian jasmine.

ம. தளபம்

*[தள் → தளவு → தளவம் (மு. தா. 154)]*

**தளவரிசை** *taḷa-varišai,* பெ. (n.) 1. கற்பரப்பு; flooring pavement. 2. எழுதகம் (யாழ்ப்.); lower moulding.

மறுவ. தளவியை, தளவிசை

*[தளம் + வரிசை]*

**தளவாடம்** *taḷa-vāḍam,* பெ. (n.) வேலை செய்தற்கு வேண்டிய கருவி முதலியன; tools, materials, requities tackle, furniture.

ம. தளவாடம்

*[தள(ம்) + வாடம்]*

**தளவாய்** *taḷa-vāy,* பெ. (n.) படைத்தலைவன்; military commander, minister of war. "ஒன்னலரை வென்று வருகின்ற தளவாய்" (திருவேங். சத.89).

க. தளவாய்; தெ. தளவாயி

*[தளம்[3] + வாய்]*

**தளவான்** *taḷavāṉ,* பெ. (n.) தளவாய்; military commander. "வெற்பது தளவான்" (இரகு. நகர. 13);

*[தளவாய் → தளவான்]*

**தளவிசை** *taḷa-višai,* பெ. (n.) தளவரிசை; flooring pavement. "அடையவளைஞ்சான் தளவிசை படுப்பித்தார்" (S.I.I. i, 84).

*[தளம் + விசை. வரிசை → விசை]*

**தளவியை** *taḷaviyai*, பெ. (n.) தளவிசை (யாழ்.அக.) பார்க்க; see *taḷa-višai*.

*[தளம் + வியை. விசை → வியை]*

**தளவு**[1] *taḷavu*, பெ. (n.) **யானையின் வாய்** (பிங்.); elephant's mouth.

*[துள் → தள → தளவு]*

**தளவு**[2] *taḷavu*, பெ. (n.) *1.* **செம்முல்லை;** golden jasmine. "பனப்பூந் தளவொடு முல்லை பறித்து" *(கலித். 108, 42). 2.* **முல்லை;** arabian jasmine. *3.* **ஊசிமல்லிகை** (பிங்.); eared jasmine.

*[தள → தளவு.]*

**தளா** *taḷā*, பெ. (n.) **தளவு**[2] பார்க்க; see *taḷavu*[2]. 'யாமரக் கிளவியும் பிடாவுந் தளாவம்" *(தொல். எழுத். 229).*

*[தள் → தள → தளா.]*

**தளாபம்** *taḷābam*, பெ. (n.) **மணிக்கற்களுள் ஒன்று** (சுக்கிர நீதி, 186); a kind of gem.

*[தளா → தளாபம்.]*

**தளி**[1]**-த்தல்** *taḷi-*, 4 செ.குவி. (v.i.) **துளித்தல்;** to drip, as rain. "நுண்மழை தளித்தென" *(ஐங்குறு. 328).*

*[துளிர் → தளி-.]*

**தளி**[2]**-த்தல்** *taḷi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **பூசுதல்;** to smear, as sandal. "ஆரியாக வஞ்சாந்தந் தளித்தபின்" *(சீவக. 129). 2.* **தெளித்தல்** (நாஞ்.); to sprinkle.

க. தளி, ம. தளிக்குக; க. தளி, தளிடு; து. தலிபுனி; கோத. தெய்ள்; குட. தளி; கோண். தெக்கானா; குரு. தென்னா

*[தெளி → தளி-.]*

**தளி**[2] *taḷi*, பெ. (n.) *1.* **நீர்த்துளி;** drop of water, rain drop. "தளிபொழி தளிரன்ன" *(கலித். 13). 2.* **தலைப்பெயன் மழை** (பிங்.); first shower of rain. "தளிபெருகுந் தண்சினைய பொழில்" *(பரிபா. 8,91). 3.* **முகில்;** cloud. "தளியிற் சிறந்தனை" *(கலித். 50, 16). 4.* **குளிர்** (இலக்.அக.); coolness.

*[தெளி → தளி.]*

**தளி**[3]**-தல்** *taḷi-*, 4 செ.குன்றாவி. (v.t.) **தெளிதல்;** to comprehend clearly. "ஆதிப்பிரானைத் தளிந்த வர்க்கல்லது தாங்க வொண்ணாதே" *(திருமந். 527).*

*[தெளி → தளி.]*

**தளி**[4] *taḷi*, பெ. (n.) *1.* **கோயில்;** temple, sacred shrine. "காமர்சாலை தளிநிறுமின்" *(சீவக. 306). 2.* **இடம்;** place, room. "அடிசிற் றளிய னெய்வார்ந்து" *(சீவக. 2579).*

ம., க. தளி

த. தளி → Skt. sthalī

*[தள் → தளி.]*

**தளி**[5] *taḷi*, பெ. (n.) *1.* **விளக்குத்தகழி;** oil-vessel of a lamp. *2.* **விளக்குத்தண்டு** (வின்.); lamp-stand (செ.அக.).

ம. தளி

*[தகழி → தழி → தளி.]*

**தளிகை**[1] *taḷigai*, பெ. (n.) *1.* **உண்கலம்;** eating-plate, platter. "தளிகை பஞ்சவன்மாதேவி என்னுந் திருநாமமுடையது" *(S.I.I. ii, 211). 2.* **சமையல்;** cooking. வீட்டில் இன்னும் தளிகையாக வில்லை (vaiṣṇ). *3.* **கடவுளுக்குப் படைத்த குறிப்பிட்ட அளவுசோறு** (I.M.P.S.A. 148); a certain quantity of boiled rice offered to idols in temples. *4.* **கூழ்க்கட்டி** (யாழ்.அக.); solidified rice porridge.

ம. தளிக; க. தளிகெ; தெ. தலிக, தளிக, தளிய, தளிகெ; கோத. தலியா; துட. தரக

*[தள் → தளி → தளிகை.]*

**தளிகை**[2] *taḷigai*, பெ. (n.) **நூல்தாங்கி;** book stand. "பொன்னின் றளிகை மிசைவைத்து" *(திருவிளை. திருமுகம். 24).*

*[தளி → தளிகை.]*

**தளிகைச்சிறப்பு** *taḷigai-c-ciṟappu*, பெ. (n.) **கடவுளுக்குப் படைக்கும் சோறு முதலியன** (S.I.I. IV. 103); food offering.

*[தளிகை + சிறப்பு]*

**தளிகைசமர்ப்பி-த்தல்** *taḷigai-samarppi-*, 4 செ.குன்றாவி. (v.t.) **தளிகைபோடு-தல்** பார்க்க; see *taḷigai-pōḍu-*.

*[தளிகை + சமர்ப்பி-.]*

**தளிகைபோடு-தல்** *taḷigai-pōḍu-*, 20 செ.குவி. (v.i.) *1.* **கடவுளுக்குப் படைத்தல் பொருட்டு, சோறு முதலியவற்றைக் கொணர்ந்து வைத்தல்;** to take boiled rice, etc., for offering

to idols. *2.* கடவுட்குச் சோறு முதலியவற்றைப் படைத்தல்; to offer boiled rice to idols. *3.* தளிகைவிடு பார்க்க; see *taḷigai-viḍu.*

*[தளி → தளிகை + போடு-.]*

**தளிகைவடாம்** *taḷigai-vaḍām,* பெ. (n.) அரிசிக்கஞ்சியாலாகிய மெல்லிய வடாகம்; thin rice-cake (செ.அக.).

*[தளிகை + வடாம்]*

**தளிகைவிடு-தல்** *taḷigai-viḍu-,* 18 செ.குவி. (v.i.) கோயிலில் தேங்காய்ச்சோறு, புளிச்சோறு, தயிர்ச்சோறு முதலிய தாளித்த சோற்று வகையைக் கலந்துஇடுதல்; to offer flavoured rice to idols in temples.

*[தளிகை + விடு-.]*

**தளிச்சேரி** *taḷi-c-cēri,* பெ. (n.) கோயில் திருத்தொண்டு புரியும் மகளிர் இருக்கும் தெரு; street of the dancing - girl's attached to a temple. "தெற்குத் தளிச்சேரித் தென்சிறகு" *(S.I.I. ii, 261).*

*[தளி + சேரி. தளி எனில் கோயில் : கோயிலில் திருத்தொண்டு செய்த ஆடல் மகளிர் வாழ்வதற்காக, அமைத்தவிடம்]*

**தளிச்சேரிப்பெண்டுகள்** *taḷi-c-cēri-p-peṇḍugaḷ,* பெ. (n.) கோயில் திருத்தொண்டு செய்யும் மகளிர்; dancing-girls attached to a temple. "தளிச்சேரிப் பெண்டுகளுக்கும்" (S.I.I.ii, 261).

*[தளிச்சேரி + பெண்டுகள்]*

**தளிசை** *taḷišai,* பெ. (n.) கூழ்க்கட்டி; solidified rice porridge.

*[தளிகை → தளிசை.]*

**தளிப்பெண்டுகள்** *taḷi-p-peṇḍu-gaḷ,* பெ. (n.) தளிச்சேரிப் பெண்டுகள்; dancing-girls. "தளிப் பெண்டுகள் தெருவினடுவேபோய்" *(சிலப். 16:103: உரை).*

*[தளி + பெண்டுகள்]*

**தளிமம்**[1] *taḷimam,* பெ. (n.) *1.* படுக்கை (பிங்.); bed, sleeping place. *2.* மெத்தை (பிங்.); mattress, cushion. *3.* வீடுகட்டும் இடம் (வின்.); house-site. *4.* திண்ணை (யாழ்.அக.); pial. *5.* வாள் (யாழ்.அக.); sword.

*[தளி → தளிமம்]*

**தளிமம்**[2] *taḷimam,* பெ. (n.) அழகு (பிங்.); beauty, loveliness.

**தளியாலாடு** *taḷiyā-lāḍu,* பெ. (n.) ஒருவகைப் பண்ணிகாரம்; a kind of flour-cake ball.

*[தளியல் + ஆடு.]*

**தளியிலார்** *taḷiyilār,* பெ. (n.) தளிச்சேரிப் பெண்டுகள் (சிலப். 22: 142: அரும்) பார்க்க; see *taḷi-c-cēri-p-peṇḍugaḷ.*

*[தளி + இலார்.]*

**தளியிலாள்** *taḷiyilāḷ,* பெ. (n.) கோயில் தொண்டு செய்யும் ஆடல்மகள்; dancing-girl, attached to a temple. "ஆலவாய்ச் சொக்கருக்குத் தட்டடெடுக்குந் தளியிலாள்" *(விறலிவிடு. 151).*

*[தளி + இலாள்]*

**தளிர்**[1]**-த்தல்** *taḷir-,* 4 செ.குவி. (v.i.) *1.* துளிர்த்தல் (சூடா.); to shoot forth, to sprout. *2.* தழைத்தல்; to put forth leaves. "மாரியால் வற்றிநின்ற சந்தனந் தளிர்த்ததே போல்" *(சீவக. 545).* *3.* செழித்தல்; to flourish, prosper. *4.* மகிழ்தல்; to rejoice. "தையலாள்வரக் கண்டனனா மெனத் தளிர்ப்பான்" *(கம்பரா. தானைகாண். 28).*

*[துளிர் → தளிர் → தளிர்-. துளிர்த்தற் கருத்தினின்று முகிழ்த்தற் கருத்து தோன்றும்: துளிர்த்த கொழுந்து, தடிந்தெழினி தான் நல்கியக்கால் தளிர்க்கும், தளிர்த்தமரம் மேன்மேலுந் தளிர்த்தலையே, இவ் வேரடி விளக்குகின்ற தென்றறிக.]*

**தளிர்**[2] *taḷir,* பெ. (n.) முளைக்கும் காலத்துள்ள இலை; sprout, tender shoot, bud. "தளிரே தோடே" *(தொல். பொருள். 642).*

*[துளிர் → தளிர்]*

**தளிர்ப்பு** *taḷirppu,* பெ. (n.) *1.* துளிர்க்கை; sprouting. *2.* மனவெழுச்சி; enthusiasm, rejoicing. "உண்டு போரெென் றுளந்தளிர்ப் பெய்துவார்" *(கந்தபு. வீரபத். 39).*

*[துளிர்ப்பு → தளிர்ப்பு]*

**தளிரியல்** *taḷir-iyal,* பெ. (n.) (தளிர்போலும் இயல்புடையாள்) பெண் (பிங்.); damsel, tender as a sprout. "தளிரிய லோதலோடும்" *(சீவக. 1147).*

*[தளிர் + இயல்]*

**தளிவடகம்** *taḷi-vaḍagam,* பெ. (n.) இலை போலும் மெல்லிய சோற்று வடகம்; thin rice-cake.

*[தளிர் → தளி = இலை. தளி + வடகம். ஒருகா. தளிகை + வடகம்]*

**தளிவம்** *taḷivam,* பெ. (n.) தகடு; flat piece, as of gold. "காஞ்சனத் தளிவம் வாய்க்கிட்டு" *(சீவக. 2303).*

*[தளி → தளிவம்.]*

**தளுக்கு¹-தல்** *taḷukku-,* 5 செ.குன்றாவி. (v.i.) *1.* **பூசுதல்;** to smear, rub in. "சாந்து கொண்டு தளுக்கு நிலத்திடை" *(விநாயகபு. 39, 14). 2.* **துலக்குதல்** (வின்.); to scour, polish, as furniture; to smooth, as an earthen floor.

தெ. தளுகு.

*[துள் → தள் → தளு → தளுக்கு-. ஒருகா. தெளி → தளி → தளு → தளுக்கு-.]*

**தளுக்கு²-தல்** *taḷukku-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **சொலித்தல், மிளிர்தல்;** to be bright, to glitter. *2.* **ஒளிர்தல்;** to shine.

தெ. தளுகு.

*[துள் → தள் → தளு → தளுக்கு-.]*

**தளுக்கு³** *taḷukku,* பெ. (n.) *1.* **மினுக்கு;** shining, glittering, splendour, brightness. அவளுடைய தளுக்குப் பேச்சும் குலுக்கு நடையும் யாருக்கும் பிடிக்காது *(இக்.வ.). 2.* **ஆரவாரப் பகட்டு;** showiness, ostentation. *3.* **மூக்கணி;** nose jewel small ornament like a tack worn in the upper helix. *4.* **மினுக்கு;** liveliness vivacity, brightness. *5.* **சூழ்ச்சித்திறன்; தந்திரம்** (இ.வ.); artfulness. *6.* **காக்காய்ப்பொன்;** mica.

க. தளகு; தெ. தளுகு

*[துளு → தளு → தளுக்கு. ஒருகா. துலக்கு → தலக்கு → தலுக்கு → தளுக்கு-.]*

**தளுக்குணி** *taḷukkuṇi,* பெ. (n.) *1.* **வெட்கமில்லாதவன்** (யாழ்.அக.); person wanting in sensibility. *2.* **ஏமாற்றுபவன்** (இ.வ.); a deceitful person.

*[தளுக்கு + உணி → தளுக்குணி = சூடு, சொரணையற்று ஏமாற்றுவதையே பிழைப்பாகவுடையவன்]*

**தளுகன்** *taḷugaṉ,* பெ. (n.) **பொய்யன்** (வின்.); deceit ful fellow, liar.

*[உல் → உள் → துள் → தள் → தளுகு + அன். 'அன்' ஆண்பாலீறு. ஒருகா. புளுகன் → தளுகன்]*

**தளுகு** *taḷugu,* பெ. (n.) **புளுகு** (வின்.); fraud, lie.

க. தளுகு

*[துள் → தள் → தளுகு. ஒநோ. அழுகு → புழுகு. 'கு' சொல்லாக்க ஈறு.]*

**தளுகை** *taḷugai,* பெ. (n.) **தளிகை¹,1.** (இ.வ.) பார்க்க; see *taḷigai¹, 1.*

*[தளுகு → தளுகை.]*

**தளுதாழை** *taḷutāḻai,* பெ. (n.) *1.* **வளியடக்கி** (மலை); medicine for gastric troubles. *2.* **தழுதாழை** பார்க்க; see *taḻu-tāḻai.*

*[தழுதாழை → தளுதாழை-.]*

**தளும்பு¹-தல்** *taḷumpu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **கலம் அசைவதால் நீர் சிறிதுதுள்ளுதல்;** to wabble, flap, fluctuate, as water in a moving vessel. நிறைகுட நீர்தளும்ப லில் *(பழ.). 2.* **பழக்க முறுதல்** (நான்மணி. 12, உரை); to get accustomed. *4.* **முட்டுப்படுதல்** (வின்.); to be strive for a livelihood. *5.* **இருபுறமும் மாறிச் சாய்ந்தாடுதல்** (யாழ்ப்.); to be unsteady, as a floating pot, to sway as a spinning top.

*[துளும்பு → தளும்பு → தளும்பு-. (தமி. இல. வ. முன் 52)]*

**தளும்பு²-தல்** *taḷumbu-,* 5 செ.கு.வி. (v.i.) **உள்ளம் கலங்குதல்;** to be perturbed, to be distressed. "அநுகூல ஜனமானது தளும்பிற்று என்கிறான்" *(திவ். பெரியாழ். 3:7:5, வ்யா. பக்713).*

*[துள் → தள் → தளு → தளும்பு → தளும்பு-. (மு.தா.329). ஒருகா. துளும்பு → தளும்பு → தளும்பு-. (மு.தா.68).]*

**தளுவம்** *taḷuvam,* பெ. (n.) **கைத்துண்டு;** small piece of cloth, towel. "ஸ்ரீபாதத்தைத் தளுவத்தாலொற்றி" *(குரு பரம். 572).*

*[துள் → துளு → துளுவம் → தளுவம் = துணிக்கப்பட்ட கைத்துணி.]*

**தளை[1]-தல்** *taḷai-*, 4 செ.குன்றாவி. (v.t.) பிணித்தல்; to fasten, bind, chain. "மோகமெனும் பாசத்தான் மிகத்தளைந்து" (குற்றா. தல. தருமசாமி. 74). 2. தடுத்தல்; to prevent.

*[தள் → தளை → தளை-. (மு.தா.101)]*

**தளை[2]-த்தல்** *taḷai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. கட்டுதல்; to tie, bind, fasten, entangle. 'தளைக்கின்ற மாயக்குடும்பப் பெருந்துயர்" (அருட்பா, i, திருவருள். 315). 2. அடக்குதல் (யாழ்ப்.); to confine, restrain, limit.

*[தள் → தளை → தளை-. (மு.தா.68)]*

**தளை[3]-த்தல்** *taḷai-*, 4 செ.கு.வி. (v.i.) கொதித்தல்; to boil, bubble. சாதந் தளைக்கிறது (இ.வ.).

*[தள் → தளை → தளை-. (மு.தா.68)]*

**தளை[4]** *taḷai*, பெ. (n.) 1. கட்டு; tie, fastening, bandage. "அற்புத்தளையு மவிழ்ந்தன" (நாலடி, 12). 2. கயிறு; cord, rope. "நிறைத்தளை விட்டீர்த் தலின்" (திருவிளை. மாபாத 6). 3. விலங்கு; fetters, shackles. "தாடளை யிடுமின்" (திருவாச. 3:143). 4. பிறப்பிற்குக் காரணமான (ஆதன்) ஆன்மவுறவு; bondage of the soul, causing birth. 5. மலர்முறுக்கு; closed condition, as of an unblown flower. "புதுவது தளைவிட்ட தாதுசூழ் தாமரை" (கலித். 69). 6. சிறை; imprisonment. 7. தொடர்பு (சூடா.); relationship, friendship, bond of union. 8. காற்சிலம்பு (பிங்.); anklet. 9. ஆண்மக்கண் மயிர் (பிங்.); hair of the males. 10. வயல்; paddy field, as divided into plots. "களைகட்டவர் தளைவிட்டெறி" (கம்பரா. கங்கை 5). 11. உடையாருத்தி ஓகம் (யாழ்ப்.); office of uḍaiyār in certain districts. 12. அறுவகைச் செய்யுளுறுப்புகளில் ஒரு சீரின் ஈற்றசைக்கும், அதனையடுத்துவருஞ் சீரின் முதலைசக்கும் உள்ள தொடர்பு (காரிகை, உறுப். 5, உரை); metrical connection of the last syllable of any foot with the first of the succeeding, one of the six šeyyuḷ-uṟuppu, divided into four classes, viz., āširiya-t-taḷai, veṇḍaḷai, kali-t-taḷai, vañji-t-taḷai.

ம. தள; க. தளெ

*[தள் → தளை (மு.தா. 101)]*

**தளைக்காணம்** *taḷai-k-kāṇam*, பெ. (n.) வரி வகை (கல்வெட்டு); a kind of tax.

ம. தளக்காணம்

*[தளை + காணம்]*

**தளைதள்-தல் (தளைதட்டல்)** *taḷai-taḷ-*, 5 செ.கு.வி. (v.i.) வேறு தளை விரவியதனால், எடுத்துக்கொண்ட செய்யுளின் தளை மாறுபடுதல்; to fail or be defective in the taḷai connection of a verse. "வேற்றுத்தளை தட்டுக் குறள்வெண்பாவிற் சிதைந்து" (யாப். செய். 6, உரை).

*[தள் → தளை → தளை-.]*

**தளைந்துவிடு-தல்** *taḷaindu-viḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) விலங்குகளின் முன்காலைக் கட்டி, மேய்ச்சலுக்கு விடுதல்; to tie together the forefeet of an animal and let it out to graze.

*[தள் → தளை → தளைந்து + விடு-. முன்காலைக் கட்டி விடுவதால், குறிப்பிட்ட சுற்றளவில் மட்டுமே, மேயும். கட்டாமல் விட்டால், கண்ணில்பட்ட தெல்லாம் மேயும். இன்றளவும், சிற்றூர்ப் புறத்தே அவரவர்க்குரிய புல் சம வெளியில், இக் காட்சியைக் காணலாம்]*

**தளைநார்** *taḷai-nār*, பெ. (n.) பனையேறுவோர் காலில் மாட்டிக்கொள்ளுங் கயிறு (யாழ்ப்.); foot-brace for a palm tree - climber.

*[தளை + நார்]*



**தளைப்படு-தல்** *taḷai-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) தளைபடு-. பார்க்க; see *taḷai-paḍu-*.

*[தளை + படு-.]*

**தளைபடு-தல்** *taḷai-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. சிறையாதல் (பிங்.); to be imprisoned, taken captive. 2. கட்டுப்படுதல்; to be bound, confined, restrained.

*[தளை + படு-.]*

**தளைபோடு-தல்** *taḷai-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) குறுக்காக வரப்பிடுதல் (இ.வ.); to put up ridge, as in a field.

மறுவ. தடைபோடுதல் - கைவிலங்கு மாட்டுதல்

*[தளை + போடு-]*

**தளையம்** *taḷaiyam,* பெ. (n.) விலங்கு; bonds, fetters. "இளையவர் நெஞ்சத் தளையம்" (திருப்பு. 303).

*[தள் → தளை → தளையம்]*

**தளையல்** *taḷaiyal,* பெ. (n.) 1. கட்டுகை; binding, tying. 2. மறியற்படுத்துகை (யாழ்.அக.); confining, restraining.

*[தள் → தளை → தளையல்]*

**தளையவிழ்-தல்** *taḷai-y-aviḻ-,* 2 செ.கு.வி. (v.i.) 1. பிணிப்பு அல்லது கட்டுநீங்குதல்; to be unbound, released from restraint. 2. மலர் கட்டவிழ்தல்; to blossom, as a flower. "தளையவிழ் கோதை" (சீவக. 651).

*[தளை + அவிழ்-.]*

**தளையன்** *taḷaiyaṉ,* பெ. (n.) மறவர், குயவர் சான்றார் இனத்த்வர்தம் தலைவன் (யாழ்ப்.); headman of certain castes, viz., Maṟavar, Kuyavar, Šāṉṟār.

*[தல் → தலை → தளை + அன். 'அன்' ஆண்பாலீறு.]*

**தளையாள்** *taḷai-y-āḷ,* பெ. (n.) அடிமை; bondman, slave. "தனக்கொன் றும் பயனின்றித் தளையா ளென்றான்" (நீலகேசி, 185).

*[தளை + ஆள்]*

**தளையாளர்** *taḷai-y-āḷar,* பெ. (n.) கால்கள், (சங்கிலி) தொடரியாற் பிணைக்கப்பட்டவர்; those who are fettered in chains, prisoners. "தளையாளர் தாழ்ப்பாளர்" (ஏலாதி. 56).

*[தளை + ஆளர். தளை = கட்டு]*

**தளையிடு-தல்** *taḷai-y-iḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) பிணித்தல்; to enchain, fetter. "வினைத் தடையாற் றளையிட்டு" (தாயு. பாயப்புலி, 55).

*[தளை + இடு-.]*

**தளைவார்** *taḷai-vār,* பெ. (n.) 1. விலங்கின் கால்களைக்கட்டும்வார்; leather thong binding the feet of an animal. 2. தளைநார்; மர மேறுவோர் காலில் பிணித்துக் கொள்ளும் கயிறு; foot-brace for the tree climbers (செ.அக.).

மறுவ. கால்நார்

**தளைவை-த்தல்** *taḷai-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) உடையார் வேலை கொடுத்தல் (யாழ்ப்.); to invest with the office of Uḍaiyār.

*[தளை + வை-.]*

**தற்கரன்** *taṟkaraṉ,* பெ. (n.) திருடன்; thief, robber. "கோசந்தன்னைத் தற்கரன் சாத்தியந்தன்" (சிவதரு. சுவர்க்க நரகசே. 30).

*[தன் + கரன்]*

**தற்கரிசனம்** *taṟ-karišaṉam,* பெ. (n.) தன்னலம் (வின்.); self-interest.

*[தன் + கரிசனம்]*

**தற்கா[1]-த்தல்** *taṟ-kā-,* 4 செ.கு.வி. (v.i.) தன்னைத் தான்காத்தல்; to take care of oneself, protect oneself. "தற்காத்துத் தற்கொண்டாற் பேணி" (குறள், 56).

*[தன் + கா-.]*

**தற்கா[2]-த்தல்** *taṟ-kā-,* 4 செ.குன்றாவி. (v.t.) பாதுகாத்தல்; to preserve, protect. "நீயென்னைத் தற்காத்தருள்" (இராமநா. உயுத். 14).

*[தன் + கா-.]*

**தற்காத்தற்கடுதாசி** *taṟ-kāttaṟ-kaḍudāši,* பெ. (n.) அறிவிப்பு மடல் (யாழ்.அக.); letter of information.

*[தற்காத்தல் + கடுதாசி = கடந்த காலத்தின் பழுதற்ற திறத்தையும், எதிர்காலத்தின் சிறப்பையும், நிலைப்படுத்துவது நிகழ் காலமேயாகும். நிகழ்காலத்தின் செயற் பாடுகளே, வரையும் மடல்களே, எதிர் காலத்தை வளப்படுத்துவதாக, அமைய*

*வேண்டும். நிகழ்காலத்தே, ஒருவர் ஆற்றும் பணி, பேசும்பேச்சு, எழுதும் எழுத்து சென்றகாலத்தின் திறத்திற்கும், எதிர்காலச் சிறப்பிற்கும் ஊறு விளைவிக்காவண்ணம் உரையும் மடலே தற்காத்தற் கடுதாசி யெனலாம்]*

**தற்காப்பு** *tar-kāppu,* பெ. (n.) தன்னைக் காத்துக் கொள்ளுகை; self - protection.

*[தன் + காப்பு : எக்காலத்தும், எந்நிலையிலும், ஒருவர் தம்மைப் பேணிக்காத்தற்கு மேற்கொள்ளும் செயற்பாடே, தற்காப்பு எனப்படும்.]*

**தற்காலக்கோள்நிலை** *tarkāla-k-kōḷ-nilai,* பெ. (n.) குறித்த காலத்துள்ள கோள்களின் நிலை; planetary positions at a given time.

*[தற்காலம் + கோள்நிலை]*

**தற்காலசுத்தபுடம்** *tarkāla-šutta-puḍam,* பெ. (n.) குறித்த காலத்தில் உள்ள நிலநடு கோட்டுக் கோள்நிலை (வின்.); true or geocentric longitude of a planet at a given time.

*[தற்காலம் + சுத்தம் + புடம்.]*

**தற்காலம்** *tar-kālam,* பெ. (n.) 1. நிகழ்காலம்; present time. "தற்காலமதை நோவனோ" (தாயு. புரிபூரண. 7). 2. குறித்தகாலம் (இ.வ.); exact or precise time of an action or occurrence.

மறுவ. நடப்புக்காலம், நிகழ்காலம்

*[தன் + காலம்]*

**தற்காலமத்திமம்** *tarkāla-mattimam,* பெ. (n.) அழிக்கவியலாத நடுநிலைக்கோள் நிலை; mean longitude at a given time.

*[தற்காலம் + மத்திமம்]*

**தற்காலலவணம்** *tarkāla-lavaṇam,* பெ. (n.) கல்லுப்பு; sea-salt.

**தற்காலி[1]-த்தல்** *tarkāli-,* 4 செ.கு.வி. (v.i.) குறித்த காலத்திற்கான கணக்கீட்டுப் புள்ளிகளைத் திருத்துதல் (வின்.); to correct the data of calculation for a given time.

*[தற்காலம் → தற்காலி-.]*

**தற்காலி[2]-த்தல்** *tarkāli-,* 4 செகுவி. (v.i.) அவ்வப் பொழுது புடம் வைத்தல்; to calcine as much quantity of medicine as urgently required for the time being.

*[தற்காலம் → தற்காலி]*

**தற்காலிகம்** *tarkāligam,* பெ. (n.) காலவரையறைக்குட்பட்டது; temporary.

மறுவ. குறுங்காலிகம்

*[தன் + கால் + இகம். 'இகம்' - சொல்லாக்க ஈறு]*

**தற்காலிகமாக** *tarkāligam-āga,* வி.எ. (adv.) இப்போதைக்கு; for the time being.

*[தன் + கால் + இகம் + ஆக]*

**தற்காவல்** *tar-kāval,* பெ. (n.) 1. தன்னைக் காத்துக் கொள்ளல்; self protection. 2. கற்பு நிலை; chastity.

*[தன் + காவல்]*

**தற்கி-த்தல்** *tarki-,* 4 செ.குன்றாவி. (v.t.) தருக்கம் செய்தல் (வின்.); to logic, to dispute (செ.அக.).

*[தருக்கி → தற்கி]*

**தற்கித்துக்கேள்-தல் (தற்கித்துக்கேட்டல்)** *tarkittu-k-kēḷ-,* 4 செ.குன்றாவி. (v.t.) குறுக்குக் கேள்வி கேட்டல் (யாழ்ப்.); to cross - examine.

*[த. தருக்கம் → வ. தருக்க → தற்க + இத்து + கேள்-. த. தருக்கித்தல் → தற்கித்தல் த. தருக்கித்து + கேட்டல் → வ. தற்கித்துக் கேட்டல். சொற்போரினிடையே, சிந்தனையைத் தூண்டும் வண்ணம், வினவுதல்.]*

**தற்கிழமை** *tar-kiḻamai,* பெ. (n.) ஒரு பொருளுக்கும் அதன் உறுப்புக்கள், திறன்கள், செயல்கள், முதலியவற்றிற்கும் உள்ளது போலப் பிரியாதிருக்கும் தொடர்பு (நன்.300.); inseparable relation, as of an object with its parts, qualities, actions, etc. opp. to piriḏin,-kiḻamai.

*[தன் + கிழமை]*

**தற்கு** *tarku,* பெ. (n.) செருக்கு; pride, haughtiness. "தற்கினான் மடிந்தார்" (பாரத. கிசக. 103).

*[தருக்கு → தற்கு]*

**தற்குணம்** *tar-kuṇam*, பெ. (n.) 1. சிறப்புப் பண்பு (வின்.); peculiarity, special attribute or quality. 2. ஒரு பொருளின் பண்பினை, மற்றொரு பொருள் பற்றுதலைக் கூறும் அணி (மாறனலங். 134); figure of speech in which an object is described as taking over the quality of another object.

**தற்குறி** *taṟkuṟi*, பெ. (n.) 1. எழுதத்தெரியாதவன், தன் கையெழுத்தாக இடும், இடதுகைப் பெருவிரல் அடையாளம்; signature - mark of an illiterate person. 2. எழுதப்படிக்கத் தெரியாதவன்; illiterate person. அவன் ஓர் தற்குறி (உ.வ.).

மறுவ. கைநாட்டுப் பேர்வழி

*[தன் + குறி.]*

**தற்குறிப்பு** *taṟ-kuṟippu*, பெ. (n.) 1. தற்குறிப் பேற்றம் பார்க்க; see *taṟkuṟi-p-pēṟṟam*. 2. தற்குறி (வின்.) இடதுகைப்பெருவிரல் அடையாளம்; impression of left thumb of uneducated people in place of signature.

*[தன் + குறிப்பு]*

**தற்குறிப்பேற்றம்** *taṟ-kuṟi-p-pēṟṟam*, பெ. (n.) பொருளிடத்து இயல்பாக நிகழுந்தன்மையை யொழித்துக் கவிஞன் தன் கருத்தை ஏற்றிச் சொல்லும் அணி (தண்டி. 55); a figure of speech in which the qualities and functions of an object are ascribed to another object entirely different in nature.

*[தன் குறிப்பு + ஏற்றம்]*

**தற்குறிமாட்டெறி¹-தல்** *taṟkuṟi-māṭṭeṟi-*, 2 செ.கு.வி. (v.i.) கல்வியில்லாதவன் கை யெழுத்துக்கு மாறாகத், தன் அடையாளக்குறி இடுதல்; to affix signature-mark, as an illiterate person. "கண்டராதித்தப் பல்லவதரையன் தற்குறிமாட்டெறிந்தேன்" (S. I. I. V, 105).

*[தன்குறி + மாட்டு + எறி-.]*

**தற்குறிமாட்டெறி²-தல்** *taṟ-kuṟi-māṭ-ṭeṟi-*, 2 செ.கு.வி. (v.i.) பெயரெழுதத் தெரியாதவன் கைக்கீறல், இது என்று எழுதிச் சாட்சி போடுதல்; to witness the execution of a document by an illiterate person stating that the mark is that of the executant. "கூத்தன் தற்குறிக்கு தற்குறிமாட் டெறிந்தேன் திருவேங்கட முடையான்" (S.I. I. V, 152).

*[தன்குறி + மாட்டு + எறி-. கைநாட்டுப் பேர்வழியின் கைக்குறியை, உறுதிப் படுத்தும், கையொப்பம்]*

**தற்குறைச்சல்** *taṟ-kuṟaiccal*, பெ. (n.) 1. குறைவு; self-abasement. 2. தேய்வு; diminution in size, reduction.

*[தன் + குறைச்சல்]*

**தற்கூற்று** *taṟ-kūṟṟu*, பெ. (n.) ஆசிரியரோ, கதை மாந்தரோ தானே கூறுவது போன்றது; first person narrative, by the author or by the character.

*[தன் + கூற்று]*

**தற்கெலம்** *taṟ-kelam*, பெ. (n.) வறுமை (அகநி.); poverty.

**தற்கேடர்** *taṟ-kēḍar*, பெ. (n.) அறியாது தமக்கே கேடுவிளைப்பவர்; persons who ruin themselves unknowingly. "தலைகெடுத்தோர் தற்கேடர்தாம்" (திருவருட். அருளது நிலை. 7).

*[தன் + கேடர்]*

**தற்கொண்டான்** *taṟ-koṇḍāṉ*, பெ. (n.) கணவன்; husband. "தற்கொண்டாற் பேணி" (குறள், 56).

*[தன் + கொண்டான்]*

**தற்கொலை** *taṟ-kolai*, பெ. (n.) தன்னுயிரைத் தானே மாய்த்துக் கொள்ளுகை; suicide.

*[தன் + கொலை]*

**தற்கோலம்** *taṟ-kōlam*, பெ. (n.) தம்பூலத்துடன் உட்கொள்ளும் வால்மிளகு; cubebs chewed with betel. "தற்கோல மென்ற களிவாயை" (மறைசை. 56).

*[தன் + கோலம்]*

**தற்சங்கை** *taṟ-caṅgai*, பெ. (n.) தன்னிடத்துள்ள பற்று; self-love. "கருமங் குலத்திறம் தற்சங்கை விட்டு" (மருதூரந். 48).

*[தன் + சங்கை]*

**தற்சணம்** *taṟ-caṇam,* கு.வி.எ. (adv.) உடனே (யாழ்.அக.); at once.

*[தன் + கணம் → க்ஷணம். சணம்.]*

**தற்சமம்** *taṟ-camam,* பெ. (n.) ஒலி மாறு பாடின்றித் தமிழில் வழங்கும், ஆரியச்சொல்; loan - words from Šanskrit occurring in Tamil without any change in sound. "தற்பவந் தற்சமமே பெரும்பான்மையுஞ் சாற்றினமே" (பி.வி.2).

*[தன் + சமம்.]*

**தற்சமயம்**[1] *taṟ-camayam,* பெ. (n.) 1. குறித்த வேளை (வின்.); particular juncture, exact moment required. 2. உற்றவேளை (சங்.அக.); best opportunity, favourable juncture.

**தற்சமயம்**[2] *taṟ-camayam,* கு.வி.எ. (adv.) இப்பொழுது (இ.வ.); at present. (செ.அக.)

*[தன் + சமயம்.]*

**தற்சனி** *taṟ-caṉi,* பெ. (n.) சுட்டுவிரல்; forefinger. "சிறுவிர றன்னி னின்றுந் தற்சனியளவும்" (காசிக. சிவச. அக்கினி. 22).

*[தன் + சனி]*

**தற்சாட்சி** *taṟ-cāṭci,* பெ. (n.) 1. தற்சான்று; self-evidence. 2. பரமாதன் (ஆன்மா); universal soul.

மறுவ. மனச்சான்று

*[தன் + சாட்சி]*

**தற்சாய்வு** *taṟ-cāyvu,* பெ. (n.) அகவயம்; subjectivity.

மறுவ. தன்னிலை

*[தன் + சாய்வு]*

**தற்சார்பு** *taṟ-cārbu,* பெ. (n.) தன் வலிமையில் நிற்கும் நிலை; self-reliance.

*[தன் + சார்பு]*

**தற்சிவம்** *taṟ-śivam,* பெ. (n.) முழுமுதற்கடவுள் (வின்); Absolute Being, as self-existent.

*[தன் + சிவம்]*

**தற்சிறப்புப்பாயிரம்** *taṟ-ciṟappu-p-pāyiram,* பெ. (n.) தெய்வவணக்கமும் செயப்படு பொருளுமுரைத்து ஆசிரியர் நூன்முகப்பிற் கூறும் பாயிரம் (காரிகை, 1, உரை); author's own introduction consisting of verses of invocation and verses containing a statement of the subject - matter of his work.

*[தன் + சிறப்பு + பாயிரம்]*

**தற்சுட்டு** *taṟ-cuṭṭu,* பெ. (n.) தன்னைச் சுட்டுகை; reference to one's self. "தற்சுட்டளபொழி" (நன். 95).

*[தன் + சுட்டு]*

**தற்சுட்டுப்பெயர்** *taṟ-cuṭṭu-p-peyar,* பெ. (n.) தன்னைச் சுட்டும் பெயர்; reflexive pronouns.

*[தன்சுட்டு + தற்சுட்டுப்பெயர். முதற்கண் சுட்டுப் பெயராயிருந்து, காலப் போக்கில் தற்சுட்டுப் பெயராய் மாறிய, தான், தாம் என்னும் படர்க்கை வடிவங்கள் இத் தன்மைத்து எனலாம். அவன் அவள் முதலிய ஐம்பாற் சுட்டுப் பெயர்கள் தோன்றிய பின்பு, சேய்மைச் சுட்டடியினின்று கிளைத்த தான், தாம் என்னும் வடிவங்கள், தற்சுட்டுப் பெயர்களாய் மாறின]*

**தற்செய்-தல்** *taṟ-cey-,* 1 செ.கு.வி. (v.i.) 1. தானே நடைபெறுதல் (யாழ்ப்.); to occur in natural course; to prosper by providence. 2. நிறைவாக நல்குதல்; to be advantageous, profitable. "வாணிபம் அவனுக்குத் தற்செய்யவில்லை" (யாழ்ப்.). 3. தன்னை வலிமையாக்குதல்; to make one's position strong. "வகையறிந்து தற்செய்து தற்காப்ப" (குறள், 878).

*[தன் + செய்-.]*

**தற்செய்கை** *taṟ-ceygai,* பெ. (n.) 1. தன்னைச் செப்பமுடையவனாக்குகை; being self-made; self-culture. "தற்செய்கை சிறந்தன்று" (முது. காஞ். 9). 2. தனதுசெயல்; one's own action. 'தற்செய்கையின்றிப் பிறராற் செய்யப்படும் பொருளை" (நன். 399, மயிலை.).

*[தன் + செய்கை]*

**தற்செயல்விடுப்பு** *taṟ-ceyal-viḍuppu,* பெ. (n.) எதிர்பாராத சூழலில் எடுக்கப்படும் விடுப்பு; casual leave.

மறுவ. நேர்ச்சிவிடுப்பு

*[தற்செயல் + விடுப்பு.]*

**தற்செயலாய்** *taṟ-ceyal-āy,* கு.வி.எ. (adv.) எதிர்பாராமல் (இ.வ.); by chance or accident, providentially.

*[தன் + செயல் + ஆய்.]*

**தற்செருக்கு** *tar-cerukku,* பெ. (n.) தன் முனைப்பு; self-conceit. "துடக்க மிலாதவன் தற்செருக்கு" (இன். நாற். 41).

[தன் + செருக்கு]

**தற்செல்வம்** *tar-celvam,* பெ. (n.) 1. சொந்தப் பொருள் (வின்.); one's own property. 2. வலிமை; strength, power, force.

[தன் + செல்வம்]

**தற்சோதனை** *tar-cōdaṉai,* பெ. (n.) தன்னைத் தான் ஆராய்ந்து கொள்ளல் (வின்.); self-examination.

[தன் + சோதனை]

**தற்பகக்கபம்** *tarpaga-k-kabam,* பெ. (n.) ஐவகைக் கோழைகளிலொன்று (கபங்களி லொன்று); one of the five varieties of phlegm.

**தற்பகம்** *tar-pagam,* பெ. (n.) 1. தற்பகக்கபம் பார்க்க; see *tarpaga-k-kabam.* 2. தலையிலுள்ள கொப்புளங்கள்; vesicles in the head.

**தற்பகன்** *tarpagaṉ,* பெ.(n.) காமவேள், மன்மதன் (யாழ்.அக.); indian cupid (செ.அக.).

**தற்பகீடம்** *tarpa-kīḍam,* பெ. (n.) மூட்டைப் பூச்சி, முகட்டுப்பூச்சி (படுக்கையிற் பற்றுவது) (யாழ்.அக.); bug, as infesting beds.

**தற்பணம்**[1] *tar-paṇam,* பெ. (n.) கண்ணாடி; mirror. "தற்பணந்தா னெப்படியோ தானே விளங்கு மப்படியே" (ஞானவா. ஞானவிண். 28).

**தற்பணம்**[2] *tar-paṇam,* பெ. (n.) 1. யானை முதுகு; elephant's back. 2. முதுகெலும்பு; back - bone.

**தற்பதம்** *tar- padam,* பெ. (n.) 1. முதல் உருவத்தின் இயல்பு (பிரமசொரூபம்); nature of the Supreme Being. "தற்பதத்தைத் தெளியுமட்டும்" (ஞானவா. முமுட். 4). 2. 'தத்' என்னும் சொல் (சி.போ.பா. 9, 3, பக்.393); the secret word 'tat'.

[தன் + பதம்]

**தற்பதி** *tar-padi,* பெ. (n.) பாக்குமரம் (மலை); areca - palm. m.tr., Areca catechu.

**தற்பதிதாளம்** *tarpadi-tāḷam,* பெ. (n.) தற்பதி பார்க்க; see *tarpadi.*

**தற்பம்**[1] *tarpam,* பெ. (n.) 1. முனைப்பு; pride, arrogance. "தீராத் தற்பத்தைத் துடைத்த" (கம்பரா. கும்ப. 27). 2. தூரிசு (யாழ்.அக.); sin. 3. ஏய்ப்பு (சங்.அக.); deceit. 4. மான்மணத்தி (கத்தூரி) (தைலவ.தைல.); musk.

**தற்பம்**[2] *tarpam,* பெ. (n.) 1. துயிலிடம் (பிங்.); bed, sleeping place. 2. மெத்தை (வின்.); mattress, cushion. 3. மனைவி (வின்.); wife. 4. மேனிலை (சது.); upper - room.

**தற்பயம்** *tar-payam,* பெ. (n.) கறுப்புச்சீந்தில்; a black variety of moon creeper.

**தற்பயற்பதெத்தம்** *tar-payarpadettam,* பெ. (n.) வாழைமரம்; plantain tree.

**தற்பரஞ்சுலவணம்** *tar-parañjulavaṇam,* பெ. (n.) வண்ணார்காரத்திலிருந்து பிரித் தெடுக்கப்பட்ட சவுட்டுப்பு; salt extracted from fullers earth.

[தற்பரம் + சுலவணம்]

**தற்பரம்** *tar-param,* பெ. (n.) 1. தற்பரன் பார்க்க; see *tar-paraṉ.* "தற்பரமு மல்லை தனி" (சி.போ. 3:1:1). 2. மேம்பட்டது; that which is highest. "தற்பரம் பொருளே" (திருவிசை. திருமாளி. 1, 3).

[தன் + பரம் → தற்பரம் = அனைத்து நிலையிலும் மேம்பட்ட இறை.]

**தற்பரவுப்பு** *tar-para-v-uppu,* பெ. (n.) பாறை யுப்பு பனியுறைவதால் ஏற்படும் உப்பு; natural salt found on mountain and rocks.

[தன் + பரவுப்பு = பாறையில் பரந்து உறைந்து காணப்படும் உப்பு]

**தற்பரன்**[1] *tar-paraṉ,* பெ. (n.) 1. பரம்பொருள்; Supreme Being. "தணித்தலு மளித்தலுந் தடிந்தோன் றற்பரன்" (ஞானா. 48, 20).

[தன் + பரன் → தற்பரன் = எல்லா வற்றிலும் மேலான பரம்பொருள்]

**தற்பரன்**[2] *tar-paraṉ,* பெ. (n.) வெள்ளைநஞ்சு; white arsenic.

**தற்பரை** *tar-parai,* பெ. (n.) 1. உமையவள் (சூடா.); Umai. 2. ஒரு நொடியில் அறுபதி லொரு பகுதி; the sixteenth part of a second. 3. ஒரு மாத்திரையளவின் முப்பதிலொரு பகுதி

*(வின்.);* the 30th part of a māttirai. 4. ஆதன் தன்னைப் பதியாகக் கருதும் அறிவம் *(உண்மைநெறி. 4, உரை);* the knowledge of the soul identifying itself with God.

**தற்பலம்** *tar-palam,* பெ. (n.) வெள்ளாம்பல் *(மலை);* white Indian water - lily.

**தற்பவம்** *tar-pavam,* பெ. (n.) 1. தமிழில் திரிந்து வழங்கும் வடசொல்; loan-words from Šanskrit occurring in Tamil with altered forms. *"தற்பவந் தற்சமமே பெரும்பான்மையுஞ் சாற்றினமே" (பிவி2).* 2. யாதொரு காரணத்தால் யாதொன்று இறக்கப்பட்டது, அது மீட்டும் அப்பொருள் கரணியமாகப் பிறந்ததெனக் கூறும் அணி *(மாறனலங், 202);* a figure of speech in which an object which has been lost by a certain cause is described as having been restored by the same cause.

**தற்பாடி** *tar-pādi,* பெ. (n.) வானம்பாடி *(சூடா.);* Indian sky lark *(செ.அக.).*

*[தன் + பாடி. தானே பாடிக் கொண்டிருக்கும் புள்]*



**தற்பி-த்தல்** *tar-pi-,* 4 செகுன்றாவி. (v.t.) நீத்தார் நிகழ்வு; to offer water to the manes.

*[திருப்பித்தல் → தற்பித்தல்]*

**தற்பிரியன்** *tar-piriyan,* பெ. (n.) தன்னைப் பெருமையாகப் பேசிக்கொள்பவன் (இவ.); one who is given to self - adulation.

*[தன் + பிரியன்]*

**தற்பின்** *tar-pin,* பெ. (n.) தம்பி *(நிகண்டு.);* younger brother.

*[தன் + பின்]*

**தற்பு**[1] *tarpu,* பெ. (n.) உள்ளநிலைமை; real nature. "தற்பென்னைத் தானறியா னேலும்" *(திவ். இயற். நான்முக77).*

**தற்பு**[2] *tarpu,* பெ. (n.) முனைப்பு; arrogance. "ஆற்றாமையாலே தற்பற்றிருக்கிற வராகையாலே" *(ஈடு. 9:9, ப்ர).*

**தற்புகழ்ச்சி** *tar-pugalcci,* பெ. (n.) தன்னைத் தான் புகழ்ந்துகொள்கை; self-praise, self-complacency *(செ.அக.).*

*[தன் + புகழ்ச்சி]*

**தற்புணர்ச்சி** *tar-punarcci,* பெ. (n.) கைமுட்டி *(வின்.);* onanism.

*[தன் + புணர்ச்சி]*

**தற்புருடசமாசம்** *tarpuruda-šamāšam,* பெ. (n.) வேற்றுமைத்தொகை *(வீரசோ. தொகை. 2, உரை);* a compound in which the first member stands in case-relation to the second.

**தற்புருடம்** *tar-purudam,* பெ. (n.) சிவனாரின் ஐந்துமுகத்துள், கிழக்கு நோக்கியிருப்பது *(சைவச. பொது. 334);* a face of Šivan which is turned eastward, one of five faces of Šivan. *(செ.அக.)*

**தற்புருடன்** *tar-purudan,* பெ. (n.) தற்புருட சமாசம் பார்க்க; see *tar-puruda-šamāšam.* "தற்புருடன் பலநெற் கன்மதாரயம்" *(வீரசோ. தொகை. 2).*

**தற்பெருமை** *tar-perumai,* பெ. (n.) 1. தன்னை, தற்காத்தோரைக்குறித்துப் பெருமை கொள்வது; boasting (of oneself or one own people). 2. தற்புகழ்ச்சி; self-praise.

*[தன் + பெருமை]*

**தற்பொருட்டுப்பொருள்** *tar-poruttu-p-porul,* பெ. (n.) வினைப்பயன் கருத்தாவைச் சார்தலாகிய பொருள்; reflexive meaning. "கொள் என்பது தற்பொருட்டுப் பொருட்கண் வந்த விகுதி" *(சி.போ. பா. 1,1,பக். 56).*

**தற்பொழிவு** *tar-polivu,* பெ. (n.) தன்னலம் *(வின்.);* self-interest.

*[தன் + பொழிவு]*

**தற்பொழுது** *tar̠-pol̤udu,* வி.எ. (adv.) இந்த நேரத்தில்; at present now.

*[தன் + பொழுது]*

**தற்போதம்** *tar̠-pōdam,* பெ. (n.) *1.* தன்னையுங் கடவுளையு மறியும் அறிவு (வின்.); self-knowledge, knowledge of the soul and deity. *2.* இயற்கையிலேயுள்ள முற்றுணர்வு (வின்.); intuitive knowledge, inherent and eternal knowledge, as possessed by the deity. *3.* தன் முனைப்பு; self-conceit, arrogance. "தற்போதம் முனையாதவாறு பரிகரித்து" (சி.போபா. 12, 1. பக். 432). *4.* தன்னினைவு (இ.வ.); consciousness.

*[தன் + போதம்]*

**தற்போதைக்கு** *tar̠-pōdaikku,* வி.எ. (adv.) இந்தச் சமயத்திற்கு, குறுங்காலிகமாக; for the time being. தற்போதைக்கு இந்தப்பணம் போதும் (உ.வ.).

**தற்றெரிசனிகள்** *tar̠-r̠erisanigal̤,* பெ. (n.) தன்னை முற்றும் அறிந்த பெரியார் (நெஞ்சுவிடு. உரை, பக்.14); self-realised sages.

*[தன் + தெரிசனிகள்]*

**தறக்கதி** *tar̠a-k-kadi,* பெ. (n.) அத்தி (சங்.அக.); fig.

**தறடி** *tar̠aḍi,* பெ. (n.) சத்திசாரனை; spreading log weed.

**தறடிகம்** *tar̠aḍigam,* பெ. (n.) மாதுளை (சங்.அக.); pomegranate.

**தறதற-த்தல்** *tar̠a-tar̠a-,* 4 செ.குன்றாவி. (v.i.) தறதற என்று ஒலித்தல் (யாழ்.அக.); to make the sound tar̠a-tar̠a.

**தறதறெனல்** *tar̠a-tar̠enal,* பெ. (n.) வயிற்றுப் போக்கு, காற்றுப்பிரிகையால் ஏற்படும் ஒலிக் குறிப்பு (யாழ்.அக.); onom. expr. signifying the sound caused by the discharge of watery stools, breaking gas, boiling, etc.

*[தறதற + எனல்]*

**தறளி** *tar̠al̤i,* பெ. (n.) *1.* வெண்ணிறமும், ஒன்பது விரலம் (அங்குலம்) நீளமுள்ள, கடல்மீன் வகை; sea - fish, silvery, attaining 9 inches in length, Opisthopterus tartoor. *2.* செம்பு நிறமுங் கருநீலநிறமான வரியுங்கொண்ட கடல்மீன் வகை; sea-fish, light bronze with dark bluish band, Raconda russelliana.

**தறாசன்** *tar̠āšan,* பெ. (n.) கொட்டைப் பாக்கு; areca nut.

**தறி[1]-த்தல்** *tar̠i-,* 4 செகுன்றாவி. (v.t.) *1.* துணித்தல் வெட்டுதல்; to lop, chop off, cut off, cut down. "கையைத் தறித்தான்" (திருவாச. 14:7). *2.* கட்டவிழ்த்தல்; to untie, unfasten. "பூட்டினைத் தறித்துவிட்டு" (விநாயகபு. 51, 17). *3.* கெடுத்தல்; to frustrate, ruin. காரியத்தை முளையிலே தறிக்க வேண்டும். *4.* பிரித்தல்; to separate. "இருவரையும் தறித்துவிட வேண்டும்". *5.* கூலம் புடைத்தல் (யாழ்ப்.); to sift by a winnowing fan.

ம. தறிக்க; க. தறி

**தறி[2]-தல்** *tar̠i-,* 4 செ.குவி. (v.i.) அறுபடுதல்; to be cut off, broken. "வாலுங் காலுந் தறிந்து" (இராமநா. உயுத். 27.).

**தறி[3]** *tar̠i,* பெ. (n.) *1.* வெட்டுகை; cutting down, chopping off. *2.* நடுதறி; wooden post, stake. "தறிசெறி களிறு மஞ்சேன்" (திருவாச. 35:8). *3.* தூண்; pillar, column. "கனகனெற்றுந் தறியிடை" (கந்தபு. வள்ளி. 15). *4.* முளைக்கோல்; peg. "கொடுந்தறிச் சிலம்பி வானூல் வலந்தன தூங்க" (நெடுநல். 58). *5.* நெய்வதற்குரிய தறி; weaver's loom. *6.* பறையடிக்கும் குறுந்தடி; stick for beating the drum. "கொட்டுபறை கொட்டுதறி" (சிவரக.கணபதிவந். 20). *7.* கோடரி வகை (இ.வ.); a kind of axe. *8.* பொத்தான் கொக்கி (இ.வ.); button - hook clasp of thread or metal.

க., ம. தறி

**தறிக்கடமை** *tar̠i-k-kaḍamai,* பெ. (n.) நெசவுத் தறிகட்கு இட்ட வரி (R.T); tax on looms.

ம. தறிக்கடம

*[தறி + கடமை]*

**தறிக்கால்** *tar̠i-k-kāl̤,* பெ. (n.) *1.* கொடிக்காற் கால்வாய் (வின்.); artificial channel in a betel garden. *2.* கோள்நிலைக் கணிப்பில், ஒவ்வோர் ஓரை (இராசி)யையும், நான்கு காலாகப் பகுத்து, இந்த இந்தக் காலுக்கு, இந்த இந்தக்

கோள் (கிரகம்) உரியது என்று, பயன் சொல்லுதற்கு உதவும் உறுப்பு (சூடா. உள். 101); an element in astrological calculation to devide every star into four parts and to ascribe the correct for cast.

*[தறி + கால்.]*

**தறிக்கிடங்கு** *tari-k-kiḍaṅgu*, பெ. (n.) நெசவுத் தறியின் கீழுள்ள பள்ளம் (யாழ்.அக.); weaver's loom-pit.

*[தறி + கிடங்கு]*

**தறிக்கிடை** *tari-k-kiḍai*, பெ. (n.) நெசவுத் தறியில் புதிய பாவைப் பிணைப்பதற்காக அச்சில் சுற்றியிருக்கும் மிகுதிநூல் (இ.வ.); thrum in a weaver's loom, fringe of threads in a loom.

*[தறி + கிடை]*

**தறிகிடங்கு** *tari-kiḍaṅgu*, பெ. (n.) கரும்பின் ஆலைக்கிடங்கு (யாழ்.அக.); place where juice is expressed from sugarcane.

*[தறி + கிடங்கு]*

**தறிகுற்றி** *tari-kuṟṟi*, பெ. (n.) வயலுக்கு எருவாக விடும் தழைகளைத் தறிக்க, நாட்டும் கருவி (நாஞ்.); a log of wood planted to identify the area over which green manure is chopped.

**தறிகெட்டு** *tari-geṭṭu*, வி.எ. (adv.) கட்டுப்பாடும் ஒழுங்குமில்லாத; uncontrollable; indiscipline. கோயில்யானை தறிகெட்டு ஓடியது (இக். வ.).

*[தறி + கெட்டு]*

**தறிகை**[1] *tari-gai*, பெ. (n.) 1. வெட்டப்படுகை (வின்.); being cut down. 2. கட்டுத்தறி (வின்.); stake, post.

*[தறி[1] → தறிகை.]*

**தறிகை**[2] *tari-gai*, பெ. (n.) 1. கோடரி; a kind of axe. "மழு வென்றது வாய்ச்சியை; தறிகையுமாம்" (புறநா. 206, உரை). 2. உளி (சூடா.); chisel.

ம. தறிக

*[தறி[2] → தறிகை.]*

**தறிச்சன்** *tari-c-caṉ*, பெ. (n.) எருக்கு (சங்.அக.); madar.

**தறிதலை** *tari-dalai*, பெ. (n.) அடங்காதவன் (இ.வ.); impudent, unruly person.

மறுவ. தறுதலை, முரடன்

*[தறுதலை → தறிதலை]*

**தறிதளை** *tari-taḷai*, பெ. (n.) தறிக்கடமை (T.A.S. IV, 91) பார்க்க; see *tari-k-kaḍamai.*

மறுவ. தறிக்காசு, தறிப்பாட்டம்.

*[தறி + தளை]*

**தறிப்புடவை** *tari-p-puḍavai*, பெ. (n.) 1. பழைய நெசவுவரி; tax on looms. "தறிப் புடவையும் வேலிக்காசும்" (S.I.I. iii, 115). 2. தறியில் நெய்த புடவை; saree woven in a loom.

ம. தறிப்புடவ

*[தறி + புடவை]*

**தறிபடுகு** *tari-paḍugu*, பெ. (n.) தறியின் நெட்டிழை (C.G.); warp of a loom.

தெ. படுகு

*[தறி + படுகு]*

**தறிபோடு-தல்** *tari-pōḍu-*, 20 செ.குவி. (v.i.) நெசவுத்தறியில் நெய்ய ஏற்பாடு செய்தல் (வின்.); to arrange to weave cloth in a loom.

*[தறி + போடு-.]*

**தறிமரம்** *tari-maram*, பெ. (n.) நெசவுத்தறியில் ஆடை சுருட்டும் மரம் (இ.வ.); web beam, wooden revolving bar round which the woven cloth is wound.

ம. தறிமரம்

*[தறி + மரம்]*



**தறியடி-த்தல்** *tari-y-adi-*, 4 செ.கு.வி. (v.i.) கைத்தறியை இயக்கித் துணியை நெயவு செய்தல்; to weave the handloom.

*[தறி + அடி-.]*

**தறியறை-தல்** *tari-y-arai-*, 2 செ.கு.வி. (v.i.) முளையறைந்து நாட்டுதல் (இ.வ.); to drive down stakes.

*[தறி + அறை-.]*

**தறியாணி** *tari-y-āṇi*, பெ. (n.) வெட்டிரும்பு (வின்.); small chisel for cutting iron.

*[தறி + ஆணி]*

**தறியிறை** *tari-y-irai*, பெ. (n.) தறிக்கடமை பார்க்க; see *tari-k-kaḍamai*. "தறியிறை தட்டார் பாட்டம்" (கல்.).

மறுவ. தறிக்காசு; தறிப்பாட்டம்

*[தறி + இறை. ஆடை நெய்வோர் அல்லது, துன்னற்காரர் இறுக்கும் இறை]*

**தறிவலை** *tari-valai*, பெ. (n.) நடுதறியுடையதாய், மான்பிடிக்க உதவும் வலை; a kind of net for trapping deer. "தறிவலை மானிற்பட்டார்" (சீவக. 2768).

*[தறி + வலை]*

**தறிவாய்** *tari-vāy*, பெ. (n.) வெட்டுவாய் (யாழ்.அக.); lopped side; cut edge.

*[தறி + வாய்]*

**தறிவிலைவில்-தல்** (தறிவிலைவிற்றல்) *tari-vilai-vil-*, 14 செ.கு.வி. (v.i.) 1. பனைச்சட்டம் விற்றல் (யாழ்ப்.); to sell palmyra timber. 2. நெய்த துணிகளை, கூடுதல் விலை சேர்க்காமல், அடக்கவிலையிலேயே விற்றல்; to sell the clothes at the cost price from the loom.

*[தறிவிலை + வில்-.]*

**தறு-தல்** *taru-*, 4 செ.குன்றாவி. (v.i.) 1. இறுக உடுத்துதல்; to wear tightly, as a cloth. "தெய்வ மடிதற்றுத் தான்முந் துறும்" (குறள், 1023). 2. கட்டுதல்; to fasten. "தற்றுறு பூமுடி தாழ" (கந்தபு. நகர்பு. 68).

ம. தறுக.

*[தன் → தற → தறு-.]*

**தறுக்கணி-த்தல்** *taru-k-kaṇi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. பழங் கன்றிப்போதல்; to be hard, as fruits not naturally matured or knots in fruits caused by injury. 2. புண்காய்த்துப் போதல்; to become hard, as some boils or the flesh after a blow. 3. உணவுப் பொருளிறுகுதல்; to grow hard, as vegetables in curry by defective cooking. 4. நிலைத்தல்; to continue, to stay, as in a place.

*[தள் → தறு + கண் → தறுக்கணி-.]*

**தறுகட்பம்** *taru-gaṭpam*, பெ. (n.) தறுகண், அஞ்சாமை, வீரம்; fearlessness, bravery. "தறுகட்ப மில்லார்பின் சென்று நிலை" (அறநெறி. 102).

*[தள் → தறு + கண் → தறுகட்பம்]*

**தறுகண்** *taru-gaṇ*, பெ. (n.) 1. கொடுமை; cruelty, hard-heartedness. "தறுகட் டகையரிமா" (பு.வெ. 7,20). 2. அஞ்சாமையாகிய வீரம்; valour, bravery, fearlessness. "கல்வி தறுகண் ணிசைமை கொடையென" (தொல். பொருள். 257). 3. கொல்லுகை; slaughtering. "தறுகட் பூட்கை" (சிறுபாண். 141).

மறுவ. தறுகண்மை, தறுகட்பம்

*[தறு → தறுகண்]*

**தறுகண்ணன்** *taru-kaṇṇaṉ*, பெ. (n.) 1. வன்கண்மையுள்ளவன்; cruel, hard-hearted person. "எரியுமிழ் தறுகணர்" (கம்பரா. அதிகாயன். 138). (வின்.); 2. வீரன்; soldier, hero. "தான்படை திண்டாத் தறுகண்ணன்" (பு.வெ.3,20).

**தறுகண்மை** *taru-kaṇmai*, பெ. (n.) தறுகண் (பு.வெ.3,20, கொளு.) பார்க்க; see *taru-gaṇ*.

*[தறுகண் → தறுகண்மை "மை" பண்புப் பெயர் விகுதி]*

**தறுகணாட்டி** *tarugaṇ-āṭṭi*, பெ. (n.) தறுகணி பார்க்க; see *taru-gaṇi*.

*[தறுகண் + ஆட்டி. "ஆட்டி" பெண்பாலீறு. ஒ.நோ. திருவாட்டி, பெருமாட்டி, மணவாட்டி, சீமாட்டி]*

**தறுகணாளன்** *taru-kaṇ-āḷaṉ*, பெ. (n.) தறுகண்ணன் பார்க்க; see *taru-gaṇṇaṉ*. "தறுகணாளர் கண்டனர்" (கம்பரா. நாகபாச. 174). "தானைத் தறுகணாளர்" (திவா.).

*[தறுகண் + ஆளன். "ஆளன்" ஆண்பாலீறு ஒ.நோ. மணவாளன், பேராளன், திருவாளன்]*

**தறுகணி** *taṟu-gaṇi*, பெ. (n.) வன்கண்மை யுள்ளவள்; cruel, hard-hearted woman. 'தமரினுள்ளவள்போற் சார்ந்த தறுகணி'' *(விநாயகபு. 80, 92).*

மறுவ. தறுகணாட்டி

*[தறுகண் → தறுகணி. "இ" பெண்பாலீறு]*

**தறுகு-தல்** *taṟugu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. தடைப்படுதல்; to be hindered, checked. "அப்பாற்றறுகி" *(பணவிடு. 242).* 2. தவறுதல் (வின்.); to be frustrated; to fail. 3. திக்கிப் பேசுதல்; to stammer in speaking. "அவன் தறுகித் தறுகிப் பேசுகிறான்." 4. காலந் தாழ்த்துதல்; to linger, loiter. "தறுகி நின்றா னென்மேற் றயவால்" *(விறலிவிடு).*

*[தறு → தறுகு-.]*

**தறுகுறும்பன்** *taṟu-guṟumbaṉ*, பெ. (n.) 1. முரடன்; rough, rude, uncivil person, rustic. 2. கெட்டவன்; wicked fellow; miscreant.

*[தறுகுறும்பு → தறுகுறும்பன். "அன்" ஆண்பாலீறு]*

**தறுகுறும்பு** *taṟu-guṟumbu*, பெ. (n.) 1. முருட்டுத் தன்மை; roughness of disposition, rusticity. 2. தீம்பு; mischief.

ம. தறுகுறும்பு

*[தறு + குறும்பு]*

**தறுசு** *taṟušu*, பெ. (n.) இழைக்குளிர்த்தி (யாழ்அக.); fine texture of cloth.

*[தறு → தறுசு]*

**தறுதம்பு** *taṟudambu*, பெ. (n.) பழைய வரிவகை (S.I.I. V, 374); an ancient tax.

*[தறு + தம்பு → தறுதம்பு]*

**தறுதலை** *taṟu-dalai*, பெ.(n.) தறிதலை பார்க்க; see *taṟi-dalai*. "தாயில்லாத பிள்ளை தறுதலை" *(சங். அக.).*

ம. தறுதல

*[தறி' → தறு + தலை = தறுதலை]*

**தறுதலையன்** *taṟu-talaiyaṉ*, பெ. (n.) தறிதலை (வின்.) பார்க்க; see *taṟi-dalai*.

மறுவ. வெட்கமில்லாதவன், அடங்காதவன், நாணமற்றவன், முரடன்

ம. தறுதலக்காரன்

*[தறு + தலை → தறுதலையன். "அன்" ஆண் பாலீறு. எவர்க்குமடங்காது, இடம், பொருள், ஏவலெனும், இம் மூன்றனுள், ஒன்றிலும் நிலைகொள்ளாது தன், மனம்போன போக்கில், நாணேதுமின்றிப் பணியாற்றும் முரடன்]*

**தறுதும்பன்** *taṟu-tumbaṉ*, பெ. (n.) தறிதலை (வின்.) பார்க்க; see *taṟi-dalai*.

*[தறு + தும்பன். முரட்டுத்தனம் நிறைந்து திகழும் நாட்டுப்புறத்தான்.]*

**தறுதும்பு** *taṟu-dumbu*, பெ. (n.) தறுகுறும்பு (யாழ்அக.) பார்க்க; see *taṟu-guṟumbu*.

*[தறு + தும்பு]*

**தறும்படி-த்தல்** *taṟumpaḍi-*, 4 செ.கு.வி. (v.i.) கால்வாயில் நீரைப் பிரித்தற்கு, அணையிடுதல் (வின்.); to build a dam for diverting water in a canal.

*[தறும்பு + அடி-.]*

**தறும்பன்** *taṟumbaṉ*, பெ. (n.) தன்முனைப்பாளன் (நீலகேசி, 282, உரை); proud person.

மறுவ. இறுமாப்புக்காரன், செருக்குமிக்கவன், தன்மதியாளன், வீம்புப்பேர்வழி, தறுக்காளி

*[தறு → தறும்பு → தறும்பன். நான், எனதென்னும், இறுமாப்புடன் செயலாற்று பவன்; எப் பணியினையும் அகந்தையுடன் ஆற்றுபவன்]*

**தறும்பு** *taṟumbu*, பெ. (n.) 1. ஒருவழியாய்ச் செல்லும்நீரை வேறுவழியிற் செலுத்தக் கட்டும் அணை (வின்.); dam to stop a stream and turn it in a different direction. 2. முளை (இ.வ.); peg.

க. தறும்பு.

*[தறு → தறும்பு]*

**தறுவாய்** *taṟu-vāy*, பெ.(n.) 1. உற்றநேரம், வாய்ப்பு, தக்கவேளை; occasion, particular juncture, rare opportunity. 2. அரசியல் திருப்பு மையம்; crisis. 3. பருவம்; stage, as in life. "தன்னை யறியுந் தறுவாயான்" (காளத். உலா, 290).

தெ. தருவாய; க. தறுவாய்

மறுவ. உற்றகாலம், உரியநேரம், ஏற்ற பொழுது; தக்கபருவம், தக்ககாலம்; தக்கநேரம்

*[தறு + வாய் → தறுவாய் = தக்கநேரம்]*

**தறுவி**[1] *taṟuvi*, பெ. (n.) தரு; ladle (செ.அக.)

**தறுவி**[2] *taṟuvi*, பெ. (n.) மருந்து பூசுகருவி; an instrument for applying medicine.

**தறுவு-தல்** *taṟuvu-*, 5 செ.குவி. (v.i.) குறைதல் (யாழ்.அக.); to diminish.

*[தறு → தறுவு-.]*

**தறுளுறுதி** *taṟuḷuṟudi*, பெ. (n.) நிலவேம்பு; ground-neem.

**தறுனல்** *taṟuṉal*, பெ. (n.) கப்பற்பாயின் மேற் கட்டையைக் கட்டுங்கயிறு; vang, rope to steady the peak of a gaff.

*[தறை → தறு → தறுனல்.]*

**தறை**[1]**-தல்** *taṟai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஆணியை அடித்து இறுக்குதல் (யாழ்ப்.); to beat down flat; to hammer, as the head of a nail or the end of a bolt after fixing on the nut; to rivet. 2. ஆணியால் தைத்தல் (இவ.); to fasten two beams or rafters together by hammering in spikes. 3. குற்றப்படுத்துதல் (யாழ்ப்.); to make an accusation, commonly false.

*[தட்டு → தடை → தறை-.]*

**தறை**[2]**-தல்** *taṟai-*, 4 செ.கு.வி. (v.i.) தட்டையாதல்; to become flat; to be flattened. "நிரத் தறைந்த தலையும்" (கலித். 65).

*[தட்டு → (தடை) → தறை (மு.தா. 121)]*

**தறை**[3] *taṟai*, பெ. (n.) தரை[3] பார்க்க; see *tarai*[3] land, ground. "பிள்ளைகள் தறையிற் கிறிடில்" (கம்பரா. சிறப். 10).

*[தரை[3] → தறை]*

**தறைமலர்** *taṟai-malar*, பெ. (n.) ஆணியின் மரை (வின்.); nut of a bolt.

*[தரை → தறை + மலர். ஆணியின் தலைப் பகுதி]*

**தறையடி-த்தல்** *taṟai-y-aḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) நிலத்தில் அசையாமல் இருத்துதல்; to be nailed down, fixed to a place. "தறையடித்தது போற் நீராத் தகையவித்திசைகடாங்குங் கறையடிக்கு" (கம்பரா. வாலிவ. 143.).

*[தறை + அடி-.]*

**தறையாணி** *taṟai-y-āṇi*, பெ. (n.) ஆணிவகை (வின்.); a kind of spike.

*[தறை + ஆணி]*

**தன்** *taṉ*, பெ. (n.) தான் என்னும் படர்க்கைப் பகரப்பெயர், வேற்றுமையுருபை ஏற்கு மிடத்துப்பெறுந் திரிபு; oblique case-form of the pronoun tāṉ.

*[தான் → தன்]*

**தன்கடையே** *taṉ-kaḍai-yē*, கு.வி.எ. (adv.) தன்னடைவே; of itself, of its own accord, voluntarily. "அதைத் தன்கடையே அறுந்துவிழச் செய்வாரோ" (குருபரம். 62).

*[தன் + கடையே]*

**தன்காரியக்குட்டி** *taṉ-kāriya-k-kuṭṭi*, பெ. (n.) தன் செயலிலேயே கண்ணாயிருப்பவன் (நாஞ்.); extremely selfish person.

மறுவ. தன்காரியப் புலி, தன்பாடாளன்

*[தன் + காரியம் + குட்டி]*

**தன்காரியப்புலி** *taṉ-kāriya-p-puli*, பெ. (n.) தன் செயலிலேயே ஈடுபட்டவன் (வின்.); extremely selfish person.

*[தன்காரியம் + புலி]*

**தன்காரியம்** *taṉ-kāriyam*, பெ. (n.) தன் சொந்தச் செயல் (வின்.); one's own pursuit, self-interest.

மறுவ. தன்ஈடுபாடு, தன்தொழில்

*[தன் + காரியம்]*

**தன்காலம்** *taṉ-kālam*, பெ. (n.) 1. உரியகாலம் (யாழ்.அக.); proper season or time. 2. கள்

மிகுதியாகக் கிடைக்குங் காலம் (நெல்லை); period when toddy is available in plenty.

மறுவ. தக்கநேரம், தக்கபருவம்

[தன் + காலம்]

**தன்கு** *tangu,* பெ. (n.) மகிழ்ச்சி (இலக்.அக.); hilarity, mirth.

[தனகு → தன்கு]

**தன்குலம்வெட்டி** *tan-kulam-vetti,* பெ. (n.) (தன் குலத்தை அழிப்பது) கோடரிக்காம்பு (வின்.); handle of an axe, as destroying its own family.

[தன்குலம் + வெட்டி, தன் இனம் அழியத் தானே கரணியமாக விருப்பவன்.]

**தன்குறியிடுதல்** *tan-kuri-idudal,* பெ. (n.) தானே குறியிட்டாளுதலாகிய உத்திவகை (மாறனலங். பாயி. 25); coining technical names, a utti.

[தன்குறி + இடுதல்]

**தன்குறிவழக்கமிகவெடுத்துரைத்தல்** *tan-kuri-valakkamiga-v-edutturaittal,* பெ. (n.) முப்பத்திரண்டுத்திகளில், தான் உண்டாக்கிய குறியீட்டைத் தன் நூலில் மிகுதியும், எடுத்தாளும் தந்திர உத்தி (நன். 14); author's constant use of technical terms and phrases coined by himself, one of 32 utti.

[தன்குறி + வழக்கம் + மிக + எடுத்துரைத்தல்]

**தன்கொண்டி** *tan-kondi,* பெ. (n.) தன்கருத்து, தன்விருப்பம் (வின்.); selfwill.

மறுவ. தன்னிட்டம்., தன் ஈடுபாடு, விடாப் பிடி

[தன் + கொண்டி. ஒருவன் தான் கொண்ட கொள்கையினையோ அல்லது உளங் கொண்ட கருத்தினையோ, விடாப் பிடியாக மேற்கொள்ளல்]

**தன்கைக்கொலை** *tankai-k-kolai,* பெ. (n.) தற்கொலை பார்க்க; see *tar-kolai.*

[தன் + கை + கொலை]

**தன்கோட்கூறல்** *tan-kōt-kūral,* பெ. (n.) முன்னூலாசிரியர் கூறியவாறு கூறாது தன்கோட்பாட்டாற் கூறுகை (மாறனலங். பாயி. 25); enunciating new doctrines professed by oneself.

[தன்கோள் + கூறல்]

**தன்சோதனை** *tan-šōdanai,* பெ. (n.) தன்தேர்வு; self examination.

[தன் + சோதனை]

**தன்தரை(தன்றரை)** *tan-tarai,* பெ. (n.) 1. வெறுந்தரை; bare-ground. கோட்டையைத் தன்தரையாக இடித்து விட்டார்கள் (உ.வ.). 2. போடு மண்ணின்றி இயற்கையான தரை (நெல்லை); natural earth-surface.

[தன் + தரை. இயல்பான வெறுந்தரை]

**தன்தரையாக்கு-தல் (தன்றரையாக்கு-தல்)** *tan-tarai-y-ākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) தரை மட்டமாக இடித்தல்; to raze to the ground, demolish completely, as a building. கட்டடத்தைத் தன் தரையாக்கி விட்டார்கள் (உ.வ.).

[தன்தரை + ஆக்கு]

**தன்தரையில்நில்-தல்(தன்றரையினிற்றல்)** *tan-taraiyil-nil-,* 14 செ.குவி. (v.i.) வறுமைப் படுதல் (வெறுந்தரையில் நிற்றல்); lit., to stand on bare ground, to suffer from dire want; to be destitute.

[தன்தரையில் + நில்-.]

**தன்படியே** *tan-padi-y-ē,* கு.வி.எ. (adv.) 1. தானாகவே; of its own accord. 2. தன் விருப்பப்படி; according to one's own in clination. அவன் தன்படியே திரிகிறான் (உ.வ.).

[தன் + படியே]

**தன்படுவன்** *tan-paduvan,* பெ. (n.) தானாக உண்டாம் விளையுப்பு (யாழ்ப்.); naturally formed salt.

மறுவ. இயற்கையுப்பு

[தன் + படுவன்]

**தன்பாசனம்** *tan-pāšanam,* பெ. (n.) தானாகப் பாயும் நீர்ப்பாய்ச்சல்; direct flow of water without baling.

மறுவ. முதல்மடைப் பாசனம், தலைவாய்க்கால் பாசனம்

[தன் + பாசனம்]

*தன்பாசனம் : ஆற்றுப்படுகையிலோ அல்லது தலைவாய்க்காலில் உள்ள, தலை மதகுப்படுகையிலோ, இயற்கையாக அமைந்துள்ள, பாசனநிலம்.*

**தன்பாட்டில்** *taṉ-pāṭṭil,* கு.வி.எ. (adv.) 1. **தானாகவே;** of its own accord. *காரியம் தன்பாட்டிலே நடக்கிறது.* 2. **பிறர்செயலில் தலையிடாமல்;** without interfering with others. *தன்பாட்டிலே போகிறான் (உ.வ.).*

*[தன் + பாட்டில்]*

**தன்பாடு** *taṉ-pāḍu,* பெ. (n.) **தன்செயல்;** one's own business. *அவன் தன்பாட்டைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் (உ.வ.). தன்பாடே பெரும்பாடாக இருக்கும்போது அவன் யாருக்கு உதவ முடியும்? (உ.வ.).*

க. தன்பாடு

**மறுவ.** தன்காரியப்புலி, தன்காரியக்குட்டி

*[தன் + பாடு = தனது சொந்தப்பணி]*

**தன்பாலிருத்தல்** *taṉ-pāl-iruttal,* பெ. (n.) **சிவபதம் நான்கனுள் ஒன்றாகிய அண்மையியம்** *(பிங்.);* being near to Šivam, one of four Šivapadam.

*[தம்பால் + இருத்தல்]*

**தன்பிடி** *taṉ-piḍi,* பெ. (n.) **தன்கொள்கை** *(வின்.);* one's own doctrine or opinion.

**மறுவ.** கொள்கைப்பிடிப்பு

*[தன் + பிடி]*

**தன்பேறு** *taṉ-pēṟu,* பெ. (n.) **தன்னீட்டம்;** one's own benefit, self-interest. "தன்பேறாக உபகரிக்கை" *(ஈடு 2. 3:4).*

**மறுவ.** தன்வரும்படி

*[தன் + பேறு. தன் சொந்த வரும்படி ஒன்றிலேயே, தன்னார்வத்துடன் கண்ணுங் கருத்துமாயிருக்கை.]*

**தன்பொருட்டனுமானம்** *taṉ-poruṭ-ṭaṉumāṉam,* பெ. (n.) **தன்பொருட்டனு மிதிக்குக் காரணமாயுள்ளது** (தருக்கசங். நீலகண். 97) ; the minor term in taṉporuṭṭaṉumidi.

*[தன்பொருட்டு + அனுமானம்]*

**தன்பொருட்டனுமிதி** *taṉ-poruṭṭaṉu-midi,* பெ. (n.) **கருத்தளவையால் தானேநேரில் பார்த்துக் கொள்ளும் பொறிக்காட்சி** *(தருக்கசங். நீலகண். 97);* inference from one's own perception, opp. to piṟarporuṭṭaṉumidi.

*[தன்பொருட்டு + அனுமிதி]*

**தன்பொறுப்பு** *taṉ-poṟuppu,* பெ. (n.) **தன்னதாக ஏற்றுக் கொள்ளும் கடமை** *(வின்.);* personal responsibility.

*[தன் + பொறுப்பு]*

**தன்மணம்** *taṉ-maṇam,* பெ. (n.) **திப்பிலி வேர்;** root of long-pepper.

*[தன் + மணம்]*

**தன்மணி** *taṉ-maṇi,* பெ. (n.) **அற எண்ணம் உள்ளவன்** *(வின்.);* charitable person, benevolent person.

*[தன் + மணி]*

**தன்மயமாக்கு-தல்** *taṉ-mayam-ākku-,* 5 செ. குன்றாவி. (v.t.) **பிறரை தன் வயப்படுத்துதல்;** to transform others to one's states in structure, quality etc., as a changes of the worn into a wasp. "தன்மயமாக்கிய சத்தியச்சோதி" *(அருட்பா. vi, ஆனந்தக் களிப்பு, 2, 27).*

*[தன்வயம் → தன்மயம் + ஆக்கு-.]*

**தன்மலைக்கரசி** *taṉ-malai-karaši,* பெ. (n.) **(சாலக் கிராமம்) தெய்வத் தன்மையுள்ள கல்;** a kind of holy stone of gold colour. *தன் மலைக்கரசி திருமாலிய அன்பர்களால், போற்றிப் பூசனை செய்யப்படும், தெய்வத்தன்மை வாய்ந்த பொன்னிறக் கல்.*

*[தன் + மலைக்கரசி.]*

**தன்மவனிதம்** *taṉma-vaṉidam,* பெ. (n.) **இணைவிழைச்சு (மேக)நோய் நீக்கும் மூலிகை;** a plant capable of curing radially all kinds of venereal disease.

**தன்மவைபாதம்** *taṉmavai-pādam,* பெ. (n.) **அவுரி;** indigo-plant.

**தன்மன்** *taṉmaṉ,* பெ. (n.) **தன்மணம் பார்க்க;** see *taṉ-maṇam.*

**தன்மனை** *tan-manai,* பெ. (n.) ஓர் எண் *(கணக்கதி);* a number.

**தன்மாத்திரம்** *tanmāttiram,* பெ. (n.) தனக்குள்ள குணம் வேறுபடாமை; that in which its own peculiar property resides without change.

**தன்மாத்திரை** *tan-māttirai,* பெ. (n.) *1.* பூதங்கள், தொடக்க நிலையில் உலகம் உருவாகக் கரணியமான நுண்மங்கள்; the subtle form of primordial elements. *2.* ஐம்பூதம் ஐம்பொறியாக மாறுகை; the five elements being resolved into rudimentary elements of the five senses viz., šuvai, oḷi, ūṟu, ōšai, nāṟṟam. *3.* ஐம்பொறிகளின் மூலம்; the five principles or perceptions or grounds of knowledge by means of senses. *4.* புலனுணர்ச்சி; sensibles.

*[தன் + மாத்திரை]*

**தன்மானம்** *tan-mānam,* பெ. (n.) தன்மதிப்பு; self-respect; self-dignity. தன் மானத்தை இழந்து ஊழியம், பார்ப்பதா? *(உ.வ.).*

*[தன் + மானம்]*

**தன்மானி** *tan-māni,* பெ. (n.) வறுமை; poverty, misery.

**தன்முனைப்பு** *tan-munaippu,* பெ. (n.) 'தான்' என்னும் உணர்வு, செருக்கு; ego.

மறுவ. ஆணவம்

*[தான் → தன் + முனைப்பு]*

**தன்மூப்பானவன்** *tan-mūppānavan,* பெ. (n.) *1.* இறுமாப்புள்ள இளைஞன்; a presumptuous, arrogant youth; and upstart. *2.* தன் விருப்பப்படி நடப்பவன்; one who acts on his own wish.

*[தன்மூப்பு + ஆனவன்]*

தானே பெரியன் என்னும் செருக்கில், தகாத் துணிவுடன், தன் மனம்போன போக்கில், நடப்பவன்.

**தன்மூப்பு** *tan-mūppu,* பெ. (n.) *1.* இறுமாப்பு; youthful arrogance, presumption, self-will, self-assertion. *2.* தன் விருப்பம்; state of having one's own way. தன் மூப்பாய் நடக்கிறவன் *(இவ.).*

மறுவ. தன் விருப்பு

*[தன் + மூப்பு]*

**தன்மூப்புச்செலுத்து-தல்** *tan-mūppu-c-celuttu-* 5 செ.குவி. (v.t.) *1.* பொறுப்பேற்றுக் கொண்டு நடத்தல்; to act on one's own responsibility. *2.* மேலான்மை செலுத்துதல் (நெல்லை); to lord it over.

*[தன்மூப்பு + செலுத்து-.]*

**தன்மூலம்** *tan-mūlam,* பெ. (n.) *1.* திப்பிலிக் கட்டை (தைலவ. தைல.); stem of long-pepper. *2.* திப்பிலி வேர்; root of long-pepper.

**தன்மேம்பாட்டுரை** *tan-mēmpāṭṭurai,* பெ. (n.) தற்புகழ்ச்சியணி; figure of speech in which a person praises himself. "தான்றற் புகழ்வது தன்மேம் பாட்டுரை" *(தண்டி. 70).*

*[தன் + மேம்பாடு + உரை.]*

**தன்மை**[1] *tanmai,* பெ. (n.) *1.* இயல்பு; nature, essence, property, inherent or abstract quality. இலக்கியத் தன்மை நிறைந்த நூல் *(உ.வ.).* மனிதத் தன்மையே இல்லாதவன் *(உ.வ.).* "தவ்வென்னுந் தன்மை யிழந்து" *(குறள், 1144).* *2.* சிறப்பியல்பு, பண்பு (பிங்.); character. *3.* நிலைமை; state, condition, position, circumstances. "வருதற் கொத்த தன்மை" *(கம்பரா. சூர்ப்ப. 42).* *4.* முறை (வின்.); manner, method, kind, description, order. *5.* பெருமை (பிங்.); greatness. *6.* ஆற்றல் (நன்.பாயி.மயிலை.); power. *7.* நன்மை (பிங்.); goodness. *8.* அழகு (சூடா.); beauty. *9.* மெய்ம்மை; fact, truth, realisation.

**தன்மை**[2] *tanmai,* பெ. (n.) மூவிடங்களுள் தன்னைக் குறிக்கும் இடம்; denoting the first person one of among the mūviḍam. "பன்மை யுரைக்குந் தன்மைச் சொல்லே" *(தொல்.சொல். 204).*

*[தன்மை = பேசுபவர், கேட்பவர், பேசப்படுபவர் ஆகிய மூன்று இடங்களுள் பேசுபவரைக் குறிப்பது. ஏ என்பது உயர்ச்சி குறித்தலால், இயல்பாக மாந்தனுக்குள்ள நான் என்னும் செருக்கு அல்லது தன்னலம் பற்றி, அதை அடியாகக் கொண்டு தன்மைப்பெயர்கள் தோன்றியிருக்கலாம் (த.வ. 134)]*

**தன்மைநவிற்சி** *tanmai-naviṟci,* பெ. (n.) பொருள் முதலியவற்றை இயற்கையில்

உள்ளவாறே கூறும் அணி (அணியி. 93); figure of speech which consists in describing an object as it is.

*[தன்மை + நவிற்சி]*

**தன்மைமிகுத்துரை** *tanmai-migutturai,* பெ. (n.) ஒரு பொருளின் இயல்பை மிகுத்துக் கூறுகை; exaggration of the nature of an object. "தொகையே தொடர்ச்சி தன்மைமிகுத்துரை" (மணிமே. 30, 192).

*[தன்மை + மிகுத்துரை]*

**தன்மையெழுத்து** *tanmai-y-eluttu,* பெ. (n.) எழுத்துவகை (யாப்.வி. 536); a kind of letter.

*[தன்மை + எழுத்து]*

**தன்வசப்படுத்து-தல்** *tan-vaša-p-paḍuttu,* 5 செகுன்றாவி. (v.t.) தன்கைப்படுத்துதல்; to bring under one's control; to appropriate.

மறுவ. தனதாக்குதல்

*[தன் + வசப்படுத்து-. வயப்படுத்து → வசப்படுத்து]*

**தன்வயத்தனாதல்** *tan-vayattan-ādal,* பெ. (n.) சிவனெண்குணத்துள், ஈடுபாடு கொள்ளும் தன்மை (குறள். 9, உரை); being self-dependent, one of eight qualities of Šivan.

**தன்வயம்** *tan-vayam,* பெ. (n.) தன்வயத் தனாதல் (சூடா.) பார்க்க; see *tan-vayattan-ādal.*

**தன்வயாதம்** *tan-vayādam,* பெ. (n.) சிறுகாஞ்சொறி (மலை.); small climbing nettle.

**தன்வழி** *tan-vali,* பெ. (n.) 1. தன்மரபு (வின்.); one's parentage, ancestry, family. 2. தன் விருப்பம்; one's own will and pleasure.

*[தன் + வழி]*

**தன்வினை** *tan-vinai,* பெ. (n.) 1. தனதுசெயல்; one's action. 2. ஊழ்; fate. தன்வினை தன்னைச் சுடும் (வின்.). 3. இயற்றுதற் கருத்தாவின் வினையை உணர்த்துஞ் சொல் (புறநா. 59, உரை); verb denoting the direct action of an agent, opp. to pira-vinai.

*[தன் + வினை]*

**தன்வேதனைக்காட்சி** *tan-vēdanai-k-kāṭci,* பெ. (n.) தன்னையறியாமல் வரும் இன்பத் துன்பங்களை ஆதனறிவால் அறிகை; self-perception of pleasure and pain brought about by self-reliance etc., "அருந்தின்பத் துன்ப முள்ளத் தறிவினுக் கராகமாதி தருந்தன் வேதனையாங் காட்சி" (சி.சி.அளவை. 7).

*[தன்வேதனை + காட்சி]*

**தன்னக்கட்டு-தல்** *tanna-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தன்னைக்கட்டு பார்க்க; see *tannai-k-kaṭṭu-*

*[தன்னை + கட்டு-.]*

**தன்னகத்தே** *tannagattē,* வி.எ. (adv.) தன்னுள்ளே; within [itself]. கணிப் பொறியானது பல மின்னணு நுட்பங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது (இக்வ.).

*[தன் + அகத்தே]*

**தன்னடக்கம்** *tan-n-aḍakkam,* பெ. (n.) 1. தன்னை ஒறுக்கை; self-restraint, self-denial, self-possession. 2. அமைதி; modesty, in regard to learning, wealth, etc., இவ்வளவு பெரிய அறிவியல் வல்லுநராக இருந்தும் எவ்வளவு தன்னடக்கத்துடன் பேசுகிறார் (உ.வ.).

*[தன் + அடக்கம்]*

**தன்னடிச்சோதி** *tan-n-aḍi-c-cōdi,* பெ. (n.) பரமபதம் (பரமனது திருவடியின் ஒளி); final bliss, as the radiance of the feet of God. "ஆழ்வார்கள் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளின பின்பு" (குரு. பரம். 165).

*[தன் + அடி + சோதி]*

**தன்னடையே** *tan-n-aḍai-y-ē,* கு.வி.எ. (adv.) தானாகவே; of its own accord. "தன்னடையே விட்டுப்போம்" (ஈடு. 1: 2: 9).

*[தன் + அடைவே → அடையே]*

**தன்னணி** *tannaṇi,* பெ. (n.) வேங்கைமரம்; kino-tree.

**தன்னந்தனி**[1] *tannan-tani,* கு.வி.எ. (adv.) முற்றுந் தனிமையாய்; quite alone, in absolute solitude. "தன்னந்தனிநின் றழுகின்றவத் தையல்" (பாரத. திரௌ. 82). இவ்வளவு பெரிய வீட்டில் எப்படித் தன்னந்தனியாக இருக்கிறீர்கள் (இக்வ.).

*[தன் + அம் + தனி]*

**தன்னந்தனி²-த்தல்** *tannan-dani-*, 4 செ.கு.வி. (v.i.) *முழுதுந்தனிமையாதல்;* to be absolutely alone. "தன்னந்தனித்த மருந்து" *(அருட்பா, vi, ஆனந்தக்களிப்பு 1, 28).*

*[தன்னம் + தனி-.]*

**தன்னந்தனியாக** *tannan-dani-y-āga*, கு.வி.எ. (adv.) **தனித்து;** all alone. இரவு நேரத்தில் தன்னந்தனியாக நடந்தே வந்திருக்கிறான் *(உ.வ.).*

மறுவ. ஒண்டியாக

*[தன்னம் + தனி + ஆக.]*

**தன்னம்¹** *tannam*, பெ. (n.) **சிறுமை** (திவா.); minuteness. "தன்னஞ்சிறிதே துயின்று" *(சீவக. 2028).*

**தன்னம்²** *tannam*, பெ. (n.) *1.* **ஆவின்கன்று** (பிங்.); calf. *2.* **மான்கன்று;** fawn. *3.* **மரக்கன்று;** sapling. "இளமாழைத் தன்னந் திகழ் சாரல்" *(திருப்போ. சன்னிதி. பிள்ளைத். தாறப. 7).*

*[தம் → தன் + அம் → தன்னம். தம்மைப் பற்றியே எண்ணுகை.]*

**தன்னம்பிக்கை** *tannambikkai*, பெ. (n.) **தன் மீதுள்ள நம்பிக்கை;** self-confidence (in oneself); assurance. எங்கு சென்றாலும் பிழைத்துக் கொள்ள முடியும் என்ற தன்னம்பிக்கை, ஒவ்வொரு தமிழனுக்கும் உண்டு *(உ.வ.).* வெற்றி தன்னம்பிக்கை அளிக்கிறது *(உ.வ.).*

*[தன் + நம்பிக்கை]*

**தன்னமுரி** *tanna-muri*, பெ. (n.) **தன்சிறுநீர்;** one's urine.

*[தன் + அமுரி]*

**தன்னமை¹** *tan-n-amai*, பெ. (n.) *1.* **நட்பு;** friendship, amity. *2.* **இணக்கம்;** connection.

*[தன் + அமை]*

**தன்னமை²** *tan-n-amai*, பெ. (n.) **சுற்றத்தார்;** neighbour's relations. "தன்னமை பகையுஞ் சரி அயலத்தார் உறவுஞ்சரி" *(நெல்லை).*

*[தன் + அமை. தனக்கு அமைந்த உறவினர்]*

**தன்னயம்** *tannayam*, பெ. (n.) **தன்நலம்;** self-interest.

*[தன் + நயம். நயம் = நலம்]*

**தன்னரசு** *tan-n-arašu*, பெ. (n.) *1.* **தன்னாட்சி அரசு;** self-government, independent kingdom. *2.* **குற்றம்;** state of anarchy, one of eight nāṭṭu-k-kuṟṟam. "இது தன்னரசு நாடாய்" *(ஈடு. 1: 2: 9).*

*[தன் + அரசு]*

**தன்னரசுநாடு¹** *tan-n-arašu-nāḍu*, பெ. (n.) **தன்னாட்சி நடத்தும் நாடு** (ஈடு. 4, 9, ப்ர.); state or country where anarchy prevails.

*[தன்னரசு + நாடு]*

**தன்னரசுநாடு²** *tan-n-arašu-nāḍu*, பெ. (n.) **ஒருவன் தன் விருப்பப்படி ஆளும் நாடு;** despotic state. "இராவணாகாரமாகி ... தன்னரசு நாடு செய்திருக்கும்" *(தாயு. மௌன. 9).*

*[தன்னரசு + நாடு = தனது விருப்படி ஆட்சி நடாத்தும் நாடு; கொடுங்கோலரசாகவும் சில நேரத்தில் அமையும்]*

**தன்னரசுபற்று** *tan-n-arašu-paṟṟu*, பெ. (n.) **தன்னரசுநாடு** (யாழ்அக.) பார்க்க; see *tannarašu-nāḍu.*

*[தன்னரசு + பற்று]*

**தன்னலம்** *tannalam*, பெ. (n.) **தனக்கேற்ற நன்மைகளை மட்டும் பேணுகை;** selfishness. தன்னலமற்ற தொண்டு மனப்பான்மை உடையவர்களே, பொதுவாழ்வில் ஈடுபட வேண்டும் *(உ.வ.).*

*[தன் + நலம்]*

**தன்னவன்** *tannavan*, பெ. (n.) **தன்னைச் சேர்ந்தவன்** (வின்.); friend, relative, associate.

க. தன்னவன்.

*[தன் + அவன் → தன்னவன் = தன்னைச் சார்ந்தவன், உற்றார், உறவினர்.]*

**தன்னறிவு** *tan-n-aṟivu*, பெ. (n.) *1.* **சொந்த அறிவு;** consciousness, self-knowledge, one's own knowledge. *2.* **மயக்கமற்ற அறிவு;** sobriety, self-possession. குடிகாரனுக்குத் தன்னறிவில்லை *(உ.வ.).*

*[தன் + அறிவு]*

**தன்னறிவிழ-த்தல்** *tannaṟivila-*, 3 செ.கு.வி. (v.i.) **அறிவழிதல்;** to loose consciousness.

*[தன்னறிவு + இழ-.]*

**தன்னனுபவம்** *tannanubavam*, பெ. (n.) தன் பட்டறிவு; self-experience.

*[தன் + அனுபவம்]*

**தன்னனுமானம்** *tan-n-anumānam*, பெ. (n.) 1. தன் பொருட்டாளும் கருதுகோள் (சி. சி. அளவை. 4) தன்பொருட்டனுமானம் பார்க்க; see *tan-poruttanumānam*. 2. தனது கருதுகை; one's presumption.

*[தன் + அனுமானம்]*

**தன்னாசிக்கருப்பன்** *tannāśi-k-karuppan*, பெ. (n.) ஒரு ஊரகத் தெய்வம் (கொங்கு); one village deity (செ.அக.).

மறுவ. சன்னாசிக்கருப்பு

*[தன்னாசி + கருப்பன். ஊரகக் கருப்பனார் கோயில்களில் பெயரெழுதி வைத்த துறவியின் படிவம்.]*

**தன்னாட்சி** *tann-āṭci*, பெ. (n.) தன்னாளுகைக் குரிய உரிமை; autonomy; self-governance. தன்னாட்சிக் கல்லூரி (இக்.வ.). தன்னாட்சி கோரும் மாநிலங்கள் (இக்.வ.).

*[தன் + ஆட்சி]*

**தன்னாண்டு** *tan-n-āṇḍu*, பெ. (n.) நடப்பாண்டு (நாஞ்.); current year, as dist. fr. talai-y-āṇḍu.

*[தன் + ஆண்டு]*

**தன்னாரவண்ணம்** *tan-n-āra-vaṇṇam*, கு.வி.எ. (adv.) ஒருவரது உள்ளப்போக்கின்படி; at one's will and pleasure, as one wills. "புஷ்பமும் விந்தமுங் குந்தமுந் தன்னாரவண்ணமாக் கட்டினார்" (இராமநா. பாலகா. 22) (செ.அக.).

*[தன் + ஆர் + வண்ணம்]*

**தன்னாரவாரம்** *tan-n-āra-vāram*, கு.வி.எ. (adv.) தன்னாரவண்ணம் (வின்.) பார்க்க; see *tan-nāra-vaṇṇam*.

*[தன் + ஆரவாரம்]*

**தன்னிகரற்ற** *tannigararra*, பெ.எ. (adj.) ஈடிணையற்ற; matchless, peerless. தன்னிகரற்ற தலைவர். தன்னிகரற்ற இலக்கியப் படைப்பு. (உ.வ.).

*[தன்னிகர் + அற்ற. ஒப்பாரும், மிக்காரும் இல்லாத]*

**தன்னிச்சை** *tan-n-iccai*, பெ. (n.) 1. தன்விருப்பம்; one's own wish, self-will. மகனுடைய தன்னிச்சையான போக்கை தந்தையால் புரிந்து கொள்ள முடியவில்லை. (இக்.வ.). 2. விடுதலை; freedom, liberation from slavery.

*[தன் + இச்சை]*

**தன்னிச்சையாய்** *tan-n-iccai-y-āy*, கு.வி.எ. (adv.) 1. தன்மூப்பாய் (இ.வ.); autocratic. 2. தற்செயலாய்; by chance (உ.வ.). அதிகாரிகளைக் கலந்து ஆராய்ந்து தன்னிச்சையாக எடுத்த முடிவு (இக்.வ.).

*[தன் + இச்சை + ஆய்]*

**தன்னிழல்காய்ஞ்சி** *tannilal-kāyñji*, பெ. (n.) சாயாமலை; a tree which does not cast its shadow.

*[தன்னிழல் + காய்ஞ்சி]*

**தன்னிழல்காத்தான்** *tannilal-kāttān*, பெ. (n.) தன்னிழல் பார்க்க; see *tannilal*.

*[தன்னிழல் + காத்தான்]*

**தன்னியம்** *tanniyam*, பெ. (n.) தாய்ப்பால் (தைலவ.தைல.); mother's milk.

*[தன் + இயம். தன்னியம் = ஈடு இணையற்ற நலம்தரும்இனிமையான பால். தாய்மைப் பரிவுடன் அன்னைதரும், அன்புப்பால்]*

**தன்னியல்பு** *tan-n-iyalbu*, பெ. (n.) சிறப்புக் குணம்; peculiar quality, distinguishing feature or characteristic. "அவ்வப்பொருள்கட்டுக் கூறும் தன்னியல்பு பொதுவியல்பு மாத்திரையின் முரணுதலால்" (சி. இ. அளவை. 4).

*[தன் + இயல்பு]*

**தன்னியன்** *tanni-y-an*, பெ. (n.) 1. செல்வமுடை யோன்; wealthy person. 2. நற்பேறு கொண்டவன்; fortunate man (செ.அக.).

**தன்னியாசி** *tanniyāśi*, பெ. (n.) இசைப்பண் (பரத. இராக. 56); a specific melody-type.

தெ. தன்யாசி.

**தன்னிலை** *tannilai*, பெ. (n.) 1. இயல்பு நிலை; one's proper position, nature or state. 2. நடு நிலை நிற்கை; equilibrium or natural state.

*[தன் + நிலை]*

**தன்னிறம்**[1] *tanniram,* பெ. (n.) காவிக்கல்நிறம் (வின்.); colour or red ochre (செ.அக.).

*[தன் + நிறம்]*

**தன்னிறம்**[2] *tanniram,* பெ. (n.) இயல்புநிலை; natural state.

*[தன் + நிறம்]*

**தன்னிறமாக்கி**[1] *tanniram-ākki,* பெ. (n.) பொன் (யாழ்.அக.); gold.

*[தன்னிறம் + ஆக்கி]*

**தன்னிறமாக்கி**[2] *tanniram-ākki,* பெ. (n.) குளவி (வின்.) பார்க்க; see *kuḷavi;* a kind of hornet .

*[தன்னிறம் + ஆக்கி]*

**தன்னிறைவு** *tanniraivu,* பெ. (n.) 1. தன்னிலேயே நிறைவு பெறும் நிலை; self-sufficiency. எல்லாத்துறைகளிலும் நாட்டைத் தன்னிறைவு பெறச் செய்வதே அரசின் நோக்கம் (இக்.வ.). 2. கிடைத்தது போதும் என்ற வகையில் அடையும் பொந்திகை; contentment. எவ்வளவு பணம் கிடைத்தாலும், அவர் தன்னிறைவு அடைவதே இல்லை.

மறுவ. பொந்திகை

*[தன் + நிறைவு]*

**தன்னினமுடித்தல்** *tan-n-inamuḍittal,* பெ. (n.) ஒன்றைச் சொல்லுமிடத்து விரிவுறாமை வேண்டி, அதற்கினமாகிய மற்றொன்றையும் அதனோடு கூட்டி முடித்தலாகிய உத்தி (தொல் சொல். 27, சேனா); a mode of concise statement which, by implication, covers related points, one of 32 utti.

*[தன்னினம் + முடித்தல்]*

**தன்னினி** *tannini,* பெ. (n.) வேங்கை (மலை.) பார்க்க; see *vēṅgai;* East Indian kino.

**தன்னீங்கல்** *tannīṅgal,* பெ. (n.) 1. தடையற்ற நிலை; liberty. 2. உரிமை கொண்டாடுகை; independence. 3. தொடர்பில்லாமை; unconnected.

*[தன் + நீங்கல்]*

**தன்னு-தல்** *tannu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சிறிது சிறிதாக எடுத்தல் (வின்.); to take little by little, as from a heap; to unload a vessel a little at a time. 2. தோணியை மெல்லத் தள்ளுதல் (வின்.); to move a vessel by degrees. 3. பொருந்துதல்; to approach. "நம்பனையே தன்ன வலஞ்செய்து கொளும்" (பதினொ. விநா. திரு. 3).

*[தன் → தன்னு-.]*

**தன்னுட்கேந்திரம்** *tannuṭ-kēndiram-,* பெ. (n.) மஞ்சள் நிறமுள்ள மாணிக்கக் கல்; cinnamon stone.

மறுவ. தகமணி

**தன்னுண்மை** *tannuṇmai,* பெ. (n.) இயற்கைத் தன்மை; the real distinctive characteristic.

*[தன் + உண்மை]*

**தன்னுணர்ச்சி** *tan-n-uṇarcci,* பெ. (n.) 1. தன்னறிவு; self-consciousness. 2. நினைவு; memory, recollection. குடிகாரன் தன்னுணர்ச்சி யின்றி, உளறுவதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளக் கூடாது (உ.வ.).

*[தன் + உணர்ச்சி]*

**தன்னுணர்வு** *tan-n-ūṇarvu,* பெ. (n.) தன்னுணர்ச்சி பார்க்க; see *tan-n-uṇarcci.*

*[தன்னு + உணர்வு]*

**தன்னுதோணி** *tannu-tōṇi,* பெ. (n.) சிறிய படகு (யாழ்.அக.); small boat.

*[தன்னு + தோணி]*

**தன்னுவத்தை** *tannu-vattai,* பெ. (n.) தன்னுதோணி (யாழ்.அக.) பார்க்க; see *tannu-tōṇi.*

**தன்னுறுதொழில்** *tan-n-uṟu-toḻil,* பெ. (n.) மன்னன் கட்டளையை எதிர்பாராதே, அவன் வீரர் பகைவரின் ஆனிரைகவர்தலைக் கூறும் வெட்சித்திணைப்பகுதி (பு.வெ. 1,2); theme describing the capture of enemy's cows by king's soldiers without his express command, dist. fr. mannuṟu-toḻil.

*[தன்னுறு + தொழில்]*

**தன்னூட்டி** *tan-n-ūṭṭi*, பெ. (n.) *தாய்ப்பாலைத் தடையின்றி உண்டுவளர்ந்த சேங்கன்று;* calf reared on its mother's milk. "சேங்கன்றுள்ளன வெல்லாந் தன்னூட்டியாக விட்டு" *(திருக்கோ. 136, உரை).*

*[தன் + ஊட்டி]*

**தன்னெடுப்பு** *tan-n-eḍuppu*, பெ. (n.) *1. இறுமாப்பு;* arrogance, self-will. *2. புகழ்ச்சி விருப்பால், தான்கொள்ளும் விடாமுயற்சி;* determined perseverance made for the sake of reputation.

*[தன் + எடுப்பு]*

**தன்னேத்திரம்** *taṉṉettiram*, பெ. (n.) *தகமணி (கோமேதகம்);* sardonyx.

**தன்னேற்றம்** *tan-n-ēṟṟam*, பெ. (n.) *1. தன்னைச் சேர்ந்த இனத்தார்;* one's party. "தாமோதரன் செட்டிக்குத் தன்னேற்றம் ஆள் பதினொருவர்க்கு" *(S.I.I. ii. 277). 2. சிறப்பாய் அமைந்த பெருமை;* peculiar merit or greatness. "பிரபன்னனுக்கு விஹித விஷயநிவ்ருத்தி தன்னேற்றம்" *(அஷ்டாதச. ஸ்ரீவசன. 101).*

*[தன் + ஏற்றம்]*

**தன்னை** *taṉṉai*, பெ. (n.) *1. தலைவன்;* lord, chief. "தன்னை தலைமலைந்த . . . கண்ணி" *(பு.வெ. 1.13). 2. தமையன்;* elder brother. "தன்னைமார் தந்த கொழுமீன்" *(ஐந். ஐம். 47). 3. தமக்கை (திவா.);* elder sister. *4. தாய்;* mother.

*[தன் + ஐ]*

**தன்னைக்கட்டு[1]-தல்** *taṉṉai-k-kaṭṭu-*, 5 செ.குவி. (v.i.) *1. போதியதாதல்;* to be just enough to make both ends meet, as one's income. வரும்படி தன்னைக் கட்டிக் கொள்ளுகிறது *(இ.வ.). 2. மந்திரத்தால் தன்னைக் காத்தல் (வின்.);* to protect oneself with magical incantations.

தன்னக்கட்டுதல் ஐகாரக்குறுக்கமாயும் வழங்கும்.

*[தன்னை + கட்டு-.]*

**தன்னைக்கட்டு[2]-தல்** *taṉṉai-k-kaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1. குறை நிரப்பிச் சரிப் படுத்துதல் (இ.வ.);* to manage economically. "தன்னைக் கட்டிக் காரியங்களைப் பார்க்கிறான்". *3. நிலைமையை எதிர்நின்று சீர்ப்படுத்தல்;* to manage, as a situation. *4. வயப்படுத்தல்;* to bring round a person. *5. ஒருவன் செயற்குச் சம்மதித்தல்;* to justify one's actions. "எப்போதும் அவனைத் தன்னைக்கட்டிப் பேசுகிறான்" *(இ.வ.). 6. மனதைக் கட்டுப்படுத்துதல்;* to concentrate of mind.

*[தன்னை + கட்டு-.]*

**தன்னைத்தானறிதல்** *taṉṉai-t-tāṉaṟi-*, 2 செ.குவி. (v.i.) *தன்னைச்சிந்தித்துணர்தல்;* to think and self realize (சா.அக.).

*[தன்னை + தான் + அறி-.]*

**தன்னைப்பற்றுதல்** *taṉṉai-p-paṟṟudal*, பெ. (n.) *தன்னைப்பற்றுதலென்னுங் குற்றம்;* fallacy of self-dependence.

*[தன்னை + பற்றுதல்]*

**தன்னையறி-தல்** *taṉṉai-y-aṟi-*, 2 செ.குவி. (v.i.) *1. தனது உண்மைத்தன்மையை உணர்தல்;* to know oneself "தன்னை யறிந்தின்பமுற வெண்ணிலாவே" *(அருட்பா.). 2. இளம்பெண் பூப்பெய்தல் (யாழ்.அக.);* to attain puberty.

*[தன்னை + அறி-.]*

**தன்னைமற-த்தல்** *taṉṉai-maṟa-*, 3 செ.குவி. (v.i.) *1. மூர்ச்சையினால் மெய்ம்மறத்தல்;* to forget oneself from fatigue. *2. ஒகம் (யோகம்) அல்லது ஊழ்கம் (தியானம்) முதலியவற்றால் தன்னிலை மறத்தல்;* to state of insensibility to ones surroundings to be rupt into visions (சா.அக.).

*[தன்னை + மற-.]*

**தன்னைமறு-த்தல்** *taṉṉai-maṟu-*, 4 செ.குன்றாவி. (v.t.) *இன்பத்துன்பங்களை மறுத்தல்;* to indulge in one's own appetites.

*[தன்னை + மறு-.]*

**தன்னைவேட்டல்** *taṉṉai-vēṭṭal*, பெ. (n.) *1. தலைவனுடன் வீரன் தன்னுயிர் மாய்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 7, 26);* (puṟap.) theme of a warrior slaying himself on the death of his king. *2. இறந்த கணவனுடலைப் போர்க் களத்தில், அவன் மனைவி தேடுதலைக் கூறும்*

புறத்துறை (பு.வெ. 7,2); (purap.) theme of a wife seeking the dead body of her husband on the field of battle.

*[தன்னை + வேட்டல்]*

**தன்னொடியையபின்மைநீக்கியவிசேடணம்** *tan nodiyai-pinmai-nīkkiya-visēdaṇam,* பெ. (n.) இனப் பொருத்தம் காணப்பட்ட பண்பு குறித்த பெயரடைச்சொல். விசேடியம், வேறு பல பொருளிலும் செல்லுதலைத் தடுக்காது, செஞ்ஞாயிறு என்பதில், செம்மை என்பது போல, அஃது இருப்பதென்பதைத் தெரிவிக்க வரும் சிறப்படை (நன். 284, விருத்.); (gram.26) co-ordinative epithet.

**தன்னொழுக்கம்** *tan-n-olukkam,* பெ. (n.) தன்னிலைக்குத் தக்க நடை (வின்.); conduct suitable to one's age, rank, caste or religion.

*[தன் + ஒழுக்கம்]*

**தன்னோர்** *tannōr,* பெ. (n.) தன்னைச் சார்ந்தவர்; one's kith and kin, relatives or dependents. "மன்னகுமரன் றன்னோர் சூழ" (பெருங். இலா. வாண. 4, 106).

*[தன்னார் → தன்னோர் (ஒ.நோ) இன்னார் → இன்னோர். ஆர் → ஓர் – பலர்பாலீறு.]*

**தனக்கட்டி** *tana-k-katti,* பெ. (n.) முலைக்கட்டி; abscess in the breast of a female.

*[தனம் + கட்டி]*

**தனக்கட்டு** *tana-k-kattu,* பெ. (n.) பெருஞ் செல்வம்; immense riches. "புறப்பட்டா னொருப்பட்டான் றனக்கட்டோடும்" (திருவாலவா. 62, 5).

*[தனம் + கட்டு. "கட்டு" சொல்லாக்க விகுதி. ஒ. நோ.: கீழ்க்கட்டு சமையற்கட்டு.]*

**தனக்காரர்** *tana-k-kārar,* பெ. (n.) யானைப் பாகர் குடியினரான ஒரு இனத்தார் (யாழ்ப்.); a caste whose ancestors are said to have been elephant-drivers (செ.அக.).

*[தனம் + காரர். 'காரர்" உடைமைப் பெயரீறு. ஒ. நோ.: வீட்டுக்காரர், தோட்டக்காரர்.]*

**தனக்கு** *tanakku,* பெ. (n.) அழிஞ்சில்; alangium.

**தனகரன்**[1] *tana-garan,* பெ. (n.) கள்வன் (யாழ். அக.); robber.

*[தனம் + கரன்]*

**தனகரன்**[2] *tana-garan,* பெ. (n.) 1. பெருஞ் செல்வன்; Kubēran. 2. உரிமையுள்ளவன் (யாழ். அக.); one who enjoys utmost freedom; one who is his own master (செ.அக.).

*[தனம் + கரன். தனம் = தனத்தை யுடையவன்; பெருஞ்செல்வத்திற்குரியவன். காரன் → கரன் = இடைக்குறை]*

**தனகன்னியன்** *tana-kanniyan,* பெ. (n.) காய்ப்பாகல்; a medicinal plant.

**தனகாதபூடு** *tana-kāda-pūdu,* பெ. (n.) மருளூமத்தை; burr-weed.

**தனகு**[1] *tanagu,* பெ. (n.) உள்ளக்களிப்பு (சூடா.); mirth, jollity.

*[தான் + நகு = தனகு]*

**தனகு**[2] *tanagu,* பெ. (n.) வாதுமைப்பிசின்; gum of almond tree.

**தனகு**[2]**-தல்** *tanagu-,* 5 செ.குவி. (v.i.) 1. சரசஞ் செய்தல் (வின்.) ; to dally, take improper liberties. 2. உள்ளங்களித்தல்; to be jolly, mirthful, merry. "தனகிய மனைவியும்" (திருப்பு. 166). 3. சண்டை செய்தல் (வின்.); ஊடல்; to pick a quarrel, to be out of humour (செ.அக.).

**தனசயிதம்** *tanašayitam,* பெ. (n.) மஞ்சள் சதைப்பற்று; a yellow albuminoid substance Elastin.

**தனசாரம்** *tana-sāram,* பெ. (n.) முலைப்பால்; mother's milk. "தனசாரம் பருகும்" (திருப்பு. 493) (செ.அக.).

**தனசூலை** *tanašulai,* பெ. (n.) முலையிலேற் படும் குத்தல் நோய்; acute pain in the ma.

**தனஞ்சயகாரம்** *tanañšayagāram,* பெ. (n.) தனஞ்செயகாரம் பார்க்க; see *tanañšeyagāram*

**தனஞ்சயன்** *tanañsayan,* பெ. (n.) 1. அருச்சுனன்; Arjunan. "தட்டுடைப் பொலிந்த திண்டேர் தனசயன்போல வேறி" (சீவக. 767). 2. நெருப்பு

(பிங்.); fire. 3. பத்துவகைக் காற்றுகளுள், உயிர் நீங்கிய உடலையும் விடாது சிறிதுநேரம் பற்றிநின்று பின் வெளியேறும் காற்று; the vital air of the body which leaves it some time after it becomes lifeless, one of tašavāyu. "தனஞ்சயன் பிராணன் போனபின்னும் உடம்பை விடாதேநின்று..... உச்சந்தலையில்...... வெடித்துப் போமென் றறிக" (சிலப். 3, 26, உரை.) (செ.அக.).

**தனஞ்செயகாரம்** *tanañšeya-gāram*, பெ. (n.) படிக்காரம்; Alum (செ.அக.).

**தனத்தளர்ச்சி** *tana-t-talarcci*, பெ. (n.) 1. முலையின் தளர்ச்சி; relaxtion fo mamva. 2. தனத்தனியம் பார்க்க; see *tanattaniyam*.

**தனத்தனியம்** *tanattaniyam*, பெ. (n.) கொத்தமல்லி; coriander.

**தனத்தாபம்** *tanattābam*, பெ. (n.) முலையழற்சி; inflammation of the breast.

**தனத்தி** *tanatti*, பெ. (n.) வைப்பரிதாரம் (முகப்பூச்சு); prepared orpiment.

**தனத்தோர்** *tanattōr*, பெ. (n.) வாணிகர் (வைசியர்) (உரிநி) (பொருள் ஈட்டுதற்குரியவர்); merchant caste, as enjoined to amass wealth.

*[தனத்தார் → தனத்தோர்]*

**தனதன்** *tanadan*, பெ. (n.) 1. பெருஞ்செல்வன் குபேரன் (திவா.); Kubēran. 2. ஈகையாளன் (வின்.); liberal person.

*[தனம் + த் + அன்]*

**தனதாக்கு-தல்** *tanadākku-*, 5 செ.குவி. (v.i.) தனக்குரிமையாக்குதல்; தம்முடைய தாக்குதல்; to obtain for oneself. அறிவியல் கருத்துக்களைத் தமிழ் தனதாகக் கொள்ள வேண்டும். ஆளுங்கட்சியில் செல்வாக்குப் படைத்தோர், புறம்போக்கு நிலங்களைத் தனதாக்கி கொள்வர் (இக்.வ.).

*[தனது + ஆக்கு-.]*

**தனதாள்** *tanatāl*, பெ. (n.) 1. சொந்த வேலைக்காரன் (நெல்லை); one's own permanent servant. 2. உடந்தையாயிருக்கும் ஆள் (இக். வ.); associate, mate.

*[தனது + ஆள்]*

**தனதானியம்** *tana-tāniyam*, பெ. (n.) பொன்னும் விளைபொருள்களும்; gold and grains (செ.அக.).

*[தனம் + தானியம்]*

**தனது** *tanadu*, பெ. (n.) 1. உரிமை; that which is one's own. "தனதாகத் தான்கொடான்" (நாலடி. 278). 2. நட்புரிமை; friendship, amity, intimacy. "தனது பாராட்டுகினுந் தடிவார் தெவ்வர்" (குற்றா. தல. நாட்டுச். 15).

தெ. தனது, ம. தனது.

*[தன் + அது]*

**தனதுபண்ணு-தல்** *tanadu-pannu-*, 5 செ. குன்றாவி. (v.t.) தன்வயப்படுத்திக் கொள்ளுதல்; to win over ; to obtain favour of. "பாடகனையுந் தனது பண்ணிக்கொள்" (விறலி விடு. 288).

*[தனது + பண்ணு-,]*

**தனதுபற்று** *tanadu-parru*, பெ. (n.) சொந்தப் பணப்பற்று; debit in personal account (செ.அக.).

*[தனது + பற்று]*

**தனதுருவம்** *tana-duruvam*, பெ. (n.) பின்னர்ச் சென்ற நாட்களைக் கூட்டிக் கணக்கிடப் பெறும், மூலக்கோள் நிலை (வின்.); (Astron.) Epoch longitude of a planet or its apsis which is to be added in calculations.

*[தன் + துருவம்]*

**தனந்தயன்** *tanandayan*, பெ. (n.) பாலுண்குழவி; sucking child. "மாதா மகவுக்குவந்த வியாதி நிமித்தம் மருந்து தின்னக் கண்டது தனந்தயனுக் கொழிய வேறில்லை" (சித். மரபுகண். 19)(செ.அக.).

**தனப்பணம்** *tana-p-panam*, பெ. (n.) வரிவகை (S. I. I. vii, 384); a tax.

*[தனம் + பணம் = செல்வர் செலுத்தும் வரி]*

**தனப்பால்** *tana-p-pāl*, பெ. (n.) 1. முலைப்பால்; breast milk. 2. கலப்பில்லாப் பால் ; unadulterated cow's milk.

*[தனம் + பால்]*

**தனப்பால்வாங்கி** *tanappāl-vāṅgi*, பெ. (n.) முலைப்பால் பீச்சும்கருவி; an apparatus for drawing milk from the mammary gland.

**தனப்பிளவை** *tana-p-piḷavai*, பெ. (n.) முலைப் புற்று, முலைப்பிளவைப்புண்; cancer of the breast.

*[தனம் + பிளவை]*

**தனபதி** *tana-padi*, பெ. (n.) குபேரன்; God of wealth. "தோழன் தனபதி" *(திருவிசை. கரு. பதி. 8, 6)* (செ.அக.).

*[தனம் + பதி]*

**தனபதித்துவம்** *tanapadi-t-tuvam*, பெ. (n.) *1.* செல்வநிலை; opulent condition. *2.* ஈகைத் தன்மை, வள்ளன்மை; beneficence, liberality (செ.அக.).

*[தனபதி + தத்துவம்]*

**தனபாரம்** *tana-bāram*, பெ. (n.) கொங்கைச் சுமை; breast-weight, well-developed breast. "அதிபார தனபார வதிரூப மலர்மானை யனையாய்" *(அரிச். பு. விவாக. 218)* (செ.அக.).

*[தனம் + பாரம்]*

**தனபோகம்** *tana-bōgam*, பெ. (n.) மெய்யுறு புணர்ச்சி, கலவி (வின்.); coition.

*[தனம் + போகம்]*

**தனம்**[1] *tanam*, பெ. (n.) பண்புணர்த்தற்குப் பெயரின்பின் வரும் இடைச்சொல்; affix added to many nouns giving them an abstract meaning. "வள்ளற்றனமும் வகுத்தனன் கூறி" *(பெருங். நரவாண. 8, 6)*. *குழந்தைத்தனம், கயமைத்தனம்.*

**தனம்**[2] *tanam*, பெ. (n.) *1.* செல்வம் (வின்.); wealth, substance, property. அவரிடம் தனம் இருக்கிறது. ஆனால் தானம் செய்யமாட்டார் (உ.வ.). *2.* பொன் (பிங்.); gold. *3.* முத்திரை (பிங்.); seal. *4.* வாரை (உத்திரம்) (அகநி.); beam across roofing. *5.* கூட்டற் கணக்கு (வின்.); (Arith) addition.

*[தம் → தன் + அம் → தனம் = தனக்கே உரிய செல்வம். தமிழ்மொழியில் தனக்கே சொந்தமான செல்வம் என்ற பொருள்தரும். 'தம்' என்னும் வேரடி, சொந்தம். உடைமை, உரிமைப்பொருள்களைக் குறிக்கும் என்பார் தேவநேயர். ஆனால் வட மொழியில் உள்ள 'தன்' என்னும் வேரடி தன்முனைப்பு, ஆணவத்தைக் குறித்து வழங்குவதாக, மா.வி.அக. கூறும். தனம் என்பது தென்சொல்லேயாகும்.]*

**தனம்**[3] *tanam*, பெ. (n.) முலை; woman's breast. "அரும் பெருந் தனத்தை வேட்டாண் டினவளை... விற்பான் வந்தோன்" *(திருவாலவா. 23, 15)*.

*[தம் → தன் + அம் → தனம். பெண்களுக்கே சொந்தமான தனம். உடலமைப்பில் மகளிர்தம் உடைமையாக தனம் அமைந்துள்ளது. தனம் பெண்களுக்கே உரிய செவ்ம். இங்குள்ள 'ஏ'காரம் தேற்றேகரமாகும்.]*

**தனம்**[4] *tanam*, பெ. (n.) ஆவின்கன்று (பிங்.); calf.

**தனம்**[5] *tanam*, பெ. (n.) சந்தனம் (பிங்.); sandal.

**தனம்**[6] *tanam*, பெ. (n.) துன்பம் (அக.நி); affliction.

**தனம்**[7] *tanam*, பெ. (n.) தன்மை; nature, property. "நேசத்துக்குரிய தனம்" *(புதுவை)* (செ.அக.).

**தனமதம்** *tana-madam*, பெ. (n.) பணச்செருக்கு (இ.வ.); pride of wealth (செ.அக.).

*[தனம் + மதம்]*

**தனமில்லாக்கன்னி** *tana-millā-k-kanni*, பெ. (n.) சிறியாணங்கை; small polygala (சா.அக.).

**தனமின்சாரம்** *tana-minšāram*, பெ. (n.) ஏகுமின்; negative electricity.

**தனமின்மை** *tana-minmai*, பெ. (n.) முலை யெழாமை; undeveloped breasts.

**தனமுத்துமாதர்** *tana-muttu-mādar*, பெ. (n.) தனமுதிர்க்கோரை பார்க்க; see *tana-mudir-k-kōrai.*

**தனமுதிர்க்கோரை** *tana-mudir-k-korai*, பெ. (n.) கஞ்சாங்கோரை; white basil.

**தனமூலம்** *tana-mūlam*, பெ. (n.) **முதல்; கையிருப்புப்பணம்** (புதுவை); capital.

*[தனம் + மூலம்]*

**தனயன்** *tana-yan*, பெ. (n.) **மகன்;** son. "தானுந் தேருமே யாயின னிராவணன் றனயன்" *(கம்பரா. பிரமாத். 59)* (செ.அக.).

தனயன் - ஐகாரக் குறுக்கம்

தம் + ஐயன் = தமையன் - ஐகாரக் குறுக்கம் ஆகாமல் ஒலிக்கிறது

*[தன் + ஐயன்]*

**தனரேகை** *tana-rēgai*, பெ. (n.) **செல்வத்தைக் குறிப்பிடும் கைவரி** (வின்.); (palmistry) lines in the palm indicating wealth.

*[தனம் + ரேகை]*



**தனவந்தன்** *tana-vandan*, பெ. (n.) **செல்வர்;** rich person (செ.அக.).

**மறுவ.** பெருஞ்செல்வன்.

*[தனம் + வந்தன்]*

**தனவனா** *tana-vanā*, பெ. (n.) **ஆச்சா** (மலை.) (சால்) **மரம்;** sal-tree shorea robusta. நாதகுரத்திலுள்ள சிவாணி(ளி) செய்ய உதவும் மரம்.

**தனவான்** *tana-vān*, பெ. (n.) *1.* **செல்வன்;** wealthy man. "நெடிய தனவானாத லரிது" *(அறப். சத. 1). 2.* **கொடியரசு** peepul-creeper.

**மறுவ.** பெருஞ்செல்வன்.

*[தனம் + வ் + ஆன்]*

**தனவை** *tana-vai*, பெ. (n.) **தனவையாதம்** (மலை.) **சிறுகாஞ்சொறி** (மலை.); small climbing nettle.

**தனவைசியர்** *tana-vaišiyar*, பெ. (n.) **மூவகை வணிகருள் பொன்வணிகர்** (பிங்.); traders, merchants, one of three vaišiyar (செ.அக.).

**மறுவ.** தனவந்தர்.

*[தனம் + வைசியர்]*

**தனவையாதம்** *tanavai-y-ādam*, பெ. (n.) **சிறுகாஞ்சொறி** (மலை.) பார்க்க; small climbing rettle; see cirukāñjori.

**தனன்** *tanan*, பெ. (n.) **வைசியர் பட்டப்பெயர்;** title of the vaišya caste. "சருமன் வருமன் றனன்றாசன் சார்த்திவழங்கு மியற்பெயர்கள்" *(திருவானைக். கோச்செங். 69)* (செ.அக.).

*[தனம் + அன்]*

**தனாசி** *tanāši*, பெ. (n.) **ஒரு பண்** (பிங்.); anelody. "புணரிசைத் தனாசிபாடும் பூவையர்" *(சேதுபு. திருநாட். 90).*

**தனாதிபன்** *tanādiban*, பெ. (n.) **செல்வன்** (வின்.); rich man (செ.அக.).

**மறுவ.** பெருஞ்செல்வன், தனவந்தன்

*[தனம் + அதிபன் = தனாதிபன் = பெருஞ் செல்வத்திற்குரியவன் = தலைவன்]*

**தனார்ச்சனம்** *tanār-c-canam*, பெ. (n.) **பொருள் சம்பாதிக்கை** (வின்.); acquistion of wealth.

*[தனம் + Skt. அர்ச்சனம்]*

**தனிஊசல்** *tani-ūšal*, பெ. (n.) **ஊசல்** (கிரி.அக.) பார்க்க; see *ūšal*.

**தனி**[1] *tani*, பெ. (n.) *1.* **ஒற்றை;** singleness. "தனிக்கலக் கம்பளச்செட்டி" *(மணிமே. 29, 6). 2.* **தனிமை;** seclusion, solitude. "தனியுந் தானுமத் தையலு மாயினான்" *(கம்பரா. மிதிலைக். 139). 3.* **ஒப்பின்மை;** uniqueness, matchlessness. "செவ்வேலெந் தனிவள்ளலே" *(திருக்கோ. 376). 4.* **உரிமை;** independence. தனி வாழ்க்கை (உ.வ.) *5.* **கலப்பின்மை;** purity, genuineness. தனிப்பால் (உ.வ.). *6.* **உதவியின்மை;** helplessness, loneliness, condition of being forsaken or forlorn. "தமியேன் றனிநீக்குந் தனித்துணையே" *(திருவாச. 6, 38). 7.* **சீட்டாட்டத்தில் ஒருவனே எல்லாச் சீட்டையும் பிடிக்கை;** single handed winning of all the cards in card-game (செ.அக.).

**ம.** தனி

*[தான் → தன் → தனி]*

**தனி²-த்தல்** *tani-*, 4 செகுவி. (v.i.) *1.* ஒன்றியாதல் *(வின்.)*; to be alone, single, solitary. கூட்டத்திலிருந்து தனித்துப்போய்விட்டான். *(உ.வ.).* நாட்டில் கல்வியறிவு வளரவில்லை யென்றால் நாம் முன்னேற்றப்பாதையில் தனித்து விட நேரிடும். *(இக்.வ.). 2.* தனிமையாதல்; to be separate, detached from company. "தனித்தே யொழிய" *(கலித். 114). 3.* நிகரற்றிருத்தல்; to have no equal or match. *4.* உதவியற்றிருத்தல் *(வின்.)*; to be deserted, forsaken, helpless, as by the departure or death of friends.

*[தான் → தன் → தனி²]*

**தனி³** *tani*, பெ. (n.) தேர்நெம்புந் தடி; lever beam for starting a temple-car. "தனியோட்டுக் கிளப்பி" *(ஈடு. 3: 10: 2: அரும்.).*

*[தடி → தனி]*

**தனிக்கட்டை** *tani-k-kaṭṭai*, பெ. (n.) தனியாக வாழ்பவர்; one who is single ; loner *(கிரி.அக.).*

*[தனி + கட்டை → தனிக்கட்டை. பெற்றோருடன் இணைந்து ஒன்றி வாழாமல், திருமணமும் செய்து கொள்ளாமல், இருப்பவர்.]*

**தனிக்கடவுள்** *tani-k-kaḍavuḷ*, பெ. (n.) ஒப்புயர் வற்ற இறைவன் *(வின்.)*; the Absolute Being, the One without a second.

*[தனி¹ + கடவுள் = ஒப்பாரும் மிக்காரு மில்லா, தனிப்பெருந்தலைவனான இறைவன். உள்ளெமெனுங் கோயிலில், ஆதனிடம் எஞ்ஞான்றும் ஒன்றித் திகழ்பவன்; ஒன்றி இருந்து நினைப்பவர் தம் மனத்தைக் கோயிலாகக்கொண்டு, உறையுந் தனிக்கடவுள்]*

**தனிக்காசச்சுக்கான்** *tani-k-kāša-c-cukkāṉ*, பெ. (n.) கருஞ்சுக்கான்; black lime-stone.

**தனிக்காட்டுராசா** *tani-k-kāṭṭu-rāšā*, பெ. (n.) *1.* காட்டுத்தலைவைன் *(வின்.)*; sole ruler in a jungle. *2.* கட்டுக்கு அடங்காதவன்; one who submits to no rule or order. அவன் தனிக்காட்டு ராசா, எங்கே வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் போவான். *(உ.வ.).*

*[தனி + காடு + ராசா = அரைசர் → ராசர் → ராசா]*

**தனிக்காப்பு** *tani-k-kāppu*, பெ. (n.) ஒற்றைப் பாவாலாகிய காப்பு *(வின்.)*; vocation in a single verse.

*[தனி + காப்பு]*

**தனிக்காவல்** taṉi-k-kāval, பெ. (n.) தனியனாக இருக்கும்படி அடைக்குஞ் சிறை; solitary confinement.

*[தனி + காவல்]*

**தனிக்குடி** *tani-k-kuḍi*, பெ. (n.) *1.* வேறாகப் பிரிந்து வாழுங்குடும்பம்; divided family. இப்போது மகன் தனிக்குடியாயிருக்கிறான் *(உ.வ.). 2.* பல சாதியார் வாழும் ஊரில், தனித்துள்ள ஒரு சாதிக்குடும்பம் *(வின்.)*; single family of a caste living among others. *3.* முழுவீட்டையும் வாடகைக்கு அமர்த்திக்கொண்ட குடி; sole tenant, sole tenancy.

*[தனி + குடி]*

**தனிக்குடித்தனம்** *tani-k-kuḍitanam*, பெ. (n.) தனிவீட்டில் வாழும் குடித்தனம்; living apart after marriage. மகனுக்குத் திருமணமானதும் தனிக்குடித்தனம் வைத்துவிட்டோம் *(இக்.வ.).* பிள்ளைகள் இப்போதெல்லாம் தனிக்குடித்தனம் சென்று, பணஞ்சேர்ப்பதில் குறியாகவுள்ளனர் *(உ.வ.).*

**தனிக்குடை** *tani-k-kuḍai*, பெ. (n.) தனியரசாட்சி (தனியாகக் கொண்ட குடை); lit., sole umbrella, Absolute Sovereignty.

மறுவ. தனிமுடி; தனியரசு

*[தனி + குடை]*

**தனிக்கை** *tanikkai*, பெ. (n.) கணக்குத் தணிக்கை; audit, investigation.

*[கணிக்கை → தணிக்கை → தனிக்கை]*

**தனிக்கோல்** *tani-k-kōl*, பெ. (n.) தனிஆட்சி; sole, absolute sovereignty. "ஏழுலகுந் தனிக்கோல் செல்ல" *(திவ். திருவாய். 4. 5: 1).*

மறுவ. தனிமுடி, தனிக்குடை, தனியரசு

*[தனி + கோல்]*

**தனிகம்** *tanigam*, பெ. (n.) தனிகா (மலை.), கொத்துமல்லி; coriander-seed.

*[தனியம் → தனிகம்]*

**தனிகன்** *tanigan*, பெ. (n.) செல்வன் (இ.வ.); richman.

*[தனியன் → தனிகன்.]*

**தனிகா** *taniga*, பெ. (n.) தனிகம் பார்க்க; see *tanigam*.

*[தனி → தனிகா. ஒருகா: தனியா → தனிகா.]*

**தனிகை** *tanigai*, பெ. (n.) 1. இளம்பெண்; girl, young woman. 2. கற்புடையவள்; chaste woman.

*[கன்னிகை → கனிகை → தனிகை.]*

**தனிச்சி** tanicci, பெ. (n.) கணவனைப் பிரிந்து தனித்திருப்பவள்; a woman separated from her husband. "காரென்செய்யாது தனிச்சியையே" (இலக். வி. 558, உதா.).

மறுவ. தனியள்

*[தன் + இச்சி – தனிச்சி. "இ" பெண்பால் ஒருமையீறு கொண்ட கொழுநனைப் பிரிந்து தன்னந்தனிமையில் வாழ்பவள்.]*

**தனிச்சித்தம்** *tani-c-cittam*, பெ. (n.) ஒன்றுபட்ட மனம்; concentrated mind. "தனிச்சித்தம் வைத்த றேற்றாம்" (சீவக. 2939).

*[தனி + சித்தம்]*

**தனிச்சீர்** *tani-c-cīr*, பெ. (n.) நேரிசைவெண்பா, கலிவெண்பாக்களின் இரண்டாமடியிறுதியில், எதுகை பெற்று வரும் சீர்; detached foot at the end of the second line of nēr-iśai-veṇpā and kali-veṇpā, rhyming with the initial foot of the first two lines.

*[தனி + சீர்]*

**தனிச்செய்கை** *tani-c-ceygai*, பெ. (n.) பிறருடன் சேராது தானேசெய்யும் வேளாண்மை அல்லது தொழில்; single-handed cultivation of land, not jointly with others. "தென்னாட்டுக் கோனாயின சடையன் தனிச்செய்கை" (T.A.S. i, 7).

*[தனி + செய்கை = தனிச்செய்கை. கூட்டு வேளாண்மை யாற்றாது தாமே தனித்திருந்து, செய்யினைப் பண்படுத்தி உழவுசெய்கை]*

**தனிச்சொல்**[1] *tani-c-col*, பெ. (n.) கலிப்பா முதலியவற்றில், 'ஆங்கு' என்பது போலத் தனித்துவருஞ்சொல் (தொல். பொருள். 447, உரை.); detached word like āṅgu in kali-verse.

*[தனி + சொல்]*

**தனிச்சொல்**[2] *tani-c-col*, பெ. (n.) தனிச்சீர் (யாப். வி 60, உரை); (Pros.) detached foot at the beginning or end of a line of verse.

*[தனி + சொல்]*

**தனிசர்** *tanišar*, பெ. (n.) 1. கடன் வாங்கினோர்; debtors. 2. குறும்பரசர் (ஈடு, 5: 9: 7: ஜீ) (கடன்காரர்); petty chiefs, as always in debt to the overload.

*[தனிசு → தனிசர்]*

**தனிசு** *tanišu*, பெ. (n.) கடன்; debt. "பெரும் பொருட் டனிசுமின்றே........ போக்குவல்" (திருவாலவா. 27, 83).

*[தனி → தனிசு.]*

**தனிசுதீட்டு** *tanišu-tīṭṭu*, பெ. (n.) கடன் ஆவணம்; bond; document evidencing debt. முதல்மாளாதே பொலிசையிட்டுப் போருகிற தனிசு தீட்டும்" (ரஹஸ்ய, 462).

மறுவ. கடனுறுதிச் சீட்டு.

*[தனிசு + தீட்டு. தனி → தனிசு + சீட்டு → தீட்டு → தனிசுதீட்டு.]*

**தனிட்டை** *taniṭṭai*, பெ. (n.) 23-ஆவது விண்மீன்; அவிட்டம் (வின்.); the 23-rd star.

**தனித்தகுடி** *tanitta-kuḍi*, பெ. (n.) துணையற்ற குடும்பம் (வின்.); destitute, forlorn or helpless family.

*[தனித்த + குடி. தனித்து → தனித்த = ஆறுதலும் தேறுதலுமில்லாத் தனித்த நிலை. திக்குத் தெரியாதும், ஆறுதல் சொல்லுதற்கு ஆள் இன்றியும், ஆதரவு தருவார் ஒருவரின்றித் துன்பத்தில் உழலும் தனிக்குடி. குடி = குடும்பம்]*

**தனித்தடை** *tani-t-taḍai*, பெ. (n.) ஆண்மக்கள் பாராதபடி பெண்கள் செல்வதற்குச் செய்யும் திட்டம்; special arrangement for ladies to go

from one place to another without being seen by men. "தம்பரிசனங்கள் சூழத் தனித்தடை யோடுஞ் சென்று" (பெரியபு. திருஞான: 647).

*[தனி + தடை]*

**தனித்தநிலை** *tanitta-nilai,* பெ. (n.) 1. ஒகநிலை; yogic posture. 2. தனிமையிலிருக்கை; solitariness.

மறுவ. தனிநிலை

*[தனி → தனித்த + நிலை.]*

**தனித்தமிழ்** *tani-t-tamil,* பெ. (n.) பிறமொழிக் கலப்பில்லாத் தூயதமிழ்; the language of Tamil free of its borrowings.

மறுவ. செந்தமிழ்

*[தனி + தமிழ்.]*

**தனித்தன்மை** *tani-t-tanmai,* பெ. (n.) சிறப்பான தன்மை; remarkable quality; special feature. பிறநாட்டுச் செல்வாக்கால், சில நாடுகள் தங்கள் பண்பாட்டுத் தனித்தன்மைகளை இழந்து விடுகின்றன. (இக்.வ.). சரிசமமாகப் பழகுவதே அவருடையத் தனித்தன்மை (உ.வ.).

மறுவ. தனித்துவம்

*[தனி + தன்மை.]*

**தனித்தன்மைப்பன்மை** *tani-t-tanmai-p-panmai,* பெ. (n.) தன்னொருவனையே குறிக்கும் தன்மைப்பன்மை (நன். 332, விருத்.); honorific first person plural.

*[தனி + தன்மை + பன்மை]*

**தனித்தனி** *tani-t-tani,* பெ. (n.) ஒவ்வொன்றாய் அல்லது ஒவ்வொருவராய்; individually, separately, each one, singly.

*[தனி + தனி]*

**தனித்தனியாக** *tani-t-tani-y-āga,* பெ. (n.) ஒவ்வொன்றாய்; part by part. தொலைக்காட்சிப் பெட்டியைப் பழுதுபார்க்கிறேன் என்று, இப்படித் தனித்தனியாகக் கழற்றிப் போட்டு விட்டாயே? (இக்.வ.)

*[தனி + தனி + ஆக.]*

**தனித்தாட்டன்** *tani-t-tāṭṭan,* பெ. (n.) தலைமைக் குரங்கு (யாழ்ப்.); big monkey that leads a solitary life or leads the drove.

*[தனி + தாட்டன்]*

**தனித்தாள்** *tani-t-tāḷ,* பெ. (n.) 1. ஒன்றியாள்; single man or woman, as a bachelor, a widow. 2. உதவியற்ற ஆள்; helpless, forlorn person.

*[தனித்த + ஆள்]*

**தனித்தி** *tanitti,* பெ. (n.) தனியாக விடப் பட்டவள்; a lonely woman forsaken or left helpless. "மிக்க துன்பமுறாநின்ற தனித்தியேன் கண்முன்பே" (சிலப். 18, 44, உரை).

*[தனி + த் + தி = உற்றுழி உதவி ஓம்புதற்கு ஆள் இன்றித் தனியே யுள்ள பெண். 'த்' சாரியை.]*

**தனித்திரு-த்தல்** *tanittiru-,* 4 செ.குன்றாவி. (v.t.) துணையின்றி தனிமையிலிருத்தல்; to get into isolation. "தனித்திரு" (அருட்பா.).

*[தனித்து + இரு-.]*

**தனித்து** *tanittu,* பெ. (n.) 1. தனியாக; alone. 2. வேறுபட்ட முறையில்; in a conspicous way; distinctly.

மறுவ. தனியாக.

*[தனி + தனித்து]*

**தனித்துருமம்** *tani-t-turumam,* பெ. (n.) மூங்கில் (சங்.அக.); bamboo.

*[தனி + துருமம்]*

**தனித்துவம்** *tanittuvam,* பெ. (n.) தனித்தன்மை; வேறுபடுத்திக் காட்டும் தன்மை ; individuality. சுருக்கமாகவும் இயல்பாகவும் எழுதுவது, அந்த எழுத்தாளரின் தனித்துவம் (இக்.வ.).

*[தனித்து + அம் → தனித்துவம். பிறரிடம் அல்லது பிறவற்றிடமிருந்து, வேறுபடுத்திக் காட்டும் தனித்தன்மை. "அம்" பெருமைப் பொருள் பின்னொட்டு.]*

**தனித்தேட்டம்** *tani-t-tēṭṭam,* பெ. (n.) சொந்த வருவாய் (வின்.); self-income.

*[தனி + தேட்டம் = தனியொருவராயிருந்து, துணையின்றித் தேடுந் தேட்டம்]*

**தனித்தேர்வர்** *tan̲i-t-tērvar,* பெ. (n.) தனிப்பட்ட முறையில் தேர்வு எழுதுபவர்; private candidate.

*[தனி + தேர்வர். தனித்தேர்வர் கல்வி நிறுவனங்களில் சேர்ந்து படிக்காமல், எழுதும் தேர்வு]*

**தனிதம்** *tan̲idam,* பெ. (n.) முழக்கம்; roaring sound, especially thunder. "தனிதமுற் றெழுமுருமின்" (பாரத. சஞ். 13).

*[தனித்து → தனிது + அம். 'அம்' பெருமைப்பெயரொட்டு.]*

**தனிதர்** *tan̲idar,* பெ. (n.) தனிமையானவர்; persons in solitude. "தனிதராய்த் தவங்கள் செய்தார்" (குற்றா. தல. 16, 16).

*[தனித்தர் → தனிதர். ஒ.நோ. மனித்தம்→ மனிதம்]*

**தனிநகர்** *tan̲i-nagar,* பெ. (n.) பெருநகரம் ; large town. "புவி கொண்டாடுந் தனிநகர் வளமையீதால்" (பெரியபு. எறிபத். 4).

*[தனி + நகர்]*

**தனிநபர்** *tan̲i-nabar,* பெ. (n.) தனிமனிதன் பார்க்க; see *tan̲i-man̲idan̲.* ஒரு தனிநபருக்காகச் சட்டத்தை மாற்றி எழுத முடியாது (உ.வ.).

*[தனி + நபர்]*

**தனிநிரூபவர்த்தனை** *tan̲i-nirūba-varttan̲ai,* பெ. (n.) எழுத்துக்கூலி; clerical charges or fees. "தனிநிரூபவர்த்தனையைத் தாரு மென்றும்" (சரவண. பணவிடு. 101).

*[தனி + நிரூபம் + Skt. வர்த்தனை]*

**தனிநிலை** *tan̲i-nilai,* பெ. (n.) 1. தனித்த நிலை; solitariness. "பனிமதி நுதலியை . . . தனிநிலை கண்டு" (திருக்கோ. 40, கொளு). 2. ஆய்தம் (நன். 60); (Gram.) the letter ஃ. 3. ஒருசெய்யுளால் வரும் சிற்றிலக்கியம் (இலக். வி. 768, உரை); a poem of one stanza.

*[தனி + நிலை]*

**தனிநிலைப்பெயர்** *tan̲i-nilai-p-peyar,* பெ. (n.) கூட்டத்தில் சுட்டப்படும் தனிப்பட்ட பொருளின் பெயர்; proper noun.

*[தனிநிலை + பெயர். (எ.கா.) காய், ஆடு, தமிழன்]*

**தனிநிலையொரியல்** *tan̲i-nilai-y-oriyal,* பெ. (n.) தாளவேறுபாடுகளுள் ஒன்று (சிலப். 3: 16: உரை. பக். 91) (இசை); a time-measure.

*[தனிநிலை + ஒரியல்]*

**தனிநெல்** *tan̲i-nel,* பெ. (n.) செவிட்டில் 360-ல் ஒரு பகுதியாகிய அளவு (கணக்கதி. 35, உரை.); single grain of paddy, 360 of which make up a ševiḍu.

*[தனி + நெல்]*

**தனிப்பட்ட** *tan̲i-p-paṭṭa,* பெ.எ. (adj.) 1. சொந்த; personal. ஆராய்ச்சி என்பது தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டது (உ.வ.). 2. பிரிக்கப்பட்டுக் குறிப்பிடப்படுகிற; individual. தனிப்பட்ட ஒருவரின் கருத்தைச் சமுதாயத்தின் கருத்தாகக் கொள்ள முடியாது.

*[தனி + தனிப்பட்ட. மொத்தமாகவன்றித் தனியாக, இனம்பிரித்துச் சுட்டுதலைக் குறிக்குஞ் சொல்லென்றறிக]*

**தனிப்பட்டு**[1] *tan̲i-p-paṭṭu,* பெ. (n.) தூயபட்டு (வின்.); pure silk.

மறுவ. அசல்பட்டு.

*[தனி + பட்டு]*

**தனிப்பட்டு**[2] *tan̲i-p-paṭṭu,* பெ. (n.) கழுத்தணியின் ஒற்றைச்சரம் (வின்.); one of the strands of a necklace.

*[தனி + பட்டு]*

**தனிப்படர்மிகுதி** *tan̲i-p-paḍar-migudi,* பெ. (n.) தனிமையில் நினைத்துப் புலம்புந் தலைவியின் நிலை (குறள், 120, அதி.); the state of anguish of the beloved, when parted from her lover.

*[தனி + படர் + மிகுதி]*

**தனிப்பட** *tan̲i-p-paḍa,* வி.எ. (adv.) 1. தானே; in a personal way as a special gesture. 2. சொந்தமாக; of one's own; by oneself. அழைப்பிதழோடு தனிப்பட ஒரு கடிதமும் எழுதியிருந்தார் (உ.வ.).

*[தனி → தனிப்பட]*

**தனிப்படு-தல்** *tani-p-paḍu-, 20* செ.குவி. (v.i.) பிரிந்து ஒன்றியாதல்; to be solitary, lonely; to be alone without company. "இவனந்தோ தனிப்பட்டான்" *(கம்பரா. கும்பகருண. 324).*

*[தனி + படு-.]*

**தனிப்படை** *tani-p-paḍai,* பெ. (n.) தலைவனைத் தானே தெரிந்துகொண்டு, மன்னன் கீழ்ப் போர்செய்யும் படை *(சுக்கிரநீதி, 303);* army - division with its own elected general, fighting under the royal banner.

*[தனி + படை]*

**தனிப்பன்றி** *tani-p-panri,* பெ. (n.) தனியே திரியும் கொடிய காட்டுப்பன்றி (வின்.); solitary boar which is more ferocious and dangerous than others.

*[தனி + பன்றி]*

**தனிப்பாட்டு** *tani-p-pāṭṭu,* பெ. (n.) தனிப்பாடல் பார்க்க; see *tani-p-pāḍal.*

*[தனி + பாட்டு]*

**தனிப்பாடல்** *tani-p-pāḍal,* பெ. (n.) விடுகவி; stray, occasional stanza. தன்னளவில் நிறைவுள்ள செய்யுள்.

*[தனி + பாடல்]*

**தனிப்பாடு** *tani-p-pāḍu,* பெ. (n.) 1. தனிமை; loneliness, solitude. 2. முழுப்பொறுப்பு; sole, undivided responsibility.

*[தனி + பாடு]*

**தனிப்பால்** *tani-p-pāl,* பெ. (n.) கலப்பற்ற பால்; pure, unadulterated milk.

*[தனி + பால்]*

**தனிப்பு** *tani-p-pu,* பெ. (n.) தனிமை பார்க்க; see *tanimai.*

*[தனி + ப் + பு. 'ப்' = சாரியை. 'பு' = சொல்லாக்க ஈறு. ஒ.நோ. கணிப்பு.]*

**தனிப்புடம்** *tani-p-puḍam,* பெ. (n.) திரிதரவில்லாவிருக்கை ஒன்பதனுள் ஒன்று *(சிலப். 8: 25: உரை);* a posture in sitting, one of nine tiritara-villā-v-irukkai.

*[தனி + புடம்]*

**தனிப்புரம்** *tani-p-puram,* பெ. (n.) அரண்மனை *(யாழ். அக.);* palace.

*[தனி + புரம்]*

**தனிப்புறம்** *tani-p-puṟam,* பெ. (n.) ஒதுங்கின இடம் (வின்.); solitary place or state.

*[தனி + புறம்]*

**தனிப்பூடு** *tani-p-pūḍu,* பெ. (n.) உள்ளி முதலியவை (வின்.); onion or other bulbous root.

*[தனி + பூடு]*

**தனிப்பெரும்பான்மை** *tani-p-perumpāṇmai,* பெ. (n.) முழுப்பெரும்பான்மை; absolute majority. தனிப்பெருமான்மையுடன் ஆட்சியைப் பிடிக்கும் கட்சியே மக்களவைக்கு நல்லாட்சி வழங்கும் *(இக்.வ.).*

மறுவ. அறுதிப்பெரும்பான்மை

*[தனி + பெரும்பான்மை]*

**தனிப்பெற** *tani-p-peṟa,* கு.வி.எ. (adv.) தனிமையாக; separately, distinctly. 'தனக்கென்று தனிப்பெற எடுத்துக் கொண்டான்' *(வின்.).*

*[தனி + பெற]*

**தனிப்போர்** *tani-p-pōr,* பெ. (n.) 1. ஒன்றியாக எதிர்க்கை; single combat. 2. கூடுதல் வரவு முழுதும், ஒருவன் வசப்படுத்துகை; monopoly of all the profits by one individual. 3. சீட்டாட்டத்தில் ஒருவனே எல்லாச் சீட்டையும் பிடிக்கை; the winning of all the cards by a player in a card-game.

*[தனி + போர்]*

**தனிமகவு** *tani-magavu,* பெ. (n.) பட்டத்துப் பிள்ளை *(யாழ். அக.);* crown prince.

*[தனி + மகவு]*

**தனிமம்** *tanimam,* பெ. (n.) ஒருதன்மை கொண்ட அணுக்களாலான பொருள்; element.

*[தமி → தனி + அம் → தனிமம்]*

**தனிமனிதன்** *tani-maṉidaṉ,* பெ. (n.) மக்களில் ஒருவர்; one among the person. ஒவ்வொரு தனி மனிதனும் பயன்பெறும் வகையில், சட்டத்தை மாற்றி எழுத வேண்டும் *(இக்.வ.).*

மறுவ. தனியொருவன், தனியன், துணையிலி, ஆதரவற்றவன்.

*[தனி + மனிதன்]*

**தனிமுடி** *tani-muḍi*, பெ. (n.) தன்னாட்சி; sole, undisputed sovereignty. "தனிமுடி கவித்தாளு மரசினும்" (தேவா. 455: 10).

*[தனி + முடி]*

**தனிமுதல்** *tani-mudal*, பெ. (n.) *1.* **கடவுள்;** God, as the one without a second, the Absolute Being. *2.* தனி வாணிகம் (வின்.); trading alone with one's own capital. *3.* கூட்டுவாணிபத்தில், ஒவ்வொரு கூட்டாளியும் இட்ட, விடுமுதல் (வின்.); individual capital of the partners in a company.

*[தனி + முதல்]*

**தனிமூலி** *tani-mūli*, பெ. (n.) நூறாண்டு முதிர்ந்த வேப்பமரத்தின் *அடிப்பகுதி;* bark of margosa tree of 100 years old.

*[தனி + மூலி]*

**தனிமை** *tanimai*, பெ. (n.) *1.* ஒன்றியாயிருக்குந் *தன்மை;* singleness, solitude. இயற்கையெழிலில் மூழ்கும் பாவலர்க்குத் தனிமை இன்றியமையாதது (உ.வ.). *2.* **ஒதுக்கம்** (வின்.); seclusion, retirement. தனிமையான சூழ்நிலை (இக்.வ.). *3.* **ஒப்பின்மை;** incomparableness, matchlessness. "தனிமைத் தலைமை" (சீவக. 1609). *4.* **உதவியற்றநிலை;** forlorn condition, helplessness. "தமியனேன் றனிமை தீர்த்தே" (திருவாச. 12:3).

ம. தனிம

*[தமி → தனி + மை = "மை" பண்புப்பெயர் விகுதி. ஒ. நோ.: பொறுமை, அருமை, தலைமை, அடிமை]*

**தனிமைப்படு[1]-தல்** *tanimai-p-paḍu-*, 20 செ.குவி. (v.i.) **ஒதுக்கப்படுதல்;** to be isolated, வன்முறையை மேற்கொண்டதால், அந்தக்கட்சி தனிமைப்பட்டு விட்டது (இக்.வ.).

*[தனிமை + படு-.]*

**தனிமைப்படுத்து-தல்** *tanimai-p-paḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **பிரித்து ஒதுக்குதல்;** to isolate. பிரிவினைச் சக்திகளைத் தனிமைப்படுத்த, அரசியல் நடவடிக்கையே சிறந்தது (இக்.வ.). மக்களிடமிருந்தோ அல்லது ஒரு குழுவிலிருந்தோ, ஒருவரை எவ்விதச் செயலும் செய்யவொட்டாது தனிமைப்படுத்தி வைத்தல்.

*[தனிமை + படுத்து-.]*

**தனிமைப்பாடு** *tanimai-p-pāḍu*, பெ. (n.) *1.* **ஒன்றியானநிலை;** state of seclusion. *2.* **உதவியற்றநிலை;** helplessness. "அமரிடைத் தனிமைப்பாடு புகுந்துளது" (கம்பரா. மாயாசனக. 74).

*[தனிமை + பாடு]*

**தனிமையாற்றல்** *tanimai-y-āṟṟal*, பெ. (n.) எட்டுவகை வணிகர் குணங்களுள், வாணிபத்தின் பொருட்டுக் குடும்பத்தினின்று பிரிந்துநிற்றலைப் பொறுத்திருக்கை (திவா.); suffering separation from family, one of the eight virtues of merdrant-caste.

*[தனிமை + ஆற்றல்]*

**தனமெனம்** *tana-menam*, பெ. (n.) திப்பிலி மூலம்; root of long-pepper.

**தனிமொழி** *tani-moḻi*, பெ. (n.) *1.* **தொகைப் படாது தனித்துநிற்கும் சொல்;** simple, uncompounded word, dist. fr. toḍar-moḻi. "சொற்றான் இரண்டுவகைப்படும், தனிமொழியுந் தொடர்மொழியுமென" (தொல். சொல். 1. சேனா.) *2.* **பிறமொழியினின்று உண்டாகாத மொழி;** language not derived from any other language.

*[தமி → தனி + மொழி → தனிமொழி. தமிழர்தம் வீட்டில் பிறந்த மொழி; தொன்றுதொட்டு ஒவ்வொரு தமிழனாலும், பேசி வளர்க்கப்பட்ட மொழி. தன்னேரில்லாத் தமிழ்மொழி, அனைத்து நிலைகளிலும், தனிச்சிறப்பு மிக்க உயர்தனிச் செம்மொழி யாகும். எம்மொழியினின்றும் தோன்றாத இயன் மொழி. உலகில் தலைசிறந்து திகழும் எட்டுமொழிக்குடும்பங்களுள் திரவிட மொழிக்குடும்பம் மிகவுந் தொன்மை யானது. பேரறிஞர் எக்கேல் கூற்றுப்படி கி.மு. 50,000இல் குமரிக் கண்டத்தில் முகிழ்த்த, தொன்முது மொழியே தமிழாகும். தமிழின் தனித் தன்மை பற்றியும், தன்னேரில்லாத் தனிச் சிறப்புப் பற்றியும், பின்வரும் தண்டியலங்கார உரைமேற்கோள் பாடலால் அறியலாம்*

*"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழ விளங்கி*
*ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் ஆங்கவற்றுள்*

மின்னேர் தனியாழி வெங்கதிரொன்
றேனையது
தன்னேரில்லாத தமிழ்"

இத் தகு பேராளமான தனிச்சிறப்புகள் பல பெற்ற, ஒண்தீந்தமிழே, திரவிடத்திற்குத் தாய்; ஞாலத்தின் முதன்மொழி. ஆரியம் செய்யுள்வழக்கில் செழிக்கக் கரணியமாக விருந்த மூலமுதன்மொழி. அதுவே என்றுமுள நந்தமிழ்மொழி. தனி மொழியாய்த் திகழும், தமிழ்மொழியின் பத்துவகைச் சிறப்புக் கூறுகளை செந்தமிழ்வேழம், மொழிமீட்பர், பின்வருமாறு, வகைப்படுத்துகிறார்.

1. தமிழ் குமரிநாட்டில் தோன்றியமை.
2. பழந்தமிழ் திராவிடமொழிகட்குத் தாயாயிருத்தல்
3. ஆரிய மொழிகளாகக் கருதப்படும் வடநாட்டு மொழிகளின் அடிப்படை, தமிழாயிருத்தல்.
4. மேலையாரிய மொழிகளிலும், அடிப்படைச் சொற்கள் பல தமிழாயிருத்தல்.
5. இருமுது குரவரைக் குறிக்கும், அம்மை அப்பன் என்னும் தமிழ்சொற்கள், திரிந்தும், திரியாதும் உலகமொழிகளில் வழங்குதல்.
6. எல்லாமொழிக் குடும்பங்களிலும், ஒன்று இரண்டேனும், தமிழ்ச் சொல்லிருத்தல்.
7. ஆரியமொழிகளிலுள்ள கூட்டுச் சொற்கள் எல்லாம், தமிழ்ச் சுட் டெழுத்துக்களின்றே தோன்றியிருத்தல். தமிழ்ச்சுட்டுப் பெயர்கள், முதுபழங் கூறுகளைப் போற்றி வைத்திருக்கும் பாங்கு.
8. தமிழ் இலக்கண அமைதி பல மொழிகளில் காணப்பெறுதல்.
9. பலமொழிகட்கு அல்லது மொழிக் குடும்பங்கட்குச் சிறப்பாகச் சொல்லப் படும், இலக்கண அமைதிகளின் மூலநிலை, தமிழில் இருத்தல்.
10. கி.மு. 1200க்கு முன் இயற்றப்பட்ட ஆரியவேதத்தில், நூற்றுக்கணக்கான தென் சொற்கள் காணப்பெறுதல்.

(எ.கா.) தா, முத்து

தமிழ் என்னும் பொருண்மையினின்று தான், திராவிடம் என்ற சொல்லே தோன்றியுள்ளது. தமிழ் → தமிழம் → த்ரமிளம் → த்ரவிடம் → திரவிடம் → திராவிடம் என்பார், மொழிஞாயிறு.

தன்னிகரற்ற தமிழ்மொழியின் தனிச் சிறப்புப் பற்றிப் பேசுங்கால்,

"ஒரு செல்வத்தாய் வீட்டினின்று ஒருவகைப்பட்ட பலபொருள்களுள், ஒவ்வொன்றை, ஒவ்வொரு புதல்வியும் எடுத்துச் செல்வது போல், தமிழிலுள்ள, ஒரு பொருட் பல சொற்களுள் ஒவ்வொன்றை, ஒவ்வொரு திசை மொழியும் கையாண்டுள்ளது" என்று கூறுகின்றார்.

தொன்முதுமொழியாம் நம் செந்தமிழ் மொழியினின்று, கி.பி. 7ஆம் நூற்றாண்டு முதலே, தெலுங்கு முதலான திராவிட மொழிகள் பிரியத் தொடங்கின என்று, 'ஆந்திர திராவிட பாஷா' என்ற நூலில், குமாரிலபட்டர் கூறுகிறார். பேரா. சுந்தரம் பிள்ளை அவர்கள், இந்நிலையினைப் பாடுங்கால்,

"கன்னடமுங் களிதெலுங்குங் கவின்
மலையாளமுந் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல
வாயிடினும்
ஆரியம்போல்உலகவழக் கழிந்தொழிந்து
சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து
வாழ்த்துதுமே."

என்று வியந்து போற்றுகின்றார். இஃது உயர்வு நவிற்சியன்று. உண்மைநவிற்சி என்று உணர்க.

யாவரும் மறுக்கவியலாத் தமிழ்ச் சொற்களின், கட்டமைப்பும், இயன் மொழிச்சிறப்பும் பற்றிப் பாவாணர் கூறுங்கால்,

"தமிழ் இயன்மொழி யாதலாலும், பொது மக்கள் அமைத்த வழக்குமொழியாத லாலும், அதன் அனைத்துச்சொற்களும் கரணியக் குறிகளாகவே அமைகின்றன.

*வடமொழி திரிமொழியாதலாலும், புலமக்கள் அமைத்த, செயற்கை நூன்மொழியாதலாலும், அதில் இடுகுறிப் பெயர்கள் பல அமைந்துள்ளன" (த.வ. 238). என்று கூறுகின்றார்.*

*பொறுப்பிலே பிறந்து, தென்னன் புகழிலே வளர்ந்த, நம் தெய்வத்தமிழ் மொழி, எஞ்ஞான்றும், எந்நிலையிலும், மூவாமொழி நலங்கெழுமிய சொற் கட்டமைப்புடன் திகழ்கிறது. பிறமொழி களினின்று பிறவாப்பெருமையுடன் தனிமொழியாய் தனித்து (தமித்து) நின்றிலங்குகிறது.*

*கி.மு. 7ஆம் நூற்றாண்டு முதல், வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்துள், கடன் கொண்டு தழைக்காத, தன்னிகரற்ற சொல் வளத்துடன் திகழ்கிறது. திரவிட மொழிகள் தமிழினின்று பிரியுங்கால், பல சொற்களைத் தம்முடன் கொண்டு சென்றுள்ளன. மாந்தரினத்தின் முதற் பெற்றோர் மொழியிலிருந்து வழிவழி வந்தவையே, தமிழ் திராவிடச் சொற்களென்பார் கால்டுவெலார். இவர் மேலும் கூறுங்கால், திரவிடச் சொல் வடிவங்களும், வேர்களும் இந்து திரவிட மொழியின் ஒரு பகுதியே என்பார். இக்கூற்று, தமிழ் 'தனிமொழி' என்பதற்குக் கால்டுவெலார் தரும் நற்சான்று எனலாம்.*

*உயர்வான் உயர்மதிக் கூடலில் ஆய்ந்த ஒண்தீந்தமிழே ஞாலச்செம்மொழிகளுள், தனிசிறந்த தொன்முது மொழியாகும். இறுதியாக குறிக்கத்தக்க தனிச்சிறப்பு வருமாறு:*

*தமிழ்மொழியில், மூவிடப் பகரப்பெயர்கள் திரிந்தும், திரியாமலும் உலகமொழிகள் அனைத்திலும், பரவலாகக் காணப் படுகின்றன. எண்ணுப் பெயர்களையும், வேற்றுமையுருபுகளையும், வினையீறு களையும்விட, தமிழிலுள்ள தன்மை முன்னிலை ஒருமைப் பெயர்கள், மிகுந்த நிலைப்புத்திறனுடன், திகழ்கின்றன.*

*பல்லூழிக் கடப்பிலும், மிகச் சிறிதே திரியுந்தன்மையில் அமைந்துள்ளன. (தவ. 25). இன்னோரன்ன ஈடில்லாத் தனித்தன்மை களாற்றான், தமிழ்மொழியைத் தனிமொழி என்று செ.ப.க. அகரமுதலி குறித்தது என்றறிக.]*

**தனியடியார்** *tani-y-aḍiyār*, பெ. (n.) தனித்தனி திருவுருவமாக எண்ணப்படும் அறுபத்துமூவரான நாயன்மார்; the sixty-three canonized Šaiva šaints regarded individually, dist. fr. togai-y-aḍiyār.

*[தனி + அடியார்]*

**தனியரசாட்சி** *tani-y-arasāṭci*, பெ. (n.) தனியாட்சி (வின்.); sole sovereignty.

*[தனி + அரசு + ஆட்சி]*

**தனியன்** *taniyan*, பெ. (n.) *1.* ஒன்றியாள்; single man as bachelor. *2.* ஒன்றியான–வன்–து; single person, animal or thing. "தாயுமிலி தந்தையிலி தான்றனியன்" (திருவாச. 12:3). 3. இனத்தினின்றும் பிரிந்தமையால், கடுஞ்சினங்கொண்ட விலங்கு; wild beast detached from the herd and thus rendered ferocious. 4. ஒரு நூலை அல்லது ஆக்கியோனைப் புகழ்ந்துகூறும் தனிச் செய்யுள் (திவ்.); stray verse in praise of an author or a work.

*[தனி + அன்]*

**தனியா** *taniyā*, பெ. (n.) கொத்தமல்லி (மலை.); coriander.

தெ. தனியாலு.

**தனியார்** *taniyār*, பெ. (n.) தனிப்பட்டவர், தனிப்பட்டவருக்குச் சொந்தமானது; private ownership. தனியார் ஊர்திகள் மட்டும் உள்ளே அனுமதிக்கப்படும் (இக்.வ.). மருத்துவம் செய்வதற்கு அரசு மருத்துவமனையில் சேராமல், தனியார் மருத்துவமனையில் சேர்ந்துள்ளார் (இக்.வ.).

*[தனி + ஆர் = தனியார். "ஆர்" படர்க்கை ஈறு]*

**தனியான்** *taniyān*, பெ. (n.) தனியன்; single person as bachelor.

*[தனியன் → தனியான்.]*

**தனியுடைமை** *tani-y-uḍaimai,* பெ. (n.) தனியாரின் சொத்துரிமை; right of holding private property. தனியுடைமைச் சமுதாயத்தில் ஏழ்மையைத் தவிர்க்க இயலாது (இக்.வ.).

*[தனி + உடைமை]*

**தனியுப்பு** *tani-y-uppu,* பெ. (n.) 1. சிறுநீருப்பு (மூ. அ); salt of urine. 2. அமுரிச்செடி; a plant.

*[தனி + உப்பு]*

**தனியூர்** *tani-y-ūr,* பெ. (n.) பெருநகர் (S. I. I. ii, 125); large town. "தனியூராங் கருவூரில்" (பெரியபு. புகழ்ச்சோழ. 11).

*[தனி + ஊர்]*

**தனியெழுத்து** *tani-y-eluttu,* பெ. (n.) கூட்டெழுத்துகள் போலன்றித் தனித்தனி பிரிந்து தோன்றும்படி, எழுதும் எழுத்து (வின்.); letters written separately without being mixed with others. dist. fr. kūṭṭeluttu.

*[தனி + எழுத்து]*

தமிழில் வருடம், மாதம், நாள், போன்ற கூட்டெழுத்துகள் வழக்கில் இருந்தன. இருபதாம் நூற்றாண்டில் அவை வழக்கொழிந்தன.

**தனியே** *taniyē,* கு.வி.எ. (adv.) யாருமில்லாச் சூழலில்; all alone; privately. குழந்தையைத் தனியே விட்டு விட்டு எங்கே சென்றாய் (உ.வ.).

**தனில்** *tanil,* பெ. (n.) கள்; toddy.

**தனிவட்டி** *tani-vaṭṭi,* பெ. (n.) 1. நெடுவட்டி (கணி.) கூட்டுவட்டிக்கு மாறானது; as against compound interest. 2. கொடுத்த பணத்திற்கு ஆண்டுதோறும் கணக்கிடப்படும் வட்டி; simple interest.

*[தனி + வட்டி]*

**தனிவல்லி** *tani-valli,* பெ. (n.) குப்பைமேனி; rubbish plant, a herb.

மறுவ. தனிவலிப்பெருமாள்

*[தனி + வல்லி → தனிவல்லி. வல்லி = கொடி.]*

**தனிவலி** *tani-vali,* பெ. (n.) மகப்பேற்று வலி; labour pain.

*[தனி + வலி]*

**தனிவலிப்பெருமாள்** *tani-vali-p-peru-māḷ,* பெ. (n.) தனிவல்லி பார்க்க; see *tani-valli.*

*[தனிவலி + பெருமாள்]*

**தனிவழி** *tani-vaḻi,* பெ. (n.) துணையற்ற வழி; lonely way. "தனிவழி போயினா ளென்னுஞ் சொல்" (திவ். நாய்ச். 12:3).

*[தனி + வழி]*

**தனிவீடு** *tani-vīḍu,* பெ. (n.) 1. பக்கத்தில் வேறு வீடு இல்லாத, ஒற்றைவீடு; solitary house. 2. ஒற்றைக்குடித்தனமுள்ள வீடு (இ.வ.); house occupied by only one tenant. 3. ஒரே சதுரமாயுள்ள வீடு (வின்.); house with only one square. 4. துறக்கம் (வின்.); final bliss.

*[தனி + வீடு]*



**தனிவெள்ளி** *tani-veḷḷi,* பெ. (n.) 1. கலப்பற்ற தூயவெள்ளி ; pure or unalloyed silver. 2. தனிப்பட நிற்கும் விண்மீன் (வின்.) ; lonely star.

*[தனி + வெள்ளி]*

**தனு**[1] *tanu,* பெ. (n.) 1. உடல்; body. "தனுவொடுந் துறக்க மெய்த்" (கம்பரா. மிதி. 108). 2. சிறுமை (பிங்.); smallness, minutenss, delicateness, subtleness.

*[தன் + உ → தனு = தன்னுடைய உடல்]*

**தனு**[2] *tanu,* பெ. (n.) அசுரர்க்குத் தாயான காசிபர் மனைவி; wife of kāśyapar and mother of the Ašurar. "தானவரே முதலோரைத் தனுப் பயந்தாள்" (கம்பரா. சடாயுகாண். 26).

**தனு**[3] *tanu,* பெ. (n.) 1. வில்; bow. "தண்டு தனுவாள் பணிலநேமி" (கலிங். 226). 2. தனுராசி (சிலப். 17, பக். 453); sagittarius in the zodiac. 3. மார்கழித்திங்கள்; the month of mārgaḻi.

4. நான்குசாண் கொண்ட நீட்டலளவை ; a linear measure = 4 சாண், as the length of a bow. "கரமோர் நான்கு தங்குது றனு" *(கந்தபு. அண்டகோ. 6). (249 அங்குல நீளம்).*

*[தன் + உ → தனு. தனு = உடல். உடல் போன்று வில், வளைந்து நிமிருந்தன்மை யால், வளைந்த 'வில்' தனு எனப்பட்டது.]*

**தனு**[4] *tanu*, பெ. (n.) 1. எருத்தின் அதிரொலி *(முக்காரம்)*; bellowing of a bull. 2. ஊன்றிப் பேசுகை; stress of voice, accent, emphasis in speaking *(செ.அக.)*.

**தனுக்காஞ்சி** *tanu-k-kāñci*, பெ. (n.) செவ்வழி யாழ்த்திறங்களுள் ஒன்று *(பிங்.)*; a secondary melody-type of the mullai class.

*[தனி + காஞ்சி]*

**தனுக்கோடி** *tanu-k-kōḍi*, பெ. (n.) இராமேசுவரம் தீவின் இறுதிமுனை; the tip of Rāmēšwaram Island. "தனுக்கோடி காத்தவனே ரகுநாத தளசிங்கமே" *(செந்தமிழ். vi, தளசிங்கமாலை).*

*[தனு + கோடி]*

**தனுசன்** *tanušan*, பெ. (n.) மகன் *(வின்.)*; son.

**தனுசாத்திரம்** *tanu-šāttiram*, பெ. (n.) வில் வித்தை; the art of archery *(செ.அக.)*.

*[தனு + சாத்திரம்]*

**தனுசாரி** *tanu-šāri*, பெ. (n.) 1. இந்திரன்; Indra. 2. திருமால்; Viṣṇu *(செ.அக.)*.

*[தனு + சாரி]*

**தனுசு** *tanušu*, பெ. (n.) வில்; bow.

*[தனு → தனுசு]*

**தனுசை** *tanušai*, பெ. (n.) மகள் *(யாழ்.அக.)*; daughter.

*[தனுசு → தனுசை.]*

**தனுத்தம்பம்** *tanu-t-tampam*, பெ. (n.) ஊதை நோய் வகை; tetanus *(செ.அக.)*.

*[தனு + தம்பம்]*

**தனுத்திரம்** *tanuttiram*, பெ. (n.) கவசம் *(வின்.)*; coat of milk.

*[தனு + திறம் → திரம். உடலுக்குத் திறமை மிகுதற்கு அணிந்து கொள்வது]*

**தனுத்துருமம்** *tanu-t-turumam*, பெ. (n.) (வில்லுக்குதவும் மரம்) மூங்கில் *(மலை.)*; bamboo, as material for a bow.

*[தனு + தருமம்]*

**தனுத்துவசம்** *tanu-t-tuvašam*, பெ. (n.) தனுத்துவசை பார்க்க; see *tanu-t-tuvašai*.

*[தனு + துவசம்]*

**தனுத்துவசை** *tanu-t-tuvašai*, பெ. (n.) அருநெல்லி *(மூ. அ.)*; otaheite goosberry .

*[தனு + துவசை]*

**தனுநபம்** *tanunapam*, பெ. (n.) வெண்ணெய் *(யாழ். அக.)*; butter.

**தனுப்பச்சை** *tanu-p-paccai*, பெ. (n.) பச்சைக்கல் வகை *(யாழ். அக.)*; a kind of green stone.

*[தனு + பச்சை]*

**தனுமணி** *tanu-maṇi*, பெ. (n.) ஒரு போரில் ஆயிரவரைக்கொன்ற வீரர் வில்லிற் கட்டும் மணி ; a small bell tied to the bow of a warrior to indicate that he has slain 1000 men in a battle. "சயமுறு வீரரங்கைத் தனுமணி யொலியினானும்" *(திருவாலவா. 44, 43).*

*[தனு + மணி]*

**தனுமேகசாய்கை** *tanu-mēga-šāygai*, பெ. (n.) நீலக்கல் *(யாழ். அக.)*; blue-stone.

*[தனு + மேகம் + சாய்கை]*

**தனுர்மாசம்** *tanur-māšam*, பெ. (n.) சிலை (மார்கழி) மாதம்; month of Mārgaḻi = December - January.

**தனுர்வாதம்** tanur-vādam, பெ. (n.) தசைவற்பு (இசிவு, வளிநோய் வகை) *(சீவரட். 365)*; tetanus.

*[தனு + வாதம்]*

**தனுர்வாயு** *tanur-vāyu*, பெ. (n.) காற்றுப் பிடிப்பு நோய் (தனுர்வளி, கசிவு நோய் வகை); tetanus.

*[தனுர் + வாயு]*

**தனுர்வித்தை** *tanur-vittai*, பெ. (n.) விற்பயிற்சி முறை; science of archery.

*[தனுர் + வித்தை]*

**தனுர்வேதம்** *tanur-vēdam*, பெ. (n.) நால்வகை துணை வேதங்களுள் ஒன்றாகிய வில்வித்தை; science of archery, one of four upa-vēdam *(செ.அக.).*

*[தனுர் + வேதம்]*

**தனுவைப்புநஞ்சு** *tanu-vaippu-nañju*, பெ. (n.) சரகண்ட வைப்பு நஞ்சு; a mineral poison.

*[தனு + வைப்புநஞ்சு]*

**தனுரசம்** *tanu-rašam*, பெ. (n.) (உடலின் ரசம்) வியர்வை *(வின்.);* perspiration, as the sap of the body.

**தனுரத்தினம்** *tanu-rattinam*, பெ. (n.) சூடாலைக்கல் *(யாழ்.அக.);* a kind of stone.

*[தனு + இரத்தினம்]*

**தனுராகம்** *tanu-rāgam*, பெ. (n.) மாணிக்க வகை *(யாழ். அக.);* a kind of ruby.

*[தனு + ராகம்]*

**தனுருகம்** *tanu-rugam*, பெ. (n.) தலைமுடி *(யாழ். அக.);* hair.

**தனுரேகை** *tanu-rēgai*, பெ. (n.) வில்வடிவான கைவரி; curved lines in the palm like a bow.

*[தனு + இரேகை]*

**தனுவாரம்** *tanu-vāram*, பெ. (n.) போர்க்கவசம் *(யாழ். அக.);* coat of mail.

*[தன் + உ = தனு; வார் + அம் = வாரம். தனு + வாரம்]*

**தனுவிரணம்** *tanu-v-iranam*, பெ. (n.) சினைப்பு *(வின்.)* முகப்பரு; pimple.

*[தனு + இரணம்]*

**தனுவிருக்கம்** *tanu-virukkam*, பெ. (n.) ஆச்சா *(மலை.);* sal tree.

**தனுவேதம்** *tanu-vēdam*, பெ. (n.) தனுர்வேதம், வில்வித்தை; art of archery. "தனுவேதம் பணி செய்ய" *(கம்பரா. குலமுறை. 23).*

*[தனு + வேதம்]*

**தனுவேதி** *tanu-vēdi*, பெ. (n.) வில்லாளி ; skilled archer. "களத்தூடு விழவென்ற தனுவேதியும்" *(பாரத. பன். 92).*

*[தனு + வேதி]*

**தனுவேர்** *tanu-vēr*, பெ. (n.) குதிரைச்சுழிவகை *(தஞ். சர., iii, 117);* a curl mark on the body hair in horses.

*[தனு + வேர்]*

**தனேசன்** *tanēšan*, பெ. (n.) குபேரன் *(வின்.);* Kubēra.

*[தனு + ஈசன்]*

**தனை** *tanai*, பெ. (n.) அளவு குறிக்கப் பிறசொல்லின் பின்வரும் ஒரு சொல்; a particle denoting quantity and time-limit, as ittanai, irukkundanai. "இத்தனையும் வேண்டு மெமக்கேலோ ரெம்பாவாய்" *(திருவாச. 7:3).*

ம. தன.

*[தனு → தனை. இத்தனை, எத்தனை, இருக்குந்தனை, செல்லுந்தனை போன்றவாறு.]*

**தனையள்** *tan-aiyal*, பெ. (n.) தனையை, மகள்; daughter. "மிகுவலியொடுந் தனைய டோன்றும்" *(கம்பரா. தாடகை. 29).*

*[தன் + ஐயள்]*

**தனையன்** *tan-aiyan*, பெ. (n.) (தனயன்) மகன்; son. "நேமியான் றனையனும்" *(கம்பரா. பள்ளி. 39).*

*[தன் + ஐயன்]*

**தனையை** *tan-aiyai*, பெ. (n.) மகள்; daughter. "தவ்வையாமெனக் கிடந்தனள் கைகயன் றனையை" *(கம்பரா. மந்தரை. 88).*

*[தன் + ஐயை]*

# தா

**தா**[1] *tā*, 'த்' என்ற மெய்யும் ஆ என்ற உயிரும் சேர்ந்த, உயிர்மெய்யெழுத்து; the consonant of த் and ஆ *(செ.அக.).*

*[த் + ஆ = தா]*

**தா**[2] *tā*, ஒலிப்பிலா வல்லினப் பல் வெடிப் பொலியான ஏழாவது நெடில்; the seventh consonant being the voiceless dental stop.

*[மேல் அண்ணத்தின் நுனியை நாக்கு அழுத்திவரும் ஒலியும், பிறகு உடனேயே, வாய் அங்காந்து தொடர்ந்து ஒலித்தலால் வரும் ஒலியும் சேர்ந்து பிறப்பதால், தகரவாகார உயிர்மெய் உண்டாகிறது. இதனைத் தொல்காப்பியர் பிறப்பியலில், "அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின் நாநுனி பரந்து மெய்யுற வொற்றத் தாமினிது பிறக்குந் தகாரம் நகாரம்" என்று கூறுகிறார். (தொல். எழுத். 93.).]*

தகரஆகாரம் வரி வடிவ வளர்ச்சி: கி.மு. 3ஆம் நூற்றாண்டு முதல் விசயநகர காலம் வரை: இதன் வடிவம் 'த்'கர உயிர்மெய் எழுத்திற்கு நேர்ந்த முறையிலேயே அமையும்.

1. அசோகன் குகையெழுத்தில் காணப்படும் தமிழிக்கல்வெட்டில் (கி.மு. 3) 
2. கி.மு. 3 முதல் கி.பி. முதல் நூற்றாண்டு வரை குகைக் கல்வெட்டுகளில் 
3. கி.பி.5ஆம் நூற்றாண்டில், செங்கம் வட்டத்துச் சோமாசிமாறன் தமிழ் வெட்டெழுத்து (வட்டெழுத்து)க் கல்வெட்டில் 
4. கி.பி. 7ஆம் நூற்றாண்டில், பல்லவ மகேந்திரவருமன் - வல்லம் கல்வெட்டில், இரு வரிவடிவ அமைப்புகள் காணப்படுகின்றன. 
5. கி.பி. 8ஆம் நூற்றாண்டில் 2ஆம் பல்லவ பரமேச்சுவரவருமனின் திருவதிகைக் கல்வெட்டில்... 
6. கி.பி. 9 முதல் 12 ஆம் நூற்றாண்டு வரை, தஞ்சை இராசராசன் கல்வெட்டில்.... 
7. திருவாலங்காடு இராசேந்திர சோழன் காலம் முதல், மூன்றாம் குலோத்துங்கன் காலக் கல்வெட்டுகள் வரை 
8. விசயநகர மன்னர் காலத்தில், அதாவது கி.பி.14ஆம் நூற்றாண்டு முதல் இக் காலம் வரை, 

**தா**[3]**-தல் (தருதல்)** *tā-*, 13 செ.குன்றாவி. (v.t.) *1.* **ஒப்போனுக்குக் கொடுத்தல்** *(தொல். சொல். 446);* to give, as to equals. *2.* **ஈந்தருளுதல்;** to grant, bestow. *3.* **அறிவுறுத்துதல்;** to instruct. "நாதனாரருள் பெறு நந்தி தந்திட" *(கந்தபு. அவையடக். 8).* 4. **பரிமாறுதல்;** to serve. 'இன்சோறு தருநர்' *(மதுரைக். 535).* 5. **அடைவித்தல்;** to cause to get. "பொருபடை தருஉங் கொற்றமும்" *(புறநா. 35: 25).* **6. படைத்தல்;** to create, form, construct. "தருமதேவதை . . . தருதலாற் றருமதீர்த்தம்" *(சேதுபு. சக்கர. 14).* **7. மகப் பெறுதல்;** to beget, generate, procreate. "புயங்கமெலாஞ் சுதையென்னு மாது தந்தாள்" *(கம்பரா. சடாயுகாண். 28).* **8. நூல் முதலியன இயற்றுதல்;** to produce, compose. "சடையன் வெண்ணெய் நல்லூர் வயிற் றந்ததே" *(கம்பரா. சிறப்புப். 11).* **9. உணர்த்துதல்;** to denote; express. "இறந்தகாலந் தருந்தொழி விடைநிலை" *(நன்.142).* **10. சம்பாதித்தல், பொருள் தேடுதல்;** to acquire, gather. "தாளினாற் றந்த விழுநிதியும்" *(திரிகடு. 47).* **11. கைப்பற்றுதல்;** to capture. "ஆரெயில் பலதந்து" *(புறநா. 6:14).* **12. அழைத்தல்;** to call, summon. "மற்றவட் டருகவீங்கென" *(சிலப். வழக்குரை. 45).* **13. மரம் முதலியன பயன் கொடுத்தல்** (வின்.); to yield, bring forth, as trees. *16.* **ஒரு துணைவினை;** an auxiliary added to verbs. "வண்டாய்த் திரிதருங் காலத்து" *(நாலடி, 284).*

ம. தா, தருக, தரிக; **க.** தா, தர், தார்; தெ. தெச்சு (கொண்டு வருதல்); **து.** தர்பாபுனி, தர்புடுன்னி; **பட.** தா; **கோத.** தார்; குரு. தனனெ; **துட.** தோர்; **குட.** தர், தா; இரு. தர்கெ; **கோண்.** ததந்தானா; **கூ.** தப, தா; குவி. தாசலி, தனை; **கொலா,** கொ-த, கொ-தர்; **பிரா.** கதரின்; **க.** தினிங்க்; Gk. dictomi; L. do.

*[தன் → (தர்) → தரு → தா → த. தரு = தருகிறான், தருவான், தருகை, தரவு. தா →*

*தானம். தருதல் = மகப்பெறுதல். மரஞ்செடிகள் பயன்தருதல். தந்தவள் = தாய். (வ.வ.9)]*

பழந்தமிழ் திராவிடத்திற்குத் தாய் என்னும் முன்மையையும், ஆரியத்திற்கு மூலமென்னும் உண்மையையும், உணர்த்துஞ் சொல்லாகத் 'தா' என்னும் முந்துதமிழ்ச்சொல் விளங்குகிறது. தன்னிலையில் ஒத்த தன்மையனுக்குத் தருதலென்னுஞ் சிறப்புப் பொருளினையே, 'பழந்தமிழ் வடிவமான 'தா' குறிக்கும் என்பார் மொழிஞாயிறு. தொல்காப்பியரும், இக் கருத்திற்கு அரணமைக்கும் பான்மையில், 'தா' என் கிளவி ஒப்போன் கூற்றே" (தொல். சொல். 929) என்று மொழிகின்றார்.

### பொது சிறப்பு – பொருட்பாகுபாடு

"இலவயமாகக் கொடுத்தல்" என்னும் பொதுப் பொருளில், வடமொழியில் தா (da) என்றும், இலத்தின், துடவம் முதலான மொழிகளில் 'தோ' (do) என்றும், வழங்குகின்றது.

தருதல், ஈதல், கொடுத்தல் எனும் வினை பற்றித் தொல்காப்பியர் கூறுங்கால்,

"ஈதா கொடு எனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய"

அவற்றுள்,

"ஈயென்கிளவி இழிந்தோன் கூற்றே
தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே
கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே"
*(தொல். சொல். 929-930)*

என்று மொழிகின்றார்.

### பொது சிறப்புப் பொருட்பாகுபாடு பற்றி மொழிஞாயிறு:–

புதுப்பெருக்கு நீரைக் குறிக்கும் 'வெள்ளம்' என்னும் சொல், தன் சிறப்புப்பொருளை யிழந்து, 'நீர்' என்னும் பொதுப்பொருளில் மலையாளத்திலும், விடைசொல்லுதலைக் குறிக்கும், 'செப்பு' என்னுஞ்சொல், தன் சிறப்புப்பொருளையிழந்து, 'சொல்லுதல்' என்னும் பொதுப்பொருளில் தெலுங்கிலும், வழங்குவது போன்றே, ஒத்தோனுக்குக் கொடுத்தலைக் குறிக்கும். 'தா' என்னுஞ் சொல்லுந் தன் சிறப்புப்பொருளை யிழந்து, கொடுத்தலென்னும் பொதுப்பொருளில் ஆரியமொழிகளில், வழங்குகின்றதென்றறிக.

### 'தா' என்பது தமிழின் தலைமைத்தன்மை நாட்டும் தமிழ்ச்சொல்:–

தன்னோரில்லாத் தமிழின், 'தலைமைத் தன்மையை நிலைநிறுத்தும் சொற்களுள், 'தா' என்பதும் ஒன்றாகும். தொன்றுதொட்டு இருவகை வழக்கிலும் வழங்கிவருதலும், அடிப்படையைச் சேர்ந்த எளிய சொல்லாய் இருத்தலும், சிறப்புப்பொருள் கொண்டு ஏனையிரு தூய தென்சொற்களுடன் தொடர்புடைமையும், 'தா' என்பது தமிழ்ச் சொல்லே என்பதற்குத் தக்க சான்றுகளாம்.

தரவு, தருகை, தாகு, தத்தம், தானம் ஆகிய சொற்களெல்லாம் 'தா', என்னும் முதனிலை யினின்று திரிந்தவையே. இறுதியிரண்டும் வடமொழியில் வழங்குவதனாலேயே வடசொற்போல் தோன்றுகின்றன.

இனி 'தா' என்னும் வினைச்சொல் படர்க்கை இடத்தில் வாராதென்று விலக்கப்பட்டு இருப்பதும், அது தமிழ்ச்சொல்லே யென்பதை உணர்த்தும்.

அவற்றுள்,

"தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயீரிடத்தே"

இப் பொருள் வரம்பு ஏனைமொழிகளில் இல்லை.

**தா**[4] *tā-*, பெ. (n.) *1.* **வலிமை;** strength, might. "தாவே வலியும் வருத்தமு மாகும்" *(தொல். சொல். 344).* *2.* **துன்பம்,** நோவு, பேரிடர்; pain, distress, affliction. "தாவிடுமி னென்றான்" *(சீவக. 749).* *3.* **கேடு, வீழ்ச்சி, அழிவு** (தொல்.சொல்: 344, உரை); decay, destruction. *4.* **பாய்கை, தாக்குகை, குதிக்கை;** attacking, rushing, jumping. "கருங்கட் டாக்கலை" *(தொல். சொல்.: 344, உரை).* *5.* **பகை** (சூடா.); hostility. *6.* **குற்றம்;** fault, blemish. "தாவில் வெண்கவிகை" *(கம்பரா. கோலங்காண். 1).* *7.* **குறை;** defect, deficiency. "தாவரும் பக்க மெண்ணிரு கோடியின் தலைவன்" *(கம்பரா. இலங்கைக் கள், 40).*

**தா**[5] *tā-*, *1.* **பிள்ளையைத் தந்தவன் (அப்பன்);** father. *2.* **தாதா, தாதை (தாத்தா);** grand father.

தெ., க. தாத.

*[த. தா → வ. தா (da.) (இ.வே.) = தருபவன். தள் → தரு → தார் → தா (வ.வ. 174). ஒ.நோ.: வள் → வரு → வார் → வா.*

*'தா' என்பது, பெரும்பாலும் தந்தையையே குறிக்கும். பிள்ளை பெறுவதில், தாய் தந்தையர் இருவர் வினையுங் கலந்திருப்பதால், அவ் விருவருக்கும், 'தா' என்பது பொதுப்பெயராம். தா + தா →*

*தாத்தா. தந்தையின் தந்தையாகிய பாட்டன்.*

*ஈன்றாளுக்கு ஆய், தாய், (தம் + ஆய்) முதலிய தனிப்பெயர்கள் வழங்குவதாலும், பிள்ளையைத் தோற்றுவிப்பவன் தந்தையே யாதலாலும், 'தா' என்பது சிறப்பாகத் தந்தையையே, குறிக்குமென்க (வ.வ.174)]*

**தா**[6] *tā-*, பெ. (n.) *1.* அத்தி; fig. *2.* தாண்டுகை; jumping. *3.* நரிவால்; jackal's tail. *4.* மார்பு; breast. *5.* கருப்பை; the womb. *6.* இடுப்பு; hips. *7.* வலி; pain. *8.* கொடியன்; cruel person.

க., ம. தா

**தாஅவண்ணம்** *tāa-vaṇṇam*, பெ. (n.) இடையிட்டு வரும் எதுகையுடைய சந்தம் (தொல். பொருள். 527); rhythm effected by making the third or the fourth foot rhyme with the first.

*[தா(வு) + வண்ணம். தாஅ – அளபெடை]*

**தாஅனாட்டித்தனாஅதுநிறுப்பு** *tāanāṭṭi-t-tanāadu-niṟuppu*, பெ. (n.) எழுவகை மதங்களுள் தானாக ஒன்றனைக் கூறி, அதனை நிலைநிறுத்துகை (நன். 11); laying down a proposition and establishing it by evidence, one of seven madam. q.v.

*[தான் + நாட்டி + தனது + நிறுப்பு, தான் → தன் என்றும், தனது → தனாஅது என்றும் யாப்பிசை நோக்கி அளபெடுத்தது. தான் நாட்டி = தன் கொள்கையைத் தானே உறுதிப்படுத்தி கொள்ளுதல். தனாது நிறுத்தல் = தான் நன்கு தெளிவுபடுத்திக் கொண்ட கொள்கைகளை அல்லது கருத்தைக் கற்றோர் முன், நிலைநாட்டுதல்]*

**தாக்கடைப்பன்** *tākkaḍaippaṉ*, பெ. (n.) மாட்டுநோய் வகை (மாட்டுவா. 75); a cattle-disease.

*[தாக்கு + அடைப்பன்]*

**தாக்கணங்கு**[1] *tākkaṇaṅgu*, பெ. (n.) *1.* காம நோயை உண்டாக்கி வருத்துந் தெய்வம்; a goddess who smites men with love. "தாக்கணங்கு தானைக்கொண் டன்ன துடைத்து" (குறள், 1082). *2.* திருமகள்; Thirumagaḷ. "தாக்கணங் குறையுந் தடந்தாமரை" (சீவக. 871).

*[தாக்கு + அணங்கு]*

**தாக்கணங்கு**[2] *tākkaṇaṅgu*, பெ. (n.) மலைமகளின் படை வீராங்கனைகளான பெண் பூதங்களுள் ஒரு வகை; a class of female goblins attendant on Malaimagaḷ, dist. fr. nōkkaṇaṅgu. "நோக்கணங்கிற்கு எதிராயது" (அருணா. பு. இடப்பாகம். 10).

*[தாக்கு + அணங்கு]*

**தாக்கணி**[1]**-த்தல்** *tākkaṇi-*, 4 செ.குன்றாவி. (v.t.) செய்முறைகளுடன் மெய்பித்தல், எண்பித்தல்; to demonstrate, prove by evidence. "அதைத் தாக்கணிப்பேன்" (வின்.).

*[தாக்கு + அணி-.]*

**தாக்கந்தம்** *tākkandam*, பெ. (n.) துவரை வகையுளொன்று (அணு மூலுதுவரை); a kind of dholl (சா.அக.).

**தாக்கம்**[1] *tākkam*, பெ. (n.) *1.* அடிக்கை, தாக்கு, மோதுகை, முட்டுகை (இ.வ.); attack, assault, hit. *2.* எதிர்தாக்குகை (வின்.); reaction, counter-action. *3.* வேகம், ஆற்றல், வலிமை, உடலுறுதி (வின்.); force; strength; power, as of blow, medicine or fire; momentum. *4.* கனத்திருக்கை (யாழ்.அக.); onerousness, heaviness. *5.* வீக்கம் (யாழ்.அக.); swelling. *6.* மிக்கிருக்கை (வின்.); preponderance. *7.* ஒன்றன் விளைவு; influence of things in other places. சாதிச் சண்டையின் தாக்கம் தேர்தலில் எதிரொலிக்கும். மேல்நாட்டுப் பண்பாட்டின் தாக்கத்தைத் தலைவர் பேச்சில் காணமுடிகிறது (இக்.வ.).

*[தாக்கு → தாக்கம்.]*

**தாக்கம்**[2] *tākkam*, குவி.எ. (adv.) முதற் கொண்டு; from, onward. நாளைத் தாக்கம் (இ.வ.).

*[தாக்கு → தாக்கம்]*

**தாக்கம்**[3] *tākkam*, பெ. (n.) எரிக்கை (சங்.அக.); burning.

*[தாக்கு → தாக்கம்]*

**தாக்கமாயிரு-த்தல்** *tākkam-āy-iru-,* 3 செ.கு.வி. (v.i.) **புண், கட்டி முதலியன குத்துதல்** (வின்.); to throb with pain, as a boil.

*[தாக்கம் + ஆய் + இரு-]*

**தாக்கர்** *tākkar,* பெ. (n.) ஒரு முனிவர்; a saint.

அயன் என்பவனின் புதல்வனாகிய துந்து என்பவனுக்குப் பிரமகத்தி நீங்குவதற்கு அருள் புரிந்தவர்.

**தாக்கல்[1]** *tākkal,* பெ. (n.) *1.* **அடித்து அழிக்கை, பாய்ந்து மோதுகை;** striking, attacking, charging. "பொருதகர் தாக்கற்குப் பேருந் தகைத்து" *(குறள், 486).* *2.* **எதிர்க்கை** (சூடா.); opposing.

*[தாக்கு → தாக்கல்]*

**தாக்கல்[2]** *tākkal,* பெ. (n.) *1.* **பதிகை;** (W.G.) registration, entry. *2.* **தகவல்** (C.G.); giving of a notice; reference. *3.* **சொந்தப்படுத்துகை** (C.G.); taking possession, occupancy. *4.* **செய்தி;** information, news, intimation. அவன் போனது தொடர்பாக ஒரு தாக்கலும் கிடைக்கவில்லை. *5.* **தொடர்பு;** connection. இவனுக்கும் அவனுக்கும் தாக்கல் இல்லை *(இ. வ.).*

*[தாக்கு → தாக்கல்]*

**தாக்கல்[3]** *tākkal,* பெ. (n.) *1.* **மூட்டடல்;** administering drugs repeatedly. *2.* **கொடுத்தல்** (மருந்து தாக்கல்); applying, imposing. சுருக்குத் தாக்கல். *3.* **எதிர்த்தல்;** resisting, attacking. *4.* **பாய்தல்;** circulating as blood (சா.அக.).

*[தரு → தா → தாக்கல்.]*

**தாக்கல்செய்[1]-தல்** *tākkal-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) *1.* **வரவுசெலவுத் திட்டம் முதலியவற்றை ஒப்படைத்தல்;** to table, to submit. வரவு செலவு கணக்கு இன்று தாக்கல் செய்யப்படும் *(இக்.வ.).* *2.* **எடுத்தெழுதுதல்;** to transfer the entries to the ledger. நேற்றைய கணக்குகளைத் தாக்கல் செய்து விட்டீர்களா? *(இக்.வ.).*

*[தாக்கு + செய்-.]*

**தாக்கல்செய்[2]-தல்** *tākkal-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) **நீதிமன்றத்தில் பதிவாகும்படி ஆவணங்களைக் கொடுத்தல்;** to file as documents, etc. in court.

*[தாக்கல் + செய்-.]*

**தாக்கல்போக்கல்** *tākkal-pōkkal,* பெ. (n.) **தகவலற்றதன்மை;** no information. தாக்கல் போக்கலில்லை *(இ.வ.).*

*[தாக்கல் + போக்கல்.]*

**தாக்கலில்லாதபேச்சு** *tākkal-illāda-pēccu,* பெ. (n.) **பொருத்தமற்ற பேச்சு** (வின்.); unsubstantiated or inconsistent statement.

*[தாக்கல் + இல்லாத + பேச்சு → தாக்கலில்லாத பேச்சு = அடிப்படையற்ற, பொருளற்ற பேச்சு.]*

**தாக்கற்று** *tākkaṟṟu,* கு.வி.எ. (adv.) **தன் விருப்பமாக** (வின்.); independently.

*[தாக்கு + அறு]*

**தாக்காட்டு[1]-தல்** *tā-k-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **தந்திரமாய் ஈர்த்தல்** (இ.வ.); to allure, as an animal by offering food. *2.* **வேடிக்கைக் காட்டுதல் (பராக்குக் காட்டுதல்)** (இ.வ.); to divert or engage the attention of, as a child. *3.* **நாட்கடத்தி ஏமாற்றுதல்** (இ.வ.); to deceive by putting off from day today, tantalize.

*[தா + காட்டு-.]*

**தாக்காட்டு[2]-தல்** *tā-k-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) **உதவி செய்தல்** (யாழ்ப்.); to render help, afford relief.

*[தரு → தா + காட்டு-. தரு → தா = தக்க காலத்தே உரிய முறையில் உதவுதல்.]*

**தாக்கி** *tākki,* பெ. (n.) **சான்று (சாட்சி)** (T.A.S.); witness.

*[தரு → தா → தாக்கி]*

**தாக்கு[1]-தல்** *tākku-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **மோதுதல்;** to come in contact, collide, strike against, as a vessel on a rock. கப்பல் பாறையில் தாக்கியது. *2.* **உறைத்தல்;** to affect, as one's interest or health. நோய் உடலிலே தாக்கியது. *3.* **கடுமையாதல்;** to be severe, harsh, as in reproof. *4.* **பழிவாங்குதல்;** to take revenge. 'பழைய சினமெல்லாம வைத்துத் தாக்கினான்' *(வின்.).* *5.* **தலையிட்டுக்கொள்ளுதல்** (வின்.); to interfere. *6.* **பலித்தல்** (வின்.); to involve, as consequences. *7.* **பெருகுதல்;** to increase.

"அருளானந்தந் தாக்கவும்" (தாயு. ஆக்குவை, 1). 8. **சுமையாதல்;** to fall heavily, as charges, expenses; to press heavily, as a burden, as responsibility. 9. **அதைத்தல்** (வின்.); to react, rebound. 10. **நெளித்துப்போதல்** (வின்.); to hobble, limp.

**தாக்கு²-தல்** *tākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **எதிர்த்தல்;** to attack, assault. "ஒருத்தலோ டாய்பொறி யுழுவை தாக்கிய" (கலித்.46). கத்தி அரிவாளோடு வந்த கும்பல் அவரைச் சூழ்ந்து தாக்கியது (இக்.வ.). 2. **அடித்தல்;** to strike, beat, dash. 3. **வெட்டுதல்;** to cut, cut off. "அருஞ்சமம் ததையத் தாக்கி" (புறநா.126). 4. **முட்டுதல்;** to butt. மாடு கொம்பால் தாக்கிற்று (உ.வ.). 5. **பாய்ந்துமோதுதல்;** to pounce or dart upon, attack, charge. "பொருதகர் தாக்கற்குப் பேருந்தகைத்து" (குறள். 486). எதிரிப் படையினர் குண்டுவீசி எல்லைப் பகுதியைத் தாக்கினர் (இக்.வ.). 6. **தீண்டுதல்;** to touch, strike, come in contact with, as heat; to burst on the sight, as lightning; to beat against; to penetrate, as a sting. "மருந்து தன்னைத் தாக்குதன் முன்னே" (கம்பரா. வேலேற்று: 42). கிணற்றில் விழுந்தவர் நச்சுக் காற்றால் மயக்கமுற்றார் (இக்.வ.). நெற்பயிரைச் சுருட்டை நோய் தாக்கியது (இக்.வ.). 7. **பற்றி யிருத்தல்;** to rest upon, depend on, lean against. 8. **சரிக்கட்டுதல்;** to adjust or settle, as accounts; to increase the profits of an article; to make up for losses. 9. **பெருக்குதல்;** (arith.) to multiply. "வட்டத்தரை கொண்டு விட்டத் தரை தாக்கின் சட்டெனத் தோன்றுங் குழிழி" (கணக்.). "நின்றதோ ரேழிற் றாக்கி நேர்பட வெட்டுக்கீந்தால்" (சோதிட விடுகவி: சங். அக.). 10. **குடித்தல்;** to consume, drink. கள்ளை நிறையத் தாக்கி விட்டான் (உ.வ.).

ம. தாக்குக; க. தாகு, தாகு, தாங்கு; தெ தாகு; து. தாகுனி; தாகுனி; பிரா. தக்; பட. தாக்கு.

*[தாங்கு → தாக்கு]*

**தாக்கு³** *tākku-*, பெ. (n.) 1. **எதிர்க்கை, அடிக்கை;** attack, assault. 2. **மோதுகை, நொறுக்குகை, முரண்படுகை, சண்டையிடுகை;** beat, dash, blow, clash. 3. **போர்** (சூடா); fight. 4. **படை;** army-forces. "தாக்கர்தாக் கரந்தையுற" (மாறனலங். 440). 5. **எதிரெழுகை** (வின்.); reaction, rebound. 6. **வேகம்;** impetus, force, momentum. 7. **பாதிக்கை, மனங்கலங்குகை;** affecting, as one's mind. 8. **மிகுசுமை;** heavy weight, heaviness. "தாக்குரலடி கொள்யானை" (பாரத. திரௌபதி: 14). 9. **பருமன்;** robustness, stoutness, corpulency. தாக்கிலே அவன் தாழ்ச்சியில்லை (உ.வ.). 10. **செய்கை, வேண்டுகை (சாதனை)** (வின்.); application. 11. **குறுந்தடி;** drum-stick. "தாக்கிற் றாக்குறும் பறையும்" (கம்பரா. நாட்டு, 57). 12. **பெருக்கல்;** multiplication. 13. **வயற்பகுதி;** plot of land, rice field. 14. **இடம்;** place. பள்ளத்தாக்கு. 15. **நிலவறை** (வின்.); vault, cellar. 16. **நெருக்கி முன்னேறுகை;** offensive game.

க. தாகு

*[தாங்கு → தாக்கு-.]*

**தாக்கு⁴** *tākku*, பெ. (n.) 1. **பற்று;** attachment. "தாக்கற் றென்றில்" (ஞானவா. பிரக: 35). 2. **ஆணை;** order, command. "முறைதப்புமேல் வைத்தகல்வது தாக்கெனா" (குற்றா. தல: மந்த: 98).

*[தாங்கு → தாக்கு]*

**தாக்குண்ணு-தல்** *tākkuṇṇu-*, 13 செ.குன்றாவி. (v.t.) 1. **தாக்கு-தல்** பார்க்க; see *tākku-*. 2. **இசிவு முதலியவை தாக்குதல்;** to attack of apoplexy small pox, etc., 3. **தீமூட்டுதல்;** to heat.

*[தாக்கு + உண்ணு-]*

**தாக்குநாடி** *tākku-nāḍi*, பெ. (n.) **விட்டுவிட்டு எழும்பும் நாடி;** jerking pulse (சா.அக.).

*[தாக்கு + நாடி]*

**தாக்குப்பிடி-த்தல்** *tākku-p-piḍi-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. **தாங்கி நிலைத்தல்;** to withstand. பனிச்சரிவில் மாட்டிக் கொண்டவர்கள் கையில் உணவுப்பொருள் இருந்ததால், பத்துமணி நேரம் தாக்குப்பிடித்தனர். 2. **நிலைமைக்குத் தக்கவாறு ஈடுகொடுத்தல்;** to brave. எதிர் அணியின் மின்னல் வேகத் தாக்குதலை, நம் அணியினர் தாக்குப்பிடித்து விளையாடினர். 3. **பெருந்துன்பத் திற்கிடையில் விடாப்பிடியாக எடுத்துக் கொண்ட வேலையை முடித்தல்;** to succeed. in one's aim with inadequate means. தந்தையார் மறைந்தபோதும் விடாப்பிடியாகக் குறைபட்ட வீட்டைக் கட்டி முடித்தார் (உ.வ.).

*[தாக்கு + பிடி-. மரபுவினையான இக் கூட்டுச்சொல் செ.ப. கழக அகரமுதலியில் குறிக்கப்படவில்லை (செ.ப.சி. 4).]*

**தாக்குபொறுத்தவன்** *tākku-poṟuttavaṉ*, பெ. (n.) *1.* உடல் வலிமையுள்ளவன்; robust person, as able to carry a load. *2.* குடித்தனக்காரன்; man of a large family. *3.* செலவு தாங்கக் கூடியவன்; person able to afford expenses *(சா.அக.)*.

*[தாக்கு + பொறுத்தவன்]*

**தாக்குவேலை** *tākku-vēlai*, பெ. (n.) கட்டடத் திலுள்ள வளைவு வேலை *(நாஞ்.)*; arch-work.

*[தாக்கு + வேலை]*

**தாக்குறு-தல்** *tākkuṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) காணுதல்; to meet. "எற் றாக்குறு தலின்" *(மலைபடு. 66)*.

*[தாக்கு + உறு-.]*

**தாக்கோல்** *tākkōl*, பெ. (n.) தாழ்க்கோல் பார்க்க; see *tāl-k-kōl* *(செ.அக.)*.

ம. தாக்கோல், தாக்கோலு; கோத. தாகோல் (பூட்டு); து. தார்கொலு, தர்கோலு, தர்கொலு

*[தாழ → தாழ் + கோல்]*

**தாகக்கினி** *tāga-k-kiṉi*, பெ. (n.) முட்பலாசு; Indian coral tree *(சா.அக.)*.

*[தரு → தா → தாகம் + Skt. அக்கினி]*

**தாகசமனம்** *tāga-šamaṉam*, பெ. (n.) தாகத்தைத் தணித்தல்; to quench thirst *(சா.அக.)*.

*[தாகம் + சமனம்]*

**தாகசமனி** *tāga-šamaṉi*, பெ. (n.) கிராம்பு; clove *(சா.அக.)*.

*[தாகம் + சமனி]*

**தாகசனி** *tāka-šaṉi*, பெ. (n.) சருக்கரை; sugar *(சா.அக.)*.

*[தரு → தா → தாகம் + அசனி → தாகசனி]*

**தாகசாந்தி** *tāga-šāndi*, பெ. (n.) *1.* நீர் வேட்கையைத் தணிக்கை; quenching or allaying thirst. *2.* மது அருந்துகை *(இக்.வ.)*; to drink. *3.* கிராம்பு; clove.

*[தா → தாவம் → தாகம் + சாந்தி - தாகசாந்தி = தாகம், நீர் வேட்கை. சாந்தி = அமைதிப்படுத்துகை.]*

**தாகசுரம்** *tāga-šuram*, பெ. (n.) நீர் வேட்கையை உண்டுபண்ணும் காய்ச்சல் வகை *(யாழ்.அக.)*; a kind of fever attended with thirst. *2.* காமவேட்கைச் சுரம்; fever due to love passion.

*[தாவம் → தாகம் + சுரம் → தாகசுரம். அளவுக்கு அதிகமான நீர் வேட்கையினால் ஏற்படுஞ் சுரம். ஒரே நேரத்தில், உடல் வேட்கையையும், நீர்வேட்கையையும் உருவாக்கும் சுரம்.]*

**தாகசுரவினாசி** *tāga-šura-viṉāši*, பெ. (n.) கிராம்பு; clove *(சா.அக.)*.

**தாகத்தைப்போக்கி** *tāgattai-p-pōkki*, பெ. (n.) புனம்புளி; wild tamarind *(சா.அக.)*.

மறுவ. கொறுக்கைப் புளி

*[தாகம் + அத்து + ஐ + போக்கி → தாகத்தைப்போக்கி.]*

**தாகத்தையடக்கி** *tāgattai-y-aḍakki*, பெ. (n.) தாகத்தைப்போக்கி பார்க்க; see *tāgattai-p-pōkki*.

*[தாகத்தை + அடக்கி]*

**தாகந்தணி-த்தல்** *tāgan-taṇi-*, 4 செ.குவி. (v.i.) நீர்வேட்கை நீக்குதல்; to quench thirst *(சா.அக.)*.

*[தாகம் + தணி-.]*

**தாகநாசனி** *tāga-nāšaṉi*, பெ. (n.) *1.* பெருங் காஞ்சொறி; large nettle. *2.* நாறு கரந்தை; fetid basil. *3.* விளா; wood-apple *(செ.அக.)*.

*[தாகம் + நாசனி]*

**தாகப்படு-தல்** *tāga-p-paḍu-*, 20 செ.குவி. (v.i.) ஆசைப்படுதல்; to be desired. "தாகப்படும் பொருளி னும்" *(சைவல். சந். 118)*.

*[தாகம் + படு-.]*

**தாகபித்தசமனி** *tāga-pitta-šamaṉi*, பெ. (n.) பேய்ப்புடோல்; wild snake gourd *(சா.அக.)*.

*[தாகம் + பித்தம் + சமனி.]*

**தாகபித்தசுரசம்** *tāga-pitta-šurašam*, பெ. (n.) மருளூமத்தை; a kind of detura.

*[தாகம் + பித்தம் + அரசம் → தாகபித்தசுரசம்.]*

**தாகபித்தசுரம்** *tāga-pitta-šuram,* பெ. (n.) நீர் வேட்கையை உண்டாக்கும் பித்தசுரம்; a kind of bilious fever causing thirst (சா.அக.).

*[தாகம் + பித்தம் + சுரம்.]*

**தாகபித்தம்** *tāga-pittam,* பெ. (n.) நீர் வேட்கையையுண்டாக்கும் பித்தம்; biliousness causing thirst.

*[தாகம் + பித்தம்]*

**தாகபித்தநோய்** *tāga-pitta-nōy,* பெ. (n.) ஒரு வகை பித்தநோய்; a kind of bilious disease (சா.அக.).

*[தாகம் + பித்தம் + நோய்]*

இந் நோய் அடிவயிறுதுடித்தல், உடல் முழுதும் வெப்பம் வீசல், குளிர்வு, புளிப்புப் பொருள்கள் மேல் ஆசை, கண்டத்தில் வியர்வை, பிடரி, அடிநா இவைகளை இழுத்துக் கொள்வது போன்ற தன்மைகளைக் காட்டும் என்று, சா.அக. கூறும்.

**தாகப்புளி** *tāga-p-puḷi,* பெ. (n.) *1.* விடாய் தணிக்கும் புளித்த நீர்; acid drink to quench thirst. *2.* தவனப்புளி (வின்.); acid preparation for quenching thirst.

*[தாகம் + புளி]*

**தாகபூர்வகசுரம்** *tāga-pūrvaga-šuram,* பெ. (n.) *1.* தாகசுரம் பார்க்க; see *tāga-šuram. 2.* மிகுவெப்பம், எரிச்சலினால் ஏற்பட்ட சுரம்; fever caused by the combined effects of all humour and heat.

*[தாகம் + பூர்வகம் + சுரம்.]*

**தாகபூர்வசன்னிபாதசுரம்** *tāga-pūrva-šaṉṉi-pāda-šuram,* பெ. (n.) இசிவு சுரம்; typhus fever.

*[தாகபூர்வம் + சன்னிபாதம் + சுரம்.]*

**தாகம்** *tāgam,* பெ. (n.) *1.* உயிர்த்துன்பம் பன்னிரண்டனுள் ஒன்றாகிய நீர்வேட்கை; thirst, one of 12 uyir-vēdaṉai. "தண்டே ஹூட்டித் தாகந் தணிப்பவும்" *(பெருங். உஞ்சைக். 52:59). 2.* ஆசை; eagerness, desire. "தாகம்புகுந் தண்மித் தாள்கடொழும்" *(தேவா. 410: 5). 3.* காமம்; lust. *4.* உணவு; food. *5.* எருது; bullock. *6.* எரிவு; burning. *7.* தூண்; pillar. *8.* ஆதன் அடையும் துன்பம்; one among soul agony. *9.* உட்காங்கை; internal heat. *10.* பதினெண் உடற்குற்றத்து ளொன்று; one of the 18 imperfections in the body. *11.* சித்திரமூலம்; leadwort.

*[தவு → தவி → தவம் = வெப்பம், வெப்ப மிகுதி, பசிதாகம் முதலியவற்றால், உடலை வாட்டும் துறவினை அல்லது இறைவேண்டல் வினை. தவு → தவி → தாவம். தவித்தல் = வெப்பமாக்குதல். நீர் வேட்கையுண்டாக்குதல், தவிக்கிறது என்பது வழக்கு. ஒன்றைப் பெறப் பெருவேட்கை கொள்ளுதல். தவி → தாவம் → தாகம் (வே.வ7)]*

உடம்பில் பாயும் சோற்றுக்குழம்பின் நீர்த் தன்மை குறைவுபடுவதாலும், கவலை, உழைப்பு, மனம் நடுக்குறுகை போன்றவற்றாலும் தாகம் ஏற்படும். மிகு பித்தத்தினாலும் தாகமுண்டாகும். காரம், உப்பு போன்றவற்றை உணவில் மிகுதியாகப் பயன்படுத்துவதினாலும் தாகம் ஏற்படும். உடலுறுப்புகள் சிலவற்றில் நீர்மங்குன்றி, வறட்சியாவதாலும் தாகம் ஏற்படும். பதினெண் உடற்குற்றங்களுள் இதுவும் ஒன்றெனச் சா.அக.வும், செ.அக.வும், கூறும்.

**தாகமடக்கி** *tāgam-aḍakki,* பெ. (n.) *1.* புளியாரை; sour-sorrel. *2.* நீர் வேட்கையைப் போக்கும் மருந்து; that which allays thirst-Refrigerent (சா.அக.).

மறுவ. புளிச்சக்கிரை

*[தாவம் → தாகம் + அடக்கி]*

**தாகமாயிரு-த்தல்** *tāgamāy-iru,* 4 செகுவி. (v.i.) நீர் வேட்கையில் இருத்தல்; to be thirst. தாகமிருக்கிறது இரக்கமில்லை (பழ.).

*[தாகம் + ஆய் + இரு-.]*

**தாகமாருதம்** *tāga-mārudam,* பெ. (n.) தாகத்தைப்போக்கி பார்க்க; see *tāgattai-p-pōkki* (சா.அக.).

*[தாகம் + மாருதம்]*

**தாகமிழுத்தல்** *tāgam-iḻuttal,* பெ. (n.) தாகமெடுத்தல் பார்க்க; see *tāgam-eḍuttal* (செ.அக.).

*[தாகம் + இழுத்தல்]*

**தாகமின்மை** *tāgam-iṉmai,* பெ. (n.) நீர் வேட்கையில்லாமை; absence of thirst - Adipsia (சா. அக.).

*[தாகம் + இன்மை]*

**தாகமெடுத்தல்** *tāgam-eḍuttal*, பெ. (n.) நீரில் விருப்பங்கொள்ளுகை; becoming thirsty (செ.அக.).

*[தாகம் + எடுத்தல்]*

**தாகரூட்சை** *tāgarūṭcai*, பெ. (n.) தாகத்தால் ஏற்படும் நாவறட்சி; dryness due to thirst.

**தாகரோகம்** *tāgarōgam*, பெ. (n.) தாகபித்த நோய் பார்க்க; see *tāga-pitta-nōy*.

*[தாகம் + Skt. ரோகம்]*

**தாகனம்** *tāganam*, பெ. (n.) புண்ணுக்கு மருந்து; a caustic application (சா.அக.).

**தாகனாசனி** *tāga-ṉāšaṉi*, பெ. (n.) சருக்கரைக் கொம்மட்டி; sweet water melon (சா.அக.).

*[தாகம் + நாசனி]*

**தாகாரவியாள்** *tāgāraviyāḷ*, பெ. (n.) நிழல் விழா மரம்; a tree that does not cast its shadow (சா.அக.).

**தாகி-த்தல்** *tāgi-*, 4 செ.குவி. (v.i.) நீர்வேட்கை யுண்டாதல்; to be thirsty (செ. அக.).

*[தாவி → தாகி-.]*

**தாகிந்தம்** *tāgindam*, பெ. (n.) சுரபுன்னை; fragrant poon (சா. அக.).

*[தா → தாகி → தாகிந்தம்.]*

**தாகியத்துவம்** *tāgiyattuvam*, பெ. (n.) எரியுந் தன்மை; capability of burning, combustibility (சா.அக.).

*[தா → தாகி + Skt. அத்துவம்.]*

**தாகோன்மத்தம்** *tāgōṉmattam*, பெ. (n.) குடி இல்லாமையால் ஏற்படும் வெறி; uncontrollable desire for spirituous liquor, a morbid craving for alcoholic stimulants (சா.அக.).

*[தாகவுன்மத்தம் → தாகோன்மத்தம்]*

**தாங்கமுடியாமை** *tāṅga-muḍiyāmai*, பெ. (n.) பொறுக்க முடியாமை; unbearableness as pain in diseases (சா.அக.).

*[தாங்கு → தாங்க + முடியாமை]*

**தாங்கல்**[1] *tāṅgal*, பெ. (n.) 1. தாங்குகை (அருநி.); supporting. 2. துன்பம்; grievance. 3. மனக்குறை, வருந்துகை, இரங்குகை, உள்ளம் புண்ணாகுகை (அருநி.); displeasure, regret, umbrage. 4. சகிப்பு; enduring, bearing. "தாங்கல் செல்ல நீளாகுலம்" (கந்தபு. பானுகோப. 40). 5. காலத் தாழ்ச்சி; delaying. 6. தயக்கம்; hesitation. "வீட்டில் வரத் தாங்கலேன்" (விறலிவிடு.). 7. தூக்குகை; lifting, raising. 8. நீர்நிலை (பிங்.); tank. 9. பாசனத்துக்குப் பயன்படும் இயற்கை யேரி; (C.G.) small tank from which water is irrigated for paddy fields. 10. கோயிலை நோக்கி நிற்கையில், இடப்புறத்தே நற்சகுனமாகப் பல்லி கொட்டுகை; propitious chirping of a lizard to the left of a person facing a temple. 11. நிலம் (இலக்.அக.); earth. மழை நீரை வரவேற்றுத் தங்க வைக்கும் சிற்றேரி தாங்கல் எனப்பட்டது (செ.அக.).

*[தாங்கு + அல். 'அல்' ஈற்றுத் தொழிற் பெயர்.]*

**தாங்கல்**[2] *tāṅgal*, பெ. (n.) உட்கிடைச் சிற்றூர் (இ.வ.); hamlet appurtenant to a village.

*[தங்கல் → தாங்கல்.]*

**தாங்கல்**[3] *tāṅgal*, பெ. (n.) 1. பொறுத்தல்; enduring. 2. வலியைத்தாங்கல்; bearing pain (சா.அக.).

*[தாங்கு → தாங்கல்]*

**தாங்கள்** *tāṅgaḷ*, ப.பெ. (pron.) மரியாதை குறிக்கும் முன்னிலைப் பன்மைச்சொல்; you, honorific plural. தாங்கள் எப்போது வந்தீர்கள் (உ.வ.).

ம. தாங்கள், தாங்ஙள்; க. தாபு; பட. தங்க

*[ஆம் → தாம் + கள் → தாங்கள். படர்க்கைப் பெயரின் வேற்றுமையடி யினின்று கிளைத்த வேரடியாகும். அஃதாவது, 'ஆ' என்னும் சேய்மைச் சுட்டடியாகிய 'ஆம்' என்ற படர்க்கைச் சுட்டுப்பெயரின் பன்மை வடிவமாகும். ஐம்பாற்சுட்டுப் பெயர்கள் தோன்றிய பின்பு, 'தாம்' என்பது தற்சுட்டுப் பெயராய் மாறியது (த.வ. 135).]*

**தாங்கற்சக்தி** *tāṅgaṟ-šakti*, பெ. (n.) 1. பொறுக்கும் வல்லமை; power of endurance or tolerance to a drug. 2. ஏற்பட்ட வல்லமை; acquiring tolerance (சா.அக.).

*[தாங்கு → Skt. சக்தி]*

**தாங்கான்மட்டை** *tāṅgāṉ-maṭṭai,* பெ. (n.) நெசவுத்தறியின் உறுப்புவகை (யாழ்அக.); part of a weaver's loom.

*[தாங்கு + ஆன் + மட்டை]*

**தாங்கி**[1] *tāṅgi,* பெ. (n.) *1.* **அடிப்படையானது;** support, prop, defence. *சுமைதாங்கி (உ.வ.). 2.* **தாங்குபவன்;** one who supports. "குடி தாங்கியைச் சென்று கூடியபின்" *(பெருந்தொ. 1153). 3.* **பூண்** *(திவா.);* ferrule. *4.* **கிம்புரி** *(பிங்.);* golden ferrule put on the tip of an elephant's tusk. *5.* **அணிகளின் கடைப்பூட்டு** *(யாழ்.அக.);* fastening clasp of an ornament.

*[தாங்கு → தாங்கி]*

**தாங்கி**[2] *tāṅgi,* பெ. (n.) **மலைதாங்கி** *(மூ.அ.);* sickle-leaf.

*[தாங்கு → தாங்கி]*

**தாங்கி**[3] *tāṅgi,* பெ. (n.) *1.* **பனிதாங்கி;** that which bears the drops of dew. *2.* **பனிதாங்கிப்பூடு** *பார்க்க; see paṉi-tāṅgi-p-pūḍu. 3.* **பூநீறு;** flowering ashes. *4. மலைதாங்கி;* wound plant - Sida carpinifolia. *5.* **கோபுரந்தாங்கி;** tower plant, Justicia echioides. *6.* **கருப்பிணி;** a pregnant women. *7.* **தாங்குகை;** one that supports. *8.* **பூண்டின் இறுதிமொழி;** plant's second term indicating place of growth. *9. கருப்பைத்தாங்கி;* an instrument introduced into the vagina to bear up the womb - Pessary. *10. குடற்தாங்கி;* truss used for supporting the bowels.

*[தாங்கு → தாங்கி]*

**தாங்கித்தடுக்கிடு-தல்** *tāṅgi-t-taḍukkiḍu-, 20* செ.குவி. (v.i.) **மிகுந்த உதவிசெய்தல்** (இவ.); to treat with undue politeness, as effusively welcoming a person and spreading a mat for him to sit on. தாங்கிப் பார்த்தால் தளைமேல் ஏறுகிறான் *(பழ.).*

*[தாங்கி + தடுக்கிடு-.]*

**தாங்கிநட**[1]**-த்தல்** *tāṅgi-naḍa-, 3* செ.குவி. (v.i.) **நொண்டிநடத்தல்;** to walk limpingly, hobble.

*[தாங்கி + நட-.]*

**தாங்கிநட**[2]**-த்தல்** *tāṅgi-naḍa-, 3* செ.குவி. (v.t.) *1.* **உதவிசெய்து கொண்டிருத்தல்** (இவ.); to be lending support. *2.* **பொறுத்துக் கொண்டு நடத்தல்;** to walk by bearing the pain.

*[தாங்கி + நட-.]*

**தாங்கித்தாங்கிநட-த்தல்** *tāṅgi-t-tāṅgi-naḍa-, 3* செ.குவி. (v.i.) **நொண்டிநொண்டி நடத்தல்;** to hobble upon one leg *(சா.அக.).*

*[தாங்கு + தாங்கி + நட-.]*

**தாங்கிப்பேசு-தல்** *tāṅgi-p-pēsu-, 5* செ. குன்றாவி. (v.t.) *1.* **பரிந்துபேசுதல்** (இவ.); to plead f o r

*2.* **ஒத்துக்கொள்ளுதல்** (இக்.வ.); to second.

*[தாங்கி + பேசு-.]*

**தாங்கு**[1]**-தல்** *tāṅgu-, 5* செ.குன்றாவி. (v.t.) *1.* **உதவுதல், சார்தல், பற்றுதல்;** to uphold, bear up, support. "எம்பிரா னென்னத் தாங்கிக் கொள்ளே" *(திருவாச. 6:1). 2.* **புரத்தல்;** to protect, guard. "தண்கடல் வரைப்பிற் றாங்குநர்ப் பெறாது" *(பெரும்பாண். 18). 3.* **இளைப்பாற்றுதல்;** to give shelter, rest, "நீவரிற் றாங்கு மாணிழல்" *(கலித்.20). 4.* **பொறுத்துக்கொள்ளுதல்;** to endure. தந்தை மறைவைத் தாங்கமுடியவில்லை *(உ.வ.). 5.* **சுமத்தல்;** to bear. "அகழ்வாரைத் தாங்கு நிலம் போல" *(குறள், 151). 6.* **ஏற்றுக்கொள்ளுதல்;** to receive. "அடி . . . கைசென்று தாங்குங் கடிது" *(நன்னெறி, 31). 7.* **அணிதல்;** to assume, wear, as crown.... "தமால மாலையு மாய்ந்து, தாங்கினார்" *(சீவக. 2681). 8.* **மனத்திற் கொள்ளுதல்;** to learn, understand, to bear in mind. "பலகலைகள் தாங்கினார்" *(தேவா. 518: 7). 9.* **அன்பாய்நடத்துதல்;** to care for, treat tenderly, show great kindness. தாங்கத் தாங்கத் தலையிலேறு கிறான் *(உ.வ.). 10.* **சிறப்புச்செய்தல்;** to esteem, respect. அவன் பெரியோரைத் தாங்கி நடத்து கிறான் *(உ.வ.). 11.* **அழுத்துதல்** (வின்.); to press heavily. *12.* **உடையதாதல்;** to maintain, possess, as a disposition. "இவனுக்காகத் தாங்கிய வனப்பும்" *(பெரியபு. காரைக்கா. 49). 13.* **பொறுத்தல், இசைவளித்தல்** (வின்.); to tolerate, suffer, permit. *14.* **பயிற்சி மேற்கொள்ளுதல்;** to practise. "தாங்கா நல்லறம்" *(மணிமே. 28:126). 15.* **காலந்தாழ்த்துதல்;** to delay. "தாங்காது . . . புல்லி" *(அகநா. 66:13). 16.* **நிறுத்துதல்;** to stop. "வலவன் தாங்கவும் நில்லாது கழிந்த தேர்" *(குறுந். 311). 17.* **தடுத்தல்;** to hinder, prevent, resist, ward

off. "வருதார் தாங்கி யமர்மிகல் யாவது" (புறநா. 62). 18. பிடித்துக் கொள்ளுதல்; to hold, catch. "சரிந்தபூந் துகில்க டாங்கார்" (கம்பரா. உலாவி. 2). 19. எதிர்த்தல்; to oppose, attack. "பெரும்பகை தாங்கு மாற்றலானும்" (தொல். பொருள். 76). 20. தள்ளுதல்; to row, ploe, as boat. அவன் தோணியைத் தாங்குகிறான் (இக்வ.). 21. தட்டுதல் (வின்.); to hit against, strike, graze, as a boil. 22. குதிரை முதலியவற்றின் வேகத்தை அடக்கிச் செலுத்துதல்; to drive with restraint, as horses. "களிறு பரந்தியலக் கடுமா தாங்க" (பதிற்றுப் 49). 23. கெஞ்சுதல்; to solicit, cringe. எவ்வளவோ தாங்கியும் அவன் கேட்கவில்லை (உ.வ.).

ம. தாங்ஙுக; க. தாங்கு; தெ. தாளு; து. தாங்குனி; குட. தாங்க; கோத. தாங்க்; துட. தொக்; பட. தாங்கு; பிரா. தோனிங்க்

*[தாங்கு + தல். 'தல்' ஈற்று தொழிற்பெயர்]*

**தாங்கு²-தல்** *tāṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. சுமையாதல்; to be heavy. வண்டி ஒரு பக்கந் தாங்குகிறது. (உ.வ.). 2. நொண்டுதல்; to limp, hobble. தாங்கித் தாங்கி நடக்கிறான் (உ.வ.). 3. பேச்சுத் தடைப்படுதல்; to halt in speaking. அவன் தாங்கித் தாங்கிப் பேசுகிறான். 4. போதியதாதல்; to suffice. எவ்வளவு பேர் வந்தாலும் இடந் தாங்கும். 5. மாறுபடுதல்; to be opposed, controverted. "தாங்கருங் கேள்வியவர்" (ஆசாரக். 51). 6. கூடியதாதல்; to be possible; to afford, as an expense. அவனுக்குச் சாப்பாடு கொடுத்துக் தாங்காது. 7. வருந்துதல்; to be distressed. "தனிக்குழவி யெனக்கலங்கித் தாங்கித் தேடி" (திருவிளை. விருத்தகுமார. 29). 8. அணைத்தல்; to hug. 9. காத்தல்; to wait.

க. தாங்கு; ம. தாங்ஙு

*[தா → தாங்கு-.]*

**தாங்கு³** *tāṅgu*, பெ. (n.) 1. தாங்குகை (யாழ்ப்.); bearing, supporting. தாங்குகிற ஆள் உண்டு தளர்ச்சி உண்டு (பழ.). 2. அடிப்படை; support. சமயத்தில் நல்ல தாங்கலாக இருந்தான் (இ.வ.). 3. ஈட்டிக்காம்பு (யாழ்.அக.); staff of a pike.

*[தா → தாங்கு-.]*

**தாங்குகட்டை** *tāṅgu-kaṭṭai*, பெ. (n.) தாங்கி நடக்கப்பயன்படுத்தும் கோல்; crutches.

ம. தாங்ஙுதடி

*[தாங்கு + கட்டை]*



**தாங்குகோல்** *tāṅgu-kōl*, பெ. (n.) 1. தோணியை ஊன்றித் தள்ளுங்கோல் (இ.வ.); punt pole. 2. உதவி; support. அவனுக்கிவன் தாங்குகோல் (உ.வ.).

*[தாங்கு + கோல்]*

**தாங்குசுவர்** *tāṅgu-šuvar*, பெ. (n.) 1. முட்டுச் சுவர் (இ.வ.); buttress wall.

*[தாங்கு + சுவர்]*



**தாங்குநன்** *tāṅgunaṉ*, பெ. (n.) காப்பாற்று வோன்; saviour, protector. "தண்கடல் வளைப்பிற் றாங்குநர்ப் பெறாது" (பெரும்பாண். 18).

*[தா → தாங்குநன்]*

**தாச்சா** *tāccā*, பெ. (n.) கொடிமுந்திரிகை; grapes.

*[தரு → தா → தாச்சா. நிலந்தரும் கொடி முந்திரி. தருதற் கருத்தே இச்சொல்லிற்கு அடிப்படையாகும்.]*

**தாச்சி**[1] *tācci*, பெ. (n.) 1. தாய்ச்சி பார்க்க; see *tāycci*. 2. விளையாட்டில் ஒவ்வொரு பிரிவிலுமுள்ள தலைவன் (வின்.); leader of a side, in games, captain.

*[தாய்ச்சி → தாச்சி. ஒ.நோ. ஆய்ச்சி → ஆச்சி.]*

**தாச்சி**[2] *tācci*, பெ. (v.) சோனைப்புல் (மலை.); guinea grass.

*[தரு → தா → தாச்சி]*

**தாச்சிக்கொள்(ளு)-தல்** *tācci-k-koḷ-*, 5 செ.கு.வி. (v.i) படுத்துக்கொள்ளுதல்; to lie down (செ.அக.).

மறுவ. தாச்சுக்கொள்; குழந்தைகளைக் கொஞ்சும் போது பயன்படுத்தும் சொல். சாய்ந்து கொள் → தாச்சிக்கொள். தகரமும், சகரமும் இடம்மாறிக் கொண்டன.

*[தாச்சி + கொள்-.]*

**தாச்சீலை** *tā-c-cīlai*, பெ. (n.) தாய்ச்சீலை (இ.வ.); foreflap.

*[தாய்ச்சீலை → தாச்சீலை]*

**தாச்சுக்கொள்(ளு)-தல்** *tāccu-k-koḷ-*., 13 செ.கு.வி. (v.i.) தாச்சிக்கொள்(ளு)-தல் பார்க்க; see *tācci-k-koḷ-* (செ.அக.).

*[தாச்சி → தாச்சு. + கொள்(ளு)-]*

**தாச்சுகா** *tā-c-cugā*, பெ. (n.) கொன்னை; common cassia (சா.அக.).

*[தா → தாச்சுகா]*

**தாச்சுரம்** *tā-c-curam*, பெ. (n.) தாபச்சுரம் பார்க்க; see *tāba-c-šuram* (சா.அக.).

*[தாகம் - எரிவு, சூடு. தாகம் → தாபம். தாபசுரம் → தாச்சுரம்]*

**தாசகமாசகம்** *tāšaga-māšagam*, பெ. (n.) பசப்புகை (இ.வ.); coaxing.

**தாசகாமியம்** *tāšakāmiyam*, பெ. (n.) ஆண் குறி முன்தோல் நோய்; a disease of skin of the prepuce (சா.அக.).

மறுவ. மாணிநுதி

**தாசசின்னி** *tāša-šiṉṉi*, பெ. (n.) ஒரு சாவாமூவா மூலிகை; an unknown rejuvenating drug (சா.அக.).

*[தரு → தா → தாசம் + சின்னி. இது வேதைக்குதவும் என்று சா.அக. கூறும்]*

**தாசடி-த்தல்** *tāšaḍi-*, 4 செ.கு.வி. (v. i.) நாழிகைச் சேகண்டியடித்தல் (இ.வ.); to beat the gong indicating time.

*[தாயம் → தாசம் → தாசன் + அடி-. தாசம் = பரம்பரையுரிமை குறித்து மேற்கொள்ளும் பணி.]*

**தாசத்துவம்** *tāšattuvam*, பெ. (n.) அடிமைத் தன்மை; servitude, bondage, slavery (செ.அக.).

*[தாயத்துவம் → தாசத்துவம் (ஒ.நோ.) நேயம் → நேசம்]*

**தாசநந்தினி** *tāša-nandiṉi*, பெ. (n.) வியாசனின் தாய் சத்தியவதி; šattiyavadi, mother of Viyāšaṉ (இரு.நூற்.அக.).

**தாசநம்பி** *taša-nambi*, பெ. (n.) சாத்தானி வகுப்பினரின் பட்டப்பெயர் (வின்.); title of the šattāṉi caste.

**தாசநெறி** *tāša-neṟi*, பெ. (n.) தொண்டுநெறி; slavery path; service mind.

*[தாயம் → தாசம் + நெறி]*

**தாசபாசம்** *tāša-pāšam*, பெ. (n.) அரிவாள்மனைப் பூண்டு பார்க்க; see *arivāḷ-maṉai-p-pūṇḍu* (சா.அக.).

*[இது கண் நோய்களுக்கு மருந்தாகும் என்று, சா.அக. கூறும்.]*

**தாசபுத்தம்** *tāša-puttam*, பெ. (n.) ஏழிலைப் புன்னை; seven leaved milky plant (சா.அக.).

*[தரு → தா → தாசபுத்தம்]*

**தாசபுரம்** *tāša-puram*, பெ. (n.) தாசபூரம் பார்க்க; see *tāša-pūram* (சா.அக.).

**தாசபூரம்** *tāša-pūram*, பெ. (n.) ஒரு வகைப் புல்; a kind of grass (சா.அக.).

*[தரு → தா → தாசபூரம்]*

**தாசம்** *tāšam*, பெ. (n.) முல்லை; fragrant jasmine (சா.அக.).

*[தரு → தா → தாசம்]*

**தாசமார்க்கம்** *tāša-markkam*, பெ. (n.) தாசநெறி பார்க்க; see *tāša-neṟi* (செ.அக.).

*[தாயம் → தாசம் + மார்க்கம். மார்க்கம் = வழி. Skt. Mārga]*

**தாசர்** *tāšar*, பெ. (n.) தாசன்¹ பார்க்க; see *tāšan*¹.

*[தாயர் → தாசர்]*

**தாசரி** *tāšari*, பெ. (n.) அந்தணனல்லாத மாலியத்தொண்டர்; தாதன்; E.T.ii,112; vaiṣṇava non-brahmin mendicant.

க., தெ. தாசரி

*[தாயர் → தாசர் → தாசரி.]*

**தாசரிப்பறவை** *tāšari-p-paṟavai*, பெ. (n.) நாமப் பறவை; scimitar bird, stripped bird-Pomatorhrinus horsifician (சா.அக.).

*[தாசரி + பறவை]*



**தாசரிப்பாம்பு**¹ *tāšari-p-pāmpu*, பெ. (n.) 1. தலையிலும், கழுத்திலும் வெண்மையான வரிகளையுடைய சிவப்புப்பாம்பு; a hermit snake. It is a red snake marked with white streaks in head and neck like the forehead marks of dasari a vaiṣṇava hermit. 2. மலைப்பாம்பு; rock snake. 3. நெடிய வெண்கோடுள்ள பெரும் பாம்பு வகை; hermit snake, large rock snake, as having an upright white streak like the forehead mark of a tāšari (செ.அக.).

*[தாசரி + பாம்பு]*



**தாசரிபந்தம்** *tāšari-pandam*, பெ. (n.) திருவரங்கத்தில் கடவுள் பறப்பாட்டின்போது எடுத்துச் செல்லும், பெரிய தீவட்டி; big torch used in Thiruvarangam temple (செ.அக.).

*[தாசரி + பந்தம்.]*

**தாசவிருட்சம்** *tāša-viruṭcam*, பெ. (n.) வெண் கடம்பு; seaside Indian-oak.

*[தாசம் + Skt. விருட்சம்]*

**தாசன்**¹ *tāšan*, பெ. (n.) 1. ஊழியக்காரன்; servant. "தாசர் தாசியர்" (விநாயகபு. 53, 57). 2. அடிமை (சூடா.); slave. 3. பத்தன்; devotee. 4. அந்தணர் அல்லாதாருக்கான பொதுப்பெயர்; title of non-bhrahmin castes. "தருமன் வருமன் றனன் றாசன்" (திருவானைக். கோச். 69). 5. மாலியரின் வணக்கச்சொல்; a term used in salutation among vaiṣṇavas. "அடியேன் றாசனென்றி றைஞ்சி" (பிரபோத. 11.11).

*[தாயம் → தாயர் → தாசன். தாயம் = உரிமை. உரிமையுடன் வழிவழித் தொண்டு புரிபவராக அமைக்கப்பட்டவர் தாயர். இற்றைக்கும், ஏரேழ் பிறவிக்கும் இறைவனை உள்ளத்தில் தாங்கித் தொண்டருக்குத் தொண்டு செய்பவனே தாசன் என்றறிக.]*

**தாசன்**² *tāšan*, பெ. (n.) வலைஞன்; fishmer man. "தாசர்தங் குலத்துக்கு" (பாரத. குரு. 91).

**தாசனாச்சங்கிலி** *tāšanā-c-cangili*, பெ. (n.) சுக்கான் திருப்புஞ்சங்கிலி; tiller chain (செ.அக.).

*[தாசனம் + சங்கிலி]*

**தாசனாப்பொடி** *tāšanā-p-poḍi*, பெ. (n.) பெரும்பாலும் வயதுமுதிர்ந்த மகளிர் பயன் படுத்துவதும், பல்லில் கறுப்புக் கரையை உண்டாக்குவதுமான, ஒருவகைப் பற்பொடி; a kind of dentifrice for blackening teeth, generally used by elderly women.

*[தாசனம் + பொடி]*

**தாசாமசாலா** *tāšā-mašālā*, பெ. (n.) உற்சாகம் அடையும் பொருட்டுக் குதிரைக்குக் கொடுக்கும் மருந்து வகை (அசுவசா. 136); a medicinal preparation to instil spirit in horses.

*[தாசா + மசாலா]*

**தாசான்பூ** *tāšānpū*, பெ. (n.) தாசரிப்பூ; shoe-flower (சா.அக.).

**தாசானபூ** *tāšānapū*, பெ. (n.) தாசான்பூ பார்க்க; see *tāšān-pū* (சா. அக.).

**தாசி**[1] *tāšī*, பெ. (n.) *1.* தோழி; maid servant. "மங்கலத் தாசியர் தங்கல னொலிப்ப" (சிலப். 6: 125). *2.* கோயில் சார்ந்த ஆடல்மகள்; dancing-girl devoted to temple service. *3.* விலைமகள்; a prostitute; harlot, whore. *4.* அடிமைப்பெண் (சது); female slave. *5.* பரணி பார்க்க (பிங்.); see *paraṇi*; the second star. *6.* மருதோன்றி (மலை); western ghats blue nail-dye.

*[தாசன் (ஆண்பால்) → தாசி (பெண்பால்)]*

**தாசி**[2] *tāšī*, பெ. (n.) *1.* துரிசி; blue vitriol-copper sulphate. *2.* நீலசெம்முள்ளி அல்லது ஊதா முள்ளி; large with sky blue flowers. western ghats blue nail dye - Barleria montana. *3.* தொழுபஃறி; a star planet. *4.* கழுதை; ass (சா.அக.).

**தாசிக்கல்** *tāši-k-kal*, பெ. (n.) காகச்சிலை; black load stone (சா.அக.).

*[தாசி + கல்]*

**தாசிகம்** *tāšigām*, பெ. (n.) அடிமைத்தனம்; slavery (pond.).

*[தாசி → தாசிகம்]*

**தாசிகா** *tāšikā*, பெ. (n.) கொடிமாதுளை; pomegranate creeper.

*[தாசி → தாசிகா]*

**தாசிகி** *tāšikī*, பெ. (n.) தாசிகை பார்க்க; see *tāšigai* (சா.அக.).

**தாசிகை** *tāšigai*, பெ. (n.) *1.* தாழிநாள்; the day of paraṇi star. *2.* முகில்நிறப்பூவுள்ள மருதோன்றி மரம்; a kind of tree that has the cloud colour flower (இரு.நூற்.பே.).

**தாசிதம்** *tāšidam*, பெ. (n.) அழிகை; ruined (இரு.நூற்.பே.).

**தாசிபுத்திரன்** *tāši-puttiran*, பெ. (n.) நாகமணல்; zinc-ore (சா.அக.).

**தாசிமலைக்கல்** *tāšimalai-k-kal*, பெ. (n.) சாலக்கிராமம்; a fossil with impression of ammonities having mystic virtues. It is supposed to convert into copper colour (சா.அக.).

**தாசிமாந்தப்பூடு** *tāši-mānda-p-pūḍu*, பெ. (n.) பெருமருந்து வகை; a kind of herbal medicine.

**தாசியப்பிருந்தம்** *tāšiya-p-pirundam*, பெ. (n.) ஆவினம்; herd of cow (இரு.நூற்.பே.).

**தாசிரிகுப்பம்** *tāširi-kuppam*, பெ. (n.) செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Chengalpaṭ Dt. (ஊர் பெ.அக.).

*[தாசிரி + குப்பம்]*

**தாசிரிகுன்னத்தூர்** *tāširi-kunnattūr*, பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Kāñjipuram Dt.

ஊர் என்பது மக்கள் வாழும் இடத்திற்குப் பொதுப்படையாக வழங்கப்படுவது. இயற்கை அமைப்பையொட்டியதாகவும், அமையும் தன்மைத்து. மலையை, இயற்கைப்பெயராகக் கொண்டு வழங்குகிறது. ஆரியர் வருகைக்குப் பின், இந் நிலை மாறி, இனத்தின் பெயராலும் வழங்குவதைக் காணலாம் (ஊர் பெ.அக.).

**தாசிரெட்டிகண்டிகை** *tāšireṭṭi-kaṇḍigai*, பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Kāñjipuram Dt.

ஒரு பகுதியிலிருந்து பிரிந்து காணப்படும் ஊர், கண்டிகை எனப்படும். தனி மனிதனின் பெயரில் அமைந்தவையே கண்டிகை (ஊர் பெ. அக.).

*[கண்டம் → கண்டிகை]*

**தாசில்பண்ணு-தல்** *tāšil-paṇṇu-*, 5 செ.குன்றாவி (v.t.) ஆட்சி செலுத்துதல்; to hold the reins of. ஆசை இருக்கிறது தாசில் பண்ண, நல்வினை (அதிர்ஷ்டம்) வேண்டாமா?

*[தாசில் + பண்ணு-.]*

**தாசினாப்பொடி** *tāšinā-p-poḍi*, பெ. (n.) தாசனாப் பொடி (இ.வ.) பார்க்க; see *tāšanā-p-poḍi*.

*[தாசனாப்பொடி → தாசினாப்பொடி]*

**தாசினை** *tāšinai*, பெ. (n.) கொம்பு; horn.

**தாசு** *tāšu*, பெ. (n.) *1.* நாழிகைச் சேகண்டி (வின்.); gong to strike the hour. *2.* இரண்டரை நாழிகை கொண்ட ஒரு மணி நேரம் (வின்.); an hour. *3.* சூதாடு கருவி (சது.); die.

u. tās.

**தாசுவம்** *tāšuvam*, பெ. (n.) கொடை *(யாழ்.அக.)*; gift.

**தாசுவன்** *tāšuvaṉ*, பெ. (n.) கொடையாளன்; donator *(இரு.நூற்.பே.)*.

**தாசூரன்** *tāšūraṉ*, பெ. (n.) ஒரு முனிவன்; a šaint.

**தாசேகரம்** *tāšēgaram*, பெ. (n.) ஒட்டகம்; camel.

**தாசேயன்** *tāšēyaṉ*, பெ. (n.) பணியாள்; servant *(இரு.நூற்.பே.)*.

**தாசேரகம்** *tāšēragam*, பெ. (n.) தாசேகரம் *பார்க்க;* see *tašē-garam*.

**தாசேரம்** *tāšēram*, பெ. (n.) தாசேரகம் *(சூடா.) பார்க்க;* see *tašēragam*.

**தாசேரன்** *tāšēraṉ*, பெ. (n.) தாசேயன் பார்க்க; see *tāšēyaṉ* *(இரு.நூற்.பே)*.

**தாசோகம்**[1] *tāšōgam*, பெ. (n.) *1.* 'நான் உனக்கு அடிமை' என்று பொருள்படும் வணக்க முணர்த்துந் தொடர்; a term of homage meaning, 'I am your slave'. "இங்குத் தாசோகமென்றே யினிதுபா வித்தவாற் றால்" *(பிரபோத. 45, 13)*. 2. வீரசைவர்களின் மாகேசுர பூசை *(இ.வ.)*; feeding of vīrāšaivar devotees.

*[தாயன் → தாசன் = அடிமை. தாசசோகம் → தாசோகம். 'ச' இடைக்குறை]*

**தாசோகம்**[2] *tā-šōgam*, பெ. (n.) *1.* தாசேரம் *பார்க்க;* see *tāšēram*. *2.* வலியையும், துன்பத்தையும் உண்டாக்கும் களைப்பு; faintness causing pain and grief *(சா.அக.)*.

*[தா + சோகம்]*

**தாட்கட்டி** *tāṭ-kaṭṭi*, பெ. (n.) பொன்னுக்கு வீங்கி *(இ.வ.)*; mumps.

*[தாள் + கட்டி]*

**தாட்கம்** *tāṭkam*, பெ. (n.) கொடிமுந்திரிகை *(மூ.அ.)*; grapes.

**தாட்கவசம்** *tāṭ-kavašam*, பெ. (n.) செருப்பு; sandals, slipper. "தாட்கவசத் தாற்கின் று" *(பதார்த்த. 1457)*.

*[தாள் + கவசம்]*

**தாட்கிட்டிசன்னி** *tāṭ-kiṭṭi-šaṉṉi*, பெ. (n.) பற்கிட்டும் நோய் *(இ.வ.)*; tetanus.

*[தாள் + கிட்டி + சன்னி]*

**தாட்குற்றி** *tāṭ-kuṟṟi*, பெ. (n.) செந்தாளி; red convolvulus *(இரு.நூற்.பே.)*.

*[தாள் + குற்று → குற்றி]*

**தாட்கூட்டு** *tāṭ-kūṭṭu*, பெ. (n.) மகளிர் கையணி வகை; a kind of wristlet worn by women. "மகளிர் கையிலிட்ட தாட்கூட்டாகிய நீலக் கடைச்செறி" *(கலித். 43: உரை 1)*.

*[தாள் + கூட்டு]*

**தாட்கோரை** *tāṭ-kōrai*, பெ. (n.) கோரைப்புல் வகை *(வின்.)*; a kind of sedge.

*[தாள் + கோரை]*

**தாட்கோல்** *tāṭ-kōl*, பெ. (n.) *1.* தாழ்ப்பாள்; bolt, bar, latch. "இரட்டைத் தாட்கோலைப் போடு" *(அருட்பா, 4, சீர்த்தனை. பக்.811)*. 2. திறவுகோல் *(இ.வ.)*; key.

ம. தாக்கோல்

*[தாழ் + கோல்]*

**தாட்சி**[1] *tāṭci*, பெ. (n.) *1.* இழிவு; degradation, disgrace. "தாட்சியிங் கிதனின்மேற் றருவ தென்னினி" *(கம்பரா. யுத். மந்தி. 11)*. 2. காலத் தாழ்வு; dilatoriness, tardiness. "தாட்சி யெய்தா துஞற்றுதல் கருமம்" *(பிரபோத. 5:39)*.

*[தாழ் → தாழ்ச்சி → தாட்சி]*

**தாட்சி**[2] *tāṭci*, பெ. (n.) தாழ்ந்துபணிகை; humility. "அஞ்சொலார் மேற் றாட்சியும்" *(மேருமந். 419)*.

*[தாழ்ச்சி → தாட்சி]*

**தாட்சி**[3] *tāṭci*, பெ. (n.) *1.* சிற்றீஞ்சு; small date, dwarf date palm. *2.* திராட்சை; dried sweet grapes.

**தாட்சியிலது** *tāṭciyiladu*, பெ. (n.) கள்ளிக் கொழுந்து; tender leaf of milk hedge plant *(சா.அக.)*.

**தாட்டயன்** *tāṭṭayaṉ*, பெ. (n.) தாட்டன் பார்க்க; see *tāṭṭaṉ*.

*[தாட்டன் → தாட்டயன்]*

**தாட்டன்** *tāṭṭaṉ*, பெ. (n.) *1.* ஒருவனை இகழ்ச்சி தோன்றக் குறிக்கும் சொல் *(வின்.)*; a disrespectful term meaning a certain person, a fellow. *2.* பெருமைக்காரன் *(யாழ்ப்.)*; self-important person. *3.* **கயவன்;** rogue. *'தாட்டன் வந்துவிட்டான்' (தஞ்சை.). 4.* **தலைமை ஆண்குரங்கு** (இ.வ.); leading male monkey.

*[தாழ் → தாட்டன்]*

**தாட்டாந்தம்** *tāṭṭāndam*, பெ. (n.) **தாட்டாந்திகம்** *பார்க்க;* see *tāṭṭāndigam.*

*[தாட்டாந்திகம் → தாட்டாந்தம்]*

**தாட்டாந்திகம்** *tāṭṭāndigam*, பெ. (n.) **உவமேயம்;** that which is illustrated by an example or simile. *"தரு திருட்டாந்தமுந் தாட்டாந்திகமும்" (சங்கற்ப. 11: அடி: 35).*

**தாட்டான்** *tāṭṭāṉ*, பெ. (n.) *1.* **தலைவன்;** chief, master. *2.* **கணவன்;** husband.

*[தாடு → தாட்டான்]*

**தாட்டானை** *tāṭṭāṉai*, பெ. (n.) **கிழக்குரங்கு;** monkey worn out with age. "இந்த நரைத் தாட்டானை வந்து" *(விறலிவிடு 890).*

**தாட்டி** *tāṭṭi*, கு.வி.எ. (adv.) **தடவை;** times. 'நாலுதாட்டி வந்தான்' (வின்.).

**தாட்டி²** tāṭṭi, பெ. (n.) *1.* **திறமை;** cleverness, skill. *2.* **உறுதி** *(வின்.)*; bravery, courage. *3.* **தடையின்மை;** fluency, as in speaking or reading. வாசிப்பதில் தாட்டியுள்ளவ *(உ.வ.). 4.* **பெருமிதம்;** ostentation; majesty. அவன் தாட்டியுள்ளவன் *(இ.வ.). 5.* **முகவரி;** spacious ness. அங்கே இடந் தாட்டியாயிருக்கிறது *(இ.வ.). 6.* **கெட்டிக்காரி** *(வின்.)*; clever woman. *7.* **ஆண்மைத்தன்மை வாய்ந்தவள்** *(யாழ்ப்.)*; masculine woman. *8.* **வைப்பாட்டி;** concubine. "குடவற்குந் தாட்டிக்குங் கொத்திட்டு மாய்வதல்லால்" *(தனிப்பா. I. 87:171).*

**தாட்டி³** *tāṭṭi*, பெ. (n.) **பனை;** palmyra tree *(சா.அக.).*

**தாட்டிகம்** *tāṭṭigam*, பெ. (n.) *1.* **வலிமை;** strength. "தாட்டிகமுடன் வெகுபோட்டி" *(இராமநா. உயு. 16). 2.* **குறும்புத்தனம்;** mischievousness.

**தாட்டிகன்** *tāṭṭigaṉ*, பெ. (n.) *1.* **உரவோன், வலிமையானவன்;** powerful, strong man. *"மயிறனிற் புக்கேறு தாட்டிகன்" (திருப்பு. 911). 2.* **கொடியவன்;** mischievous man. அவன் பெரிய தாட்டிகன் *(உ. வ.).*

**தாட்டிதோப்பு** *tāṭṭi-tōppu*, பெ. (n.) **செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்;** a village in Cheṅgalpet district.

**தாட்டிமை** *tāṭṭimai*, பெ. (n.). **மேன்மை;** eminence. *"தாட்டிமைக்கு நாட்டிலென்னைக் காட்டியுமுண்டோ" (குருகூர்ப்: 96).*

**தாட்டியம்** *tāṭṭiyam*, பெ. (n.) **காரெள்;** black gingelly seed *(சா.அக.).*

**தாட்டிலை** *tāṭṭilai*, பெ. (n.). **அகலமான முழு வாழையிலை** *(இ.வ.)*; full and large-sized leaf of a plantain.

*[தாட்டு → தாட்டிலை.]*

**தாட்டு¹-தல்** *tāṭṭu-*, 5 செ.குவி. (v.t.) *1.* **காலங் கடத்துதல்;** to cause delay. *'பணங்கொடுக்காமல் தாட்டுகிறான்' (இ.வ.). 2.* **நீக்குதல்** *(வின்.)*; to remove. *3.* **மறுத்தல்** *(வின்.)*; to confute.

*[தாழ்த்து → தாட்டு-.]*

**தாட்டு²-தல்** *tāṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **வீழ்த்துதல்** *(வின்.)*; to throw down.

*[தாழ்த்து → தாட்டு-.]*

**தாட்டு³** *tāṭṭu*, பெ. (n.) **ஆடைவகை;** a kind of cloth. *'அரியலூர் தாட்டு' (இ.வ.).*

*[தாட்டு → தட்டு.]*

**தாட்டுப்பண்ணு-தல்** *tāṭṭu-p-paṇṇu-*, 5 செ.குவி. (v.i.) **காலநீட்டிப்பு செய்தல்;** to delay. *பணங்கொடுக்காமல் தாட்டுப் பண்ணுகிறான் (இ.வ.)*

*[தாட்டு + பண்ணு-.]*

**தாட்டுப்பத்திரி** *tāṭṭu-p-pattiri*, பெ. (n.) **சேலைவகை** (இ.வ); a kind of saree.

*[தாட்டு → தாட்டுபத்திரி]*

**தாட்டுப்பூட்டெனல்** *tāṭṭu-p-pūṭṭeṉal*, பெ. (n.) *1.* **வெகுளிக்குறிப்பு;** expr. of being angry. தாட்டுப்பூட்டென்று குதிக்கிறான் *(உ.வ.).*

2. ஆரவாரக் குறிப்பு; expr. of being pompous. 'தாட்டுப்பூட்டென்று நடக்கிறான்'.

[தாட்டு + பூட்டு + எனல்]

**தாட்டுப்போட்டு** *tāṭṭu-p-pōṭṭu,* பெ. (n.) குழப்பம் (யாழ்.அக.); confusion, perplexity.

[தாட்டு + போட்டு]

**தாட்டுமேட்டு** *tāṭṭu-mēṭṭu,* பெ. (n.) தாட்டுப்போட்டு (யாழ். அக.) பார்க்க; see *tāṭṭu-p-pōṭṭu.*

[தாட்டு + மேட்டு]

**தாட்டையன்** *tāṭṭaiyaṉ,* பெ. (n.) தாட்டயன் (நெல்லை.) பார்க்க; see *tāṭṭayaṉ.*

[தாட்டயன் → தாட்டையன்]

**தாட்டோட்டக்காரன்** *tāṭṭōṭṭa-k-kāraṉ,* பெ. (n.) புரட்டன்; ஏமாற்றுபவன்; cheat, deceiver, fraudulent person. தாட்டோட்டக்காரனுக்குத் தயிருஞ் சோறும் (பழ.).

தெ. தாடோடுகாடு

[தாட்டு + ஒட்டு + காரன். காரன் = உரிமைப் பெயரீறு]

**தாட்டோட்டம்** *tāṭṭōṭṭam,* பெ. (n.) 1. புரட்டு; fraud, deception, knavish, trick. 2. குழப்பம் (யாழ்.அக.); confusion, perplexity. 3. காலத் தாழ்வு (தஞ்.); delay.

மறுவ. தாட்டோட்டு, தாட்டோட்டுப்பேரம்.

க. தடவட; தெ. தாடோடு

**தாட்டோட்டு** *tāṭṭōṭṭu,* பெ. (n.) தாட்டோட்டம் பார்க்க; see *tāṭṭōṭṭam.*

[தாட்டோட்டம் → தாட்டோட்டு]

**தாட்டோட்டுபேரம்** *tāṭṭōṭṭu-pēram,* பெ. (n.) தாட்டோட்டம் பார்க்க; see *tāṭṭōṭṭam.*

[தாட்டோட்டம் → தாட்டோட்டு + பேரம்]

**தாட்படை** *tāṭpaḍai,* பெ. (n.) கோழி; gallinaceous fowl (சா. அக.).

[தாள் + படை]

**தாட்பாட்கட்டை** *tāṭpāṭ-kaṭṭai,* பெ. (n.) தாழ்பாளிட உதவுங்கட்டை; bar of wood, used as bolt.

[தாழ்ப்பாள் + கட்டை = நிலைக் கதவினின்று சற்று, தாழ்ந்தநிலையில் கதவினைத் திறக்கவியலாதவாறு, குறுக்கு வால் அமைக்கப்பட்ட கட்டை]



**தாட்பாட்கட்டைமரம்** *tāṭpāṭ-kaṭṭai-maram,* பெ. (n.) தாழ்ப்பாள் செல்லுதற்குரிய மரக்கொண்டி (வின்.); catch of wood to receive a bolt.

[தாழ்ப்பாள் + கட்டை + மரம்.]

**தாட்பாள்** *tāṭpāḷ,* பெ. (n.) 1. தாழ்ப்பாள்; bolt, bar, latch. 2. எலிப்பொறியின் தாள் (வின்.); door of a rat trap.

[தாழ்ப்பாள் → தாட்பாள்]

**தாட்புழு** *tāṭ-puḻu,* பெ. (n.) நெற்பயிரிற் காணும் நோய்வகை (நீலகேசி, 366, உரை); a disease affecting paddy.

[தாள் + புழு]

**தாட்பூட்டு** *tāṭ-pūṭṭu,* பெ. (n.) 1. மோவாய்ச் சந்து; joint of the lower jaw. 2. நேர்த்திக் கடனாக இரு கன்னங்களையும், கம்பியால் இணைத்துக் கொள்ளும் வாய்ப்பூட்டு; metal pin run through the cheeks in fulfilment of a vow. 3. கன்றுகளுக்கு இடும் வாய்ப்பூட்டு (இ.வ.); muzzle put over a calf's head.

[தாள் + பூட்டு]

**தாட்பூட்டுவிலகல்** *tāṭ-pūṭṭu-vilagal,* பெ. (n.) மோவாயெலும்புப் பிசகு (இ.வ.); dislocation of the lower jaw.

[தாள் + பூட்டு + விலகல்.]

**தாட்போர்** *tāṭ-pōr,* பெ. (n.) தலையடியான நெற்றாள் (C.G.); cornstack that has been threshed by hand but not yet trodden by cattle.

[தாள் + போர்]

**தாடஅரசூர்** *tāḍa-arašūr,* பெ. (n.) செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Cheṅgalpet district.

**தாடகத்தி** *tāḍagatti,* பெ. (n.) குங்கும செய் நஞ்சு; a prepared arsenic (சாஅக.).

**தாடகம்** *tāḍagam,* பெ. (n.) 1. நீர்முள்ளி (மலை.); white long-flowered nail-dye. 2. வீழி; a straggling shrub with simple oblong leaves and greenish flowers (செ.அக.).

**தாடகை** *tāḍagai,* பெ. (n.) இராமனாற் கொல்லப் பெற்ற ஓர் அரக்கர் குலமகள்; a female arakkar slain by Rāma. "தாடகைவதைப் படலம்" (கம்பரா.).

விசுவாமித்திரர் வேள்விக்காக அழைத்துச் சென்ற இராமனால் கொல்லப்பட்டவள், சமணரின் வேள்வி எதிர்ப்புக் கொள்கைப் பெண்மணி.

**தாடகைத்தனம்** *tāḍagai-t-taṉam,* பெ. (n.) 1. கொடுமை; cruelty, heartlessness. 2. பெண்களின் நிறையின்மை (வின்.); immodesty in a woman.

[தாடகை + தனம்]

**தாடங்கம்** *tāḍaṅgam,* பெ. (n.) பெண்கள் காதிலணியும் தோடு (சூடா.); woman's ear-ornament.

[தாளங்கம் → தாடங்கம்]

**தாடபத்திரம்** *tāḍa-pattiram,* பெ. (n.) ஓலையாலான காதணி (சங்.அக.); ōlai ear-ornament.

[தாளபத்திரம் → தாடபத்திரம்]

**தாடம்** *tāḍam,* பெ. (n.) அடிக்கை; beating. "தாடவுடுக்கையன்" (தேவா. 699: 10).

[தாள் + அம் → தாடம்]

**தாடலி** *taḍali,* பெ. (n.) பாதிரி; trumpet flower tree (சா.அக.).

**தாடவியம்** *tāḍaviyam,* பெ. (n.) கும்பச்சுரை; bottle gourd (சா.அக.).

**தாடளங்கோவில்** *tāḍaḷaṅkōvil,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில், பொறையாறு வட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Poraiyāṟu taluk in Tañjore district.

கோவிலை நடுவணாகவும் சிறப்பாகவும் கொண்டிருந்தமையால், இப் பெயர் பெற்றது.

**தாடனக்கை** *tāḍaṉa-k-kai,* பெ. (n.) வலக்கை யிளம்பிறையாகவும், இடக்கை பதாகை யாகவும், மார்பிற்கு நேரே எட்டு விரலுயர்த்திப் பிடிக்கும் நடனமுத்திரை (பரத. பாவ. 49); (Nāṭya.) a kind of gesticulation with the right hand in *iḷam-piṟai* pose and the left hand in paṭāgai *pose,* both being held at eight fingers, distance from the chest.

[தாடனம் + கை]

**தாடனம்** *tāḍaṉam,* பெ. (n.) 1. தட்டுகை; patting, tapping. "தாடன மெண்வகையாகும்" (கொக்கோ.). 2. அடிக்கை; beating. 3. தாடனக்கை பார்க்க; see *tāḍaṉa-k-kai.*

**தாடனம்பண்ணல்** *tāḍaṉam-paṇṇal,* பெ. (n.) 1. மெல்லெனக்குத்தல், துருவுதல்; massaging. 2. மார்பினிடமாகக் கைகுவித்துத் தட்டுகை; a process of massaging (சா.அக.).

[தாடனம் + பண்ணல்]

**தாடாண்மை** *tāḍāṇmai,* பெ. (n.) சலிப்பற்ற ஊக்கம் (யாழ்ப்.); energy, indefatigable application and perseverance.

[தாளாண்மை → தாடாண்மை]

**தாடாளன்** *tāḍāḷaṉ,* பெ. (n.) 1. மேன்மை யுள்ளவன்; great person. "தாடாளன் றாளடைவீர்" (திவ். பெரியதி. 3. 4:1). 2. பெரு முயற்சியுள்ளவன் (வின்.); person of great energy and application.

[தாடு + ஆளன். ஆளன் = உடைமைப் பெயரீறு]

**தாடாற்றி** *tāḍāṟṟi,* பெ. (n.) மட்டுப்படுத்துகை, அமைதிப்படுத்துகை (யாழ்ப்.); mitigation, relaxation of intensity or severity, quieting, appeasing .

[தாடு + ஆற்றி → தாடாற்றி]

**தாடி**[1] *tāḍi,* பெ. (n.) 1. முகத்தின் தாழ்பகுதி; chin. "சுருளிடு தாடி" (சிலப். 27:181). 2. முகவாயில் வரும்

முடி; beard. "மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி" (கலித். 15). 3. ஆ முதலியவற்றின் அலை தாடி; dewlap. "பேருடற் றழைந்த தாடி" (திருவாலவா: 36, 24). 4. சேவற் கழுத்தில் தொங்கும் சதை (வின்.); hanging excrescence under a cock's neck. தாடிக்குப் பூச்சூடலாமா? (பழ.).

த. தாடி → Skt. ḍāḍikā (ḍh.)

*[தாழ் → தாழி → தாடி. தாடி = மோவாய். தாடிமயிர் = மோவாய் மயிர். முதற்கண் மோவாயினைக் குறித்த, இச் சொல் பின்பு மோவாய் மயிரினையுங் குறித்து வழங்கியது. தாழ்தல் = தாழ்ந்திருத்தல், தொங்குதல். தாழி → தாடி. தாழ்வாய் = மோவாய் (பிங்.) அடுத்த நிலையில் சேவல், ஆடு போன்றவற்றின் தொங்குசதையைக் குறித்ததென்றறிக.]*



**தாடி**[2] *tāḍi,* பெ. (n.) 1. வாளின்பிடி; hilt, as of a sword. "புனைகதிர் மருப்புத் தாடி மோதிரஞ் செறித்து" (சீவக. 2279). 2. சத்திசாரணை; trianthima.

**தாடி**[3]**-த்தல்** *tāḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. அடித்தல்; to beat. 2. கொட்டுதல்; to beat a drum. "தாடித் தெழுந்த தமருக வோசை" (திருமந். 2317).

**தாடி**[4] *tāḍi,* பெ. (n.) தட்டுகை; tapping, patting. "ஆக தாடி யிடுவார்கள்" (திருப்பு: 363).

**தாடி**[5] *tāḍi,* பெ. (n.) 1. தாட்டி, திறமை; skill. 2. விரலுறை; close. "கலையிரு மருப்பிற் கோடிக்காதள வோடுந்தாடி" (திருவிளை. மாபாத. 22). 3. கொம்மட்டிக்கொடி; bitter melon-creeper.

**தாடிக்காரன்** *tāḍi-k-kāraṉ,* பெ. (n.) தாடியும் மீசையும் வளர்த்துள்ளவன்; one who wears a beard.

ம. தாடிக்காரன்

*[தாடி + காரன்]*

**தாடிச்சி** *tāḍicci,* பெ. (n.) கூத்தாடும் இனப் பெண் (இ.வ.); woman of the actor caste.

*[கூத்தாடிச்சி → தாடிச்சி.]*

**தாடிதபதம்** *tāḍida-padam,* பெ. (n.) வலதுகாற் படத்தின் நுனியை இடதுகாற் பக்கத்தில் ஊன்றி நிற்கும் நிலை (பரத. பாவ: 85); a posture of standing on the left leg with the tip of the right foot touching it.

**தாடிமக்கனி** *tāḍima-k-kaṉi,* பெ. (n.) மாதுளை; pomegranate fruit.

**தாடிமஞ்சம்** *tāḍi-mañjam,* பெ. (n.) 1. சத்திக் கொடி (பிங்); a kind of creeper. 2. கொம்மட்டிக் கொடி; bitter melon creeper.

**தாடிமஞ்சள்** *tāḍi-mañjaḷ,* பெ. (n.) சருகு மஞ்சள்; a kind of turmeric (சா. அக.).

**தாடிமப்பிரியம்** *tāḍima-p-piriyam,* பெ. (n.) (மாதுளம்பழத்தை மிக விரும்பும்) கிளி (யாழ்.அக.); parrot, as fond of pomegranates.

*[தாடிமம் + பிரியம்]*

**தாடிமபத்திரகம்** *tāḍima-pattiragam,* பெ. (n.) செம்மரம்; coromandel red wood (சா.அக.).

**தாடிமபுட்பம்** *tāḍima-putpam,* பெ. (n.) மாதுளம்பூ; pomegranate flower (சா.அக.).

*[தாடிமம் + புட்பம்]*

**தாடிமம்** *tāḍimam,* பெ. (n.) 1. தாதுமாதுளை (பிங்.); pomegranate. 2. சிற்றேலம் (மலை.); cardomam-plant.

**தாடிமயிர்** *tāḍi-mayir,* பெ. (n.) மோவாய் மயிர்; beard.

*[தாடி + மயிர்]*

**தாடிமாதுளை** *tāḍi-māduḷai,* பெ. (n.) மாதுளை; pomegranate (சா.அக.).

*[தாடி + மாதுளை]*

**தாடிமாதா** *tāḍi-mādā,* பெ. (n.) மாவிலங்கம்; liṅgam tree (சா.அக.).

*[தாடி + மாதா]*

**தாடியிடு-தல்** *tāḍi-iḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) தாக்குதல்; to attack. "அருட்சேனை தாடியிடுஞ் சொக்கநாதா" (சொக்க. வெண். 45).

*[தாடி + இடு-.]*

**தாடிரி** *tāḍiri,* பெ. (n.) கண்டங்கத்தரி (சங்.அக.); a medicinal herb.

**தாடு** *tāḍu,* பெ. (n.) 1. வலிமை; strength. "தாடுடைய தருமனார்" (தேவா. 17:9). 2. தலைமை (அக.நி.); leadership.

*[தடு → தாடு]*

**தாடை**[1] *tāḍai,* பெ. (n.) 1. முகத்தாழ்வுப் பகுதி, கன்னம்; cheeks, chaps. "தாடையிலோ ரடிபோட" (இராமநா. உயு. 58). 2. தாடையெலும்பு; jaw-bone. 3. மோவாய் (யாழ்.அக.); chin.

க., பட. தாடெ; ம. தாட

*[தாழ் + த் + ஐ → தாடை = முகத்தில் தாழ்ந்தமைந்த சினை.]*

**தாடை**[2] *tāḍai,* பெ. (n.) வெண்ணாங்கு; creamy leaved lance wood.

**தாடை**[3] *tāḍai,* பெ. (n.) 1. ஆசை (விருப்பம்); desire. 2. பெரும்பல்; molar teeth (செ.அக.).

**தாடைக்கால்** *tāḍai-k-kāl,* பெ. (n.) கன்னக்கீல் (இ.வ.); articulation of the lower jaw.

*[தாடை + கால்]*

**தாடைகிட்டு-தல்** *tāḍai-kiṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தாளிறுத்தல்; to lock jaw (சா.அக.).

*[தாடை + கிட்டு-.]*

**தாடைச்சன்னி** *tāḍai-c-caṉṉi,* பெ. (n.) இழுப்புநோய் வகை (இ.வ.); tetanus, lock-jaw.

*[தாடை + சன்னி]*

**தாடைச்சிரங்கு** *tāḍai-c-ciraṅgu,* பெ. (n.) தாடையில் தோன்றும் சிரங்கு; impetigo pustular eczema cheek (சா.அக.).

*[தாடை + சிரங்கு]*

**தாடையில்போடு-தல்** *tāḍaiyil-pōḍu-,* 18 செகுன்றாவி. (v.t.) தாடையில் அடித்தல்; to slap on the cheek (சா. அக.).

*[தாடை + இல் + போடு-.]*

**தாடையெலும்பு** *tāḍai-y-elumbu,* பெ. (n.) கன்னத்தின் கீழெலும்பு (வின்.); jaw-bone, Maxilla.

ம. தாடியெலும்பு

*[தாடை + எலும்பு]*

**தாடைவீக்கம்** *tāḍai-vīkkam,* பெ. (n.) 1. காதின் கீழ்ப்புறம் தாடையிற் காணும் வீக்கம்; ordinary swelling on the sides of the jaw. 2. பொன்னுக்கு வீங்கி; swelling of the paroted gland and sometimes of the other salivary glands - Mumps (சா.அக.).

*[தாடை + வீக்கம்]*

**தாண்** *tāṇ,* பெ. (n.) குழம்பிலுள்ள காய் (இ.வ.); vegetable in curry (செ.அக.).

**தாண்டகச்சதுரர்** *tāṇḍaga-c-cadurar,* பெ. (n.) திருநாவுக்கரசு நாயனார் (பெரியபு. குங். 32); Tirunāvukkarašu-nāyaṉār.

மறுவ. தாண்டகவேந்தர்

*[தாண்டு → தாண்டகம் + சதுர் → சதுரர் தாண்டகச்சதுரர்]*

**தாண்டகச்சந்தம்** *tāṇḍaga-c-cantam,* பெ. (n.) 1. தாண்டகவடி மிக்குச் சந்தவடி குறைந்து வருஞ் செய்யுள். கட்டளைக்கலித்துறை நேர்முதலாக 16 எழுத்துக்களும், நிரை முதலாக 17 எழுத்துக்களும் கொண்டு வரும் என்பது போல, நேர்முதலாக 24 எழுத்துக்களும், நிரைமுதலாக 25 எழுத்துக்களும் கொண்டு வரும் செய்யுளைத் தாண்டகம் என்று கூறுவர் (யாப். வி. 95:456); a stanza in which lines of *tāṇḍagam* measure preponderate over lines of *šanḍam* measure. 2. சந்தவடியுந் தாண்டக வடியும் விரவி யோசை கொண்டு வருஞ் செய்யுள் (யாப்.வி. 95: 455); a stanza containing both šanda-v-aḍi and tāṇḍaga-v-aḍi (செ.அக.).

*[தாண்டகம் + சந்தம். 25 எழுத்துக்கள் கொண்டு வரும் செய்யுள்]*

"ஊனாகி உயிராகி யதனுள் நின்ற
உணர்வாகிப் பிறவனைத்தும் நீயாய் நின்றாய்
நானேதும் அறியாமே யென்னுள் வந்து
நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்
தேனாரும் கொன்றையனே நின்றியூராய்
திருவானைக் காவிலுறைசிவனே ஞானம்
ஆனாய் உன்பொற்பாதம் அடையப்
பெற்றால் அல்ல கண்டம் கொண்டு
அடியேன் என் செய்கேனே".

*(திருநாவுக்கரசர். தேவா: 123: 2,)*

**தாண்டகம்** *tāṇḍagam*, பெ. (n.) 1. **இருபத்தாறு எழுத்தின் மிக்க அடியான்வரும் அளவழித் தாண்டகம், அளவியற்றாண்டகம் என்ற இருபகுப்பினையுடைய பாக்கள்** *(யாப். வி: 95: 447);* a stanza each line of which consists of more than 26 syllables, of two kinds, viz., aḷavaḻi-t-tāṇḍagam and aḷaviyaṟṟāṇḍagam. 2. **அறுசீராலேனும் எண்சீராலேனும் இயன்ற ஒத்த நான்கடி கொண்ட செய்யுள் களுடையதும், கடவுளரைப் புகழ்வதுமான இலக்கியவகை** *(பன்னிருபா. 305);* a poem in praise of deities made up of quatrains of equal length, each line containing either six or eight šīr.

*[தாண்டு → தாண்டகம் = 24 எழுத்து ஆகிய அளவைத் தாண்டிச் செல்லும் அடிகளைக் கொண்ட செய்யுள் (மு.தா. 52)]*

**தாண்டகவடி** *tāṇḍaga-v-aḍi*, பெ. (n.) **இருபத்தாறுக்கு மேற்பட்ட எழுத்துகளால் இயன்ற அடி** *(யாப். வி: 95:256);* a metrical line of more than 26 letters.

*[தாண்டகம் + அடி. 26 எழுத்துகளுக்கு மேல் வரும் அளவழித்தாண்டகப் பாடல்]*

மிறைபடுமிவ் வுடல்வாழ்வை மெய்யென்
றெண்ணி வினையிலே கிடந்தழுந்தி
வியல்வேல்நெஞ்சே
குறைவுடையார் மனத்து ளான் குமரன்தாதை
கூத்தாடுங் குணமுடையான் கெலைவேற்
கையான்
அறைகழலுந் திருவடியுமேற் சிலம்பு மார்ப்ப
அவனிதலம் பெயரவரு நட்டம் நின்ற
நிறைவுடையா னிடமாம் நெய்த்தானமென்று
நினையுமா நினைந்தக்கா லுய்யலாமே

*(திருநாவுக்கரசர், தேவா: 114: 6)*

**தாண்டகவேந்தர்** *tāṇḍaga-vēndar*, பெ. (n.) **அப்பர், சிவனியக்குரவர் நால்வரில் ஒருவர்;** Appar, one among four Šaiva šaints.

**மறுவ.** திருநாவுக்கரசர், வாகீசர், தாண்டகச்சதுரர்.

*[தாண்டகம் + வேந்தர். தாண்டகம் என்ற பாவினத்தில், அளவழித்தாண்டகம், அளவியற்றாண்டகம் முதலான பலவகைத் தாண்டகப் பாக்களைப் பாடியவர்]*

கி.பி. 7-ஆம் நூற்றாண்டில், தொண்டு நெறியில் வாழ்ந்த அப்பர் பெருமானார், இறைவனையும், ஈடில்லா அவனது புகழையும் இறைவனுக்கும் ஆதனுக்கும், எஞ்ஞான்றும் தொடர்ந்து வரும் உறவினையும் பலவகைத் தாண்டகப் பாக்களின் வாயிலாக, எடுத்துக்காட்டுகிறார். அவர் அருளிய தாண்டகப் பாக்களின் தனிச்சிறப்பால், தாண்டகச்சதுர், தாண்டக வேந்தர் முதலான சிறப்புப் பெயர்களால் குறிக்கப் பெறுகிறார்.

தாண்டகப் பாக்களின் வகைகள் வருமாறு:

1. அடைவுத் திருத்தாண்டகம்

பெருக்காறு சடைக்கணிந்த பெருமான்
சேரும் பெருங்கோயில் எழுபதினோ
டெட்டும் மற்றுங்,

கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற்கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக்
கோயில்

இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்

திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே

*(திருநாவுக்கரசு சுவாமிகள், தேவாரம், 520:5)*

2. அடையாளத் திருத்தாண்டகம்

ஏறேறி யேழுலகும் உழிதர்வானே
இமையவர்கள் தொழுதேத்த இருக்கின்றானே

பாறேறு படுதலையிற் பலிகொள் வானே
படவரவந்த தடமார்பிற் பயில்வித்தானே

நீரேறு செழும்பவளக் குன்றொப்பானே
நெற்றிமேல் ஒற்றைக்கண் நிறைவித் தானே

ஆறேறு சடைமுடிமேற் பிறைவைத்தானே
அவனாகில் அதிகைவீ ரட்டனாமே

*(திருநாவுக்கரசர், தேவா: 57: 9).*

**3. அளவியற்றாண்டகம்**

பேசப்பொருளலாப் பிறவி தன்னைப் பெரிதென்றுன் சிறுமனத்தால்வேண்டியீண்டு
வாசக்குழல்மடார் போகமென்னும்
வலைப்பட்டு வீழாதே வருக நெஞ்சே
தூசக்கரியுரித்தான் தூநீறாடித் துதைந்திலங்கு நூல்மார்பன் தொடரகில்லா
நீசர்க்கரியவன் நெய்த் தானமென்று
நினையுமா நினைந்தக்கா லுய்யலாமே

*(திருநாவுக்கரசர், தேவா: 114: 7).*

**4. அளவழித் தாண்டகம்**

பொருந்தாத உடலகத்திற் புக்க ஆவி போமா றறிந்தறிந்தே புலைவாழ் வுன்னி
இருந்தாங் கிடர்ப்படநீ வேண்டா நெஞ்சே
இமையவர் தம் பெருமானன் றுமையா ளஞ்சக்
கருந்தாள் மதகரியை வெருவச் சீறுங் கண்ணு தலன்கண் டமராடிக் கருதார்வேள்வி
நிரந்தரமா இனிதுறை நெய்த் தானமென்று
நினையுமா நினைந்தக்கா லுய்யளாமே

*(திருநாவுக்கரசர் 114: 9).*

**5. ஏழைத்திருத்தாண்டகம்**

முந்தியுலகம் படைத்தான் தன்னை
மூவா முதலாய மூர்த்தி தன்னைச்
சந்தவெண் திங்கள் அணிந்தான் தன்னைத் தவநெறிகள் சாதிக்க வல்லான் தன்னைச்
சிந்தையில் தீர்வினையைத் தேனைப் பாலைச் செழுங்கெடில வீரட்டம் மேவினானை
எந்தை பெருமானை ஈசன் தன்னை ஏழையேன் நான்பண்டு இகழ்ந்த வாறே

*(திருநாவுக்கரசர் 393: 3)*

**6. காப்புத் திருத்தாண்டகம்**

செழுநீர்ப் புனற் கெடில வீரட்டமுந் திரிபுராந் தகந் தென்னார் தேவீச்சரம்
கொழுநீர் புடைசுழிக்குங் கோட்டுக்காவுங் குடமூக்குங் கோகரணங்கோலக்காவும்
பழிநீர்மை யில்லாப் பனங்காட் டூரும் பனையூர் பயற்றூர் பராய்த்துறையும்
கழுநீர் மதுவிரியுங் காளிங்கமுங் கணபதீச் சரத்தார்தங் காப்புக்களே

*(திருநாவுக்கரசர், தேவா: 402: 5)*

**7. தனித்திருத்தாண்டகம்**

அப்பன்நீ அம்மைநீ ஐயனும் நீ அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ ஒருகுலமுஞ் சுற்றமும் ஒரூரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்றுவாய்நீ துணையாய் என்நெஞ்சந் துறப்பிப்பாய் நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்தும் நீ இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே

*(திருநாவுக்கரசர், தேவா: 525: 1)*

**8. நின்ற திருத்தாண்டகம்**

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியுங் காற்றுமாகி,
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாயட்ட மூர்த்தி ஆகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும் பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகித்
நெருநலையாய் இன்றாகி நாளையாகி நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே

*(திருநாவுக்கரசர், தேவா: 523: 1)*

**9. திருவடித் திருத்தாண்டகம்**

அணியனவுஞ் சேயனவும் அல்லாவடி அடியார்கட் காரமுத மாயவடி
பணிபவர்க்குப் பாங்காக வல்லவடி பற்றற்றார் பற்றும்பவள வடி
மணியடி பொன்னடி மாண்பாமடி மருந்தாய்ப் பிணிதீர்க்க வல்லவடி
தணிபாடு தண்கெடில நாடன்னடி
தகைசார் வீரட்டத் தலைவன்னடி

*(திருநாவுக்கரசர், தேவா: 401: 9)*

**10. போற்றித் திருத்தாண்டகம்**

பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி பாவிப்பார் பாவமறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்துஞ் சொல் லானாய் போற்றி என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனுந்தீ யானாய் போற்றி மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி

*(திருநாவுக்கரசர், தேவா: 466: 7)*

*11. மறுமாற்றத் திருத்தாண்டகம்*

*நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்திலடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ
மல்லோம் இன்பமே எந்நாளும் துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரன்நற் சங்கவெண்குழையோர் காதிற்
சோமாற்கே நாமென்றும் மீளாஆளாய்க்கொய்ம்
மலர்ச்சே வடியினையே குறுகினோமே*

*(திருநாவுக்கரசர், தேவா: 532: 1)*

*12. வினாவிடைத் திருத்தாண்டகம்*

*பண்ணார்ந்த வீணை பயின்ற துண்டோ
பாரிடங்கள் பலசூழப் போந்த துண்டோ
உண்ணா வருநஞ்ச முண்ட துண்டோ
ஊழித்தீயின்ன ஒளிதா னுண்டோ
கண்ணார் கழல்காலற் செற்ற துண்டோ
காமனையுங் கண்ணழலாற் காய்ந்த துண்டோ
எண்ணார் திரிபுரங்க ளெய்ததுண்டோ
எவ்வகையெம் பிரானாரைக் கண்ட வாறே*

*(திருநாவுக்கரசர், தேவா: 531: 4)*

*13. திருத்தலக் கோவைத் திருத்தாண்டகம்*

*தில்லைச்சிற் றம்பலமுஞ் செம்பொன் பள்ளி
தேவன்குடி சிராப்பள்ளி தெங்கூர்
கொல்லிக் குளிரறைப் பள்ளிகோவல்
வீரட்டங் கோகணங் கோடி காவும்
முல்லைப் புறவம் முருகன் பூண்டி முளையூர்
பாழையாறை சத்தி முற்றங்
கல்லில் திகழ்சீரார் காளத்தியுங் கயிலாய
நாதனையே காணலாமே.*

*தேவாரத்தில் பாடப்பெற்ற திருத்தலங்களைக் குறிக்கும் பாடல்*

*(திருநாவுக்கரசர், தேவா: 517: 1)*

**தாண்டமண்டலம்** *tāṇḍa-maṇḍalam,* பெ. (n.) **கடல்;** sea.

"தாண்ட மண்டலம் ஏலேலோ
தவிட்டு மண்டலம் ஏலேலோ"

*(நாட்டார் பாடல்)*

*[தாண்டம் + மண்டலம்]*

**தாண்டல்** *tāṇḍal,* பெ. (n.) **உயிர்போகும் தறுவாயிலிருந்து விடுபடுகை;** passion over a critical period.

*[தாண்டு → தாண்டல்]*

**தாண்டவத்தாள்** *tāṇḍa-vattāḷ,* பெ. (n.) **ஏமமணல்;** gold mixed with sand-Gold ore.

**தாண்டவதாலிகன்** *tāṇḍava-tāligaṉ,* பெ. (n.) **நந்திதேவன்;** the God Nandi.

**தாண்டவபிரியன்** *tāṇḍava-piriyaṉ,* பெ. (n.) **சிவன்;** the God Śivaṉ.

*[தாண்டவம் + பிரியன். அனைத்து (ஆன்மா) ஆதனிடத்தும், பேரன்பு பூண்டு திருநட்டம் பயில்பவன்]*

**தாண்டவம்**[1] *tāṇḍavam,* பெ. (n.) *1.* **தாவுகை** *(பிங்.);* leaping, jumping. *2.* **செலுத்துகை** *(பிங்.);* driving.

*[தாண்டு → தாண்டவம்.]*

**தாண்டவம்**[2] *tāṇḍavam,* பெ. (n.) **கூத்துவகை** *(திவா.);* a kind of dance.

ம. தாண்டவம்

த. தாண்டவம் → Skt. tāṇḍava

*[தாண்டு → தாண்டவம்.]*

**தாண்டவமாடு-தல்** *tāṇḍavam-āḍu-,* 5 செ.குவி. (v.i.) *1.* **தலைவிரித்தாடுதல்;** to show up, be rampant. 'நாட்டில் பஞ்சம் தாண்டவமாடும்போது, இப்படிப்பட்ட ஆடம்பர விழாக்கள் அவசியம் தானா?' *(இக்வ.)* *2.* **பெருமளவில் வெளிப்படுதல்;** be seen in excess. 'செய்தியைக் கேட்டவுடன் அவன் முகத்தில் உற்சாகம் தாண்டவமாடியது' (இக்.வ.).

*[தாண்டவம் + ஆடு-.]*

**தாண்டவமாலை** *tāṇḍava-mālai,* பெ. (n.) **19ஆம் நூற்றாண்டில் அப்பாவையன் எழுதிய சிற்றிலக்கியம்;** a literature written by Appāvaiyaṉ in 19th century.

*[தாண்டவம் + மாலை]*

**தாண்டவமூர்த்தி** *tāṇḍava-mūrtti,* பெ. (n.) **(தாண்டவமாடும் மூர்த்தி) நடராசர்;** Naṭarājar, as Śivam in his dancing attitude.

*[தாண்டவம் + மூர்த்தி. திருநட்டம் பயிலும் ஆடவல்லான். ஆடவல்லானின் திருநட்டம், இவ்வுலகம் தோன்றிய காலந்தொட்டு, ஒவ்வொரு ஆதனின்,*

*(உள்ளத்தே நிகழ்வது. இத் திருநட்டம் ஆதன் (ஆன்மா) உய்வடைதற்பொருட்டே இறைவனால் நிகழ்த்தப் பெறுவதாகும்]*

**தாண்டவராயசுவாமிகள்** *tāṇḍavarāya-šuvāmigaḷ*, பெ. (n.) வேதாந்த நூலான கைவல்லிய நவநீத மியற்றிய ஆசிரியர்; author of Kaivalliya-navanīdam, a treatise on Vēdāntam.

**தாண்டவராயர்** *tāṇḍava-rāyar*, பெ. (n.) புலவர்; poet.

திருமயிலைக் கோவைப் பாடியவர்.

**தாண்டவராயன்** *tāṇḍava-rāyaṉ*, பெ. (n.) தாண்டவப்பிரியன் பார்க்க; see *tāṇḍava-p-piriyaṉ*.

*[தாண்டவம் + அரையன் → ராயன்]*

**தாண்டவன்** *tāṇḍavaṉ*, பெ. (n.) தாண்டவ மூர்த்தி (சங்.அக.) பார்க்க; see *tāṇḍava-mūrtti*.

மறுவ. ஆடவல்லான்

*[தாண்டு → தாண்டவன்]*

**தாண்டவன்குளம்** *tāṇḍavaṉ-kuḷam*, பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் பொறையாறு வட்டத்திலுள்ள ஊர்; a village in Poṛaiyāṟu taluk in Tañjāvūr district.

**தாண்டவவளிநோய்** *tāṇḍava-vaḷi-nōy*, பெ. (n.) ஓர் வகை நடுக்குக் காற்றுப்பிடிப்பு; chores-stvitus dance (சா.அக.).

*[தாண்டவம் + வளிநோய்]*

**தாண்டா**[1] *tāṇḍā*, பெ. (n.) மகளிர் தலைப் பின்னலில் அணியும் மாலை (இ.வ.); a flower garland worn on braided hair by woman.

மரா. தாண்டா.

**தாண்டா**[2] *tāṇḍā*, பெ. (n.) சிற்றேலம்; small cardamom (சா.அக.).

**தாண்டி** *tāṇḍi*, பெ. (n.) 1. ஆடற்கலை நூல் (யாழ்.அக.); treatise on dancing. 2. குடும்பக் கட்டிலிருந்து விலகியவன்; one who has overcome the wordly temptations.

*[தாண்டு → தாண்டி.]*

**தாண்டிக்கரையேறு-தல்** *tāṇḍi-k-karai-y-ēṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) துன்பத்திலிருந்து வெளி வருதல்; to overcome difficulties. பற்று விட்டவரே உலகவாழ்க்கைக் கடலைத் தாண்டிக் கரையேறுவர் (உ.வ.).

*[தாண்டி + கரை + ஏறு-.]*

**தாண்டிமண்டலம்போடு-தல்** *tāṇḍi-maṇḍalam-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) சினத்தோடு மேற்பாய்தல் (யாழ்ப்.); to spring or run at a person in rage, as a ferocious animal.

*[தாண்டு + மண்டலம் + போடு-.]*

**தாண்டு**[1]**-தல்** *tāṇḍu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. குதித்தாடுதல் (பிங்.); to dance, skip, jump. 2. செருக்கடைதல் (இ.வ.); to be arrogant. 3. மிதமிஞ்சிப் பேசுதல் (இ.வ.); to transgress limits in talking.

க. தாண்டு; ம. தாண்டுக.

*[தாவு → தாண்டு. தாண்டுதல் = ஓரிடத்தினின்று மற்றோரிடத்திற்கு, கடந்து செல்லுதல்.]*

**தாண்டு**[2]**-தல்** *tāṇḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கடத்தல் (பிங்.); to leap across, jump over, cross, step over. தாய் எட்டடி தாண்டினால் குட்டி பதினாறடி தாண்டும் (பழ.). 2. செலுத்துதல் (பிங்.); to drive. 3. மேற்படுதல்; to surpass, outdo, excel. 'தேர்வில் எல்லாரையும் தாண்டிவிட்டான்' (உ.வ.).

ம. தாண்டுக; க. தாடு, தாண்டு, தாண்டு; தெ. தாடு; து. தாண்டுனி; கொலா. தாட்; கோத. தாட்; துட. தோட்; பட. தாண்டு.

*[துரண்டு → தாண்டு-.]*

**தாண்டு**[3]**-தல்** *tāṇḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) இக்கட்டிலிருந்து காத்தல்; to pass over a critical period (சா.அக.).

*[துரண்டு → தாண்டு-.]*

**தாண்டு**[4] *tāṇḍu-*, பெ. (n.) நடனக்கலை; dancing.

*[தாவு → தாண்டு]*

**தாண்டு**[5] *tāṇḍu-*, பெ. (n.) 1. குதி; leap, jump. 'ஒரு தாண்டுத் தாண்டினான்' (உ.வ.). 2. வெற்றி (யாழ்.அக.); victory, success. 3. அகங்கரிப்பு;

airs, self-conceit. 'வெகுதாண்டுத் தாண்டுகிறான்' (உ.வ.). 4. சுற்றிப்போட்ட பின், வீதியில் எறியப்பட்ட மிளகாய் முதலியவற்றைத் தாண்டுதலால், உண்டாவதாகக் கருதப்படும் கால்நோய் வகை (இ.வ.); a disease characterised by abnormal swelling in the legs, supposed to be caused by treading or crossing over the chillies, etc. waved round persons to avert the effects of evil eye and thrown in the streets.

[தூண்டு → தாண்டு.]

**தாண்டுகாலி** *tāṇḍu-kāli,* பெ. (n.) கண்டபடி திரிபவ-ன்-ள்; immoral person, as straying from virtue. "தவவினை தனைவிடு தாண்டு காலியை" (திருப்பு. 772).

[தாண்டு + காலி]

**தாண்டுகாற்போடு-தல்** *tāṇḍu-kāṟ-pōḍu-,* 20 செ.குவி. (v.i.) 1. ஒரு வேலையுஞ் செய்யாமல் திரிதல்; to loaf about without doing any work. 2. ஆற்றலுக்கு மிஞ்சிய வேலையை மேற் கொள்ளுதல்; to undertake a work beyond one's capacity. 3. நூலில் இங்கொரு பக்கம் அங்கொரு பக்கமாகப் படித்தல்; to skip through a book.

[தாண்டு + கால் + போடு-.]

**தாண்டுகோல்** *tāṇḍu-kōl,* பெ. (n.) கிட்டிப் புள்ளில் அடிக்குங்கோல் (சென்னை); the stick used for striking in the game of tipcat.

[தாண்டு + கோல்]

**தாண்டுவெட்டி** *tāṇḍu-veṭṭi,* பெ. (n.) ஆடு மாடுகள் புகாதபடி வழியில் நடப்பட்ட கவைக்கால் (இ.வ.); forked post, used as a stile.

[தாண்டு + வெட்டி]



**தாண்முதல்** *tāṇ-mudal,* பெ. (n.). தாளடி; base of the foot. "தாண்முதலே நங்கட்குச் சார்வு" (திவ். இயற். 3: 99).

[தாள் + முதல்]

**தாண்முளை** *tāṇ-muḷai,* பெ. (n.) மகன்; son. "கோமான் றாண்முளை" (சூளா. மந்திர: 91).

மறுவ. கான்முளை

[தாள் + முளை]

**தாணக்காய்** *tāṇa-k-kāy,* பெ. (n.) நெல்லிப் பருப்பு; seed of indian gooseberry (சா.அக.).

**தாணச்சி** *tāṇacci,* பெ. (n.) எவட்சாரம்; nitrate of potash (சா.அக.).

**தாணா** *tāṇā,* பெ. (n.) 1. குதிரைக்குக் கொடுக்கும் அவித்த கொள்ளு; boiled gram for feeding a horse. 2. சிற்றுணவு (C.G.); light refreshment.

[தரு → தா → தாண் → தாணா.]

**தாணி[1]-த்தல்** *taṇi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. பதித்தல்; to fasten, affix, enchase, as gem. "அரக்கும் உட்படத் தாணித்த சிவப்புச் சிலையும்" (S.I.I.ii, 206). 2. மண் முதலியவற்றைக் கெட்டிப்படுத்துல் (வின்.); to ram down, make firm, as earth round a tree; to hammer down. 3. துப்பாக்கி கெட்டித்தல் (வின்.); to load, as a gun. 4. உறுதிப்படுத்துதல் (யாழ்.அக.); to confirm, strengthen. 5. விரைவிற் கடைதல் (வின்.); to ply hard, as in churning.

[தாள் → தாண் → தாணி-.]

**தாணி[1]-த்தல்** *taṇi-,* 4 செ.கு.வி. (v.t.) 1. திறமையாய் பொய்க்குற்றமேற்றுதல் (வின்.); to impute crime falsely and skilfully. 2. இழையோட்டுதல் (நெல்லை.); to baste, tack.

[தாள் → தாண் → தாணி-.]

**தாணி[2]** *taṇi,* பெ. (n.) 1. தான்றி (பதார்த்த. 978); belleric myrobalan. 2. பூண்டுவகை (பதார்த்த. 279); klotzsch's croton klotzschianus.

ம. தாணி, தான்னி; க. தானி; தெ. தாண்டர; து. தாண்டி

[தான்றி → தாணி]

**தாணிக்காய்** *tāṇikkāy,* பெ. (n.) தாணி[2]-1 பார்க்க; see *tāṇi-1* (சா.அக.).

[தான்றி → தாணி + காய்]

**தாணிகசன்னி** *tāṇiga-šaṉṉi,* பெ. (n.) புணர்ச்சி யினால் உண்டாகும் ஒரு வகை இசிவு; apoplexy arising from sexual intercourse (சா.அக.).

*[தாணிகம் + சன்னி]*

**தாணிகம்** *tāṇigam,* பெ. (n.) பெண்குறி; female genital (சா.அக.).

**தாணிப்பூண்டு** *tāṇi-p-pūṇḍu,* பெ. (n.) ஒரு வகை மருந்துச் செடி; a kind of medicinal plant.

*[தாணி + பூண்டு]*

இதனை அரைத்து வதக்கி புற்றுநோயின் புண்ணில் கட்டினால், நோய் வேகமாக நோய் குணமாகும் என்று சா.அக. கூறும்.

**தாணு** *tāṇu,* பெ. (n.) 1. நிலைபேறு (சூடா.); firmness, stability. 2. செடிகொடிகள்; category of the immoveables. "தாணுவோ டூர்வவெல்லாம்" (கம்பரா. மிதி: 117). 3. மலை (பிங்.); mountain. 4. தூண் (பிங்.); pillar. "உயர்ந்தோர்க்குத் தாணுமன்" (பு.வெ.4:20). 5. குற்றி; post. "தருமநீ டுருவத் தாணு தாணுவே யெனவிருந்தான்" (திருவாலவா. 28:43). 6. சிவன் (பிங்.); Šivaṉ. 7. பற்றுக்கோடு; prop, support. 8. செவ்வழி யாழ்த்திற வகை (பிங்.); a secondary melody type of the *cevvaḻi* class (musi.).

*[தூண் → தாண் + உ → தாணு – 'உ'கரம் சாரியை. எஞ்ஞான்றும் நிலைத்திருப்பது. ஒருகா. தள் → தார் → தாண் + உ. நிலைபேற்றினைத் தருவது. உறுதியானது. மாறாத் தன்மையது. ஆதன் உய்யும் பொருட்டு, பேராவியற்கைப் பெரு வாழ்வைத் தரும் இறைவன், தாணு எனப்பட்டான்]*

**தாணுபரி** *tāṇupari,* பெ. (n.) அமுக்கிரா; wintercherry (சா.அக.).

**தாணையக்காரன்** *tāṇaiya-k-kāraṉ,* பெ. (n.) மன்னரின் மாவட்டப் பகராள்; bailiff's man.

மறுவ. தாணயச்சேவகன்

*[தாணையம் + காரன்.]*

**தாணையம்** *tāṇaiyam,* பெ. (n.) 1. கோட்டைக் குள்ளிருக்கும் சேனை; garrison. 2. பாளையம்; military camp. 3. மந்தை (இ.வ.); flock, herd.

*[தாணை + அம் → தாணையம். தாணை = குழுமுகை, திரளுகை. குழுமியுள்ள படை. 'அம்' – சொல்லாக்க ஈறு]*

**தாணையம்போடு-தல்** *tāṇaiyam-pōḍu-,* 20 செகுவி. (v.t.) 1. பாளையமிறங்குதல்; to camp. 2. உறவினர் பலர், ஒரு வீட்டில் பல நாட் கூடியிருத்தல்; to tarry, overstay, as guests in one's house. 3. தாளமிட்டு பாடுதல்; to sing with the music.

*[தாணை + அம் + போடு-. தாணை = குழுமுகை, கூட்டமாய்ச் சேருகை. தாணையம் போடுதல் = ஒன்றுசேர்தல். ஓரிடத்தில் திரளுதல்]*

**தாத்தா** *tāttā,* பெ. (n.) 1. தந்தையின் தந்தையாகிய பாட்டன்; grand-father. 2. வயது முதிர்ந்தவன்; aged man.

தெ. க. தாத்த; வ. தாத்த.

*[தா + தா = தாத்தா → தந்தையைத் தந்தவன்]*

**தாத்தாரி** *tāttāri,* பெ. (n.) நெல்லி (மலை.); emblic myrobalan.

*[தாத்திரி → தாத்தாரி]*

**தாத்தி** *tātti,* பெ. (n.) ஆத்தி மரவகை (மூ.அ.); common mountain ebony.

*[தாதகி → தாத்தி.]*

**தாத்திரகம்** *tāttiragam,* பெ. (n.) சுக்கு; dry ginger (சா.அக.).

**தாத்திரம்** *tāttiram,* பெ. (n.) 1. கோடரி (சது.); axe. 2. கூன்வாள் (யாழ்.அக.); bill-hook.

**தாத்திரி**[1] *tāttiri,* பெ. (n.) 1. தாய் (யாழ்.அக.); mother. 2. நிலம் (பிங்.); earth. 3. நெல்லி (தைலவ. தைல); emblic myrobalan.

**தாத்திரி**[2] *tāttiri,* பெ. (n.) 1. ஆடுதின்னாப் பாலை (மலை.); worm-killer. 2. நெல்லி வற்றல்; dried goose-berry. 3. ஆயாள்; nurse. 4. மருத்துவச்சி; midwife (சா.அக.).

*[தாதரி → தாத்திரி]*

**தாத்திரிபத்திரம்** *tāttiri-pattiram,* பெ. (n.) தாளிசஇலை; leaf of east indian plum.

**தாத்திரிபலம்** *tāttiri-palam,* பெ. (n.) நெல்லிக்கனி; gooseberry (சா.அக.).

*[தாத்திரி + பலம்]*

**தாத்திரிபலை** *tāttiri-palai,* பெ. (n.) தாத்திரி பலம் பார்க்க; see *tāttiri-palam* (சா.அக.).

*[தாத்திரி + பலம் → பலை]*

**தாத்திரிபுட்பிகம்** *tāttiri-puṭpigam,* பெ. (n.) தாதுபுட்பிகம் பார்க்க; see *tādu-puṭpigam* (சா.அக.).

*[தாத்திரி + Skt. புட்பி + இகம்]*

**தாத்திரியம்** *tāttiriyam,* பெ. (n.) வறுமை (யாழ்ப்.); poverty.

*[தாத்திரி → தாத்திரியம்]*

**தாத்திருவாதம்** *tāttiru-vādam,* பெ. (n.) *1.* ஏய்ப்பு; cheating, fraud, trick. *2.* பொய்; lie (செ.அக.).

**தாத்து[1]-தல்** *tāttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* கொழித்தல் (யாழ்ப்.); to winnow. *2.* இழிந்ததை உயர்ந்ததற்கு மாற்றுதல்; to shift off bad articles for good. 'அவன் தாத்திப் போட்டான்' (யாழ்ப்.). *3.* செலவழித்தல் (தஞ்சை.); to spend. *4.* ஒளித்து வைத்தல் (யாழ்ப்.); to conceal, as stolen bullocks.

*[தாற்று → தாத்து-.]*

**தாத்துவன்** *tāttuvaṉ,* பெ. (n.) தாதா[2] (யாழ்.அக.) பார்க்க; see *tātā*[2].

**தாத்துவாசம்** *tāttuvāšam,* பெ. (n.) மிளகு (மலை.); pepper.

*[தாத்து + வாசம்]*

**தாத்துவிகம்** *tāttuvigam,* பெ. (n.) தத்துவம் தொடர்புடையது; that which is connected with tattuvam. "தாத்துவிக சகல" (சி.சி. 1.30, ஞானப்.)

*[தத்துவிகம் → தாத்துவிகம்]*

**தாதக்கூத்து** *tāta-k-kūttu,* பெ. (n.) தாதர்கள் ஆடும் ஆடல்; dancing by tāšari men (செ.அக.).

*[தாதர் + கூத்து]*

**தாதகமஞ்சள்** *tādaga-mañjaḷ,* பெ. (n.) மஞ்சட்கல்; a yellow stone.

**தாதகி** *tādagi,* பெ. (n.) *1.* ஆத்தி; common mountain ebony. "தாதகிப்பூவுங் கட்டியு மிட்டு" (மணிமே. 27: 264). *2.* தாது புட்பிகம்; downy grislea-wood fordia flori bunda. *3.* பேய்க் கொம்மட்டி; bitter apple (சா.அக.).

*[தா + து → தாது]*

**தாதச்சி** *tādacci,* பெ. (n.) தவப்பெண் (யாழ்.அக.); a female ascetic.

*[தாதன் → தாதச்சி]*

**தாதட்பனை** *tādaṭpaṉai,* பெ. (n.) தாதப்பனை பார்க்க; see *tāda-p-paṉai* (சா.அக.).

மறுவ. சவ்வரிசிமரம், காமமரம்

**தாதணிவளையம்** *tādaṇi-vaḷaiyam,* பெ. (n.) விரலணிவகை; a kind of finger-ring. "தலை விரற் சுற்றுந் தாதணிவளையம்" (பெருங். இலாவாண. 19:180).

*[தாது + அணி + வளையம்.]*

**தாதப்பனை** *tāda-p-paṉai,* பெ. (n.) காம மரம்; common Indian fern palm.

ம. துடப்பந

*[தாது + பனை]*

**தாதநம்** *tādanam,* பெ. (n.) கரிக்குருவி; king crow (சா.அக.).

**தாதம்[1]** *tādam,* பெ. (n.) சாதிலிங்கம்; vermilion (சா.அக.).

**தாதம்[2]** *tādam,* பெ. (n.) *1.* கொடை (யாழ்.அக.); gift. *2.* அசைபவை; movable things.

**தாதரி** *tādari,* பெ. (n.) ஆடுதின்னாப் பாலை (சங்.அக.); worm-killer plant.

*[தாத்திரி → தாதரி]*

**தாதலம்** *tādalam,* பெ. (n.) நோய்; disease (சா.அக.).

**தாதவைபத்திரம்** *tādavai-pattiram,* பெ. (n.) உலர்ந்த பேரீச்சம்பழம்; dried date fruit (சா.அக.).

*[தாதவை + பத்திரம்]*

**தாதற்ற** *tādaṟṟa,* பெ. அ. (adj.) ஆண்மை யில்லாத; without potent power (சா.அக.).

*[தாது + அற்ற]*

**தாதன்[1]** *tādaṉ,* பெ. (n.) *1.* அடியவன் (பிங்.); slave, devotee. *2.* தாசரி; Vaiṣṇava religious mendicant of other than Brahmins (செ.அக.).

*[தாயம் → தாசன் → தாதன். தாதன் = வழிவழியாகத் தொண்டு செய்பவன். உரிமையுடையவன், மண்ணின் மைந்தன், ஊழியம் புரிவதற்கென்று முதலாளிகளால் தொன்றுதொட்டு தாழ்த்தி வைக்கப் பட்டவன்]*

**தாதன்**[2] *tādaṉ,* பெ. (n.) தாதா[2] *(யாழ்.அக.)* பார்க்க; see *tādā.*

*[தா + தன் → தாதன்]*

**தாதனம்** *tādaṉam,* பெ. (n.) தாதானம்[2] பார்க்க; see *tātāṉam*[2] *(சா.அக.).*

**தாதா**[1] *tādā,* பெ. (n.) *1.* தந்தை; father. "தாதாவெனிற் கல்விதானகலும்" *(தனிப்பா, 2, 283, 677). 2.* தாத்தா; grandfather. *3.* பெரியோன் *(மாறனலங். 140:541);* great man.

*[தா + தா → தாதா]*

**தாதா**[2] *tādā,* பெ. (n.) கொடையாளன்; liberal donor. "ஞானதாதாவு நீ" *(தாயு. சச்சிதா. 10).*

*[தா + தா - கொடையாளன். தம்மிடமுள்ள பொருளைத் தருபவன். "தாதா" என்பது தருதற் கருத்தினின்று முகிழ்த்த சொல்லாகும். தற்பொழுது, வன்முறையிற் பொருளீட்டி சிறிதே தானம் தரும் கொடையாளரையுங் குறித்து வழங்குவ தறிக]*

**தாதா**[3] *tādā,* பெ. (n.). நான்முகன் *(பிங்.);* Brahman.

**தாதானம்**[1] *tādāṉam,* பெ. (n.) மருக்காரை; common emetic nut *(சா.அக.).*

**தாதானம்**[2] *tādāṉam,* பெ. (n.) கரிக்குருவி *(சங்.அக.);* king crow.



**தாதி**[1] *tādi,* பெ. (n.) *1.* வேலைக்காரி *(பிங்.);* maid-servant. *2.* விலைமகள்; harlot. "சௌரேச்சுரத் தாதியை நயப்பான்" *(உபதேசகா. சிவத்துரோ. 200).* "தாதி தூதோ தீது" *(காளமேகம் பாட்டு). 3.* தாழி நாண்மீன் *(பரணி);* Baraṇi star.

*[தா + த் + இ → தாதி. இகரம் பெண்பால் விகுதி. முதலாளிக்குக் கேட்கும் பொருளைத் தருபவள் தாதி. விலைமகள் துய்ப்பவருக்கு இன்பந் தருபவள்]*

**தாதி**[2] *tādi,* பெ. (n.) *1.* வெங்காயம்; onion. *2.* செவிலித்தாய் *(பிங்.);* foster-mother, nurse.

Pkt. dhādi.

**தாதிகடை** *tādi-kaḍai,* பெ. (n.) அவல்; flaked rice *(சா.அக.).*

*[தாதி + கடை]*

**தாதிகனம்** *tādi-kaṉam,* பெ. (n.) *1.* கட்டித் தயிர்; thickened curd. *2.* உறைந்த பால்; coagulated milk. *3.* கருப்பூரத்தைலம்; turpentine. *4.* குங்குலிய மரத்தின் பால்; resin of Indian dammer tree *(சா.அக.).*

*[தாதி + கனம்]*

**தாதிசாரக்கனி** *tādi-šāra-k-kaṉi,* பெ. (n.) சிறுகீரை; gig's greens *(சா.அக.).*

*[தாதிசாரம் + கனி]*

**தாதிமுகம்** *tādi-mugam,* பெ. (n.) ஓர் பாம்பு; a kind of snake *(சா.அக.).*

*[தாதி + முகம்]*

**தாதிரி**[1] *tādiri,* பெ. (n.) கொடையாளி *(யாழ்.அக.);* donor.

*[தள் → தார் → தா → தாதி → தாதிரி. தாதிரி = தருதற்கருத்துச் சொல். 'தா' என்னும் வேரடியினின்று கிளைத்தது. தம்மிடம் உள்ள பொருளை வறியவர்களுக்கு வாரி வழங்கும் கொடைஞன்]*

**தாதிரி**[2] *tādiri,* பெ. (n.) விற்பாட்டிற் போட்டியிட்டுப்பாடுகை *(நாஞ்.);* singing contest in *viṟpāṭṭu.*

*[தரு → தா → தாதிரி. இசையினைத் தருபவன்]*

**தாதிற்றூள்** *tādiṟṟūḷ,* பெ. (n.) மகரந்தப் பொடி *(சூடா.);* pollen.

*[தாதின்தூள் → தாதிற்றூள்]*

**தாதின்றூள்** *tādiṉ-ṟūḷ,* பெ. (n.) தாதிற்றூள் பார்க்க; see *tādiṟṟūḷ.*

**தாது**[1] *tādu,* பெ. (n.) 1. கனிமங்களாகிய இயற்கைப் பொருள்; mineral, fossil; any natural product from a mine. 2. பொன் முதலிய மாழைகள் (உலோகங்கள்) (பிங்.); metals. 3. காவிக்கல் (சூடா.); red ochre. 4. பூதம் (சூடா.) பார்க்க; see *pūdam;* the five elements of nature. 5. ஊதபித்த சிலேட்டுமங்கள்; the three humours of the body, viz., *vādam, pittam, šilēṭṭumam.* 6. நாடி; pulse. "பிணிகளைத் தாதுக்களா லறியலாம்" (குமரே. சத: 38). 7. வெண்ணீர் (பிங்.); seman, sperm. "சுரத தாது வீழ்ந்த துரோண கும்பந் தன்னில்" (பாரத. வாரணா: 32). 8. நீறு (மதுரைக். 399: உரை); powder, dust. 9. பூந்தாது; pollen. "தாதுண் வண்டினம்" (மணிமே. 4: 20). 10. பூவினிதழ் (பிங்.); petal of flowers. 11. மலர்; blossom. "கள்வாய தாதொடு வண்டிமிரும்" (பு.வெ.12, இருபாற். 3). 12. தேன்; honey. "தாதுசேர் கழுநீர்" (சிலப். 13, 119). 13. வினைப்பகுதி; (gram) verbal root. "தாதின்வழு" (அஷ்டப். திருவேங்கடத்தந். காப்பு). 14. ஆண்டு அறுபதனுள் பத்தாவது; the 10th year of the jupiter cycle. 15. மெலிவு; thin.

*[தா + து → தாது. நிலம் தன்னடியிலிருந்து பொருள்களைத் தருவதை அடிப் படையாகக் குறித்தலால், இச் சொல்லும் தருதல் கருத்தின் பாற்பட்டதென்றறிக. கேட்டதும், கொண்டுவந்து, பொருள்தரும் ஏவலரையும், குறித்து வழங்கியது]*

**தாது**[2] *tādu,* பெ. (n.) அடிமை; slavery, servitude. "வாணியத் தாதற்குத் தாதானதுந் தொண்டை மண்டலமே" (தொண்டை. சத.45).

**தாது**[3] *tādu,* பெ. (n.) நாதுமாதுளை (மூ.அ.) பார்க்க; see *tādu-mātuḷai.*

**தாது**[4] *tādu,* பெ. (n.) கேள்வி; hearing. 'இங்கே தாதுமில்லை பிராதுமில்லை' (சென்னை).

**தாது**[5] *tādu,* பெ. (n.) 1. நரம்பு; nerve, artery and vein. 2. பிறவி செய்நஞ்சு; native arsenic as distinguished from prepared arsenic. 3. மூலம்; root or fundamental principle. 4. சேர்க்கைக் கூறு; constituent part. 5. மூலப்பொருள்; elementary or primitive matter. 6. அறிவியல் தாது; scientific element (சா. அக.).

*[தரு → தா + து.]*

**தாதுக்கினம்** *tādu-k-kiṉam,* பெ. (n.) புளித்தக் கஞ்சி; sour gruel (சா.அக.).

*[தாது + இனம் → தாதுக்கினம்]*

**தாதுக்குறைவு** *tādu-k-kuṟaivu,* பெ. (n.) 1. தாதுச் சத்துக்குறைவு; scantinees of seminal secretion - coligospermia. 2. ஆண்மையின்மை; loss of vital power. 3. விந்தூற லின்மை; absence of semen (சா. அக.).

*[தாது + குறைவு]*

**தாதுகட்டு** *tādu-kaṭṭu,* பெ. (n.) பேய்ப் பீர்க்கு; wild bitter gourd (சா.அக.).

**தாதுகட்டு-தல்** *tādu-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) 1. வெண்ணீரடக்குதல்; to control and prevent seminal discharge. 2. வெண்ணீர் (விந்து) கட்டியாதல்; to thick of semen.

*[தாது + கட்டு-.]*

**தாதுகதம்** *tādu-kadam,* பெ. (n.) தாதுகதசுரம்; constitutional fever or fever which is influenced or connected with the dhatus of the body or fever due to the vitiation on any one of the dhatus of the body (சா. அக.).

**தாதுகந்தம்** *tādu-gandam,* பெ. (n.) கந்தகம் (சங். அக.); sulphur .

**தாதுகம்** *tādugam,* பெ. (n.) மஞ்சட்கடம்பு; yellow cadambam.

**தாதுகலித்தல்** *tādu-kalittal,* பெ. (n.) தாதுகலிதம் பார்க்க; see *tādu-kalidam.*

**தாதுகலிதம்** *tādu-galidam,* பெ. (n.) வெண்ணீரிழப்பு (யாழ்.அக.); involuntary seminal discharge.

*[தாது + கலிதம்]*

**தாதுகளையோன்** *tādu-kaḷaiyōṉ,* பெ. (n.) வெள்ளைக் கல்; one of the gems-Topaz (சா. அக.).

**தாதுகன்** *tādugaṉ,* பெ. (n.) மாழைகளை அழிப்பவன்; that which destroys metals as sulphur (சா. அக.).

**தாதுகாசீசம்** *tādu-gācīšam,* பெ. (n.) 1. இரும்புத் துரு; red sulphate of iron. 2. அன்ன பேதி; green vitriol (சா.அக.).

*[தாது + காசீசம்]*

**தாதுகி** *tādugi,* பெ. (n.) செங்கல்; brick (சா. அக.).

**தாதுகெடு-தல்** *tādu-keḍu-,* 18 செகுன்றாவி. (v.t.) வெண்ணீர் (விந்து வீணாதல்); to loss of semen.

*[தாது + கெடு-.]*

காணடா விந்துகெட்டால் மனுச னல்ல காரிகையார் தங்களுக்குப் புருசனல்ல வீணடா தேகமோ கெட்டுப் போச்சு வெறும் வாயை மெல்லாதே மின்னா ராசை பூணடா வென்றாலும் பூணப் போமோ புத்தியினால் மூன்று வகைத் தீயைப் போக்கு (அக.சூ.).

**தாதுகெந்தம்** *tādu-kendam,* பெ. (n.) கெந்தகமண்; sulphur ore (சா.அக.).

**தாதுகோதனம்** *tādu-kōdaṉam,* பெ. (n.) ஈயம்; lead (சா.அக.).

*[தாது + கோதனம்]*

**தாதுச்சயம்** *tādu-c-cayam,* பெ. (n.) 1. எலும்புருக்கி; consumption. 2. முக்குற்றச் சிதைவு (திரிதோஷவீனம்); waste of the humours (சா.அக.).

*[தாது + சயம்]*

**தாதுச்சயகாசம்** *tādu-c-cayakāšam,* பெ. (n.). எலும்பரிப்புடன் கூடிய இருமல்; consumptive cough (சா.அக.).

*[தாது + சாயம்]*

**தாதுசம்பவம்** *tādu-šambavam,* பெ. (n.) தாதுசோதனம் பார்க்க; see *tādu-šōdaṉam* (சா.அக.).

*[தாது + சம்பவம்]*

**தாதுசாமியம்** *tādu-šāmiyam,* பெ. (n.) முக்குற்றச் சமநிலை; equalibrium of the three humours-wind, bile and phlegm - if the body as they should be in the proportion of 4:2:l (சா.அக.).

*[தாது + சாமியம்]*

**தாதுசாரம்** *tādu-šāram,* பெ. (n.). மாழைச் சத்து; quintessence of a mineral (சா.அக.).

*[தாது + சாரம்]*

**தாதுசீவநீர்** *tādu-šīvanīr,* பெ. (n.) தேன், நெய், வெண்காரம் மூன்றையும் சம அளவு அரைத்த கலவை; a paste made of honey, ghee and borax in equal parts (சா.அக.).

*[தாது + சீவநீர்]*

இது பற்பங்களை ஆய்வு செய்யப் பயன்படும்.

**தாதுசூசலன்** *tādu-šūšalaṉ,* பெ. (n.) மாழையின் குணநலன்கள் அறிந்தவன்; தேர்ந்தவன்; one skilled in metals - Metallurgists (சா.அக.).

*[தாது + சூசலன்]*

**தாதுசூரணம்** *tādu-šūraṇam,* பெ. (n.) மாழைப் பொடி; mineral powder (சா.அக.).

*[தாது + சூரணம்]*

**தாதுசேகரம்**[1] *tādu-sēgaram,* பெ. (n.) துரிசு (யாழ். அக.); blue vitriol.

*[தாது + சேகரம்]*

**தாதுசேகரம்**[2] *tādu-sēgaram,* பெ. (n.) அன்னக் கழிசல்; green vitriol, chief a minerals (சா. அக.).

*[தாது + சேகரம்]*

**தாதுடைவு** *tāduḍaivu,* பெ. (n.) 1. வெண்ணீர் (விந்து) இழப்பு (இ.வ.); involuntary seminal discharge. 2. வெண்ணீர் நீர்த்துப்போகை (இ.வ.); wateriness of semen.

**தாதுத்தழைப்பு** *tādu-t-taḻaippu,* பெ. (n.) வெண்ணீராக்கம் (விந்தாக்கம்); increased secretion of semen (சா. அக.).

*[தாது + தழைப்பு]*

**தாதுத்திராவகம்** *tādu-t-tirāvagam,* பெ. (n.) மாழைகளைக் கரைக்கும் மருந்து நீர்; acid dissolving metals (சா. அக.).

*[தாது + Skt. திராவகம்]*

**தாதுநட்டம்** *tādu-naṭṭam,* பெ. (n.) வெண்ணீர்ச் (விந்து) சிதைவு (வின்.); involuntary seminal discharge.

*[தாது + நட்டம்]*

**தாதுநடை** *tādu-naḍai,* பெ. (n.). நாடி நடை; beating of the pulse - Pulsation (சா. அக.).

*[தாது + நடை]*

**தாதுநிட்பன்னம்** *tādu-niṭpaṉṉam,* பெ. (n.) வினையடியாகத் தோன்றியது (பி. வி. 7, உரை); that which is derived from a verbal root.

**தாதுப்பொருள்**[1] *tādu-p-poruḷ,* பெ. (n.) பவழம், முத்து, வயிரம் முதலிய இயற்கைப் பொருள்கள்; the natural products such as coral, pearl, diamond, etc., (சா. அக.).

*[தாது + பொருள்]*

**தாதுப்பொருள்**[2] *tādu-p-poruḷ,* பெ. (n.) சித்த மருத்துவத்தில் பயன்படுத்தும் படிக்காரம், உப்பு போன்ற பொருள்கள்; minerals used in siddha medicine.

*[தாது + பொருள்]*

**தாதுப்பொருள் நூல்** *tādu-p-poruḷ-nūl,* பெ. (n.) 1. வேதியியல் நூல்; alchemical science book. 2. இயற்பியல் நூல்; physics book (சா.அக.).

*[தாது + பொருள் + நூல்]*

**தாதுபந்தினி** *tādu-pandiṉi,* பெ. (n.) நாகிசிங்கி; an unknown aphrodisiac plants (சா.அக.).

*[தாது + பந்தினி]*

இதனை பொழுதிற்கு முந்திப் பிடுங்கத் தும்மல் உண்டாகும் என்று, சா.அக. கூறும்.

**தாதுபம்** *tādubam,* பெ. (n.) 1. உடம்பின் 7 வகை தாதுக்களில் ஒன்றாகிய அன்னச்சாறு; one of the seven dhatus of the body-chyle. 2. முதன்மைச்சாறு; elementary juice (சா.அக.).

*[தாது → தாதுபம்]*

**தாதுபரீட்சை** *tādu-parīṭcai,* பெ. (n.) நோயறியுமாறு நாடி பார்க்கை; examining the pulse for diagnosing a disease. "தாது பரீட்சைவரு காலதேசத்தொடு சரீரலட்சண மறந்து" (அறப். சத. 51).

*[தாது + Skt. பரீட்சை]*

**தாதுபரீட்சைநூல்** *tādu-parīṭcai-nūl,* பெ. (n.) பூமியிலிலுள்ள தாதுப் பொருட்களைப் பற்றிச் சொல்லும் நூல்; the science which treats of minerals - Mineralogy (சா.அக.).

*[தாது + பரீட்சை + நூல்]*

**தாதுபலக்குறைவு** *tādu-pala-k-kuṟaivu,* பெ. (n.) இணைவிழைச்சிற்குரிய திறன் குறைகை; want of virile power sufficient for sexual intercourse.

*[தாதுபலம் + குறைவு]*

**தாதுபலம்** *tādu-palam,* பெ. (n.). விளை சுண்ணாம்பு; chalk, a mineral lime stone (சா.அக.).

*[தாது + பலம்]*

**தாதுபலவீனம்** *tādu-palavīṉam,* பெ. (n.) வெண்ணீர் உயிரணு குறைகை (இ.வ.); loss of virility.

*[தாது + பலவீனம்]*

**தாதுபற்பம்** *tādu-paṟpam,* பெ. (n.). பொன், வெள்ளி, செம்பு முதலிய மாழைகளைப் புடமிட்டெடுத்த வெள்ளைத்தூள்; white powder derived by calcination of metals as gold, silver, copper, etc., (சா.அக.).

*[தாது + பற்பம்]*

**தாதுபாகம்** *tādu-pāgam,* பெ. (n.) தூக்கம் பிடியாமை, மாரடைப்பு, உடம்புவலி, மலக்கட்டு முதலிய தீய குணங்கள்; morbid symptoms as sleeplessness, constipation, breast pang, bodily pain etc.; liquefaction of tissue, retrogressive tissue (சா. அக.).

*[தாது + பாகம்.]*

**தாதுபார்-த்தல்** *tādu-pār-,* 4 செ.குவி. (v.i.) நாடி பார்த்தல்; to feel the pulse (செ.அக.).

*[தாது + பார்-.]*

**தாதுபிராது** *tādu-pirādu,* பெ. (n.) அறிகுறி; sign, indication (செ.அக.).

*[தாது + பிராது]*

**தாதுபுட்டிசரக்கு** *tādu-puṭṭi-carakku,* பெ. (n.) வெள்ளைக் கற்கண்டு, சாதிக்காய், கிராம்பு, சாதிபத்திரி, வால்மிளகு, அபினி, நீர்முள்ளி விரை, பேரீச்சம் பழம், சாலாம் பிசின், கருவாப்பட்டை, வெங்காயவிதை, செம் முள்ளங்கி விதை, பேரரத்தை முதலியன; white sugar candy, nut meg, cloves, mace, cubels, opium seeds of llygrophila spinosa, dry

dates, resin of Indian dammer cinnamon bark, onion seeds, etc. are all aphrodisiac (சா.அக.).

[தாது + புட்டி + சரக்கு]

Skt. புஷ்டி → த. புட்டி

**தாதுபுட்டிசூரணம்** *tādu-puṭṭi-šūraṇam,* பெ. (n.) நிலப்பனங்கிழங்கு வேண்டிய அளவு கொண்டு, மேல்தோல் சீவி இடித்து, வத்திர காயம் செய்து, சமஎடை சருக்கரை சேர்த்து, நாளும் திரிகடிப் பிரமாணம் கொள்ள, சொறி சிரங்கு போகும். தாது மிகுந்து வெண்ணீர் ஊறும்; this powder is aphrodisiac contains root of ground palm - Curculigo orchioides and sugar. it cures itch (சா.அக.).

[தாது + புட்டி + சூரணம்]

Skt. pusṭi, த. புட்டி

**தாதுபுட்டிமருந்து** *tādu-puṭṭi-marundu,* பெ. (n.) 1. வெண்ணீர் (விந்து) ஊறுவதற்காகக் கொடுக்கும் மருந்து; medicine for increasing the secretion of semen in the system. 2. புணர்ச்சியில் ஆசையை உண்டாக்கும் மருந்து; a proprictory aphrodisiac remedy for promoting the sexual instinct - Virisanol (சா.அக.).

[தாது + புட்டி + மருந்து]

Skt. pusṭi → த. புட்டி

**தாதுபுட்டிமூலி** *tādu-puṭṭi-mūli,* பெ. (n.) அமுக்கிராக் கிழங்கு, நிலப்பனங்கிழங்கு, பூமி சர்க்கரைக் கிழங்கு, வெள்ளை வெங்காயம் முதலியன; root of withiaina somnifere, root of curculig orchioides, tuber of merma are nario and white onion are all aphrodisiac (சா.அக.).

[தாது + புட்டி + மூலி. ஆண்மைக் குறைபாடுடையவர்க்கு இயற்கை தரும் மருந்து]



**தாதுபுட்டிஇளகியம்** *tādu-puṭṭi-iḷagiyam,* பெ. (n.) வெண்ணீரை (விந்தை) மிகச் செய்யும் கலவை; aphrodisiac in action (சா.அக.).

[தாது + புட்டி + இளகியம்]

**தாதுபுட்பிகம்** *tādu-puṭpikam,* பெ. (n.). தாதகிப்பூ; flower of downy grislea. so called from its red flowers. Grislea tomentosa alias wood fordin floribunda (flower of) (சா.அக.).

[தாது + புட்பிகம்]

**தாதுபுண்** *tādu-puṇ,* பெ. (n.) வெண்ணீர் குழாயில் ஏற்படும் புண்; ulceration of spermatic vessels (சா. அக.).

[தாது + புண்]

**தாதுபேசல்** *tādu-pēšal,* பெ. (n.) நாடி துடித்தல்; beating of the pulse - pulsation (சா. அக.).

[தாது + பேசல்]

**தாதுமரணம்** *tādu-maraṇam,* பெ. (n.) 1. மாழைக்கட்டு; consolidation of metals. 2. ஓர் மருந்து; name of a medicine (சா.அக.).

[தாது + மரணம்]

**தாதுமலம்** *tādu-malam,* பெ. (n.) உடம்பினின்று கழியும் மலம், வியர்வை, கோழை முதலியன; impure excretion from the body such as fecies, sweat, phlegm, etc.2. ஈயம்; lead as the most impure of metals (சா.அக.).

[தாது + மலம்]

**தாதுமற்று** *tādu-maṟṟu,* பெ. (n.) சர்க்கரை வேம்பு; sweet margosa (சா.அக.).

[தாது + மற்று]

**தாதுமாசிகம்** *tādu-māšigam,* பெ. (n.) கந்தகம் சேர்ந்த ஒரு வகை இரும்பு மண்; sulphur of iron (சா. அக.).

[தாது + மாசிகம்]

**தாதுமாதளை** *tādu-mādaḷai,* பெ. (n.) தாது மாதுளை (மூ. அ.) பார்க்க; see *tadu-māduḷai.*

[தாது + மாதுளை → மாதளை → தாதுமாதளை]

**தாதுமாதுளை**[1] *tādu-mādulai,* பெ. (n.) *1.* *பூமாதுளை;* pomegranate bearing only flowers but no fruit. *2.* *இனிப்புக் கொடிமாதுளை;* sweet pomegranate *(சா.அக.).*

*[தாது + மாதுளை]*

**தாதுமாரிணி** *tādu-mārini,* பெ. (n.) *வெங்காரம் (சங். அக.);* borax.

**தாதுமாரின்** *tādu-mārin,* பெ. (n.) *1. மாழைகளைக் கரைத்தல்;* dissolving metals. *2. கந்தகம்;* sulphur *(சா.அக.).*

*[தாது + மார் + இன்]*

**தாதுமான்** *tādu-mān,* பெ. (n.) *344 உச்சிகளையும் 44 மேனிலைக் கட்டுகளையு முடைய கோயில் (சுக்கிரநீதி, 230);* temple with 344 towers and 44 storeys *(செ.அக.).*

**தாதுமுரிதம்** *tādu-muridam,* பெ. (n.) *கொடி எலுமிச்சை;* lemon creeper - Citrus medica limonum *(சா.அக.).*

*[தாது + முரிதம்]*

**தாதுமுறை** *tādu-murai,* பெ. (n.) *உடம்பினில் நாடிக்குரிய இடங்களான கை, மார்பு, முதலிய பத்து இடங்களில் ஆய்வு செய்யும் முறைமை;* the method of examining the centres of pulsation as detailed in the following stanza. *'தாதுமுறை கேள்' - திருமூலர் (சா.அக.).*

*[தாது + முறை]*

**தாதுமூலசீவன்** *tādu-mūla-šīvan,* பெ. (n.) *1. குறிகூறுவோர் நினைத்தது கூறுதற்கு எடுத்த மூவகை இயற்கைப் பொருள்கள் (வின்.);* three divisions of nature, comprising minerals, vegetables and animals on which a soothsayer bases his divination. *2. குறிச் சொல்லுவதற்காக மேழம் முதலாக உள்ள ஓரைகளை முறையே பிரிக்கை (சூடா. உள். 311).;* a division of the zodiacal signs.

**தாதுமெலி-தல்** *tādu-meli-,* 2 செ.குன்றாவி. (v.t.) *தாதுமெலிவு;* emaciation *(சா.அக.).*

*[தாது + மெலி-.]*

**தாதுராகம்** *tādu-rāgam,* பெ. (n.) *காவிக்கல் (கம்பரா. வரைக்காட். 44);* red ochre.

**தாதுராசகம்** *tādu-rāšagam,* பெ. (n.) *வெண்ணீர் (விந்து) (யாழ்.அக);* semen.

**தாதுநோய்** *tādu-nōy,* பெ. (n.) *வெண்ணீர்ச் (விந்து) சிதைவு (வின்.);* scanty flow or morbid state of the semen.

**தாதுரோகம்** *tādu-rōgam,* பெ. (n.) *வெண்ணீர் (விந்து)ப் பற்றிய நோய், வெள்ளை, வெட்டை முதலியன;* diseases relating to semen such as spermatorrhoea - Gonorhoea etc., *(சா.அக.).*

*[தாது + Skt. ரோகம்]*

**தாதுவத்தினை** *tādu-vattinai,* பெ. (n.) *தாமரைக்கிழங்கு;* lotus root *(சா. அக.).*

*[தாது + வத்தினை]*

**தாதுவர்க்கம்** *tādu-varkkam,* பெ. (n.) *தாது வகை;* mineral kingdom *(சா. அக.).*

*[தாது + Skt. வர்க்கம்]*

**தாதுவர்த்தகம்** *tādu-varttakam,* பெ. (n.) *மலம் முதலிய கழிவுப் பொருள்களை மிகுதிப் படுத்துதல்;* promoting the animal secretions *(சா. அக.).*

*[தாது + Skt. வர்த்தகம்]*

**தாதுவர்த்தனி** *tādu-varttani,* பெ. (n.) *மேள கருத்தாக்களுளொன்று (சங். சந்);* a primary rāga.

*[தாது + Skt. வர்த்தனி]*

**தாதுவருக்க நூல்** *tādu-varukka-nūl,* பெ. (n.) *மாழைகளைப் பற்றிக் கூறும் நூல்;* a treatise on mineralogy *(செ. அக.).*

*[தாது + வருக்கம் + நூல்]*

**தாதுவல்லபம்** *tādu-vallabam,* பெ. (n.) *தாது மாரிணி (யாழ்.அக.) பார்க்க;* see *tādu-mārini.*

*[தாது + வல்லபம்]*

**தாதுவலு-த்தல்** *tādu-valu-,* செ.குன்றாவி. (v.t.). *வெண்ணீரில் (விந்து) உயிரணு கூடுதல்;* to thicken or strengthen semen *(சா. அக.).*

*[தாது + வலு-.]*

**தாதுவழுதலை** *tādu-valudalai,* பெ. (n.) வழுதலை; brinjal plant *(சா. அக.).*

*[தாது + வழுதலை]*

**தாதுவழுத்து-தல்** *tādu-valuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நாடி ஒடுங்குதல்; to sink of the pulse *(சா. அக.).*

*[தாது + வழுத்து-.]*

**தாதுவாதம்**[1] *tādu-vādam,* பெ. (n.) *1.* அறுபத்து நாலு கலையுள் நாடியியல் பறிகை; knowledge of the pulse, one of arupattu-nālu-kalai. *2.* மாழைச்சோதனை *(வின்.);* mineralogy.

*[தாது + வாதம்]*

**தாதுவாதம்**[2] *tādu-vādam,* பெ. (n.) தாத்திருவாதம் *(வின்.)* பார்க்க; see *tāttiru-vādam.*

**தாதுவாதம்**[3] *tādu-vādam,* பெ. (n.) நாடிஅறிவு; knowledge of the pulse *(சா. அக.).*

*[தாது + வாதம்]*

**தாதுவாதி** *tādu-vādi,* பெ. (n.) மாழைகளைச் ஆய்ந்து அறிபவன் *(வின்.);* assayer of metals.

*[தாது + வாதி]*

**தாதுவாரினி** *tādu-vārini,* பெ. (n.). சேவகனார் கிழங்கு அல்லது கார்த்திகைக் கிழங்கு; plough root *(சா.அக.).*

*[தாது + வாரினி]*

**தாதுவிகற்பம்** *tādu-vigarpam,* பெ. (n.) ஒரே தாதுப்பொருள் 2, 3 போன்ற பல தன்மைகளோடு அமைந்ததாய்க் காணப்படல்; the fact of certain elements existing in two or more conditions with different physical properties as carbon existing in the form of coal, charcoal, plumbago, diamond, etc., *(சா. அக.).*

*[தாது + விகற்பம்]*

**தாதுவிடம்** *tādu-viḍam,* பெ. (n.) செய்நஞ்சு அதாவது தாம்பிரம், பித்தளை, வீரம் முதலியவைகளின் நஞ்சு; mineral poison as of copper, lead, corrosive sublimate etc., *(சா. அக.).*

*[தாது + விடம்]*

Skt. viṣam → த. விடம்

**தாதுவிடமம்** *tādu-viḍamam,* பெ. (n.) தாதுவின் கோளாறு; disarrangement or disturbance of the equalibrium of humours in the body *(சா. அக.).*

*[தாது + விடமம்]*

Skt. viṣamam → த. விடமம்

**தாதுவிரசம்** *tādu-virašam,* பெ. (n.) *1.* குருதி; blood. *2.* வெண்ணீர் (விந்து); semen. *3.* மாழைகளின் சத்து; metallic essence *(சா.அக.).*

மறுவ. மாழைச்சாறு

*[தாது + Skt. ரசம்]*

**தாதுவிருத்தி** *tādu-virutti,* பெ. (n.) தாதுவிளைவு; increase of secretion of semen *(சா.அக.).*

*[தாது + Skt. விருத்தி.]*

**தாதுவிருத்திமூலி** *tādu-virutti-mūli,* பெ. (n.) உடம்பில் வெண்ணீரை (விந்துவை) அதிகப்படுத்தும் மருந்து மூலிகைகள்; herbs and other substances capable of increasing semen in the body *(சா. அக.).*

*[தாது + விருத்தி + மூலி]*

சிவப்பு முள்ளங்கி, முள்ளங்கிக் கிழங்கு, வெங்காயம், பேரீச்சங்காய், வாதுமைப் பருப்பு, சாலாமிசிரி, தண்ணீர்விட்டான் கிழங்கு, கசகசா, வெள்ளாட்டுப்பால், பசும்பால், நெய் இவைகளால் அணியமாவது என்று, சா.அக. கூறும்.

**தாதுவிருத்தினி** *tādu-viruttini,* பெ. (n.) (வெண்ணீரை) விந்துவை, அதிகப்படுத்திக் காமத்தை மூட்டும் மருந்து; aphrodisiac *(சா. அக.).*

*[தாது + விருத்தினி.]*

**தாதுவிழுதல்** *tādu-viludal,* பெ. (n.) *1.* நாடியொடுங்குகை; sinking of the pulse. *2.* மனவலிமை குன்றுகை; being discouraged *(செ. அக.).*

*[தாது + விழுதல்]*

**தாதுவிளக்கம்** *tādu-viḷakkam,* பெ. (n.) நாடி நடையைப் பற்றி விளக்கமாகச் சொல்லும் நூல்; the book that treats about pulse *(சா. அக.).*

*[தாது + விளக்கம்]*

**தாதுவிளைவு** *tādu-viḷaivu,* பெ. (n.) வெண்ணீர் (விந்து) அதிகரிக்கை; increasing of semen (சா. அக.).

*[தாது + விளைவு]*

**தாதுவின்உபதாது** *tāduviṉ-upa-tādu,* பெ. (n.) ஏழு வகைத் தாதுக்களுக்குப் பதிலாக பயன்படுத்தும் பொருள்கள்; things used instead of seven variety of tādukkaḷ.

அவை பொன்னுக்கு - சுவர்ணமாட்சிகம், வெள்ளிக்குத் தாரமாட்சிகம், தாம்பிரத்திற்குத் துத்தம், வங்கத்திற்கு கங்கோஷ்டம், ஜாதசம்-கற்கபரிநாகம் - சிந்தூரம், மாழை - கிட்டக்கல்) என்று, சா.அக. கூறும்.

**தாதுவைரி** *tādu-vairi,* பெ. (n.) 1. கந்தகம்; sulphur. 2. கடுக்காய்; gall-nut. 3. ஏலம்; cardamom (செ.அக.).

**தாதெரு** *tāderu,* பெ. (n.) தாதெருமன்றம் பார்க்க; see *tāderu-maṉṟam.* "தாதெரு மறுகின் மூதூராங்கண்" (அகநா. 105).

**தாதெருமன்றம்** *tāderu-maṉṟam,* பெ. (n.) இடையர் குரவை முதலியன நிகழ்த்துதற் கிடமானதும், ஆவினம் சூழ்ந்ததுமான மரத்து அடியிலுள்ள பொதுவிடம்; shady space at the foot of a tree used for dance, etc., by cowherds, as a place scattered with cow-dung. "தாதெருமன்றத் தயர்வர் தழூஉ" (கலித். 103,. 61).

*[தாதெரு + மன்றம்]*

**தாதெழுத்து** *tādeḻuttu,* பெ. (n.) எழுத்துவகை (யாப். வி. 536); (gram.). a kind of letter.

*[தாது + எழுத்து]*

**தாதை**[1] *tādai,* பெ. (n.) நான்முகன்; Brahmaṉ. "வல்லே யேகிய தாதை" (கந்தபு. பிரமயாக. 6).

**தாதை**[2] *tādai,* பெ. (n.) 1. தந்தை (பிங்.); father. "நல்வேலன் றாதை" (திருவாச. 9: 3). 2. பாட்டன் (சது.); grand-father.

*[தாதா → தாதை]*

**தாதை**[3] *tādai,* பெ. (n.) பேய்க்கொம்மட்டி; colocynthis.

**தாதைதன்றாதை** *tādai-taṉṟādai,* பெ. (n.). பாட்டன் (பிங்.); grand-father.

*[தாது + தன்தாதை]*

**தாதைதாதை** *tātai-tādai,* பெ. (n.) தாதை தன்றாதை (பிங்.); பாட்டன் (சது.); grandfather.

*[தாதைதன்றாதை → தாதைதாதை]*

**தாதோட்டம்** *tādōṭṭam,* பெ. (n.) நாடியோட்டம்; pulsation (சா. அக.).

*[தாது + ஓட்டம்.]*

**தாதோடு-தல்** *tādōḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நாடிநடத்தல்; to beat of the pulse-pulsating (சா.அக.).

*[தாது + ஓடு-.]*

**தாந்தகாரி** *tāndagāri,* பெ. (n.) காற்றடக்கி; wind killer (சா.அக.).

**தாந்தன்** *tāndaṉ,* பெ. (n.). ஐம்பொறிகளையும் வென்றவன்; one who has subdued his senses. "தாந்தனுறையுளெனுந் தண்பொருநையின் வடபால்" (மாறனலங். 125, உரை, 213).

*[தாம் + தன் = தாந்தன். முதற்கண் தன்னைக் கட்டுப்படுத்துகை]*

**தாந்தனம்** *tāndaṉam,* பெ. (n.) காற்று (யாழ்.அக.); wind.

**தாந்தாமெனல்** *tāndām-eṉal,* பெ. (n.) மத்தளமடிக்கும் ஒலிக்குறிப்பு; onom. expr. of drumming sound. "தாந்தாமென்றிரங்குந் தண்ணுமைகளும்" (சீவக. 292).

*[தாம் + தாம் + எனல்]*

**தாந்தி** *tāndi,* பெ. (n.) மனவடக்கம்; self-restraint. "தழைத்த நற்சாந்தி தாந்தியே பெருக்கும்" (வேதாரணி. மேன்மைச். 2).

*[தம் → தாம் + தி → தாந்தி]*

**தாந்திமம்** *tāndimam,* பெ. (n.) ஐம்புலன் அழிப்பு; destroyed his senses (சா.அக.).

*[தம் → தாம் + தி → தாந்தி → தாந்திமம். ஆதன் இறையுடன் ஒன்றுதற்குத் தடையாகவுள்ள தமது, ஐம்புலன் உணர்வுகளை அழிக்கை.]*

**தாந்திரம்** *tāndiram,* பெ. (n.) 1. ஆகமம் தொடர்பானது; that which pertains to the tantras. "தாந்திர விதியென் றாட்டுந் தண்புனல்" (சீகாளத். பு. கண்ணப்ப. 110). 2. தந்திரம்; cunning, artfulness.

*[தன் + திறம் → தந்திரம் → தாந்திரம்.]*

**தாந்திரி** *tāndiri,* பெ. (n.) தாத்திரி பார்க்க; see *tāttiri* (சா. அக.).

*[தந்திரி → தாந்திரி.]*

**தாந்திரிகசன்னி** *tāndiriga-šanni,* பெ. (n.) குழந்தைக்கு ஏற்படும் ஒரு வகை நோய்; a disease occur to a child.

*[தாந்திரிகம் + சன்னி]*

இந் நோயால் குழந்தை பால் குடிக்காது. காய்ச்சல் கண்டு, தலைசுற்றி மயக்க முறும் என்று சா.அக. கூறும்.

**தாந்திரிகசுரம்** *tāndiriga-šuram,* பெ. (n.) ஒரு வகை சுரம்; a kind of fever.

*[தாந்திரிகம் + சுரம்]*

இச் சுரத்தால் உடல்வலி, வலிமைகுறைவு, நாடிகுறைவு அல்லது நாடி விரைவு, உளறல் போன்றவைக் காணப்படும் என்று, சா.அக. கூறும்.

**தாந்திரிகம்**[1] *tāndirigam,* பெ. (n.) 1. தாந்திரிக சன்னி பார்க்க; see *tāndiriga-šanni.* 2. உடல் காய்ந்து, வாய் உளறி, வாந்தி, நீர்வேட்கை கண்டு, உண்ணாக்கு வறண்டு, வயிறு கழிந்து, 25 நாளில் தோன்றும், ஒரு வகைக் குளிர் நோய்; a kind of typhus fever characterised by rise of temperature, raving or talking irrationally, vomitting thirst, parchedness, at the root of the tongue, purging and other prominent symptoms the incubation period is twenty five days. 3. தாந்திரிக நூல்; the doctrines of tāntric science written by grantham. i.e., Šanskrit of Dravidian characters. 4. மருத்துவ நூல்; a medical science.

*[தந்திரி → தாந்திரி → தாந்திரிகம்]*

**தாந்திரிகன்** *tāntirigan,* பெ. (n.) ஆகமநூல் வல்லோன்; one versed in the Tantra works.

*[தந்திரம் → தாந்திரம் → தாந்திரி → தாந்திரிகன்]*

**தாந்தீமெனல்** *tāntīm-enal,* பெ. (n.) 1. இசை யொலிக் குறிப்பு; onom. expr. of music sound. "தாஅந்நிமெனத் தண்ணிசை முரல" (பெருங். வத்தவ. 3, 75). 2. கண்டபடி செலவிடற் குறிப்பு; expr. of extravagance.

*[தாம் + தீம் + எனல்.]*

**தாந்துநாகம்** *tāndu-nāgam,* பெ. (n.) சுறா; shark (சா.அக.).

*[தாந்து + நாகம்]*

**தாந்துவீகன்** *tāndu-vīgan,* பெ. (n.) தையற்காரன் (நிகண்டு.); tailor.

*[தாந்துவிகன் → தாந்துவீகன்]*

**தாந்தோமெனல்** *tāntōm-enal,* பெ. (n.) 1. இசையொலிக் குறிப்பு; onom. expr. of music sound (செ.அக.).

*[தாம் + தோம் + எனல்]*

**தானம்** *tānam,* பெ. (n.) யானைச்செருக்கு; periodic heat of animals or rut especially of an elephant (சா.அக.).

**தாநகம்** *tānagam,* பெ. (n.) கொத்தமல்லி; coriander (சா. அக.).

**தாநாகம்** *tānāgam,* பெ. (n.) தாநகம் பார்க்க; see *tānagam* (சா.அக.).

**தாறை** *tānai,* பெ. (n.) 1. ஆடை; dress. "குஞ்சியழகுங் கொடுந்தாறைக் கோட்டழகும்" (நாலடி. கல்வி. க.). 2. படைக்கலன்; weapons. 3. காலாட்படை; infantry. "அலவுதாறை தொடர்தரவேட்டஞ் செய்" (அரிச்ச. வேட்ட.க.) 4. படை; army.

*[தானை → தாறை.]*

**தாறைமாலை** *tānai-mālai,* பெ. (n.) அகவல் ஓசையிற் பிறழாது, உயர்ந்த அரசர்க்குரிய ஆசிரியப்பாவால், முன்னரெடுத்துச் செல்லுங் தொழுப்படையைச் சொல்லும், ஓர் இலக்கியம்; a kind of literature. "ஆசறவுணர்ந்த வரசர் பாவாற்றூசிப் படையைச் சொல்வதுதாறை மாலையாகும்" (இலக்கண விளக்கம்)(தமி சொ. அக).

*[தாறை + மாலை]*

**தாப்படியரிசி** *tā-p-paḍi-y-arišī,* பெ. (n.) வரி வகை (S.I.I. i, 91); an ancient tax.

*[தாள் + படி + அரிசி.]*

**தாப்பணிவார்** *tāppaṇivār,* பெ. (n.) 1. கலணைக் கச்சை; saddle girth. 2. கசை; scourge, whip (செ.அக.).

*[தாம்பணிவார் → தாப்பணிவார்]*

**தாப்பானை**[1] *tāppāṉai,* பெ. (n.) புதிதாகப் பிடிபட்ட யானையைப் பழக்கப் பயன்படுத்தப் படும், பழகிய யானை (இ.வ.); a tame elephant engaged in breaking a newly caught elephant.

**தாப்பானை**[2] *tāppāṉai,* பெ. (n.) நல்ல நாளில் முதற்கதிர்களை எடுத்து வைத்தற்குரிய பெரியபானை (இ.வ.); a big pot used for preserving the first sheaves on an auspicious day.

*[தாய்ப்பாணை → தாப்பாணை]*

**தாப்பிசை** *tāppišai,* பெ. (n.) செய்யுளின் இடையிலுள்ள மொழி, முன்னும் பின்னுஞ் சென்று கூடும் பொருள்கோள் (நன். 416); a mode of constructing a word in the middle of a verse both with what precedes and what follows it, one of eight poruḷ-kōḷ.

*[தாம்பு + இசை – தாம்பிசை → தாப்பிசை (வ.வ.8)]*

**தாப்பு** *tāppu,* பெ. (n.) 1. குறித்தநேரம் (யாழ்ப்.); expected moment, appointed time, wished-for occasion. 2. ஏந்து (இ.வ.); convenience.

ம. தாப்பு, க. தாபு, துட. தொப்

U. tās

**தாப்புக்கொள்(ளு)-தல்** *tāppu-k-koḷ(ḷu)-,* 7 செ. குன்றாவி. (v.t.) நல்லசமயம் நோக்குதல் (யாழ்ப்.); to lurk and wait for ; to watch, as for an opportunity

*[தாப்பு + கொள்-.]*

**தாப்புலி** *tāppuli,* பெ. (n.) 1. வலிமிக்க புலி; tiger of great strength. "தாப்புலியொப்பத் தலைக் கொண்டான்" (பு.வெ. 2:10). 2. ஒரு வகைப் பழைய பா (செங்கோன்றரைச் செலவு); an ancient metre.

*[தாப்பு + புலி]*

**தாபக்காய்ச்சல்** *tāba-k-kāyccal,* பெ. (n.) உடல் முழுதும் எரிச்சல் காணும் ஒரு வகைக் காய்ச்சல்; a kind of fever in which burning sensation is the prominent symptom (சா. அக.).

*[தவி → தவிப்பு = தாகம். தபு + அம் – தபம் → தாபம் + காய்ச்சல். ஒருகா. தகம் = எரிவு, சூடு, வெப்பம். தகம் → தபம் → தாபம்]*

**தாபக்கினி** *tābakkiṉi,* பெ. (n.) 1. காட்டுத் தீ; a great burning fire. 2. நீர் வேட்கையை உண்டாக்கும் வெப்பம்; excess of heat in the system causing thirst. 3. காமத் துன்பத்தினா லுண்டாகும் உடற்கொதிப்பு; bodily heat experienced from love passion (சா.அக.).

*[தாகம் → தாபம் + Skt. அக்கினி]*

**தாபகன்** *tābagaṉ,* பெ. (n.) நிலைநிறுத்தியவன்; establisher, founder (செ.அக.).

**தாபகரி** *tābagari,* பெ. (n.) ஒரு வகை இனிப்பு பருப்புக் குழம்பு; a kind of soup of pulse and grain fried with ghee and turmeric and afterwards boiled with salt and sugar (சா.அக.).

**தாபச்சுரம்** *tāba-c-curam,* பெ. (n.). மிகக் காய்கின்ற காய்ச்சல் (சீவரட்.); burning fever (செ.அக.).

*[தாபம் + சுரம்]*

**தாபசத்தருவு** *tābaca-t-taruvu,* பெ. (n.)தவசு மரம் பார்க்க; see *tavasu-maram* (சா.அக.).

**தாபசப்பிரியை** *tābaca-p-piriyai,* பெ. (n.) 1. கொடி முந்திரிகை; vine grape. 2. காட்டுமா; hermit's tree (சா.அக.).

**தாபசம்** *tābacam,* பெ. (n.) 1. மரவகை; a kind of tree. 2. கொக்கு; stork (சா.அக.).

**தாபசன்** *tābacaṉ,* பெ. (n.) துறவி; hermit, ascetic (செ.அக.).

*[தவசி → தவசன் → தாபசன்]*

**தாபசாதரு** *tābašādaru,* பெ. (n.) நாட்டு வாதுமை; country almond (சா.அக.).

**தாபசி**[1] *tābaši,* பெ. (n.) தாபசன் பார்க்க; see *tābašaṉ.*

*[தபசி → தாபசி]*

**தாபசி**[2] *tābaši,* பெ. (n.) ஆயா; entire leaved elm.

**தாபசுரம்** *tāba-šuram,* பெ. (n.) தாபச்சுரம் (இ.வ.) பார்க்க; see *tāpa-c-curam.*

**தாபசுரமாத்திரை** *tāba-šura-māttirai,* பெ. (n.) தூய்மையாக்கப்பட்ட வாளம் விடை 8, சாதிலிங்கம் விடை 5, அரிதாரம் விடை 3, வெண்காரம் விடை 6, கடுகுரோகிணி விடை 7, மனோசிலை, நாபி, வகைக்கு விடை 1 இவைகளை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து, குன்றியளவு செய்து உலர்த்திய மாத்திரை; இஞ்சிச் சாற்றில் தரப்படுவது; a fever pill containing vermilion, yellow arsenic sulphide, borax, red arsenic sulphide, aconite, black hellebore. all round with the juice of lime fruit and made into pills of the size of jeweller's bead, one pill is given with ginger juice for remittent fever *(சா.அக.).*

*[தாபசுரம் + மாத்திரை = பலவகை அரிய மூலிகையினாற் செய்யப்பட்ட இம் மாத்திரை, உடம்பிலுண்டாகும் 64 வகைச் சுரங்களையும் குறிப்பாக, நச்சம் சுர மனைத்தையும் அகற்றும் என்று, சா.அக. கூறும்]*

**தாபசோபம்** *tābašōbam,* பெ. (n.) மிகுதுன்பம்; extreme anguish, distress. "ஆறுமோ தாபசோபம்" *(தாயு. வம்பகேனன். 7).*

*[தாகம் → தாபம் + Skt. சோபம்]*

**தாபத்திரயம்** *tābattirayam,* பெ. (n.) 1. காம வேட்கை, கோபவெம்மை, மனவேகம் முதலியன மூன்று வகை வெம்மைகள்; the three kinds of strong emotions or excitements divided according to their sources viz. sexual passion, anger and agitation of mind. 2. மூவகைத் துன்பம்; the three kinds of afflictions from *(சா.அக.).*

*[தாகம் → தாபம் + Skt. திரயம்]*

**தாபதக்கோலம்** *tābada-k-kōlam,* பெ. (n.) தவவேடம்; ascetic's guise. "தாபதக்கோலந் தாங்கின மென்பது" *(மணிமே. 18:23).*

*[தவக்கோலம் → தபக்கோலம் → தாபதக் கோலம்]*

**தாபதநிலை** *tābada-nilai,* பெ. (n.) (புறப்.) காதலனையிழந்த மனைவி தவம்புரிந் தொழுகிய நிலைமையைத் தெரிவிக்கும் புறத்துறை *(தொல். பொருள். 79);* a theme describing the vows of austerity observed by a widowed woman.

*[தாபதம் + நிலை]*

**தாபதப்பக்கம்** *tābada-p-pakkam,* பெ. (n.) (புறப்.) நீராடல், நிலக்கிடைகோடல், தோலு உடுத்தல், எரியோம்பல், ஊரடையாமை, சடைபுனைதல், காட்டிலுணவு, கடவுட் பூசை என்று தாபதர்க்குரிய எண்வகை ஒழுக்கங்களைக் கூறும் புறத்துறை; theme describing the eight occupations of an ascetic, viz., nīr-āḍal, nila-k-kiḍai-kōḍal, tōl-uḍuttal, eri-y-oōmbal, ūr-aṭai-yāmai, caḍai-puṉaital, kāṭṭil-uṇavu, kaḍavuṭ-pūcai. "நாலிரு வழக்கிற்றாபதப் பக்கமும்" *(தொல். பொருள். 74).*

*[தாபதம் + பக்கம்]*

**தாபதப்பள்ளி** *tābada-p-paḷḷi,* பெ. (n.) துறவிகள் தங்குமிடம்; residence of ascetic, hermit. "தண்டாரணியத்துத் தாபதப்பள்ளி" *(சீவக. 337).*

*[தவம் → தபம் → தாபம். தாபதம் + பள்ளி]*

**தாபதம்** *tābadam,* பெ. (n.) முனிவர் வாழிடம் *(திவா.);* abode of an ascetic; hermitage. "தாபதமதன்கண் பண்டைவான் பகை தீர்ந்து" *(சேதுபு. நைமிச. 13).*

*[தாவதம் → தாபதம்]*

**தாபதவாகை** *tābada-vāgai,* பெ. (n.) (புறப்.) தவவேடத்தர் புண்ணியத்தைத் தழுவி யொழுகும், நடையைக் கூறும் புறத்துறை *(பு.வெ. 8, 14);* theme describing the holy life of an ascetic.

*[தாவதம் → தாபதம் + வாகை]*

**தாபதவேடம்** *tābadavēḍam,* பெ. (n.) தவக் கோலம்; appearance of an ascetic hermit. "தையலோர் பங்கினர் தாபதவேடத்தர்" *(திருவாச. 17, 9).*

*[தாபதம் + வேடம்]*

**தாபதன்** *tābadaṉ,* பெ. (n.). 1. முனிவன் *(பிங்.);* ascetic, person practising penance. "தாபதர்கள்

சிலையெடுத்துத் திரியுமிது சிறிதன்றோ" (கம்பரா. சூர்ப்பணகை. 101). 2. சமணமுனிவன் (பிங்.); jain ascetic.

[தாபதம் → தாபதன்]

**தாபதி** *tābati*, பெ. (n.) செம்பு; copper (சா.அக.).

**தாபதிவிருட்சம்** *tābadi-viruṭcam*, பெ. (n.). இங்குணம்; an unknown tree (சா.அக.).

**தாபந்தம்** *tābandam*, பெ. (n.) துன்பம் (இ.வ.); distress, calamity.

**தாபந்திரியம்** *tābandiriyam*, பெ. (n.) தாவந்தம் (இ.வ.); துன்பம்; distress, calamity.

**தாபநமனி** *tābanamaṉi*, பெ. (n.) 1. இணைத்தல்; pining. 2. வருந்துதல்; grieving (சா.அக.).

**தாபபதம்** *tāba-padam*, பெ. (n.). வெப்ப அளவு; the thermal condition of the degree of heat of the body temperature (சா.அக.).

**தாபம்**[1] *tābam*, பெ. (n.). 1. வெப்பம் (சூடா.); heat, burning. 2. ஐந்து வகை போர்களில் ஒன்றான முத்திராதாரணம்; branding the shoulders with the marks of conch and discus of viṣṇu, one of pañca-camskāram. 3. தாகம்; thirst. "மாண்கணம் . . . தாபநீங்கா தசைந்தன" (திருவாச. 3, 82). 4. துன்பம் (உரிரு.); sorrow, distress, anguish. "தாபஞ்செய் குற்றம்" (அருட்பா, I, நெஞ்சறி. 201).

[தவி → தவிப்பு = தாகம். தவி → தப் (இ.வ.). தவி + தபு + அம் → தபம் → தாபம். 'அம்' சாரியை. மிகுவெப்பத்தால் தவிக்கை. ஒருகா. தகம் = சூடு, வெப்பம். தகம் → தபம் → தாபம்]

**தாபம்**[2] *tābam*, பெ. (n.) காடு (வின்.); jungle, forest.

**தாபம்**[3] *tābam*, பெ. (n.) 1. உடம்பின் சூடு; bodily heat. 2. மிக்கவெரிச்சல்; intense burning sensation as in an intoxicated person. 3. காட்டுத் தீ; a great burning. 4. துயர்; grief. 5. இரக்கம்; sympathy (சா.அக.).

[தகம் → தபம் → தாபம். 'தகம் = எரிவு, சூடு, வெப்பம்.]

**தாபமாயிரு-த்தல்** *tābamāyiru-*, 4 செ.குன்றாவி. (v.t.) வெப்பத்தினால் துன்பப்படுதல்; to suffer pain from heat (சா.அக.).

[தாகம் → தாபம் + ஆய் + இரு-]

**தாபமாரி** *tāba-māri*, பெ. (n.) தாபமாறி (சங்.அக.) பார்க்க; see *tāba-māṟi*.

[தாகமாறி → தாபமாரி.]

**தாபமாற்றி** *tāba-māṟṟi*, பெ. (n.) 1. நீர் வேட்கையை நீக்கும் பொருள்; any substance allaying thirst. 2. உடம்பின் எரிச்சலை யடக்கும் மருந்து; any medicine or application tending to soothe the burning sensation of the body-emollient. 3. உடம்பினழற்சியைப் போக்கும் மருந்து; any soothing or oily medicine or application allaying irritation of inflammed surface (சா.அக.).

[தாகம் + ஆற்றி → தாபமாற்றி.]

**தாபமாறி** *tābamāṟi*, பெ. (n.) தான்றி (மலை) பார்க்க; see *tāṉri*.

**தாபமானி** *tābamāṉi*, பெ. (n.) தட்பவெப்பங் களின் அளவு காட்டுங்கருவி; thermometer.

**தாபரமுப்பு** *tābara-muppu*, பெ. (n.) 1. சிந்துப்பு; sindu salt. 2. உப்பு பார்க்க; see *uppu* (சா.அக.).

[தாபரம் + உப்பு.]

**தாபரவம்** *tābaravam*, பெ. (n.) கருடன் கொடி, பெருமருந்துக் கொடி; Indian birth wort.

**தாபரவியாபகம்** *tābara-viyābagam*, பெ. (n.) உடல்வெப்பம் பரவி நிற்கும் தன்மை; diffusion of temperature (சா.அக.).

[தாபரம் + Skt. வியாபகம்]

**தாபரன்** *tābaraṉ*, பெ. (n.) எல்லாவற்றிற்கும் அடிப்படையாய் உள்ளவன் (அகநி.); the deity, as the substainer of all things.

[தார் → தா + பரன் → தாபரன். அனைத்திற்கும் ஆதாரமாகவிருந்து இவ் வுலகை இயக்குபவன்]

**தாபரி**[1]**-த்தல்** *tābari-*, 4 செ.கு.வி. (v.i.) நிலைபெற்றிருத்தல்; to lodge, abide obtain shelter. "உன்றன்வீடு தாபரித்த வன்பர்" (திருப்பு. 731).

[தா + பரி-.]

**தாபரி²-த்தல்** *tābari-*, 4 செ.குன்றாவி (v.t.) பாதுகாத்தல் *(யாழ்.அக.);* to protect, shelter, maintain.

*[தா + பரி-.]*

**தாபவாகினி** *tābavāgiṉi*, பெ. (n.) (கல்விவி) வெப்பத்தைப் பரப்பும் கருவி; conductor of heat.

*[தாபம் + வாகினி.]*

**தாபனச்சடம்** *tābaṉa-c-caḍam*, பெ. (n.) 1. புனுகுப்பூனை; civat cat. 2. சேரான் கொட்டை; marking nut - Semicarpus anacardium. 3. முன்னை; indian head-ache tree - Premna spinosa *(சா. அக.).*

*[தாபனம் + சடம்.]*

**தாபனம்** *tābaṉam*, பெ. (n.) 1. அழற்சி; inflammation. 2. எரிச்சல்; burning. 3. வெப்பம்; heat. 4. நோயுண்டாக்கல்; causing pain or distress *(சா. அக.).*

*[தார் → தா → தாபன் + அம் - தாபனம்.]*

**தாபனமுத்திரை** *tābaṉa-muttirai*, பெ. (n.) எழுந்தருள வேண்டுமென்பதைப் பூசையிற் குறிப்பிக்குமாறு, கையைக் குப்புற விரித்துக் காட்டுங் குறி; a hand pose with all the fingers stretched and the palm facing down, used in worship. "தாபனஞ் செய்வது தாபன முத்திரை" *(செந். 10, 425).*

*[தாபனம் + முத்திரை.]*

**தாபனன்** *tābaṉaṉ*, பெ. (n.) கதிரவன் *(பிங்.);* Sun.

*[தபன் → தாபன் + அன் → தாபனன். தகதகவென்று தகிப்பவன் தபனன். தகம் = எரிவு, சூடு, வெப்பம். ஒருகா. தகனன் → தபனன் → தாபனன்.]*

**தாபாக்கினி** *tābākkiṉi*, பெ. (n.) 1. தாபக்கினி பார்க்க; see *tāpakkiṉi*. 2. வெப்பம்; heat. 3. நீர்வேட்கையையுண்டாக்கும் வெப்பம்; heat creating thirst.

*[தவம் → தபம் → தாபம். தவாக்கினி → தபாக்கினி → தாபாக்கினி..]*

**தாபிசு** *tābišu*, பெ. (n.) நோயில்லாமல் தசைக் கரைதல்; wasting of flesh without apparent disease *(சா. அக.).*

*[தவி → தபி → தாபி → தாபிசு. உட்சூட்டில் தசை கரைகை.]*

**தாபிஞ்சம்** *tābiñjam*, பெ. (n.) 1. ஆமணக்கு விதை; castor seed. 2. பச்சிலை மரம்; Mysore gamboge. 3. எரிச்சல் உண்டாக்குங் குணம்; burning nature *(சா. அக.).*

*[தாபிசம் → தாபிஞ்சம். ஒ.நோ. ஊசல் → ஊஞ்சல்.]*

**தாபிதக்குறி** *tābida-k-kuṟi*, பெ. (n.) தாபித சுரத்தின் அடையாளம்; symptoms of typhoid fever *(சா. அக.).*

*[தாபிதம் + குறி.]*

**தாபிதகுணம்** *tābida-kuṇam*, பெ. (n.) 1. வெப்பம் அல்லது அழற்சியை உண்டாக்கும் குணம்; quality of causing heat or inflammation. 2. எரிச்சல் உண்டாக்குங் குணம்; burning nature *(சா. அக.).*

*[தபம் → தாபம். தாபம் =எரிவு, வெப்பம், சூடு. தாபதம் → தாபிதம் + குணம் → தாபிதகுணம் = மிகுவெப்பத்தினால் உண்டாகும் எரிச்சல். அதிகச் சூட்டினால் உடம்பிலேற்படும் அழற்சி.]*

**தாபிதநோய்** *tābida-nōy*, பெ. (n.) அழற்சியை உண்டாக்கும் நோய்கள்; inflammation diseases.

*[தாபிதம் + நோய்..]*

இது 56 வகைப்படும்.

1. நாடித்தாபிதம்; inflammation of an artery.
2. மூட்டுத்தாபிதம்; inflammation of a joint.
3. இலங்கமலர் தாபிதம்; inflammation of the glans peṉis.
4. கண்ணிரப்பைத் தாபிதம்; inflammation of the eye lids.
5. மூச்சுக்குழல் தாபிதம்; inflammation of the bronchial tubs.
6. கடைக்கண்தாபிதம்; inflammation of the canthius.

7. நெஞ்சாங்குலைத் தாபிதம்; inflammation of the heart.
8. அடிவயிற்றுத்தாபிதம்; inflammation of the abdomen.
9. கண்ணறைத்தாபிதம்; inflammation of the cellular tissues.
10. சிறுமூளைத் தாபிதம்; inflammation of the cerebellum.
11. முருந்துத்தாபிதம்; inflammation of the cartilage.
12. உண்ணாக்குத் தாபிதம்; inflammation of the uvula.
13. சுமரித்தாபிதம்; inflammation of the clitoris.
14. மலக்குடற்தாபிதம்; inflammation of the colon.
15. மூத்திரப்பைத் தாபிதம்; inflammation of the bladder.
16. கழுத்துக் கோளத்தாபிதம்; inflammation of the glands of the neck.
17. தோல்தாபிதம்; inflammation of the skin.
18. பிடுக்கு விதைத்தாபிதம்; inflammation of the testicles.
19. இருதயச்சவ்வுத் தாபிதம்; inflammation of the endocardium.
20. இரைப்பைத்தாபிதம்; inflammation of the stomach.
21. பிட்டத்தாபிதம்; inflammation of the buttock.
22. தாடைத்தாபிதம்; inflammation of the jaw.
23. கல்லீரற்றாபிதம்; inflammation of the liver.
24. கருப்பைத்தாபிதம்; inflammation of the uterous.
25. விழித்தாபிதம்; inflammation of the cornea.
26. மண்ணீரற்றாபிதம்; inflammation of the spleen.
27. முலைக்காம்புத்தாபிதம்; inflammation of the nipple.
28. முலைத்தாபிதம்; inflammation of the breast.
29. தசைத்தாபிதம்; inflammation of the muscle; myostitis.
30. குண்டிக்காய்த் தாபிதம்; inflammation of the kidney - Nephritis.
31. பல்லுத்தாபிதம்; inflammation of the tooth.
32. தோள்தாபிதம்; inflammation of the shoulder.
33. தொப்புள்தாபிதம்; inflammation of navel.
34. கண்தாபிதம்; inflammation of the eye.
35. விதைத்தாபிதம்; inflammation of the testis.
36. இடுப்புத்தாபிதம்; inflammation of the boins.
37. எலும்புத்தாபிதம்; inflammation of the bone.
38. செவித்தாபிதம்; inflammation of the ear.
39. மேற்பரடுதாபிதம்; inflammation of the palate.
40. கணையதாபிதம்; inflammation of the pancreas.
41. வயிறுறைத்தாபிதம்; inflammation of the peritoneum.
42. நாளத்தாபிதம்; inflammation of the vein.
43. விதானத்தாபிதம்; inflammation of the diaphragm.
44. பரிபுப்புசத்தாபிதம்; inflammation of the pleura.
45. புப்புசத்தாபிதம்; inflammation of the lungs.
46. மலவாய்த்தாபிதம்; inflammation of the rectum.
47. தரிசியத்தாபிதம்; inflammation of the retian.
48. மூக்குத்தாபிதம்; inflammation of the nose.
49. வெண்ணீர் (விந்து)க் குழாய்த்தாபிதம்; inflammation of the vas deferens.
50. வாய்த்தாபிதம்; inflammation of the mouth.
51. தாபிதம்; inflammation of the thyroid body.
52. செவிப்பறைத்தாபிதம்; inflammation of the eardrum.
53. மூத்திரத்தாரைத்தாபிதம்; inflammation of the urethra.
54. உண்ணாக்குத்தாபிதம்; inflammation of the uvula.
55. அல்குற்றாபிதம்; inflammation of the vagina.
56. கடிதடத்தாபிதம்; inflammation of the vulva.

**தாபிதம்**[1] *tāpidam,* பெ. (n.) *1. நிலைநிறுத்தப் பட்டது;* that which is established, instituted. "இமயத் தணங்கையுந் தாபிதஞ் செய்தே" *(பிரமோத். 18, 12).* **2. தாபனம்**[1, 3] பார்க்க; see *tābaṉam* (செ.அக.).

*[தாபம் → தாபிதம்]*

**தாபிதம்**[2] tāpidam, பெ. (n.) சூடு *(வின்.);* heat, fervour.

*[தவி → தபு + அம் → தபம். → தாபம் → தாபிதம். ஒருகா. தாவிதம் → தாபிதம். வெப்பத்தினால் ஏற்படும் அழற்சி, மிகுவெப்பத்தினாலேற்படும் காய்ச்சல். மிகுவெப்பத்தினால் உடம்பின் பலபகுதிகளிலேற்படும். அழற்சி வீக்கம். உடம்பின் அனைத்துப்பகுதி நோய்கட்கும், மிகுவெப்பமே மூலமென்றறிக]*

**தாபிதம்**[3] *tāpidam,* பெ. (n.) உடம்பின் எப் பகுதியிலாவது சூடுண்டாகி, சிவந்து வலியுடன் உண்டாகும் வீக்கம்; any part of the body or its internal organs marked by heat, redness and pain with swelling.

*[தாபம் → தாபிதம். இத் தாபித நோயின் விளைவால், உடம்பில் உள்ள நுண்ணிய அரத்தக் குழல்கள் பழுதடையும். இதனால், உடம்பில் ஏதாவதொரு பகுதியில் மிகுசூட்டுடன் கூடிய வீக்கமேற் படும். இதனாலேற்படும் அழற்சியே தாபிதம் என்று, சா.அக. கூறும்.]*

பதினைந்து வகை தாபிதம் வருமாறு:

*1. மீயதியழற்சி;* one in which the process is active.

*2. இணைக்குந்தாபிதம்;* one promoting the union of cut surfaces.

*3. சளித்தாபிதம்;* one marked by discharge of mucous.

*4. இழுக்குத்தாபிதம்;* inflammation of long duration.

*5. பரவியதாபிதம்;* one that is spread over a large area.

*6. ஒழுக்குத்தாபிதம்;* one in which promient exudation is present.

*7. வலித்தாபிதம்;* one attended with great irritation.

*8. சூலைத்தாபிதம்;* that which is due to gout.

*9. ஊதைத்தாபிதம்;* one due to exposure to chillness.

*10. ஊனொழுக்குத் தாபிதம்;* one that produces an exudation of serum.

*11. தனித்தாபிதம்;* one which is withoutpus or other products.

*12. நச்சுத்தாபிதம்;* that which is caused by poison.

*13. காயத்தாபிதம்;* one that is caused by injury.

*14. சீழ்கொள்தாபிதம்;* one which is characterised by the formation of pus.

*15. அழுகற்றாபிதம்;* one that is followed by decomposition or rottenness inflammation.

**தாபியாக்கணம்** *tāpiyākkaṇam,* பெ. (n.) *காட்டுத்துளசி;* wild basil *(சா. அக.).*

**தாபிலிகை** *tāpiligai,* பெ. (n.) *இலைக்கள்ளி;* leaf spurge *(சா. அக.).*

**தாபினிமுத்திரை** *tāpiṉi-muttirai,* பெ. (n.) தாபனமுத்திரை *(சங்.அக.)* பார்க்க ; see *tābaṉa-muttirai.*

*[தாபினி + முத்திரை.]*

**தாம்**[1] *tām,* ப.பெ. (pron.) *1. அவர்கள்;* they. "தாரமார் புத்திரரார் தாம் தாமாரே" *(தேவா. 523: 10).* தாம் சொன்னதை உறுதி செய்தனர். **2. மரியாதை குறிக்கும் முன்னிலைச் சொல்;** you, a term of respect. "தாமென்ன சொன்னீர்கள்?" **3. முதல் வேற்றுமையில் பன்மைப்பெயரைச் சார்ந்து வரும் சாரியை;** particle suffixed to plural nouns of any person in the nominative case for emphasis. "அவர்தாம் வந்தார்".

*[தம் → தாம் = தாம் என்பது படர்க்கைப் பன்மையைக் குறிக்கும் உருபேற்ற வடிவமாகும். "ஆ" என்னும் சேய்மைச் சுட்டடியினின்று பிறந்துள்ள, தான், தாம் என்னும் படர்க்கைப்பெயர்கள், 'அவன்', 'அவள்' முதலிய ஐம்பாற்சுட்டுப் பெயர்கள் தோன்றியபின், தற்சுட்டுப் பெயர்களாய் (Reflexive Pronouns) மாறிவிட்டன (த.வ. 135)]*

**தாம்**² *tām*, இடை (part.) அசைநிலை (நன். 441); an expletive, as in வருவர்தாம்.

*[தம் → தாம்.]*

**தாம்**³ *tām*, பெ. (n.) தாகம்; thirst. "கடுந்தாம் பதிபு" (கலித். 12, 5).

*[தாகம் → தாம். "க" இடைக்குறை.]*

**தாம்பணி** *tāmbaṇi*, பெ. (n.) மாடுகளை வரிசையாகப் பிணைக்கும் நீண்டகயிறு (இ.வ.); tether, halter.

*[தாம்பு + அணி = தாம்பணி. தாம்பு = கயிறு. சூடடிக்கும்போது, மாடுகளை வரிசையாகப் பிணைக்கும் கயிறு: ஏர் உழவின்போது, நுகத்தடி நுனிப்பகுதியினை எருதுடன் இணைக்கும் கயிறு]*

**தாம்பம்** *tāmbam*, பெ. (n.) ஓர் கடல் மீன்; a sea fish (சா.அக.).

**தாம்பரம்** *tāmbaram*, பெ. (n.) தாமிரம் (பதார்த்த. 1170) பார்க்க; see *tāmiram*.

*[தும்பரம் → தம்பரம் → தாம்பரம்]*

**தாம்பன்கோலா** *tāmbaṉ-kōlā*, பெ. (n.) ஓர் கோலா மீன் வகை; a kind of fish.

*[தாம்பன் + கோலா.]*

**தாம்பாலம்** *tāmbālam*, பெ. (n.) ஒரு வகைச் சணல்; a kind of hemp (சா.அக.).

**தாம்பாளம்** *tāmbāḷam*, பெ. (n.) ஒருவகைத் தட்டு; salver of a large size. "தளிகை காளாஞ்சி தாம்பாளம்" (பிரபோத. 11:31).

தெ. தாம்பாலாமு; க. தாம்பால

*[தாம்பாலம் → தாம்பாளம்.]*

**தாம்பிகம்** *tāmpigam*, பெ. (n.) இடம்பம் (இ.வ.); ostentation.

**தாம்பிகன்** *tāmpigaṉ*, பெ. (n.) மூட மருத்துவன்; quack, empiric (சா.அக.).

**தாம்பிகவைத்தியம்** *tāmpiga-vaittiyam*, பெ. (n.) மூடமருத்துவம்; quackery (சா.அக.).

**தாம்பிஞ்சம்** *tāmpiñjam*, பெ. (n.) 1. ஆமணக்கு; castor plant. 2. பச்சிலை மரம்; acheen leaf. pogoste monpatchouli alias Origanum indicum (சா.அக.).

**தாம்பியம்** *tāmbiyam*, பெ. (n.) பீச்சுங்குழல்; syringe, piston (சா.அக.).

**தாம்பிரக்களங்கு** *tāmpira-k-kaḷaṅgu*, பெ. (n.) செம்பு துட்டுக்கு வேளைச்சாறு விட்டு அரைத்து, அரிதாரத்தைப் பூசி, அதையே கவசம் செய்து, வெள்ளீயத் தகட்டைச்சுற்றி சீலைமண் செய்து, புடமிட்டெடுத்த வெண் பொடி; yellow orpiment is ground with the juice of cleome pentaphylla and smeared thickly all over a purified copper coin or plate and then it is covered by tin foils. Then it is sealed with earth smeared cloths, dried and submitted to puttam (heat) a white powder will obtained (சா. அக.).

*[தாமிரம் + களங்கு]*

**தாம்பிரக்குருசெயநீர்** *tāmbira-k-kuru-seyanīr*, பெ. (n.) புளியம் புறிணியைச் சாம்பலாக்கி, பிறகு நீரிலிட்டு தெளிவிறுத்து, அதைக் காய்ச்சி உப்பெடுத்து நவச்சாரக் கட்டிக்குக் கவசம்செய்து, புடமிட்ட பற்பத்தை பனியில்வைத்து உண்டான செயநீர்; salt extracted from the ash of tamarind bark is smeared over a limp of salammoniac and calcined. This calcined powder is exposed to dew and a pungent liquid is obtained and this is called tāmbira-kuru-šeyanīr (சா. அக.).

*[தாம்பிரக்குரு + செயநீர்.]*

**தாம்பிரகம்** *tāmbiragam*, பெ. (n.) செம்பு; copper (சா. அக.).

*[தாம்பிரம் → தாம்பிரகம்]*

**தாம்பிரகருப்பம்** *tāmbira-karuppam*, பெ. (n.) துரிசு; blue vitriol-copper sulphate (சா. அக.).

*[தாம்பிரம் + கருப்பம்.]*

**தாம்பிரகாரன்** *tāmbira-kāraṉ*, பெ. (n.) செம்பு கொட்டி (யாழ்.அக.); coppersmith.

*[தாம்பிரம் + காரன். 'காரன்' உடைமைப் பெயரீறு.]*

**தாம்பிரகூடம்** *tāmbira-kūdam*, பெ. (n.) *1.* செம்பு மலை; copper mountain. *2.* புகையிலை; tobacco - nicotiana tobaccum (சா. அக.).

*[தாம்பிரம் + கூடம்.]*

**தாம்பிரக்கோல்** *tāmbira-k-kōl*, பெ. (n.) கண் நோய்களுக்கு மருந்திடச் செம்பால் செய்த, நீள் கம்பி; a long copper rod made by copper to apply medicine for eyes (சா. அக.).

*[தாம்பிரம் + கோல்]*

**தாம்பிரசங்கம்** *tāmbirašaṅkam*, பெ. (n.) இரும்பு; iron (சா. அக.).

*[தாம்பிரம் + சங்கம்]*

**தாம்பிரசத்துமூலி** *tāmbira-šattu-mūli*, பெ. (n.) செம்புசத்துமூலி பார்க்க; see *sembušattu-mūli* (சா. அக.).

*[தாம்பரம் + சத்து + மூலி]*

**தாம்பிரசத்துரு** *tāmbira-šatturu*, பெ. (n.) சாலாங்க செய்நஞ்சு; a kind of arsenic (சா. அக.).

*[தாம்பிரம் + சத்துரு.]*

**தாம்பிரசபை** *tāmbira-šabai*, பெ. (n.) (தாமிரத்தால் வேய்ந்த அரங்கம்) தாமிரசபை பார்க்க; see *tāmira-sabai*.

*[தாம்பிரம் + சபை]*

**தாம்பிரசவ்வு** *tāmbira-šavvu*, பெ. (n.) கருவுருவைக் கவர்ந்துள்ள 7 சவ்வில், 4வது சவ்வு; the fourth of the seven membranes with which an embryo is covered (சா. அக.).

*[தாம்பிரம் + சவ்வு]*

**தாம்பிரசிந்தூரம்** *tāmbira-šindūram*, பெ. (n.) செம்பைக் கொண்டு அணியமாக்கப்படும் ஒரு சிவப்புப்பொடி; calcined red oxide of copper (சா. அக.).

இது, செம்பின் களிம்பு நீக்கி, தூய்மை செய்து, பிறகு மருந்து மூலிகைகளைச் சேர்த்துப் புடமிட்டெடுப்பது. இதனால் குட்டம் முதலிய தோல்நோய்கள் அகன்று உடல் பொன்னிறமாகும் என்று, சா.அக. கூறும்.

*[தாம்பிரம் + சிந்தூரம்]*

**தாம்பிரசிலாசத்து** *tāmbira-šilāsattu*, பெ. (n.) நீலநிற செம்புக்கலவை மருந்து; a blue colour copper medicine (சா.அக.).

*[தாம்பிரம் + சிலாசத்து]*

**தாம்பிரசுத்தி** *tāmbira-šutti*, பெ. (n.) *1.* செம்பின் களிம்பை நீக்குவது; removing the verdigris from copper. *2.* புடமிடுவதற்கு முன் மருத்துவ முறைப்படி மருந்து மூலிகைகளைக் கொண்டு செய்யும் தூய்மை; cleaning or purifying copper before calcining it. *3.* வேதியியல் முறையில் செம்பினின்று களிம்பை நீக்குவது; removing the verdigris from copper by alchemical process (சா.அக.).

*[தாம்பிரம் + சுத்தி]*

**தாம்பிரசூடம்** *tāmbira-šūḍam*, பெ. (n.) *1.* சேவல் (யாழ்.அக.); cock. *2.* நடுவிரலுஞ் சுட்டு விரலும் பெருவிரலும், தம்மில் நுனியொத்துக் கூடி வளைந்து, சிறுவிரலும் அணிவிரலும் முடங்கி நிமிரும், இணையா வினைக்கை வகை (சிலப். 3: 18, உரை); (Nāṭya) a gesture with one hand in which the thumb, the forefinger and the middle finger are joined and the other two fingers are held slightly bent, one of 33 iṇaiyāviṉaikkai (செ. அக.).

*[தாம்பிரம் + சூடம்]*



**தாம்பிரப்பச்சை** *tāmbira-p-paccai*, பெ. (n.) செம்பின் பச்சை நிறமான களிம்புள்ள, ஓர் வகைத்தாது; a mineral resembling the verdigris of copper (சா. அக.).

*[தாம்பிரம் + பச்சை.]*

**தாம்பிரபத்திரம்** *tāmbira-pattiram,* பெ. (n.) செப்புப்பட்டயம் *(யாழ்.அக.);* copper-plate grant.

*[தாம்பிரம் + பத்திரம்]*

**தாம்பிரபற்பம்** *tāmbira-parpam,* பெ. (n.) தாமிரப்பொடி பார்க்க; see *tamira-p-poḍi* *(சா.அக.).*

*[தாம்பிரம் + பற்பம்]*

**தாம்பிரபன்னி** *tāmbira-panni,* பெ. (n.) தாமிரபருணி[1] *(பதார்த்த. 25)* பார்க்க; see *tamira-paruṇi*[1].

*[தாம்பிரம் + பன்னி.]*

**தாம்பிரபிரியம்** *tāmbira-piriyam,* பெ. (n.) செருப்படை; a medicinal prostate plant *(சா. அக.).*

*[தாம்பிரம் + பிரியம்]*

**தாம்பிரபுட்பி** *tāmbira-puṭpi,* பெ. (n.) 1. மந்தாரை; variegated mountain ebony. 2. கழற்கொடி; bonduc creeper Guilandina bonducella alias Caesalpinia bonducella *(சா. அக.).*

*[தாம்பிரம் + புட்பி]*

**தாம்பிரம்** *tāmbiram,* பெ. (n.) செம்பு; copper. தாமிரம் பார்க்க; see *tāmiram (சா.அக.).*

ம. தாம்ர

*[தும்பரம் = சிவப்பு. துமர் → தமர் = சிவப்பு. தமர் → தமரம் → தாமரம் → தாம்பிரம். செங்காவி வண்ணத்தில் உள்ள கலப்பு மாழை.]*

**தாம்பிரமண்** *tāmbira-maṇ,* பெ. (n.) 1. தாமிர மண் பார்க்க; see *tāmira-maṇ.* 2. செம்மண்; red earth. 3. செங்காவி; red ochre *(சா.அக.).*

*[தாம்பிரம் + மண். தாமிரத்தைப் போன்ற செந்நிறமுடையது]*

**தாம்பிரமலை** *tāmbira-malai,* பெ. (n.) செம்பு மலை; copper - mountain *(சா.அக.).*

*[தாம்பிரம் + மலை]*

**தாம்பிரமூலி** *tāmbira-mūli,* பெ. (n.) 1. பெருங் காஞ்சொறி; scorpion leaf. 2. செம்பு அடங்கிய மூலிகைகள்; plants containing copper *(சா.அக.).*

*[தாம்பிரம் + மூலி]*

**தாம்பிரவண்ணமன்** *tāmbira-vaṇṇa-man,* பெ. (n.) செம்புமணல்; sand mixed copper *(சா.அக.).*

*[தாம்பிரவண்ணம் + மன்]*

**தாம்பிரவயச்சத்துமூலி** *tāmbira-vaya-c-cattumūli,* பெ. (n.) 1. சிறுகீரை, அழவணை; Amaranthus campestris. 2. நிலச்சருக்கரை; ipomea digitata Henna. 3. கருந்துளசி; ocimum sanctum (rigrum) *(சா.அக.).*

**தாம்பிரவருணி** *tāmbira-varuṇi,* பெ. (n.) தாமிரபருணி (இவ.) பார்க்க; see *tāmirra-paruṇi.*

**தாம்பிரவல்லி** *tāmbira-valli,* பெ. (n.) 1. இனிப்புக்கோவை; a kind of sweet caper unidentified. 2. மஞ்சிட்டி; copper creeper. 3. தண்ணீர்விட்டான் கிழங்கு; tuberous root of Asparagus *(சா. அக.).*

*[தாம்பிரம் + வல்லி]*

**தாம்பிரவன்னி** *tāmbira-vanni,* பெ. (n.) தாமிரபருணி[1] பார்க்க; see *tamira-paruṇi* *(செ. அக.).*

**தாம்பிரவேதை** *tāmbira-vēdai,* பெ. (n.) நாகம்; zinc *(சா. அக.).*

*[தாம்பிரம் + வேதை]*

**தாம்பிராட்சம்** *tāmbirāṭcam,* பெ. (n.) குயில்; Indian cuckoo *(சா. அக.).*

**தாம்பிராட்சன்** *tāmbirāṭcan,* பெ. (n.) தாம்பிராட்சம் பார்க்க; see *tāmbirāṭcam.*

*[தாம்பிராட்சம் → தாம்பிராட்சன்.]*

**தாம்பிரை** *tāmbirai,* பெ. (n.) தாமரை; lotus. "சிவந்தன தாம்பிரைச் செங்கண்" *(கம்பரா. வருண. 7).*

*[தாமரை → தாம்பிரை.]*

**தாம்பு**[1] *tāmbu,* பெ. (n.) *1.* கயிறு *(பிங்.);* rope. *2.* தாமணிக்கயிறு; rope to tie cattle, tether. "கன்றெல்லாந் தாம்பிற் பிணித்து" *(கலித். 111). 3.* ஊஞ்சல் *(நன். 411, சங்கரநமச்);* swing.

க. தாவு

*[தடம் → தடம்பு → தாம்பு.]*

**தாம்பு**[2] *tāmbu,* பெ. (n.) அணைக்கட்டில் நீர் செல்லுதற்கென விட்ட வழி (நாஞ்.); vent-way in a dam.

*[தூம்பு → தாம்பு]*

**தாம்புக்கயிறு** *tāmbu-k-kayiṟu,* பெ. (n.) வடம்; big-rope.

*[தாம்பு[1] + கயிறு]*

**தாம்புந்தோண்டியுமா-தல்** *tāmbun-tōṇḍi-y-um-ā-,* 6 செ.கு.வி. (v. i.) இறைக்குங் கயிறும் குடமும் போன்று, மிக ஒற்றுமையாதல் (இ. வ.); lit., to be like drawing rope and pitcher; to be familiar, intimate, hand and glove with.

*[தாம்பு + உம் + தோண்டியுமா-.]*

**தாம்புந்தோண்டியுமாயிழு-த்தல்** *tāmbun-tondi-y-um-āy-iḻu-,* 4 செ.குவி. (v. i.) மூச்சுத் திணறுதல் *(தஞ்சை.);* to struggle to come out, as breath.

*[தாம்புந்தோண்டியுமாய் + இழு-.]*

**தாம்புலோவல்லி** *tāmbulō-valli,* பெ. (n.) மஞ்சாடிமரம் (மலை.); red-wood.

**தாம்பூரக்கட்டி** *tāmpūra-k-kaṭṭi,* பெ. (n.) *1.* செம்புக்கட்டி; lump of copper. *2.* தாம்பூரச் சிகை பார்க்க; see *tampūra-c-cigai.*

*[தாம்பூரம் + கட்டி]*

**தாம்பூரக்களங்கு** *tāmbūra-k-kaḷaṅgu,* பெ. (n.) தாம்பிரக்களங்கு பார்க்க; see *tāmbira-k-kaḷaṅgu* (சா. அக.).

செம்புதுட்டுக்கு அரிதாரத்தை வேளைச்சாறு விட்டு, இரண்டுதடவை துட்டுக்குத் தடவி உலர்த்திப் பிறகு, வெள்ளீயத் தகட்டைச் சுற்றிக் கவசம்செய்து, சீலைமண் செய்து, புடமிட்டு எடுத்த களங்கு என்று, சா.அக. கூறும்.

**தாம்பூரகி** *tāmbūragi,* பெ. (n.) வாழை; plantain tree *(சா.அக.).*

**தாம்பூரச்சிகை** *tāmbūra-c-cigai,* பெ. (n.) ஒன்பான் மாழையை வேறுபடச் செய்யும், ஓர் அரிய மூலிகை; an unknown or a rare drug capable of acting chemically on nine metals in gernal *(சா. அக.).*

*[தாம்பூரம் + சிகை]*

**தாம்பூரபற்பம்** *tāmbūra-paṟpam,* பெ. (n.) தாமிரபற்பம் பார்க்க; see *tāmira-paṟbam* (சா. அக.).

*[தாம்பூரம் + பற்பம்.]*

**தாம்பூரமல்லி** *tāmbūra-malli,* பெ. (n.) மஞ்சிட்டி; copper creeper - Rubia *(சா.அக.).*

*[தாம்பூரம் + மல்லி.]*

**தாம்பூரம்** *tāmbūram,* பெ. (n.) தாமிரம் பார்க்க; see *tāmiram* (சா.அக.).

**தாம்பூரவல்லம்** *tāmbūra-vallam,* பெ. (n.) வாழை (மலை); plantain tree, musa.

*[தாம்பூலம் + வல்லம்]*

**தாம்பூரி** *tāmbūri,* பெ. (n.) கொடிநாவல்; jammoon-creeper *(சா.அக.).*

**தாம்பூலக்கமலம்** *tāmbūla-k-kamalam,* பெ. (n.) தாம்பூலக்கன்னி பார்க்க; see *tāmpūla-k-kaṉṉi* (சா.அக.).

*[தாம்பூலம் + கமலம்.]*

**தாம்பூலக்கன்னி** *tāmbūla-k-kaṉṉi,* பெ. (n.) வெற்றிலை; betel leaf.

*[தாம்பூலம் + கன்னி]*

**தாம்பூலங்கொடு-த்தல்** *tāmbūlaṅ-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* வெற்றிலை பாக்களித்து வரவேற்பு செய்தல்; to offer betel, as a courtesy. *2.* வெற்றிலை பாக்களித்துக் கூட்டங் கலைத்தல்; to give betel, as a signal for the dispersion or dismissal of a company. *3.* வேலையினின்றும் நீங்க இசைவு தருதல்; to dispense with one's services.

*[தாம்பூலம் + கொடு-.]*

**தாம்பூலசருவணம்** *tāmbūla-šaruvaṇam,* பெ. (n.) மணவிழா முடிவில் மணமக்கள் முதன் முதலில் தாம்பூலம் போட்டுக் கொள்ளும் நிகழ்வு; finishing ceremony of a marriage, when betel leaf is first chewing the bridegroom and bride.

*[தாம்பூலம் + சருவணம்]*

**தாம்பூலதாரணம்** *tāmbūla-tāraṇam,* பெ. (n.) வெற்றிலை பாக்குப் போடுகை; chewing betel and areca. "தாம்பூல தாரண மிலாததே வருபூர்ண சந்த்ரனிகர் முககூனியம்" (அறப். சதா. 34).

*[தாம்பூலம் + தாரணம்]*

**தாம்பூலபலம்** *tāmbūla-palam,* பெ. (n.) 1. பாக்கு; arecanut. 2. வெற்றிலை; betel leaf (சா.அக.).

*[தாம்பூலம் + பலம்]*

**தாம்பூலம்** *tāmbūlam,* பெ. (n.) வெற்றிலைப் பாக்கு; betal leaves and areca nuts. "தக்கிணை தாம்பூலத் தோடளித்து (சேதுபு. சேதுபல. 91).

*[தம்பலம் → தாம்பூலம்.]*

**தாம்பூலம்பிடி-த்தல்** *tāmbūlam-piḍi-,* 4 செ. கு. வி. (v. i.) தீயஎண்ணத்துடன் கெடுதி செய்யப் பார்த்தல்; to resolve upon covertly doing one an injury or ruining one. 2. தாம்பூலங்கொடு பார்க்க; see *tambūla-ṅ-koḍu.*

*[தாம்பூலம் + பிடி-]*

**தாம்பூலம்வை-த்தல்** *tāmpūlam-vai-,* 4 செ.கு.வி. (v.i.) திருமணத்திற்கும், பிற சிறப்பு நிகழ்ச்சிகளுக்கும், ஒவ்வொருவர் வீட்டிற்கும் சென்று வெற்றிலைபாக்கு வைத்து அழைத்தல்; to invite to a wedding by the distribution of betel. 2. கமுக்கச் செய்திகளை வெளியாக்குதல்; to give publicity to a confidential matter.

*[தாம்பூலம் + வை-.]*

**தாம்பூலமாதா** *tāmbūla-māḍā,* பெ. (n.) தாம்பூலக்கன்னி பார்க்க; see *tāmbūla-k-kanni* (சா. அக.).

**தாம்பூலமாற்று-தல்** *tāmbūla-māṟu-,* 5 செ.கு.வி. (v. i.) திருமணம் உறுதி செய்தல்; to settle a marriage proposal by exchanging betel-nuts.

*[தாம்பூலம் + மாற்று-.]*

**தாம்பூலவதனி** *tāmbūla-vadaṉi,* பெ. (n.) 1. பாக்கு; arecanut. 2. சுண்ணாம்பு; slaked lime (சா. அக.).

**தாம்பூலவல்லி** *tāmbūla-valli,* பெ. (n.) வெற்றிலைக்கொடி (சூடா); betel pepper.

*[தாம்பூலம் + வல்லி]*

**தாம்பூலவல்லிகா** *tāmbūla-valligā,* பெ. (n.) கருங்கொடி; black creeper (சா.அக.).

**தாம்பூலவாககன்** *tāmbūla-vāgagaṉ,* பெ. (n.) அடைப்பைக்காரன்; வெற்றிலை பாக்கு மடித்துக் கொடுக்கும் பணியாள் (யாழ்.அக.); valet employed to give betel and areca for chewing.

*[தாம்பூலம் + வாககன்]*

**தாம்பூலி** *tāmbūli,* பெ. (n.) 1. தாம்பூல வல்லி பார்க்க; see *tāmbūla-valli.* 2. கொடித்துத்தி; mallow creeper.

**தாம்பூலிக்கொடி** *tāmbūli-k-koḍi,* பெ. (n.) வெற்றிலைக்கொடி; betel vine (சா.அக.).

*[தாம்பூலி + கொடி]*

**தாம்பூலிகன்** *tāmbūligaṉ,* பெ. (n.) வெற்றிலை வணிகன் (யாழ்.அக.); betel dealer.

*[தாம்பூலி + அன் → தாம்பூலிகன்]*

**தாம்பூலோவல்லி** *tāmbūlō-valli,* பெ. (n.) மஞ்சாடி, ஆனைக் குன்றிமணி; adananthera pavonina (சா.அக.).

**தாம்போகி** *tām-bōgi,* பெ. (n.) 1. ஆற்றின் குறுக்கணையில் தடையின்றி நீர் ஓடுவதற்கு உள்ள பகுதி; open vent in a masonry dam across a stream or river. 2. ஏரியில் மிகைநீர் செல்லும் கலிங்கல்; surplus water of a lake. 3. மழைநீர் வழிந்து செல்லும் வகையில் ஓடையின் குறுக்காகச் செல்லும் சாலையின் கட்டுமானப் பகுதி; cause way in a road at the stream portion.

*[தாம்பு + போகு → தாம்போகி]*

**தாமக்கிரந்தி** *tāma-k-kirandi,* பெ. (n.) கரந்துரைதற் காலத்தில் நகுலன் வைத்துக் கொண்ட பெயர்; name assumed by Nagulan when he lived in cognito. "கிளைபடுபுரவி புரந்திடுந் தாமக்கிரந்தியாம் பெயர்புனை நகுலற்கு" (பாரத. நாடுக. 26)

**தாமசி** *tāmaci,* பெ. (n.) நோயுண்டாக்கும் பேய்; a damon causing diseases (சா.அக.).

**தாமணி**[1] *tāmaṇi,* பெ. (n.) மாடுகளைக் கட்ட உதவும் கவையுள்ள தாம்புக்கயிறு; long line of rope with halters attached for fastening cattle. 2. மாடு, கன்றுகளின் கழுத்திற் கட்டியிருக்கும் தும்பு; headstall of a halter. "கன்றுகளைக் கட்டின தாமணியை யுடைய நெடிய தாம்புகள்" (பெரும்பாண். 244 உரை). 3. கயிறு (சூடா.); rope, string. 4. கப்பற்பாயின் பின்பக்கத்துக் கயிறு; sheet in boat tackle.

[தாம்பு + அணி → தாம்பணி → தாமணி]

**தாமணி**[2] *tāmaṇi,* பெ. (n.) வலம்புரிக்காய்; tursted horn (சா.அக.).

**தாமணிச்சுழி** *tāmaṇi-c-cuḻi,* பெ. (n.) மாடுகளின் முதுகுத்தண்டின், இருபக்கத்து முள்ள சுழிகள் (அபி.சிந். 787); curly marks of cattle on the two sides of the spinal column.

[தாமணி + சுழி]

**தாமணிப்பினையல்** *tāmaṇi-p-piṉaiyal,* பெ. (n.) சூட்டடிக் கதிர்களைக் கடாவிட்டுழக்குவதற்கு 5 அல்லது 7 மாடுகளை, ஒரு கயிற்றில் இணைக்கும் பிணைப்பு (இ. வ.); yoking of five or seven bulls in a long rope for threshing corn.

[தாமணி + பிணையல்]

**தாமத்தர்** *tāmattar,* பெ. (n.) திருக்குறளின் உரையாசிரியர்களுள் ஒருவர்; a commentator of Thirukkuraḷ. "தருமர் மணக்குடவர் தாமத்தர்" (தொண்டை. சத. 40, மேற்கோள்).

**தாமதப்பல்லி** *tāmada-p-palli,* பெ. (n.) தொட்டகாரியம் விரைவில் முடியாது என்பதைக் குறிக்கும் பல்லிச்சொல் (வின்.); chirping of lizard believed to indicate delay, obstruction or misfortune.

[தாமதம் + பல்லி]

**தாமநிதி** *tāmanidi,* பெ. (n.) கதிரவன் (யாழ்.அக.); Sun as the treasure of light.

**தாமநூல்** *tāma-nūl,* பெ. (n.) ஆயுள்வேதம்; medical sciences. "தாம நூலொரு மருத்துவன் றருதிர்" (உபதேசகா. சிவத்துரோ. 330).

**தாமப்பல்கண்ணனார்** *tāma-p-pal-kaṇṇaṉār,* பெ. (n.) கழகக் காலப் புலவர்; Saṅgam poet. (இவர் புறநா. 43வது பாடல் பாடியுள்ளார்).

**தாமம்**[1] *tāmam,* பெ. (n.) 1. கயிறு (பிங்.); rope, cord, string. 2. தாமணி; line to tie cattle. 3. பூமாலை (பிங்.); wreath, flower garland, chaplet, especially worn on shoulders; "வண்டிமிருந் தாம வரைமார்ப" (பு.வெ. 12, இருபாற். 3). 4. வடம் (பிங்.); necklace of beads; string, as of pearls. "முத்துத் தாம முறையொடு நாற்றுமின்" (மணிமே. 1: 49). 5. பெண்களின் இடுப்பில் பூணும் அணி; 16 அல்லது 18 கோர்வையுள்ளது (வின்.); woman's waist ornament of 16 or 18 strings of beads. 6. ஒழுங்கு; row, line; "தடமலர்த் தாம மாலை" (சீவக. 1358). 7. பூ (பிங்.); flower. 8. முடியின் ஐந்து உறுப்புகளுள் ஒன்று (திவா.); an ornamental part of a crown, one of the five muḍi-y-uṟuppu. 9. கொன்றை (பிங்.); senna.

[தமம் → தாமம்]

**தாமம்**[2] *tāmam,* பெ. (n.) யானை (சூடா.); elephant.

**தாமம்**[3] *tāmam,* பெ. (n.) 1. இடம் (அக.நி.); position, place. 2. துறக்கம்; final bliss. "விண்முழுது மெதிர்வரத் தன்றாம மேவி" (திவ்.பெருமாள். 10: 10). 3. நகரம் (பிங்.); city. 4. மருதநிலத்தூர் (சூடா.); town in agricultural tract. 5. போர்க்களம் (சூடா.); battle-field. 6. மலை (சூடா.); mountain. 7. ஒளி; lustre brilliancy, light. 8. புகழ் (வின்.); fame, celebrity. 9. சந்தனம் (சூடா.); sandal. 10. உடல் (வின்.); body. 11. பிறப்பு (வின்.); birth.

[தள் → தார் → தா → தாமம்]

**தாமரக்குப்பம்** *tāmara-k-kuppam,* பெ. (n.) தாமரைக்குப்பம் பார்க்க; see *tāmarai-k-kuppam.*

[தாமரை → தாமரம் + குப்பம்]

**தாமரங்காய்** *tāmaraṅ-gāy,* பெ. (n.) ஈரல் குலை; the liver, as resembling the pericarp of lotus.

*[தாமரை + காய். தாமரையின் காயைப் போன்றது]*

**தாமரங்கோட்டை** *tāmaraṅ-kōṭṭai* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் பட்டுக்கோட்டை வட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Paṭṭukōṭṭai taluk in Tañjore Dt.

கோட்டை என்ற சொல், ஈறாக வரும் ஊர்கள் தஞ்சை மாவட்டத்தில் 40 இருக்கின்றன. உண்மையிலேயே கோட்டை இருந்த ஊரும் இருந்துள்ளது. கோட்டை இல்லாமலேயே இப்படியும் வழங்கப்பெறுகிறது.

*[தாமரை + கோட்டை]*

**தாமரசம்** *tāmarašam,* பெ. (n.) 1. செந்தாமரை (மலை.); red lotus. 2. பொன் (யாழ்.அக.); gold. 3. செம்பு (யாழ்.அக.); copper.

**தாமரப்பாக்கம்** *tāmara-p-pākkam,* பெ. (n.) செங்கை மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Cheṅgalput district.

பாக்கம் என்ற பொதுக்கூறு அடிப்படையில், பல ஊர்கள் இருக்கின்றன. இவை செடி, கொடியின் அடிப்படையிலேயே வழங்கப் படுகிறது.

*[தாமரை + பக்கம் → தாமரைப்பாக்கம்]*

**தாமரம்** *tāmaram,* பெ. (n.) 1. நீர்; water. 2. நெய்; ghee.

*[தரு → தா → தாமரம்]*

**தாமருபுட்பி** *tāmarupuṭpi,* பெ. (n.) பாதிரி; trumpet flower tree (சா.அக.).

**தாமரை** *tāmarai,* பெ. (n.) 1. கொடிவகை; lotus. "தாமரைக் கண்ணான் உலகு" (குறள், 1103). 2. தாமரை மலரின் இதழ்களை ஒப்ப நிறுத்தப்பட்ட காலாட்படை அமைப்பு; array of an army arranged in the form of a lotus flower. 4. ஒரு பேரெண் (தொல். எழுத்து. 393, உரை). கோடி கோடி; a large number. (1,00,00,00,00,00,00,00,000). 5. புலி (அக.நி.); tiger. 6. எச்சிற்றழும்பு (இ. வ.); ring-worm.

ம. தாமர; க. தாமரை, தாவரை; தெ. தாமர, தம்மி; து. தாமரெ, தாவரெ; குட. தாவுரை, தாவரெ; குவி. தம்பரி; பர். தாமர்

மறுவ. திருமாலுந்தி, எல்லி, மரை, முளரி, முண்டகம், தண்டுத்துளைத்தாசி

*[தும் = செம். தும் → தும்பு → துப்பு = சிவப்பு, பவழம், அரக்கு. தும்பு → தும்பரம் = சிவப்பு, சிவப்பான அத்திப்பழம். தும் → (துமர்) → துவர் = சிவப்பு, பவழம், காவி, துவரை, துவர்ப்பு (காசுக்கட்டி). துவர்த்தல் = சிவத்தல், துவர்ப்புச் சுவையாதல். துவர் → துவரை = செம்பயறு, செப்புக்கோட்டை நகர். துவர் → துகிர் = பவழம். துமர் → தமர் → தாமரம் = செம்பு. தாமரம் தாமரை (வ.வ.8) ஒருகா. துமர் → தமர் → தமரை → தாமரை]*

தாமரை நீரில் விளையும். இதன் இலைக் காம்பை விட, பூவின் காம்பு நீளமும் சதைப் பற்றுமிக்கது. தாமரையின் அடிப்பாகம் மிகுதியான இழைகளுடன் கூடியது. கொட்டைக்குள் ஒன்று அல்லது இரண்டு விதைகள் அமைந்திருக்கும். தாமரைப்பூ, பெரிதாகவும், சிவப்பு, நீலம், வெள்ளை வண்ணத்தில் காணப்படும். ஆண்டுதோறும் தாமரைப்பூ, பூக்கும். அகலமான தாமரை யிலை, உணவு உண்பதற்குப் பயன்படும். தாமரைமலரில் வெண்மையை விடச் சிவப்புப்பூ மணத்துடன் திகழும். தாமரை விதைகள் பட்டாணியைவிட இருமடங்கு பருமனாயும், கடினமாயு மிருக்கும். தாமரைத் தண்டு, பூக்காம்பு முதலானவை, தண்ணீரின் மேற்பகுதியில் காணப்படும்.

தாமரைப்பூவினைப் புலவர், பெண்களின் முகத்துடன் ஒப்பிட்டுப் பாடும் மரபு, கழககால இலக்கியம் முதல் இன்று வரை காணப்படுகிறது.

"தாமரை பூத்த முகத்தினிலே முகத்தாமரை
தோன்ற முகிழ்கிடுவாள்"

என்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பாடுவார்.

**மருந்துவக்குணம்:** தாமரைப்பூக்கள், விதைகள், கிழங்குகள் அனைத்தும் மருத்துவக்குணம் கொண்டவை. சிறுவர் முதல் பெரியவர் வரை அனைவருக்கும் மருந்தாகப் பயன்படுபவை. தாமரைக் காம்புகள் துவர்ப்பும், குளிர்ச்சியும் உள்ளவை. தாமரைத்தண்டு, இலை, பால் முதலானவை, சிறுவர் முதல் பெரியவர் வரை அனைவர்தம் வயிற்றுப்போக்கிற்கும் மருந்தாகும்.

தாமரைத்தண்டில் குளிர்பருகம் செய்து கோடையில் பருகினால், உடற்சூடு குறையும். தாமரைவிதைகள் அதிகமாகச் சிறுநீரை வெளியேற்றும். உடற்சூட்டைத் தணிக்கும். மிகுசுரம் வந்தவர், தாமரையிலையைப் பரப்பிப்படுத்தால் சுரம்குறையும். தாமரைத் தண்டும், இலைப்பாலும், செரியாமையைப் போக்கும் குணமுடையவை. தாமரைவேரை அரைத்துத் தோல்நோய்க்கு மேற்பூச்சிடலாம். தாமரை இலையும் கிழங்கும் உணவிற்கு உகந்தது. பொரித்தும், கூட்டு செய்தும், அனைவரும் உண்ணலாம்.

**தாமரை வகைகள்**

*1. வெள்ளைத் தாமரை*
*2. சிவப்புத் தாமரை*
*3. நீலத் தாமரை*
*4. ஓரினத் தாமரை*
*5. மலைத் தாமரை*
*6. ஆகாசத் தாமரை*
*7. வட்டத் தாமரை*
*8. கற்றாமரை*
*9. நிலத் தாமரை*
*10. கடற்றாமரை*
*11. குளிர்தாமரை*
*12. அல்லித்தாமரை*
*13. மேட்டுத்தாமரை*
*14. முழுகுதாமரை*
*15. கிருட்டிணத்தாமரை*
*16. அந்தரத்தாமரை*
*17. அல்லித் தாமரை*
*18. மஞ்சள்தாமரை*
*19. ஈரிலைத்தாமரை*
*20. மூவிலைத்தாமரை*

என்று சா.அக. கூறும்.

**தாமரைக்கண்ணன்** *tāmarai-k-kaṇṇaṉ*, பெ. (n.) தாமரைக்கண்ணான் பார்க்க; see *tāmarai-k-kaṇṇāṉ*. "தாமரைக்கண்ண னென் னெஞ்சி னூடே" *(திவ். திருவாய். 7. 3:1)*.

ம. தாமரக்கண்ணன்

*[தாமரை + கண்ணன்]*

**தாமரைக்கண்ணான்** *tāmarai-k-kaṇṇāṉ*, பெ. (n.) **தாமரை போன்ற கண்களை உடையவன், திருமால்;** Thirumāl as lotus eyed. "தாமரைக் கண்ணா னுலகு" *(குறள், 1103)*.

க. தாவரெ கண்ண

*[தாமரை + கண்ணான்]*

**தாமரைக்கண்ணி** *tāmarai-k-kaṇṇi*, பெ. (n.) *அவுரி;* indigo plant *(சா.அக.)*.

**தாமரைக்கல்** *tāmarai-k-kal*, பெ. (n.) **கடலடியிற் கிடைக்கும் தாமரைப் பூ வடிவுடைய கல். இது எளிதில் உடையுந் தன்மையுள்ளது** (நெல்லை); a kind of stone in sea.

*[தாமரை + கல்]*

**தாமரைக்காடை** *tāmarai-k-kāḍai*, பெ. (n.) **ஒரு மருந்துப் பொருள்;** a medicinal drug *(சா.அக.)*.

*[தாமரை + காடை]*

**தாமரைக்காய்** *tāmarai-k-kāy*, பெ. (n.) *1. தாமரையின் கொட்டை;* pericarp of the lotus.

மறுவ. தாமரங்காய்

*[தாமரை + காய்]*

**தாமரைக்கிழங்கு** *tāmarai-k-kiḻaṅgu*, பெ. (n.) **தாமரையின் கிழங்கு;** balbous root of lotus *(சா.அக.)*.

ம. தாமரக்கிழங்ஙு

*[தாமரை + கிழங்கு]*

இதனை உண்பதால், கண்ணுக்கு ஒளியும், குளிர்ச்சியும் கிடைக்கும். அன்றியும், தவளைச் சொறி, வயிற்றுக்கடுப்பு அகலும்.

**தாமரைக்குப்பம்** *tāmarai-k-kuppam*, பெ. (n.) **செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்;** a village in Chengalput District.

*[தாமரை + கும்பல் → குப்பல் → குப்பம்]*

**தாமரைக்கொட்டை**[1] *tāmarai-k-koṭṭai*, பெ. (n.) **மகளிர் தலையணி வகை** (இ. வ.); a head ornament worn by women.

*[தாமரை + கொட்டை]*

தலையணி. தாமரைக் கொட்டை வடிவானது.

**தாமரைக்கொட்டை**[2] *tāmarai-k-koṭṭai*, பெ. (n.) **தாமரை விதைகளடங்கிய கொட்டை;** nut of the lotus containing seeds *(சா.அக.)*.

*[தாமரை + கொட்டை]*

**தாமரைச்சத்துரு** *tāmarai-c-catturu,* பெ. (n.) பிறவி வைப்புநஞ்சு (மூஅக.); a mineral poison.

*[தாமரை + சத்துரு]*

**தாமரைச்சிறகி** *tāmarai-c-ciṟagi,* பெ. (n.) நீர்வாழ் பறவை (வின்.); a kind of teal in fresh water lotus-tanks.

*[தாமரை + சிறகி]*

**தாமரைச்சுருள்** *tāmarai-c-curuḷ,* பெ. (n.) தாமரைவளையம் பார்க்க; see *tāmarai vaḷaiyam* (சா. அக.).

*[தாமரை + சுருள்]*

**தாமரைச்செயல்பொற்பூ** *tāmarai-c-ceyal-poṟpū,* பெ. (n.) தாமரை மலரின் வடிவமாகப் பொன்னல் செய்யப்பட்ட பூ; a kind of gold ornament like lotus flower. "ஸ்ரீ ராஜராஜ தேவர் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார்க்குக் குடுத்த தாமரைச் செயல் பொற்பூ ஒன்று".

*[தாமரை + செயல் + பொற்பூ = இது பொன்னணிகளுள் ஒன்று]*

**தாமரைச்செல்வி** *tāmarai-c-celvi,* பெ. (n.) திருமகள்; Thirumagaḷ (Lakṣhmi).

*[தாமரை + செல்வி = தாமரையில் உறைபவள்]*

**தாமரைச்சேயவள்** *tāmarai-c-cēyavaḷ,* பெ. (n.) தாமரைச்செல்வி பார்க்க; see *tāmarai-c-celvi.*

*[தாமரை + சேயவள்]*

**தாமரைத்தண்டு** *tāmarai-t-taṇḍu,* பெ. (n.) தாமரைப்பூவின் அடிப்பாகம்; the stem or stalk of lotus (சா.அக.).

*[தாமரை + தண்டு]*

இதன் சாறு இதய நோய்களைப் போக்கும் என்று, சா.அக. கூறும்.

**தாமரைத்தாது** *tāmarai-t-tādu,* பெ. (n.) தாமரையின் பூந்தாது; pollen of the lotus flower (சா. அக.).

*[தாமரை + தாது]*

**தாமரைநண்பன்** *tāmarai-naṇban,* பெ. (n.) கதிரவன் (வின்.); Sun, as the friend of lotus.

*[தாமரை + நண்பன்]*

கதிரவன் வரும் காலைவேளையில் தாமரைப் பூ மலர்வதால், இப் பெயர் பெற்றது.

**தாமரைநாதன்** *tāmarai-nādaṉ,* பெ. (n.) கதிரவன் (சிவப்.பிர.வெங்கையுலா. 40); Sun, as the lord of lotus.

*[தாமரை + நாதன்]*

கதிரவன் தோன்றியதும் மலர்வதால், தாமரையின் தலைவன் எனப்படுகிறது.

**தாமரைநாயகன்** *tāmarai-nāyagaṉ,* பெ. (n.) தாமரைநாதன் பார்க்க; see *tamarai-nādaṉ.* "சகட சக்கரத் தாமரை நாயகன்" (கந்தபு.காப்பு. 1).

*[தாமரை + நாயகன்]*

**தாமரைநாளம்** *tāmarai-nāḷam,* பெ. (n.) தாமரைத்தண்டு; stem of the lotus (சா.அக.).

*[தாமரை + நாளம்]*

**தாமரைநூல்** *tāmarai-nūl,* பெ. (n.) தாமரைத் தண்டின் நூல்; lotus fibre.

ம. தாமரநூல்; க. தாவரெநூல்

*[தாமரை + நூல்]*

**தாமரைநோய்** *tāmarai-nōy,* பெ. (n.) உடம்பின் மேல்படரும் செம்படைகள்; a kind of ringworm marked by red patches (சா.அக.).

*[தாமரை + நோய் = இதனால் உடம்பு தளரும்.]*

**தாமரைப்பருப்பு** *tāmarai-p-paruppu,* பெ. (n.) தாமரைவித்தின் பருப்பு; the inner kernel of shelled seeds of lotus (சா.அக.).

மறுவ. தாமரைக் கொட்டை

*[தாமரை + பருப்பு]*

**தாமரைப்பாசினி** *tāmarai-p-paśiṉi,* பெ. (n.) அரிதாரம் (சங்.அக.); yellow orpiment.

*[தாமரை + பாசினி]*

**தாமரைப்பீடிகை** *tāmarai-p-pīḍigai,* பெ. (n.) புத்தரது திருவடிப்பீடம்; a raised stone-slab with lotus-petals carved on the sides and Buddha's feet on the top. "சுடரொளி விரிந்த தாமரைப் பீடிகை" (மணிமே. 3: 60).

*[தாமரை + பீடிகை]*

**தாமரைப்புலம்** *tāmarai-p-pulam,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Tañjore Dt.

*[தாமரை + புலம்]*

பயிரிகளின் பெயரில் ஊர் அமைதல், காணப் படுகிறது. தாமரை அதிகம் உடையதானால், இப் பெயர் பெற்றது.

**தாமரைப்பூ** *tāmarai-p-pū,* பெ. (n.) 1. தாமரைத் தண்டில் பூத்த இளஞ்சிவப்பு வண்ண இதழ்கள் கொண்ட மலர்; lotus flower. 2. தண்ணீரைக் குறிப்பதற்காகப் பயன்படும் மலர்; flower to represent water. (சி.சி. 2, 68, மறைஞா.) 3. வெண்டாமரை; white lotus. 4. அல்லித்தாமரை; red indian water-lily.

ம. தாமரப்பூ; க. தாவரெபூ

*[தாமரை + பூ]*



**தாமரைப்பூந்தேன்** *tāmarai-p-pūntēṉ,* பெ. (n.) தாமரைப் பூவிலுள்ள தேன்; honey from the lotus flower (சா. அக.).

*[தாமரைப்பூ + தேன் → தாமரைப் பூந்தேன், கண்ணிலேற்படும் நோய்கட்கு, கைகண்ட மருந்து என்று, சா.அக. கூறும்]*

**தாமரைப்பொகுட்டு** *tāmarai-p-poguṭṭu,* பெ. (n.) தாமரைப் பூவினுள்ளிருக்குங் கொட்டை; the pericarpium or seed vessel.

*[தாமரை + பொகுட்டு]*

**தாமரைமணி** *tāmarai-maṇi,* பெ. (n.) 1. தாமரை விதை (மலை); lotus-seed. 2. தாமரை மணியாலாகிய மாலை; a rosary of lotus-seeds. 'துளசி தாமரைமணி தோண்மேல்" (பிபோத. 11: 11).

*[தாமரை + மணி]*

**தாமரைமுகை** *tāmarai-mugai,* பெ. (n.) 1. மலராத தாமரைமொட்டு; lotus-bud. 2. கொடிஞ்சி; an ornamental stall in the form of a lotus-bud. "தேரில் வளைந்த தாமரை முகையினைக் கையாலே பிடித்து" (கலித். 85, உரை).

மறுவ. தாமரைமொட்டு

*[தாமரை + முகை]*

**தாமரைமுள்** *tāmarai-muḷ,* பெ. (n.) 1. தாமரைக் கொடியில் உள்ள கருக்கு; thorns in the lotus stalk. 2. நாய் முள்ளைப் போன்ற ஒரு வகைத் தோல்நோய்; a kind of skin disease attended with eruptions (சா.அக.).

*[தாமரை + முள்]*

**தாமரைமொட்டு** *tāmarai-moṭṭu,* பெ. (n.) 1. தாமரை மலருவதற்கு முன்னுள்ள நிலை; lotus-bud. 2. நெஞ்சாங்குலை (இதயம்); heart. "தாமரை மொட்டென்னு முள்ளிகறுத்துக் கொண் டுண்ணிரே" (கலிங். 566, புதுப்.). 3. மாலியர்களின் நெற்றிக்குறியுள் ஒரு வகை; one caste mark on the forhead of Vaiṣṇavites.

*[தாமரை + மொட்டு]*

**தாமரையாசனன்** *tāmarai-y-āšaṉaṉ,* பெ. (n.) தாமரைமலரில் அமர்ந்துள்ளதாகக் கருதப்படும் படைப்புக் கடவுள் (யாழ்.அக.); Brahmaṉ, as seated on lotus (செ.அக.).

*[தாமரை + ஆசனன்]*

**தாமரையாசனி** *tāmarai-y-āšaṉi,* பெ. (n.) அரிதாரம் (யாழ்.அக.); yellow orpiment.

*[தாமரை + ஆசினி]*

**தாமரையால்** *tāmarai-y-āl,* பெ. (n.) அரிதாரம் (வின்.); yellow sulphide of arsenic.

**தாமரையாள்** *tāmarai-y-āḷ,* பெ. (n.) 1. அலைமகள் (இலக்குமி); Lakṣmi, as seated on lotus. "தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கு முணர்வு" (திவ்.இயற்.முதற். 67). 2. கொங்கு நாட்டுப்புறக் காவியமான பொன்னர்சங்கர் கதையில் பொன்னர் சங்கரின் தாயார்; mother of Poṉṉar Šaṅkar, the heros of the balad of Koṅgu country. 2. ஓர் மஞ்சள் செய்நஞ்சு; yellow sulphide of arsenic (சா. அக.).

*[தாமரை + ஆள்]*

**தாமரையான்** *tāmaraiyāṉ*, பெ. (n.) நான்முகன்; a God nāṉmugaṉ.

*[தாமரை + ஆன்]*

**தாமரையிலை** *tāmarai-y-ilai*, பெ. (n.) ஒருசார் மாலியர் அணியும் தாமரையிலை போன்ற நெற்றிக்குறி; a Vaiṣṇava cast-mark, as resembling a lotus leaf.

*[தாமரை + இலை]*

**தாமரையிலைக்கோழி** *tāmarai-y-ilai-k-kōḻi*, பெ. (n.) இலைக்கோழி வகைகளுள் ஒன்று; bronze-winged jacana.

*[தாமரை + இலை + கோழி. (பெரும்பாலும்) தாமரையிலை மேல் இருப்பது]*



**தாமரைவளையம்** *tāmarai-vaḷaiyam*, பெ. (n.) தாமரைத்தண்டு; lotus stalk. "வார்செய் தண்டாமரை வளையம்" (சீவக. 1671).

ம. தாமரவாசிணி, க. தாவரெமனையள்

*[தாமரை + வளையம்]*

**தாமரைவற்றல்** *tāmarai-vaṟṟal*, பெ. (n.) வற்றலாகச் செய்த தாமரைக்கிழங்கு; dried root of the lotus used for food.

*[தாமரை + வற்றல்]*

**தாமரைவாசி**[1] *tāmarai-vāśi*, பெ. (n.) தாமரையாள்-1 (யாழ்.அக.) பார்க்க; see *tāmariyaḷ-1*.

*[தாமரை + வாசி]*

**தாமரைவாசி**[2] *tāmaraivāśi*, பெ. (n.) மனோசிலை; red arsenic sulphuretted arsenic (சா.அக.).

*[தாமரை + வாசி]*

**தாமரைவாசினி** *tāmarai-vāśiṉi*, பெ. (n.) தாமரைவாசி பார்க்க; see *tāmarai-vāśi* (சா.அக.).

*[தாமரை + வாசினி]*

**தாமரைவிதை** *tāmarai-vidai*, பெ. (n.) தாமரையின் விதை; seed of lotus (சா. அக.).

*[தாமரை + விதை]*

*[இதனால் வெண்ணீர் (விந்து) அதிகரிக்கும்]*

**தாமலகம்** *tāmalagam*, பெ. (n.) 1. கீழ்க்காய் நெல்லி; Indian annual phyllanthus. 2. பனங் குருத்து; the head of palmyra palm. 3. கொடி நெல்லி; creeper embelica.

*[தாமர் → தாமல் + அகம்]*

**தாமலகி** *tāmalagi*, பெ. (n.) தாமலகம் பார்க்க; see *tāmalagam* (சா.அக.).

*[தாமலகம் → தாமலகி]*

**தாமலகிதளம்** *tāmalagitaḷam*, பெ. (n.) தாளிபத்திரி பார்க்க (மூ.அ.); see *tāḷipattiri*.

*[தாமல் + அகி + தளம்]*

**தாமலபத்திரி** *tāmala-pattiri*, பெ. (n.) தமாலபத்திரி பார்க்க; see *tamāla-pattiri* (சா.அக.).

*[தாமலம் + பத்திரி]*

**தாமலம்** *tāmalam*, பெ. (n.) இலை; leaf (சா.அக.).

*[தாமல் + அம்]*

**தாமலைக்காய்** *tāmalai-k-kāy*, பெ. (n.) நெல்லிக்காய்; Indian gooseberry - Emblica officinalis (சா. அக.).

*[தாமலை + காய்]*

**தாமளை**[1] *tāmaḷai*, பெ. (n.) புன்னைவகை; mast-wood.

*[தாமலை → தாமளை]*

**தாமன்**[1] *tāmaṉ*, பெ. (n.) கதிரவன்; sun. "தாமன் மேல்வரவர" (பாரத. முதற்போர். 42).

*[தாம் + அன் → தாமன்]*

**தாமன்**[2] *tāmaṉ*, பெ. (n.) *சாரைப்பாம்பு;* snake (*சா.அக.*).

**தாமனி**[1] *tāmaṉi*, பெ. (n.) *மாடுகளைக் கட்டப் பயன்படும் கலையுள்ள தாம்புக்கயிறு;* long line of rope with halters attached for fastening cattle.

*[தாமணி → தாமனி]*

**தாமனி**[2] *tāmaṉi*, பெ. (n.) *நரம்பு;* nerve, vein (*சா.அக.*).

*[தமனி → தாமனி]*

**தாமாங்கயிறு** *tāmāṅ-kayiṟu*, பெ. (n.) தோணிப்பாயின் பின் பக்கத்துக் கீழ்ப்பகுதிக் கயிறு; lower back rope of a thoney.

*[தாமான் + கயிறு]*

மரக்கலத்தின் வேகத்தைக் கூட்டவும், குறைத்து மெதுவாய்ச் செலுத்தவும், பயன்படும் கயிறு.

**தாமாசாகி** *tāmāsāgi*, பெ. (n.) 1. *கடனிறுக்க வழியற்றவனுடைய சொத்துகளைக் கடன் காரருக்குச் சமமாகப் பகிர்கை;* the equitable division of the effects of an insolvent amongst his creditors. 2. *ஊர் வேலைக்காக விடப்பட்ட குமுகாய நிலங்களை யெடுத்துக் கொண்டு அரசு கொடுக்கும் திங்கட்கூலி;* a money allowance paid to monigars and karṇams in lieu of service iṉāms resumed.

*[தாம் + சாகி - தாமசாகி. தாமாகத் தரவியலாதவனிடம் உள்ள சொத்துகளைச் சமமாகப் பகிர்கை]*

**தாமாசெங்கமலம்** *tāmā-seṅgamalam*, பெ. (n.) செங்கழுநீர்; red indian water lily.

*[தாமா + செங்கமலம்]*

**தாமாம்** *tāmām*, பெ. (n.) 1. *தாமிரம்;* copper. 2. *நெய்;* ghee. 3. *தாமரை;* lotus flower. 4. *கார்முகில் செய்நஞ்சு;* a kind of prepared arsenic (*சா.அக.*).

*[தாமம் + தாமாம்]*

**தாமாவிருவர்** *tāmā-v-iruvar*, பெ. (n.) *பரித்தேவர்கள்;* asvins, the twin gods, as born of a mare. "*தாமா விருவருந் தருமனு மடங்கலும்*" (*பரிபா. 3,8*) (*செ. அக.*).

*[தாவு + மா + இருவர்]*

**தாமான்** *tāmāṉ*, பெ. (n.) *கப்பற் பின் பக்கத்துக் கயிறு;* lower back rope of a dhoney sail, back clew line (*செ.அக.*).

*[தாமம் + ஆன் → தாமான்]*

**தாமான்பாள்** *tāmāṉ-pāḷ*, பெ. (n.) *கப்பற் கயிறு;* ship rope; sheet [naut].

**தாமான்புறம்** *tāmāṉ-puṟam*, பெ. (n.) *மரக்கலத்தின் வலது பக்கம்;* the right side of a thoney (*முகவை. மீனவ*).

*[தாமான் + புறம்]*

**தாமானிலேவா-தல்** *tāmāṉilēvā-*, 6 செ.குவி. (v.i.) *காற்றுப்போக்கிற் கப்பலோட்டுதல்;* to let a vessel drive before the wind.

*[தாமானில் + ஏவு + ஆ-.]*

**தாமி** *tāmi*, பெ. (n.) *மஞ்சள்;* turmeric (*செ.அக.*).

*[தாம் + இ → தாமி]*

**தாமிகி** *tāmigi*, பெ. (n.) *கொடிநாரத்தை;* a kind of orange (*சா.அக.*).

*[தாமி → தாமிகி]*

**தாமிச்சிரம்** *tāmi-c-ciram*, பெ. (n.) 1. *பேரிருள்;* profound, darkness (*இலக்.அக.*). 2. *நிரைய வகை;* a hell. 3. *பொய்த்தோற்றம்* (*இலிங்க4. படை 1*); illusion.

*[தாம் + இச்சு + இரம் → தாமிச்சிரம்]*

**தாமிஞ்சம்** *tāmiñjam*, பெ. (n.) *ஆமணக்கு;* castor plant (*சா.அக.*).

**தாமிரக்களிம்பு** *tāmira-k-kaḷimbu*, பெ. (n.) *செங்கல்பச்சை;* verdigris of copper (*சா.அக.*).

*[தாமிரம் + களிம்பு]*

**தாமிரகண்டகம்** *tāmira-kaṇdagam*, பெ. (n.) *சிவப்புமுள்;* red thorn (*சா.அக.*).

**தாமிரகம்**[1] *tāmiragam*, பெ. (n.) 1. *செஞ்சந்தனம்;* red sandal. 2. *ஆனைக்குன்றி;* a big variety of Crab's eye (*சா.அக.*).

*[தாமிரம் + அகம்]*

**தாமிரகம்**[2] *tāmiragam,* பெ. (n.) குன்றி; red jeweller's bead - Abrus precatorus *(சா.அக.).*

*[தாமிரம் + அகம்]*

**தாமிரகருணி** *tāmira-karuṇi,* பெ. (n.) மேற்றிசைப் பெண் யானை; female elephant of the west *(செ.அக.).*

**தாமிரகிருமி** *tāmirakirumi,* பெ. (n.) இந்திர கோபப்பூச்சி; lady's fly-searlet moth *(சா.அக.).*

ம. தாம்ரக்ருமி

*[தாமிரம் + கிருமி]*

**தாமிரகூடம்** *tāmira-kūḍam,* பெ. (n.) ஒரு வகைப் புகையிலை; a kind of tobacco *(சா.அக.).*

ம. தாம்ரகூடம்

*[தாமிரம் + கூடம்]*

**தாமிரச்சிகை** *tāmira-c-šigai,* பெ. (n.) தாம்பூரப்பூச்சிகை பார்க்க; see *tāmbūra-c-cigai* (சா.அக.).

*[தாமிரம் + சிகை]*

**தாமிரச்சுண்ணம்** *tāmira-c-cuṇṇam,* பெ. (n.) தாமிரசிந்தூரம் பார்க்க; see *tāmira-šindūram* (செ.அக.).

*[தாமிரம் + சுண்ணம்]*

**தாமிரசபை** *tāmira-šabai,* பெ. (n.) சிவபெருமானின் ஐவகை அம்பலங்களுள் ஒன்றானதும் செப்பேடு வேயப்பட்டதுமான தாமிர சபை; copper roofed hall, one of the five Ambal's of Lord Šivan.

*[தாமிரம் + சபை த. அவை → Skt. சபை]*

**தாமிரசாசனம்** *tāmirašāšanam,* பெ. (n.) தாமிரப்பட்டயம் பார்க்க; see *tāmira-p-paṭṭayam* (செ.அக.).

*[தாமிரம் + சாசனம்]*

**தாமிரசிகி**[1] *tāmirašigi,* பெ. (n.) கோழி; fowl *(சா.அக.).*

**தாமிரசிகி**[2] *tāmirašigi,* பெ. (n.) செந்நிறக் கொண்டையுள்ள சேவல்; cock, as having red crest *(செ. அக.).*

**தாமிரசிந்தூரம்** *tāmira-šindūram,* பெ. (n.) செம்பைக் கொண்டு செய்த சிந்தூரம் *(யாழ்.அக.);* calcinated red powder of copper.

*[தாமிரம் + சிந்தூரம்]*

**தாமிரசூடன்** *tāmira-šūḍan,* பெ. (n.) ஒரு வகை முதற்பொருள் (தாது); a crystallised mineral known as garnet *(சா.அக.).*

**தாமிரசூடி** *tāmira-šūḍi,* பெ. (n.) 1. சிவப்பு கொண்டையையுடைய பறவை; red crested bird. 2. சேவல்; cock *(சா.அக.).*

ம. தாம்ரசூடம்



**தாமிரநோவு** *tāmira-nōvu,* பெ. (n.) நிலக் கடலைச் செடியின் இலைகளை மஞ்சணிற மாக்கும் நோய் வகை; a disease of ground-nut plants which makes the leaves turn yellow *(செ.அக.).*

*[தாமிரம் + நோவு]*

**தாமிரப்பட்டம்** *tāmira-p-paṭṭam,* பெ. (n.) செப்பேடு; copper-plate grant.

ம. தாம்ரபட்டம்

*[தாமிரம் + பட்டம்]*

**தாமிரப்பட்டயம்** *tāmira-p-paṭṭayam,* பெ. (n.) கொடை பற்றிய செய்திகளைக் குறிக்கும் செப்புப்பட்டயம்; copper plate which has the inscription about the grants etc.

*[தாமிரம் + பட்டயம்]*

**தாமிரப்பொடி** *tāmira-p-poḍi,* பெ. (n.) செம்பைத் தூய்மை செய்து, புடமிட்டெடுத்த

பொடித்துகள்; copper oxide obtained by the process of purification and calcination.

*[தாமிரம் + பொடி]*

**தாமிரபரணி** *tāmira-paraṇi,* பெ. (n.) செம்புத் தகடு; copper-leaf *(சா.அக.).*

*[தாமிரம் + பரணி]*

**தாமிரபருணி**[1] *tāmira-paruṇi,* பெ. (n.) திருநெல்வேலி மாவட்டத்தில் ஓடும் முதன்மையான ஆறு; chief river of Tirunelvēli Dt *(செ.அக.).*

ம. தாம்ரபர்ண்ணி

**தாமிரபருணி**[2] *tāmira-paruṇi,* பெ. (n.) தாமிரகருணி பார்க்க *(சது.);* see *tamira-karuṇi.*

**தாமிரபல்லவம்** *tāmira-pallavam,* பெ. (n.) *1.* அசோக மரம்; a sacred asoka tree. *2.* வாழை; plantain *(w).*

ம. தாம்ரபல்லவம்

*[தாமிரம் + பல்லவம்]*

**தாமிரபல்லியம்** *tāmira-palliyam,* பெ. (n.) தாமிரபல்லவம் பார்க்க; see *tāmira-pallavam (சா.அக.).*

*[தாமிரபல்லவம் → தாமிரபல்லியம்]*

**தாமிரபலகம்** *tāmira-palagam,* பெ. (n.) கொள்ளு; horse-gram *(சா.அக.).*

*[தாமிரம் → தாமிரபலகம்]*

**தாமிரபலம்** *tāmira-palam,* பெ. (n.) அழிஞ்சல்; red fruited alangium *(சா.அக.).*

*[தாமிரம் + பலம்]*

**தாமிரபற்பம்** *tāmira-parpam,* பெ. (n.) செம்பினாலான பொடி; calcinated white powder of copper *(செ. அக.).*

**தாமிரபீசம்** *tāmirapīsam,* பெ. (n.) தாமிரபலகம் பார்க்க; see *tāmira-palagam.*

*[தாமிரம் + பீசம்]*

**தாமிரபுட்பகம்** *tāmira-puṭpagam,* பெ. (n.) செந்தாமரை; variegated mountain ebony *(சா.அக.).*

*[தாமிரம் + புட்பகம்]*

**தாமிரபுட்பம்** *tāmira-puṭpam,* பெ. (n.) *1.* தாதகிப்பூ; dowmy grislea. *2.* நேர்ப்பிசின்; ground champak *(சா.அக.).*

*[தாமிரம் + புட்பம்]*

**தாமிரபுள்ளி** *tāmira-puḷḷi,* பெ. (n.) சிவந்த புள்ளிகள் வாய்ந்த ஒரு வகைக்குட்டம்; a kind of leprosy with large red spots *(சா.அக.).*

*[தாமிரம் + புள்ளி]*

**தாமிரம்**[1] *tāmiram,* பெ. (n.) செம்பு *(பிங்.);* copper.

ம. தாம்ரம்

*[துமர் → தமர் = சிவப்பு: சிவப்புக் கலந்த காவி. துவர் → துவரை = செம்புக் கோட்டை நகர்.*

*துமர் → தமர் → தாமரம் → தாமிரம் = செங்காவி வண்ணத்தில் உள்ள கலப்பு மாழை (உலோகம்). இம் மாழையினைச் செம்பு என்றும் அழைப்பர். இச் செம்பினைக் காற்றுப்படும்படி வைத்தால் களிம்பேறும். இச் சிவப்பு மாழையினைத் தகடாகத் தட்டலாம். கம்பியாக இழுக்கலாம். நமது நாட்டில் பரவலாக நெல்லூர், செய்ப்பூர், திருவாங்கூர் போன்ற இடங்களில் இம் மாழை மிகுதியாகக் கிடைக்கிறது.*

*இக் கலப்புமாழை, நிலத்தில் தனியாகவும், எரியுப்பு, வைப்புநஞ்சு, இரும்பு முதலியவற்றோடு கலந்தும், காணப்படும். இச் செம்புடன் வெள்ளீயத்தைச் சேர்த்தால், வெண்கலம் கிடைக்கும். இம் மாழையை உரியமுறையிற் கலந்து பித்தளை, தம்பாக்கு ஆகியவற்றை உருவாக்குவர்.*

*இச் செம்போடு பொன்னைக் கலந்து, பழுப்புப்பொன் செய்வர். செம்பு ஏனங்கள் சமையலுக்கு உதவாது. ஏனெனில் உப்பு, புளி முதலியவை சேருங்காலத்தில், செம்பிற் களிம்பேறி நச்சுத்தன்மை பெறும்.*

*இச் செம்பினின்று களிம்பெடுத்துப் பொன்னாக்க முறையில் தங்கத்தைச் செய்யலாம். நிலத்தினின்று அகழ்ந் தெடுக்கும் இக் கலப்புச்செம்பில்*

*பொன்னின் விழுக்காடு மிகுதியாய் இருந்தால், பொன்னாக்க முறைப்படி வெள்ளிசேர்த்து உருக்கி, சொக்கத்தங்கம் செய்யலாம். சித்த மருத்துவத்திற்கும், இம் மாழை தாமிரச்சுண்ண வடிவிற் பயன்படும் என்று, சா.அக. கூறும்..]*

**தாமிரம்**[2] *tāmiram*, பெ. (n.) மந்தாரை; variegated mountain ebony. *(சா.அக.).*

*[தாமரம் → தாமிரம்]*

**தாமிரமண்** *tāmira-maṇ*, பெ. (n.) செம்பை துப்புரவு செய்து புடமிட்டெடுத்த, பொடித் துகள்; copper oxide obtained by processes purification and calcination *(சா.அக.).*

*[தாமிரம் + மண்]*

**தாமிரமாரணம்** *tāmira-māraṇam*, பெ. (n.) இயற்பியல்படி செம்பை அதன் தன்மையிலிருந்து மாற்றி, மருந்திற்கு பயன்படுத்துதல்; decomposition of copper and its application as a remedy.

*[தாமிரம் + மாரணம்]*

**தாமிரமிருகம்** *tāmira-mirugam*, பெ. (n.) சிவப்பு மான்; red deer *(சா.அக.).*

*[தாமிரம் + மிருகம்]*

**தாமிரமுகம்** *tāmira-mugam*, பெ. (n.) *1.* சிவந்த முகம்; copper faced. *2.* சிவந்தநிறம்; red complexion *(சா.அக.).*

க. தாம்ரமுகி

*[தாமிரம் + முகம்]*

**தாமிரமூலம்** *tāmira-mūlam*, பெ. (n.) *1.* சிவந்த வேர்; red-root. *2.* சிவப்புக்கிழங்கு; red bulbous root. *3.* மஞ்சிட்டி; copper creeper. *4.* சுண்டி; a sensitive plant *(சா.அக.).*

*[தாமிரம் + மூலம்]*

**தாமிரமெழுகு** *tāmira-meḻugu*, பெ. (n.) செம்பு மெழுகு; copper wax *(சா.அக.).*

*[தாமிரம் + மெழுகு]*

**தாமிரவர்ணம்** *tāmira-varṇam*, பெ. (n.) *1.* சிவப்புச்செடி வகை (போஸ்தகாய்ச்செடி); copper rose - Papaver rhocas. *2.* எள்ளுப்பூ; flower of sesamum *(சா.அக.).*

*[தாமிரம் + வண்ணம் → Skt. varṇa]*

**தாமிரவருணம்** *tāmira-varuṇam*, பெ. (n.) செந்நிறம்; copper colour *(செ.அக.).*

*[தாமிரம் + வருணம்]*

**தாமிரவல்லி** *tāmira-valli*, பெ. (n.) மஞ்சிட்டி; copper creeper *(சா.அக.).*

*[தாமிரம் + வல்லி]*

**தாமிரா** *tāmirā*, பெ. (n.) வேங்கைமரம்; Indian kino tree *(சா.அக.).*

**தாமிராட்சம்** *tāmirāṭcam*, பெ. (n.) *1.* குயில்; Indian cuckoo. *2.* ஒரு வகைப் பாம்பு; a kind of snake *(சா.அக.).*

**தாமிரிகை** *tāmirigai*, பெ. (n.) *1.* குன்றிக்கொடி; crabs eye, m.cl. Abrus precatorius. *2.* குன்றிச் செடியின் சிவப்புவிதை; the red seed of Crabs eye *(செ.அக.).*

**தாமிரை** *tāmirai*, பெ. (n.) தாமிரம் *(சங்அக.)* பார்க்க; see *tāmiram.*

*[தாமிரம் → தாமிரை]*

**தாமிரேசுவரம்** *tāmirēšuvaram*, பெ. (n.) ஆயுள்வேத செம்புமருந்துடன் இதளியம் (இரசம்), வெண்காரம், இரும்பு, கந்தகம், திப்பிலி, வேப்பம்பூ இவைகளைச் சேர்த்து, திரிகடுகையும் கூட்டி அணியம் செய்யும் மருந்து; an ayurvedic medicine prepared by mixing purified copper, mercury, borax, iron, sulphur, long-pepper flowers of margosa and the three myrobalams and prescribed for skin diseases and a cooling regimen is necessary *(சா.அக.).*

**தாமிலம்** *tāmilam*, பெ. (n.) கோதுமை; wheat *(சா.அக.).*

*[தாமிரம் → தாமிலம்]*

**தாமுகவாக்கி** *tāmuga-vākki*, பெ. (n.) மனோசிலை; red arsenic *(சா.அக.).*

*[தாம் + முகம் + ஆக்கி → தாமுகவாக்கி. மிகு நச்சுத்தன்மையினால், முதற்கண் ஏற்படும் முகவாட்டம்]*

**தாமை** *tāmai*, பெ. (n.) தாம்புக்கயிறு *(யாழ்.அக.)*; tethering rope for fastening cattle.

*[தாமம் → தாமை]*

**தாமோதரம்** *tāmōdaram*, பெ. (n.) *பிடரி;* rope of the neck. "தாமோதரத்திற் கைகொடுத்துத் தள்ளினான்"

திருமாலின் பேர்களிலொன்றான தாமோதரன் என்ற பெயரைச் சொல்லிப் பெயரிடும் இடம்.

**தாமோதரப்பிள்ளை சி.வை.** *tāmōdara-p-piḷḷai c.vai*, பெ. (n.) *நூலாசிரியர்;* writer (தமி.புல.அக.).

வீரசோழியம் போன்ற பல நூல்களை புதுப்பித்துள்ளார். சைவ மகத்துவம் என்னும் நூலை எழுதியுள்ளார்

**தாமோதரன்** *tāmōdaraṉ*, பெ. (n.) 1. *ஆமை;* tortoise, turtle. 2. *திருமால்;* Thirumāl.

*[தாமம் + உதரம் → உதரன் → தாமோதரன்]*

**தாமோதரனார்** *tāmōdaraṉār*, பெ. (n.) *சங்கப் புலவர்;* šaṅgam poet (தமி.புல.அக.).

*[குறுந்தொகையில் 92, 195வது பாடல்கள் பாடியுள்ளார்]*

**தாய்**[1] *tāy*, பெ. (n.) 1. *அன்னை;* mother. "தாய்த் தாய்க்கொண் டேகுமளித்திவ் வுலகு" (நாலடி. 15). "பெற்ற தாய்தனை மகமறந் தாலும் பிள்ளையைப் பெறுந் தாய் மறந்தாலும்" (அருட்பா.). தாயைப் பார்த்து மகளைக் கொள் (பழ.); தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை (பழ.); தாயில்லாத பிள்ளை தறிதலை (பழ.). 2. *ஐவகைத் தாயருள் ஒருத்தி;* (பிங்.); any one of ai-vagai-t-tāyar. 3. *தாய்போல் கருதப்படும் அரசன்மனைவி, ஆசிரியர்மனைவி, அண்ணன் மனைவி, மகட்கொடுத்தவள் இவர்களுள் ஒருத்தி;* one of arašaṉ-tēvi, kuruviṉ-tēvi, aṇṇaṉ-tēvi, makaṭ-koḍuttavaḷ, who hold the rank of mother.

ம., பட. தாய்; க. தாய், தாயி, தாயெ; தெ. தாயி; து. தாயி; துட. தோய்; குட. தாயி (பாட்டி); கோண். பாயொ, யாயான்; கூ. அய், அயாலி, அச; குவி. ஈய்; நா. அய்ம; கொலா. அய்; பர். அயன் (பெண்), இய ; தட. ஆய், ஆயன்; மா. அய்ய (என்தாய்); பிரா. தாய்; Ass., Ori., Sind., Mar., Guj. āyī; Beng. āyi.

1. *பாராட்டுத்தாய்;* women amusing children.
2. *தாலாட்டுத்தாய்;* women making the child sleep.
3. *ஊட்டுத்தாய்;* foster-mother.
4. *முலைத்தாய்;* wet-nurse.
5. *கைத்தாய்;* nursery-maid.
6. *செவிலித்தாய்;* woman attending on children.
7. *ஈன்ற தாய்;* mother of a child.

*[த(ம்) + ஆய். தன் → தரு → தார் → தா → தாய். ஒருகா: தம் + ஆய் = தாய். பிள்ளை நிலையில், புகுந்தகுடிக்கு மகவினைத் தருபவள் தாய்.]*

**தாய்**[2] *tāy*, பெ. (n.) 1. *காந்தம்;* magnet. 2. *தங்கம்;* gold. 3. *நீராகாரம்;* cold rice water. 4. *தாயைப் போல் வளர்க்கும் பொருள்;* any substance tending to promote health and growth like a mother nursing a child. 5. *முதற்றரம்;* first rate. 6. *முதன்மை;* first. 7. *தாய்சரக்கு* பார்க்க; see *tāy-šarakku* (சா.அக.).

*[த(ம்) + ஆய்]*

**தாய்க்கஞ்சி** *tāy-k-kañji*, பெ. (n.) *சிவனார் வேம்பு;* Šivaṉ's neem - Indigofera Asphalathoides (சா.அக.).

*[தாய் + கஞ்சி]*

**தாய்க்கட்டு**[1] *tāy-k-kaṭṭu*, பெ. (n.) *தாய்க்கட்டு மனை* பார்க்க; see *tāy-k-kaṭṭu-maṉai*. "மண்டபம், கூடம், தாய்க்கட்டு, அடுக்களை என்றாற் போலும்" (மதுரைக். 357, உரை) (செ.அக.).

ம. தாய்க்கொட்டு

*[தாய் + கட்டு]*

**தாய்க்கட்டு**[2] *tāy-k-kaṭṭu*, பெ. (n.) 1. *வீட்டின் நடுப்பகுதி;* centre part of house. 2. *ஒரே சதுரமாயுள்ள வீடு;* square house (பொ.வழ.).

*[தாய் + கட்டு]*



**தாய்க்கட்டுமனை** *tāy-k-kaṭṭu-maṉai,* பெ. (n.) வீட்டின் நடுப்பகுதி; central portion of an indian house (செ.அக.).

*[தாய் + கட்டு + மனை]*

**தாய்க்கடுக்கன்** *tāy-k-kaḍukkaṉ,* பெ. (n.) காதணிவகை; a kind of ear-ornament (W).

*[தாய் + கடுக்கன்]*



**தாய்க்கண்**[1] *tāy-k-kaṇ,* பெ. (n.) 1. தேங்காயின் முக்கண்களில் மேலேயுள்ள கண்; topmost of the three eyes of the coconut. 2. பருங்கண்; large eye (சா.அக.).

*[தாய் + கண்]*

**தாய்க்கம்பு** *tāy-k-kambu,* பெ. (n.) கிட்டி யடிக்கும் கோல்; larger stick in the game of tipcat (W.).

*[தாய் + கம்பு]*

**தாய்க்கரும்பு** *tāy-k-karumbu,* பெ. (n.) விதையாக நட்ட முதற்கரும்பு (வின்.); parent sugar-cane stem.

*[தாய் + கரும்பு]*

**தாய்க்கறையான்** *tāy-k-kaṟaiyāṉ,* பெ. (n.) ஒவ்வொரு கூடுகளிலுங் காணப்படுவதும், மற்றக் கறையான்களை உண்டுபண்ணுவது மாகிய பெண் கறையான்; queen ant, found in every nest of termites regarded as procreative of the whole (செ.அக.).

*[தாய் + கறையான்]*

**தாய்க்காணி** *tāy-k-kāṇi,* பெ. (n.) முதல் நிலை நிலம்; land of the best quality (செ.அக.).

மறுவ. முதல்தர செய்

*[தாய் + காணி]*

**தாய்க்கால்**[1] *tāy-k-kāl,* பெ. (n.) கட்டடத்தின் பக்கம் சார்ந்த முதன்மையான சுவர்; main wale of a building.

*[தாய் + கால்]*

**தாய்க்கால்**[2] *tāy-k-kāl,* பெ. (n.) தாய்வழி பார்க்க; see *tāy-vaḻi* (செ.அக.).

*[தாய் + கால்]*

**தாய்க்கால்வழி** *tāy-k-kālvaḻi,* பெ. (n.) தாய் வழி உறவுமுறைத் தொடர்பு; maternal side or line (W.). அந்தப் பெண் தாய்க்கால் வழியில் வந்தவளாயிற்றே (உ.வ.).

*[தாய் + கால்வழி]*

**தாய்க்கிராமம்** *tāy-k-kirāmam,* பெ. (n.) பல சிற்றூர்களுள், முதன்மையான ஊர்; principal village in a group of hamlets (W.).

மறுவ. தலைக்கிராமம்

*[தாய் + கிராமம். குழுமமாகவுள்ள சிற்றூர்களுள், கல்வி, மருத்துவம், தூய்மை, தொழில் முதலான அனைத்து நிலைகளிலும் ஏனைய ஊர்கட்கு எடுத்துக் காட்டாகத் திகழும் முதனிலை ஊர்]*

**தாய்க்கிழங்கு** *tāy-k-kiḻaṅgu,* பெ. (n.) முதற்கிழங்கு; the principal tuber (செ.அக.).

மறுவ. மூலக்கிழங்கு, அடிக்கிழங்கு, விதைக்கிழங்கு

*[தாய் + கிழங்கு]*

**தாய்க்கிழவி** *tāy-k-kiḻavi,* பெ. (n.) விலைமகளின் தாய்; mother or foster-mother of a dancing-girl.

ம. தாய்க்கிழவி

*[தாய் + கிழவி]*

**தாய்க்கீழ்ப்பிள்ளை** *tāy-k-kīḻ-p-piḷḷai,* பெ. (n.) எட்டிக்கன்று (சங்.அக.); young plant of nux vomica tree.

*[தாய் + கீழ் + பிள்ளை]*

**தாய்க்குலம்** *tāy-k-kulam,* பெ. (n.) பெண் இனத்தவர்; women as a community.

**தாய்க்குலமருந்து** *tāy-k-kula-marundu,* பெ. (n.) எல்லா நோயையும் போக்கும் அரிய மூலிகை; a rare herbal medicine to cure all diseases (சா.அக.).

**தாய்க்கொல்சலம்** *tāy-k-kol-šalam*, பெ. (n.) வாழையடி நீர்; the juice of plantain corm (சா.அக.).

*[தாய் + கொல் + சலம்]*

**தாய்க்கொல்லி** *tāy-k-kolli*, பெ. (n.) தாயைக்கொல்லி பார்க்க; see *tāyai-k-kolli* (சா. அக.).

*[தாய் + கொல்லி]*

**தாய்க்கொல்லிக்கிழங்கு** *tāy-k-kolli-k-kilangu*, பெ. (n.) வாழைக்கிழங்கு; plantain corm (சா.அக.).

*[தாய் + கொல்லி + கிழங்கு.]*

**தாய்ச்சங்கம்** *tāy-c-cangam*, பெ. (n.) முதலவை, மூலஅவை; parent society dist. fr. kilai-c-cangam (செ.அக.).

*[தாய் + சங்கம்]*

**தாய்ச்சரக்கு** *tāy-c-carakku*, பெ. (n.) *1.* நீற்று செய்யவேண்டி, பயன்படுத்தும் பொருள்; drug used for preparing calcined medicine. *2.* மாற்று மருந்து; alternative medicine (சா.அக.).

*[தாய் + சரக்கு]*

**தாய்ச்சி** *tāycci*, பெ. (n.) *1.* தாய்ப்பால் கொடுப்பவள்; wet-nurse. *2.* மூலம்; origin, moving spirit. "இந்த வழக்குக்குத் தாய்ச்சி இவன் தான்". *3.* சூலி; pregnant woman (J). *4.* விளையாட்டில் தலைமையாள்; leader of a party in a game. *5.* விளையாட்டில் தொட வேண்டுமிடம்; appointed place to be touched in a game.

மறுவ. பிள்ளைத்தாய்ச்சி

*[தாய் → தாய்ச்சி]*

**தாய்ச்சித்தம்பலம்** *tāy-c-cittambalam*, பெ. (n.) குழந்தைகளாடும் ஒரு வகை விளையாட்டு; child's game of finding out a small stick hidden in a ridge of sand, child's play in which the calyx leaves of the banana are split and the string, like pieces are pulled against one another, when a sound is produced delightful to children (செ.அக.).

*[தாய் + சித்தம்பலம்]*

**தாய்ச்சின்னம்** *tāy-c-cinnam*, பெ. (n.) தாயின் அடையாளம்; mother's mark (சா.அக.).

*[தாய் + சின்னம்]*

**தாய்ச்சீட்டு** *tāy-c-cīttu*, பெ. (n.) மூல ஆவணம் (யாழ்அக.); original document.

*[தாய் + சீட்டு]*

**தாய்ச்சீலை** *tāy-c-cīlai*, பெ. (n.) கோவணம் (இ.வ.); forelap, covering for the privities. தாய்ச்சீலைக்குச் சாண்துணியில்லை, தலைக்கு மேலே சரிகைமேற்கட்டு (பழ.).

*[தாய் + சீலை]*

**தாய்ச்சுவர்** *tāy-c-cuvar*, பெ. (n.) தொடர்ந்து கட்டப்பட்ட வீடுகளில் ஒரு வீட்டின் எல்லையாயமைந்து அதற்கேயுரிய முதன்மைச்சுவர்; main wall of a house (செ.அக.).

*[தாய் + சுவர்]*

**தாய்ச்சோட்டை** *tāy-c-cōttai*, பெ. (n.) தாய் மீது குழந்தைக் கொள்ளும் அவா; longing of a child for its mother (செ.அக.).

*[தாய் + சோட்டை]*

**தாய்சேய்நலவிடுதி** *tāy-sēy-nala-vidudi*, பெ. (n.) கருஉயிர்ப்பு பார்க்க, ஏற்படுத்திய தாய்சேய் நல மருத்துவமனை; maternity and child care hospital.

*[தாய் + சேய் + நலவிடுதி]*

**தாய்சேர்த்தல்** *tāy-cērttal*, பெ. (n.) தங்கம் கட்டுதல்; adding gold (சா.அக.).

*[தாய் + சேர்த்தல். அணிகலனைப் பாதுகாக்கத் தங்கம் சேர்த்தல் போன்று, அனைத்து நிலைகளிலும், அனைவரையும், காப்பவள் தாய்]*

**தாய்தந்தை** *tāy-tandai*, பெ. (n.) பெற்றோர்; parents (செ.அக.).

க. தாய்தந்தெகள், தாயிதந்தை

*[தாய் + தந்தை]*

**தாய்தலைத்தென்றல்** *tāy-talai-t-tenral*, பெ. (n.) நேராக அடிக்கும் முதற்தென்றல்; first

southerly wind blowing straight from its source. "பலவிடங்களிலே காலிட்டு வாராதே தாய்தலைத் தென்றாலா யிருக்கை" (ஈடு. 5:9:5) (செ.அக.).

*[தாய் + தலை + தென்றல்]*

**தாய்நாடு** *tāy-nāḍu*, பெ. (n.) பிறந்தநாடு; mother country, native land.

*[தாய் + நாடு]*

**தாய்ப்பத்திரம்** *tāy-p-pattiram*, பெ. (n.) நிலம், சொத்து, கட்டடம் முதலியவற்றின் உரிமை குறித்து முதன் முதலாக எழுதப்படும் ஆவணம்; first title deed.

*[தாய் + பத்திரம்]*

**தாய்ப்பாட்டன்** *tāy-p-pāṭṭaṉ*, பெ. (n.) தாயைப்பெற்ற தகப்பன்; maternal grand father (செ.அக.).

*[தாய் + பாட்டன்]*

**தாய்ப்பாத்தி** *tāy-p-pātti*, பெ. (n.) முதன்மையான (முக்கியமான) உப்புப் பாத்தி; chief or principal bed in a salt-pan C.G.

மறுவ. தலைப்பாத்தி, முதற்பாத்தி

*[தாய் + பாத்தி. உப்பு நீரினைப் பாய்ச்சி வடிகட்டுங்கால் கசடகற்றி, முதன்மையான உப்பினைத் தேக்கும் முதற்பாத்தி]*

**தாய்ப்பால்** *tāy-p-pāl*, பெ. (n.) குழந்தைக்குத் தாயினிடமிருந்து கிடைக்கும் முலைப்பால்; milk getting from mothers breast to a child (செ.அக.).

குழந்தைகட்குத் தாய்ப்பால் தருவது, அதன் வளர்ச்சிக்கும், நோய்எதிர்ப்புத்தன்மை பெறுவதற்கும் மிகவும் இன்றியமையாதது (உ.வ.).

*[தாய் + பால்]*

**தாய்ப்பாலூட்டல்** *tāy-p-pālūṭṭal*, பெ. (n.) தாய்முலையின் பாலைக் குழந்தைக்கு ஊட்டல்; maternal nursing (சா.அக.).

*[தாய் + பால் + ஊட்டல்]*



**தாய்ப்பானை** *tāy-p-pāṉai*, பெ. (n.) நல்ல நாளில் முதற்கதிர்களை எடுத்துவைத்தற்குரிய பெரியபானை; a big pot used for preserving the first sheaves on an auspicious day..

*[தாய் + பானை]*

**தாய்ப்பிள்ளை** *tāy-piḷḷai*, பெ. (n.) உறவின—ன்—ள் (நெல்லை.); relative.

**தாய்பெற்றமேனி** *tāy-peṟṟa-mēṉi*, பெ. (n.) அம்மணம் (நிருவாணம்); nakedness (சா.அக.).

*[தாய் + பெற்ற + மேனி]*

**தாய்மனை** *tāy-maṉai*, பெ. (n.) தாய்க்கட்டு மனை பார்க்க; see *tāy-k-kaṭṭu-maṉai* தாய் மனைக்கு வந்தது பிள்ளைக்கும் (பழ.).

*[தாய் + மனை]*

**தாய்மாமன்** *tāy-māmaṉ*, பெ. (n.) தாயுடன் பிறந்தவன்; maternal uncle (செ.அக.).

*[தாய் + மாமன்]*

**தாய்மாமன்மகன்** *tāy-māmaṉ-magaṉ*, பெ. (n.) தாயுடன் பிறந்தவனின் ஆண்குழந்தை; male child born to a mother's brother (செ.அக.).

*[தாய் + மாமன் + மகன்]*

**தாய்மாமன்மகள்** *tāy-māmaṉ-magaḷ*, பெ. (n.) தாயுடன் பிறந்தவனின் மகள்; female child of a mother's brother (சா.அக.).

*[தாய் + மாமன் + மகள்]*

**தாய்முதல்** *tāy-mudal*, பெ. (n.) மூலநிதி; original capital (செ.அக.).

மறுவ. தலைமுதல், தலைநிதி

ம. தாய்முதல்

*[தாய் + முதல். அருகுபோல் தழைத்து ஆல்போல் வேரூன்றி, பல்கிப்பெருகி வளவாழ்வு வாழ்வதற்கு மூலமாயுள்ள, முதல்நிதி.]*

**தாய்மை** *tāymai*, பெ. (n.) தாயாந்தன்மை; mother hood, motherliness. "தாய்மையுந் தவமும் வாய்மையு நோக்கி" *(பெருங். உஞ்சைக். 46, 120).*

*[தாய் + மை]*

**தாய்மொழி** *tāy-moḻi*, பெ. (n.) பிறந்ததி லிருந்து பேசும்மொழி; mother tongue. "அவர் தமிழ்நாட்டில் வாழினும் தாய்மொழியாக மலையாளத்தைக் கொண்டவர்."

*[தாய் + மொழி]*

**தாய்வழி** *tāy-vaḻi*, பெ. (n.) உறவுமுறையில் தாயின் தொடர்பு; maternal side or line *(செ.அக.).*

ம. தாய்வழி; க. தாவழி

*[தாய் + வழி]*

**தாய்வாய்க்கால்** *tāy-vāy-k-kāl*, பெ. (n.) கிளைக்கால்கள் பிரியும் தலைவாய்க்கால்; chief channel from which branch channels emerge W.G. *(செ.அக.).*

மறுவ. முதல்வாய்க்கால், தலைவாய்க்கால்

*[தாய் + வாய்க்கால்]*

**தாய்வாழை** *tāy-vāḻai*, பெ. (n.) தார் விட்ட வாழை; original plantain tree which has born fruit *(சா. அக.).*

*[தாய் + வாழை. முதற்கண் குலையீனும் வாழையில், பல கன்றுகள் கிளைப்பது போல், அனைத்து மாந்தஉறவுகள் கிளைப்பதற்கும், செழித்து நிலைப் பதற்கும், மூலமரமாயிருப்பவள் தாய்]*



**தாய்வேர்** *tāy-vēr*, பெ. (n.) ஆணிவேர்; main root, taproot (E.G.).

ம. தாய்வேரு; க. தாய்பேரு

*[தாய் + வேர்]*

**தாயக்கட்டம்** *tāya-k-kaṭṭam*, பெ. (n.) தாய விளையாட்டு ஆடுதற்குப் பயன்படும் சதுரக் கட்டம்; squares for playing dice *(செ.அக.).*

*[தாயம் + கட்டம்]*

**தாயக்கட்டை** *tāya-k-kaṭṭai*, பெ. (n.) சூதாட்டத்தில் உருட்டுங் கவறு *(யாழ்ப்.)*; dice.

*[தாயம் + கட்டை]*

**தாயகம்** *tāyagam*, பெ. (n.) 1. அடைக்கலம்; support, shelter, place of refuge. "இதுவன்றித் தாயகம் வேறில்லை யில்லை" *(தாயு. ஆகார. 11).* 2. பிறந்தகம்; birth place.

*[தாய் + அகம்]*

**தாயங்கூறு-தல்** *tāyaṅ-kūṟu-*, 5 செகுவி. (v.i.) சூதாட்ட வட்டங் கூறுதல்; to call out the required number in throwing dice. *(சீவக. 927: உரை).*

*[தாயம் + கூறு-.]*

**தாயசத்து** *tāya-śattu*, பெ. (n.) காச்சுமீரிலுள்ள ஒரு வகை மரம் (பித்த ரோகிணி); small Kashmiri tree.

**தாயத்தவர்** *tāya-tt-avar*, பெ. (n.) பங்காளிகள்; agnates. "தாயத்தவருந் தமதாயி போழ்தே கொடாஅர்" *(நாலடி, 278).*

*[தாயம் + அத்து + அவர்]*

**தாயத்து** tāyattu, பெ. (n.) மறைமொழித் தகடு; amulet, talisman *(செ.அக.).*

**தாயத்துகட்டல்** *tāyattu-kaṭṭal*, பெ. (n.) மறை மொழித் தகடு கட்டுதல்; tying an amulet with a thread on the neck or the arm *(சா.அக.).*

*[தாயத்து + கட்டல்]*



**தாயதருமம்** *tāya-tarumam,* பெ. (n.) தாய பாகம் கூறும்நூல்; law of inheritance, rule of partition (R.F.).

*[தாயம் + தருமம்]*

**தாயப்பதி** *tāya-p-pati,* பெ. (n.) தனக்கு உரிமையாகக் கிடைத்துள்ள வாழிடம் அல்லது ஊர்; city or town got by inheritance. "தாயப்பதிகள் தலைச்சிறந் தெங்கெங்கும்" (திவ். திருவாய். 8: 6: 9).

*[தாயம் + பதி]*

**தாயபனுவல்** *tāya-paṉuval,* பெ. (n.) இடையிடையே, இலக்கணங்கள் கலந்து வரும் இலக்கிய வகை; a poem intermixed with definitions. "சின்மென்மொழியாற் றாய பனுவலோடு" (தொல். பொருள். 547).

*[தாவு + பனுவல் → தாவு பனுவல் → தாய பனுவல்]*

**தாயபாகம்** *tāya-pāgam,* பெ. (n.) 1. அரத்த உறவினர் தம்முள் பிரித்துக்கொள்ளும் உரிமைப் பங்கு; division of an estate among heirs. 2. சீமூதவாகனர் இயற்றிய பாகப் பிரிவினைப் பற்றிய நூல்; a treatise on the Hindu law of inheritance by jīmudavāgaṉar. 3. பன்னிரண்டாம் நூற்றாண்டில் விஞ்ஞானேசுவரர் இயற்றிய மிதாஷரத்தில் தாயவுரிமையைப் பற்றிக் கூறும் பகுதி; chapter on the law of inheritance in the Mitākṣara off Vijñāṉēśvarar (12th C.R.F.).

*[தாயம் + பாகம்]*

**தாயம்** *tāyam,* பெ. (n.) 1. பிரிவினைக்குரிய தந்தைவழிப் பொருள்; patrimony, inheritance, wealth of an ancestor capable of inheritance and partition (R.F.). 2. தந்தைவழிச் சுற்றம்; paternal relationship (யாழ்.அக.). 3. கவறு cubical pieces in dice-play (யாழ்.அக.). 4. கவறுருட்ட விழும் வட்டம்; a fall of the dice. "முற்பட இடுகின்ற தாயம்" (கலித். 136, உரை.). 5. பங்கு; share (யாழ்.அக.). 6. கவறுருட்ட விழும் ஒன்று என்னும் எண்; number one in the game of dice. 7. கொடை; gift, donation (யாழ்.அக.). 8. நல்வாய்ப்பு; good opportunity. 9. துன்பம்; affliction, distress (யாழ்.அக.). 10. தாக்காட்டு (வின்.); delay, stop. 11. குழந்தை விளையாட்டு வகை; a child's game played with seeds or shells on the ground. 12. மேன்மை; excellence, superiority. "தாயமாம்பதுமினிக்கு" (கொக்கோ. 1, 28).

*[தரு → தார் → தா → தாய் + அம். தாயம் = உரிமை. தாயின் புகுந்த குடி, அறுகு போல் பல்லாற்றானும் கிளைத்து, ஆல் போல் தழைத்து, வேரூன்றுதற்பொருட்டுப் பெற்றுத்தரும் பிள்ளை; அப் பிள்ளை பெறும் உரிமை. அவ் வுரிமையினால் கிடைக்குந் தந்தைவழிப் பொருள் எனப் பல்வேறு நிலைகளில் தாயம் என்னும் சொல் வழங்குவதறிக]*

ம. தாயம்

**தாயமாட்டு** *tāyam-āṭṭu,* பெ. (n.) காலத்தாழ்வு; tardiness (நெல்லை.).

*[தாயமாடு → தாயமாட்டு]*

**தாயமாடு-தல்** *tāy-māḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கவறாடுதல்; to play dice. 2. கட்ட மாடுதல்; to play the child's game of tāyam. 3. காலந் தாழ்த்துதல்; to be tardy (நெல்லை.).

ம. தாயாடுக

*[தாயம் + ஆடு-.]*

**தாயவலந்தீர்த்தான்** *tāy-avalantīrttāṉ,* பெ. (n.) பருந்து; kite.

*[தாய் + Skt. அவலம் + தீர்த்தான்.]*

**தாயவிதைப்பு** *tāya-vidaippu,* பெ. (n.) உரிய காலத்தில் விதைக்கை; seasonable sowing (J.).

*[தாயம் + விதைப்பு]*

**தாயனார்** *tāyaṉār,* பெ. (n.) அரிவாட்டாய நாயனார் (பெரியபு. அரிவாட். 5); a canonized Šaiva saint.

**தாயாதி** *tāyādi,* பெ. (n.) ஒரேகொடிவழியில் பிறந்த உரிமைப்பங்காளி; agnate (செ.அக.).

*[தாய(ம்) + ஆதி]*

**தாயாதித்தனம்** *tāyādi-t-taṉam,* பெ. (n.) 1. பங்காளிகள் தம்முள் காட்டுவது போன்ற ஏமாற்றுச்செயல்; deception, fraud, as practised among relations in regard to heriditary property. 2. பொறாமை; jealousy. (loc.).

*[தாயாதி + தனம்]*

**தாயாதிப்பட்டம்** *tāyādi-p-paṭṭam,* பெ. (n.) *மகன் முறையில் வாராமல், பரம்பரையில் மூத்தோர் முறையே அடையும் உரிமைப் (ஜமீன்) பட்டம்;* rule of succession in a zamin by which the senior member succeeds in preference to the sons of the last male holder (R.F.).

*[தாயாதி + பட்டம்]*

**தாயார்** *tāyār,* பெ. (n.) *1. அன்னை;* mother. "பயந்த தாயாரு மிறந்ததற்பின்" *(பெரியபு. திருநாவுக். 29).* *2. திருமகள்;* Lakṣmi, as mother. "தாயார் சந்நதி" *(மாலியம்.).*

ம. தாயார்

*[தாய் + ஆர்]*

**தாயான்** *tāyān,* பெ. (n.) *ஒன்பது என்னும் குழூஉக்குறி;* nine, a slang term *(யாழ்.அக.).*

*[தாய் + ஆன்]*

**தாயான்புலு** *tāyān-pulu,* பெ. (n.) *தொண்ணூறு என்னும் குழூஉக் குறி;* ninety, a slang term *(செ.அக.).*

*[தாயான் + புலு]*

**தாயி**[1] *tāyi,* பெ. (n.) *தாய்ச்சி;* wet-nurse (Loc).

*[தாய் + இ-]*

**தாயி**[2] *tāyi,* பெ. (n.) *வழக்காளி;* claimant, plaintiff (Loc) *(செ.அக.).*

**தாயித்திரம்** *tāyittiram,* பெ. (n.) *எள்;* gingelly seed - Sesamum indicum *(சா.அக.).*

**தாயுமானவர்** *tāyumānavar,* பெ. (n.) *1. திருச்சிராப்பள்ளிச் சிவபெருமான்;* Šivan, as worshipped in the temple at Tiruccirāppaḷḷi. *2. தாயுமானவர் பாடல் என வழங்கும் நூற்றொகுதியை இயற்றியவரும், 18-ஆம் நூற்றாண்டிலிருந்தவருமான, ஒரு சைவப் பெரியார்;* Šaiva devotee and poet author of Tāyumānavar-pāḍal 18th c.

*[தாய் + உம் + ஆனவர்]*

**தாயுமானார்** *tāyumānār,* பெ. (n.) *தாயுமானவர் பார்க்க;* see *tāyumānavar* *(செ.அக.).*

*[தாயும் + ஆனார்]*

**தாயேடு** *tāyēḍu,* பெ. (n.) *மூலஏடு;* original ōla book *(செ.அக.).*

மறுவ. தலையேடு, முதலேடு

*[தாய் + ஏடு]*

**தாயைக்கொல்லி**[1] *tāyai-k-kolli,* பெ. (n.) *1. பெருந்தீயன்;* villain wretch, as his mother's murderer. "தன் தாயைக் கொலை செய்தவன்" *2. ஈன்றதும் நசித்துப்போகிற வாழை முதலியன;* plantain or other tree that perishes after yielding (W.). *3. மரம்செடிகளில் ஒட்டி வளரும் பூடுவகை;* mistletoe.

*[தாய் + ஐ + கொல்லி]*

**தாயைக்கொல்லி**[2] *tāyai-k-kolli,* பெ. (n.) *1. புல்லுருவி;* a parasitic plant. *2. தேள் கொடுக்கியிலை;* scorpion sting leaf-heliotropium indicum. *3. வாழை;* plantain tree. *4. கோடைக் கிழங்கு;* a kind of root dugout in summer. *5. சிற்றரத்தை;* lesser galangal.

*[தாயை + கொல்லி]*

**தாயைக்கொன்றான்** *tāyai-k-konrān,* பெ. (n.) *தாயைக்கொல்லி*[2] *பார்க்க;* see *tāyai-k-kolli*[2] *(மலை.).*

*[தாய் + ஐ + கொன்றான்]*

**தாயைக்கொன்றான்சாறு** *tāyai-k-konrān-šāru,* பெ. (n.) *வாழைச்சாறு;* the juice of plantain corn or stem *(சா.அக.).*

*[தாயைக்கொன்றான் + சாறு]*

**தாயோலை** *tāyōlai,* பெ. (n.) *1. மூலஆவணம்;* original ōlai document (Loc.). *2. தாயேடு பார்க்க;* see *tāyēḍu* (J.).

மறுவ. முதலோலை, தலையோலை

*[தாய் + ஓலை]*

**தார்**[1] *tār,* பெ. (n.) *1. மாலை;* garland, wreath, chaplet *(பிங்.).* *2. பூ;* flower, blossom *(பிங்.).* *3. பூவரும்பு;* flower-bud. "கடை திறக்குந்தார் கண்ட வண்டும்" *(வெங்கைக்கோ. 65).* *4. பூங்கொத்து;* cluster of flowers. "தாரார் கரந்தை மலைந்து" *(பு.வெ. 2,1).* *5. கிண்கிணி மாலை;* string of bells for a horse. 'பாய்மா வரும் பொற்றா ரரவத்தாலே' *(சீவக. 1819).*

6. சங்கிலி; chain (சங்.அக.). 7. கிளியின் கழுத்து வரை; neck-stripes of parrots. 'செந்தார்ப் பசுங்கிளியார் (சீவக. 1036). 8. கொடிப்படை; van of an army. "தாரொடு பொலிந்த ... மூத்த புரிசை (மலைபடு. 227). 9. படை; troops (சூடா.) "தாரொடுங்கல் செல்லா" (கம்பரா. மந்தரை. 13). 10. ஒழுங்கு; orderliness. "தாரருந் தகைப்பின்" (பதிற்றுப். 64: 7). 11. கயிறு; cord. "அருளெனு நலத்தார் பூட்டி" (பதினொ. பட்டணத். கோயினா. 16). 13. பிடர்மயிர்; mane. "தாரணியெருத்தின் அரிமான்" (பதிற்றுப். 12,4). 14. தோற்கருவி வகை; a kind of drum. "பம்மைதார் முரசம்" (கம்பரா. பிரமாத். 5). 15. ஏரி உள் வாயிலுள்ள புன்செய்; land inside a tank, used for dry cultivation. எனக்கு அந்த தாரைக் காட்டினான். (உ.வ.). 16. சூழ்ச்சி; trick, tactical move. "ஒரு கால் வருதார் தாங்கி" (புறநா. 80).

ம. தாரு

*[தள் → தரு → தார். தருதற்கருத்து வேர். தள் என்னும் வினை தருதற்பொருளில் 'தரு' எனத் திரிந்து பின்பு, எதிர்மறையில் "தள்" எனத் திரிந்தது. 'யகரமெய்யீறாகத் திரியாத ளகரமெய்யீற்று, இயற்சொற்கள் எல்லாம் பொதுவாக 'ரு'கர வீற்றுச் சொற்களாகத் திரிகின்றன. (எ-டு.) கள் → கரு → கார் (கருமை). கள் → கரு → கண் என்னுந் திரிபு போன்றதே, தள் → தரு → தார் என்பதும். ஒ.நோ. வள் → வரு → வார். முழுத்திரிபு நிலையிலும்; தருதல் வினையை ஒத்துள்ளது கண்டுகொள்க.]*

**தார்²** *tār*, பெ. (n.) உடைமையைக் குறிக்கும் ஒரு சொல்; a termination indicating owner. "வாரிசு தார்".

**தார்³** *tār*, பெ. (n.) கீலெண்ணெய்; liquid or wood tar (Loc.).

**தார்⁴** *tār*, பெ. (n.) 1. வீடு; house. 2. கற்பூரத் தைலம்; turpentine. 3. தாளிப்பனை; talipot (சா.அக.).

**தார்⁵** *tār*, பெ. (n.) ஒரு வகை மரத்தை எரித்துக் கரியுண்டாக்கிப் பிறகு, அந்நிலக்கரியினின்று குழித்தைல முறையாக வடிக்கும் ஒரு நீர்மம்; tar pix liquid (சா.அக.).

*[தா → தரு → தார்]*

பனை, சவுக்கு, தாழை முதலான மரங்களை எரித்துக் கரியாக்கி, அந் நிலக்கரியினின்று வடிக்கப்படும் நீர்மம்; இது கறுப்பாயும், பளபளப்பாயும், மணமுள்ளதாகவும், இருக்குந்தன்மைத்து. நெருப்பிலிட உருகும். தாரினைக் காய்ச்சி ஆவி பிடிப்பதினால் குளிர், இருமல், சளி முதலானவை அகலும். தாரில் எடுக்கப்படும் களிம்பினால், சொறிசிரங்கு, தொழுநோய், அரிப்பு முதலானவை தீரும். தாரினின்று எடுக்கப்படும் நீர்மம், காய்கறி நீர்மம், மாழைநீர்மம் என இருவகைப்படும். கருப்பூரத் தைலத்துடன் வாதுமை எண்ணெய், தார்நீர்மங் கலந்து தோல் நோய்க்குத் தடவுவர். இது மரங்களில் மீது பூசிப் பாதுகாக்கவும் பயன்படுமென்று சா.அக. கூறும்.

**தார்எண்ணெய்** *tār-eṇṇey*, பெ. (n.) இது நிலக்கரியைத் தூய்மை (சுத்திகரிப்பு) செய்யும் முறையில் உண்டாகும் எண்ணெய் (கட்டட); oil extracted from coal.

*[தார் + எண்ணெய்]*

**தார்க்கணி-த்தல்** *tār-k-kaṇi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. சான்றுடன் காட்டல்; to demonstrate prove by evidence (W.). 2. தடுத்துச் சொல்லுதல்; to interrupt, object. 3. தார்க்காட்டு-தல் பார்க்க; see *tār-k-kāṭṭu-*. (இ.வ.).

*[தார் + கணி-.]*

**தார்க்கப்பரை** *tār-k-kapparai*, பெ. (n.) நெசவுக்கருவியில் தார்க்குச்சுகள் அணியமாக்கி வைத்திருக்கும் செப்புச்சட்டி; copper pot in which bobbins are kept ready for use. (இ.வ.).

*[தார் + கப்பரை]*

**தார்க்கம்பு** *tār-k-kambu*, பெ. (n.) தார்க்குச்சு² பார்க்க; see *tār-k-kuccu²* (Tinn) (செ.அக.).

*[தார் + கம்பு]*

**தார்க்களிம்பு** *tār-k-kaḷimbu*, பெ. (n.) உடம்பின் மேல்பூசும் கீலினாலான மருந்து; ointment of tar (C.E.M.).

*[தார் + களிம்பு]*

**தார்க்காட்டு-தல்** *tār-k-kāṭṭu-*, வி. (v.) 1. போக்குக் காட்டுதல் (சென்னை.); to give excuses, evade

by diverting attention or by misleading. 2. தவிர்க்கப்படுதல்; to postpone, delay (இவ.).

[தார் + காட்டு-.]

**தார்க்காணி-த்தல்** *tār-k-kāṇi-*, 4 செ. குன்றாவி. (v.t.) தார்க்கணி-த்தல் பார்க்க; see *tār-k-kaṇi-*. (இவ.).

[தார் + காணி-.]

**தார்க்கிகன்** *tār-k-kigaṉ*, பெ. (n.) அளவை நூல்வல்லோன்; logician, sophist (செ.அக.).

[தார் + இகன்]

**தார்க்கியன்** *tārkkiyaṉ*, பெ. (n.) கருடன்; the sacred kite. "கத்துருவினைத் தெரிபு தார்க்கியன் கனன்றே" (சேதுபு. கத்துரு. 86).

[தார் + இயன்]

**தார்க்குச்சு[1]** *tār-k-kuccu*, பெ. (n.) நெய்வதற்கு உண்டைநூல் சுற்றிய சிறு நாணல் கொறுக்கை முதலியவற்றின் குற்றி; bobbin (செ.அக.).

[தார் + குச்சு]



**தார்க்குச்சு[2]** *tār-k-kuccu*, பெ. (n.) நுனியில் இருப்புமுள் பதிக்கப்பட்ட மாடோட்டுங் கழி; goad (செ.அக.).

[தார் + குச்சு]

**தார்க்குழல்** *tār-k-kuḻal*, பெ. (n.) தார்க்குச்சு பார்க்க; see *tār-k-kuccu* (இவ.).

[தார் + குழல்]

**தார்க்கெண்டை** *tār-k-keṇḍai*, பெ. (n.) தார்க்குச்சு[1] பார்க்க; see *tār-k-kuccu*[1] (செ. அக.).

[தார் + கெண்டை]

**தார்குடிகள்** *tār-kuḍigaḷ*, பெ. (n.) அடிப்படைக் குடிகள்; substantial tenants.

[தார் + குடிகள்]

**தார்சடாந்திகம்** *tārśaḍāndigam*, பெ. (n.) தாட்டாந்திகம் பார்க்க; see *tāṭṭāndigam*. "திருஷ்டாந்தித்திற் சொன்னதைத் தாஷ்டாந்திகத் திலேயும் காட்டுகிறாள் (ஈடு, 6. 1:1:அரும்.) (செ.அக.).

**தார்சிங்கு** *tārśiṅgu*, பெ. (n.) மிருதாரசிங்கு; impure oxide of lead-litherage (சா. அக.).

**தார்சீனி** *tārśīṉi*, பெ. (n.) கிராம்புப்பட்டை; ceylon cinnamum (சா. அக.).

[தார் + சீனி]

**தார்ட்டியம்** *tārṭṭiyam*, பெ. (n.) வலிமை; strength. உறுதிப்பாடு; firmness "காய தார்ட்டியமும்" (கோயிலொ 29).

[தரு → தார் → தார்ட்டியம்.]

**தார்த்தயிலம்** *tār-t-tayilam*, பெ. (n.) 1. தாரினின்று வடிக்கும் தைலம்; ointment of tartar. 2. தார் எண்ணெய்; oil of tar - Creosote.

[தார் + தயிலம். இயற்கையாக விளையும் மரக்கரியினின்று, வடிக்குந் தயிலம்.]

**தார்தாராய்** *tārtārāy*, பெ. (n.) துண்டு, துண்டாக; in pieces, in shreds (இவ.) (செ.அக.).

[தார் + தார் + ஆய்]

**தார்நிலை** *tār-nilai*, பெ. (n.) 1. பகைவரால் சூழப்பட்ட தம்வேந்தை, பகைவரிடமிருந்துக் காப்பாற்ற, படைத்தலைவர் முதலியோர் வேற்றிடத்தில் போரிடுதலைக் குறிக்கும் புறத்துறை; theme describing the attach of captains and commanders in rescuing their king when he is surrounded by enemies. "வேன்மிகு வேந்தனை மொய்த்தவழி யொருவன் தான் மீண்டெறிந்த தார்நிலை" (தொல்.பொருள். 72). 2. அரசனிடம் வீரன் ஒருவன், பகைவரது தூசிப்படையைத் தான் ஒருவனே அழிப்பேன் எனத் தன் தறுகண்மை கூறும், புறத்துறை; theme describing the boast of a warrior to his king about his ability to destroy the enemy's front. (பு.வெ. 7:8).

[தார் + நிலை]

**தார்நூல்** *tār-nūl*, பெ. (n.) உண்டை நெய்வதற்குச் செம்மை செய்யப்பட்ட நூல்; cotton thread prepared for bobbins (Loc.).

[தார் + நூல்]

**தார்ப்பாய்ச்சல்** *tār-p-pāyccal,* பெ. (n.) *மூலைக் கச்சம்;* a mode of wearing cloth round the loins in the fashion of the divided skirt. (Loc.).

*[தாறு → தார் + பாய்ச்சல்]*

**தார்பாய்ச்சு-தல்** *tār-p-pāyccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *மூலைக்கச்சங்கட்டுதல்;* to wear a cloth in the mode of the divided skirt.

*[தார் + பாய்ச்சு-.]*

**தார்ப்பாய்** *tār-p-pāy,* பெ. (n.) *தார்பூசப்பட்ட கோணி;* tarpalin.

*[தார் + பாய்]*

**தார்ப்பிட்டம்** *tār-p-pittam,* பெ. (n.) *மரமஞ்சள்;* tree turmeric *(சா. அக.).*

*[தார் + பிட்டம்]*

**தார்பிடம்** *tār-p-piḍam,* பெ. (n.) *மரமஞ்சள் என்னும் கொடி வகை;* tree turmeric *(சங் அக.).*

*[தார் + பிடம்]*

**தார்பீடம்** *tārpīḍam,* பெ. (n.) *தார்வடிக்கும் இடம்;* the furnace from which tar is distilled and extracted *(சா. அக.).*

*[தார் + பீடம்]*

**தார்ப்பூ** *tār-p-pū,* பெ. (n.) *அரசர்க்குரிய அடையாளப்பூ (தொல்.பொருள். 626, உரை);* the flower adopted by a king as his symbol.

*[தார் + பூ]*

**தார்மணி** *tār-maṇi,* பெ. (n.) *குதிரையின் கழுத்திலிடுங் கிண்கிணி மாலை;* collar of tinkler's for horse's neck.

*[தார் + மணி]*

**தார்மபத்தனம்** *tārma-pattaṉam,* பெ. (n.) *மிளகு;* black-pepper *(மூ.அ.).*

**தார்மரம்** *tār-maram,* பெ. (n.) *மரவகை;* scotch pine.

*[தார் + மரம்]*

**தார்மதாடம்** *tārma-dāḍam,* பெ. (n.) *தச்சன் குருவி;* wood pecker *(சா. அக.).*

*[தார் + மதாடம்]*

**தார்முகவுப்பு** *tārmuga-v-uppu,* பெ. (n.) *சவுட்டுப்பு;* a mixture of saline materials such as carbonates sulphates chlorides *(சா. அக.).*

*[தார் + முகம் + உப்பு. இதளியத்தை நீர்க்கச் செய்யும் உப்பு]*

**தார்வகம்** *tārvagam,* பெ. (n.) *தார்வம் பார்க்க;* see *tārvam (சா. அக.).*

*[தார் + அகம்]*

**தார்வம்** *tārvam,* பெ. (n.) *காட்டு மஞ்சளினின்று அணியமாக்கப்பெறும் ஒரு வகை அஞ்சனம்;* a collyrium prepared from wild turmeric.

*[தார் + அம்]*

**தார்வாதாடம்** *tār-vādāḍam,* பெ. (n.) *தார்மதாடம் பார்க்க;* see *tārma-dāḍam (சா. அக.).*

**தார்விகம்** *tārvigam,* பெ. (n.) *குட்டிப்பிலா;* demon tree *(சா. அக.).*

**தார்விதவிருத்தி** *tār-vidavirutti,* பெ. (n.) *மர மஞ்சளைச் சதுரக்கள்ளி, எருக்கம்பாலில் அரைத்துத் துணியில் தடவி மிகச்செய்து, மூலத்திற்கு இடும் மருந்து;* medicine for piles *(சா. அக.).*

**தாரக்கம்** *tārakkam,* பெ. (n.) *தாரகம்*[2] பார்க்க; see *tāragam*[2] *(செ. அக.).*

**தாரகசித்து** *tāraga-šittu,* பெ. (n.) *குமாரக் கடவுள்;* Lord Murugaṉ.

*[தாரகம் + சித்து. அருள் தரும் முருகன்.]*

**தாரகத்தண்ணீர்** *tāraga-t-taṇṇīr,* பெ. (n.) *இறப்பு நிகழும் நிலையில் கொடுக்கும் சிறப்பு நீர்;* water given at the movement of death *(சா. அக.).*

*[தாரகம் + தண்ணீர்]*

**தாரகதம்** *tāragadam,* பெ. (n.) *நீர்க்கடம்பு;* water codambam - Stephegyne parviflora alias Nanchlea purpurea *(சா.அக.).*

**தாரகத்தான்** *tāragattāṉ,* பெ. (n.) *பன்றிக் கொம்பு;* hog's horn *(சா.அக.).*

**தாரகத்திகரம்** *tāraga-t-tigaram,* பெ. (n.) *ஈயம்;* tin or white lead *(சா.அக.).*

**தாரகதம்பம்** *tāra-gadambam,* பெ. (n.) *கடம்பம்;* codambam tree *(சா.அக.).*

**தாரகநீர்** *tāraga-nīr,* பெ. (n.) *1. மாழைநீர்;* basic water. *2. கண்ணீர்;* tears *(சா.அக.).*

*[தாரகம் + நீர்]*

**தாரகபத்தியம்** *tāraga-pattiyam,* பெ. (n.) சோற்றினை மறுவுலைப் பாய்ச்சிக் கஞ்சியாக நோயாளிகட்குக் கொடுத்தல்; liquid form of rice divided by boiling rice twice.

மறுவ. புனற்பாகம்

*[தாரகம் + பத்தியம்]*

**தாரகப்பிரமம்** *tāraga-p-piramam,* பெ. (n.) அனைத்திற்கும் மேலான ஓங்கார வடிவம்; the mystic syllable Ōm, as symbolic of the Supreme Being. "ஆசில் தாரகப்பிரமமா மதன்பயன் ஆய்ந்தான்" *(கந்தபு. அயனைச்சிறைபுரி. 11).*

*[தரு → தார் + அகம் → தாரகம் + பிரமம். அனைத்தும் 'ஓம்' (ங்)காரத்திற்குள் அடக்கம். அ + உ + ம → ஓம். ஓம் என்னும் ஓங்கார ஒலியினில், இறைவன் தரும் திருவருள் இலங்குகின்றது. இதுவே அனைத்திற்கும் ஆதாரம். அ = இறைவன், உ = திருவருள். இவ்வுலகம் உய்யும் பொருட்டு இறைவன் தந்த திருவருள் மந்திரமே ஓங்காரம். சிவனியத்தாரும், மாலியத்தாரும், தத்தம் இறைவனது திருப்பெயரை யொலிக்குங்கால், ஓங்கார ஒலியினை, மூலமந்திரத்துடன் முன்னடையாகச் சேர்த்து ஒலிப்பது மரபாகும்.*

*(எ–டு) ஓம் நமச்சிவாய*
*ஓம் நமோ நாராயணாய]*

**தாரகம்**[1] *tāragam,* பெ. (n.) *1.* கடப்பதற்கு உதவுவது; that which serves to cross or overcome. "தாரகமா மத்தன் றாள்" *(சி.போ.பா. 22.).* 2. ஓம்; Ōm, the mystic incantation, the monosyllable. "மெய்த்தொளிர் தாரகம் விள்ளுவதாகும்" *(தணிகைப்பு. அகத்தி. 10.).* 3. விண்மீன் (வின்.); star. 4. உச்சவிசை (வின்.); highest voice, high key or note.

*[தரு → தரம் → தாரம் + அகம் → தாரகம். ஒருகா. தார் + அகம் → தாரகம். ஓங்கார மூலமந்திரம், பொருத்திய குரம்பைதனில் பொய்நடை செலுத்தி வாழும் மாந்தரின், உலகத்துயரை யொழிக்கும் அடிப்படை ஆதாரமாகும். 'ஓம்' எனும் ஒலி தரும் மன நிறைவை அல்லது உள்ளவொடுக்கத்தை, 'தரு' என்னும் வேரடி குறித்து வழங்கிய தென்றறிக. 'ஓம்' எனும் ஒலியே ஏழிசைக்கும் ஆதாரம். மானிடர்க்கு, மனப் பொந்திகையைத் தருவதே, ஏழிசையின் அடிப்படைப் பண்பாகும்.]*

**தாரகம்**[2] *tāragam,* பெ. (n.) *1.* ஆதாரம்; that which protects or supports; receptacle; vehicle, means; refuge. "எனக்கு நினனரு டாரகம்" *(தாயு. மௌன. 6.).* 2. பத்தியவுணவு (இ.வ.); sustenance. light food, diet for convalescents.

*[தரு → தார் + அகம் → தாரகம்.]*

**தாரகற்காய்ந்தாள்** *tāragaṟ-kāyntāḷ,* பெ. (n.) தாரகன் என்னும் வலிமையுள்ள அரக்கனைக் கொன்ற காளி (சூடா.); Kāḷi, as the slayer of the arakkan Tāragan.

*[தாரகன் + காய்ந்தாள்.]*

**தாரகற்செற்றதையல்** *tāragaṟ-śeṟṟa-taiyal,* பெ. (n.) தாரகற்காய்ந்தாள் பார்க்க; see *tāragaṟ-kāyntāḷ.*

*[தாரகன் + செற்றதையல்.]*

**தாரகற்செற்றோன்** *tāragaṟ-śeṟṟōṉ,* பெ. (n.) தாரகனைக் கொன்ற முருகக்கடவுள்; Murugan, the God, as the slayer of Tāragan.

*[தாரகன் + செற்றோன்]*

**தாரகன்**[1] *tāragaṉ,* பெ. (n.) உலக வாழ்விற்கு ஆதாரமான இறைவன்; God the protector and the origin of all life.

*[தரு → தரம் → தாரம் + அகம். தாரகம் → தாரகன். தரம் → தாரம் = மூலம் வரும்வழி. உலகவாழ்வை நடாத்துதற்கு ஆதாரமான உடம்பைத் தந்தவன் இறைவன். இஃதும், தருதல் என்னும் வேரடி யினின்று கிளைத்த சொல்லென்றறிக. மாந்தனை, நல்வழிப்படுத்தும் அனைத்துச் சமயங்களின் கொண்முடிபும், இதுவே யாகும்.]*

**தாரகன்**[2] *tāragaṉ,* பெ. (n.) கடப்பிப்போன்; one who helps in crossing or overcoming. "தாரகன் தன்னைச் சாதத் தடங்கடற் றளர்வார் தம்மை" *(சீவதரு. பாவ. 8).*

*[தாரகம் → தாரகன். வாழ்க்கைக் கடலைக் கடக்க, அனைத்து மாந்தருக்கும், தோணியாகத் திகழ்பவன்.]*

**தாரகாகணம்** *tāragā-kaṇam*, பெ. (n.) விண்மீன் கூட்டம்; star cluster. "அநேக தாரகாகணமா நவமணி" (பாரத. சிறப்புப். 4).

*[தாரகம் + கணம்.]*

**தாரகாதேசம்** *tāragā-tēšam*, பெ. (n.) விண்மீன் மண்டலம்; starry heavens. "தாரகா தேசந்தன்னில்" (சீவதரு. சிவதரும. 19).

*[தாரகம் + தேயம் → தேசம்.]*

**தாரகாபதி** *tāragā-pati*, பெ. (n.) விண்மீன் மண்டலத் தலைவனான நிலவன்; Moon, as lord of the stars. "தாரகாபதி புதல்வன்" (பாரத. குருகுல.).

*[தாரகபதி → தாரகாபதி.]*

**தாரகாரி**[1] *tāragāri*, பெ. (n.) தாரகற் செற்றோன் பார்க்க; see *tāragaṟ-šeṟṟōn*. 'தாரகாரியுஞ் சளுக்கியர் வேந்தனும்' (பிங்.).

**தாரகாரி**[2] *tāragāri*, பெ. (n.) காளி (சூடா.); Kāḷi.

**தாரகி** *tāragi*, பெ. (n.) கள்; toddy (சா.அக.).

*[தார் + அகு + இ → அகி→ தாரகி]*

**தாரகை**[1] *tāragai*, பெ. (n.) கண்மணி; apple of the eye (யாழ்.அக.).

*[தார் + அகை → தாரகை. பிறர் வடிவம் தருந்தன்மைத்து]*

**தாரகை**[2] *tāragai*, பெ. (n.) நிலம்; earth. "வானவர்தாந் தானவர் தாந் தாரகைதான்".

*[தார் → அகை → தாரகை = நிலம் = ஒருவிதையிடின் பல்கிப் பெருகி, பலன் தருவது]*

**தாரகைக்கோவை** *tāragai-k-kōvai*, பெ. (n.) ஏகாவலி என்னும் அணிகலம்; a kind of necklace. "தாரகைக் கோவையுஞ் சந்தின் குழம்பும்" (சிலப். 13:19).

*[தாரகை + கோவை]*

**தாரகைமாலை** *tāragai-mālai*, பெ. (n.) கற்பு நெறி கூறும் நூல்வகை; a kind of širrilakkiyam, that says virtue (இலக். வி: 867).

*[தாரகை + மாலை = கற்புடை மகளிர்க்கு உள்ள இயற்கைக் குணங்களைக் கூறுவது]*

**தாரசாரம்** *tāra-šāram*, பெ. (n.) நூற்றெட்டு சிற்றிலக்கியங்களுள் ஒன்று (சங்.அக.); an upaniṣad, one of 108.

**தாரணநட்சத்திரம்** *tāraṇa-naṭcattiram*, பெ. (n.) குருகு (மூலம்), கவ்வை (ஆயில்யம்), தழல் (கேட்டை), யாழ் (திருவாதிரை) என்னும் விண்மீன்கள் (விதான. பஞ்சாங். 20. உரை); the asterisms mūlam, āyilyam, kēṭṭai, tiruvādirai (செ.அக.).

த. விண்மீன்; Skt. naṭcattra (நட்சத்திரம்)

*[தாரணம் + நட்சத்திரம்]*

**தாரணம்** *tāraṇam*, பெ. (n.) 1. ஒரு வகை மூலிகைச் செடி; a kind of medicinal plant. 2. உறுதி; stability.

*[தரு → தார் + அணம்]*



**தாரணவோகம்** *tāraṇa-v-ōgam*, பெ. (n.) ஒருமுக நோக்குடைய ஆழ்நிலை ஊழ்கம்; deep devotion.

*[தாரணம் + ஓகம்]*

**தாரணாவாற்றல்** *tāraṇā-v-āṟṟal*, பெ. (n.) ஆழ்நிலை ஓகத்தினால் உள்ளந்தரும் ஆற்றல்; power of concentration.

*[தாரணம் + ஆற்றல் = உள்ளத்திற்கு உறுதியையும், உடலுக்கு ஆற்றலும் நல்கும் ஓகம்.]*

**தாரணி**[1] *tāraṇi*, பெ. (n.) 1. உடம்பில் காரியரத்தம் செல்ல வேண்டிச், சவ்விலும் எலும்பின் கண்ணறைப் பகுதியிலும்,

கருப்பைச்சுவரிலும் ஓடும் குழலான வெளிகள்; veins with very small bore or hair like tubes passing in bodies of porous structure as membranes bony cells, and walls of the uterus. 2. விலங்குகளின் உடம்பிலுண்டாகும் உட்டுளைகள்; a cavity in animal bodies. 3. மருந்துப் பூச்சியினால் கட்டி பழுத்து உடைதல்; brusting or opening of an abscess by medicinal application (சா.அக.).

*[தார் + அணி → தாரணி. குருதியைக் குழலில் கொடுக்கும் வரிசையாய் அமைந்த கருப்பைச் சுவர்க் குழாய்கள் → தாரகி. அணி = வரிசை]*

**தாரணி**[2] *tāraṇi,* பெ. (n.) மலை; mountain. "எழுதாரணிதிகழ் தோளண் ணலே" *(மருதூ. 45).*

*[தரு → தார் + அணி → தாரணி - அனைத்து வளங்களையும் மாந்தருக்குத் தருவது மலை]*

**தாரணி**[3] *tāraṇi,* பெ. (n.) கூற்றுவன்; Yamaṉ. "தாரணியெனத் தனது தண்டுகொடு" *(பாரத. மணிமான் 42).*

*[தார் + அணி → தாரணி = கூற்றுவன் உடலில் உயிரைப் பிரித்து, இயற்கைக்குத் தருபவன்]*

**தாரணி**[4]**-த்தல்** *tāraṇi-,* 4 செ. குன்றாவி. (v.t.) அணிதல்; to bear. "வானநீரினாற் றாரணித் தங்கொரு மலையிற் றாங்கினான்" *(கம்பரா. அயோமுகி. 93).*

*[தார் + அணி-.]*

**தாரணீ** *tāraṇī,* பெ. (n.) வலியைப் போக்கக் கூறும் மறைமொழி; a mystical verse or charm used as a kind of prayer to reduce pain (சா.அக.).

*[தரு → தார் → தாரணி → தாரணீ]*

**தாரணை**[1] *tāraṇai,* பெ. (n.) 1. அணிகை; wearing, investing, bearing, upholding, sustaining. 2. நினைவில்வைக்கை; recollection, retaining in the memory. 3. உறுதி; firmness, steadiness, stability. 4. மனதை ஒருவழி நிறுத்துதலான எட்டுவகை தவ நிலையில் ஒன்று; concentrated attention, one of eṇ-vagai-yōgam - q.v. 5. ஒழுங்கு; construction, arrangement, order, system, principles, established order of things, natural or artificial. 6. ஓகத்தில் ஒன்பது வகைப்பட்ட மனநிலைகள்; nine forms of meditation practised by Saiva yōgis.

*[தார் + அணி → அணை = முறையாகத் தருவதை அணிகை]*

**தாரணை**[2] *tāraṇai,* பெ. (n.) 1. விழுக்காடு; rate. 2. நெல் முதலிய பண்டங்களின் விலை; price as of paddy.

க. தாரணெ; தெ. தாரண்

*[தார் + அணை. இயற்கை தரும், பொருள்களை அணைத்து எண்களால் எண்ணிக் கணக்கிடுகை]*

**தாரணை**[3] *tāraṇai,* பெ. (n.) 1. மருந்து தடவுவதினால் கட்டியுடைகை; bursting of abscess by medicinal application. 2. நினைவை ஒருவழிப்படுத்தல்; concentration of mind (சா.அக.).

இது எட்டுவகை ஓகங்களில் ஒன்று. இதயம், கண்டம், உந்தி, நெற்றி இவற்றில் ஒன்றில் சிந்தை வைத்தல். சிவமுனிவர்கள் 9 வகையாகப் பிரித்துள்ளனர்.

தாரணை வகை:-

1. நியமதாரணை; name of meditation.
2. மான்யதாரணை; worship of supreme being who is unlimited and without form.
3. பேததாரணை; change meditation.
4. சதுரங்கதாரணை; for member meditation.
5. சத்ததாரணை; word meditation.
6. மந்திரதாரணை; spell meditation.
7. வ(ஸ்)துதாரணை; mental perception of Brahmam.
8. வச்சிரதாரணை; worship of Śivaṉ only in the liṅgam rejecting the lower passions which represent Brahmaṉ and Viṣṇu.
9. சித்திரதாரணை; meditation when approaching assimilation to the deity by gaining a knowledge of the 26 properties of the body, the soul and the Supreme Being often the soul arrives at pure

spiritual knowledge and is emerged in the deity *(சா.அக.).*

*[தார் + அணை → தாரணை. நலம் தரும் மருந்து கட்டியில் அணைவதால், கட்டி உடைபடுகை. நல்லெண்ணம் மனத்தில் அணைவதால், உள்ளம் ஒருமுகப்படுகை]*

**தாரணை**[4] *tāraṇai,* பெ. (n.) **உள்ளந்தரும் உறுதி;** firmness *(சா.அக.).*

*[தரு → தார் + அணை]*

**தாரணைசெய்-தல்** *tāraṇai-šey,* 1 செ.குன்றாவி. (v.t.) *1.* **வத்தி செய்து பிறப்புறுப்பு அல்லது எருவாயிலில் விடுதல்;** to insert or introduce a lint or medicinal wick into the vagina, or the anus. *2.* **ஐம்புலன் அடக்குதல்;** to control the five senses. *3.* **வளியை அடக்குதல்;** to suppress the respiration *(சா.அக.).*

*[தாரணை + செய்-.]*

**தாரத்தில்காரம்** *tārattil-kāram,* பெ. (n.) **நாயுருவி;** Indian burr *(சா.அக.).*

**தாரத்தில்தயங்கும்சோதி** *tārattil-tayaṅgum-šōti,* பெ. (n.) **கௌரி செய்நஞ்சு;** prepared arsenic *(சா.அக.).*

**தாரத்தைக்கருகப்பண்ணி** *tārattai-k-karuga-p-paṇṇi,* பெ. (n.) **காகச் செய்நஞ்சு;** a kind of arsenic *(சா.அக.).*

**தாரதசெய்நீர்** *tārada-šeynīr,* பெ. (n.) **வழலையுப்பு, செயநீர்;** a strong alkaline or pungent fluid obtained by exposing the salt prepared from the fuller's earth or human skull to the night dew *(சா.அக.).*

**தாரதண்டுலம்** *tāratanḍulam,* பெ. (n.) **வெண்சோளம்** *(சங்.அக.);* white maize.

*[தாரம் + தண்டுலம்]*

**தாரதம்** *tāradam,* பெ. (n.) *1.* **இதளியம்;** mercury. *2.* **சிந்தூரம்;** red powder. *3.* **கடல்;** sea *(சா.அக.).*

**தாரதம்மியம்** *tāra-dammiyam,* பெ. (n.) **ஏற்றத் தாழ்வு;** difference, contrast, disparity, comparative, value. 'மற்றை மூவர் தார தம்மியமுஞ் சொல்வோன்' *(கைவல். தத். 94).*

*[தரம் → தாரம். தாரம் = ஏற்றம். தம் + இயம் → தம்மியம் = தாழ்வு.]*

**தாரதன்மியம்** *tāratanmiyam,* பெ. (n.) **ஒப்பு வேறுபாடு;** similarity and difference *(சா.அக.).*

*[தாரதம்மியம் → தாரதன்மியம். ம் → ன் - திரிபு]*

**தாரநாதம்** *tāra-nādam,* பெ. (n.) **பேரொலி** *(யாழ்.அக.);* loud uproar.

*[தாரம் - ஏற்றம், உயர்வு. தாரம் + நாதம்]*

**தாரப்பிரம்** *tāra-p-piram,* பெ. (n.) **எரியணம்;** camphor *(சா.அக.).*

*[தார் + அப்பிரம் → தாரப்பிரம்]*

**தாரபணியம்** *tāra-paṇiyam,* பெ. (n.) **கெட்ட ஆவிகளைக் கட்டும் மந்திரம்;** the name of a magic spell against evil spirits *(சா.அக.).*

*[தாரம் + பணியம் → தாரபணியம் = தீய ஆவியைப் பணிய வைக்கை]*

**தாரபரிக்கிரகம்** *tāra-pari-k-kiragam,* பெ. (n.) **திருமணம்** *(யாழ்.அக.);* wedding.

**தாரபீடம்** *tāra-pīḍam,* பெ. (n.) **மரமஞ்சள்** *(சங்.அக.);* tree turmeric.

*[தாரம் + பீடு + அம்]*

**தாரம்**[1] *tāram,* பெ. (n.) *1.* **அரும்பண்டம்;** rare valuable articles or things. "கடற்பஃறாரத்த நாடு கிழவோயே" *(புறநா. 30).* *2.* **பச்சைப்பாம்பின் நஞ்சு** *(வின்.);* venom of the whip-snake. *3.* **எல்லை;** confines, limit. "பழித்தாரமாம்" *(ஆசாரக். 92).* *4.* **சாதிலிங்கம்;** vermilion.

*[தன் → தரு → தார் → தாரம் - தன் என்னும் வினை தருதற்பொருளில் 'தரு' எனத்திரிந்தது, அதன்பின், எதிர்மறை வினையில், 'தார்' அல்லது 'தா' என்றும், (தாரான் → தரான்) ஏவல் வினையில், 'தா' என்றும், இறந்தகால வினையில் (தந்தான்) என்றும், திரிந்துள்ளது. தாரம் என்னும் சொல், தார் என்னும் திரிபடியாகப் பிறந்தது. கடல்தரும் பலபொருள் "கடற் பஃறாரம்" (புறம். 30).]*

**தாரம்**[2] *tāram,* பெ. (n.) *1.* **பண்வகை** *(திவா.);* the seventh note of the gamut, one of seven išai.

2. எடுத்தலோசை; highest musical pitch. "மந்திர மத்திமை தாரமிவை மூன்றில்" (கல்லா. 21: 50). 3. யாழினோர் நரம்பு (பிங்.); one of the seven strings of the lute. 4. ஒரு பண்; a musical mode. "பாடுகின்ற பண்தாரமே" (தேவா. 582:3). 5. மூல மந்திரம் (பிரணவம்); the mystic syllable Ōm. "தாரத்தினுள்ளே தயங்கிய" (திருமந். 1405). 6. வெள்ளி (பிங்.); silver. 7. தரா என்னும் மாழை; copper alloy. 8. வெண்கலம் (அக.நி.); bell-metal. 9. இதளியம் (வின்.); mercury, quick silver. 10. பார்வை (சூடா.); eye-sight. 11. விண்மீன் (யாழ்.அக.); star. 12. முத்து (யாழ்.அக.); pearl.

**தாரம்**[3] *tāram,* பெ. (n.) நா (பிங்.); tongue.

*[ஞால் → நால் → தால் → தாலம் → தாரம்]*

**தாரம்**[4] *tāram,* பெ. (n.) 1. மனைவி; wife. "தபுதார நிலை" (தொல். பொருள் 79). 2. மணந்தநிலை; married state. "தாரத்துக்குட்பட்டவன்" (வின்.). 3. ஆடவைஓரை (மிதுன ராசி) (சங்.அக.); gemini.

*[தரு → தார் + அம் → தாரம் = முதற்கண் ஆடவர்க்குத் தரப்பட்டவள் மனைவி என்றறிக]*

**தாரம்**[5] *tāram,* பெ. (n.) தெய்வமரங்களுள் ஒன்றாகிய மந்தாரம் (சிலப். 15, 157, உரை.); a celestial tree.

*[தரு → தார் + அம் → தாரம்]*

**தாரம்**[6] *tāram,* பெ. (n.) தேவதாரு மரவகை (தைலவ. தைல.); red cedar.

*[தரு → தாரு → தாரம்]*

**தாரம்**[7] *tāram,* பெ. (n.) 1. சிற்றரத்தை வகை; lesser galangal. 2. கடாரநாரத்தைச் சாறு; juice of seville orange.

*[தாரு → தாரம்]*

**தாரம்**[8] *tāram,* பெ. (n.) கயிறு; cord, rope. "பொருவில் சற்பத்தியாந் தாரம் பூண்டு" (பிரபுலிங். இட்டலில். 20).

தெ. தாரமு

**தாரம்**[9] *tāram,* பெ. (n.) முகப்பூச்சு (அரிதாரம்); yellow orpiment, yellow sulphide of arsenic (மூ.அ.).

**தாரம்**[10] *tāram,* பெ. (n.) நீர் (யாழ். அக.); water.

**தாரமங்கலம்** *tāra-maṅgalam,* பெ. (n.) சேலம் மாவட்டத்தில் ஓர் ஊர்; a village in Salem district.

இவ் வூரிலுள்ள கைலாயநாதர் கோவிலின் சிறப்புச்சிறப்பு, உலகப்புகழ் பெற்றது. இவ் வூரிலுள்ள, இளமீசுரர் கோயில் சிறு பசுமை நிறமுள்ள சுக்கான் பாறையால் முழுவதும் கட்டப்பட்டுள்ளது.

**தாரமாக்கு-தல்** *tāram-ākku-,* 5 செ.கு.வி. (v.i.) வெள்ளியாக்குதல்; to convert into silver (சா.அக.).

*[தாரம் + ஆக்கு-.]*

**தாரமாட்சிகம்** *tāra-māṭcigam,* பெ. (n.). துணைத்தாது ஏழனுள் ஒன்று (சங்.அக.); a inferior mineral.

**தாரர்** *tārar,* இடை (part.) 1. ஒன்றை யுடையவர், வைத்திருப்பவர், செய்பவர் முதலிய பொருள்களைத் தரும் வகையில் பெயர்ச் சொற்களோடு இணைக்கப்படும் ஈறு; a suffix added to nouns to indicate the possessor, holder, doer, etc. (குத்தகைதாரர்), பங்குதாரர் (உ.வ.).

*[தரு → தார்]*

**தாரவம்** *tāravam,* பெ. (n.) கொடிமுந்திரி; grapes (சா.அக.).

**தாரவித்தை** *tāra-vittai,* பெ. (n.) ஒரு ஆயுள்வேதநூல்; an ayurvedic work (சா.அக.).

*[தரு → தார் → தாரம் + வித்தை - முன்னோர் மருத்துவம் பற்றி ஆய்ந்து தந்த நூல்]*

**தாரவெழுத்து** *tāra-v-eḻuttu,* பெ. (n.) ஏழாவது இசையாகிய தாரத்தைக் குறிக்கும் 'ஔ' என்ற எழுத்து (திவா.); the letter 'au' representing the seventh note of the gamut.

*[தாரம் + எழுத்து]*

தாரா வகைகள்



கண்ணாடித் தாரா



காட்டுத் தாரா



பாம்புத் தாரா



பெருந்தாரா



ஆண்டித் தாரா



மணல் தாரா

**தாரன்** *tāran,* இடை. (part.) **உடையவனைக் குறிக்குஞ்சொல்;** a termination indicating male owner. வாரிசுதாரன்.

*[தரு → தார் + அன் → 'தன்' ஆண்பால் விகுதி]*

**தாரா**[1] *tārā,* பெ. (n.) *1.* **குள்ளவாத்து;** a kind of duck. *2.* **குருகு, நாரை;** heron. *3.* **வாத்து நடை;** walking as of a duck. *4.* **துரா;** king of herbs. *5.* **வேக்காலி;** conocarpus latifolia. *6.* **ஓம்;** mystic monosyllable 'Ōm'.

**தாரா வகைகள்:-**

1. காட்டுத்தாரா; wild duck
2. பெருந்தாரா; large duck or goose.
3. மணல்தாரா; sand duck
4. ஆண்டித்தாரா; mendican duck
5. கண்ணாடித்தாரா; class duck
6. பாம்புத்தாரா; snake

(சா. அக.)

*[தரை → தாரா = தரையின் கண்ணே சிறகுகள் தாழ்ந்துபடும் வண்ணம் நடந்து செல்லும், குள்ள வாத்து. (ஒ.நோ.) சரி → சராசரி]*

**தாரா**[2] *tārā,* பெ. (n.) **விண்மீன்** (திவா.); star planet.

*[தரு → தார் → தாரா. கோள்களைக் காட்டிலும் மிக்கொளி தருவன (ஒ.நோ.) மாலை → மாலா. நிலவு → நிலா]*

**தாரா**[3] *tārā,* பெ. (n.) *1.* **நீரொழுக்கு;** continuous flow of water. *2.* **தாராநத்தம்;** current, stream.

**தாராக்கிரணம்** *tārā-k-kiraṇam,* பெ. (n.) **கோள், விண்மீன் முதலியன, நிலவு முதலியவற்றால் மறைக்கப்படுகை;** occultation, eclipse of a planet or star by the moon, or of a satellite by its primary.

**தாராக்குஞ்சு** *tārā-k-kuñju,* பெ. (n.) **வாத்துக் குஞ்சு;** duckling (சா.அக.).

*[தாரா + குஞ்சு]*

**தாராகடம்பம்** *tārā-kaḍambam,* பெ. (n.) **மஞ்சட்கடம்பு;** caḍambam tree (சா.அக.).

**தாராகாணம்** *tārā-kāṇam,* பெ. (n.) **விண்மீன் கூட்டம்;** constellation. "தரித்திருந்தேனாகவே தாராகணப்போர்" (திவ். இயற். நான்மு. 63).

**தாராகிருகம்** tāra-kirugam, பெ. (n.) **நீர்த் தாரையாற் குளிர்ச்சி தரும்படி அமைத்த மாளிகை;** summer house kept cool by sprays of water. "சார முனிவன் வனமெனவே தாராகிருகஞ் சமைத்தார்கள்" (செவ்வந்திப்பு. சூரவா: 139).

*[தரு → தார் + ஆ + Skt. கிருகம்]*

**தாராங்கம்** *tārāṅgam,* பெ. (n.) **வாள்** (யாழ்.அக.); sword.

*[தார் + அங்கம். அரசனால் வீரனுக்கு நெடுமொழி கூறித் தரப்பட்ட வாள்]*

**தாராங்கு** *tārāṅgu,* பெ. (n.) **மழைத்துளி** (யாழ்.அக.); rain-drop.

*[தாரம் + அங்கு]*

**தாராங்குரம்** *tārāṅguram,* பெ. (n.) **ஆலங்கட்டி** (சங்.அக.); hailstone.

*[தாரம் + அங்கு + உரம். மழை நீர்த் துளிகள் உரம் வாய்ந்த பனிக்கட்டியாக மாறி விழுகை]*

**தாராசந்தானம்** *tārā-šandāṉam,* பெ. (n.). **நீரொழுக்குப் போல் நீங்காது வரும் தொடர்ச்சி** (மணிமே. 30: 38: உரை.); uninterrupted succession or continuity, as of water in a stream.

*[தாரம் + சந்து + ஆனம். ஒ.நோ. ஃ + ஆனம் = அஃகானம்]*

**தாராசரகம்** *tārā-šaragam,* பெ. (n.) **பெருமழை;** heavy rain (சா.அக.).

*[தரு → தார் → தாரா + சரகு + அம்]*

**தாராசரம்** *tārā-šaram,* பெ. (n.) **பெருமழை;** heavy-rain.

**தாராசுரம்** *tārā-šuram,* பெ. (n.) **தஞ்சை மாவட்டத்தில், கும்பகோணம் வட்டத்திலுள்ள ஒரு ஊர்** (ஊர். பெ. அக.); a village in Kumbakōṇam taluk in Tañjore district.

*[இராசராசேச்சுரம் → தாராசுரம்.]*

**தாராட்டு**[1]**-தல்** *tārāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **தாலாட்டு;** to lull or sooth a child. 'பச்சைத் தேரை தாராட்டும் பண்ணை' (கம்பரா. நாட்டு. 13).

ம. தாராட்டுக

*[தாலாட்டு → தாராட்டு-.]*

**தாராட்டு**[2] *tārāṭṭu* பெ. (n.) தாலாட்டுப் பாடல்கள்; cradle songs, lullabies.

*[தாலாட்டு → தாராட்டு]*

**தாராடம்** *tārāḍam* பெ. (n.) தாராபுள் பார்க்க; see *tārāpuḷ*.

**தாராதத்தம்** *tārā-tattam* பெ. (n.) திருமணத்தில் பெண்ணை நீர் ஊற்றி உரிமையை விட்டுக் கொடுக்கை (வின்.); giving a girl in marriage, the act being solemnised by the pouring of water.

*[தாரா + தத்தம்]*

**தாராதரம்** *tārā-taram,* பெ. (n.) முகில்; cloud. 'தாராதர மந்தச் சாதகம்' (குலோத். கோ. 109).

*[தாரா + தரம்]*

**தாராதாரம்** *tārā-tāram,* பெ. (n.) தாராதரம் பார்க்க; see *tārā-taram* (செ.அக.).

**தாராதிபதி** *tārāti-pati,* பெ. (n.) நிலவு; moon.

*[தாராதி + பதி]*

**தாராதீனன்** *tārā-dīṉaṉ,* பெ. (n.) மனைவிக்கு அடங்கி நடப்போன்; one who obeys his wife.

*[தாரம் + தீனன் → தாராதீனன்]*

**தாராநோய்** *tārā-nōy,* பெ. (n.) ஆவின் நோய்களிலொன்று; one of the diseases of the cow (சா.அக.).

*[தாரா + நோய். இதன் பால் பல நோய்களுக்குக் காரணமாக அமையும்]*

**தாராப்பாசி** *tārā-p-pāśi,* பெ. (n.) ஒரு வகைப் பாசி; duck weed (சா.அக.).

*[தாரா + பாசி]*

**தாராப்பூடு** *tārā-p-pūḍu,* பெ. (n.) நாரத்தை; bitter orange (சா.அக.).

*[தாரா + பூடு]*

**தாராபதம்** *tārā-padam,* பெ. (n.) வானம் (வின்.); sky.

*[தாரா + பதம்]*

**தாராபதி** *tārā-padi,* பெ. (n.) 1. நிலா (விண்மீன்களின் தலைவன்) (சூடா.); moon, as the lord of the stars. 2. தாரையின் கணவன் வியாழன் (சங்.அக.); Jupiter, as husband of tārai.

*[தரு → தார் → தாரா + பதி]*

**தாராபந்தி** *tārā-pandi,* பெ. (n.) விண்மீன்களின் வரிசை; row of stars. "தாராபந்திபோ னாளுமொளி வீசும் பலமணிகள்" (பாரத. இராச. 4).

*[தாரா + பந்தி. பந்தி = வரிசை.]*

**தாராபலம்** *tārā-palam,* பெ. (n.) விண்மீனின் வலிமை (பஞ்சாங்க.); influence of the stars.

*[தாரா + பலம்]*

**தாராபாகம்** *tārā-pāgam* பெ. (n.) ஒரு வகை பதப்பாடு; peculiar process (சா. அக.).

மறுவ. சிறப்புப் பக்குவம்

*[தாரம் + பாகம்.]*

**தாராபுட்பம்** *tārāpuṭpam,* பெ. (n.) மல்லிகை; jasmine (சா.அக.).

*[தாரம் + Skt. புட்பம்.]*

**தாராபுள்** *tārā-puḷ,* பெ. (n.) 1. சாதகப்புள்; sky lark. 2. விசும்பு; cloud (சா. அக.).

*[தரு → தாரம் + புள்.]*

**தாராபூடணம்** *tārā-pūḍaṇam,* பெ. (n.) விண்மீன்களால் அழகூட்டப்பட்ட இரவு (யாழ். அக.); night as decorated by the stars.

*[தாரம் + பூடு + அணம்.]*

**தாராமண்டலம்** *tārā-maṇḍalam,* பெ. (n.) விண்மீன் மண்டலம்; the starry heavens.

*[தாரம் + மண்டலம்.]*

**தாராமுட்டி** *tārā-muṭṭi,* பெ. (n.) பேராமுட்டி; fragrant pavonia (சா. அக.).

**தாராமூக்கன்** *tārā-mūkkaṉ* பெ. (n.) நச்சுப்பாம்பு வகை (யாழ். அக.); poisonous tree snake.

மறுவ. கொம்பேரி மூக்கன்

*[தாரம் + மூக்கன்]*

**தாராய்** *tārāy* பெ. (n.) திராய், தாராயிலை (பதார்த்த. 580); carpet weed.

*[தரை → தார் + ஆய் - தாராய்]*

**தாராயணம்** *tārāyaṇam* பெ. (n.) அரசமரம்; peepul tree (சா. அக.).

**தாராவணி** *tārā-v-aṇi,* பெ. (n.) காற்று (யாழ். அக.); wind, air.

**தாராளக்காரன்** *tārāḷa-k-kāraṉ* பெ. (n.) கொடையாளி; liberal, free-handed person (செ. அக.).

*[தார் + ஆளம் + காரன் = நிறைவாகத்தருபவன்]*

**தாராளம்** *tāraḷam,* பெ. (n.) 1. மிகை ஈகைத் தன்மை; generosity, liberality, magnanimity 'தாராளமாய்க் கொடுக்கிறான்' (உ.வ.). 2. விரிவு; roominess, spaciousness, amplitude. 'தாராளமான வழி' (இக்.வ.). 3. நிறைவு; plenty, copiousness, sufficiency, completeness. தாராளமாய் விளைந்தது. 4. வெளிப்படை; frankness, candour, openness, freedom. அவரிடம் தாராளமாய்ச் சொல்லலாம். 5. திறமை; fluency, readiness in speech or utterance, proficiency, skilful execution in singing or playing on an instrument. 'தாராளமாய் வாசிக்கிறான்'. 6. உறுதி, திட்பம்; confidence, boldness. "தாராளமாய் நிற்க நிர்ச்சிந்தை காட்டி" (தாயு. சுகவாரி: 8).

*[தள் → தரு → தார் + ஆளம் → தாராளம். "ஆளம்" சொல்லாக்க ஈறு. ஒ.நோ. பேராளம்; தள் என்னும் வினை தருதற் பொருளில், தரு எனத்திரிந்து, மிகுதியாகத் தருதல் என்ற நிலையில், "தார்" என்றாகிறது. "ய" கர மெய்யீறாகத் திரியாத "ள"கர மெய்யீற்று இயற்சொற் களெல்லாம் பொதுவாக ருகரவீற்றவாகத் திரிகின்றன. (எ.கா.) கள் → கரு → கார்; வள் → வரு → வார். ஈங்கு தார் = மிகுதி, நிறைவு, முழுமை, திறமை போன்ற பொருண்மையில், பயின்று வருவதறிக]*

**தாரி¹-த்தல்** *tāri-,* 4 செ.கு.வி. (v.i.). பொறுத்தல்; to bear, endure. "மற்றது தாரித்திருத்த றகுதி" (நாலடி. 72). 2. உடைத்தாதல்; to possess. "தாரித் திட்டதன் றறுகண்மைக் குணங்களின்" (சூளா. சீயவதை. 150).

*[தார் + இ → தாரி-.]*

**தாரி²** *tāri,* பெ. (n.) 1. வழி; way,. path, road. "இதுதான் உந் தாரிய தன்று" (கம்பரா. இரணிய: 148). 2. முறைமை; right mode. "தாரியிற் காட்டித் தருஞ்சாதாரி" (கல்லா. 42, 31). 3. விலைவாசி; exchange, barter. 4. அரிதாரம்; yellow orpiment.

க., ம. தாரி

*[அதர் → தார் → தாரி]*

**தாரி³** *tāri,* பெ. (n.) வண்டு முதலியவற்றின் ஒலி; humming, as of bees. "வண்டின் றாரியும்" (கல்லா. 21 : 45).

*[தார் + இ.]*

**தாரி⁴** tāri, இடை. (part.) தரிப்பவன் என்னும் பொருள்படும் விகுதிவகை; a termination forming agent. 'வேடதாரி, உடைமைதாரி, சாகசதாரி'.

*[தார் + இ.]*

**தாரிகம்** *tārigam,* பெ. (n.) தீர்வை (யாழ். அக); duty, tax.

*[தரு → தார் + இகம்.]*

**தாரிகாதானம்** *tārigā-tāṉam,* பெ. (n.) கன்னிகாதானம் (யாழ். அக); giving away a daugher in marriage.

*[தரு → தார் → தாரி → தாரிகா + தானம்.]*

**தாரிகை** *tārigai,* பெ. (n.) பனஞ்சாறு; sweet toddy.

*[தரு → தார் + கை → தாரிகை. ஒ.நோ. மல்லிகை – தூரிகை.]*

**தாரிணி** *tāriṇi,* பெ. (n.) 1. நிலம்; earth. "தாரிணி பொதிந்த கீர்த்தி" (இரகு. யாகப்: 34). 2. இலவமரம் (இலக். அக.); silk cotton tree. 3. பட்டுப்பருத்தி; silk cotton.

*[தரு → தார் → தாரிணி]*

**தாரிதம்** *tāridam,* பெ. (n.) 1. குதிரைநடை; horse gait. 2. பிழைத்தல்; living.

*[தார் + இதம்.]*

**தாரிப்பு¹** *tārippu,* பெ. (n.) உதவி; support. 'ஓர் தாரிப்பின்றி' (பெரியபு. இளையான்: 9).

*[தரு → தார் → தாரிப்பு]*

**தாரிபாரி¹** *tāri-pāri,* பெ. (n.) 1. நல்வழி அறிந்தவன் (வின்.); one who knows a good way. 2. முழுதும் அறிந்தவர் (வின்.); a well-informed person. 3. இயல்பு (யாழ். அக.); nature.

*[தாரி + பாரி]*

**தாரிபாரி²** *tāri-pāri,* பெ. (n.) தரம்; relative merit. "தாரிபாரிகள் தெரிந்து சகல சம்மானஞ் செய்யும்" (கனம். கிருஷ்ணையர், 117).

*[தாரி + பாரி]*

**தாரிமூலி** *tārimūli,* பெ. (n.) பெண்பூப்பு; the menstrual blood of a young girl.

**தாரியோடகம்** *tāri-y-ōḍagam,* பெ. (n.) செங்கத்தாரி பார்க்க; see *śeṅgattāri.*

**தாரிராட்டினம்** *tāri-rāṭṭiṉam,* பெ. (n.) தார்நூல் சுற்றும் பொறி (நெசவு); reeling machine.

*[தார் + இராட்டினம்]*

**தாரின்வாழ்நன்** *tār-iṉ-vāḻnaṉ,* பெ. (n.) தார்நூலால் வாழ்க்கை நடத்தும் நெசவுத் தொழிலாளி; weaver, as living by bobbin. "தாரின் வாழ்நரும்" (பெருங். வத்தவ. 2: 48).

*[தார் + இன் + வாழ்நன்.]*

**தாரு** *tāru,* பெ. (n.) 1. மரம் (சூடா.); tree. "மாதாருவன்ன சிலை" (கந்தபு. தாரக: 71). 2. மரக் கிளை (பிங்.); branch of a tree. 3. தேவதாரு (தைலவ. தைல.); red-cedar. 4. மரத்துண்டு; piece of timber, wood. "கொல்லிப் பாவையினிற் றாருவமைத்த வல்லிப்பாவை" (இரகு. குசன். 26). 5. கோயிலைப் பிரித்துப் புதுப்பிக்கும்போது கற்சிலைக்குப் பதிலாக வைத்த கட்டை உருவம் (இ.வ.); temporary wooden image set up in place of the stone image when the temple is renovated.

*[தரு → தாரு.]*

**தாருகசித்து** *tāruga-šittu,* பெ. (n.) குமரன்; lord of Murugaṉ.

*[தாருகம் + சித்து.]*

**தாருகண்ணி** *tārugaṇṇi,* பெ. (n.) வெள்ளைக் காக்கணம்; white mussell creeper (சா.அக.).

*[தாருகம் + கண்ணி]*

**தாருகதலி** *tāru-gadali,* பெ. (n.) காட்டுவாழை (மலை.); wild plantain.

*[தார் → தாரு + கதலி]*

**தாருகம்** *tārugam,* பெ. (n.) தாருகாவனம் (வின்.); forest where ascetic lived (செ. அக.).

*[தரு → தாரு → தாருகம்]*

**தாருகவனம்** *tāruga-vaṉam,* பெ. (n.) தாருகாவனம் பார்க்க; see *tārugā-vaṉam.* "தாருகவன முனித்தலைவோர்" (சிவரக. தேவியுடன்: 1).

*[தாருகம் + வனம்.]*

**தாருகற்செற்றாள்** *tārugaṟ-šeṟṟāḷ,* பெ. (n.) தாரகனைக் கொன்ற காளி (திவா.); Kāli, as destroyer of Dārukaṉ.

*[தாருகன் + செற்றாள்]*

**தாருகன்** *tārugaṉ,* பெ. (n.) 1. கண்ணனின் தேரோட்டி; charioteer of Lord Krishnaṉ. 2. காளியாற் கொல்லப்பட்ட ஓர் அசுரன்; an ašura slain by Kāḷi (செ. அக.).

*[தார் + உகன் → தாருகன்.]*

**தாருகாக்கியம்** *tāru-kākkiyam,* பெ. (n.) மஞ்சள் அவரை; yellow bean (சா. அக.).

**தாருகாவனம்** *tārugā-vaṉam,* பெ. (n.) முனிவர்கள் வாழ்ந்த காடு; a forest famous as the abode of ascetics (செ. அக.).

*[தாருகா + வனம்.]*

**தாருசம்** *tārušam,* பெ. (n.) தேவதாரு (மலை.); red cedar.

*[தரு → தாரு → தாருசம்]*

**தாருசினி** *tāruciṉi,* பெ. (n.) இலவங்கப் பட்டை; cinnamon bark (சா. அக.).

**தாருட்டியம்** *tāruṭṭiyam,* பெ. (n.) வலிமை கொடுக்கும் பொருள்; drug that gives strength (சா. அக.).

*[தரு → தாரு → தாருட்டியம்]*

**தாருண்ணியம்** *tāruṇṇiyam,* பெ. (n.) இளம் பருவம்; youth, juvenility (சா. அக.).

*[தரு → தாரு → தாருண்ணியம்]*

**தாருணம்** *tāruṇam,* பெ. (n.) 1. அச்சம்; timidity. 2. பயம்; fear, dread. 3. கொடுமை; horror (சா. அக.).

*[தரு → தருணம் → தாருணம்]*

**தாருணரோகம்** *tāruṇa-rōgam,* பெ. (n.) ஒருவகைத் தலைநோய்; a kind of head disease (சா. அக.).

*[தாருணம் + Skt.ரோகம்]*

தலையில் மயிர்க்கொட்டி, சொர சொரத்து, சுண்டுதிர்ந்து மிகுதியான தூக்கத்தை உண்டாக்கும். இதற்குப் பாலும் கசகசாவும் அரைத்துத் தடவக் குணமாகும் என்பது பழைய மருத்துவக் குறிப்பு.

**தாருணாகி** *tāruṇāgi,* பெ. (n.) மயிலிக்கீரை; a kind of greens (சா. அக.).

**தாருணி** *tāruṇi,* பெ. (n.) நத்தைச்சூரி (மலை.); bristly button weed.

**தாருணியபிடிகம்** *tāruṇiya-piḍigam,* பெ. (n.) முகப்பரு; pimple (சா. அக.).

**தாருணீகம்** *tāruṇīgam,* பெ. (n.) *மரவீழி, விழுதிமரம்;* Cleome fruticosa *(சா. அக.).*

**தாருபாத்திரம்** *tāruma-pāttiram,* பெ. (n.) *மர பாத்திரம்;* wooden vessel.

**தாருமபித்தம்** *tāruma-pittam,* பெ. (n.) *மிளகு;* pepper *(சா. அக.).*

**தாருலவணம்** *tāru-lavaṇam,* பெ. (n.) *1. மரவுப்பு;* salt of tartar. *2. சாம்பலுப்பு;* potash, salt of warm-wood. *3. வாழையுப்பு;* salt of plantain leaf *(சா. அக.).*

**தாருவனம்** *tāru-vaṉam,* பெ. (n.) தாருகாவனம் பார்க்க; see *tārugā-vaṉam.* "சிறைவண்டறையுந் தாருவனத் தெய்வ முனிவர்" *(திருவிளை. வளையல்: 2).*

*[தரு → தாரு + வனம்]*

**தாருனகம்** *tāruṉagam,* பெ. (n.) தலையில் வரும் ஒரு வகைக் குருநோய்; tiny vesicolour of scalp *(சா. அக.).*

**தாரை**[1] *tārai,* பெ. (n.) *1. ஒழுங்கு;* straight. *2.* கண்மணி (பிங்.); apple of the eye. "இருதாரை நெடுந் தடங்கண்" *(பாரத. அருச்சுனன்றவ. 38).* *3.* கண் (திவா.); eye. "தாரை நெருப்புக" *(கம்பரா. சடாயுவுயிர். 103).* *4.* ஐந்து மகளிரில் ஒருவராகிய வியாழன் மனைவி; tārā, wife of Jupiter, one of pañja-kaṉṉiyar. "இளநிலா நகைத் தாரையை விடுக்கிலன்" *(காசிக. 15, 17).* *5.* வாலியின் மனைவி; Tārā, wife of Vāli. "தாரையென் றமிழ்திற் றோன்றிய வேயிடைத் தோளினாள்" *(கம்பரா. வாலிவதை. 13).* *5.* விண்மீன் (பிங்.); star.

*[தார் → தாரை]*

**தாரை**[2] *tārai,* பெ. (n.) *1. வரிசை;* row, range, line, series. *2.* கோடு; stripe, streak. *3. ஒழுங்கு;* order, arrangement, regularity. "நெறித்தாரை செல்லாத நிருதர்" *(கம்பரா. சூர்ப்: 137).* *4.* வழி (திவா.); way, path. "வீரர்போகத் தாரை பெற்றிலர்" *(உத்தரரா. வரையெ. 17).* *5.* அடிச்சுவடு (பிங்.); foot-track. *6.* நேரே ஓடுகை (பிங்.); running in a straight line. *7.* குதிரைவேகம்; pace of a horse. "ஐந்துதாரையினுந் தூண்டி" *(திருவாலவா. 39: 35).* *8. நீரொழுக்கு;* stream, as of water. "நெடுந் தாரை கண்பனிப்ப" *(திருவாச. 7: 15).* *9.* பெரு மழை (பிங்.); downpour of rain. *10.* மாட்டின் எருவாய்ப் பகுதி; region adjoining anus of bulls and cows. *11.* விரைவு (திவா.); speed. *12.* நா (சூடா.); tongue. *13.* போர்க்கருவி மடல்; blade of a weapon. "தாரைகொள் முக்கவைச் சுடர்வேல்" *(கல்லா. 86: 34).* *14.* கூர்மை (பிங்.); sharpness. *15.* சக்கரப்படை; discus weapon. *16.* வயிரக் குணங்களில் ஒன்று *(சிலப். 14: 180, உரை);* a quality of the diamond. *17.* ஆடையின் விலக்கிழை (இ.வ.); thread bareness.

*[தார் → தாரை.]*

**தாரை**[3] *tārai,* பெ. (n.) *1.* நீண்ட ஊதுங்குழல்; long brass trumpet. "தாரை போரெனப் பொங்கின" *(கம்பரா. கடிமண்: 41).* *2.* ஒரு வகைச் சின்னம் (வின்.); long reed instrument. *3.* நீர்வீசுங்கருவி; water-squirt. "தாழ்புனற் றாரையும்" *(பெருங். உஞ்சைக். 38: 105).*

*[தார் → தாரை]*



**தாரை**[4] *tārai,* பெ. (n.) *கவுரி செய்நஞ்சு;* a kind of yellow arsenic *(சா. அக.).*

*[தார் → தாரை]*

**தாரைக்கால்** *tārai-k-kāl,* பெ. (n.) செங்குத்தானதும், தாரை போன்றதும், பிரம்பு போன்றதுமான தூண்; a kind of column.

*[தாரை + கால்]*



**தாரைக்கியன்** *tārai-k-kiyaṉ,* பெ. (n.) *கருடன்;* brahminy kite *(சா. அக.).*

*[தாரை + இயன்]*

**தாரைகவணி** *tārai-kavaṇi,* பெ. (n.) கோடுள்ள துகில்வகை *(வின்.);* a fine variety of striped muslin.

*[தாரை + கவணி]*

**தாரைசின்னி** *tārai-šiṉṉi,* பெ. (n.) கவுரி செய்நஞ்சு; a kind of prepared arsenic *(சா. அக.).*

*[தாரை + சின்னி]*

**தாரைத்தாள்வட்டில்** *tārai-t-tāḷ-vaṭṭil,* பெ. (n.) ஏனவகை (S.I.I.ii, 5); a kind of vessel.

*[தாரை + தாள் + வட்டில்.]*

**தாரைப்பட்டு** *tārai--p-paṭṭu,* பெ. (n.) கோடுகள் அமைந்த பட்டுவகை *(வின்.);* striped silk.

*[தாரை + பட்டு]*

**தாரைமழுங்கல்** *tārai-maḻuṅgal,* பெ. (n.) வயிரக் குற்றங்களுள் ஒன்று *(சிலப். 14: 180: உரை.);* a flaw in the diamond.

*[தாரை + மழுங்கல்]*

**தாரைவார்-த்தல்** *tārai-vār-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* நீர்வார்த்துத் தத்தம் பண்ணுதல்; to make gifts by pouring water on the right hand of the donee. "தாரைவா ரெனக் கௌசிகன் சாற்றிட" *(அரிச். பு. சூழ்வி: 79).* **2.** தொலைத்து விடுதல்; to lose, as property. அவன் தன் சொத்துக்களைத் தாரை வார்த்து விட்டான்.

*[தாரை + வார்-.]*

**தாரைவிடல்** *tārai-viḍal,* பெ. (n.) *1.* சிறுநீர் கழித்தல்; urinating. *2.* கண்ணில் மருந்து நீரை விட்டுக் கொண்டேயிருத்தல்; putting eye drips continuously *(சா. அக.).*

*[தாரை + விடல்]*

**தாரோட்டம்** *tār-ōṭṭam,* பெ. (n.) காய்ச்சாத ஆவின் பால்; raw milk.

*[தார் + ஓட்டம்]*

**தால்** *tāl,* பெ. (n.) *1.* நா; tongue. "பச்சைத் தாலரவாட்டீ" *(திருவாச. 38:4).* **2.** தாலாட்டு (யாழ். அக.); குழந்தைகளுக்கான உறக்கப்பாட்டு; songs to lull a child. *3.* தாலப்பருவம் பார்க்க; see *tāla-p-paruvam.* "செங்கீரைதால் சப்பாணி" *(இலக். வி. 806).*

*[ஞால் → தால் = தொங்கும் நா.]*

**தால்நாட்டம்** *tāl-nāṭṭam,* பெ. (n.) வெண் கடுகு; white-mustard *(சா. அக.).*

*[தால் + நாட்டம்.]*

**தாலகம்** *tālagam,* பெ. (n.) நிலப்பனை; ground-palm.

**தாலகி** *tālagi,* பெ. (n.) கள்; toddy.

**தாலங்கன்** *tālaṅgaṉ,* பெ. (n.) *1.* பனை எழுதிய கொடியுடையோன்; one who has palmyra-banner. *2.* பலராமன்; Balarāmaṉ, brother of lord Krisṇaṉ.

*[தால் + அங்கன்]*

**தாலநற்கட்டி** *tāla-naṟkaṭṭi,* பெ. (n.) பனங்கட்டி; palmyra jaggery *(சா. அக.).*

*[தாலம் + நன்மை + கட்டி.]*

**தாலப்பட்டோலை** *tāla-p-paṭṭōlai,* பெ. (n.) அரசோ, ஊர் அவையோ முடிபு செய்த ஆணை ஓலை; government order. "மகேந்திர மங்கலத்து சபையோம் விற்றுக்கொடுத்த நிலவிலையா வணம் தாலப்பட்டோலை எழுதின சேந்த மங்கலமுடையான்" *(கல்வெட்டு அறிக்கை எண் 159 - 1895).*

*[தாலம் + பட்டு + ஓலை.]*

**தாலப்பருவம்** *tāla-p-paruvam,* பெ. (n.) பிள்ளைத் தமிழ் இலக்கியத்தில் தலைவனைத் தாலாட்டுதலைக் கூறும் பகுதி; portion dealing with the cradle-songs of the hero, one of ten sections of piḷḷai-t-tamiḻ *(செ. அக.).*

*[தால் + பருவம் = தாலப்பருவம்]*

**தாலப்பாக்கு** *tāla-p-pākku,* பெ. (n.) திருமண நாள்களில் காலையும் மாலையும் பூசை செய்தபின் மணமகனுக்கு (ஓதியிடும்) தாம்பூலம்; betel and areca nut given by the father of the bride to the bridgroom every morning and evening after he performs in marriage.

*[தாலம் + பாக்கு]*

**தாலபத்திரம்** *tāla-pattiram,* பெ. (n.) *1.* பனை ஒலை; palm-leaf. *2.* காதிலணியும் சுருளோலை (வின்.); palm-leaf used as an ear-ornament.

*[தாலம் + பத்திரம்.]*

**தாலபத்திரி** *tāla-pattiri,* பெ. (n.) மரமஞ்சள் (மலை.); tree turmeric.

**தாலபாடாணம்** *tāla-pāḍāṇam,* பெ. (n.) தாலம்பபாடாணம் பார்க்க; see *tālamba-pāḍāṇam* (சா.அக.).

*[தாலம்பம் + பாடாணம் → தாலபாடாணம்]*

**தாலபுராணம்** *tāla-purāṇam,* பெ. (n.) 18ஆம் நூற்றாண்டில் காசிநாதப்புலவரால் இயற்றப் பட்ட நூல்; book written by Kāśināda-p-pulavar in 18th century.

*[தளம் → தலம் → தாலம் + புராணம்.]*

**தாலபோதம்** *tāla-pōdam,* பெ. (n.) ஆவாரைச் செடி; tanner's cassia (செ. அக.).

*[தாலம் + போதம்]*

**தாலபோதிதம்** *tāla-pōdidam,* பெ. (n.) கோழியவரை; fowl bean (சா. அக.).

*[தாலம் + போதிகம்.]*

**தாலம்**[1] *tālam,* பெ. (n.) *1.* பனை (பிங்.); palmyra-palm. "தாலமுயர் கொடியினன்" (பாரத. குரு: 141). *2.* கூந்தற்கமுகு (பிங்.); a kind of areca-palm. *3.* கூந்தற்பனை (மலை.); talipot-palm. *4.* மடலேறுதலுக்காகக் குதிரை வடிவில் புனையும் உரு (அகப்); palmyra leaf-stalk shaped like a horse. "தாலத் திவர்க" (வெங்கைக்கோ. 110). *5.* தேன்; honey.

*[தாள் → தால் + அம் – தாலம். 'அம்' சாரியை]*

**தாலம்**[2] *tālam,* பெ. (n.) *1.* நிலம்; earth. "தால முறைமையிற் பரிந்து காத்தான்" (திருவாலவா. 36:1). *2.* உலகம்; world. "தாலம் பதினாலும்" (அரிச். பு. நாட்: 9).

*[ஞாலம் → தாலம்]*

**தாலம்**[3] *tālam,* பெ. (n.) *1.* நா (பிங்.); tongue. *2.* அகங்கை; palm of the hand. *3.* தாம்பாளம்; round plate (சா. அக.).

*[ஞால் → தால் + அம்]*

**தாலம்**[4] *tālam,* பெ. (n.) *1.* உண்கலம்; eating plate, porringer, usually of metal. "பெருந்தோடாலம் பூசன் மேவா" (புறநா. 120). *2.* தட்டம்; salver. "தாலப்பாக்கு" (செ. அக.).

**தாலம்**[5] *tālam,* பெ. (n.) முறவடிவிலுள்ள யானைக் காது (திவா.); elephant's ear, as shaped like a plate (செ. அக.).

*[தாழ் → தால் + அம்]*

**தாலம்பபாடாணம்** *tālamba-pāḍāṇam,* பெ. (n.) ஒருவகைப் பிறவி செய்நஞ்சு; a kind of native arsenic (சா. அக.).

**தாலமாதிதம்** *tālamādidam,* பெ. (n.) கோதுமை; wheat (சா. அக.).

*[தாலம் → தாலமாதிதம்.]*

**தாலமூலி** *tāla-mūli,* பெ. (n.) நிலப்பனை (மலை.); ground-palm a plant common in sandy places.

*[தாலம் + மூலி]*



**தாலமேழுடையோன்** *tālam-ēḻuḍaiyōṉ,* பெ. (n.) தீயரசன்; king of fire.

**தாலயம்** *tālayam,* பெ. (n.) ஆமை; tortoise.

*[தால் + அயம். ஒரு தலையும் நான்கு கால்களும், தொங்குந் தன்மையுடன் அமைந்த உயிரி]*

**தாலவச்சிரம்** *tālava-c-ciram,* பெ. (n.) மலை நாரத்தை; mountain orange (சா. அக.).

**தாலவ்வியம்** *tāl-avviyam,* பெ. (n.) இடை அண்ணத்தில் இடைநாவின் முயற்சியாற் பிறக்கும் எழுத்து; palatal.

*[தாலம் + அவ்வியம் → தாலவ்வியம். மேலெழுந்து ஒலிக்கும் எழுத்து.]*

**தாலவட்டம்**[1] *tāla-vaṭṭam,* பெ. (n.) *1.* விசிறி *(யாழ். அக);* fan. *2.* யானைச்செவி *(வின்.);* elephant's ear. *3.* யானை வால் *(திவா.) (சீவக. 2154, உரை);* elephant's tail.

*[தாலம் + வட்டம்]*

**தாலவட்டம்**[2] *tāla-vaṭṭam,* பெ. (n.) நிலம் *(வின்.);* earth.

*[தாலம் + வட்டம்]*

**தாலவம்** *tālavam,* பெ. (n.) ஒருவகை நஞ்சு; a kind of poison.

**தாலவா** *tālavā,* பெ. (n.) சிறுவழுதலை; species of small brinjal with indian brinjal *(சா. அக.).*

**தாலவிருந்தம்**[1] *tāla-virundam,* பெ. (n.) விசிறி *(பிங்.);* large-fan.

*[தாலம் + விருந்தம்]*

**தாலவிருந்தம்**[1] *tāla-viruntam,* பெ. (n.) பழமுண்ணிப் பாலை; edible paulay *(சா. அக.).*

*[தாலம் + விருந்தம்]*

**தாலாட்டு**[1]**-தல்** *tālāṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) குழந்தைகளைத் தொட்டிலிலிட்டு உறங்கச் செய்யப் பாட்டுப்பாடுதல்; to rock a child in a cradle with lullabies. "அஞ்சனவண்ணனை யாய்ச்சி தாலாட்டிய செஞ்சொல்" *(திவ். பெரியாழ். 1:3:10).*

ம. தாலாட்டுக

*[தால் + அம் → தாலாட்டு-.]*

**தாலாட்டு**[1] *tālāṭṭu,* பெ. (n.) *1.* குழந்தைகளைத் தொட்டிலிலிட்டு உறங்கச்செய்யப் பாட்டுப் பாடுகை; lulling a child to sleep with songs. "தாலாட்டு நலம்பல பாராட்டினார்" *(பெரியபு. திருஞா. 44.).* *2.* தாலேலோ என்று முடியும் ஒருவகை இசைப்பாட்டு; lullaby, usually ending with tālēlō. *3.* தாலாட்டுதற்கு ஏற்றதாய்ச் சிற்றிலக்கியத் தலைவனுடைய சிறந்த செய்கைகளைத் தெரிவிக்கும், பல கண்ணிகளை உடையதொரு நூல்; a lullaby poem dealing with the exploits of a hero.

E. lull, scand; Sw. lulla; Ger. lallen; Gr. laleo; L. lullaby.

*[தால் + அம் → தாலம் → ஆட்டு → தாலாட்டு. (சு.வி. 98)]*

**தாலாப்பு** *tālāppu,* பெ. (n.) குளம் *(வின்.);* tank.

*[தாழாப்பு → தாலாப்பு = தாழ்வாக அமைந்த குளம்]*

**தாலாலம்** *tālālam,* பெ. (n.) பழிமொழி *(யாழ்.அக);* scandal, aspersion, calumny.

*[தால் + ஆலம்]*

**தாலி**[1] *tāli,* பெ. (n.) திருமணத்தின்போது மணமகள் கழுத்தில், மணமகன் மூன்று முடிச்சுப் போட்டு இணைக்கும் மஞ்சள் சரட்டில் தொங்கும், பொன்னணி; golden ornament tied in yellow thread tied int he neck of bride by bridegroom druing solomnisation of marriage. "தாலி.... நல்லார் கழுத்தணிந்து" *(சீவக. 2697).*

க., தெ., ம. தாலி

"திருமாலையில் தாலி நாற்பத்தொன்றும்" (S.I.I. 23-46).

நால் → நாலி → தாலி = இவ்வேரடி, தொங்குதற் கருத்தினை அடிப்படையாகக் கொண்டது. இப் பொருண்மை பொதிந்த வழக்கே, இலக்கியத்திலும் மாந்தர்தம் வாழ்வியலிலும், வழக்கூன்றியுள்ள பான்மையினை மொழி ஞாயிறு, வடமொழி வரலாறு எனும் நூலில், பின்வருமாறு கூறுகின்றார்.

சிறுவர் கழுத்தில் தொங்கிய ஐம்படைத் தாலியும், வெள்ளாட்டுக் கழுத்தில் தொங்கும் ஊன்மணியும்போல, மணமகள் கழுத்தில் தொங்கும் மங்கலவணி. pendant என்னும் ஆங்கிலச் சொல்லையும் நோக்குக. வடமொழியாளர் பனை ஓலையென்றும், காதணியென்றும் பொருள் கூறுவர். மேலும் தாலி கட்டும் வழக்கம் தமிழரதே (வ.மொ.வ. 336).



**தாலி**[2] *tāli,* பெ. (n.) *1.* **கீழ்க்காய் நெல்லி;** niruri plant - Phylanthus niruri. *2.* **பாலக்கறை;** gowry *(சா. அக.).*

*[தாழ் → தால் → தாலி.]*

**தாலி**[3] *tāli,* பெ. (n.) **மட்கலம்;** earthern vessel. *"ஆரழற் றாலி யொன்று தனையவன் பாணி நல்கி" (சேதுபு. சாத்தி. 38).*

*[தாழி → தாலி]*

**தாலி**[4] *tāli,* பெ. (n.) **பனை** *(திவ். பெரியாழ். 2: 6: 1, வ்யா. பக். 361);* palmyra-palm.

*[தாளி → தாலி]*

**தாலிக்கட்டு** *tāli-k-kaṭṭu,* பெ. (n.) **திருமணம்** *(இ.வ.);* marriage, as tying the tāli.

*[தாலி + கட்டு]*

**தாலிக்கயிறு** *tāli-k-kayiṟu,* பெ. (n.) **தாலி கோத்துள்ள கயிறு** *(உ.வ.);* twisted thread on which is hung the tāli.

*[தாலி + கயிறு]*

**தாலிக்காரி** *tāli-k-kāri,* பெ. (n.) **திருமணமான பெண்;** married woman, as wearing a tāli.

*[தாலி + காரி; 'காரி' - உடைமைப் பெயரீறு. ஓ.நோ: வீட்டுக்காரி, பூக்காரி.]*

**தாலிக்கொடி** *tāli-k-koḍi,* பெ. (n.) **தாலி கோர்ப்பதற்கான பொற்சரடு** *(உ.வ.);* braided gold string on which is hung the tāli.

*[தாலி + கொடி]*

**தாலிக்கொழுந்து**[1] *tāli-k-koḻundu,* பெ. (n.) **ஆமைத்தாலி** *(திவ். பெரியாழ். 2: 6: 1: வ்யா.);* turtle-shaped tāli.

*[தாலி + கொழுந்து]*

**தாலிக்கொழுந்து**[2] *tāli-k-koḻundu,* பெ. (n.) **பனை வெண்குருத்தால் இயன்ற அணிகலன்;** an ornament made of tender leaves of palm-tree. *"தாலிக் கொழுந்தைத் தடங்கழுத்திற் பூண்டு" (திவ். பெரியாழ். 2: 6: 1).*

*[தால் → தாலி + கொழுந்து]*

**தாலிக்கோவை** *tāli-k-kōvai,* பெ. (n.) **தாலி யுருவோடு கோப்பதற்கான, பல்வகை உருக்கள்** *(வின்.);* string of beads to which the wedding badge is attached.

*[தாலி + கோர்வை → கோவை]*

**தாலிகட்டு-தல்** tāli-kaṭṭu-, *5 செ.குன்றாவி. (v.t.)* **மணம்புரிதல்;** to marry, as tying tāli. *"தாலிகட்டையிலே தொடுத்து நடுக்கட்டையிலே கிடத்துமட்டும்" (தனிப்பா. 195: 10).*

*[தாலி + கட்டு-.]*

**தாலிகட்டுக்கலியாணம்** *tāli-kaṭṭu-k-kaliyāṇam,* பெ. (n.) **உண்மையிற் கணவனாகாது, ஒப்புக்காக ஒருத்திக்கு ஒருவன் தாலி கட்டும் ஒரு வகை விழா** *(இ.வ.);* a nominal marrage in which a tāli is tied round the neck of a girl, but the person tying is not entitled to the rights of a husband.

*[தாலி + கட்டு + கலியாணம்]*

**தாலிச்சரடு** *tāli-c-caraḍu,* பெ. (n.) **தாலிக்கொடி** *பார்க்க;* see *tāli-k-koḍi (செ. அக.).*

*[தாலி + சரடு]*

**தாலித்துக்கம்** *tāli-t-tukkam,* பெ. (n.) **கணவன் இறந்ததாலுண்டாந் துயரம்** *(இ.வ.);* mourning observed by a woman on her widowhood.

*[தாலி + துக்கம்]*

**தாலிப்பிச்சை** *tāli-p-piccai,* பெ. (n.) **வாழ்வரசியாய் ஒருத்தி வாழும்படி, அவளது கணவனுயிரைப் பாதுகாக்கை;** saving the life of a woman's husband, as enabling her to wear tāli.

*[தாலி + பிச்சை]*

**தாலிப்பெட்டி** *tāli-p-peṭṭi,* பெ. (n.) **தாலி வைக்கும் பொன்னத்துப் பெட்டி** *(யாழ். அக.);* the basket in which the wedding badge is kept.

*[தாலி + பெட்டி]*

**தாலிப்பொட்டு** *tāli-p-poṭṭu,* பெ. (n.) வட்டமாகச் செய்த தாலியுரு; disc-shaped tāli (செ. அக.).

*[தாலி + பொட்டு]*

**தாலிப்பொருத்தம்** *tāli-p-poruttam,* பெ. (n.) திருமணப் பொருத்தங்களுள் ஒன்று; a kaliyāṇa-p-poruttam (செ. அக.).

*[தாலி + பொருத்தம்]*

**தாலிபெருக்கிக்கட்டுகை** *tāli-perukki-k-kaṭṭugai,* பெ. (n.) 1. திருமணக்காலத்தில் கட்டப்பட்ட தாலியுடன், மணிகளைக் கோக்கும் விழா; stringing additional jewels on the tāli after marriage. 2. தாலியைப் பழைய நூலிலிருந்து வேறொரு சரட்டிற் கோக்கை (இ.வ); renewing the tāli thread.

*[தாலி + பெருக்கி + கட்டுகை]*

**தாலிபெருகுதல்** *tāli-p-perugudal,* பெ. (n.) தாலிச்சரடு அற்றிறுகை; breaking of the tāli-c-caraḍu, a euphemistic expression.

*[தாலி + பெருகுதல். சுடுகாட்டை, நன்காடு என்று வழங்கும் மங்கலவழக்குப் போன்று, தாலிஅறுதலைக் குறிக்கத் 'தாலி பெருகுதல்' என்ற வழக்கை மங்கல வழக்காகக் கொண்டனர், என்றறிக]*

**தாலிமங்கலம்** *tāli-maṅgalam,* பெ. (n.) காஞ்சிபுர மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Kāñjipuram district.

மங்கலம் என்னும்சொல் தொல்காப்பியர் காலம் முதலே, தூய்மை என்னும் பொருளில் வழங்கி வருகிறது. பின், பார்ப்பனர் வசிக்கும் இடத்திற்கு வழங்கப்பட்டதையும் காண முடிகிறது. ஊர்களிலுள்ள, சிறுதெய்வங்களின் பெயருடன் "மங்கலம்" சேர்த்து வழங்கப்படுகிறது. (ஊர். பெ. அக.).

*[தாலி + மங்கலம்]*

**தாலிமணிவடம்**[1] tāli-maṇi-vaḍam, பெ. (n.) தாலியோடு மணிகள் சேர்ந்த தாலிக்கொடி; string of beads to which the tāli is attached. "தாலிமணிவடம் ஒன்று). *(S.I.I. ii, 171).*

*[தாலி + மணி + வடம்.]*

**தாலிமணிவடம்**[2] *tāli-maṇi-vaḍam,* பெ. (n.) மணிகள் வைத்திழைக்கப்பட்ட மங்கல மாலை; garland made of gems.

"உமா பரமேசுவரியார்க்குக் குடுத்தன தாலி மணிவடம் ஒன்று, பொன் கழஞ்சேய் முக்காலே நாலுமஞ் சாடியும் குன்றி" *(S.I.I. II. ii, 46).*

*[தாலி + மணி + வடம்]*

**தாலியம்** *tāliyam,* பெ. (n.) பாதிரி (மலை.); trumpet flower tree - Stareospermum chelonoides. 2. கீழ்க்காய் நெல்லி; Niruri plant.

*[தால் + இயம்]*

**தாலியமாறு** tāliyamāṟu, பெ. (n.) கப்பலின் முக ஒப்பனை; figure-head.

*[தாலி + அம் + மாறு.]*

**தாலியறு**[1]**-த்தல்** *tāli-y-aṟu-,* 4 செ.கு.வி. (v.i.). கைம்பெண்ணாதல் (விதவையாதல்); to become a widow, as having the tāli taken off.

*[தாலி + அறு-.]*

**தாலியறு**[2]**-த்தல்** *tāli-y-aṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) துன்பத்துக்குள்ளாதல்; to harass, cause trouble. அவனைத் தாலி யறுத்துவிட்டான் (உ.வ.).

*[தாலி + அறு-.]*

**தாலியறுத்தவள்** *tāli-y-aṟuttavaḷ,* பெ. (n.) கைம்பெண் (உ.வ); widow, as one those tāli has been taken off.

*[தாலி + அறுத்தவள்]*

**தாலியாற்புதம்** *tāliyāṟpudam,* பெ. (n.) அரத்தக் கெடுதியால் அண்ணத்தில் ஏற்படும் தசை வளர்ச்சி; a fleshy growth in the palate due to vitiate blood painful tumour of the palate (சா. அக.).

*[தாலி + ஆல் + புதம். புது + அம் - புதம் = புதியதாய் வளர்ந்த தசை]*

**தாலியுரு** *tāli-y-uru,* பெ. (n.) 1. தாலியோடு கோக்கப்படும் பலவகை உருக்கள்; beads of different forms attached to the tāli. 2. தாலியுள்ள வடம்; necklace containing the tāli (செ. அக.).

*[தாலி + உரு]*



**தாலியைம்படை** *tāli-y-aimpaḍai,* பெ. (n.) ஐம்படைத்தாலி பார்க்க; see *aimpaḍaittāli;* a child's necket. "தாலியைம்படை தழுவுமார்பிடை" (கம்பரா. நாடு. 58).

*[தாலி + ஐந்து + படை]*



**தாலிவற்று-தல்** *tāli-varru-,* 5 செ.கு.வி. (v.i.) கைம்பெண்ணாகுகை (இ.வ.); to become widow, as making the tāli disappear, a euphemism (செ. அக.).

*[தாலி + வற்று-.]*

**தாலிவாங்கு-தல்** *tāli-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) கணவனிறந்தபின் மனைவியின் தாலியை நீக்குதல்; to remove the tāli of a woman on the death of her husband.

*[தாலி + வாங்கு-.]*

**தாலிவாங்குநேரம்** *tāli-vāṅgu-nēram,* பெ. (n.) கணவனிறந்தபின் தாலியை வாங்கும் நேரமாகிய நள்ளிரவு (இ.வ.); midnight as the time for removing the tāli of a woman on the death of her husband.

*[தாலி + வாங்கும் + நேரம்]*

**தாலு** *tālu,* பெ. (n.) 1. நாக்கு; tongue. 2. அண்ணம்; palate. 3. மூக்கறையின் பிற்பகுதி; the posterior portion of the nose (சா.அக.).

*[நால் → தால் → தாலு]*

**தாலுகண்டகம்** *tālu-kaṇḍagam,* பெ. (n.) குழந்தைகட்கு தாடையில் உண்டாகும் ஒரு வகை நோய்; a disease which form in the posterior portion of the nose to the children (சா. அக.).

*[தாலு + கண்டகம்]*

**தாலுகண்டரோகம்** *tālu-kaṇḍa-rōgam,* பெ. (n.) தாலுகண்டநோய் பார்க்க; see *tālu-kaṇḍa-nōy* (சா. அக.).

*[தாலுகண்டம் + ரோகம் → Skt. rōgā]*

**தாலுகண்டநோய்** tālu-kaṇḍa-nōy, பெ. (n.) தாலுகண்டகம் பார்க்க; see tālu-kaṇḍagam (சா. அக.).

*[தாலு + கண்டம் + நோய்.]*

**தாலுகண்ணி** tālu-kaṇṇi, பெ. (n.) வெள்ளைக்காக்கணம் (மலை.) பார்க்க; see veḻḻaikkākkaṇam; white flowered mussel-shell creeper (செ.அக.).

*[தாலு + கண்ணி.]*

**தாலுகத்தம்மை** *tālugattammai,* பெ. (n.) காட்டுமுள்ளி; wild nail-dye.

**தாலுகன்னி** *tālu-ganni,* பெ. (n.). தாலுகண்ணி பார்க்க; see *tālukaṇṇi.*

**தாலுகி** *tālugi,* பெ. (n.) அண்ணத்தின் இரு அரத்தக்குழாய்; the two arteries of the palate.

*[நால் → தால் → தாலு → தாலுகி.]*

**தாலுகை** *tālugai,* பெ. (n.) மேனாபல்லக்கு (யாழ். அக.); a kind of palanquin.

**தாலுசலபிரசோழம்** *tālu-šala-pira-šōḻam,* பெ. (n.) தாலுநீர்வறட்சி பார்க்க; see *tālu-nīr-varaṭci* (சா. அக.).

**தாலுசிகுவம்** *tālu-šiguvam,* பெ. (n.) முதலை (யாழ். அக.); crocodile.

**தாலுசீவம்** *tālu-šīvam,* பெ. (n.) *1.* உண்ணாக்கு; uvula. *2.* முதலை; crocodile (சா. அக.).

*[தாலு + சீவம்]*

**தாலுசீவிகம்** *tālu-šīvigam,* பெ. (n.) உண்ணாக்கு; uvula (சா. அக.).

*[தாலு + சீவிகம்]*

**தாலுசோசம்** *tālu-šōšam,* பெ. (n.) தாலுவேக்காடு பார்க்க; see *tālu-vēkkāḍu* (சா.அக.).

*[தாலு + சோசம்]*

**தாலுசோபம்** *tālu-šōbam,* பெ. (n.) அண்ணாக்கு வீக்கம்; swelling of the palate (சா.அக.).

*[தாலு + சோபம்]*

**தாலுநீர்வறட்சி** tālu-nīr-vaṟaṭci, பெ. (n.) தொண்டையிலும் அண்ணாக்கிலும் காணும் வறட்சி; morbid dryness of palate and throat (சா.அக.).

*[தாலுநீர் + வறட்சி.]*

**தாலுபாகம்** *tālu-pāgam,* பெ. (n.) உண்ணாக்குக் கட்டி; abscess in the palate marked by inflammation and suppuration (சா.அக.).

*[தாலு + பாகம்]*

**தாலுபாகரோகம்** *tālu-pāga-rōgam,* பெ. (n.) தாலுபாகநோய் பார்க்க; see *tālu-pāga-nōy* (சா.அக.).

*[தாலு + பாகம் + ரோகம்]*

**தாலுபாகநோய்** *tālu-pāga-nōy,* பெ. (n.) அண்ணாக்கில் சீழ்கொண்டு குத்தல் உண்டாக்கும் ஓர் நோய்; suppuration of the palate attended with pinprick sensation (சா.அக.).

*[தாலு + பாகம் + நோய்]*

**தாலுபாதம்** *tālu-pādam,* பெ. (n.) உண்ணாக்கு விழுதல் பார்க்க; see *uṇṇākku-viḻudal* (சா.அக.).

*[நாலு → தாலு + பாதம்]*

**தாலுபிடகம்** *tālu-piḍagam,* பெ. (n.) குழந்தைக்குக் காணும் ஓர் உண்ணாக்கு நோய்; a disease of the palate of children (சா. அக.).

*[தாலு + பிடகம்]*

**தாலுபீடகம்** tālu-pīḍagam, பெ. (n.) குழந்தைகட்குக் காணும் உண்ணாக்கு நோய்; a disease of the palate of children (சா. அக.).

*[தாலு + பீடகம்]*

**தாலுப்புடம்** *tālu-puppuḍam,* பெ. (n.) உண்ணாக்கு வீக்கம்; an indolent swelling or painless tumour of the palate of the shape and size of a jujubee (சா. அக.).

*[தாலு + புடம்]*

**தாலுப்பொதுச்செலவு** *tālu-p-podu-c-celavu,* பெ. (n.) பொது இடத்தில் அறம் செய்தல் முதலிய செயல்களுக்காகும் செலவு (சரவண. பணவிடு. 149); general expenditure of a public institution (செ. அக.).

*[தாலு + பொது + செலவு]*

**தாலுமூலம்** *tālu-mūlam,* பெ. (n.) *1.* உமிழ்நீர்க் கோளம்; salivary gland. *2.* உண்ணாக்கின் அடி; root of the palate (சா. அக.)

*[தாலு + மூலம்].*

**தாலுவறட்சி** *tālu-vaṟaṭci,* பெ. (n.). உண்ணாக்குக் காய்ந்து போதல்; drying of the palate (சா. அக.).

*[தாலு + வறட்சி]*

தாலுவறட்சி மிகுதியாகப் பேசுவதால் உண்டாகும்.

**தாலுவிசோடணம்** *tālu-visōḍaṇam,* பெ. (n.). தாலுவறட்சி பார்க்க; see *tālu-vaṟaṭci* (சா. அக.).

**தாலுவித்திரதி** *tāluvittiradi,* பெ. (n.). உண்ணாக்கு வீக்கம்; swelling of the palate (சா.அக.).

**தாலுவேக்காடு** *tālu-vēkkāḍu,* பெ. (n.). உண்ணாக்கு வேக்காடு; inflammation of the palate marked by repeated damage and severe bursting pain (சா.அக.).

*[தாலு + வேக்காடு]*

**தாலுறுத்து-தல்** *tāluṟuttu-,* 15 செ.குவி. (v.i.). தாலாட்டுதல்; to sing lullaby. "ஆந்தையுங் கூகையு மணிதா லுறுத்த" *(கல்லா. 87:21).*

*[தால் + உறுத்து-.]*

**தாலூரம்**[1] *tālūram,* பெ. (n.) 1. நீர்ச்சுழல்; whirlpool, eddy. 2. சுழல்காற்று; whirlwind (செ.அக.).

**தாலூரம்**[2] *tālūram,* பெ. (n.) குங்கிலியவகை; bastard sal (செ.அக.).

**தாவகம்** *tāvagam,* பெ. (n.) காட்டுத்தீ; forest fire. "தீவகம் புக்குத் தாவகங் கடுப்ப" *(பெருங். இலாவாண. 20, 6).*

**தாவங்கட்டை** *tāvaṅgaṭṭai,* பெ. (n.) முகவாய்; chin.

*[தாவம் + கட்டை]*

**தாவசி** *tāvaši,* பெ. (n.) தவசி பார்க்க; see *tavaši.*

**தாவட்டம்** tāvaṭṭam, பெ. (n.) 1. சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று (இருசமய. உலக வழக்கப். 2); a treatise on architecture, one of 32 ciṟpanūl. 2. ஒரு வகைக் கருங்கல் (வின்.); a kind of black stone.

*[தா + வட்டம்]*

**தாவடம்**[1] *tāvaḍam,* பெ. (n.) 1. அக்கமணி (உருத்திராக்கம்) மாலை; sacred elaeocarpus beads. 'கழுத்திலே தாவடம் மனத்திலே அவசடம்' 2. கழுத்திலணியும் மாலை (இ.வ.); necklace. 3. பூணூலை மாலையாக அணியும் முறை; a mode of wearing the sacred thread round the neck like a garland (செ. அக.)

தெ. தாவடமு

*[தாழ் + வடம் → தாவடம்]*

**தாவடம்**[2] *tāvaḍam,* பெ. (n.) தாவளம்[1] பார்க்க; see *tāvaḷam*[1].

*[தாழ்வு + இடம்]*

**தாவடி**[1] *tāvaḍi,* பெ. (n.) 1. பயணம் (யாழ்.அக.); journey. 2. போர் (யாழ். அக.); battle, fight, skirmish. 3. தண்டுகால் (தஞ்.); stride.

ம. தாவர (பயணம்); தெ. தாடி (படை எடுத்தல்)

*[தாவு + அடி]*

**தாவடி**[2] *tāvaḍi,* பெ. (n.) வேகமான நடை; speed walk. "சக்கரக் கோட்டத்தில் புறத் தளவு மேவருந் தானைத் தாவடி செலுத்தி" *(வீரராசேந்திரன் - மெய்க்கீர்த்தி).*

*[தாவு + அடி]*

**தாவடித்தோணி** *tāvaḍi-t-tōṇi,* பெ. (n.) கரை வரையிற் சென்று பகைக்கப்பலை அழிக்கும் தோணி (வின்.); boat going near the shore to cut out the vessels of an enemy.

*[தாவடி + தோணி]*

**தாவடிபோ-தல்** *tāvaḍi-pō-,* 8 செ.குவி. (v.i.). படையெடுத்தல்; to make an expedition. "அரசர் ஆயிரவர் மக்களொடு தாவடி போயினார்" *(நன். 51, மயிலை.).*

*[தாவடி + போ-.]*

**தாவடியிடு-தல்** *tāvaḍi-y-iḍu-,* 8 செ.குன்றாவி. (v.t.) தாவியடியிட்டளத்தல்; to measure by striding "இரண்டாமடி தன்னிலே தாவடியிட்டானால்" *(திவ். பெரியாழ். 2: 10: 7).*

*[தாவடி + இடு-.]*

**தாவணி**[1] *tāvaṇi,* பெ. (n.) கண்டங்கத்தரி (மலை.) பார்க்க; see *kaṇḍaṅkattari;* dwarf wild brinjal).



**தாவணி**[2] *tāvaṇi,* பெ. (n.) 1. கண்டங்கத்திரி; prickly night shade - Solanum jacquini. 2. நாகபாலை; sweet smelling harefoot - Uraria lagopoides. 3. முள்வெள்ளரி; thorny cucumber (சா. அக.).

**தாவணி**[3] *tāvaṇi,* பெ. (n.) 1. பல மாடுகளைக் கட்டும் தும்புகள் பிணைத்த கயிறு (வின்.);

a long rope to tie cattle in a row. *2.* **மாட்டுச் சந்தை** *(இ.வ.);* cattle - fair. *3.* **மாட்டைக் கூட்டமாகக் கட்டுமிடம்** *(சங். அக.);* cattle-shed.

*[தாம்பணி → தாவணி.]*

**தாவணி**[4] *tāvaṇi,* பெ. (n.) *1.* **சிறுபெண்கள் சட்டைமேல் அணியும் மேலாடை;** a piece of cloth worn generally by girls over their petticoats. *2.* **பிணத்தின் மேல் இடுந்துணியி-லிருந்து, சுற்றத்தார் நினைவாகக் கொள்ளும் சிறுதுண்டு** *(கிறித்.);* pieces from the shroud kept as relic of the deceased. *3.* **குதிரையின் மேலாடை** *(இ.வ.);* saddle cloth.

*[தாவு + அணி → தாவணி.]*



**தாவணியடி-த்தல்** *tāvaṇi-y-aḍi-,* 4 செ.குவி. (v.i.). தாவளம்போடு-தல் (இவ.) பார்க்க; see *tāvaḷam-pōḍu-*.

*[தாவணி + அடி -]*

**தாவதன்** *tāvadan̲,* பெ. (n.). **தாபதன்** பார்க்க; see *tābadan̲*. "தாவதர்க்கினிய காய் கிழங்குகனி தந்து" *(சேதுபு. பாவநாச. 19).*

*[தாபதன் → தாவதன்]*

**தாவந்தம்** *tāvandam,* பெ. (n.) *1.* **வறுமை** (இ.வ.); poverty. *2.* **துன்பம்;** distress *(செ. அக.).*

தெ. தாவந்தமு

**தாவம்**[1] *tāvam,* பெ. (n.) *1.* **காட்டுத்தீ** *(பிங்.);* forest-fire. *2.* **காடு** *(பிங்.);* forest. *3.* **தீ** *(தைலவ. தைல.);* fire. *4.* **மரப்புழு** *(திவா.);* wood-worm.

**தாவம்**[2] *tāvam,* பெ. (n.) *1.* **வெப்பம்;** heat. *2.* **துன்பம்;** distress. "தன்மனங் கொண்டவ டாவ முற்றி" *(பெருங். உஞ்சைப். 36, 311).*

*[தாபம் → தாவம்]*

**தாவயம்** *tāvayam,* பெ. (n.) **மலை முருங்கை;** mountain drumstick *(சா. அக.).*

**தாவரி[1]-த்தல்** tāvari-, 4 செ.குவி. (v.i.) **தங்குதல்;** to lodge, abide, obtain, shelter.

**தாவரி[2]-த்தல்** tāvari-, 4 செ.குன்றாவி. (v.t.) **பாதுகாத்தல்;** to protect, shelter, maintain, preserve *(செ. அக.).*

*[தாவு + அரி- = தீமை கண்ட ஞான்று விரைந்து தாவிச்சென்று அழித்தல்.]*

**தாவல்**[1] *tāval,* பெ. (n.) *1.* **தாண்டுகை** *(சூடா.);* leaping, crossing. *2.* **பரப்பு** *(பிங்.);* wideness, expanse.

*[தாவு → தாவல்]*

**தாவல்**[2] *tāval,* பெ. (n.) **வருத்தம்;** distress. "தாவலுய்யுமோ" *(பதிற்றுப். 41. 17).*

*[தாவு[2] → தாவல்]*

**தாவல்**[3] tāval, பெ. (n.) **தாவுதல்;** spreading as creepers climbing over adjacent plant *(சா. அக.).*

**தாவழக்கட்டு** *tāvaḻ-a-k-kaṭṭu,* பெ. (n.) **கால்நடைகளின் கழுத்தையும் முன் காலையும் பிணிக்குங் கயிறு** *(யாழ்ப்.);* rope for tying the neck of cattle to the foreleg.

*[தாழ் + வடம் → தாவடம் → தாவழம் + கட்டு]*



**தாவள-த்தல்** *tāvaḷa-,* 3 செ.குன்றாவி. (v.t.) **அடியால் தாவியளத்தல்;** to measure by striding. "தாவளந் துலகமுற்றும்" *(திவ். பெரியதி. 4: 6: 1).*

**தாவளக்காரர்** *tāvaḷa-k-kārar,* பெ. (n.) **பல்வேறு நாட்டு வணிகர்;** traders from distant parts. 2. **பொதிமாட்டுக்காரர்;** those who keep oxen for carrying burdens *(செ. அக.).*

*[தாவளம் + காரர்]*

**தாவளம்** *tāvaḷam,* பெ. (n.) 1. **தங்குமிடம்;** lodging, place of residence. "மன்னர்க் கெல்லாந் தாவளஞ் சமைந்ததென்ன" *(உத்தரரா. அசுவமேத. 23).* 2. **மருதநிலத்தூர்** (பிங்.); town or city of marutam tract. 3. **பற்றுக்கோடு;** support, prop. "தளர்ந்தார் தாவளம் என்கிறது" *(ஈடு. 6: 1: 2)* (சா. அக.).

ம. தாவளம்; தெ. தாவலமு, தாவு

*[தாழ்வளம் → தாவளம்]*

**தாவளம்போடு-தல்** *tāvaḷam-pōḍu-,* 20 செகுவி. (v.i.) **ஒருவன் வீட்டில் தங்கி விடுதல்** (இ.வ.); to quarter oneself unnecessarily in another's house *(செ. அக.).*

*[தாவளம் + போடு-.]*

**தாவளி**[1] *tāvaḷi,* பெ. (n.) 1. **கம்பளம்;** woolen cloth, blanket. "மடிதாவளி" *(உ.வ.).* 2. **கண்டங் கத்திரி;** prickly night shade - Solanum jacquini *(செ. அக.).*

**தாவளி**[2] *tāvaḷi,* பெ. (n.). **தாவளியம்** (இ.வ.) பார்க்க; see *tāvaḷiyam.*

**தாவளி**[3] *tāvaḷi,* பெ. (n.). **தாவணி**[1] (சங்.அக.) பார்க்க; see *tāvaṇi*[1].

**தாவளியம்** *tāvaḷiyam,* பெ. (n.) **வெண்மை** (உ.வ.); whiteness.

**தாவளை** *tāvaḷai,* பெ. (n.) 1. **நோய் தணிந்திருக்குகை;** improvement in health. 2. **ஒன்றைவிட மேலாயிருக்கை;** being preferable or more tolerable, as in comparison *(செ. அக.).*

*[தா → தாழ்வு + இல்லை → தாவழை → தாவளை]*

**தாவளையம்** *tāvaḷaiyam,* பெ. (n.) **குதி;** jump. "காளியன் சீறும்படி தாவளையத்திலே வாலைப் பற்றி இழுத்து" *(திவ். பெரியாழ்.: 2: 10: 3: வ்யா. பக். 490: 1).*

*[தாவம் + வளையம்]*

**தாவனம்**[1] *tāvaṉam,* பெ. (n.) **தூய்மை செய்கை;** purifying, cleansing as the teeth. 'தந்த தாவனம்' *(வின்.).*

**தாவனம்**[2] *tāvaṉam,* பெ. (n.) **ஏற்படுத்துதல்;** establishing. "கந்தமாதனத்திலே தாவனஞ் செய் முக்கண்மூர்த்தி தன்னை" *(சேதுபு. இராமநா: 2).*

**தாவனி** *tāvaṉi,* பெ. (n.) **மருந்துநீர்;** lotion *(சா. அக.).*

**தாவா**[1] *tāvā,* பெ. (n.) **வெண்கருங்காலி அல்லது வெக்காலி;** white sandara *(சா. அக.).*

*[தரு → தார் → தாவா = இயற்கை தந்த மரம்]*

**தாவா**[2] *tāvā,* பெ. (n.) **பிணக்கு, தகராறு;** dispute.

நதிநீர்ப் பங்கிட்டுத் தாவாவைத் தீர்க்க நடுவர் மன்றம் அமைக்கப்பட்டது.

*[தா → தாவா]*

**தாவாக்கினி** *tāvā-k-kiṉi,* பெ. (n.) **சிறு கல்லூரி;** an unknown plant said to consolidate sea salt *(சா. அக.).*

**தாவாரங்காதிபாதம்** *tāvāraṅgādi-pādam,* பெ. (n.) **பூண்டுகளின் அமைப்பு திரிபு முதலியவற்றைப் பற்றிய நூல்;** the science which deals with structure and the phenomena of plants *(சா. அக.).*

**தாவாசற்பீடம்** *tāvāšaṟ-pīḍam,* பெ. (n.) **பெண்ணின் பிறப்புறுப்பு;** woman's genital organ *(சா. அக.).*

**தாவானலம்** *tāvāṉalam,* பெ. (n.) **காட்டுத்தீ;** wild fire *(சா. அக.).*

மறுவ. கொடுந்தீ

**தாவி-த்தல்** *tāvi-,* 4 செ.குன்றாவி. (v.t.) **நிலை நிறுத்தல்;** to establish. "சிவத்திடைத் தாவிக்கு மந்திரந் தாமறியாரே" *(திருமந்: 1842).*

*[தரு → தா → தாவி-.]*

**தாவிப்பேசு-தல்** *tāvi-p-pēsu-,* 5 செ.கு.வி. (v.i.) சினம் முதலியவற்றால் தடுமாற்றத்துடன் பேசுதல் (வின்.); to speak in an incoherent manner, as in wrath.

*[தாவி + பேசு-.]*

**தாவிலை** *tāvilai,* பெ. (n.) தாவளை பார்க்க; see tāvaḷai. உடம்பு இப்போது தாவிலை (இ.வ.).

*[தாழ்வில்லை → தாழ்விலை → தாவிலை.]*

**தாவிளை** *tāviḷai,* பெ. (n.) தாவளை (இ.வ.) பார்க்க; see *tāvaḷai.*

**தாவு[1]-தல்** *tāvu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **குதித்தல்;** to jump up, leap, to skip over. "கலைதாய வுயர்சிமையத்து" (*மதுரைக். 332*). 2. **பரத்தல்;** to spread. "மலர்தாய பொழினண்ணி" (*கலித். 35*). 3. **தழைத்தல்;** to be luxuriant. "தாயதோன்றி" (*பரிபா. 11, 21*). 4. **பறத்தல்;** to fly. "விண்ணிற் மேற்றாவும் புள்ளும்" (*பெரியபு. திருநா: 305*). 5. **சாய்தல்** (வின்.); to move towards. 6. **ஊடு செல்லுதல்;** to radiate, as heat. 'சூடு தாவுகிறது'. 7. **செருக்குதல்;** to be proud, haughty. அவன் மிகவும் தாவுகிறான் (உ.வ.).

*[துவல் = விரைவு, துவலுதல் = விரைதல் துவவு → தூவு → தாவு-.]*

**தாவு[2]-தல்** *tāvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. **தாண்டுதல்;** to leap over, cross. "கடல்தாவு படலம்" (*கம்பரா.*) 2. **பாய்ந்து எதிர்த்தல்** (வின்.); to spring upon, attack, prey upon. 3. **கடத்தல்;** to pace out a distance. "உலகளந்தான் றாஅயது" (*குறள், 610*).

*[தா → தாவு-.]*



**தாவு[3]-தல்** *tāvu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **கெடுதல்;** to perish, decay, usually used in negative forms. "தாவாத வின்பம்" (*சீவக. கடவுள். 1*). 2. **ஒழிதல்;** to be removed; to disappear. "இருவகைத் தாவா துறுப்பிற் றங்க" (*ஞான. 7:5*).

த. தாவு; Skt. dhāv (வ.மொ.வ. 176) (இ.வே.)

*[(தூவு →) தாவு-.]*

**தாவு[4]** *tāvu,* பெ. (n.) 1. **பாய்கை;** jumping, leaping. "ஒரு தாவுத் தாவினான்" 2. **செலவு** (பிங்.); moving, going. 3. **குதிரை நடைவகை** (வின்.); galloping, a pace of horse. 4. **எதிர்ப்பு** (வின்.); hostility, hostile attack. 5. **வலிமை;** strength, valour, power. "வேலை செய்து அவனுக்குத் தாவு தீர்ந்துவிட்டது" (உ.வ.) (செ. அக.).

*[தா → தாவு]*

**தாவு[5]** *tāvu,* பெ. (n.) 1. **கேடு;** ruin. "தாவில் விளக்கந்தரும்" (*குறள், 853*) (செ.அக.). 2. **உறைவிடம்** (வின்.); resting place, lodging, shelter. 3. **கப்பல்களின் ஒதுக்கிடம்** (வின்.); harbour. 4. **பற்றுக்கோடு** (வின்.); support. 5. **பள்ளம்** (இ.வ.); valley, depression. 6. **வலி;** pain. 7. **வருத்தம்;** distress.

தெ., க. தேவு

*[தாழ்வு → தாவு-.]*

**தாவுரி** *tāvuri,* பெ. (n.) **விடையோரை;** one among the twelve in the zodiac (இரு.நூற்.பே.).

**தாவுவண்ணம்** *tāvu-vaṇṇam,* பெ. (n.). **தாஅவண்ணம்** பார்க்க; a kind of rhythm. "தாவுவண்ணமாவது இடையிட்டுவந்த எதுகைத்தாவது" (*வீரசோ. யாப். 36*).

*[தாவு + வண்ணம்]*

**தாழ்[1]-தல்** *tāḻ-,* 2 செ.கு.வி. (v.i.) 1. **கீழே தாழ்தல்;** to fall low; to be lowered, as a balance. "வலிதன்றே தாழுந் துலைக்கு" (*நீதிநெறி. 17*). 2. **கூரை தணிந்திருத்தல்;** to be low, as a roof. 3. **மேலிருந்து விழுதல்;** to flow down, descend. "பொங்கருவி தாழும் புனல்வரை" (*நாலடி, 231*). 4. **சாய்தல்;** to decline, as the sun. வெயில் தாழ வா. 5. **அமிழ்தல்;** to sink in water. "இன்னலங்

கடலுட் டாழ்ந்து" (உபதேசகா. சிவத்துரோ. 106). 6. நிலைகெடுதல்; to sink in circumstances, in repute, to diminish in splendour or power, to decrease, decay, degenerate, deteriorate. "அந்தரத் தகிலகோடி தாழாம னிலைநிற்க வில்லையோ" (தாயு. பரிபூரண. 9). 7. மனங் குலைதல்; to despond; to be dejected. "தாழ்ந்த மனந்தனைத் தெளிவித்து" (பிரமோத். 13, 61). 8. காலம்தாழ்த்தல்; to delay, to be behindhand, indolent. "தாழாது போவா மெனவுரைப்பின்" (நாலடி, 342). 9. தோற்றல்; to prove inferior, to fail in comparison, competition or battle. அவன் போரில் பகைவனுக்குத் தாழ்ந்து விட்டான் (உ.வ.). 10. தங்குதல்; to stay, rest, stop, halt. "மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார்" (சிலப். 17: படர்க்கை). 11. நீண்டுதொங்குதல்; to hang down, to be suspended, as the arms, as locks of hair. "தாழ்ந்த கைகளும்" (கம்பரா. மிதிலை. 56). 12. பதிதல் (வின்.); to be inlaid, as gold; to set in, as colours; to abide in, as lustre in a gem. 13. ஆழ்ந்திருத்தல்; to be deep. "தாழ்வடுப்புண்" (பு.வெ: 10, சிறப்பிற். 11). 14. ஈடுபடுதல்; to be engrossed in an object or pursuit. "இராப்பக னைந்திவ டாழ்கின்றதே" (பதினொ. பொன்வண். 38). 15. தழைத்தல்; to sprout. "பொதும்பர் தானாறத் தாழ்ந்தவிடம்" (திணைமாலை. 29). 16. வளைதல்; to bend, droop, to be bowed down. "தாழ்குர லேனல்" (பு.வெ: 12: பெண்பாற்: 16). 17. மெல்லோசையாதல்; to become low or subdued, as a sound. "தாழ் தீங்குழலும்" (மணிமே. 2:21). 18. அழிதல்; to be ruined. "தாழுங் காலத்துந் தாழ்வில" (கம்பரா. மராமர: 1).

க. தாழ்; ம. தாழுக; தெ. தாழு.

*[தள் → தாள் → தாழ்-.]*

**தாழ்²-தல்** *tāḻ-*, 2 செகுன்றாவி. (v.t.) 1. வணங்குதல் (பிங்.); to bow, to worship. 2. விரும்புதல்; to desire, to be eager for. "தண்டாமரை யவ டாழுந் தகையன" (சீவக. 523).

*[தாள் → தாழ்-.]*

**தாழ்³-த்தல்** *tāḻ-*, 4 செகுன்றாவி. (v.t.) 1. தாழச் செய்தல்; to bow down, let down, to deepen, depress. "நின்றலையைத்தாழ்த் திருகை கூப்பு" (திவ். இயற். பெரியதிருவந். 84). 2. தாழ்மைப் படுத்துதல்; to degrade. "இன்றிவட்டாழ்த்து" (பெருங். வத்தவ. 5: 45).

**தாழ்⁴-த்தல்** *tāḻ-*, 4 செ.குவி. (v.i.) 1. காலந் தாழ்தல்; to wait, stay, delay. "தாழ்த்திடாமல் மின்னிடை வெந்தீத் தம்மின்" (சேதுபு. சங்கரா. 71). 2. மந்தமாயிருத்தல் (சூடா.); to be slow, dull.

**தாழ்⁵** *tāḻ*, பெ. (n.) 1. தாழக்கோல்; bolt, bar, latch. "தம்மதி றாழ்வீழ்த் திருக்குமே" (பு.வெ. 10. 5). 2. மதகுகளையடைக்கும் மரப்பலகை (நாஞ்.); spear shutter. 3. விரல் அணிவகை; a kind of finger-ring. "சிறுதாழ் செறித்த மெல்விரல்" (நற். 120). 4. வணக்கம்; worship, homage. "தாழுவந்து தழூஉ மொழியர்" (புறநா. 360: 3). 5. நீளம் (யாழ். அக.); length.

ம. தாழு; க. தாழ்; தெ. தாளமு (திறவுகோல்); து. தார்கொலு, தார்கோலு; கோத. தாகோல்; துட. தொர்த்; குட. தாளி

*[துல் → தல் → தள் → தாழ்]*

**தாழ்⁶** *tāḻ*, பெ. (n.) 1. சுவர்ப்புறத்து நீண்ட தாங்குகல் (யாழ்.அக.); blocks in a wall to support beams. 2. மகளிர் சட்டையை முடிக்கும் இடம்; the fastening end of a bodice.

*[தா → தாழ்]*



**தாழ்⁷** *tāḻ*, பெ. (n.) 1. முயற்சி; effort. 2. தாள்; foot (வடமலை நிகண்டு).

*[தள் → தாள் → தாழ்.]*

**தாழ்க்கி** *tāḻkki*, பெ. (n.) சான்று (T.A.S. iii. 31); witness.

**தாழ்க்கோல்** *tāḻ-k-kōl*, பெ. (n.) தாழக்கோல் பார்க்க; see *tāḻa-k-kōl* (செ.அக.).

க. தாளுகோல்

*[தாழ் + கோல்]*

**தாழ்குழல்** *tā]-kuḻal,* பெ. (n.) தாழ்ந்த கூந்தலையுடைய பெண்; woman, as having flowing locks. "பல்லவத்தின் சந்தமடிய வடியான் மருட்டிய தாழ்குழலே" *(காரிகை. பாயி: 1).*

*[தாழ் + குழல்]*

**தாழ்கோ-த்தல்** *tāḻ-kō-,* 4 செ.கு.வி. (v.i.) தாழிடுதல்; to bolt a door. "ஒளித்தறை தாழ்கோத் துள்ளகத் திரீஇ" *(மணிமே. 4:88).*

*[தாழ் + கோ-.]*

**தாழ்ச்சி** *tāḻcci,* பெ. (n.) 1. தாழ்கை; bending. 2. ஆழம்; depth. 3. வணக்கம்; humility, submissiveness. 4. கீழ்மை; inferiority, meanness, baseness, vileness. "மடவார் தாழ்ச்சியை மதியாது" *(திவ். திருவாய். 2: 10:2).* 5. குறைவு; deficiency, want, scarcity, arrears. 6. சீர்கேடு; deterioration, degradation; loss; decay of wealth, power, etc. 7. ஈடுபடுகை; being engrossed. "தாழ்ச்சிமற் றெங்குந் தவிர்ந்து" *(திவ். திருவாய். 3:2:4).* 8. காலநீட்டிப்பு; delay, procrastination. "தாழ்ச்சியுட் டங்குத றீது" *(குறள், 671).* 9. மானக்கேடு; dishonour, discredit, disgrace. 10. ஏலாமை (வின்.); incompetency, inadequacy.

ம. தாழ்ச

*[துள் → தள் → தழு → தாழ் → தாழ்ச்சி. தாழ்ச்சி = பழித்தற் கருத்தினின்று கிளைத்த சொல்லாகும். பழித்தலாவது, மதிப்பால் இறக்குதல். ஒருவரைப் பழித்தவென்பது மேலிருந்து கீழும், மேட்டிலிருந்து பள்ளத்திற்கு இறக்குதல் போன்றதாம்]*

**தாழ்சடை** *tāḻ-šaḍai,* பெ. (n.) நீண்ட சடை; long pigtail.

*[தாழ் + சடை]*

**தாழ்சடைக்கடவுள்** *tāḻ-šaḍai-k-kaḍavuḷ,* பெ. (n.) தாலாங்கன் பார்க்க; see *tālāṅgan.*

*[தாழ் + சடை + கடவுள்.]*

**தாழ்சீலை** *tāḻ-šīlai,* பெ. (n.) கோவணம்; covering for the privities (செ.அக.).

*[தாழ் + சீலை]*



**தாழ்த்தப்பட்டஇனம்** *tāḻtta-p-paṭṭa-iṉam,* பெ.அ. (adj.) கல்விக்கும், பொருளியல் முன்னேற்றத்துக்கும் சலுகை தருவதற்காக அரசால் அறிவிக்கப்பட்ட இனம்; communities identified by the government as needing special attention because of their economic and social backwardness.

*[தாழ் → தாழ்த்தப்பட்ட + இனம்.]*

**தாழ்த்தி**[1] *tāḻtti,* பெ. (n.) 1. கீழாயிருக்கை (உ.வ.); lowness in rank, inferiority. 2. மானக்குறைவு (வின்.); dishonour (செ. அக.).

*[தாழ் → தாழ்த்தி]*

**தாழ்த்தி**[2] *tāḻtti,* பெ. (n.) குறிப்பிட்டதோர் கடற்பரப்பில் ஆழத்தைக் கணக்கிட அல்லது அறிந்து கொள்ள ஏதுவாகும் இரும்புக் குண்டு (முகவை. மீனவ.); iron ball used to measure the depth of sea at a particular area.

*[ஆழ் → தாழ் → தாழ்த்தி]*

**தாழ்த்திப்புடை-த்தல்** *tāḻtti-p-puḍai-,* 4 செ. குன்றாவி. (v.t.) முறத்தில் தவசத்தைக் கொழிக்கையில், தவசத்தை வெலெறிந்து முறத்தைத் தாழ்த்தி வாங்குதல்; to receive the winnowing grains by keeping the fan in a lower condition while winnowing.

*[தாழ → தாழ்த்தி + புடை.]*

**தாழ்த்து-தல்** *tāḻttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தாழச்செய்தல்; to bring low, lower, let down, deepen. 2. குறைத்தல்; to reduce, deminish. "விலையைத் தாழ்த்தி விற்கிறான்" *(யாழ். அக).*

3. கீழ்ப்படுத்துதல்; to keep under control, compel obedience. 'அவனை ஏறவிடாது தாழ்த்தி வைத்துக் கொள்'. 4. மானக்கேடு செய்தல்; to degrade, disgrace. 5. காலத்தாழ்வு செய்தல்; to delay, waste time. 6. தங்கச்செய்தல்; to make a person or object stay. "வானவர்க டாம்வாழ்வான் மனநின்பால் தாழ்த்துவதும்" (திருவாச. 5:16). 7. விதைத்தல் (யாழ்ப்.); to implant, plant, as seeds. 8. புதைத்தல் (வின்); to set, to burry, inter, sink. 9. நீரில்அமிழ்த்துதல் (வின்); to immerse, submerge (செ. அக.).

ம. தாழ்த்துக

[ஒருகா. ஆழ் → தாழ் → தாழ்த்து-.]

**தாழ்த்து** *tāḻttu,* பெ. (n.) தாயித்து (இ.வ.); amulet, charm (செ.அக.).

[தாயித்து → தாழ்த்து]

**தாழ்ந்தஅகவை** *tāḻnda-agavai,* பெ. (n.) 1. குறைந்த அகவை (இ.வ.); tender age. 2. முதிர்ந்த பருவம் (வின்.); declining age.

[தாழ்ந்த + அகவை]

**தாழ்ந்தகுணம்** *tāḻnda-guṇam,* பெ. (n.) 1. இழிதகைமை; base character. 2. அமைதி; calm temper; modesty (செ. அக.).

[தாழ்ந்த + குணம்]

**தாழ்ந்தசாதி** *tāḻnda-sādi,* பெ. (n.) கீழ்த்தர சாதி (இ.வ.); low-caste.

[தாழ்ந்த + சாதி]

**தாழ்ந்தபலன்** *tāḻnda-palaṉ,* பெ. (n.) குறைந்த வருவாய் (வின்.); slight or low profit.

[தாழ்ந்த + பலன்]

**தாழ்ந்தபூமி** *tāḻnda-pūmi,* பெ. (n.) 1. பள்ளமான நிலம் (வின்.); low land. 2. உரமில்லா நிலம், வளமில்லா நிலம் (உ.வ.); soil of poor quality.

[தாழ்ந்த + பூமி]

**தாழ்ந்தவயசு** *tāḻnda-vayašu,* பெ. (n.). தாழ்ந்தஅகவை பார்க்க; see *tāḻnda-agavai.*

[தாழ்ந்த + வயசு]

Skt. vyas

**தாழ்ந்தார்** *tāḻndār,* பெ. (n.) 1. பணிவுள்ளவர்; humble persons. "தாழ்ந்தா ருயர்வ ரென்றும்" (பிரபுலிங். மாயை. 14). 2. இழிந்தோர்; low, mean persons (செ. அக.).

[தாழ் → தாழ்ந்தார்.]

**தாழ்ந்துகொடு-த்தல்** *tāḻndu-koḍu-,* 4 செ.குவி. (v.i.) இணங்கிப்போதல்; to yield; to be accommodating; to be affable (செ.அக.).

[தாழ்ந்து + கொடு-.]

**தாழ்ந்துபடு-தல்** *tāḻndu-paḍu-,* 20 செ.குவி. (v.i.) ஓரிடத்தே சேர்ந்து தங்குதல்; to stay together. "அண்ணலிரலை . . . பிணைதழீஇத் தண்ணறல் பருகித் தாழ்ந்து பட்டனவே" (அகநா. 23).

[தாழ்ந்து + படு-.]

**தாழ்ந்துபோ-தல்** *tāḻndu-pō-,* 8 செ.குவி. (v.i.) 1. ஒப்புமையிற் குறைதல்; to fail in comparison, to be inferior. 2. இழிந்த நிலையடைதல்; to degenerate, as in morals, character or social position. "உயர்குலத்தவனும் அவன் செய்கையால் தாழ்ந்துபோவான்" 3. தாழ்ந்துகொடு-த்தல் பார்க்க; see *tāḻndu-koḍu-*. வேலைமுடியும் வரை தாழ்ந்துபோ (உ.வ.).

[தாழ்ந்து + போ-.]

**தாழ்ந்தொழி-தல்** *tāḻndoḻi-,* 4 செ.குவி. (v.i.) நோய்குறைந்து குணப்படல்; to disappear of the disease (சா. அக.).

[தாழ்ந்து + ஒழி-.]

**தாழ்ப்பம்** *tāḻppam,* பெ. (n.) ஆழம் (யாழ்ப்.); depth, as of water.

[தாழ் → தாழ்ப்பம்]

**தாழ்ப்பாட்கட்டை**[1] *tāḻppāṭ-kaṭṭai,* பெ. (n.). 1. கதவைச் செறிக்கும் சிறு மரக்கட்டை; small wooden bolt. 2. கதவை மூடப் பயன்படுத்தும் குறுக்குமரம்; bar of wood placed across a door, cross bar.

[தாழ்ப்பாள் + கட்டை]

**தாழ்ப்பாட்கட்டை**[2] *tāḻppāṭ-kaṭṭai,* பெ. (n.) 3. அறிவற்றவ-ன்-ள் (இ.வ.); blockhead.

[தாழ்ப்பாள் + கட்டை]

**தாழ்ப்பாள்** *tāḻppāḷ,* பெ. (n.) **கதவு செறிக்குந் தாழ்;** bolt, bar, latch *(செ. அக.).*

க. தாபாலு

*[தாழ் + பாள்]*

**தாழ்ப்பாளர்** *tāḻppāḷar,* பெ. (n.) **உரிய காலத்தை எதிர்பார்த்திருப்பவர்;** one who bides one's time. "தலையாளர் தாழ்ப்பாளர்" *(ஏலாதி, 56).*

*[தாழ்ப்பு + ஆளர்]*

**தாழ்ப்பு** *tāḻppu,* பெ. (n.) *1.* **இறக்குகை;** lowering. *2.* **புதைக்கை** *(வின்.);* burying, inserting, planting. *3.* **நீரில்அமிழ்த்துகை** *(வின்.);* immersion. *4.* **காலத்தாழ்வு;** delay.

*[தள் → தழு → தாழ் → தாழ்ப்பு = காலந்தாழ்த்தல். தாழ்வாயிருக்கை. தாழ்வாயுள்ள நீரில் அமிழ்த்துகை. தாழ்வாயுள்ள கிணற்றுப் பள்ளத்தில் உறையினை இறக்குகை.]*

**தாழ்பீலி** *tāḻ-pīli,* பெ. (n.) **சிறுசின்னம்;** small reed instrument. "இணையில வெழுந்த தாழ்பீலி யெங்கணும்" *(சீவக. 2222).*

*[தாழ் + பீலி]*

**தாழ்புயல்** *tāḻ-puyal,* பெ. (n.) **காலிறங்கின முகில்;** raining cloud. "தாழ்புயல் வெள்ளந் தருமரோ" *(பு.வெ. 9:10).*

*[தாழ் + புயல்]*

**தாழ்மை** *tāḻmai,* பெ. (n.) *1.* **பணிவு** *(பிங்.);* humility. *2.* **கீழ்மை** *(பிங்.);* inferiority, as in rank; lowliness of mind. 'நாம் வீழ்ந்துகிடக்கும் தாழ்மையிலிருந்து விடுபடும் வழி என்ன?' *(இக்வ.).* *3.* **இழிவு** *(பிங்.);* degradation, baseness. *4.* **வறுமை;** poverty. *5.* **காலத்தாழ்ப்பு** *(சங்.அக.);* delay.

ம. தாழ்ம, தாண்ம; க. தாளிமெ; தெ. தாளமி; து. தாள்மே

*[தாழ் → தாழ்மை. தாழ்மை = வறுமை. வறுமையினால் வந்த கீழ்மை. பணிவு.]*

**தாழ்வடம்** *tāḻvaḍam,* பெ. (n.) *1.* **கழுத்தணி;** necklace of pearls or beads. 'தாவி றாழ்வடம் தயங்கு' *(சீவக. 2426).* *2.* **அக்கமணிமாலை** *(உருத்திராக்கமாலை);* string of rudrākṣa beads. "மார்பின் மீதிலே தாழ்வடங்கள் மனதிலே கரவடமாம்" *(தண்டலை. சத. 29).*

ம. தாழ்வடம்; க. தாவட; தெ. தாவடமு

*[தாழ் + வடம்]*

**தாழ்வயிறு** *tāḻ-vayiṟu,* பெ. (n.) *1.* **சரிந்த வயிறு;** protruding abdomen. *2.* **தாழ்ந்த வயிறு;** relaxed abdomen. *3.* **கருவுயிர்ப்பின் ஓர் அறிகுறி;** symptom of approaching delivery in which the abdomen is relaxed *(செ. அக.).*

*[தாழ் + வயிறு]*

**தாழ்வர்** *tāḻ-var,* பெ. (n.) தாழ்வரை பார்க்க; see *tāḻ-varai.* "வரைத்தாழ்வர் கண்டு" *(சூளா. சீய. 155).*

*[தாழ் + வர். வரை → வர்.]*

**தாழ்வரி** *tāḻvari,* பெ. (n.) **கோழிக்கீரை;** a kind of greens *(சா. அக.).*

*[தாழ் + வரி]*

**தாழ்வரை** *tāḻ-varai,* பெ. (n.) **மலையடிவாரம்;** foot of a mountain. "ஏனலெங் காவ லித்தாழ்வரையே" *(திருக்கோ. 130).*

ம. தாழ்வர; க. தாழ்வர்

*[தாழ் + வரை]*

**தாழ்வறை** *tāḻ-v-aṟai,* பெ. (n.) நிலவறை *(இ.வ.);* vault, underground cellar.

ம. தாழ்வற; க. தாழ்வரி; து. தக்கு

*[தாழ் + அறை]*

**தாழ்வாய்** *tāḻvāy,* பெ. (n.) *1.* **மோவாய்** *(பிங்.);* chin. *2.* **மோவாய் எலும்பு;** bone fo the chin.

*[தாழ் + வாய்]*

**தாழ்வாய்க்கட்டை** *tāḻvāy-k-kaṭṭai,* பெ. (n.). **தாழ்வாய்** பார்க்க; see *tāḻ-vāy.*

*[தாழ்வாய் + கட்டை]*

**தாழ்வாரம்** *tāḻvāram,* பெ. (n.) *1.* **தாழ்ந்த இறப்பு** *(வின்.);* sloping roof. *2.* **வீட்டைச்சாரப் புறத்தே சாய்வாக இறக்கப்பட்ட இடம்;** leanto, penthouse. வந்தவர் தாழ்வாரத்தில் அமர்ந்தார் *(உ.வ.).*

ம. தாழ்வார, தாழ்வர; க. தாழ்வார; தெ. தாள்வாரமு

*[தாழ் + வாரம்]*

**தாழ்விசைஇணைப்புத்திறம்** *tā̱lvišai iṇaipputtiṟam,* பெ. (n.) மிகக்குறைந்தளவு முன்னோக்கு இயக்க வேகம் உடையதாக இயங்கு உறுப்புகளை அமைத்தல்; fixing low gear.

*[தாழ் + விசை + இணைப்பு + திறம்.]*

**தாழ்வு** *tā̱lvu,* பெ. (n.) *1.* பள்ளம் *(உரி.நி.);* depth, as a pit. *2.* குறுமை; shortness. "தாழ்வினொச்சி" *(அகநா. 23). 3.* மானக்கேடு, இழிவு; degradation. *4.* குற்றம்; fault, defect. "தாழ்விலூக்கமொடு" *(பு.வெ. 10: 5: கொளு). 5.* தொங்கல் *(வின்.);* hanging, pendant. *6.* வறுமை; poverty. "நன்றிக்கட் டங்கியான் றாழ்வு" *(குறள், 117). 7.* அடிவாரம்; foot, as of a mountain. "வெள்ளி மால்வரைத் தாழ்வதில்" *(சீவக. 1771). 8.* தங்குமிடம்; resting place, abode. "தன்குடங்கை நீரேற்றான் றாழ்வு" *(திவ். இயற். 3.62). 9.* அடக்கம்; self-control, modesty. "தாழ்வின்றிக் கொன்னே வெகுளி பெருக்கலும்" *(திரிகடு. 38). 10.* துன்பம்; distress. "என் றாழ்வுகெடத் தேற்றாய்" *(திருவிளை. பழியஞ்சி. 32). 11.* வணக்கம்; prostration in worship. "தாழ்வுற் றிடுவோ ருமைசங்கரனை" *(கந்தபு. தெய்வ: 220).*

ம. தாழ்வு

*[துள் → தள் → தழ் → தாழ் → தாழ்வு. தாழ்வு → ஏழ்மை. தாழ்மை → தாழ்மையினால் விளைந்த வறுமை, வறுமை தந்த துன்பம்.]*

**தாழ்வுகூரை** *tā̱lvu-kūrai,* பெ. (n.) சாய்வான கூரை (c.e.m.); sloping roof.

*[தாழ்வு + கூரை]*



**தாழ்வுணர்ச்சி** *tā̱l-v-uṇarcci,* பெ. (n.) மற்றவர்களை விடத் தான் தாழ்ந்தவன் என்ற எண்ணம்; தன்னைப் பற்றிய குறைந்த மதிப்பு; inferiority complex. கூச்சமும் தாழ்வுணர்ச்சியும் அவரைத் துன்புறுத்தின. *(இக்.வ.).*

*[தாழ் → தாழ்வு + உணர்ச்சி]*

**தாழ்வுமனப்பான்மை** *tā̱lvu-maṉappāṉmai,* பெ. (n.) தாழ்வுணர்ச்சி பார்க்க; see *tā̱l-v-uṇarcci.*

*[தாழ்வு + மனப்பான்மை]*

**தாழ்வுறுவரி** *tā̱lvuṟu-vari,* பெ. (n.) அடுத்துள்ள அச்செழுத்தினைவிடத் தாழ்வாக உள்ள அச்செழுத்து; low in line.

*[தாழ்வுறு + வரி]*

**தாழ** *tā̱la,* கு.வி.எ. (adv.) கீழே; downward, below. வேட்டியைத் தாழக்கட்டியிருந்தார். *(இ.வ.).*

*[தாழ் → தாழ]*

**தாழக்கூட்டுக்கம்பி** *tā̱la-k-kūṭṭu-k-kambi,* பெ. (n.) அணிகலன் வகை; an ornament *(செ.அக.).*

*[தாழ் + கூட்டு + கம்பி]*

**தாழக்கோயில்** *tā̱la-k-kōyil,* பெ. (n.) குன்றின் மேலமைந்த கோயிலின் படியாக அக்குன்றின் அடிவாரத்தில், கட்டப்பட்ட கோயில்; the temple built at the foot of a hill and which is a part of the temple, built at the top of that hill.

*[தாழ் + கோயில்]*

**தாழக்கோல்** *tā̱la-k-kōl,* பெ. (n.) *1.* தாழ்ப்பாள்; bar, bolt. "வன்னிலைக் கதவநூக்கித் தாழக்கோல் வலித்து" *(திருவிளை. அங்கம். 8). 2.* திறவுகோல் *(தொல். எழுத். 384, உரை);* key.



ம. தாழக்கோல், தாக்கோல், தாக்கோலு; து. தார்கொலு, தர்கோலு, தர்கொலு; கோது. தாகோய் (பூட்டு).

*[தாழ் + கோல்]*

**தாழங்கடமான்** *tālaṅkaḍamāṉ,* பெ. (n.) *கடலடிப்பரப்பில் மேயும் முட்களில்லாத மீன்;* a kind of fish.

*[தாழ் → தாழம் + கடமான்.]*

**தாழங்காய்** *tālaṅ-gāy,* பெ. (n.) *1. தாழைக் காய்;* screw-pine fruit. *2. பயனற்றவ-ன்-ள்;* worthless person, as the useless fruit of the screw-pine *(செ.அக.).*

*[தாழை + காய்]*

**தாழங்காயெண்ணெய்** *tālaṅgāy-eṇṇey,* பெ. (n.) *தாழையின் காயிலிருந்து அணியமாக்கப் படும் ஒரு வகை மருந்தெண்ணெய்;* a medicinal bathing oil prepared from the fruits of screw pine tree, pandanas *(சா.அக.).*

*[தாழங்காய் + எண்ணெய்]*

இவ் வெண்ணெய் உட்காய்ச்சல், கைகால் முடக்கு, கண்ணெரிவு, மூலம், இருமல், கைகால் எரிச்சல் ஆகியவற்றைப் போக்கும்.

**தாழங்காலா** *tālaṅkālā,* பெ. (n.) *நான்கடி நீளம் வளரும் நீல நிறமுள்ள கடல் மீன் வகை;* screw-pine roeball, purplish - black, attaining 4ft. in length *(செ. அக.).*

*[தாழை + காலா]*



**தாழங்கீளி** *tālaṅ-gīḷi,* பெ. (n.) *ஆறங்குல நீளம் வளரக் கூடியதும் வெண்மை நிறமுடையது மான கடல் மீன் வகை;* a marine fish, silvery, attaining, 6 in. in length *(செ.அக.).*

*[தாழை + கீளி]*

**தாழங்குடை** *tālaṅ-kuḍai,* பெ. (n.) *தாழை யோலையாற் செய்த குடை;* umbrella made of screw-pine leaves.

*[தாழை + அம் + குடை]*



**தாழங்குப்பம்** *tālaṅkuppam,* பெ. (n.) *கடற்றுரை;* sea-shore village *(செங்கை. மீனவ.).*

*[தாழை + அம் + குப்பம் = கடற்கரையில் அமைந்துள்ள மீனவர் வாழிடம்]*

**தாழங்கோலா** *tālaṅ-kōlā,* பெ. (n.) *மஞ்சட் காலா மீன்;* a kind of fish.

*[தாழை + அம் + கோலா]*

**தாழஞ்சங்கு** *tālañ-šaṅgu,* பெ. (n.) *1. வாயகன்ற சங்கு (வின்.);* conch having a wide mouth. *2. இளங்குழந்தைகளுக்குப் பால் புகட்டும் ஒருவகைச் சங்கு;* a conch used as spoon in feeding children *(செ.அக.).*

*[தாழை + அம் + சங்கு]*

**தாழஞ்சேரி** *tālañ-cēri,* பெ. (n.) *தஞ்சை மாவட்டத்தில் மயிலாடுதுறை வட்டத்தில் உள்ள ஓர் ஊர்;* a village in Mayilāḍuturai taluk in Tañjore district.

*[தாழ் + சேரி. சேர் → சேரி → தாழஞ்சேரி* சேர்ந்திருக்கும் வாழ்மனைகளைக் கொண்ட விடம். பார்ப்பனச்சேரி என்றாற்போன்று, முன்னர்ப் பொதுவாக வழங்கப்பட்ட தாயினும், இன்று தாழ்த்தப்பட்ட மக்கள் வாழிடத்தை குறித்ததென்க.*]*

**தாழநில்-தல்** (தாழநிற்றல்) *tāl̲a-nil-,* 14 செ.கு.வி. (v.i.) தணிந்து கொள்ளுதல்; to condescend. "ஸர்வாதிகன்தானே தாழநிற்குமன்று நிவாரக ரில்லை" *(ஈடு. 1: 3: ப்ர.).*

*[தாழ் + நில்-.]*

**தாழம்** *tāl̲am,* பெ. (n.) 1. ஓசை முதலியவற்றின் தாழ்வு; lowness, as of the pitch of a tune. "தாழம்பட்ட ஓசை யாற்றி" *(கலித். 128, உரை).* 2. அமைதி; calmness. "தாழங் குறித்துக் கரைசெய்யுந் தரங்கவேலை" *(பாரத. பதினேழாம். 80).* 3. காலத்தாழ்வு; delay. "தாழமீங் கொழிக வென்றான்" *(சூளா. கல்யா. 146).*

*[தாழ் → தாழம்]*

**தாழம்படு-தல்** *tāl̲am-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ஓசை தாழ்ந்து வருதல்; to be subdued in tone; to be lowered, as the pitch. "தாழம்பட்ட ஓசை யல்லாதனவும்" *(தொல். பொருள். 444. உரை.).*

*[தாழ் → தாழம் + படு-.]*

**தாழம்பாய்** *tāl̲am-pāy,* பெ. (n.) தாழை ஓலையால் முடைந்த பாய் *(பதார்த்த. 1465);* mat made of the screw-pine leaves.

*[தாழை + அம் + பாய்]*

**தாழம்பூ** *tāl̲am-pū,* பெ. (n.) 1. தாழையின் மலர்; screw-pine flower. 2. தாழம்பூ மடல் வடிவமாகச் செய்யப்பட்ட மகளிர் தலையணி; woman's hair ornament in the shape of the bract of the screw-pine. தாழம்பூ மணத்திற்குப் வருமாம் *(உ.வ.).*

ம. தாழம்பூ, தாழம்பூவு; க. தாழெகூவு, தாழம்பூவு

*[தாழை + அம் + பூ]*

**தாழம்பூச்சேலை** *tāl̲am-pū-c-cēlai,* பெ. (n.) புடைவை வகை; a kind of saree.

*[தாழை + பூ + சேலை]*

**தாழம்வாளை** *tāl̲am-vāḷai,* பெ. (n.) தாழம் பூவண்ணமுடைய வாளைமீன் *(தஞ்சை. மீனவ.);* screw-pine flower coloured fish.

*[தாழை + அம் + வாளை]*

**தாழமட்டை** *tāl̲a-maṭṭai,* பெ. (n.) தாழைச் செடியின் தண்டுப் பகுதி; the stalk of a screw-pine flower.

*[தாழை + அம் + மட்டை]*

**தாழவலை** *tāl̲a-valai,* பெ. (n.) ஒரு வகை வலை; bottom net.

*[தாழ்வலை → தாழவலை (இ.வ.)]*

**தாழவேடு** *tāl̲a-vēḍu,* பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Kāñjipuram district *(ஊர்.பெ.அக.).*

*[தாழமேடு → தாழவேடு]*

**தாழறை** *tāl̲ar̲ai,* பெ. (n.) சிறியஅறை; small room, nook *(செ.அக.).*

*[தாழ் + அறை]*

**தாழன்காலா** *tāl̲an̲kālā,* பெ. (n.) தாழங்காலா பார்க்க; see *tāl̲aṅgālā* *(சா.அக.).*

*[தாழன் + காலா. தாழை மலரின் வண்ணம் (மஞ்சள்) போலிருக்கும் மீன்.]*

**தாழாமை** *tāl̲āmai,* பெ. (n.) இறுமாப்பு; arrogance, pride *(ஊர். பெ. அக.).*

*[தாழ் + ஆ + ஆமை]*

**தாழி[1]** *tāl̲i,* பெ. (n.) 1. இரண்டாவது விண்மீன் (பரணி); the second nakṣatra. 2. கடல் *(அக.நி.);* sea.

*[நால் → நாலி → தாழி]*

**தாழி[2]** *tāl̲i,* பெ. (n.) 1. வாயகன்ற சட்டி; large pan, pot or vessel with a wide mouth. "வன்மத்திட வுடைந்து தாழியைப் பாவு தயிர்போற் றளர்ந்தேன்" *(திருவாச. 24: 6).* 2. சாடி *(சூடா.);* jar. 3. இறந்தோரை அடக்கஞ் செய்துவைக்கும் பாண்டம்; burial urn. "தாழியிற் கவிப்போர்" *(மணிமே. 6: 67).* முதுமக்கள் தாழி.

ம. தாழி

*[தகழி = அகல், (வாயகன்ற) உண்கலம். தகழி → தாழி]*



**தாழி**[3] *tāḻi,* பெ. (n.) 1. **அரிதாரம்;** yellow orpiment. 2. **சிவதை;** Indian jalap. 3. **திருமால் உலகம்** *(தக்கயாகப். 376, உரை);* Vaigundam, Visnu's heaven. 4. **முகப்பூச்சு;** yellow orpiment. 5. **குடம்;** cauldron. 6. **சாடி;** jar.

**தாழிக்குவளை** *tāḻi-k-kuvaḷai,* பெ. (n.). **தாழியிற் பெய்துவைத்த குவளை;** blue nelumbo reared in a pot. *"தாழிக்குவளை சூழ்செங் கழுநீர்" (சிலப். 5: 192)* (செ. அக.).

*[தாழி + குவளை]*

**தாழிகை** *tāḻigai,* பெ. (n.) **ஒரு வகைப்பா;** a kind of song (இரு.நூற்.பே.).

**தாழிசை** *tāḻisai,* பெ. (n.) **பாவினங்களுள் ஒன்று** *(தொல். பொருள். 447);* a sub-division in each of the four kinds of verse.

*[தாழ் → தாழிசை]*

**தாழிடு-தல்** *tāḻ-iḍu-,* 18 செகுவி. (v.i.) **தாழ்ப்பாள் மூலமாக அடைத்தல்;** to latch. அறைக்குள் வேகமாகப் போய்த் தாழிட்டுக் கொண்டாள். *(உவ)*

*[தாழ் → இடு-.]*

**தாழிதளம்** *tāḻi-taḷam,* பெ. (n.) **வாரினபனை யோலையேடு** *(தஞ். சா: 3, 86);* leaf of palmyra palm, trimmed for writing (செ.அக.).

*[தாழி + தளம்]*

**தாழிப்பானை** *tāḻi-p-pāṉai,* பெ. (n.) **வாயகன்ற பெரியபானை;** large-mouthed earthen pot (செ.அக.).

*[தாழி + பானை]*

**தாழிவயிறு** *tāḻi-vayiṟu,* பெ. (n.) **பருத்த வயிறு;** pot belly. ஊசித் தொண்டை யுந் தாழி வயிறும் *(இ.வ).*

*[தாழி + வயிறு]*

**தாழிவில்லை** *tāḻi-villai,* பெ. (n.) **மகளிர் தலையணிவகை;** a kind of hair-ornament. "வரதப்ப னொரு தாழிவில்லை போட்டான்" *(விறலிவிடு).*

*[தாழி + வில்லை]*

**தாழிவிளக்கு** *tāḻi-viḷakku,* பெ. (n.) **குடவிளக்கு;** a kind of lamp; light. *"தாழி விளக்கு மாகாணிக்கு ஆடு ஐஞ்சறை" (S.I.I.V. 645).*

*[தாழி + விளக்கு = வட்டத்தட்டின் நடுவே அமைந்த மண்ணாலான விளக்கு]*



**தாழினி** *tāḻiṉi* பெ. (n.) **நத்தைச்சூரி;** oyster knife, bristly button weed - Spermacoci pispido (சா.அக.).

**தாழுகை** *tāḻugai,* பெ. (n.) **தாழ்-தல் பார்க்க;** see *tāḻ-.* (இரு.நூற்.பே.).

*[தாழ் → தாழ்கை → தாழுகை-.]*

**தாழு-தல்** *tāḻu-,* பெ. (n.) **தாழ்-தல்;** low (இரு. நூற்.பே.).

*[தாழ் → தாழு-.]*

**தாழை** *tāḻai,* பெ. (n.) 1. **செடிவகை;** fragrant screw-pine. "கமழுந் தாழைக் கானலம் பெருந்துறை" *(பதிற்றுப். 55).* 2. **தென்னை;** coconut tree. "குலையிறங்கிய கோட்டாழை" *(புறநா. 17).* 3. **தெங்கம்பாளை;** spathe of the coconut tree. "தாழை தளவ முட்டாட் டாமரை" *(குறிஞ்சிப். 80).*

**மறுவ.** முண்டக முசலி

**ம.** தாழம், தாத்; **க.** தாழெ

*[தழை → தாழை = தழைத்துப் படர்வது]*

**தாழை வகைகள்**

1. பெருந்தாழை
2. அன்னாசி
3. தழுதாழை
4. தென்னை
5. தேங்காய்
6. செந்தாழை

7. வெண்டாழை
8. பரங்கித்தாழை
9. பெருந்தாழை
10. பேய்த்தாழை
11. கற்றாழை
12. அன்னத்தாழை
13. கடற்றாழை
14. மஞ்சட்டாழை
15. சிறுதாழை
16. முயற்றாழை
17. இரசதாழை
18. சாம்பயோன் தாழை
19. ஆனைக் கற்றாழை

வெளிர்மஞ்சள் நிறமுள்ள தாழைமலர் சிவபூசைக்குப் பயன்படாது. தாழை இலையினைப் பச்சையாகவும், வேகவைத்தும் உண்ணலாம். தாழம்பூவுடன், காசுக்கட்டி சேர்த்து, நறுமணத் தயிலம் வடித்து தாம்பூலத்துடன் அருந்துவர். தாழம் பழத்தையும், தாழைச்சோற்றினையும் வறுமைக் காலத்தே உணவாகக் கொள்ளும் வழக்கமுண்டு. நறுமணமிக்க தாழம்பூவிற்கு பசியை அதிகரிக்குங் குணமுண்டு. தாழம்பூ எண்ணெய் சொறி, சிரங்கு, தோல்நோய் போன்றவற்றைப் போக்கும். தாழம்பூச் சாறு ஆண்மையை அதிகரிக்கும். உடம்பு அழற்சி, கோழை, இருமல் போன்ற நோய்கட்கு தாழம்பழ இளகியம் கைகண்ட மருந்து என்று, சா.அக கூறும்.

**தாழைக்கோரை** *tāḻai-k-kōrai,* பெ. (n.) கோரை வகை (சங்அக.); a kind of sedge.

*[தாழை + கோரை]*

**தாழைக்கோழி** *tāḻai-k-kōḻi,* பெ. (n.) நீரில் நீந்தும் போது வாத்துப் போலவும் நிலத்தில் இருக்கும்போது காளான் கோழி போலவும் காணப்படும் ஒரு வகைப் பறவை; common moorhen.



*[தாழை + கோழி. கரையோரத்துத் தாழைப் புதர்களில் இருப்பது]*

**தாழைச்சோறு** *tāḻai-c-cōṟu,* பெ. (n.) தாழை மரத்திலுள்ள சதைப்பற்று; pith of the tāḻai plant.

*[தாழை + சோறு. தாழைச்சோறு பெண்கள் மாதவிடாய்த் தடையை நீக்கும் மருத்துவக் குணமுடையது.]*

**தாழைநாகம்** *tāḻai-nāgam,* பெ. (n.) தாழைச் செடியில் மறைந்து கிடக்கும் நாகப்பாம்பு; an extremely venomous kind of cobra found in screw-pine (சா. அக.).

*[தாழை + நாகம்]*

**தாழைநார்** *tāḻai-nār,* பெ. (n.) தாழையினின்று கிழிக்கப்படும் நார்; fibre taken from the screw-pine (செ.அக.).

*[தாழை + நார்]*

**தாழைப்பாம்பு** *tāḻai-p-pāmbu,* பெ. (n.) தாழம்பூ வண்ணத்திற் காணப்படும் நச்சுத் தன்மையுடைய பாம்பு; a kind of snake (தஞ்சை. மீனவ.).

*[தாழை + பாம்பு]*

**தாழைமடல்** *tāḻai-maḍal,* பெ. (n.) தாழைப் பூவிலுள்ள இதழ்; petal in the tāḻai flower (சா. அக.).

*[தாழை + மடல்]*

**தாழைமுலை** *tāḻai-mulai,* பெ. (n.) தாழங்காய்; screw-pine fruit (செ.அக.).

*[தாழை + முலை]*

**தாழையடிப்பாடு** *tāḻayaḍi-p-pāḍu,* பெ. (n.) மீன்பிடிபாட்டிடம் (முகவை. மீனவ.); fishing spot.

*[தாழை + அடிப்பாடு]*

**தாழையுப்பு** *tāḻai-y-uppu,* பெ. (n.) தாழைச் செடியை எரிப்பதினாலுண்டாகும்

*சாம்பலினின்று எடுக்கும் உப்பு;* alkaline salt extracted from the ash derived by burning the plant screw-pine *(சா.அக.).*

*[தாழை + உப்பு]*

**தாழைவிழுது** *tāḻai-viḻudu,* பெ. (n.) தாழை வேர்; aerial roots of the screw-pine *(செ.அக.).*

*[தாழை + விழுது]*

**தாழொலி** *tāḻ-oli,* பெ. (n.) தாழ்ந்த ஒலி; feeble voice *(சா.அக.).*

*[தாழ் + ஒலி]*

**தாள்**[1] *tāḷ,* பெ. (n.) *1.* கால்; foot. "எண் குணத்தான் றாளை" *(குறள். 9).* *2.* மர முதலியவற்றின் அடிப்பகுதி; foot of a tree or mountain. "விரிதாள கயிலாய மலையே" *(தேவா. 1156:1),* தாள் உண்ட நீரைத் தலையாலே தரும் தென்னை *(பழ.).* *3.* பூ முதலியவற்றின் அடித்தண்டு; stem, pedicle, stalk. "தாணெடுங் குவளை" *(சீவக. 2802).* *4.* வைக்கோல் (பிங்.); straw. *5.* விளக்குத்தண்டு (வின்.); lampstand, candle-stick. *6.* முயற்சி; energy, effort, perseverance, application. "தாளிற்றந்து" *(புறநா. 18).* *7.* படி; stairs. "குண்டுகண் கழிய குறுந்தாண் ஞாயில்" *(பதிற்றுப். 71: 12).* *8.* தொடக்கம் (ஆதி) (சூடா.); origin, commencement, beginning. *9.* சட்டைக்கயிறு; tying string of a jacket. "தாளுண்ட கச்சிற் றகையுண்ட" *(கம்பரா. பூக்கொய். 14).* *10.* விற்குதை (வின்.); ends of a bow. *11.* வால்மீன் சிறப்பு (விசேடம்); a comet. "குளமீனொடுந் தாட் புகையினும்" *(புறநா. 395).* *12.* ஒற்றைத்தாள் (காகிதம்); sheet of paper. *13.* தாழ்ப்பாள்; bolt, bar, latch. "தம்மதி றாந்திறப்பர் தாள்" *(பு.வெ. 9: 24).* தாள் இட்டவன் தாள் திறக்க வேண்டும் *(பழ.).* *14.* கொய்யாக்கொட்டை; wooden catch turning on a central screw that fastens a pair of shutters. *15.* மூட்டுவாயின் ஊடுருவச் செறிக்கும் கடையாணி; pin that holds a tenon in a mortise. "தாளுடைக் கடிகை நுழைநுதி நெடுவேல்" *(அக. நா: 35).* *16.* திறவுகோல்; key. "இன்பப் புதாத் திறக்குந் தாளுடைய மூர்த்தி" *(சீவக. 1549).*

தெ., க. தாழ், ம. தாள்

*[துள் → தள் → தாள் (மு.தா. 212). நெல், புல் முதலிய பயிர்களின் அடி. அடி யென்னுஞ்சொல் முதலாவது பருத்தது என்னும் பொருளில் மரவடியையே குறித்தது. எல்லாப் பொருள்களின் அடிப்பாகத்தையும் குறிக்க வழங்கிய பின், அது தன் சிறப்புப்பொருளை இழந்தது.]*

**தாள்**[2] *tāḷ,* பெ. (n.) *1.* தாடை; jaws. "தாள் கிட்டிக் கொண்டது". *2.* கண்டம் (இ.வ.); adam's apple. *3.* அருவி; waterfall. *4.* அலகு; measurement. *5.* முதன்மை; first. *6.* ஒட்டு; stick. *7.* தேர்வுத் தாள்; examination paper. "தமிழ் முதல் தாளில் அவன் நிறைய மதிப்பெண்கள் பெற்றிருந்தான்" *(சா.அக.).*

**தாள்கழுவல்** *tāḷ-kaḻuval,* பெ. (n.) காலடியைத் தூய்மைப்படுத்துதல்; cleaning the feets *(சா.அக.).*

*[தாள் + கழுவல்]*

**தாள்கிட்டும்சன்னி** *tāḷ-kiṭṭum-šaṉṉi,* பெ. (n.) தாளிறுத்தும் ஒருவகை இழுப்புநோய்; lockjaw, tetanus *(சா.அக.).*

*[தாள் + கிட்டும் + சன்னி]*

**தாள்கிட்டுமிசிவு** *tāḷ-kiṭṭum-išivu,* பெ. (n.) தாள்கிட்டும்சன்னி பார்க்க; see *tāḷ-kiṭṭum-šaṉṉi.*

*[தாள் + கிட்டும் + இசிவு]*

**தாள்கிட்டல்** *tāḷ-kiṭṭal,* பெ. (n.) தாளிறுத்தல் பார்க்க; see *tāḷiṟuttal.*

*[தாள் + கிட்டல்]*

**தாள்கிட்டி** *tāḷ-kiṭṭi,* பெ. (n.). தாளிறுப்பு பார்க்க; see *tāḷiṟuppu (சா.அக.).*

*[தாள் + கிட்டி]*

**தாள்சின்னி** *tāḷ-šiṉṉi,* பெ. (n.). தாள்கிட்டும் சன்னி பார்க்க; see *tāḷ-kiṭṭum-šaṉṉi (சா.அக.).*

*[தாள் + சின்னி]*

**தாள்செறி** *tāḷ-šeṟi,* பெ. (n.) கைவிரலணி; finger ring. "வாங்குவில் வயிரத்து மரகதத் தாள் செறி" *(சிலப். 6, 97).*

*[தாள் + செறி]*

**தாள்துமி-த்தல்** *tāḷ-tumi-*, 4 செகுன்றாவி. (v.t.) நெல்லின் தாளை அறுத்தல்; to cut stalk of paddy (ஊர்.பெ.அக.).

*[தாள் + துமி-.]*

**தாள்பிடிப்பு** *tāḷ-piḍippu*, பெ. (n.) 1. முழங்கால் பிடிப்பு; contraction of the muscles of the leg. 2. தாடைப் பிடிப்பு; lock jaw.

*[தாள் + பிடிப்பு]*

**தாள்போர்** *tāḷ-pōr*, பெ. (n.) தாட்போர் (இ.வ.) பார்க்க; see *tāṭpōr*.

*[தாள் + போர்]*

**தாள்மடங்கல்** *tāḷ-maḍaṅgal*, பெ. (n.) சம்பா அறுவடை முடிவு (W.G. 506); close of the wet-crop harvest.

*[தாள் + மடங்கல்]*

**தாள்வரை** *tāḷ-varai*, பெ. (n.) மலையடி வாரம்; fort of a mountain. "உயர்ந்த தாள்வரைப் புறத்து" (திருவாலவா. 44, 36).

*[தள் → தாள் + வரை]*

**தாள்வினை** *tāḷ-viṉai*, பெ. (n.) ஆர்வம், சுறுசுறுப்பு (உற்சாகம்) (பிங்.); zeal, fervour.

*[தள் → தாள் + வினை]*

**தாள** *tāḷa*, வி.எ. (adv.) தாங்க, பொறுக்க; bearable. துக்கம் தாள முடியாமல் அழுது விட்டான் (இக்.வ.).

**தாளகக்கட்டு** *tāḷaga-k-kaṭṭu*, பெ. (n.) தாளகத்தை நெருப்பிற்கு ஓடாதபடி சித்த நூல்களிற் சொல்லிய முறைப்படி கட்டுதல்; consolidating orpiment as per process contemplated in siddhar's science (சா.அக.).

*[தாள் + அகம் + கட்டு]*

**தாளகக்கருப்பு** *tāḷaka-k-karuppu*, பெ. (n.) தூய்மைப்படுத்தப்பட்ட தாளகத்தோடு வெடியுப்புச் சுண்ணத்தைச் சேர்த்து, வெண் தாமரைப் பூவிதழ்ச் சாற்றில் அரைத்துச் சீலைசெய்து புடமிட்டெடுத்த கருப்புத்தூள்; purified orpiment and calcified potassium nitrate are ground with the juice of white lotus and subjected to fire as per rules. it's colour is black (சா.அக.).

*[தாள் + அகம் + கருப்பு]*

**தாளக்கட்டு** *tāḷa-k-kaṭṭu*, பெ. (n.) இசை ஒத்து அமைகை; harmonious effect of drum-beat, as in a musical concert (செ.அக.).

*[தாளம் + கட்டு]*

**தாளக்கம்** *tāḷakkam*, பெ. (n.) தாளகம் (யாழ்.அக.) பார்க்க; see *tāḷagam*.

*[தாளகம் → தாளக்கம்]*

**தாளகச்சுண்ணம்** *tāḷaga-c-cuṇṇam*, பெ. (n.) சுண்ணாம்புத்துகள் கொண்ட தூய்மைப் படுத்தப்பட்ட பூச்சுப்பசை; calcified orpiment which has the properties of calcium (சா.அக.).

*[தாள் + அகம் + சுண்ணம்]*

**தாளகச்செந்தூரி** *tāḷaga-c-cendūri*, பெ. (n.) தாளகத்தைச் செந்தூரமாக்கும் பூண்டு; an unknown drug said to be a red variety of lizard plant capable of reducing orpiment into a red oxide (சா.அக.).

மறுவ. செம்பல்

*[தாள் + அகம் + செந்தூரி]*

**தாளகசுத்தி**[1] *tāḷaga-šutti*, பெ. (n.) மஞ்சட் பூச்சுப் பசை; orpiment (சா.அக.).

*[தாள் + அகம் + சுத்தி]*

இது சுண்ணாம்புக்குள் வைத்துக் கழுதைச் சிறுநீர் விட்டு, 7 தடவை தாளித் தெடுத்து, அன்னநீர், கொள்ளுக்கியாழம், தயிர், காடிநீர், அகத்திக்கீரை, விதைத் தைலம் இவைகள் கூட்டி, 2 சாமம் சுண்டக்கருக்கி யெடுத்துப் பிறகு, சத்திசாட்டரணை வேர், குக்கில் போன்றவற்றை முருங்கையிலை, சாற்றில் அரைத்துக் கவசம்செய்து லகுபுடம் போட்டு எடுத்தால், மஞ்சட்பூச்சுப் பசை கிடைக்கும்.

**தாளகசுத்தி**[2] *tāḷaga-šutti*, பெ. (n.) தாளகத்தைச் சிறு துண்டுகளாகச் செய்து குடுவையில் போட்டு, மேல் மூடும் ஓட்டிற்கு, 2 துளை போட்டுக் கரிநெருப்பின் மீது வைத்து விசிறுகையில், முதலில் கருப்புப்புகை வரும். பிறகு சிவப்புப்புகை வரும்போது எடுத்துக் கொள்ளல் தாளக சுத்தி ஆகும்; purification of orpiment as per process of mentioned here (சா.அக.).

*[தாள் + அகம் + சுத்தி]*

**தாளகத்தின்மஞ்சள்போக்கி** *tāḷagattiṉ-mañjaḷ-pōkki*, பெ. (n.) *திலகமரம்;* an unknown tree probably peacock gingelly - Vitex alata *(சா.அக.).*

*[தாளகம் + அத்து + இன் + மஞ்சள் + போக்கி.]*

**தாளகத்தைப்பற்பமாக்கி** *tāḷagattai-p-paṟpam-ākki*, பெ. (n.) *வனமிரட்டி;* a kind of soma plant *(சா.அக.).*

**தாளகநீறு** *tāḷaga-nīṟu*, பெ. (n.) *தாளகபற்பம்;* calcinated white powder of yellow sulphide or arsenic *(சா.அக.).*

*[தாளகம் + நீறு]*

**தாளகபசுபம்** *tāḷaga-bašupam*, பெ. (n.) *தாளக பற்பம் பார்க்க;* see *tāḷagapaṟpam (சா.அக.).*

**தாளகபற்பம்** *tāḷaga-paṟbam*, பெ. (n.) *தாளகத்தை நீற்றிச் செய்த மருந்துப்பொடி;* calcined white powder of yellow sulphide of arsenic *(சா.அக.).*

*[தாளகம் + பற்பம்]*

தாளகம் 1 பலம் கல் சுண்ணாம்பு தண்ணீரில் போட்டுத் தெளிந்தபிறகு, நீரையிறுத்து, அந்த நீரிலேயே தாளகத்தை 7 நாள் அரைத்து, பில்லை செய்து, ஒரு கலசத்தில் சுண்ணாம்பு நீரை நிறைய வைத்து வேறொரு கலசத்தில் சுண்ணாம்பு நீரை அழுத்தமாய் வைத்து மூடி, 7 சீலை கவசம் செய்து, 10 விரட்டியில் புடம் போட்டு எடுக்க பற்பமாகும். தேனில் தர வேண்டும். புளி, நல்லெண்ணெய், கடுகு ஆகாது

**தாளகப்புகை** *tāḷaga-p-pugai*, பெ. (n.). *ஒரு வகை அரிதாரம்;* a kind of orpiment *(சா. அக.).*

*[தாளகம் + புகை]*

இது இருமலைப் போக்க உதவும்.

**தாளகம்**[1] *tāḷagam*, பெ. (n.) *1. அரிதாரம்;* orpiment. *2. பொன்னரிதாரம்;* yellow orpiment. *3. மேல்தாள் (ஈர வெங்காயத் தாள்);* pedicle as of onion. *4. அடிப்பாகம்;* stem. *5. தகட்டரி தாரம்;* arsenic in their flat pieces *(சா.அக.).*

**தாளகம்**[2] *tāḷagam*, பெ. (n.) *அரிதாரம் (பதார்த்த. 1153);* orpiment, or yellow tersulphide sulphide.

*[தாள் → தாளகம்]*

**தாளகமெழுகு** *tāḷaga-meḻugu*, பெ. (n.) *ஒரு வகை மெழுகு;* a kind of wax substance by the process mentioned here *(சா. அக.).*

*[தாளகம் + மெழுகு]*

தாளகக் கட்டியை வேங்கைச் செயநீரில் 3 சாமம் அரைத்து வழித்து எடுக்க மெழுகாகும். இதனை தாம்பூரத்தில் 300 - 1 கொடுத்து 9 - மாற்று வெள்ளியாகும். இம் மருந்தை வெற்றிலைச் சாற்றில் மூன்று நாள் (பச்சைப் பயறளவு) இரு வேளையாக குடிக்க காசம், மனநோய், வலிப்பு வகை, ஊதை, வளிநோய் போகும் என சா. அக. விளக்கமாகக் கூறும்.

**தாளககேசுவரம்** *tāḷagēšuvaram*, பெ. (n.). *ஓர் மருந்து தைலம்;* the name of a medicinal unguent.

**தாளங்கட்டு-தல்** *tāḷaṅ-kaṭṭu-*, 5 செ.குவி. (v.i.) *தாளவோசை நிரம்பும்படி கட்டடம் அமைதல்;* to be effective acoustically, as a building. இந்த இடம் தாளங் கட்டுகிறது *(உ.வ.).*

*[தாளம் + கட்டு-,]*

**தாளசமுத்திரம்** *tāḷa-šamuttiram*, பெ. (n.) *பரத சூடாமணி என்ற அரசன் இயற்றிய தாள வகையைக் கூறும் பழைய நூல் (சிலப். முகவுரை);* a treatise on tāḷa by king Parata-šūḍāmaṇi.

*[தாளம் + சமுத்திரம்]*

**தாளசாதி** *tāḷa-šādi*, பெ. (n.) *துதிப்பாடல்களில் அமைந்த குறில்களின் அளவு;* the number of short vowels occurring in a musical composition *(செ.அக.).*

*[தாளம் + சாதி]*

**தாளஞ்சொல்(லு)-தல்** *tāḷañ-sol-*, 13 செ.குவி. (v.i.) *1. பாட்டுக்கேற்பச் சுரம் பாடுதல்;* to sing the musical notes appropriate to a tune or composition. *2. கூத்தியற் சுரக்கட்டுப் பாடுதல்;* to sing the musical notes to accompany dancing.

*[தாளம் + சொல்-.]*

**தாளடி** *tāḷ-aḍi*, பெ. (n.). *1. கதிர்த்தாள்;* stubble. *2. முதலடி மகசூல் அறுத்தபின் நடக்கும் வேளாண்மை;* second cultivation. *3. சாகுபடிக் காலம்;* cultivation season; stubble ploughing

season. *4.* இருபூ நிலம் (நாஞ்); double - crop land. *5.* களத்திற் கதிரை இரண்டா முறை அடிக்கை (இ.வ.); second beat of sheaves in threshing. தாளடியைக் கூலியாகக் கொடுங்கள் (இக்.வ.).

ம. தாளடி

*[தாள் + அடி]*

**தாளடிகருநிலத்தில்** *tāḷaḍi-karu-nilattil*, கு.வி.எ. (adv.). வேளாண்காலத்தில் (C.G.); at the cultivation season (செ.அக.).

*[தாளடி + கரு + நிலத்தில்]*

**தாளடிநடவு** *tāḷaḍi-naḍavu*, பெ. (n.). முதற் போகம் அறுவடையானதும் வயலை உழுது நடுகை (தஞ்.); cultivation after ploughing the stubble of the first crop.

*[தாளடி + நடவு]*

**தாளடிப்போர்** *tāḷaḍi-p-pōr*, பெ. (n.) தாட்போர் (தஞ்.) பார்க்க; see *tāṭ-pōr*.

*[தாளடி + போர்]*

**தாளபத்திரம்** *tāḷa-pattiram*, பெ. (n.) தாளிப் பனை; tali-pot (சா.அக.).

**தாளம்**[1] *tāḷam*, பெ. (n.) *1.* பாடுகையிற் காலத்தை அறுதியிடும் அளவு; time measure. "இத்தாளங்களின் வழிவரும் . . . எழு தூக்குக்களும்" (சிலப். 3:16: உரை). *2.* கைத்தாளக் கருவி; a small cymbal for keeping time in music. "அடிகளார் தங்கையிற் றாள மிருந்த வாறு" (திருவாச. 17, 8). *3.* தாளத்திற் கிசையக் கூறும் அசைகள் (வின்.); syllables sung in tune with drum-beats. தாளமும் பாட்டும் ஒத்து வரவில்லை (இக்.வ.). *4.* பனை; palmyra-palm. *5.* கூந்தற்பனை வகை; jaggery-palm. *6.* அரிதாரம்; yellow orpiment. *7.* தாளிசபத்திரி (சங்.அக.) பார்க்க; see *taḷiša-pattiri*.

*[தாள் → தாளம்]*

**தாளம்**[2] *tāḷam*, பெ. (n.) *1.* தாழை பார்க்க; see *tāḻai*. *2.* பனங்கொட்டை; palmyra nut (சா.அக.).

**தாளம்பிடித்-தல்** *tāḷam-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) தாளம்போடு-தல்[1] பார்க்க; see *tālam-pōḍu-*[1] (செ.அக.).

*[தாளம் + பிடி-.]*

**தாளம்போடு-தல்** *tāḷam-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.). *1.* தாளமடித்தல்; to keep time, as with the hands or cymbals. "கைத்தாளம் போடு" (பணவிடு. 183). *2.* வறுமையால் துன்புறுதல்; to suffer from want. அவன் சாப்பாட்டுக்கின்றித் தாளம் போடுகிறான் (உ.வ.). *3.* விடாது கெஞ்சுதல் (இ.வ.); to persist in an improper request, to importune.

*[தாளம் + போடு-.]*

**தாளம்மை** *tāḷ-ammai*, பெ. (n.). பொன்னுக்கு வீங்கி (இ.வ.); mumps.

*[தாள் + அம்மை]*

**தாளமானம்** *tāḷa-māṉam*, பெ. (n.) தாளவளவு; time measured by tāḷam. "இனித் தாளமானத் திடையே நின்றொலிக்கும்" (மலைபடு. 9, உரை).

*[தாளம் + மானம்]*

**தாளமுத்திரை** *tāḷa-muttirai*, பெ. (n.) இடது உள்ளங்கையில் வலதுகை விரலால் தட்டும் முத்திரை வகை (செந். x, 424); a gesticulation in worship in which the left palm is tapped with the right finger.

*[தாளம் + முத்திரை]*

**தாளமுறி** *tāḷa-muṟi*, பெ. (n.) பனைஓலை ஆவணம்; document written on palm'ōlai'. "கோயில் பண்டாரத்துக்கு உடலாக பதினேழாவது தாளமுறி முதல் கைக் கொண்டு முதலிட்டுக் கொள்ளவும்" (S.I.I.xii. 206).

மறுவ. தாலமுறி

*[தாளம் + முறி]*

**தாளமூலிகம்** *tāḷa-mūligam*, பெ. (n.) நிலப் பனை; ground palm (சா.அக.).

*[தாளம் + மூலிகம்]*

**தாளயந்திரம்** *tāḷa-yandiram,* பெ. (n.) ஒரு அறுவைக் கருவி; a surgical instrument, a pair of small pincers (சா.அக.).

*[தாள(ம்) + (இ)யந்திரம்]*

**தாளவகையோத்து** *tāḷa-vagai-y-ōttu,* பெ. (n.) தாளத்தைப் பற்றிக் கூறும் ஒரு பழைய நூல் (சிலப். 3, 26, உரை.); a treatise on time-measure.

*[தாளவகை + ஒத்து]*

**தாளவாத்தியம்** *tāḷa-vāttiyam,* பெ. (n.) தட்டி வாசிக்கும் தோல்கருவி; percussion instrument (கிரி.அக.).

*[தாள(ம்) + வாத்தியம்]*



**தாளவிலாசம்** *tāḷa-vilāšam,* பெ. (n.) பனை; palmyra (சா.அக.).

*[தாளம் + விலாசம்]*

**தாளவொரியல்** *tāḷa-v-or-iyal,* பெ. (n.) தாள வகைகளுள் (விகற்பங்களுள்) ஒன்று (சிலப். 3: 16, உரை.); a variety of tāḷam.

*[தாளம் + ஒரியல்]*

**தாளவொற்று** *tāḷa-v-oṟṟu,* பெ. (n.) சதி (பிங்.); agreement of time.

*[தாளம் + ஒற்று]*

**தாளவோத்து** *tāḷa-v-ōttu,* பெ. (n.) நூற்றொட்டு வகைத் தாளங்களை விளக்கும் ஒரு பழைய நூல்; an ancient treatise on tāḷam describing 108 kinds of tāḷas.

*[தாளம் + ஒத்து]*

**தாளன்** *tāḷaṉ,* பெ. (n.) பயனற்றவன் (வின்.); good-for-nothing fellow.

*[தாள் → தாளன்]*

**தாளா** *tāḷā,* பெ. (n.) கட்டுமரத்தைச் செலுத்த நீரைத்துழாவும் பலகை (இ.வ.); paddle for catamaran.

*[தாள் → தாளா]*

**தாளாத** *tāḷāta,* பெ.எ. (adj.) தாங்க முடியாத; unbearable. தாளாத துன்பம் (உ.வ.).

*[தாள் → தாளா]*

**தாளாண்மை** *tāḷ-āṇmai,* பெ. (n.) 1. ஊக்கம் (சூடா.); energy, spirit. 2. விடாமுயற்சி; perseverance, application, diligence. "தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே" (குறள். 613).

*[தாள் + ஆண்மை]*

**தாளாரி** *tāḷāri,* பெ. (n.) குங்கிலிய வகை (L.); bastard sal.

**தாளாளன்** *tāḷ-āḷaṉ,* பெ. (n.) 1. ஊக்க முள்ளவன்; person of enterprise, application. "தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன்" (திரிகடு. 12). 2. வாணிகன் (வைசியர்) (பிங்.); vaišya. 3. தாளாளர்; correspondent.

*[தாள் + ஆளன்]*

**தாளாற்றி** *tāḷāṟṟi,* பெ. (n.) முயற்சி; confidence "தாளாற்றித் தந்த பொருளெல்லாம்" (குறள். 212).

*[தாள் + ஆற்றி → தாளாற்றி]*

**தாளாறி** *tāḷāṟi,* பெ. (n.) காலாறி; bastard saul - Shorea tatura (சா.அக).

**தாளி[1]-த்தல்** *tāḷi-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. கடுகு உளுத்தம்பருப்பு முதலியவற்றை நெய்யில் வறுத்துக் குழம்பு முதலியவற்றிற்கு நறுமண முண்டாக இடுதல்; to season and flavour curry, etc., with spices fried in ghee or oil. "பட்ட நறையாற் றாளித்து" (பெரியபு. சிறுத். 66). 2. மருந்தைச் சுவைப்படுத்துதல் (வின்.); to flavour medicine, as with ghee, oil. 3. கண்டித்தல்; to scold soundly. அவனை நன்றாய்த் தாளித்து விட்டான். 4. சுண்ணாம்பு குழைத்தல் (இ.வ.); to macerate lime. 5. புனைந்துரைத்தல் (உ.வ.); to exaggerate.

க. தாலிசு; தெ. தாலிஞ்சு.

*[தள் → தாள் → தாளி-.]*

**தாளி²-த்தல்** *tāḷi-*, 4 செ.கு.வி. (v.i.) **1. தற்புகழ்ச்சி** (கருவங்) கொள்ளுதல்; to boast ஏன் அதிகமாய்த் தாளிக்கிறாய் (இ.வ.). **2. தன் தகுதிக்கு மீறி ஆரவாரமாய் வாழ்தல்;** to live beyond one's means with pretentious extravagance.

க. தாளிசு; தெ. தாலின்சு

*[தாள் → தாளி-.]*

**தாளி³** *tāḷi*, பெ. (n.) **மண்ணாற் செய்த விளக்கின் அகல்** (உ.வ.); earthen lamp - bowl.

*[துள் → தள் → தாளி.]*

**தாளி⁴** *tāḷi*, பெ. (n.) **திருகுதாளி;** laul danah, twisted taḷi creeper (சா.அக).

இது 31 வகைப்படும் அவையாவன:

1. தாளி; a winding plant.
2. கம்பந்தாளி; convolvulus bicolour
3. காட்டுத்தாளி; false kaladana.
4. குறுகுத்தாளி; common creamy, white bindweed.
5. சிறு தாளி; hairy leaved creamy, white bindweed.
6. செந்தாளி; convolvulus purpurcas.
7. தேவதாளி; snake luffa.
8. நறுந்தாளி;
9. நாகதாளி; prickly pear plant.
10. நுழைதாளி; Chinese laurel.
11. பெருந்தாளி; convolvulus maximus.
12. திருகுதாளி; laul danah.
13. பூத்தாளி; white tanak.
14. வெண்டாளி; white catamaran tree.
15. நஞ்சுத்தாளி; sore eye plant.
16. காக்கைத்தாளி; Ceylon ebony.
17. கருந்தாளி; black palmwood.
18. உத்தமதாளி; hedge cotton.
19. மலைக்குறுந்தாளி; wound plant.
20. பஞ்சந்தாளி; honey bush.
21. பன்றித்தாளி; betel nut laurel.
22. பட்டைத்தாளி; raw laurel.
23. பிரபந்தாளி;
24. கோடைத்தாளி;
25. வெள்ளைப்பூத்தாளி; country traganth.
26. திருத்தாளி; cleodendron phelomoides.
27. மரவெட்டித்தாளி; betel nut laurel.
28. மலைத்தாளி; convolvulus maximus.
29. பெரும்பன்தாளி; ganapathy tree.
30. அட்டைத்தாளி; false fern tree.
31. வெள்ளைத்தாளி; wenlandia notoniana.

*[தாள் + இ]*

**தாளி⁵** *tāḷi*, பெ. (n.) **1. பனை** (சூடா.); palmyra-palm. **2. கூந்தற்பனை வகை** (பிங்.); talipot-palm. **3. மருந்துச் செடிவகை** (திவா.); a medicinal plant. **4. பனை (அனுடம்) என்னும் 17ஆம் விண்மீன்;** the 17th nakṣatra.

**தாளி⁶** *tāḷi*, பெ. (n.) **மரவகை;** a species ray-laurel (செ.அக.).

**தாளி⁷** *tāḷi*, பெ. (n.) **1. அறுகம் புல்வகை** (பாரதவெண். 161, உரை); a kind of harialli grass, used in benediction. **2. கிழங்கின் முதல்** (இ.வ.); primary tubes.

**தாளி⁸** *tāḷi*, பெ. (n.) **1. தாளிப்பனை;** talipot. **2. ஓர் புல்;** a kind of grass. **3. கொடிவகை;** hedge bind-weed, a running plant of several species. "தாளித்தண்பவர் நாளா மேயும்" (குறுந். 104). **4. பனைமரம்;** palmyra tree. **5. தாழி அல்லது மிடா;** a wide mouthed earthen vessel. **6. சிவதை;** turpeth root. **7. திருகுதாளி;** laldanah. **8. பூவசம்;** ray laurel. **9. தாளிக்கொடி;** hedge bind-weed. **10. கண்டித்தல்;** to scold soundly. "அவனை நன்றாய்த் தாளித்து விட்டான்".

*[தாள் → தாளி]*

**தாளிக்கம்** *tāḷikkam*, பெ. (n.) **1. தழைப்பு;** prosperity. **2. திடன்;** stability, firmness (செ.அக.).

*[தாளி → தாளிக்கம்]*

**தாளிக்காதசுண்ணம்** *tāḷikkāda-šuṇṇam*, பெ. (n.) **1. சுண்ணாம்புக்கல்;** lime stone. **2. சுட்ட சுண்ணாம்பு;** quick lime (சா.அக.).

*[தாளிக்காத + சுண்ணம்]*

**தாளிக்கீரை** *tāḷi-k-kīrai*, பெ. (n.) **தாளிச் செடியின் கீரை;** green leaves of hedge bind-weed (சா.அக.).

*[தாளி + கீரை]*

**தாளிக்கை**[1] *tāḷikkai,* பெ. (n.) கறிக்குக் கடுகு முதலியவற்றை மணம் உண்டாகும்படி யிடுகை; seasoning and flavouring curry.

*[தாளி → தாளிக்கை]*

**தாளிக்கை**[2] *tāḷikkai,* பெ. (n.) உயர்ந்த விலை; high price or value. தாளிக்கையுள்ள நகை (உ.வ.).

*[தாளி → தாளிக்கை]*

**தாளிக்கொடி** *tāḷi-k-koḍi,* பெ. (n.) திருகுதாளி; laul danah (சா.அக.).

*[தாளி + கொடி]*

**தாளிகம்**[1] *tāḷigam,* பெ. (n.) உள்ளங்கை; palm of the hand (சா.அக.).

*[தாள் → தாளிகம்]*

**தாளிகம்**[2] *tāḷigam,* பெ. (n.) திருமகள் கொடி; white lotus (சா.அக.).

*[தாள் → தாளிகம்]*

**தாளிசபத்திரி**[1] *tāḷiša-pattiri,* பெ. (n.) 1. ஓர் மருந்திலை; a medicine leaf (இரு.நூற்.அக.). 2. சிவபத்திரி; a tree which has equal hight (சா.அக.).

*[இதன் பூக்கள் சிறியன. பச்சை நிறம் கொண்டன. காய்கள் தட்டையாகவும் 5 அல்லது 6 மூலைகளாகவும் இருக்கும். காய்கள் நீலநிறம் கொண்டவை. மிக்க நறுமணம் கொண்ட இலைகள், வயிற்றுக் கோளாறு, காசம், வலிக்குறைவு போன்றவற்றைப் போக்கும் இதன் பட்டைக்கருக்கு தொண்டைக்கம்மலை நீக்கும் என்று சா.அக. விளக்கம் தருகிறது.]*

**தாளிசபத்திரி**[2] *tāḷiša-pattiri,* பெ. (n.) 1. பெரிய கிராம்புப் பட்டை; cassia cinnamon- Cinnamomum macrocarpum. 2. காட்டுக் கருவா; wild cinnamon. 3. தாளிசம் பார்க்க; see *tāḷišam* (சா.அக.).

**தாளிசபத்திரிசூரணம்** *tāḷiša-pattiri-šūraṇam,* பெ. (n.) தாளிசபத்திரி இலையை இடித்து எடுத்த தூள்; a kind of medicinal powder (சா.அக.).

மறுவ. தாளிசாதி சூரணம்

*[தாளிசபத்திரி + சூரணம்]*

**தாளிசம்** *tāḷišam,* பெ. (n.) சிறு மரவகை (பதார்த்த. 1006); Indian plum.

**தாளிசை** *tāḷišai,* பெ. (n.) தாளிசம் பார்க்க; see *tāḷišam* (சா.அக.).

*[தாளிசம் → தாளிசை]*

**தாளித்தகறி** *tāḷi-t-takaṟi,* பெ. (n.) கடுகு, நல்லெண்ணெய் முதலியவைகளைக் கூட்டித் தாளித்துச் சமைத்த கறி; mustard etc. fried gingelly oil is added to curries to give greater flavour (சா.அக.).

*[தாளித்த + கறி]*

**தாளித்தநெய்** *tāḷitta-ney,* பெ. (n.) நெடுங்காலம் இருத்தற்கு வேண்டிக் காய்ச்சி வைத்திருக்கும் நெய் (யாழ்ப்.); ghee mixed with spices and boiled with a view to preserve it.

*[தாளித்த + நெய்]*

**தாளித்துக்கொட்டு-தல்** *tāḷittu-k-koṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தாளி[1] பார்க்க; see *tāḷi*[1] (செ.அக.).

*[தாளித்து + கொட்டு-.]*

**தாளிதம்செய்-தல்** *tāḷidam-šey-,* செ.குன்றாவி. (v.t.) தாளி[1]-த்தல் பார்க்க; see *tāḷi*[1]-. (சா.அக.).

*[தாளிதம் + செய்-.]*

**தாளிநோய்** *tāḷi-nōy,* பெ. (n.) ஒரு வகை மாட்டு நோய்; a kind of cattle disease (செ.அக.).

**தாளிப்பருத்தி** *tāḷi-p-paruttí,* பெ. (n.) 1. காட்டுப்பருத்தி; herbaceous cotton. 2. ஒரு வகைக் கடற்கரைப் பருத்தி; sea-coast rose mallow (சா.அக.).

ம. தாளிப்பருத்தி

*[தாளி + பருத்தி]*

**தாளிப்பனை**[1] *tāḷi-p-panai,* பெ. (n.). கூந்தற் பனை வகை; South Indian talipot - palm.

மறுவ. கோடைப்பனை, கூந்தற்பனை, குடைப்பனை.

ம. தாளிப்பனை

*[தாளி + பனை]*



**தாளிப்பனை**[2] *tāḷi-p-paṉai,* பெ. (n.) பூங்கொத்து; flower bunch.

*[தாளி + பனை]*

**தாளிப்பு** *tāḷippu,* பெ. (n.) தாளிக்கை[1] பார்க்க; see *tāḷikkai.*

*[தாள் → தாளி → தாளிப்பு]*

**தாளிம்பம்** *tāḷimbam,* பெ. (n.) நுதலணி வகை; ornament worn on forehead. "தாளிம்பத் தாமநுதல் சேர்த்தி" *(பதினொ. திருக்கை. உலா, 121).* "ஏழொன்றாக அடுத்து விளக்கின தாளிம்பம்" *(S.I.I.ii. 145.).*

**தாளிமாதுளை** *tāḷimāduḷai,* பெ. (n.) பூ மாதுளை; a variety of pomegranate *(சா.அக.).*

*[தாளி + மாதுளை]*

**தாளியடி-த்தல்** *tāḷi-y-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) நெருங்கி முளைத்த பயிர்களை விலக்குதற்கும், வருத்தமின்றிக் களை பிடுங்குதற்குமாகக் கீழ் நோக்கியுள்ள கூரிய பல முனைகளையுடைய பலகையால், உழுது பண்படுத்துதல் (புறநா. 120, குறிப்பு) ; to draw a harrow over a field to allow of easy weeding.

*[தாள்' + அடி-.]*

**தாளியம்** *tāḷiyam,* பெ. (n.) வில்வயிலை; leaf of bael tree *(சா.அக.).*

**தாளிரசம்** *tāḷirašam,* பெ. (n.) தாளிவெல்லம் பார்க்க; see *tāḷi-vellam.*

**தாளிலாம்** *tāḷilām,* பெ. (n.) 1. பச்சை; greens. 2. பச்சிலை; mysore gamboge *(சா.அக.).*

**தாளிவெல்லம்** *tāḷi-vellam,* பெ. (n.) பனை வெல்லம்; jaggery made of palmyra juice *(சா.அக.).*

*[தாளி + வெல்லம்]*

**தாளிறுப்பு** *tāḷiṟuppu,* பெ. (n.) தாள்பிடிப்பு; lock jaw, as a sign of tetanus *(சா.அக.).*

*[தாள் + இறுப்பு. பாதங்களைப் பிடித்துக் இழுத்துக் கொள்ளும் நோய்.]*

**தாளினி** *tāḷiṉi,* பெ. (n.) 1. நிலவாகை பார்க்க; see *nila-vāgai.* 2. சிவதை பார்க்க; see *šivadai* *(செ.அக.).*

**தாளீச்சு** *tāḷīccu,* பெ. (n.) தாளிசம் பார்க்க; see *tāḷišam* *(சா.அக.).*

*[தாளிசம் → தாளீசம் → தாளீச்சு]*

**தாளீசம்** *tāḷīšam,* பெ. (n.). தாளிசம் (தைலவ. தைல. 135) பார்க்க; see *tāḷišam* *(செ.அக.).*

*[தாளிசம் → தாளீசம்]*

**தாளு**[1]**-தல்** *tāḷu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பொறுத்தல்; to bear, suffer, tolerate. இந்தத் தொல்லையால் அவர் மனந் தாளவில்லை *(உ.வ.).*

தெ., க. தாளு; து. தாளுனி

*[தாள் → தாளு-.]*

**தாளு**[2]**-தல்** *tāḷu-,* 5 செ.குவி. (v.i.) 1. விலை பெறுதல்; to be worth. இது அந்த விலை தாளுமா? (இ.வ.) 2. இயலுதல்; to be possible, practicable. தாளும் தாளாது என்று சொல்.

*[தாள் → தாளு-.]*

**தாளு** *tāḷu,* பெ. (n.) தாள் பார்க்க; see *tāḷ* *(சா. க.).*

*[தாள் → தாளு]*

**தாளுருவி** *tāḷ-uruvi,* பெ. (n.) ஒரு வகைக் காதணி (பெரும். பாண். 161. உரை.); small ear ornament.

*[தாள் + உருவி]*

**தாளெழுத்து** *tāḷ-eḻuttu,* பெ. (n.) முதலெழுத்து *(பேரகத். 8);* primary letter.

*[தாள் + எழுத்து]*

**தாளேசம்** *tāḷēšam,* பெ. (n.) கொன்னை; cassia tree (சா.அக.).

**தாற்கரியம்** *tāṟ-kariyam,* பெ. (n.) களவு (யாழ்.அக.); stealing.

**தாற்பருவம்** *tāṟ-paruvam,* பெ. (n.) பிள்ளைத் தமிழ்ச் சிற்றிலக்கியத்தில் பாட்டுடைத் தலைவனை எட்டாம் மாதத்தில் தாலாட்டுவதாகக் கூறும் பகுதி; a section of pillai-t-tamil, which describes the hero being lulled to sleep with cradle songs when eight months old.

*[தால் + பருவம்]*

**தாற்று[1]-தல்** *tāṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* கொழித்தல் (இ.வ.); to sift, winnow in a particular manner and separate large particles from small. *2.* தரித்தல் (யாழ்.அக.); to bear.

**தாற்று[2]** *tāṟṟu-,* பெ. (n.) கொழிப்பு; winnowing sifting (செ.அக.).

**தாற்றுக்கதிர்** *tāṟṟu-k-kadir,* பெ. (n.) கொத்துக்கதிர் (யாழ்.அக.); clustered ears of grain.

*[தாறு1 + கதிர்]*

**தாற்றுக்கூடை** *tāṟṟu-k-kūḍai,* பெ. (n.) ஒரு வகைக் கூடை (வின்.); a kind of basket.

*[தாறு/ + கூடை]*

**தாற்றுக்கோல்** *tāṟṟu-k-kōl,* பெ. (n.) *1.* இருப்பு முட்கோல் (ஏரெழு. 13, தலைப்பு); ox goad. *2.* யானைத் துறட்டி (அங்குசம்); elephant goad.

*[தாறு + கோல்]*



**தாற்றுப்பூ** *tāṟṟu-p-pū,* பெ. (n.) கொத்துப் பூ (யாழ். அக.); bunch of flowers.

*[தாறு + பூ]*

**தாறு[1]** *tāṟu,* பெ. (n.) *1.* வாழை முதலியவற்றின் குலை (பிங்.); bunch, cluster, as of plantains, dates, areca-nuts. "உழிஞ்சிற் றாறுசினை விளைந்த நெற்றம்" (அகநா. 151). தாறுபுறப்பட்டுத் தாய்வாழையைக் கெடுத்தாப் போல (பழ.).

க. தாறு



**தாறு[2]** *tāṟu,* பெ. (n.) உண்டை நூல் சுற்றுங் கருவி (யாழ். அக.); weaver's bobbin, reel.

**தாறு[3]** *tāṟu,* பெ. (n.) பின்கச்சக் கட்டு; putting on a cloth in the fashion of the divided skirt.



**தாறு[4]** *tāṟu,* இடை (part.) வரையில்; until. "இன்னு தாறுந் திரிகின்றதே" (திவ். இயற். திருவிருத். 46).

**தாறு[5]** *tāṟu,* பெ. (n.). *1.* முட்கோல்; ox goad, sharp - pointed stick for driving oxen. "தாறு பாய் புரவி" (பாரத. நிரை. 94). *2.* யானைத்துறட்டி (அங்குசம்);; elephant goad. "தாறடு களிற்றின்"

(குறிஞ்சிப். 150). 3. தாற்றுக் கோலிலுள்ள இருப்பூசி; sharp iron-piece at the end of a goad. "தாறுசேர் கோலும்" (கந்தபு. சிங்கமு. 299). 4. விற்குதை (சூடா.); ends of a bow, notch.

[தார் → தாறு]

**தாறு**[6] *tāṟu*, பெ. (n.) 1. அளவு; measurement. 2. அம்பின் அடிப்பாகம்; base part of arrow. 3. பாக்கு மரம்; areca-nut tree. 4. கைவரைவு; lines on the palm. "நிழலு மடித்தாறு மானோம்" (திவ். பெரியதிருவந். 31).

[தார் → தாறு]

**தாறுக்கண்டு** *tāṟu-k-kaṇḍu*, பெ. (n.) 1. தறி நாடா (வின்.); weaver's shuttle. 2. உருண்டை நூற்கண்டு (இ.வ.); weaver's bobbin, reel.

[தாறு + கண்டு]



**தாறுகன்னி** *tāṟukaṉṉi*, பெ. (n.) வெள்ளைக் காக்கணம் (வின்.) பார்க்க; white flowered mussel - shell creeper.

[தாலுகண்ணி → தாறுகன்னி]

**தாறுகாட்டு-தல்** *tāṟu-kāṭṭu-*, 5 செகுன்றாவி. (v.t.) தார்க்காட்டு-தல் பார்க்க; see *tār-k-kāṭṭu-* (செ.அக.).

[தாறு + காட்டு-.]

**தாறுசுற்று-தல்** *tāṟu-cuṟṟu-* , 5 செ.கு.வி. (v.i.) உண்டை நூல் சுற்றுதல்; to wind yarn on a bobbin or reel (செ.அக.).

[தாறு + சுற்று-.]

**தாறுதாறாய்க்கிழி-த்தல்** *tāṟu-tāṟāy-k-kiḻi-* 4 செ.குன்றாவி. (v.t.). சிறு துண்டுகளாகக் கிழித்தல் (வின்.); to tear to shreds.

[தாறு + தாறாய்க் + கிழி-]

**தாறுபாய்ச்சிக்கட்டு-தல்** *tāṟu-pāycci-k-kaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.). மூலைக்கச்சங் கட்டுதல் ; to put on one's cloth in the fashion of the divided shirt (செ.அக.).

[தாறு + பாய்த்து + கட்டு]

**தாறுமாறாக** *tāṟumāṟāga-*, வி.எ. (adj.) 1. முறையற்ற; disorder. 2. தரக்குறைவாக; improper..

[தாறுமாறு + ஆக.]

**தாறுமாறாய்ப்பேசு-தல்** *tāṟu-māṟāy-p-pēśu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. முன்பின் மாறுபடப் பேசுதல்; to speak incoherently or inconsistently. 2. பிதற்றுதல்; to talk nonsense, speak absurdities. 3. திட்டுதல்; to abuse, use insulting language (செ. அக.).

[தாறுமாறு + ஆய் + பேசு-.]

**தாறுமாறு** *tāṟumāṟu-*, பெ. (n.). 1. குழப்பம்; confusion, disorder. 2. எதிரிடை; perverseness, contrariety. 3. நன்னடத்தையற்றவன்; impropriety; transgression, as in speech or conduct. தாறுமாறும் தக்கடவித்தையும் (பழ.). தாறுமாறான நடத்தையுள்ளவன் (இ.வ.). 4. மதிப்புரவுக் குறைவு; insolence, discourtesy. அவரைத் தாறுமாறாக நடத்தினான் (உ.வ.).

ம. மாறுமாறு; தெ. தாருமாறு; க. தாறுமாறு.

[தாறு + மாறு. எதுகை நோக்கி வந்த மரபிணைமொழி]

**தாறுவி** *tāṟuvi*, பெ. (n.) மரமஞ்சள்; tree turmeric.

**தான்**[1] *tāṉ*, ப. பெ. (pron.) 1. படர்க்கை யொருமைப் பெயர்; he, she or it, a reflexive pronoun. "தன்னைத் தலையாகச் செய்வானுந் தான்" (நாலடி, 248). 2. ஒருவன்; oneself. தானாகப் படித்தவன். தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடும் (பழ.)

ம., க., கோது. தான்; தெ., து. தானு; துட. தோன்; குட. தானி; கோண். தானா; கூ. தானு; குவி. தானூ, தானுநு; குரு. தான்; மா. தான், தனி; பிரா. தேன்; பட. தா.

[தன் → தான் = படர்க்கை யொருமையைக் குறிக்கும் தான் என்னும்

*சுட்டுப்பெயரின் முந்தைய வடிவம் "ஆன்" என்பதாகும். இது "ஆ" என்னுஞ் சேய்மைச் சுட்டடியினின்று முகிழ்த்தது. 'தான்' என்பது கிரேக்க மொழியில் வழங்கும் "ஆட்டோ என்னும் தற்சுட்டுப்பெயரினை ஒத்தது" (த.வ. 135)]*

**தான்**[2] *tāṉ*, இடை (part.) *1.* தேற்றச்சொல்; a word used as intensive. "உனைத் தான் நோக்கி நிற்கும்" *(வெங்கைக்கோ. 41).* நீங்கள்தானே வீட்டுக்காரர்? *(இக்.வ.). 2.* அசைச்சொல்; expletive affixed to any noun or pronoun and declined instead of it. "தாந்தான் கின்று நின்றசைமொழி" *(நன். 441).*

**தான்**[3] *tāṉ*, இடை. conj., அதுவன்றி, இஃது ஒன்று என்று பொருள்படுவதோர் இடைச் சொல் *(திருக்கோ. 382, உரை);* besides.

**தான்**[4] *tāṉ*, பெ. (n.) *1.* நிலப்பனங்கிழங்கு; ground palm. *2.* பிணம்; dead body, corpse *(சா.அக.).*

**தான்குறியிடுதல்** *tāṉ-kuṟi-y-iḍudal*, பெ. (n.) உத்தி முப்பத்திரண்டனுள், உலகத்து வழங்குதலின்றித் தன்னூலுள்ளே வேறு குறியிட்டு, ஆளுதலாகிய உத்திவகை *(தொல். பொருள். 666);* following one's own terminology in one's work, one of 32 utti *(செ.அக.).*

*[தான் + குறியிடுதல்]*

**தான்தோன்றித்தனம்** *tāṉ-tōṉṟittaṉam*, பெ. (n.) தன் விருப்பம்போல் செயல்படுகை; free-wheeling.

*[தான்தோன்றி + தனம். தனம் = சொல்லாக்க ஈறு.]*

**தான்றி**[1] *tāṉṟi*, பெ. (n.) எல்லை; substance limit, period, duration. "ஒருமதித் தான்றியி னிருமையிற் பிழைத்தும்" *(திருவாச. 4: 15).*

தெ. தநருபு

**தான்றி**[2] *tāṉṟi*, பெ. (n.). *1.* மரவகை; belleric myrobalan. "பொரியரைத் தான்றி" *(நைடத. கலிநீ. 13). 2.* திரிபலையுள் ஒன்று *(திவா.);* fruit of belleric myrobalan, one of tiripalai.



**தான்றி**[3] *tāṉṟi*, பெ. (n.). மறுதோன்றி *(தைலவ. தைல. 135, 61);* a plant.

*[மறுதோன்றி → தான்றி]*

**தான்றிக்காய்** *tāṉṟi-k-kāy*, பெ. (n.) ஓர் மருந்துக்காய்; a medicine thing *(இரு நூற். பே.).*

ம. தான்னிக்காய்

*[தான்றி + காய்]*

**தான்றோன்றி** *tāṉṟōṉṟi*, பெ. (n.) *1.* தானாகத் தோன்றியது; that which is self-existent. "அவனுக்கு அது தான்றோன்றி" *(ஈடு. 4: 5: 3). 2.* கடவுள்; God. *3.* அகம்பாவமுடையவன்; self-conceited person. *4.* நிறைவாளன் *(சுதந்திரன்);* self-sufficient person. "ஸ்ரீய: பதி யாய்த் தான்றோன்றி யாயிருப்பார்" *(ஈடு. 1: 4: 7).*

*[தான் + தோன்றி]*

**தானகணக்கு** *tāṉa-k-kaṇakku*, பெ. (n.) கோயிற்பணிகளில் ஒன்று *(நாஞ்.);* a petty office in temples.

*[தானம் + கணக்கு]*

**தானக்காரர்** *tāṉa-k-kārar*, பெ. (n.) கோயிற் சொத்துக்களை மேற்பார்வையிடுபவர் *(நாஞ்.);* manager of temple properties.

**தானகம்**[1] *tāṉagam*, பெ. (n.) ஒரு வகை கூத்து; a kind of dance. "கரகரணந் தானகமே சுத்தசாரி" *(திருவிளை. கான்மா. 8).*

**தானகம்**[2] *tāṉagam*, பெ. (n.) கொத்துமல்லி; coriander *(சா.அக.).*

**தானங்கண்** *tāṉaṅkaṇ*, பெ. (n.) இதளியம்; mercury *(சா. அக.).*

**தானநிலை** *tāṉa-nilai,* பெ. (n.) இசைக் கூறுபாடு; modulation of the voice in singing. "வலிவும் மெலிவும் சமனும் என்ற இசைக் கூறுபாடுகள்" (சிலப். 3: 93, உரை).

**தானப்புழு**[1] *tāṉa-p-puḻu,* பெ. (n.) திமிர்ப்பூச்சி (M.L.); pin worms.

[தானம் + புழு]

**தானப்புழு**[2] *tāṉa-p-puḻu,* பெ. (n.) மலக் குடலில் உண்டாகும் புழு; intestinal worm, tape-worm (சா.அக.).

[தானம் + புழு]

**தானப்பூச்சி** *tāṉa-p-pūcci,* பெ. (n.) குடலில் உண்டாகும் கீரைப் பூச்சி; thread worm in the intestines - Oxyuris vermiculeris (சா.அக.).

**தானம்**[1] *tāṉam*, பெ. (n.) 1. அடித்தல்; beating. 2. இடம்; place. 3. ஈகை; gift, charity. 4. துண்டித்தல்; cutting. 5. மேலுலகம்; heaven. 6. தேன்; honey. 7. நீராட்டுதல்; bathing. 8. வலி; valour. 9. யானைக்கொழுப்பு; rut (இரு.நூ.அக.).

**தானம்**[2] *tāṉam*, பெ. (n.) 1. நன்கொடை; gift, incharity, donation, grant, as a meritorious deed. கண்தானம் (இக்.வ.). 2. புத்தசமயக் கொள்கை பத்தினுள் ஒன்றான ஈகை (பிங்.); liberality, munifence, bounty, one of tasa-pāramidai. 3. நால்வகை அறங்களுள் ஒன்றான கொடை (சீவக. 747, உரை.); gifts as a political expedient, one of the four aṟam. 4. சைன சமயக்கொள்கையுள் அடக்கம், நால்வகை அறச் செயல்; Jaina charitable assistance, of four kinds, viz., uṇavu-k-koḍai, aḍaikkala-tāṉam, kalvi-k-koḍai, maruttava-k-koḍai. 5. இல்லறம் (திருநூற். 17, உரை); house holder's life. 6. வேள்விக்கொடை (பிங்.); sacrifice, as requiring, offerings.

[தன் → தர் → தரு → தா → தானம். தருகைக்கருத்து வேரின்று கிளைத்த சொல்லாகும். பழந்தமிழ் திரவிடத்திற்குத் தாயும், ஆரியத்திற்கும் மூலமுமாம் என்னும் உண்மையைக் காட்டும் 'தா' என்னும் வேர்மூலத்தினின்று தானம் என்ற சொல் பிறந்தது. தா → தானம். "தாஎன் கிளவி ஒப்போன் கற்றே" (தொல். 928). ஒத்தோனுக்குக் கொடுத்தலே தானம் என்னுஞ் சொல்லின் முன்மைப் பொருளாகும். காலப்போக்கில் கொடுத்தல்' என்னும் பொதுப்பொருளில், மக்களிடையே இச் சொல், வழக்கூன்றி விட்டது]

**தானயாழ்** *tāṉa-yāḻ,* பெ. (n.) யாழ் வகையு ளொன்று (பெருங். உஞ்சைக் 35, 5); a kind of yāḻ.

[தான + யாழ். தானயாழ். இன்னிசை தரும் தந்திகளை உடைய யாழ். ஐம்புலனுள் செவிக்கு இன்பந்தருவது யாழ். வள்ளுவர், "குழல் இனிது யாழ் இனிது என்ப" (குறள், 66) என்று யாழ்பற்றிக் குறித்துள்ளமை காண்க]

**தானரூபி** *tāṉarūbi,* பெ. (n.) பண்வகை களுளொன்று (சங்.சந். 57); a primary rāga.

[தா → தானம் → Skt. rūbi (ரூபி) - இசையைத் தருபவன்]

**தானவண்ணம்** *tāṉa-vaṇṇam,* பெ. (n.) இசைப்பாட்டு வகை (வின்.); a kind of musical composition.

[தானம் + வண்ணம்]

**தானவர்**[1] *tāṉavar*, பெ. (n.) 1. தனு என்பவனின் வழிமுறையினர், அசுரர்; Ašuras, a class of demons, as descendants of Dāṉu. "வானவருந் தானவரும் பொன்னார் திருவடி தாமறியார்" (திருவாச. 13, 17). 2. கொடையாளர்; donors.

**தானவள்** *tāṉavaḷ,* பெ. (n.) அரக்கர் மகளிர்; an Ašura woman. "தானவள் குமதிப் பெயராள்" (கம்பரா. தாடகை 61).

**தானறிசுட்டு** *tāṉ-aṟi-šuṭṭu,* பெ. (n.) தன்னையே அறிவிக்குஞ் சுட்டு; demonstrative noun. "ஆலான அத்தினுடைய என்று விபக்தியான போது, தானறி சுட்டாய் அதுக்கு, ஹேது வானதொன்றைக் காட்டுமிறே" (திவ். பெரியாழ். 2, 6, 6, வியா. பக். 37, 3).

[தான் + அறி + சுட்டு]

**தானாக** *tāṉ-āga*, கு.வி.எ. (adv.) 1. தனியாக; of or by oneself. மருந்து சாப்பிடாமல் நோய்த் தானாகத் தீருமா? (இக்.வ.). 2. தன் விருப்பமாக; of one's own accord, spontaneously, voluntarily. "தானாக நினையானேல்" (திவ். பெரியதி. 3:6:4).

தெ. தான; ம. தானெ.

*[தான் + ஆக.]*

**தானாகம்** *tāṉāgam*, பெ. (n.) தானிகம்² பார்க்க (சங்.அக.); see *tāṉigam*².

**தானாகுதல்** *tāṉāgu*, வி. (v.) தானாயாதல்; self rearch.

*[தான் + ஆகுதல்]*

**தானா-தல்** *tāṉ-ā-*, செ.கு.வி. (v.i.) 1. உரிமை யுள்ளவனாதல் (சுதந்திரனாதல்); to become self-dependent, independent, as the deity. 2. ஒற்றுமையாதல் (பிங்.); to become assimilated, united.

*[தன் → தான் + ஆ-.]*

**தானாபதி** *tāṉāpadi*, பெ. (n.) வேதியியல் கலப்பு; a chemical compound (சா. அக.).

**தானாயாறுகை** *tāṉāyāṟugai*, பெ. (n.) தானாகவே மருந்தில்லாமல் ஆறுதல்; the healing power of nature without the aid of drugs - vis medicatrix nature (சா.அக.).

*[தானாய் + ஆறுகை]*

**தானானதன்மை** *tāṉ-āṉa-taṉmai*, பெ. (n.) பொதுமையற்றுத் தனக்கெனவுரிய குணம்; one's peculiar or distinguishing characteristic. "பாணயி வத்திலே சிறிது கொத்தை யுண்டானாலும் தானான தன்மை போகாதே" (ஈடு. 6:1:1).

*[தான் + ஆன + தன்மை]*

**தானி** *tāṉi*, பெ. (n.) மூன்று சக்கரங்களை யுடையதும் இயந்திரப் பொறியாலியங்குவது மான பயணிகள் ஊர்தி; auto-riksha.

*[தான் + இ → தானி]*

தானாக இயங்குவது. முன்னர் கையால் இழுத்துச் செல்வதும், காலால் சவட்டிச் செல்வதுமாகவிருந்த நிலைக்கு மாறாகக் கல்லெண்ணையால், இயங்குவது. அதாவது



தானாக இயங்குவது என்னும் அடிப் படையில், தானி எனப்பட்டது. இக் கலைச் சொல் ஆங்கிலத்திலுள்ள ஆட்டோ (auto) என்னும் சொல்லின், நேர்பொருளைத் தழுவியதென்றறிக

**தானிகம்** *tāṉigam*, பெ. (n.) கொத்தமல்லி (மலை.); coriander.

**தானிகர்** *tāṉigar*, பெ. (n.) தானிகன் பார்க்க; see *tāṉigaṉ*.

**தானிகன்** *tāṉigaṉ*, பெ. (n.) பூசாரி; priest of village deity (இரு. நூற். பே.).

**தானிகை** *tāṉigai*, பெ. (n.) தானிகம் பார்க்க; see *tāṉigam* (செ. அக.).

*[தானிகம் → தானிகை]*

**தானிப்பு** *tāṉippu*, பெ. (n.) பதிக்கை; enchasing (இரு. நூற். பே.).

**தானியக்கோட்டகம்** *tāṉiya-k-kōṭṭagam*, பெ. (n.) தஞ்சை மாவட்டம், வேதாரண்யம் வட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Vēdāraṇaym taluk in Tañjore Dt.

*[தானியம் + கோட்டகம்]*

கோட்டகம் எனில் ஆழ்நீர்நிலைப்பகுதி இவ்வூர் நீர்நிலையால் சூழப்பட்டிருந்ததால், இப் பெயர் வந்திருக்கலாம்.

**தானியங்கி** *tāṉiyaṅgi*, பெ.அ. (adj.) மனிதனால் தொடர்ந்து இயக்கப்படாமல் தானாக இயங்கக் கூடிய; automatic. "தானியங்கிப் பால் நிலையம்". தானியங்கிக் கதவு (இக்.வ.).

*[தான் + இயங்கி]*

**தானியாகுபெயர்** *tāṉi-y-āgu-peyar,* பெ. (n.) தானியின் பெயர் தானத்துக்கு ஆவது (நன். 290, உரை) எ-டு. கழல் நொந்தது; figure of speech, in which an object is put for the place it occupies, as கழல் நொந்தது (செ.அக.).

*[தானி + ஆகுபெயர்]*

**தானெடுத்துமொழிதல்** *tāṉ-eḍuttu-moḻidal,* பெ. (n.) உத்தி முப்பத்திரண்டனுள் முன்னோர் கூற்றை எடுத்தாளு தலாகிய உத்தி (நன். 14) ; citation from ancient authors, one of 32 utti.

*[தானெடுத்து + மொழிதல்.]*

**தானை** *tāṉai,* பெ. (n.) 1. படை; army. "கடந்தடு தானை" (புறநா. 110). 2. படைக்கலப் பொது (பிங்.); weapon in general. 3. ஆடை; cloth. "கொடுந்தானைக் கோட்டழகும்" (நாலடி, 131). 4. கரந்துவரலெழினி; stage curtain. "தானையை விட்டிட் டொல்கி" (சீவக. 675). 5. முசுண்டி என்னும் படைக்கலம் (பிங்.); a kind of sledge - hammer, a weapon.

*[தார் → தான் → தானை]*

**தானைத்தலைவன்** *tāṉai-t-talaivaṉ,* பெ. (n.) படைத்தலைவன்; captain. "தானைத் தலைவன் இல்லாமல் படை இயங்குமா?" (உ.வ.).

*[தானை + தலைவன்]*

**தானைத்திருப்பட்டிகை** *tāṉai-t-tiru-p-paṭṭigai,* பெ. (n.) அரையாடையின் மேல் அணியும் அணிகலன் வகை (S.I.I. ii, 237); gridle worn by a God or an idol (செ.அக.).

*[தானை + திரு + பட்டிகை]*

**தானைத்தூக்கம்** *tāṉai-t-tūkkam,* பெ. (n.). திருப்பட்டிகையணியின் உறுப்பினுள் ஒன்று (S.I.I. ii, 210); a pendent in tiruppaṭṭigai.

*[தானை + தூக்கம்]*

**தானைநிலை** *tāṉai-nilai,* பெ. (n.) 1. பகைவர் அஞ்சுதற்குரிய (பதாதியின்) நிலைமை கூறும் புறத்துறை (தொல். பொருள். 72); theme describing the heroic stand of infantry holding the enemies in awe. 2. இருதிற படையும் புகழும்படி பொருதவீரனது திறலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 7: 22); theme of the warrior, whose valour compels the admiration of the contending armies in battle (செ.அக.).

*[தானை + நிலை]*

**தானைமறம்** *tāṉai-maṟam,* பெ. (n.) 1. வீரனொருவன், பொரவெதிர்ந்த இருவகைச் படையும் பொருது மடியாமை, பரிகரித்த ஆற்றலின் உயர்ச்சி கூறும், புறத்துறை (பு. வெ. 7: 3); theme of the warrior who appears between the armies in battle and saves them from further destruction by bringing them to terms. 2. உயிர்க்கேடுகட்கு அஞ்சாது, பூசலுக்கு முற்படும் வேந்தனது சிறப்புகளைக் கூறும், புறத்துறை (பு. வெ. 7: 4); theme describing the heroism of a king who regardless of consequences rushes forward at the call of battle. 3. படையின் தறுகண்மையைப் புகழ்ந்து, பகைவரின் கேட்டிற்கு இரங்குதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7:5); theme of compassion for foes because they have to meet a valiant army.

*[தானை + மறம்]*

**தானைமாலை** *tāṉai-mālai,* பெ. (n.) ஆசிரியப் பாவால் அரசரது கொடிப்படையைப் பாடும் சிற்றிலக்கிய வகை (இலக்.வி.869); martial poem describing the van of an army in aširiya-p-pā.

*[தானை + மாலை]*

**தானையம்** *tāṉaiyam,* பெ. (n.) கால்நடைகளின் மந்தை; herd of cattle. ஆட்டுத்தானையம்.

*[தானை + அம் → தானையம்]*

**தானைவைப்பு** *tāṉai-vaippu,* பெ. (n.) பாசறை; encampment. "வலஞ் செய்தார் தானை வைப்பை" (கம்பரா. விபீடண: 152).

*[தானை + வைப்பு]*